


# தமிழ்நூல் தொகுப்புக் களஞ்சியம்

# தமிழ் நூல் தொகுப்புக் கலைக் களஞ்சியம்




ஆசிரியர் :

புதுப் படைப்புக் கலைஞர், ஆராய்ச்சி அறிஞர்,

முனைவர் **சுந்தர சண்முகனார்**

தமிழ்-அகராதித் துறைப் பேராசிரியர் (ஓய்வு)

புதுச்சேரி - 11




**மணிவாசகர் பதிப்பகம்**

55, லிங்கி தெரு, சென்னை-600 001.

முதல் பதிப்பு: ஏப்ரல், 1990



விலை. ரூ. 100-00

கிடைக்குமிடம்
மணிவாசகர் நூலகம்
12-B, மேல சன்னதி, சிதம்பரம்-608001
14, சிங்கராம் தெரு, பாரிமுனை, சென்னை-600001
55, லிங்கிச் செட்டித் தெரு, சென்னை-600001
28-A வடக்கு ஆவணி மூல வீதி, மதுரை-625001
3/4 ராஜ வீதி கோயமுத்தூர்-641001
20, நந்தி கோயில் தெரு, திருச்சி-620002
சென்னை போன் : 512996, சிதம்பரம் போன் : 2799

அச்சகம்:
கே.பி.டி. இண்டஸ்ட்ரீஸ்
சி.கொத்தங்குடி.
அண்ணாமலைநகர்-608 002.

58/2

# தொகைகள் தரும் கோடி இன்பம்

டாக்டர் ச. மெய்யப்பன்
இணைப்பேராசிரியர்
தமிழியல் துறை
அண்ணாமலைப் பல்கலைக் கழகம்

உலக மொழிகளில் பழங்காலந் தொட்டு, தனிப்பாடல்கள் தொகுக்கப் பெற்றுள்ளன. ஒவ்வொரு காலத் தொகுப்பும் காலக் கண்ணாடியாய்த் திகழ்கிறது. அறிவார்ந்த மனிதன் பொருளை, செல்வத்தை, மாடு மனைகளைத் தொகுத்துக் காலந்தோறும் மகிழ்வுறுகிறான். சிதறிக்கிடப்பதைத் தொகுப் பதும் அதனால் சிந்தை மகிழ்வதும் மாந்தன் இயல்பு. முன்னோர் செல்வமெல்லாம் தொகுத்துத் தன் புகழாக்கிக் கொள்கிறான்.

தொகுப்பாளனின் புலமைக்கும் அறிவுக்கும் ஆற்றலுக்கும் ஏற்பத் தொகுப்புக்கள் பன்முக நலன்களைப் பெற்றுச் சிறந்து விளங்குகின்றன. தொகுப்புக்களால் மொழி வளம் பெறுகிறது. தொகைகளால் ஏற்றம் பெறுகிறது. பாடல்கள் சிந்தாமல் சிதறாமல் வாழ்வு பெறுகின்றன. உதிரிப்பூக்கள் மாலையாகத் தொகுக்கப் பெறும்போது தனிமதிப்புப் பெறுகின்றன. தொகுத்தோர் கைவண்ணத்தால் தொகுப்பு மங்காப் புகழ் பெறுகிறது; ஒளி வீசுகிறது.

பத்தாக, நூறாக, ஆயிரமாகப் பதிகம், சதகம், அந்தாதி என்ற அமைப்பில் தொகுப்புக்கள் அழகிய இலக்கிய வடிவம் பெறுகின்றன.

அளவு
பொருள்
பயன்

இவற்றை அடிப்படையாகக் கொண்டு காலந்தோறும் நூல்கள் தொகுக்கப் பெறுகின்றன.

பத்துப்பாட்டு
எட்டுத் தொகை
பதினெண் கீழ்க்கணக்கு

அறிவார்ந்த தொகுப்புக்கள் தமிழுக்கும் தமிழகத்திற்கும் பெருமை சேர்க்கும் பழம்பெரும் தொகுப்புக்கள்.

ஒழுங்கு
வலிமை
சிறப்பு
அழகு
முழுமை
மதிப்பு

அனைத்தும் தொகுப்புக்களால் கூடுகின்றன.
செல்வத்தைத் தொகுத்துச் சிந்தை மகிழ்வோர் சிலர்.
சிந்தனைகளைத் தொகுத்து இன்புறுவோர் சிலர்.
எண்ணங்களைத் தொகுத்து ஏற்றம் பெறுவோர் சிலர்.

மனிதகுல வரலாற்றில் காலங் காலமாகத் தொகுப்பு முயற்சிகள் தொடர்ந்து நடைபெற்று வருகின்றன. தொகுப்பு முறைகள் அறிவியல் முறைப்படி வளர்ந்துள்ளன. தொகுப்பியல் இன்று கலையாக வளர்ந்து வருகிறது. 'கோடி தொகுத்தார்க்கும்' என்ற வழக்கு குறளில் காணப்படுகிறது. பொருளைக் குவியலாகப் பார்க்கிறபோது மனம் மகிழ்கிறது.

பறவைகளின் தொகுதி
மரங்களின் தொகுதி
கட்டிடங்களின் தொகுதி
அணிகலன்களின் தொகுதி

கருத்துக்கும் காட்சிக்கும் இன்பம் நல்குவன. கவிதைத் தொகுதிகளோ, காலத்தை வென்று கலை ஒளிபரப்பி மனித குல சிந்தனைக்கு வளம் சேர்க்கின்றன.

ஒருவர் அரிய பெரிய முயற்சி செய்து தொகுக்கிறார். பலர் எளிதாகச் சுவைக்கிறார்கள். இதுவே தொகுப்பு நமக்குத் தரும் பெரும் பயன்.

சான்றோர் தம் சிந்தனை வளம் ஒரு சேரத் தொகுக்கப் பெறும்போது அவை தரும் பயன் அளவிட முடியாதது.

தமிழில் முன்னைப் பழமைக்கும் பழமையின் செய்திகள் தொகுக்கப்பெற்றுள்ளன. பின்னைப் புதுமைக்கும் புதுமையாய் இன்று பூக்கும் கவிதைகளும் தொகுக்கப் பெறுகின்றன.

5-8/2



புறநானூறு தொடங்கி, கவியரசு கண்ணதாசன் கவிதைத் தொகுதிகள்வரைதொகைசெய்யப்பட்டுள்ளன. வைரமுத்துவின் நாளும் மலரும் புதுக்கவிதைகளும் நன்மாலையாய்த் தொகுக்கப் பெற்றுள்ளன. தொகுப்புக்களால் பாடல்கள் வடிவமும், வலிமையும் பெறுகின்றன; வாழ்வும் காப்பும் பெறுகின்றன. ஒரு குடும்பத்துப் பிள்ளைகளை விழாக்காலங்களில் ஒரு சேரப் பார்ப்பதால் ஏற்படும் மகிழ்ச்சிபோல் பல்வேறு கால்ங்களில் சூழல்களில் பல்லோரிடம் மலர்ந்த கருத்து மலர்களைத் தொகுப்பாளர் மாலையாகத் தரும்போது தொகை கோடி இன்பம் தருகிறது.

நாற்பது, நானூறு, நாலாயிரம் எண்ணிக்கையிலுள்ள தமிழ் இலக்கியத்தொகுப்புக்கள், பன்னூல் திரட்டுக்கள், கவிதைக்களஞ்சியம், தனிப்பாடல் திரட்டுக்கள், கவிதை மலர்கள், கட்டுரை மாலைகள் இன்னோரன்ன தொகுப்புக்கள் பலவடிவின; பலவகையின; பல்வகைப் பயன் தருவன.

சங்கப்பாடல்களை அகம் புறம் எனப் பகுத்துத் திணை பற்றியும் அடியலகு பற்றியும் தொகுத்த சான்றோர் திறம் எண்ணி வியத்தற்குரியது. சங்க இலக்கியத்தைச் சைவ சித்தாந்த சமாஜம் (சைவ சித்தாந்தப் பெருமன்றம்) புலவர் வரிசையைத் தொகுத்ததும் போற்றுவதற்குரிய பெருஞ்செய லாம். திருமால் பற்றிய நாலாயிரம் தெய்வப் பனுவல்களைத் திவ்வியப் பிரபந்தம் என்ற சீரிய கட்டமைப்பில் தொகுக்கப் பெற்ற திறன் நம்சிந்தையை மகிழச் செய்கிறது. ஒவ்வொரு பாட்டின் முதற்சீரும் இறுதியில் சுட்டப் பெறுவது கட்டுக் கோப்புக் கலையாமல் இருப்பதற்கும் பாடல் நினைவு கொள் வதற்கும் ஏற்றதொரு சிறந்த அமைப்பாகத் திகழ்கிறது.

சைவத் திருமுறைகளைப் பண்ணை அடிப்படையாகக் கொண்டும் தலங்களை அடிப்படையாகக் கொண்டும் பகுத்துத் தொகுத்த திறன் தொகுப்பியற் கொள்கை வளர்ச்சியின் உயர் நிலை ஆகும். திருமுறைகள் நிலைபேற்றுக்கும் காலங்கடந்த வாழ்வுக்கும் சிறப்பாக அமைந்த இத்தொகுப்புக் கொள்கையே காரணம் எனலாம்.

தவத்திரு ஊரனடிகள் நம் காலத்தில் (1980) திருவருட்பா முழுமைக்கும் வரிசை எண்ணிட்டுத் தொகுத்து வகைப்படுத்திய

திறம் தொகுப்பியல் நெறியின் வெற்றியே ஆகும். தமிழ்க் கடல் இராய. சொக்கலிங்கனார் காந்தியடிகள் பற்றிப் பல்வேறு காலங்களில் பாடிய பஞ்சகம், அட்டகம், பதிகம், சதகம் முதலிய யாவற்றையும் முதறிஞர் செம்மல் வ.சுப. மாணிக்க னார் கருத்துப்படி காந்திக் கவிதை என ஒரு நூலாகத் தொகுத்தார்கள். இத்தொகுப்பு காந்தியடிகளின் பன்முகப் பெருமையைப் பறை சாற்றுகிறது. அத்துடன் இராய.சொ.வின் தமிழ்ப் புலமையையும் கவிதையாற்றலையும் காந்தியத்தில் உள்ள ஊற்றத்தையும் ஒரு சேர உணர்த்திப் பெருமை சேர்க் கிறது.

பாரதி தன் வாழ்நாளில் தம் கவிதைகள் அனைத்தையும் ஒரே தொகுப்பாகக் காணும் பேறு பெற்றிலன். 1930 களிலே தான் கவிதைத் தொகுதி முழு வடிவம் பெறத் தொடங்கிற்று. பின்னர் பல்வேறு தொகுப்புக்கள் மலர்ந்தன. இன்று மணி வாசகர் பதிப்பகத்தின் செம்பதிப்புத் தொகுப்பு நாடெங்கி லும் உலா வருகிறது.

இருபத்தைந்து நூற்றாண்டுகளாக எழுந்த அனைத்துத் தொகுப்புக்களையும் இந்நூல் அளவிடுகிறது; மதிப்பிடுகிறது; திறனாய்வு செய்கிறது. இந்நூலில் தொகுப்பியல் வரலாறு தொகுத்துக் கூறப் பெறுகிறது. தொகுப்புக்கலையின் தோற்ற மும் வளர்ச்சியும் ஆராயப்பெறுகின்றன. நூல்கள் தொகுக்கப் பெற்ற முறையும், தொகைகளின் வகையும், தொகுப்புக் கொள்கையும் ஆராயப்பெறுகின்றன. தொகுப்பியல் உண்மைகள் அனைத்தும் ஒருசேர ஆராயப் பெறுவது இதுவே முதல் முறை.

இந்நூலாசிரியர் திரு. சுந்தரசண்முகனார் புதுவைக்குப் புகழ்சேர்க்கும் பெரும் புலவர். ஆராய்ச்சிப் பேரறிஞர். பன்னூல் ஆசிரியர். ஆய்வு நூல்கள் பல எழுதிப் பேரும் புகழும் பெற்றவர். தமிழ்ப் பல்கலைக் கழகத் தொகுப்பியற் கலைத் துறைப் பேராசிரியராகத் திகழ்ந்த பெருமையர்.

அகராதிக்கலை
கெடிலக்கரை நாகரிகம்
தமிழ் இலத்தீன்பாலம்

தமிழ்நூல் தொகுப்புக்களஞ்சியம் போன்ற பெரு நூல்கள் படைத்த பெரும்புலவர். அறிவுக்கடல் ஞானியார் அடிகளின்

நன்மாணவர். அறிவுத்திறனும், சிந்தனைத் திறனும், எழுத்துத் திறனும் வாய்ந்த இவர் நூல்கள் தமிழுக்கு அணிகலன்கள் அல்ல; படைக்கலன்கள்! ஆராய்ச்சியாளருக்கு அமைய வேண்டிய அனைத்துப் பண்புகளும் அமையப்பெற்ற திரு. சுந்தரசண்முகனார் நம் காலத்தில் வாழ்வது நமக்குப் பெருமை.

அறிவு நலம் சான்ற பெருநூல்களைப் படைப்பது இவருக்குக் கைவந்த கலை. கூர்த்த மதியும் நினைவாற்றலும் இந்நூல் தொகுப்பிற்கு இவருக்குக் கைகொடுத்துள்ளன. எழுதி எழுதிச் சோர்வதல்ல இவர் தம் இயல்பு. எழுதி எழுதி மகிழ்ந்து இன்புறுவதாகும். இவர்தம் பழுதிலாப் புலமைக்கு இந்நூல் முடி மணியாய்த் திகழ்கிறது.

நல்ல நூல்கள் நானூறு வெளியிட்டு நாளும் ஓங்கி உயர்ந்து வளர்ந்து வரும் மணிவாசகர் பதிப்பகத்திற்கு இப் பெருநூல் மேலும் பெருமை சேர்க்கிறது. நாற்பதுக்கும் மேற்பட்ட பெருநூல் வரிசையில் இந்நூலும் சேருகிறது. ஆயிரம் பக்க அளவில் பெருநூல்களைத் தொடர்ந்து வெளியிடும் பதிப்பகம் எனப் பலரால் பாராட்டப் பெறுகிறது.

பெருந்தொகை செலவிட்டு இத்தொகை நூலை வெளியிடுவதில், தொகை ஒன்றையே கருதாமல் தமிழுக்கு வளம் சேர்க்கும் தொகை நூல் ஒன்று கிடைத்துள்ளது என்று மகிழ்வோம். நுழைபுல மிக்க நூலாசிரியரின் பேருழைப்பும் பதிப்பாசிரியரின் நெடுங்காலத் திட்டமும் இன்று பெருநூலாய் உருப்பெற்று உலா வருகிறது.

பெருமலையாய், ஆலமரமாய் இந்நூல் பல்வகை நலன்களைத் தன்னகத்தே கொண்டு திகழ்கிறது என்பதனை ஆழ்ந்து கற்போர் எளிதில் உணர்வர்.

சீரிளமைத் திறமிக்க செந்தமிழுக்குச் செழுமை சேர்க்கக் கிடைத்த நல்வாய்ப்பை எண்ணிப்பெரு மகிழ்வு கொள்கிறோம். பெருமிதம் அடைகிறோம். தொகுப்போம்! நல்லவற்றைத் தொடர்ந்து தொகுப்போம்! மொழிக்கு வளம் சேர்ப்போம். புகழ் குவிப்போம் வாரீர்.



# படையல்

தமிழகப் புலவர் குழுவின் தலைவர்

பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்றத் தலைவர்

தமிழ்வழிக் கல்வி இயக்கத் தலைவர்

தமிழ்ப்பல்கலைக் கழக வடிவமைப்புக் குழுத்தலைவர்

தில்லையில் திருமுறை அம்பலம் ஏறச் செய்த
பெரும்புலவர்

மணிவாசகர் பதிப்பகத்திற்குப் பெருமை சேர்த்த
முதுபெரும்புலவர்

மதுரை காமராசர் பல்கலைக்கழகத் துணைவேந்தர்

மூதறிஞர் செம்மல்

**வ.சுப. மாணிக்கனார்** அவர்கட்கு

முதலாண்டு நினைவு நாளில் (25.4.90) இந்நூல்

**காணிக்கை**

# பொருளடக்கம்

## இரண்டாம் தொகுதி 397 – 728

# குறுக்க வடிவ விளக்கம்

# Abbreviation

ஆ—ஆசிரியர்—நூலாசிரியர்

தொ—தொகுப்பு—தொகுப்பாசிரியர்

வெ—வெளியீடு—வெளியிட்டவர்

வி.உ—விற்பனை உரிமை

உ—உள்ளுறை

கழகம், சை.சி.நூ.ப.க—சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்

த.பா. தனிப்பாடல்-த.பா.தி—தனிப்பாடல் திரட்டு

த.இ.பா.—தமிழ் இசைப் பாடல்

சு.பா. பாரதியார்—சுப்பிரமணிய பாரதியார்

கவிமணி—கவிமணி தேசிக விநாயகம்பிள்ளை

நாமக்கல்லார்—நாமக்கல் வெ. இராமலிங்கம் பிள்ளை

உ.வே.சா—உ.வே. சாமிநாத ஐயர்

வ.உ.சி—வ.உ. சிதம்பரம் பிள்ளை

தருமை—தருமபுர ஆதீனம்

ஆவடு துறை—திருவாவடுதுறை ஆதீனம்

அ.ப.க.—அண்ணாமலைப் பல்கலைக் கழகம்

மகால், ச. மகால்—தஞ்சை சரசுவதி மகால்

M.G.O., M.G.O.S., G.O.M.L.—சென்னை (தமிழக) அரசின் கீழைக்கலை ஓலைச்சுவடி நூல்நிலையம்

தொல்—தொல்காப்பியம்

நச்சர்—நச்சினார்க்கினியர்

# ஆசிரியர் முன்னுரை

**தொகை நூல் செல்வம்:**

தமிழ் மொழியில் தொகைநூல் செல்வத்திற்குக் குறைவே யில்லை. வியப்படைய வேண்டா-உண்மையே. அன்று தொட்டு இன்று வரை, தமிழில் ஏறக்குறைய இரண்டாயிரம் தொகை நூல்கள் தோன்றியுள்ளன எனலாம். தொகைநூல் என்பது, பல காலத்தில் - பல பொருள் பற்றிப் பலரால் பாடப்பெற்ற உதிரிப் பாடல்கள் பலவற்றுள் சிறந்தனவற்றைத் தேர்ந்தெடுத்து ஒரு நூல் வடிவில் தொகுக்கப்பட்டிருப்பதாகும். ஒரே புலவர் பல பொருள் பற்றிப் பல பொழுதுகளில் பாடிய பாடல்களின் தொகுப்புகளும் தொகை நூல்களின் வரிசையில் இப்போது இடம்பெற்று வருகின்றன.

**தொகுப்புக் கலை:**

இவ்வாறு தொகுப்பது ஓர் அரிய கலையாகும். இதற்கு 'நூல்' தொகுப்புக் கலை' என்னும் அழகிய பெயர் சூட்டலாம். இந்தத் தொகுப்புக் கலை நூல்கள் பலவற்றைப் பற்றிய தாதலின், இந்நூலுக்குத் 'தமிழ் நூல் தொகுப்புக் கலைக் களஞ்சியம்' என்னும் பெயர் சூட்டப்பட்டது.

**உட்பொருள்:**

இந்நூல், முதல் தொகுதி, இரண்டாம் தொகுதி என இரு தொகுதிகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது. இவற்றுள் முதல் தொகுதி இரு பாகங்களாகப் பகுக்கப்பட்டுள்ளது: தொகுப்புக் கலை வரலாறு, முற்காலத் தொகை நூல்கள் - என்பன அப் பாகங்களாகும். இரண்டாம் தொகுதி நான்கு பாகங்களாகப் பகுக்கப்பட்டுள்ளது. அவை: இடைக்காலத் தொகை நூல் கள், பிற்காலத் தொகை நூல்கள், இருபதாம் நூற்றாண்டுத் தொகை நூல்கள், நான்கு காலத் தொகை நூல்கள்-என்பன.

முதல் தொகுதியின் முதல் பாகத்தில், நூல் தொகுப்புக் கலை வரலாறு பற்றியும் - பொதுவாக உலக மொழிகளின்

நூல் தொகுப்புக் கலை பற்றியும் - சிறப்பாகத் தமிழ் மொழி யின் நூல் தொகுப்புக் கலை பற்றியும் விரிவாக ஆய்வு செய்யப்பட்டுள்ளது. இரண்டாம் பாகத்தில், தலைச் சங்க காலத் தொகை நூல்களும் - இடைச்சங்க காலத் தொகை நூல்களும் - கடைச்சங்க காலத் தொகை நூல்களும் ஆராயப் பட்டுள்ளன.

இரண்டாம் தொகுதியில், மேலே குறிப்பிட்டுள்ள நான்கு காலங்கள் பற்றிய நான்கு பாகங்கள் இடம் பெற்றுள்ளன.

**இன்றியமையாத முயற்சி:**

அடியேன் ஓய்வு நாட்களில் பல ஊர்கட்குச் சென்று - பல நூலகங்கட்குப் போந்து, சிற்சில நாள் தங்கியிருந்து ஆராய்ந்து, ஏறக்குறைய இரண்டாயிரம் தமிழ்த் தொகை நூல்களைப் பற்றிய குறிப்புகளைத் திரட்டியுள்ளேன். யான் சென்று ஆய்வு செய்த சிறந்த நூலகங்களுள், புதுச்சேரியில் உள்ள பிரெஞ்சு-இந்திய ஆராய்ச்சிக்கலைக் கழகத்தின் (INSTITUT FRANCAIS D' INDOLOGIE) நூலகமும் ஒன்றாகும். இந்நிறுவனத்தின் நூலகத்தில் யான் ஒரு நாள் ஆய்வு செய்து கொண்டிருந்த போது, இந்த நிறுவனத்தின் தலைவராகவும் பாரிசுப் பல்கலைக் கழகத்தின் பேராசிரியராகவும் பன்மொழி - பல்கலைப்புலவராக வும் உலகத் தமிழ் ஆராய்ச்சி மன்றத்தின் (International Association of Tamil Research) முன்னாள் தலைவராகவும் விளங்கிய காலஞ் சென்ற உயர்திரு டாக்டர் மூான் ஃபிலியோசா (Dr. Jean Filliozat) அவர்கள், அந்த நிறுவனத்தைப் பார்வையிடுவதற் காக அன்று வந்த செர்மானியர் ஒருவரை யான் இருந்த இடத்திற்கு அழைத்து வந்தார்கள்; என்னையும் செர்மானி யரையும் ஒருவருக்கொருவர் அறிமுகம் செய்து வைத்தார் கள் (அந்தச் செர்மானியர் பெயர் நினைவில்லை). பின்னர், அந்தச் செர்மானியர் சமசுகிருதத்திலுள்ள தொகை நூல்களைப் பற்றி ஆராய்ந்து கொண்டிருப்பதாக எனக்கு அறிவிக்கப்பட்டது.

அவ்வளவு தான்! செர்மானியர் ஒருவர் சமசுகிருதத் தொகை நூல்களைப் பற்றி ஆராய்ந்து பெரிய நூல் வெளியிடப் போகிறார் என்பதை அறிந்ததும் யான் மிகவும் வியப்படைந்

தேன். அங்ஙன மெனில், தமிழனாகிய யான் தமிழ்த்தொகை நூல்களைப் பற்றி ஆய்ந்து நூல் வெளியிட எடுத்துக் கொண் டுள்ள முயற்சி மிகவும் இன்றியமையாதது என உணர்ந்து எனது பணியைத் தொடரலானேன். உள்ள நிலைமையை உரைக் கின்றேன்: எந்த ஆய்வு மன்றச் சார்பும்-எந்தப் பல்கலைக் கழகச் சார்பும் இல்லாத-தனியொருவனாகிய அடியேனது இந்த முயற்சிக்குத் தமிழ் மக்களிடையே எந்த அளவு ஆதரவு இருக்கும் என அறியேன்.

நன்றி;

யான் சென்று குறிப்பு எடுக்க ஒப்புதல் அளித்த நூலகங் களின் பொறுப்பாளர்கள் அனைவருக்கும் நன்றி செலுத்து கிறேன். சில நூலகங்களில் உள்ள சில நூல்களில் பல ஏடுகள் சிதைந்து போனமையால், அந்நூல்களைப் பற்றிய முழு விவரங் களும் தரப்படாமல், நூல்பெயர்கள் மட்டும் அல்லது மிகவும் சிறிய அளவுக் குறிப்புகள் மட்டும் இந்நூலில் தரப்பட்டிருக்கும்.

குறிப்பு விவரம்:

சில நூல்களின் பெயர்கட்கு முன் இடப்பட்டுள்ள எண்கள் தமிழக அரசின் கீழைக்கலை ஓலைச் சுவடி நூலகத்தில் (M.G.O.M.L.) சுவடிகட்கு இடப்பட்டுள்ள எண்ணிக்கைகளா கும். சில ஓலைச் சுவடிகளும் காகிதப் படிகளும் கிடைத்த விவரமும் நூலின் உள்ளுறை பற்றிய விவரங்களுடன் தரப்பெற் றிருக்கும்.

யான் 1971 ஆம் ஆண்டு பல ஊர்களிலும் எடுத்த குறிப்பு களைக் கொண்டுமட்டும் இந்நூலை எழுதியுள்ளேன். அதன்பின் வெளிவந்த தொகை நூல்கள் பற்றிய விவரங்களைத் தரமுடிய வில்லை. அவற்றை முயன்று தேடப் போதிய உடல் நலம் இல்லை. மூளைக் கட்டிப் பிணி தொடர்பால் தலை-சுற்றல் மயக்கம் - தலைவலி ஆகியவற்றிற்கிடையே என்ன செய்ய முடியும்?

அடுத்த பதிப்புக்கு வாய்ப்பு இருப்பின், இயன்றால், 1971 ஆம் ஆண்டிற்குப் பின்பு வெளியான தொகை நூல்களையும்

சேர்த்துக் கொள்ளலாம். 1971-க்குப் பிறகு வந்த தொகை நூல்களுள், முயற்சியின்றி எளிதில் அறியப் பெற்ற சில நூல்கள் பற்றிய விவரங்கள் மட்டும் தரப்பெற்றுள்ளன. தொகைநூல் கள் எழுதி வெளியிட்டுள்ளவர்கள் விவரம் தரின், அடுத்த பதிப்பு முழு வடிவம் பெறலாம்.

வரவேற்பு:

"கல்வி கரையில கற்பவர் நாள்சில
மெல்ல நினைக்கின் பிணிபல"

என்றபடி, எல்லா நூல்களையும் எல்லாரும் முழுவதும் படிக்க முடியாதாகையால், தேர்ந்தெடுத்துத் தரப்பெற்றுள்ள சில - பல பாடல்களைக் கொண்டுள்ள தொகை நூல்கள் மிகவும் போற்றி.வரவேற்கத் தக்கன அல்லவா? அந்தத் தொகை நூல் களை அறிமுகம் செய்வதே இந்த நூலாகும். அன்பர்களின் - அறிஞர்களின் - ஆராய்ச்சியாளர்களின் நல்லாதரவையும் நல் வாழ்த்தையும் வணங்கி வேண்டுகிறேன்.

இத்தகைய வெளியீடுகளைப் பல்கலைக் கழகங்கள் செய்ய வேண்டும். இவ்வளவு பெரிய நூல் கூடுதலான விலையில் விற்குமா - விற்காதா என வணிக நோக்கில் பாராமல், நற்பணி செய்வது நம் கடன் என்ற நல்ல நோக்கத்துடன் இந்நூலைத் துணிந்து வெளியிடும் மணிவாசகர் பதிப்பகத்தை ஒரு பல்கலைக் கழகம் என்றே கூறலாம். பெருநூல்கள் எழுதும்படி திட்டம் நல்கி பல முறை கலந்து உரையாடிக் கருத்துக்கள் கூறி ஊக்கம் நல்குபவர். பெருநூல்கள் - ஆய்வு நூல்கள் வெளியிடுவதில் பெருவிருப்பம் கொண்டுள்ள என் இனிய நண்பர் பதிப்புச் செம்மல் பேராசிரியர் டாக்டர் ச. மெய்யப்பன் இதனை மணிவாசகர் பதிப்பகத்தின் வாயிலாக வெளியிடும் அவர்கட்கு என்றும் குன்றா நன்றிசெலுத்துகிறேன். வணக்கம்.

சுந்தரசண்முகனார்
9 - 4 - 1990

# புகுவாயில்

## கலைக்களஞ்சிய வரலாறு

பல்வேறு கடைகள்:

சம்பளம் வாங்கி வந்ததும், வீட்டிற்கு வேண்டிய பல பொருள்களை வாங்கி வரும்படி மனைவி கணவனிடம் கூறினாள். அரிசிக் கடைக்குப் போய் அரிசியும், காய்கறிக் கடைக்குப்போய் காய்கறியும், துணிக்கடைக்குச் சென்று துணிகளும், மளிகைக் கடைக்குச் சென்று உப்பு-மிளகாய்-புளி-கடுகு-சீரகம்-வெந்தயம் - மிளகு-மல்லி - பூண்டு - சர்க்கரை நெய்-பருப்பு வகைகள் - முதலியனவும் - ஆடம்பரக் கடைக்குப் போய் சோப்பு - சீப்பு - கண்ணாடி - நறுமணப் பொருள் - சிறார் விளையாட்டுப் பொருள்கள்-விளக்கு தொடர்பான பொருள்கள் - குழந்தைகட்குத் தின்பண்ட வகைகள் - முதலியனவும், மருந்துக் கடைக்குச் சென்று மருந்து வகைகளும், இவ்விதமாக இன்னும் பல்வேறு கடைகளுக்குச் சென்று பல்வேறு பொருள்களும் வாங்கி வரவேண்டும்.

இந்தப் பொருள்களை ஒரே வேளையில் வாங்க முடியாவிடினும் மறுநாளிலும் வாங்கலாம். ஒரு கடைக்கு ஒரு கடை எட்டி எட்டி உள்ளன. ஒவ்வொரு கடையாக-ஒவ்வொரு பொருளாகத் தேடிச் சென்று வாங்குவதில், மிக்க நேரமும் செலவழிக்கப்படுகிறது-கால்களும் ஒடிகின்றன. சென்றவர் சோர்ந்து வீட்டிற்கு வருகிறார்.

அமுத சுரபி:

இவருடைய நண்பர் ஒருவர் வல்லவர்-கெட்டிக்காரரர். அவர், பல கடைகளுக்குச் சுற்றி அலைந்து திரிந்து சென்று வாங்காமல், பல கடைகளில் வாங்க வேண்டிய பல்வகைப் பொருள்களை ஒரே ஒரு பெரிய கடையில் வாங்கிவிடுகிறார். அந்தக் கடை 'அமுத சுரபி' என்னும் பெயருடைய பெரிய கடையாகும். இந்த அமுத சுரபியில் ஏறத்தாழ எல்லா வகை

யான பொருள்களும் இருக்கும். ஒரே இடத்தில்-குறுகிய நேரத்தில் பல்வேறு வகைப் பொருள்களையும் வாங்கிவிடலாம். இந்த 'அமுத சுரபி' போன்றதுதான் 'கலைக்களஞ்சியம்' என்பது.

கலைகள்:

தமிழ், மற்ற உலக மொழிகள், இலக்கிய-இலக்கணம், புலவர்கள், உயிரியல், மர (தாவர) இயல், விலங்கியல், நில வியல், காட்டியல், மெய்ப்பொருள் (தத்துவ) இயல், சமயம் (மதம்), உளவியல், அறவியல், அளவையியல், நாடகம், இசை, நடனம், மாந்தர் (மானிட) இயல், தொல் பொருள் இயல், வரலாறு, அரசியல், பொருளியல், இயற்பியல், வேதியியல், இயற்கை அறிவியல் (Natural Science), ஓவியம், சிற்பம், கட்டடக் கலை, மொழியியல், பொறியியல், தொழில் நுட்ப இயல், போரியல், சுரங்க இயல், சட்ட இயல், மருத்துவம் உணவியல், உடலியல், உடல் நல இயல், கால் நடை மருத்து வம், கணிதம், வான இயல், புள்ளி இயல், வேளாண்மை, கல்வியியல், பல்வேறு மாந்தரின் வாழ்க்கை வரலாறு-முதலிய பொருள்களைப் பற்றி அறிந்து கொள்ள வேண்டுமெனில், அந்தந்த இயல் தொடர்பான-துறை தொடர்பான நூல்களைத் தனித் தனியே தேடிப் பெற்றுப் படிக்கவேண்டும்-அந்தந்தத் துறை வல்லாரிடம் கேட்டும் பழகியும் தெரிந்து கொள்ள வேண்டும்.

இந்தக் காலத்திற்கு ஏற்ப மேலே பல கலைகள் அறிவிக்கப் பட்டுள்ளன. சரசுவதிக்குக் 'கலைமகள்' என்ற பெயர் உண்டு. அவள்,

> "ஆய கலைகள் அறுபத்து நான்கினையும்
> ஏய உணர்விக்கும் என்னம்மை"

என்று போற்றப்பட்டிருக்கிறாள். அந்தக் காலத்தில் கூறப் பட்டுள்ள அறுபத்து நான்கு கலைகளுள் பெரும்பாலானவை, மேலே வேறு பெயர்களில் கூறப்பட்டும் அடக்கப்பட்டும் உள்ளன. அந்தக்காலத்தில் அறுபத்து நான்கு கலைகளிலும் வல்லவர்கள் இருந்தனர்.

களஞ்சியம்:

பல பொருள்களையும் ஒரே இடத்தில் வாங்க 'அமுதசுரபி' இருப்பது போல், பல கலைகளைப் பற்றிய செய்திகளையும் ஒரே நூலில் தெரிவிக்கும் நோக்குடன் 'கலைக்களஞ்சியம்' உருவாக்கம் பெற்றது.

அளவிறந்த பொருளைச் சேமித்து வைக்கும் இடத்திற்குக் களஞ்சியம் என்னும் பெயர் வழங்கப்பட்டது. ஏராளமான நெல்லைக் கொட்டி வைக்கும் இடம் 'நெற்களஞ்சியம்' எனப் பட்டது. 'தமிழ் நாட்டின் நெற்களஞ்சியம் தஞ்சாவூர் மாவட்டம்'-என்று கூறும் வழக்காறு ஈண்டு ஒப்பு நோக்கத் தக்கது.

நெல் போன்ற பொருள்களைத் திரட்டிச் சேமித்து வைக்கும் இடம் களஞ்சியம் என்பது போலவே, பொதுவாகப் பல்வேறு செல்வங்களைத் திரட்டிச் சேமித்து வைத்திருக்கும் இடமும் களஞ்சியம் எனப்படும். இதைச் 'செல்வக் களஞ்சியம்' என்று சுப்பிரமணிய பாரதியார் குறிப்பிட்டுள்ளார். அவர் 'கண்ணம்மா என் குழந்தை' என்னும் தலைப்பின் தொடக் கத்தில் பாடியுள்ள

"சின்னஞ் சிறு கிளியே—கண்ணம்மா
செல்வக் களஞ்சியமே"(1)

என்னும் பாடல் பகுதி ஈண்டு ஒப்பு நோக்கத் தக்கது.

செல்வப் பொருள்களே யன்றி, அறிவு (கலை) தொடர் பானவையும் களஞ்சியம் எனக்கூறப்படும். வடலூர் இராமலிங்க வள்ளலார் தமது அருட்பாவில்

"கோளத்தி நீக்கும் குணத்தோர்க்கு அருள்செய்திருக்
காளத்தி ஞானக் களஞ்சியமே"

என இறைவனை ஞானக் களஞ்சியமாகப் புகழ்ந்து பாடியுள் ளார். நெல்களஞ்சியத்துக்கு அடுத்த படி செல்வக் களஞ்சியம்; இதற்கு அடுத்த படி ஞானக்களஞ்சியமாகும். எனவே, பல்

* திருஅருட்பா - மூன்றாம் தொகுதி - விண்ணப்பக் கலி வெண்பா - 255

வேறு கலைகளைப் பற்றிய செய்திகள் ஒரு சேரத் திரட்டித் தரப்பெற்றுள்ள பெரிய நூலும் 'கலைக் களஞ்சியம்' என்னும் சிறப்புப் பெயருக்கு உரியதாகும். இந்த அடிப்படையுடன் கலைக் களஞ்சிய வரலாற்றைக் காண்பாம்.

**கலைக் களஞ்சிய வரலாறு:**

**சொற்பொருள்:**

கலைக் களஞ்சியம் என்பது ஆங்கிலத்தில் Encyclopaedia என்று சொல்லப்படும். இதன் பொருள், மாந்தர் கற்றுத் தெரிந்து கொள்ள வேண்டிய இன்றியமையாத செய்திகள் (பொருள்கள்) அனைத்தும் அடங்கியிருப்பது - என்பதாகும்.

அகராதி சொல்லுக்குப் பொருள் மட்டும் கூறும். கலைக் களஞ்சியமோ, ஒவ்வொரு கலையைப் பற்றியும்–பொருளைப் பற்றியும் அறிந்து கொள்ள வேண்டிய செய்திகளைக் கூறும். இதிலுள்ள தலைப்புகளும் அகர வரிசையில் இருக்கும்.

**சீனக் கலைக் களஞ்சியம்:**

சீனர்களே முதல் முதலில் கலைக் களஞ்சியப் பணியைத் தொடங்கினராம். ஆனால், அவர்களின் கலைக் களஞ்சியம் இக்காலத்ததுபோல் கட்டுரை வடிவில் இல்லாமல் சுருக்கமாக எழுதப்பட்டது. முதல் சீனக்களஞ்சியம் கி.பி. 10ஆம் நூற்றாண்டில் தோன்றியது. அது, நூற்றாண்டுக்கு நூற்றாண்டு சிறிது சிறிதாக வளர்ந்து, 18 ஆம் நூற்றாண்டில் பெரிய அளவினதாய் 5020 தொகுதிகள் கொண்டதாயிற்று.

**மேலை நாடுகளில்:**

கலைக் களஞ்சியம் உண்டாக்க வேண்டும் என்ற எண்ணத்தை முதல்முதல் கிளறியவர், இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன் வாழ்ந்த அரிஸ்டாட்டில் என்னும் கிரேக்க அறிஞராவார். பல நாடுகளிலும் இந்த முயற்சி மேற்கொள்ளப்பட்டது. 1541 ஆம் ஆண்டு காலத்தில் செர்மனியில் வாழ்ந்த ரிங்கர்பல்ஜியஸ் என்பவரே முதல் முதலாக 'என்சைகிளோப்பீடியா' (Encyclopaedia) என்னும் பெயரைக் கையாண்டார்.

முதல் முதல் தலைப்புகளை அகரவரிசைப்படுத்தி அமைத்தவர், 'ஆல்ஸ்டெட்' (1588-1638) என்னும் செர்மானியராவார்.

ஐரோப்பாவில் இங்கிலாந்து-பிரெஞ்சு-செர்மனி முதலிய நாடுகளிலும், அமெரிக்காவிலும் அமெரிக்கக் கண்டத்திலுள்ள சில நாடுகளிலும் கலைக் களஞ்சியங்கள் உருவாக்கப்பட்டன. இந்தக் காலத்தில் உள்ள கலைக்களஞ்சியங்கட்குள் மிகவும் சிறந்ததாகத் கருதப்படுவது, ஆங்கிலத்தில் உள்ள 'என்சைக்கிளோப்பீடியா பிரிட்டானிகா' (Encyclopeadia Britannica) என்பதாகும். இது 1768 ஆம் ஆண்டு தொடங்கப்பெற்றுப் படிப்படியாக வளர்ந்து இப்போதுள்ள பெரிய உருவம் பெற்றுள்ளது.

அமெரிக்காவில் ஆக்கம் பெற்ற 'Encyclopeadia Americana' என்னும் கலைக்களஞ்சியம் அடுத்தபடியான பெருமைக்கு உரியது.

நாளடைவில் மாணாக்கர்க்கு உரிய கலைக்களஞ்சியமும் ஆக்கப்பெற்றது. மற்றும், தனித்தனிப் பொருள்கள் பற்றியும் தனித்தனித் துறைகள் பற்றியும் தனித்தனிக் கலைக்களஞ்சியங்கள் தோன்றலாயின.

ஆசியாவில் - தமிழில்:

ஆசியாவில் ஜப்பான் கலைக்களஞ்சியம் சிறப்பானதாகும். இந்தியாவில் பல மொழிகளிலும் கலைக்களஞ்சியங்கள் உருவாக்கப்பட்டன. தமிழில் புராணங்களின் அடிப்படையில் 'அபிதான சிந்தாமணி' என்னும் பெயரில் ஆ. சிங்காரவேலு முதலியார் ஒரு துறைச் சிறு களஞ்சியம் ஆக்கியுள்ளார். மேலும், தமிழில் கலைக்களஞ்சியம் தோன்றியுள்ளது. உயர்திரு தி.சு. அவினாசிலிங்கம் செட்டியாரின் முயற்சியால் தமிழ் வளர்ச்சிக் கழகம் என்னும் நிறுவனத்தின் வாயிலாக, இந்தியா விடுதலை பெற்ற 1947 ஆகஸ்ட்டு 15 ஆம் நாள் தமிழ்க் கலைக்களஞ்சியப் பணி தொடங்கப் பெற்றது. இதற்குப் பலர் பொருளுதவி புரிந்தனர். அரசும் பொருள் அளித்தது. ஆயிரக் கணக்கானவர்களின் உதவியாலும் உழைப்

பாலும், 21 ஆண்டு காலத்தில் இதன் பத்துத் தொகுதிகள் வெளியாகியுள்ளன. கட்டுரை விளக்கத்திற்குத் துணையாகப் படங்கள் பல இடம்பெற்றுள்ளன. இந்த இயக்கம் சிறார் கலைக்களஞ்சியமும் உருவாக்கித் தந்துள்ளது. இந்த அடிப் படையுடன், நமது 'தமிழ் நூல் தொகுப்புக் கலைக்களஞ்சியம்' பற்றி இனிக் காண்பாம்:

நூல் தொகுப்பு:

உலக மொழிகள் பலவற்றில், எல்லாப் பொருள்களையும் துறைகளையும் பற்றிய பொதுவான பெரிய கலைக் களஞ்சியங் கள் தோன்றியதல்லாமல், தனித்தனிப் பொருள் பற்றிய - தனித்தனித் துறை பற்றிய-தனித்தனிச் சிறப்புக் கலைக் களஞ்சியங்களும் தோன்றின. இது போல், தமிழ்நூல் தொகுப்பு என்னும் தனித்துறை பற்றிய கலைக் களஞ்சியம் இந்நூலாக வடிவம் பெற்றுள்ளது. நூல் தொகுத்தலே ஒரு கலையாகும். அத்தகைய தொகுப்புக் கலைத் துறைக்கு இந்நூல் ஒரு களஞ்சிய மாகும். அதாவது, தமிழ் நூல் தொகுப்புக் கலைக் களஞ்சிய மாகும்.

பல துறைகளைப் பற்றியது கலைக் களஞ்சியம். பல்வேறு துறைகளைப் பற்றிய தொகை நூல்கள் பலவற்றில் உள்ள செய்திகளை அறிவிப்பது இந்தக் கலைக் களஞ்சியமாகும்.

இந்தக் கலைக் களஞ்சிய நூலில் தரப்பெற்றுள்ள தலைப்புகள், இயலாமை காரணமாக அகர வரிசையில் அமைக்கப்படவில்லை. இதை ஈடுகட்டும் வகையில், இந்நூலில் இடம்பெற்றுள்ள நூல் பெயர்களின் அகர வரிசை இறுதியில் தரப்பெற்றுள்ளது. இந்த நூற் பெயர் அகர வரிசையின் துணை கொண்டு, குறிப்பிட்ட நூல் பற்றிய விவரங்களை அறிந்து கொள்ளலாம். கால வாரியாகவும் ஆசிரியர் வாரியாகவும் நூல்கள் தரப்பெற்றிருப்பதால் அகர வரிசையில் அமைக்க இயலவில்லை என்பதும் கருதத் தக்கது,

---

# 1. நூல் தொகுப்புக் கலை

**முதல் பெருங்கலை:**

முதல்முதல் குழந்தைக்குத் தாயின் வாயிலாகவே மொழி அறிமுகமாகிறது. அதனால்தான், அந்தக் குழந்தை பின்னர் பேசும் மொழி 'தாய்மொழி' எனப்படுகிறது. சேய் தாயிட மிருந்து முதலில் பெற்றுச் சுவைக்கும் மொழிச் செல்வம் சொற்களோ சொற்றொடர்களோ அல்ல; அந்தச் செல்வம் பாட்டு—பாட்டு—பாட்டேதான்! சொற்களையும் சொற்றொ டர்களையும் குழந்தையின்மேல் அள்ளிப் பொழிந்து தாய் கொஞ்சுவாள்; ஆனால் குழந்தைக்கு ஒன்றும் புரியாது. கொஞ்சும் தாய்க்குச் செய்யும் பதில் உதவியாக—கைம் மாறாகக் குழந்தை புன்சிரிப்புப் பூக்கும்—அவ்வளவுதான்! தாய் பாட்டுப் பாடினாலோ, குழந்தை அதில் சொக்கிப்போகும். தொட்டிலை ஆட்டிக்கொண்டே தாய் பாடும் தாலாட்டுப் பாடலைச் சுவைக்காத சேயும் உண்டோ? தாலாட்டுப் பாடா மல் அன்னை தொட்டிலை ஆட்டினால், குழந்தை 'ஊம்-ஊம்' என்று ஒலியெழுப்பும். அந்த ஒலிக்குப் பொருள் 'பாட்டுப் பாடு' என்று அன்னைக்கு இடும் ஆணையாகும். அன்னை இடையிலே பாடலை நிறுத்தினாலும், மீண்டும் 'ஊம்—ஊம்' என்ற கட்டளை யெழும். அந்த அளவுக்குத் தாயின் தாலாட்டுப் பாட லைக் குழந்தை சுவைக்கிறது. ஆம்! மக்களினம் முதலில் அறிந்து சுவைக்கும் கலை 'பாடல் கலை' தான்! முதல் பெருங் கலை கவிதைக் கலையே!

**தனிமை மொழி:**

குழந்தை முதலில் பேசும் மொழி, சொற்களோ சொற் றொடர்களோ அல்ல. இவை குழந்தைக்கு முதலில் தெரிவதற் கில்லை. குழந்தை முதலில் பேசும் மொழி பாட்டுத்தான். தனித்துப்படுத்துக் கொண்டிருக்கும் போது குழந்தை ஏதோ ஒலி யெழுப்பிக் கொண்டிருக்கும்; அந்த ஒலி தனிச்சொல்லோ தனிச் சொற்றொடரோ அன்று; அது பாட்டு! பாட்டு! அந்த ஒலி யைக் கேட்ட தாய், 'கண்ணு, என்னமோ பாடறானே! என் செல்வம் என்ன பாடுகிறான்?' என்று சொல்லிக்கொண்டே

குழந்தையைத் தூக்கிக் கொஞ்சுவாள். இவ்வாறாக, குழந்தை எழுப்பும் தொடர்ச்சியான இனிய ஒலி, தனிமையில், தன்னில் தானே பேசி—இல்லையில்லை—பாடி மகிழும் பாட்டாக உருவங்கொண்டு, கேட்போரை மகிழ்விக்கிறது. இவ்விதமாக, பாட்டு, குழந்தை அறிந்து சுவைக்கும் முதல் பெருங்கலையாகத் திகழ்வது மட்டுமன்றி, அது தன்னில்தானே படைத்து வெளிப்படுத்திப் பிறரை மகிழ்விக்கும் முதல் பெருங்கலையாகவும் விளங்குகிறது.

உரைநடை பேசுவதற்குத்தான்; உரையாடலுக்குத்தான்; எதிரே இன்னொருவர் இருக்கவேண்டும். பாட்டுக்கு அது வேண்டியதில்லை. தனிமையில் தனக்குத்தானே பேசிக்கொள்ளும் மொழி பாட்டாகும். ஒருவர் எதிரே யாருமின்றித் தமக்குத்தாமே தொடர்ந்து உரையாடிக் கொண்டிருப்பாரேயாயின், அவரைக் கீழ்ப்பாக்கம் மருத்துவ மனைக்கு அனுப்பிவைப்பதற்கு வேண்டிய முயற்சியே நடைபெறத் தொடங்கும். ஒருவர் தனிமையில் பாடிக்கொண்டிருப்பாரேயாயின், அவரைக் கீழ்ப்பாக்கம் செல்லும் வண்டியில் யாரும் ஏற்றமாட்டார்கள்.

குழந்தை மட்டுந்தானா தனிமையில் பாடுகிறது? தனிமையில் பாடாதவர் எவருமே இல்லையெனலாம். சொல்லப்போனால், பிறர் முன்னே பாட்டு எழுவதனினும், தனியே இருக்கும்போதுதான் பாட்டு மிகவும் மிடுக்காக எழும்; அச்சமின்றிக் கூச்சமின்றி ஆரவாரமாக எழும். அப்போது எவரேனும் வந்து விடுவாராயின், எழுந்த பாட்டு அடங்கி விடுவதும் உண்டு. வந்தவர் சென்றதும் மீண்டும் பாட்டு எழும்.

ஆம்! தனியே வழிப் பயணம் செய்பவர் பாடிக் கொண்டே செல்கிறார். இரவு நேரப் பயணத்தில் தனிமையின் திகிலைப் போக்கப் பாட்டுப் பெருந்துணை புரிகிறது. தனியே வண்டியோட்டிச் செல்பவர் பாடிக்கொண்டே ஓட்டுகிறார். தனியே வேலை செய்பவர் பாடிக்கொண்டே செய்கிறார். எல்லாத் துறையினரும் பாடிக் கொண்டே தத்தம் வேலைகளைச் செய்கின்றனர்.

**எங்கும் எதிலும்:**

பாடல் தனிமையில் நிகழ்வதன்றிக் குழுவிலும் காணப்படு

கிறது. வயலில் வேலை செய்பவர்கள், படகு வலிப்பவர்கள், ஏற்றம் இறைப்பவர்கள், சுமை வண்டி தள்ளியிழுப்பவர்கள், சுண்ணாம்பு இடிப்பவர்கள், ஊஞ்சல் ஆடுபவர்கள், கும்மியடிப் பவர்கள், கோலாட்டம் அடித்தாடுபவர்கள், அம்மானைக்காய் விளையாடுபவர்கள், இறை வணக்கம் செய்பவர்கள், ஒப்பாரி வைப்பவர்கள், இன்னபிற செயல்கள் செய்பவர்கள் அனை வரும் குழுவாகப் பாடிக் கொண்டே செய்வதைக் காண்கி றோம். இவ்வாறாகப் பாட்டு எங்கும் எதிலும் நீக்கமற நிறைந்து நிற்கும் கலையாகத் திகழ்கிறது. 'பாட்டு இன்றி வாழ்க்கை இல்லை' என்று சொல்லிவிடலாம் போல் தோன்று கிறது.

மக்கள் கலை:

ஓவியம், சிற்பம், இசை முதலியனவாக உலகில் கலைகள் பல உண்டு. ஆய கலைகள் அறுபத்து நான்கினைப் பற்றியும் நாம் அறிவோம். ஆனால் இவற்றுள், இசையோடு இரண்டறக் கலந்து பின்னிப் பிணைந்து நிற்கும் பாடல் கலையே மக்க ளோடு நெருங்கிய தொடர்புடைய கலை என்பது மறைக்க முடியாத உண்மை. ஓவியம், சிற்பம் முதலிய கலைகளின் நுட் பத்தை உணர்ந்து சுவைப்பவர் எத்தனை பேர்? இசை கலந்த பாடற்கலையைப் பருகி மகிழ்பவரின் எண்ணிக்கையே மிகுதி என்பது யாவரும் அறிந்த உண்மை. ஓவியம், சிற்பம் முதலிய உயர்கலைகளை இங்கே குறைத்து மதிப்பிடவில்லை. ஆனால் குழவி முதல் கிழவி—கிழவர் வரை, படித்தவர் முதல் பாமரர் வரை, சுருங்கச் சொல்லின்—மக்கள் அனைவருமே. மற்றக் கலைகளினும் பாடல் கலையிலேயே பிறந்தது முதல் இறுதி வரை மிகுதியாக ஈடுபட்டு இன்புறுகின்றனரன்றோ?

பாடல் கலையானது, தாலாட்டுப் பாடலாகவோ, விளை யாட்டுப் பாடலாகவோ, நாடக-திரைப் பாடலாகவோ, தொழிலூக்கப் பாடலாகவோ, பல்வேறு உணர்ச்சிப் பாடலா கவோ, அன்பு ததும்பும் (பக்திப் பரவசத்) தெய்வப் பாடலா கவோ, இன்ன பிறவாகவோ, எந்த உருவத்திலாயினும் பல் வேறு மக்களையும் தன்பால் காந்தம்போல் ஈர்த்துக் கொள் கிறது; இத்தகைய பேராற்றல் வேறு எந்தக் கலைக்கும் இந்த

அளவு இல்லை என்பதும் மறுக்க முடியாத உண்மை. அவ்வளவு ஏன்? பிறந்த குழந்தைக்கும் தாலாட்டுப் பாட்டு; இறந்து கிடக்கும் குழந்தைக்கு மட்டுமல்ல—உடலை எடுத்துப் போன பின்னரும் ஒப்பாரிப் பாட்டு எனில், பாடல் கலையோடு மக்களுக்கு உள்ள மிக நெருங்கிய தொடர்பு நன்கு புலனாகும். இதிலிருந்து நாம் அறிந்து கொள்ள வேண்டிய உண்மை யாது? "மற்ற மற்றக்கலைகள் உயர் நிலையில் உள்ளவர்களைக் கவர, பாடற்கலையோ எளிய நிலையிலுள்ள பாமர மக்களையும் கவர்வதால், இது மக்கள் கலையாகும்—அதாவது, பொதுமக்களின் பொதுக்கலையாகும்" என்பதுதான்!

மக்கள் கலை மட்டுமா?

பாடற்கலை மக்கள்கலை மட்டுமா? மரஞ் செடி கொடிகளையும் வளரச் செய்து வாழவைக்கும் மாண்புடைய கலையன்றோ? பாட்டுக் கேட்டுப் பயிர் வகைகளும் செழிப்பதாக நாம் அறிகிறோமே! ஒரு கிழமையிதழில் ஒரு நகைச்சுவைப் படத்துணுக்குப் பார்த்த நினைவு வருகிறது: ஒரு பக்கம் ஒரு பெரிய செடி இருக்கிறது. இன்னொரு பக்கம் ஒரு சிறிய செடி உள்ளது. பெரிய செடி சிறிய செடியைப் பார்த்து பின்வருமாறு கேட்கிறது:—

"நாம் இருவரையும் ஒரே நாளில்தானே நட்டார்கள்! உனக்கும் பாட்டுப் பாடுகிறார்கள்; எனக்கும் பாட்டுப் பாடுகிறார்கள். அப்படியிருக்க, நான்மட்டும் பெரிதாய் உயரமாய் வளர்ந்திருக்கிறேன்; நீ மட்டும் ஏன் சிறிதாய்—குட்டையாய் இருக்கிறாய்?"

இந்தக் கேள்விக்குச் சிறிய செடி பின்வருமாறு பதில் சொல்கிறது:—

"உன் பக்கம் குமாரி ராதிகா பாடுகிறாள்; அதனால் நீ உயரமாய் வளர்ந்து விட்டாய். என் பக்கம் ஒரு கிழவி அல்லவா பாடுகிறாள்! நான் எப்படி உன்னைப்போல் உயரமாய் வளரமுடியும்?"

இந்த வேடிக்கைத் துணுக்கால், பாடற்கலை மக்கள் கலை மட்டுமன்று, மரஞ் செடி கொடிகளுக்கும் மகிழ்வளிக்கும் மாபெருங்கலை என்பது போதரும்!

பாடற் கலையின் தோற்றம்:

உலகில் உள்ள எல்லா மொழிகளிலும் எண்ணற்ற பாடல்கள் உள்ளன—எண்ணிறந்த பாடல் இயற்றும் முறையை அறிவிக்கும் பல இலக்கண நூல்கள் உள்ளன. குறிப்பாகத் தமிழ் மொழியை எடுத்துக்கொள்ளின், ஒவ்வொரு பாடலுக்கும் உரிய இலக்கணம் பரந்துபட்டது. ஓர் 'ஒப்பீடு' (Comparison) வேண்டுமெனில்-பிரெஞ்சு மொழிப்பாடல் இலக்கணத்திலும், தமிழ் மொழிப்பாடல் இலக்கணம் மிகவும் கடுமையானது. மூவாயிரம் ஆண்டுக்கு முற்பட்டது எனப்படும் தொல்காப்பியம் என்னும் தமிழ் இலக்கண நூலில், பாடல் இயற்றும் முறைகளை அறிவிப்பதற்கென்றே, 'செய்யுள் இயல்' என்னும் ஒரு பகுதி ஆசிரியர் தொல்காப்பியனாரால் அமைக்கப் பெற்றுள்ளது. அந்தப் பகுதியில் தொல்காப்பியர், தமக்கு முன்னாலேயே புலவர்கள் பலர் செய்யுள் இலக்கணம் எழுதியிருப்பதாகப் பல இடங்களில் சுட்டிக்காட்டியுள்ளார்.

> "நல்லிசைப் புலவர்... வகுத்துரைத்தனரே" (1)
> "யாப்பென மொழிப யாப்பறி புலவர்" (74)
> "பொழிப்பென மொழிதல் புலவர் ஆறே" (94)

இதனை நோக்குங்கால், பல்லாயிரம் ஆண்டுகட்கு முன்பே, தமிழ் மொழியில் செய்யுள்கள் பலவும், செய்யுள் இலக்கண நூல்கள் பலவும் தோன்றியிருந்தமை புலனாகிறது. இதனை இன்னும் நன்கு தெளிய விரும்பின், தொல்காப்பியருடன் பயின்ற நண்பராகிய பனம்பாரனார் என்பவர் தொல்காப்பியத்திற்குத் தந்துள்ள சிறப்புப் பாயிரச் (மதிப்புரைச்) செய்யுளில் உள்ள,

> ...தமிழ் கூறும் நல்லுல கத்து
> வழக்கும் செய்யுளும் ஆயிரு முதலின்
> எழுத்தும் சொல்லும் பொருளும் நாடிச்
> செந்தமிழ் இயற்கை சிவணிய நிலத்தொடு
> முந்துநூல் கண்டு முறைப்பட எண்ணிப்
> புலந் தொகுத் தோனே..............
> தொல்காப்பியன் எனத் தன்பெயர் தோற்றிப்
> பல்புகழ் நிறுத்த படிமை யோனே.

என்னும் பகுதியை ஊன்றி நோக்க வேண்டும். இந்தப்பகுதியில் உள்ள 'வழக்கும் செய்யுளும்...... நாடி', 'முந்து நூல் கண்டு முறைப்பட எண்ணி' என்னும் தொடர்கள், 'தமக்கு முன் இருந்த செய்யுள்களையும் நூல்களையும் ஆராய்ந்தே தொல்காப்பியர் நூல் இயற்றினார் என்பதைப் பறைசாற்றுகின்றன அன்றோ? இன்னும், இந்தப் பாடற் பகுதியில் உள்ள 'புலம் தொகுத்தோனே, என்னும் தொடரையும் நன்கு நோக்க வேண்டும். 'தமக்கு முன்பு உள்ள நூல்களில் விரிந்து பரந்து கிடக்கும் செய்திகளைத் தொல்காப்பியர் சுருக்கித் தொகுத்து எழுதியுள்ளார்' என்பது, இந்தத் தொடரின் கருத்து. ஆம்! செய்யுள் இலக்கணம் இன்னும் விரிவாகக் கூறப்பட்டிருப்பதாகப் பேராசிரியர் அறிவித்துள்ளார். இதனை, தொல்காப்பியச் செய்யுளியலில் உள்ள 'வழியெனப் படுவது அதன் வழித்தாகும்' என்னும் (95 ஆம்) நூற்பாவின்கீழ்ப் பேராசிரியர் எழுதியுள்ள,

> '...தொல்காப்பியம் கிடப்பப் பல்காப்பியனார் முதலியோர் நூல் செய்தது எற்றுக்கெனின், அவரும் அவர் செய்த எழுத்துஞ் சொல்லும் பொருளு மெல்லாஞ் செய்திலர். செய்யுள் இலக்கணம் அகத்தியத்துப் பரந்து கிடந்ததனை இவ்வாசிரியர் சுருங்கச் செய்தலின் அருமை நோக்கிப் பகுத்துக் கூறினாராகலானும்'

என்னும் பகுதியால் அறியலாம். எனவே, தமிழ் மொழியில் பல்லாயிரம் ஆண்டுகட்கு முன்பே செய்யுள் இலக்கண நூல்கள் பல தோன்றியிருந்தமை புலனாகும்.

எள்ளா? எண்ணெயா?

செய்யுள் இலக்கணம் தோன்றிய பின்னர் செய்யுள்கள் இயற்றப்பட்டனவா? செய்யுள்கள் இயற்றப்பட்ட பின்பு செய்யுள் இலக்கணம் எழுந்ததா? எள் முந்தியதா? எண்ணெய் முந்தியதா? எள் இன்றி எண்ணெய் எப்படி எடுக்க முடியும்? எள்ளே முந்தியது.

> ''எள்ளினின் றெண்ணெய் எடுப்பது போல
> இலக்கியத்தினின் றெடுபடும் இலக்கணம்''

என்பது பேரகத்திய நூற்பா என்று சொல்லப்படுகிறது. செய்யுளாகிய இலக்கியம் இல்லாமல் எதைப்பற்றி இலக்கணம் எழுதுவது? இலக்கியம் கண்டதற்கே இலக்கணம் இயம்பினார்கள். எனவே, இலக்கியமே முந்தியது. பலரும் பல்வேறு வகைப் பாடல்கள் பாடினார்கள். அந்தப் பாடல்களைப் படித்தறிந்த அறிஞர்கள், 'இனி இன்னின்ன பாடலை இன்னின்னவாறுதான் இயற்ற வேண்டும்; இன்னின்னவாறு இயற்றும் பாடல்கள் இன்னின்ன பெயர் பெறும்' என்று கரைகோலினார்கள். கரை போட்டால்தானே ஆற்று நீர் கண்டபடி ஓடிச் சிதைக்காமல்—சிதையாமல் நேரிதின்ஓடிச், சிதறாமல் பயன்தரும்! செய்யுள் இயற்றும் முறைக்குப் போட்ட அந்தக் கரைக்குத்தான், 'செய்யுள் இலக்கணம்' என்னும் பெயர் சூட்டப்பட்டது.

எனவே, பாடற்கலை, தொடக்கத்தில் எந்த இலக்கணக் கட்டுப்பாடும் இன்றி, இயற்கையாகப் பொதுமக்களிட மிருந்து தோன்றியது என்னும் பேருண்மை புலப்படும். அஃதாவது படிக்காத பலதுறைப் பொது மக்களிடையே புழங்கிய நாட்டுப் பாடல் போன்றதொரு வகைப்பாடல்களே அந்தக் காலத்தில் முதல் பாடல்களாக இருந்தன. பின்னர், இவற்றை அடிப்படையாகக் கொண்டு படிப்படியாக இலக்கண வரம்பு பெற்று வளர்ந்து வந்தவையே செய்யுட்கள் ஆகும். அஃதாவது பாட்டுக்கலை, யாப்பிலக்கணம் கற்ற புலவர்களிடமிருந்து பிறக்கவில்லை; படிக்காத பாமர மக்களிடமிருந்தே பிறந்தது. அதனால், பாடல்கள் இயற்கைச் சூழ்நிலை உடையனவாய் உள்ளத்தெழுந்த உணர்ச்சிகளின் உண்மையான உருவமாய் அமைந்து உவகை தந்தன. இது பாடற்கலையின் குழவிப் பருவம். குழவி நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து இன்றைய நிலையை எய்தியுள்ளது.

**பாடலும் கவிதையும்:**

பாடலைக் குறிக்கச் செய்யுள், யாப்பு, பா, பாட்டு முதலிய பெயர்கள் பண்டு வழங்கின. இடைக்காலத்தில் 'கவி' என்ற சொல் வடமொழியிலிருந்து வந்து குடியேறி நிலைத்தது. இருபதாம் நூற்றாண்டாகிய இந்தக் காலத்திலோ 'கவிதை' என்னும் சொல், எப்படியோ எந்த வழியாகவோ நுழைந்து

ஆணியடித்துக் கொண்டு அசைக்க முடியாமல் நிலைத்து விட்டது. இதில் ஒரு புதுமை என்னவென்றால்,—,செய்யுள் வேறு—'கவிதை' வேறு என்று சொல்லப்படுகிறது. அஃதாவது செய்யுள் என்பது மிளகாய்ப் பொடி போலவும், கவிதை என்பது கற்கண்டு போலவும் ஒருசிலரால் கருதப்படுகிறது.

'செய்யுள் என்பது செய்யப்படுவது-கட்டப்படுவது. அதில் அவ்வளவாக உணர்ச்சியோ சுவையோ இராது. அறிவுரை, மெய்யுணர்வு (தத்துவம்) முதலிய எல்லாப் பொருள்களையுமே எதுகை மோனையுடன்—சீர் தளைப்பொருத்தத்துடன் கூறும் ஒரு வகைச் சொற் குவியலே 'செய்யுள்' என்பது சிலரது கருத்து.

இவர்கள் 'கவிதை'என்பதற்குக் கூறும் விளக்கமோ மிகுந்த பெருமைக்கு உரியது. 'கவிதை என்பது,படிப்பவரின் உள்ளுணர்ச்சியைத் தூண்டி, மனவெழுச்சியைக் கிளறி, கற்பனையுலகில் சிறகடித்துப் பறக்கச்செய்து, தம்மை மறந்து மதுவுண்டவர் போல் ஒருவகை மயக்கத்தில் ஆழச் செய்வது'—என்பது இவர்கள் கூற்று.

இவர்கள் கருதுவது போல் செய்யுள் வேறு—கவிதைவேறு என்று சொல்லிவிட முடியாது. இன்று கவிதைக்கு இவர்கள் என்ன இலக்கணம் கூறுகின்றார்களோ, அந்த இலக்கணம் அன்று செய்யுளில் இயற்கையாய் அமைந்திருந்தது. மூவாயிரம் ஆண்டுகளுக்குமுன் தொல்காப்பியர் செய்யுள் இயல்' எனப் பெயரிட்டு இலக்கணம் கூறியுள்ளபடி இயற்றப்பட்ட செய்யுட்களில், இன்று பெரிதுபடுத்திப் பேசப்படும் 'கவிதை' என்பதற்கு உரியனவாகக் கூறப்படும் சிறப்புக்கள் எல்லாம் அமைந்திருந்தன. பா, பாட்டு எனப்படுவனவற்றிற்கும் இந்தச் சிறப்புக்கள் எல்லாம் உண்டு.

ஆனால், செய்யுள், பா, பாட்டு என்னும் பெயர்களில் ஒருசிலரால் இயற்றப்பட்ட உருப்படிகளில் உணர்ச்சியோ, சுவையோ இல்லாது போனமையாலும், நாளடைவில் கணிதம், மருத்துவம், வானநூல், மெய்யுணர்வு, நிகண்டு முதலிய யாவும் செய்யுள்வடிவில் இயற்றப்பட்டுக் கற்பனை நயம் இல்லாது

போயினமையாலும், செய்யுள் வேறு கவிதை வேறு என்று கருதக்கூடிய சூழ்நிலை பிற்காலத்தில் உருவாகி விட்டது. இத்தகைய மாறுதல் எந்தத் துறையிலும் நிகழக் கூடியது தான்! இதைக்கொண்டு, கவிதை எனப்படுவதில் உள்ள உணர்ச்சி, சுவை, கற்பனைநயம் முதலிய சிறப்புக் கூறுகள், செய்யுள் எனப்படுவதில் இல்லை எனச் சொல்லிவிடமுடியாது.

செய்யுள், பா, பாட்டு, பாடல் ஆகியவற்றுக்குள் காலப் போக்கில் சிறுசிறு வேறுபாடு கூறமுடியுமென்றாலும், பெரும் பாலும் இவையனைத்தும் ஒத்த பொருள் உடையனவே. அஃதாவது, இவற்றுக்குள் நெருங்கிய தொடர்பு உண்டு. மற்றும், கவிதை எனப்படுவதற்கு உரிய சிறப்புக்கள் எல்லாம் இவற்றிற்கும் உண்டு.

'போனது போகட்டும் பிள்ளையாரே வழி' என்றாற் போல, போனது போக! இனி, இன்றைச் சூழ்நிலைக்கு வருவோம். வடமொழி வழிவந்த 'கவிதை' என்னும் சொல் லுக்குப்பதிலாக, இனி நாம் 'பாடல்' என்னும் செல்லைப் பயன்படுத்தலாம். இன்று, 'பாரதியார் கவிதைகள்,' 'பாரதி தாசன் கவிதைகள்' என்றெல்லாம் சொல்லப்படுவதை நாம் அறிந்துள்ளோம். இதற்குப் பதிலாக, 'பாரதியார் பாடல்கள்', 'பாரதிதாசன் பாடல்கள்' என்று ஏன் சொல்லக் கூடாது? இது புயதிமுறையன்று; பழைய முறையே. இதனை நம் முன்னோர் களேநமக்குக் கற்றுத் தந்துள்ளார்கள். எடுத்துக்காட்டாக, 'தாயுமானார் பாடல்', 'பட்டினத்தார் பாடல்', 'சிவவாக்கியர் பாடல்', 'குதம்பைச் சித்தர் பாடல்' முதலிய பெயர்களைக் காண்க. இவர்தம் பாடல்கள், உணர்ச்சி, கிளர்ச்சி, எழுச்சி, புரட்சி, கற்பனை முதலிய வற்றில், பாரதியார்—பாரதிதாசன் முதலியோரின் பாடல்களுக்கு எந்தவகையிலும் குறைந்தவை யல்ல. சொல்லப் போனால், அவரவர் வாழ்ந்த காலச் சூழ் நிலைகட்கு ஏற்பச் சிறுசிறு மறுதல்கள் இருக்கலாம்; அவ்வளவு தான்.

இதுகாறும் மாதிரிக்காக, நாம் நன்கு அறிந்த தமிழ்ப் பாடல்களைப் பற்றிப் பேசினோம். இதுபோலவே, எல்லா

மொழிகளிலும் காலச்சூழ்நிலைகட்கு ஏற்ப, உரிய மாறுதல்களுடன், பாடற்கலை படிப்படியாய் வளர்ச்சி பெற்று வந்திருக்கும் என்பதில் ஐயம் இருக்க முடியாது'

**பாடற்கலையின் பயன்கள்:**

பொதுவாகக் கலைகளைக் கவின்கலை, பயன்கலை என இரண்டாகப் பிரித்து கூறுவது வழக்கம். ஓவியம், சிற்பம் முதலியன கவின் கலை - அதாவது - அழகுக் கலைகளாம். அவற்றால் வாழ்க்கைக்கு நேரடிப் பயன் பெரும்பாலும் இல்லை: அழகைப் பார்த்துச் சுவைத்து மகிழ்வதோடு சரி. கணிதக்கலை, மருத்துவக்கலை முதலியன வாழ்க்கைக்கு நேரடிப் பயன் அளிக்கும் பயன் கலைகளாகும். அழகைக் கண்டு சுவைக்கும் இன்பக் கூறுகள் அவற்றில் இல்லை. ஆனால் பாடற்கலையோ, கவின்கலையுமாகும் - பயன்கலையுமாகும்.

பாடற்கலையிலுள்ள கவின் கலைக் கூறுகளை முதலிற் காண்பாம்: பாடலைப் பாடுவதாலும் கேட்பதாலும் ஒருவகைப் பொழுதுபோக்கு இன்பச்சுவை உள்ளது. பாடலின் இசையால் செவிக்கு இன்பம்; பொருள் நயத்தால் கருத்துக்கு இன்பம்; சொல்நயத்தால் செவிக்கும் கருத்துக்கும் ஒருசேர இன்பம். பொதுவாக பாடலின்பம், அலுப்பு-களைப்பைப் போக்கி ஓய்வு நேரப்பொழுது போக்கிற்கு உதவுகிறது.

அடுத்துப் பாடற் கலையிலுள்ள பயன்கலைக் கூறுகளைப் பார்ப்போம்: பாடல்களிலுள்ள கருத்துக்கள் அகக்கண்ணைத் திறக்கின்றன: உள்ளுணர்வையும் மனவெழுச்சியையும் தூண்டி நன்முறையில் தொழிற்படுத்துகின்றன; இவ்வாறு ஒழுகவேண்டும், இவ்வாறு ஒழுகலாகாது என்றெல்லாம் அறிவுரை தருகின்றன. வாழ்க்கைக்கு நல்ல குறிக்கோளை வகுத்துக் கொடுக்கின்றன; உள்ளத்தைப் பண்படுத்தி நல்லொழுக்க வழியில் திருப்பிவிடுகின்றன; கற்பனை நயத்தில் ஆழச்செய்து கவலையை மறக்கச் செய்கின்றன: கடந்தகால நடைமுறைகளையும் வரலாறுகளையும் அறிவித்து, இனி எதிர்காலத்தில் திட்டமிட்டு நல்வாழ்வு வாழ வகை செய்கின்றன.

பிற இன்பங்களிடையே பாடலின்பம்:

வேறு சில இன்பங்களைப் போல் பாடல் இன்பத்துக்கு இடம், காலம், வயது முதலியவைத் தொடர்பாகப் பாகுபாடு கிடையாது. பாடல் இன்பத்தைக் கோயிலிலும் நுகரலாம்- மருத்துவ மனையிலும் நுகரலாம். பாடல் இன்பத்தைக் காலை – மதியம் - மாலை-இரவு-மழை-பனி-குளிர் – வெய்யில் முதலிய எந்த வேளையிலும் நுகரலாம். சிறுவர், முதியவர், ஏழை, செல்வர், கற்றார், கல்லாதவர், ஆடவர், மகளிர்- முதலிய எவரும் நுகரலாம்-எவர் முன்பும் நுகரலாம்- எவருட னும் கலந்து நுகரலாம். மற்ற இன்பங்கட்கெல்லாம் இவ்வளவு வாய்ப்பு உண்டா?-இத்தனை வாய்ப்பு உண்டா?

மற்றும், 'பாடலின்பம் நிலைத்தது நோய் தராதது பொருட் செலவு இல்லாதது, ஒரு முறை பெற்றுவிட்டால், அந்தப் பாடல், உள்ளத்தில் ஊறுகாய் போல் ஊறி எப்பொழு தும் எண்ணியும் பாடியும் மகிழச் செய்யும். வேறு பொருள் களை விலைகொடுத்துத் திரும்பத்திரும்ப வாங்குவது போல ஒருமுறை பெற்ற பாடலைத் திரும்பத் திரும்ப விலைகொடுத்து வாங்கவேண்டுமா என்ன'?

மேலும், பாடலின்பம் எத்தனை முறை சுவைத்தாலும் தெவிட்டாது - எவ்வளவு நேரம் நுகர்ந்தாலும் சலிப்புத் தட்டாது, நுகர நுகரச் சுவை பெருகும்: ஈடுபட ஈடுபட இன்பம் கொழிக்கும். ஈண்டு, 'நவில் தொறும் நூல் நயம் போலும்' என்னும் திருக்குறள் (783) பகுதியும், 'தேருந் தொறும் இனிதாந் தமிழ்' என்னும் தஞ்சைவாணன் கோவைப் (59)பாடற் பகுதியும், மங்கையொருத்தி தருஞ் சுகமும் எங்கள் மாதமிழுக்கு ஈடில்லை, என்னும் பாரதிதாசன் பாடற் பகுதியும் ஒப்பு நோக்கி மகிழத்தக்கன. இந்தப்பகுதி களில் 'தமிழ்' என்றிருப்பினும், மற்ற மொழியாளர்கள் தத்தம் தாய்மொழிப் பாடல்களை ஈண்டு நினைவுபடுத்திக் கொள்ளலாம்.

பொய் பிறந்தது புலவர்வாயிலே:

"நெய் பிறந்தது பசுவின் பாலிலே
நொய் பிறந்தது அரிசி நுனியிலே
கை பிறந்தது தோளில் கடையிலே
பொய் பிறந்தது புலவர் வாயிலே"

என்னும் பாட்டைப் பாட்டனார் பன்முறை சொல்லக் கேட்டதுண்டு. 'பொய் பிறந்தது புலவர் வாயிலே, என்னும் தொடர், புலவர்கள் பொய்யர்கள் -பொய் சொல்பவர்கள் என்னும் கருத்தையா அறிவிக்கிறது? இல்லை. மேலுக்கு அவ்வாறு தோன்றினும், இங்கே 'பொய்' என்பது கற்பனையைக் குறிக்கிறது. கற்பனை நயம் அமைந்திருப்பது பாடலுக்குச் சிறப்பிலக்கணம் அல்லவா? நாளடைவில் புலவர் சிலரின் பாடல்களில் கற்பனை வரம்பு கடந்து எல்லை மீறிப் போய்விட்டதால், அந்தக் கற்பனைச் செய்தியை நம்ப முடியாமல் 'பொய்' என்று எண்ண வேண்டியதாயிற்று. இத்தகைய 'அண்டப் புளுகு- ஆகாயப் புளுகு' கற்பனைகள் பண்டைக் காலத்தில் இருந்ததில்லை, இவை பிற்காலத்துச் சரக்குகளே! இவற்றைக் கொண்டு, புலவர்களைப் பொய்யர்கள் என்று எண்ணி விடலாகாது.

கற்பனை பாடலுக்கு உயிர் நாடி. கவிஞன் எனப்படும் பாவலன், இயற்கை யமைப்பையும் வாழ்கை நடைமுறையினையும் உற்று நோக்கித் தன் கற்பனை வாயிலாக அவற்றுக்கு மறு உருவம் தந்து அவற்றை மறுபடைப்புச் செய்து காட்டுகிறான். அதனால் பாவலனை, 'படைப்பவன், (Maker) எனச் சொல்வது மரபு.

பாடலை முற்றும் அறிவியல் (விஞ்ஞானக்) கண்கொண்டு பார்க்கலாகது. பாவலனுக்கும் பகுத்தறிவுஉண்டு: ஆனால்அவன் கற்பனை நயத்தை நம்பிக் காலங்கழிப்பவன். ஆனால் இங்கே கற்பனை என்பது, உள்ளதை இல்லாததாகவும் இல்லாததை உள்ளதாகவும் கூறும் பொய்யன்று. பாவலனும் உள்ளதைத் திரிக்காமல் உள்ளபடியேதான் கூறுகின்றான், ஆனால் அதனை ஒரளவு அணிசெய்து (அலங்காரப் படுத்திக்) கூறுகிறான், அதனைத்தான் கற்பனை என்கிறோம்.

திருமணக் கோலத்துடன் ஊர்வலம் செல்லும் மணப் பெண்ணுக்குச் செய்யப் பெற்றுள்ள 'ஒப்பனை' போன்றது கற்பனை. அந்தப் பெண் பழையவள் பழையவள்தான்! ஆனால்,இப்போது புதிய உருவம் பெற்றுப் புதியவளாயத் திகழ் கின்றாள். இவ்வாறே, உள்ளபடி உள்ள நிகழ்ச்சிக்குக் கற்பனை யின் வாயிலாகப் புது உருவம் கொடுக்கிறான் பாவலன். இந்தக் கலையில் கைதேர்ந்த பாவலர்கள் புதிய சமுதாயத் தையே – புதிய உலகத்தையே படைக்கவும் முடியும். கற்பனை கலந்த கருத்துக்களின் வாயிலாகப் புதிய உலகைப் படைப்பது தானேபாடற்கலையின் உயர் எல்லை!

பாவலன் ஒரு தனி மாந்தனே! ஆனால் அவன் மன்பதை யுள் (சமுதாயத்துள்) ஒருவனாதலின், அவனது உள்ளத் தெழும் கற்பனை, அவன் பிறந்து வளர்ந்து வாழ்ந்து பழகும் மன்பதையின் (சமுதாயுத்தின்) சூழ்நிலையை அடித்தளமாகக் கொண்டதாகவே இருக்க முடியும். எனவேதான், அவன், தன்னைச் சூழ்ந்துள்ள மன்பதையைத் தனது கற்பனையால் கவர்ந்து, தன்னுடன் அழைத்துச் சென்று, அவரவர் வேற்றுமை களை மறந்து உயரிய உள்ளப் பண்புடன் ஒன்றுபடச் செய் கிறான். 'யாதும் ஊரே யாவரும் கேளிர்' என்னும் புறநானூற் றுப் பாடல் (192) இதற்குப் போதிய சான்றாகும். 'வாழ்க்கை என்னும் மாபெருங் கடலிடையே தனித்தனித் திட்டுக்கள் போல் பிரிந்து நிற்கும் மக்கள் இனம், உயரிய பாடல்களின் வாயிலாக 'நாம் எல்லாமும்' ஓரிடத்து மக்களே என்று ஒரு சிறுபொழுதாயினும் உணரக்கூடும்'–என்று 'மாத்தியூ ஆர்னல்டு' Mathew Arnold) என்னும் அறிஞர் கூறியிருப்பது ஈண்டு ஒப்புநோக்கத் தக்கது.

இதுகாறுங் கூறியவாற்றால், பாவலர்கள் பாடல்களில் கையாளும் கற்பனை நயத்தின் சிறப்பு நன்கு புலனாகும் சில பாடல்களிலுள்ள நம்பத்தகாத பொய்யான கற்பனைகளைக் கொண்டு, பாடற் கலையினையே பழிக்கத் தொடங்கிவிடக் கூடாது என்பதை அறிவுறுத்தவே இவ்வளவு எழுத நேர்ந்தது 'பொய் பிறந்தது புலவர் வாயிலே' என்னும் தொடரில் உள்ள உண்மையை உள்ளவாறு புரிந்து கொள்ள வேண்டும்.

படைப்புக் கடவுளரும் பாவலரும்:

படைப்புக் கடவுளாகிய நான்முகன் உயிருக்கு இடமாக உடலைப் படைத்தாற்போல, பாவலர்கள் பொருளுக்கு கருத்துக்களுக்கு இடமாகப் பாடல்களைப் படைக்கின்றனர் என்னும் கருத்துப்பட, பவணந்தி முனிவர் தமது நன்னூலில்,

''பல்வகைத் தாதுவின் உயிர்க்கு உடல் போற்பல
சொல்லால் பொருட்கு இடனாக உணர்வினின்
வல்லோர் அணிபெறச் செய்வன செய்யுள்'' (268)

என்று கூறியுள்ளார். பவணந்தியாரினும் குமரகுருபர அடிகளார் மிகவும் மேலே போய்விட்டார். 'நான்முகன் படைக்கும் உடம்புகள் நிலைக்காமல் அழிந்து போகும்; ஆனால், பாவலர்கள் படைக்கும் பாடல்களோ அழியாமல் புகழ்கொண்டு என்றும் நிலைத்து நிற்கும்' என்பது குமர குருபரர் கூற்று. இதனை, அவர் இயற்றிய நீதிநெறி விளக்கம் என்னும் நூலில் உள்ள,

''கலைமகள் வாழ்க்கை முகத்த தெனினும்
மலரவன் வண்டமிழோர்க் கொவ்வான் – மலரவன்செய்
வெற்றுடம்பு மாய்வனபோல் மாயா புகழ்கொண்டு
மற்றிவர் செய்யும் உடம்பு'' (6)

என்னும் பாடல் நன்குணர்த்தும். உலகில் பன்னெடுங்காலமாகப் பன்னூறாயிரங் கோடிக்கணக்கான மக்கள் வாழ்ந்து வந்தனர். அவர்களுள் பெரும்பாலான பெயர்கள் இன்று அறியப்படவில்லை. ஆனால், பாவலர் சிலரின் பெயர்கள் மட்டும் அவர்தம் நிலைத்த பாடல்களினால் இன்றும் அறியக் கிடக்கின்றன. அரசர்கள், வள்ளல்கள், மல்லர்கள் முதலான சில்லோர் பெயர்களும் அந்தப் பாடல்களின் வாயிலாகவே அறியப்படுகின்றன. இதனால், பாடற்கலையின் வரம்புகடந்த பெருமையும் பலதிறப்பட்ட பயன்களும் நமக்கு நன்கு புலனாகும். அதனோடு பாவலர்களின் சிறப்பும் தனி விளங்கும்.

பாடல் தொகுப்புப் பணி:

பாடற்கலையின் மாபெரும் பயன்களையும், பாவலர்களின் மாண்பினையும் பட்டறிந்த மக்கள், பாவலர்களைப் பொன்னைப்போல் போற்றினர்; அவர்தம் பாடல்களைப் படித்துத் துய்த்துப் பயன்பெற்று மகிழ்ந்தனர்; பாடல் நூல்களாகிய இலக்கியங்களைப் பெறற்கரிய மணிகள் நிறைந்த பேழைகளாகப் பேணிக்காத்து வந்தனர்.

பாடல்களை முழுநூல் வடிவத்தில் பெற்றுப் படித்துப் பயன் நுகர்ந்த அறிவாளிகள் சிலர், பலப்பல பாடல்கள் ஒரு நூல் உருவத்தில் இல்லாமல், தனித்தனி உதிரிப்பாடல்களாகச் சிதறிக் கிடப்பதை அறிந்தனர். சுவைகண்ட பூனை விடுமா? ஐயோ—இந்த உதிரிப்பாடல்களை இப்படியே தனித்தனியாகச் சிதறிய நிலையில் விட்டுவைத்திருந்தால் நாளடைவில் ஒவ்வொன்றாக மறைந்து போகுமே என்றஞ்சி, அவற்றை ஒன்று திரட்டித் தொகுத்து, ஒவ்வொரு நூல் வடிவம் கொடுக்கத் தொடங்கினர். இவ்வாறாகப் பல உதிரிப் பாடல்கள் ஒன்று சேர்ந்த தொகுப்பு நூல்கள் உருவாகத் தொடங்கின. இவை நாளடைவில்'தொகை நூல்கள்' என்னும் அழகிய பெயர் பெற்றன.

ஒன்று ஒன்றாகவா? ஒரே மாட்டாகவா?

'ஒன்று ஒன்றா நூறா? ஒரே மட்டா நூறா?' என்பது ஒரு பழமொழி. ஒரேயடியாகச் சேர்ந்த பின்னரே நூறு தேற முடியும். ஈண்டு, தொகை நூல்கள் முந்தியவையா? முழுமுழுத் தனி நூல்கள் முந்தியவையா?—என்றதோர் ஐயம் எழுகிறது. 'சிலப்பதிகாரம்? என்னும் நூல் ஒருவரே ஒரே பொருள் பற்றிய எழுதிய ஒரு முழுத் தனிநூல். புறநானூறு என்னும் நூல், பலர் பலகாலத்தில் பலபொருள் பற்றி எழுதிய பல்வேறு பாடல்களின் - அஃதாவது நானூறு உதிரிப் பாடல்களின் தொகுப்பு நூல் - தொகை நூல் ஆகும். புறநானூறு போன்ற தொகை நூற் பாடல்கள் முதலில் தோன்றியிருக்க முடியுமா? சிலப்பதிகாரம் போன்ற முழுத் தனிநூல் முதலில் தோன்றி யிருக்க முடியுமா? இந்தக் கேள்வியையே இன்னொரு விதமாக

வும் கேட்கலாம் அஃதாவது,—உதிரிப் பாடல்கள் முதலில் தோன்றினவா? முழுத் தனிபாடல்கள் முதலில் தோன்றினவா?

இந்த வினாவுக்கு விடையிறுப்பது எளிது. தொகை நூற் பாடல்களே-அதாவது - உதிரிப் பாடல்களே முதலில் தோன்றியவையாகும். பின்னரே முழுத் தனி நூல்கள் தோன்றின தொகை நூல்களிலேயே இருவகை உண்டு. அவையாவன:— 'புறநானூறு' என்னும் நூலைப் போல, பாவலர்கள் பலர் பாடிய பாடல்களின் தொகுப்பு ஒருவகை. சுப்பிரமணிய பாரதியார் என்பவர் பல சமயம் பாடிய பல்வேறு வகைப் பாடல்களின் தொகுப்பாகிய 'பாரதியார் பாடல்கள் (பாரதியார் கவிதைகள்) என்னும் நூலைப்போல, ஒருவரே பல நேரத்தில் பல பொருள்கள் பற்றிப் பாடிய பல்வேறு வகைப் பாடல்களின் தொகுப்பு நூல் மற்றொரு வகையாகும். இவ்விருவகைத் தொகை நூற்களுள், பலர் பாடல்களின் தொகுப்ப நூலே முதலில் தோன்றியிருக்க முடியும். ஒருவர் பாடல்களின் தொகுப்பு நூல் பின்னரே தோன்றியிருக்க வேண்டும். இயற்கை வழி இதனைத் தீர்மானிப்போம்:—

மிகவும் பழைய காலத்தில், ஒருவரே பல பாடல்கள் இயற்றுவது என்பது அருமை. அவரவரும் ஏதேதோ ஒன்றிரண்டு அல்லது இன்னும் சிறிது கூடுதலாகப் பாடல் இயற்றுவதே இயற்கை. இப்படியாகப் பலர் பாடிய பல பாடல்களையும் மக்கள் கேட்டும் பாடியும் சுவைத்து மகிழ்ந்திருப்பர்; பின்னர் அவற்றைத் தொகுத்து எழுதியும் வைத்துக்கொண்டிருப்பர். இதற்கு அடுத்த கட்டமாகவே, ஒருவர் பல பாடல்கள் எழுதுவது நிகழ்ந்திருக்கும். அந்த ஒருவரும் முதலில் ஒரு பொருள் பற்றித் தொடர்ந்து ஒரு முழுத் தனிநூல் எழுதியிருக்க முடியாது; அவர் அவ்வப்போது பல பொருள் பற்றித் தனித்தனிப் பாடல்களே எழுதியிருக்கக் கூடும்; இந்தத் துறையில் திறமை பெருகப் பெருக, பின்னரே ஒரு பொருள் பற்றித் தொடர்ந்து ஒரு முழுத் தனிநூல் எழுதியிருக்க முடியும், இன்றுள்ள பாவலர் ஒருவரையே எடுத்துக் கொள்வோம்: - அவர் முதலில் பலர் எழுதிய பாடல்களை - பல இலக்கியங்களைப் படித்துப் பயிற்சி பெறுகிறார். பின்னர், அவ்வப்போது

பல்வேறு பொருள்கள் பற்றித் தனித்தனிப் பாடல்கள் எழுதிப் பழகுகிறார்; இந்தக் கலை கைவந்தபின்னர் முழுத் தனிநூல் எழுதுவதில் முனைந்து விடுகிறார். இதுதான் இயற்கை. இந்த நிலை அன்றைக்கும் பொருந்தும் - இனி என்றைக்கும் பொருந்தும். மற்றும், இந்த இயற்கை நியதி எந்த மொழிக்கும் பொருந்தும்.

சில மொழிகளில் கிடைத்திருக்கும் நூல்களுள், தொகை நூல்கள் பிற்பட்டனவாயும் முழுத் தனிநூல்கள் முற்பட்டனவாயும் உள்ளனவே யெனில், அம்மொழிகளில், உதிரிப்பாடல்கள் முன்னமேயே தொகுக்கப்படாமல் மறைந்து போயிருக்கக் கூடும்-அல்லது - தொகுத்த தொகை நூல்கள் மறைந்து போயிருக்கலாம்-அல்லது - முழுத் தனியொரு நூலுக்கு முன்னால் தோன்றிய உதிரித் தனிப் பாடல்கள், அந்த முழுத் தனிநூல் தோன்றியபிறகு தொகுக்கப்பட்டுப் பிந்தியதுபோல் தோன்றலாம். எனவே, எந்தக் கோணத்தில் நின்று நோக்கினும், தொகைநூற் பாடல்களே தொன்மைப் பெருமைக்கு உரியன என்னும் உண்மை ஒப்புக் கொள்ளப் பெறும்.

தொகுப்புப் பணியின் இன்றியமையாமை:

பாவலர் பலர் பல காலத்தில் பல செய்திகள் பற்றிப் பாடிய நானூறு புறப்பொருள் பாடல்களின் தொகுப்பே 'புறநானூறு' என்னும் நூல் என்பது தெரிந்த செய்தி. இந்த நானூறு பாடல்களும் ஒரு நூலாகத் தொகுக்கப்படாதிருந்தால், அழியாமல் இப்போது நமக்குக் கிடைத்திருக்குமா? ஒரு நூலாகத் தொகுக்கப்படாமல் தனித்தனியாகக் கிடைப்பினும், இப்போது உள்ள அளவுக்கு அந்தத் தனிப்பாடல்கட்கு மதிப்பு இருக்கமுடியுமா? தனி மரம் தோப்பாகாது; தனிப்பாடல் சிறக்க முடியாது. தனி மாந்தருக்கு மதிப்புக் குறைவே. தனியொருவரினும், பலர் சேர்ந்த ஒரு குழுவிற்கே-ஒரு சங்கத்திற்கே-ஒரு கழகத்திற்கே மதிப்பு மிகுதி. அதனாலேயே, பலர் சேர்ந்து கழகம் அமைத்து, அதன் வாயிலாகச் செயல்படுகின்றனர். அதன் வாயிலாகத் தம் விருப்பங்களை எளிதில் நிறைவேற்றிக் கொள்கின்றனர். தனித்தனி மாந்தரின் எதிரே ஒரு கட்டுப்பாடு இன்றிப் பேசமுடியும். ஆனால், அதே தனித்தனி

மாந்தர் ஒன்றுகூடி அமர்ந்துள்ள ஒரு கழகக் கூட்டத்தில் பேசும்போது அதற்கென்று ஒரு வகைக் கட்டுப்பாடு உண்டு-ஒழுங்கு முறை உண்டு. தனியொருவரின் எதிரே எளிய உடையுடன் இருக்க முடிகிறது;ஆனால், பலர் குழுமியுள்ள இடத்திற்குச் செல்லுங்கால் உடையில் ஓரளவு கவனம் செலுத்த வேண்டியுள்ளது. ஒரு தேவையைக் கேட்கத் தனியொருவர் வருவதினும், ஒரு குழு வருமாயின் செல்வாக்கு மிகுதியும் உண்டு. இவ்வாறே, தனிப்பாடலினும் ஒரு நூலின் பெயரால் உள்ள பாடலுக்கே சிறப்பு மிகுதி. தனியொருபாடல் தனியொருவரைப் போன்றது; தனிப்பாடல்கள் பல சேர்ந்த தொகைநூல் ஒரு குழுவின் மதிப்புடையது.

தனி எழுத்துக்கு மதிப்பு இல்லை-பொருளும் இல்லை; பல எழுத்துக்கள் சேர்ந்த சொல்லுக்கே மதிப்பு உண்டு; பொருளும் உண்டு. அந்தச் சொல்லில் சேர்ந்திருக்கும் பொழுதே தனி எழுத்து மதிப்புப் பெறுகிறது. இன்னும் கேட்டால், தனிச் சொல்லுக்குக்கூட அவ்வளவாக மதிப்பில்லை-போதிய பொருள் பெறுமானம் இல்லை; பல சொற்கள் சேர்ந்த சொற்றொடருக்கே (வாக்கியத்துக்கே) போதிய மதிப்பு உண்டு – முழுப் பொருள் பெறுமானம் உண்டு. ஒரு வாக்கியத்தில்உள்ளபோதே, ஒரு தனிச்சொல் போதிய மதிப்புப் பெறுகிறது. ஒரு தனிப் பாடல் தனியெழுத்துப் போன்றது; பல தனிப்பாடல்களின் தொகுப்பாகிய தொகை நூல், பல எழுத்துக்களால் ஆன பல சொற்கள் சேர்ந்த சொற்றொடரின் பெறுமான மதிப்பு உடையது.

தனி மலருக்குப் போதிய மதிப்பு இல்லை. அதை மோந்து பார்த்துத் தூக்கி யெறிந்து விடுவர். பல மலர்களைத் தொடுத்த மாலைக்கே மதிப்பு மிகுதி. மாலைக்குள் அடங்கி யிருக்கும் போதுதான் தனித்தனி மலர்கள் மதிப்புப் பெறுகின்றன. அது மட்டுமன்று; மாலையாகக் கட்டிய பிறகே தனி மலர்கள் போதிய பாதுகாப்புப் பெறுகின்றன. தனித்துக் கிடக்குமேல் ஒல்லையில் சிதைந்தொழியும். கட்டப்பட்ட மாலையோ கவனமாக எடுத்து வைத்துக் காக்கப்படுகிறது. மலருக்கும் மாலைக்கும் உள்ள தொடர்பு போன்றதே, தனிப் பாடலுக்கும் தொகைநூலுக்கும் உள்ள தொடர்புமாகும்.

மலர்மாலை யென்றென்ன! தனித்தனி ஒன்பான் மணிகளால் தொகுக்கப்பட்ட (நவரத்தின) மணிமாலையினையும் ஈண்டு ஒப்பிட்டுக் கொள்ளலாம். பல பூக்களின் தொகுப்பே பூமாலை; பல பாக்களின் தொகுப்பாகிய பாமாலையே தொகைநூல்

எனவேதான், உதிரியாகக் கிடந்து நாளடைவில் மறைந்து ஒழிந்து போகாமல் நிலைத்து நிற்பதற்காகவும், திக்கற்றதாகக் குறைந்து மதிப்பிடப்படாமல் இன்ன நூலைச் சார்ந்தது என்னும் பெருமைபெற்று உயர்வெய்தவும், முன்னோர்கள் உதிரியான தனிப்பாடல்களை ஒரு நூலாகத் தொகுக்கும் அரும்பெரும் பணியை மேற்கொண்டனர். இந்தப்பணி மிகவும் இன்றியமையாததல்லவா? 'இறைப்பது எளிது-பொறுக்குவது கடினம்' என்பது பழமொழி யாயிற்றே!

திரட்டுக்கம்:

மக்கள் உதிரிப் பாடல்களைத் திரட்டி வைப்பதில் உள்ள ஓர் இயற்கை உண்மையையும் ஈண்டு மறப்பதற்கில்லை. எதையும் சேர்த்துவைக்கும் இயற்கைப் பழக்கம் மக்களுக்கு உண்டு. சிறு குழந்தைமுதல் முதியவர்வரை இந்தப் பழக்கத்திற்கு எவரும் விலக்கல்லர். சிறார்கள் எந்தப் பொருளைப் பார்த்தாலும் தமக்கு வேண்டும் என்று எடுத்துக்கொண்டு முன்பு திரட்டி வைத்திருக்கின்ற பொருள்களோடு இதனையும் சேர்த்து வைத்துக்கொள்வர். சோடாத்தக்கைகள், திரைப்பட விளம்பரத் தாள்கள், அஞ்சல் தலைகள், தீப்பெட்டிப் படங்கள், கோலிக்குண்டுகள், பம்பரங்கள், பட்டங்கள், தகர-இரும்புச் சாமான் வகைகள், பொம்மைகள், பல்வேறு விளையாட்டுப் பொருள்கள், இன்ன பிறவற்றை நிரம்பத் திரட்டிச் சேர்த்து வைப்பதில் சிறார்களுக்கு உள்ள ஆர்வத்திற்கு அளவேயில்லை. சிறார்கட்கு வகைகளும் பலவாயிருக்க வேண்டும்; ஒவ்வொரு வகையிலும் எண்ணிக்கையும் மிகுதியாயிருக்க வேண்டும். எத்தனை வகைப் பொருள்களையும் சேர்க்க அவர்கள் தயங்க மாட்டார்கள். ஒவ்வொரு வகையிலும் எத்தனை கிடைத்தாலும் அவர்தம் உள்ளம் நிறைவு பெறாது. இன்னும் திரட்டிச் சேர்த்து வைத்துக்கொள்ள வேண்டும் என்னும் பேரவா பெருகிக் கொண்டே யிருக்கும். இது சிறார்களின் இயல்பு.

சிறார்களின் பேரால் இவ்வளவும் சொன்னோம். இவ்வளவையும் எல்லா வயதினருக்கும் எல்லாத்துறை மாந்தருக்கும் பொருத்திக் கொள்ளவேண்டும். அந்தந்த வயதினரும், அந்தந்தத் துறையினரும், அவரவருக்கேற்பப் பொருள்களை நிரம்பத் திரட்டிச் சேர்த்து வைத்துக்கொள்ள முயல்கின்றனர்; எத்தனை வீடுகள், எத்தனை காணி நிலங்கள், எவ்வளவு காசு பணங்கள், இன்னும் எத்தனை வகையான பொருள்கள் சேர்ந்தாலும் நெஞ்சம் நிறைவு பெறுவதில்லை. சிலர் பிள்ளை பெறுவதிலும் நிறைவுற்றார் இலர். சிலர் எத்தனை நாள்காட்டிகள் (காலண்டர்கள்) கிடைத்தாலும் நிறைவுறாமல், மேலும் பல பெற விரும்பிப் பல கடைகளிலும் நிறுவனங்களிலும் படி ஏறிப் பல்லிளித்துக் கேட்டு நிற்கும் கண்கொள்ளாக்காட்சியை என்றும் மறக்கமுடியாது. பெண்களோ, எத்தனை வகையான உலோகங்களில், எத்தனை வகையான பாத்திரங்களில் எத்தனை வாங்கினாலும், எவ்வளவு ஆடை அணிகலன்கள் பெற்றிருந்தாலும் உள்ளம் நிறைவுறுவதில்லை. இன்னும் திரட்ட வேண்டும்; மேன் மேலுஞ் சேர்க்கவேண்டும் என்றே விரும்புகின்றனர். இந்த இயல்பு எல்லாவகை மாந்தர்க்கும் நிரம்ப உண்டு.

இவ்வாறு பொருள்களைத் திரட்டுவதில் உள்ள ஊக்கத்திற்குத் 'திரட்டு ஊக்கம்' (Acquisition) என்று உளவியலார் (Psychologists) பெயரிட்டுள்ளனர். பிறந்த குழந்தை முதல் எல்லாருக்குமே உணவு ஊக்கம், போர் ஊக்கம், திரட்டு ஊக்கம்,படைப்பு ஊக்கம், காதல் ஊக்கம், குழு ஊக்கம் முதலிய பதினான்கு ஊக்கங்கள் உள்ளனவாம். இவை உரிய வயதில் ஒவ்வொன்றாய்த் தோன்றத் தொடங்கும். இந்த ஊக்கங்கட்குப் பொதுவாக 'இயல்பு ஊக்கங்கள்' (Instincts) என்று உளவியலார் பெயர் சூட்டியுள்ளனர்.

**தூய்மை செய்தல்:**

இந்த ஊக்கங்களைப் பற்றி ஒரு நல்ல கருத்து உளவியலாரால் உரைக்கப்பட்டுள்ளது; இந்த ஊக்கங்கட்கு அடிமையாகி இவற்றின் போக்கில் விட்டுவிடலாகாது. இவற்றை நல்வழியில் திருப்பிப் பயன்படுத்திக் கொள்ளவேண்டும். எடுத்துக்காட்டாகப் போர் ஊக்கத்தைப் பற்றிப் பார்ப்போம். ஒரு

வரோடு ஒருவர் பகைத்துக் கொள்வதும் அடித்துக் கொள் வதும் அழித்துக் கொள்வதுமாகப் போர் ஊக்கம் செயல்பட விடக்கூடாது. இதற்குப் பதிலாக, வறுமை, பிணி, அறியாமை, மூடப்பழக்க வழக்கம் முதலியவற்றை எதிர்த்துப் போராடி. வெற்றி பெறுவதிலும், நில நடுக்கம் – எரிமலை-புயல்-வெள்ளம் முதலிய இயற்கையின் கொடுமைகளோடு போராடிக் காத்துக் கொள்வதிலும், இன்ன பிறநல்வழிகளிலும் போர் ஊக்கத்தைப் பயன் படுத்தவேண்டும். இவ்வாறு ஓர் ஊக்கத்தை அதன் போக்கில் விட்டு விடாமல் நல்வழிகளில் திருப்பி ஒழுங்கு செய் வதற்குத் தூய்மை செய்தல் (Sublimation) என்று உள நூலார் பெயர் தந்துள்ளனர்.

இந்த அடிப்படையுடன் திரட்டுக்கத்திற்கு வருவோம். பல் வேறு பொருள்களையும் நிரம்பத்திரட்டித் தொகுத்துச் சேர்த்து வைப்பது மக்கள் இயல்பு. ஆனால், தேவைக்கு மேல் வீடுகள் நிலங்கள், ஆடையணிகலன்கள், காசு பணங்கள் முதலிய வற்றைத் திரட்டுவதில் ஊக்கங்காட்டி, வீண் அவாவால், மற்ற மக்களை இல்லாதவர்களாக்கித் துன்புறுத்துவதில் திரட்டுக் கம் செயல்பட விடக்கூடாது. சிறந்த பாடல்களைத் தொகுத் தல், நல்ல நூல்களைத் திரட்டுதல், மற்றவர்க்கும் பயன் படுத்தும் நோக்குடன் இன்றியமையாப் பொருள்களைச் சேர்த்து வைத்தல் முதலிய நல்வழிகளில் திரட்டுக்கத்தைத் திருப்பிப் பயன்படுத்திக் கொள்வதே சிறந்த அறிவுடைமையா கும்.

எனவே, பழைய உதிரிப் பாடல்களை ஒரு நூலாகத் தொகுத்து வைத்தவர்களும், பல நல்ல நூல்களைத் திரட்டி வைத்தவர்களும், திரட்டுக்கத்தை நன்முறையில் பயன் படுத்திய பேரறிஞர்கள் அல்லவா? யார் யாரோ எதை எதையோ தொகுத்துத் திரட்டிக் காலத்தை வீணாக்கிக் கொண்டிருக்க, இந்தப் பெருமக்கள் பெறலரும் பாடல்களையும் நூல்களை யும் திரட்டி வைத்திருப்பதை நோக்குங்கால், இவர்தமை எவ் வளவு புகழ்ந்தாலும் தகுமே! இந்தத் தொகுப்புக்களால் – இந்தத் திரட்டுக்களால் மக்கள்குலம் பெற்று வரும் பயன்கள் மிகப் பலவன்றோ? இவர்தம் புகழ் வாழ்க!

**தொகுப்பைக் குறிக்கும் பெயர்கள்:**

அறிஞர் பெருமக்கள் பல பாடல்களை ஒன்று திரட்டித் தொகுத்து உருவாக்கித் தந்துள்ள நூல்கள் 'தொகை நூல்கள்' என்று பெயர் வழங்கப் பெறுகின்றன. தொகுக்கப் பெற்றது தொகை. தொகைக்கு எப்போதுமே மதிப்பு உண்டல்லவா? தொகையை விரும்பாதவர் உளரோ? எவரும் தொகை சேர வேண்டும் என்று எதிர்பார்ப்பது இயற்கை யன்றோ? காசு பணத்தின் தொகுப்பாகிய தொகையைத்தான் இங்கே குறிப்பிட்டுப் பேசுகிறேன். இந்த எடுத்துக் காட்டால், 'தொகை' என்னும் பெயரின் பொருள்செறிந்த சிறப்பு விளங்கும். ஆனால், காசு பணமாகிய தொகையை விட, பாடல் தொகை-நூல் தொகை பெரிதும் உயர்வாகப் போற்றப்படுவது யாவரும் அறிந்த உண்மை.

நம் முன்னோர்கள் பல்வேறு பாடல்களின் தொகுப்பு நூல்களைத் 'தொகை' என்னும் பெயரால் வழங்கியிருக்கின்றனர். எடுத்துக் காட்டாக, 'குறுந்தொகை, கலித் தொகை, நெடுந்தொகை' என்னும் சங்க நூல்களின் பெயர்களைக் காண்க. சங்க காலப் பாடல்களின் தொகுப்புக்கள் 'தொகை' என்னும் பெயரால் வழங்கப்பட்டன. அவற்றை யடுத்து நாளடைவில் தொகுக்கப்பட்டு வந்த நூல்கள் தொகை என்னும் பெயரேயன்றி, இன்னும் பல்வேறு பெயர்களாலும் சுட்டப் பட்டன. அப்பெயர்களாவன: — தொகுதி, தொடை, கொத்து கோவை, கோர்வை, மாலை, மாலிகை, மஞ்சரி, புஞ்சம், கடிகை, திரட்டு, தேவாரம், திருமுறை, நிகண்டு, சிந்தாமணி சமுத்திரம், பிரபந்தம், கலம்பகம், கதம்பம், முதலியனவாம். இவற்றுள் வடமொழிப் பெயர்களும் சில உள. இப்பெயர்கள், பல்வேறு தொகை நூல்களைக் குறிக்கும் பெயர்களின் இறுதிப் பகுதியாக இருந்து வருகின்றன. இப்பெயர்களைத் தாங்கிய தொகை நூல்களை-நூற்றுக் கணக்கில் அன்று- ஆயிரக் கணக்கில், அடுத்த அடுத்த பகுதிகளில் அறிந்து மகிழலாம்.

**ஆந்தாலஜி (Anthology)**

தொகுப்பு நூலைக் குறிக்கத் தமிழில் ஏறக்குறைய இருபது பெயர்கள் மேலே கொடுக்கப்பட்டுள்ளன. இந்தத்தொகுப்பு






நூலை ஆங்கிலத்தில் 'ஆந்தாலஜி' (Anthology) என்னும் பெயரால் வழங்குகின்றனர். பிரெஞ்சு மொழியிலோ 'ஆந்தொலொழி' (Anthologie) என வழங்குகின்றனர். இந்தச் சொல்லாட்சி பிரெஞ்சு மொழியில் முதல் முதலாகப் பதினாறாம் நூற்றாண்டில்தான் வழக்கத்திற்கு வந்ததாம்.

இந்தச் சொல்லாட்சி இலத்தீனிலிருந்து பிரெஞ்சுக்கு வந்தது. இலத்தீன் மொழியில், இது, 'ஆந்தொலொழியா (Anthologia) என்றும், 'ஆந்தொலொழியே, (Anthologiae) என்றும். 'ஆந்தொலொழிகா' (Anthologica) என்றும், 'ஆந்தொலொழியொம்' (Anthologium) என்றும் நோக்கம் போல் பலவாறு வழங்கப்படுகிறது.

இலத்தீனுக்கும் முதன்மையான அடிப்படைச் சொல் (மூலம்), 'Aνθολγia' (ஆந்தொலொழியா) "Aνθο λoyixa" (ஆந்தொலொழிகா) என்னும் கிரீக் சொற்களாகும். மேலுள்ள கிரீக் சொற்களைக் கொண்டு, ரோமன் எழுத்துக்கள் எனப் படும். இலத்தீன் எழுத்துக்களுக்கும் கிரீக் எழுத்துக்களுக்கும் இடையே சிறுசிறு வேறுபாடுகள் இருப்பதை அறியலாம். (பிரெஞ்சு, ஆங்கிலம் முதலிய ஐரோப்பிய மொழிகள் இலத்தீன் எழுத்துக் களால் எழுதப்படுகின்றன என்பது ஈண்டு நினைவுக்கு வரவேண்டும்) இலத்தீன் எழுத்துக்களுக்கு நேரான கிரீக் எழுத்துக்கள் பின்வருமாறு:—

1. இலத்தீன்: Anthologia
   கிரீக் : Aνθολ'ογia. } ஆந்தொலொழியா

2. இலத்தீன்:Anthologica
   கிரீக் :Aνθολ oλixa } ஆந்தொலொழிகா

இரண்டு மொழிகளிலும் A,o,i, ஆகியவை ஒரே மாதிரியாயுள்ளன. a என்பதற்கு மேலே ஒரு சிறு சாய்வுக்கோடு இட்டு 'a எனக் கிரீக் எழுத்தை எழுதவேண்டும். இந்த ஒரு சிறிய வேறுபாடு உண்டு. அடுத்து, இலத்தீனில் 'n' என்பதற்கு நேரான கிரீக் எழுத்து 'γ' என்பதாகும். இலத்தினில் 't' என்பதற்கு நேராகக் கிரீக்கில் θ என எழுதவேண்டும்; அதாவது, o என்னும் எழுத்தைச் சிறிது உருளை வடிவில் உயர்த்தி

நடுவில் ஒரு சிறு கோடு இடவேண்டும். இலத்தீனில் 'f' என்பதற்கு நேராகக் கிரீக்கில் 'λ' என்பதாகும்; அதாவது, y என்னும் எழுத்தைத் தலைகிழாகப் போடவேண்டும். பின்பு, இலத்தீனில் 'g' (ழி) என்பதற்குக் கிரீக்கில் 'γ' என்பது நேராகும். இறுதியாக, இலத்தீனில் உள்ள 'c' என்பதற்கு நேரான கிரீக் எழுத்து 'x' என்பதாகும். இந்த அடிப்படையில் வைத்து, முன்னர் தந்துள்ள இரண்டு கிரீக் சொல்லையும் படிப்போமாயின், முதல் சொல்லை 'ஆந்தொலொழியா' என்றும், இரண்டாவது சொல்லை 'ஆந்தொலொழிகா' என்றும் எளிமையாகப் படிக்கலாம். எனவே, இந்த அமைப்பைக் கொண்டு, மேற்காட்டியுள்ள இரு சொற்களுமே, முதன்மை மொழியாகிய கிரீக்கிலிருந்தே பிந்திய மொழியாகிய இலத்தீனில் கடன் வாங்கப்பட்டு வந்துள்ளன என உணரலாம்.

ஈண்டு, கிரீக், இலத்தின் ஆகிய இருமொழி எழுத்துக்களையும் சொற்களையும் பற்றி இவ்வளவு எழுத நேர்ந்ததன் இன்றியமையாத காரணமாவது:— 'பாடல் தொகுப்புக் கலையைக் குறிக்கும் சொற்களாக ஆங்கிலத்திலும் பிரெஞ்சிலும் பெரிதுபடுத்திப் பேசப்படுகின்ற Anthology, Anthologie என்னும் சொற்கள் கிரீக் மொழியிலிருந்து வந்தவை-அதாவது-கிரீக்கிலிருந்து இலத்தீனுக்கும், இலத்தினிலிருந்து பிரெஞ்சு ஆங்கிலம் முதலிய மொழிகளுக்கும் வந்தவை'-என்னும் கருத்தை அறிவிக்கும் நோக்கமேயாம். இந்தக் கருத்தை அறிவிக்கும் நோக்கத்தின் காரணமாவது, 'கிரீக்கிலுள்ள 'ஆந்தொலொழியா' என்னும் பொருளுக்கு நேரான-ஒத்த பொருளுடைய தமிழ்ச் சொல்லை எடுத்து ஈண்டு ஒப்பிட்டுக் காட்டவேண்டும் என்னும் நோக்கமேயாம். இந்த நோக்கத்தை நிறைவேற்ற 'ஆந்தொலொழியா' என்னும் கிரீக் சொல்லின் பொருளை விளக்கவேண்டும். அது வருமாறு: 'ஆந்தொலொழியா என்றால் மலர்த்திரட்டு, மலர்ச் சேர்க்கை மலர்த் தொகுப்பு என்று பொருளாம். இந்தச் சொல்லை 'ஆந்தோ' 'லொழியா' என்று இரு பகுதிகளாகப் பிரிக்க வேண்டும். இவற்றுள் முதல் பகுதியில் 'மலர்' என்னும் பொருளும், பிற்பகுதியில் 'சேர்க்கை' என்னும் பொருளும் அடங்கியுள்ளன. இதற்கு ஆங்கிலத்தில் 'Flower gathering' என்றும்,

பிரெஞ்சு மொழியில் 'Recueil de fleurs' என்றும் பொருள் விளக்கம் கூறுகின்றனர். இந்த இரண்டுக்கும் 'மலர்ச் சேர்க்கை-மலர்த்திரட்டு' என்றே பொருளாகும். (Recuiel de fleurs = Collection of flowers). மலர்ச் சேர்க்கை என்பது மலர்மாலை - பூமாலை என்பதேயன்றோ?

அடுத்த 'அவதாரம்':

மலர்மாலை என்னும் பொருளைக் குறித்து வந்த 'ஆந்தொலொழியா' என்னும் கிரீக் சொல், நாளடைவில் மற்றோர் 'அவதாரம்' (பிறவி) எடுக்கத் தொடங்கியது; அஃதாவது, - பூக்களின் தொகுப்பாகிய 'பூமாலை' என்னும் பொருளைக் குறித்தது போல, பாக்களின் தொகுப்பாகிய 'பாமாலை' என்னும் பொருளையும் குறிக்கலாயிற்று: அஃதாவது, - பல்வேறு பாடல்களின் தொகுப்பாகிய 'தொகை நூல்' என்னும் பொருளையும் தருவதாயிற்று. பூக்களின் தொகுப்பைக் குறிக்கும் 'ஆந்தொலொழியா' என்னும் சொல், அதுபோன்றதொரு தொகுப்பாகிய - அஃதாவது - பாக்களின் தொகுப்பாகிய தொகை நூலையும் குறிப்பதற்குத் தமிழ் மொழியிலிருந்து சில ஒப்புமைகள் வருமாறு:—

சுக்கு, மிளகு, திப்பிலி என்னும் மூன்று சரக்குகள் கொண்டதொரு மருந்தைக் குறிக்கும் 'திரிகடுகம்' என்னும் பெயர், மும்மூன்று கருத்துகள் கொண்ட பாடல்கள் அடங்கிய 'திரிகடுகம்' என்னும் நூலையும் குறிக்கிறது. ஐந்து சிறு வேர்களாலானதொரு மருந்தைக் குறிக்கும் 'சிறுபஞ்ச மூலம்' என்னும் பெயர், ஐந்து ஐந்து கருத்துக்கள் அடங்கிய பாடல்களைக் கொண்ட 'சிறுபஞ்ச மூலம்' என்னும் நூலையும் குறிக்கிறது. நான்கு மணிகளால் (இரத்தினங்களால்) ஆன தொருவகை அணிகலனைக் குறிக்கும் 'நான்மணிக் கடிகை என்னும் பெயர், நான்கு நான்கு கருத்துக்கள் அடங்கிய பாடல்களை உடைய 'நான்மணிக் கடிகை' என்னும் நூலுக்கும் பெயராயிருக்கிறது. மலர்களின் தொகுப்பைக் குறிக்கும் 'மாலை' என்னும் பெயர், 'திருவள்ளுவ மாலை', 'ஆசிரிய மாலை', 'கார்வண்ண மாலை' முதலியனவாகப் பாடல்கள் பலவற்றின் தொகுப்புக்களாகிய நூல்களைக் குறிக்கலாயிற்று. இவ்வாறே, 'ஆந்தொலொழியா'

என்னும் கிரீக் சொல் முதலில் பூமாலையையும் பின்னர்ப் பாமாலையையும் குறிக்கலாயிற்று.

கிரீக் சொல்லைப் போலவே, கிரீக்கிலிருந்து வந்த இலத்தீன், பிரெஞ்சு, ஆங்கிலம் ஆகிய மொழிச் சொற்களும் பூமாலை, பாமாலை என்னும் இரு பொருள்களையும் குறிக்கின்றன. சொல்லப்போனால், இந்த இரு பொருள்களோடு மட்டும் நின்று விடவில்லை; மலர்களைப் பற்றிய விவரங்களைத் தரும் நூலையும் இப்பெயர்கள் குறிக்கின்றன. இக் கருத்துக்களை உறுதி செய்ய, இலத்தீன், பிரெஞ்சு, ஆங்கிலம் ஆகிய மொழிகளிலுள்ள அகராதிகள், கலைக்களஞ்சியங்கள் ஆகியவற்றிலிருந்து மும்மூன்று சான்றுகள் வருமாறு:—

**இலத்தீன்:**

(1) மூசே (L. Mousset), துய்புய் (L. Dupuis) என்னும் பிரெஞ்சுத் துறவியர் இருவரும் சேர்ந்து தொகுத்த 'Dictionarium Latino - Gallico - Tamulicum' (இலத்தீன் - பிரெஞ்சு-தமிழ் அகராதி) என்னும் நூலிலுள்ள பகுதி வருமாறு:—

Anthologia ae f, *vel* Anthologica, Orum, n. pl. *Traite' des fleurs*, புஷ்பங்களைக் குறித்த சிறு புஸ்தகம். || *Recuiel de fleurs*, பூச் சேர்க்கை. V. Anthologium.

Anthologi um, i, n *Anthologie* நல்ல வாக்கிய முதலியதின் சேர்க்கை, —மாலை.

(2) ஃபெலிக்சு கஃபியொத், (Felix Gaffiot) என்பவர் படங்களுடன் தொகுத்த மிகமிகப் பெரிய அகராதியாகிய (மிகவும் நீளமும் அகலமுங் கொண்ட தாளில் 1720 பக்கம் கொண்டுள்ள) "Dictionnaire Illustr'e Latin - Francais" என்னும் நூலிலுள்ள பகுதி வருமாறு:—

Anthologica, *orum*, Plin. 21, 13 Avθoλoγix'a *anthologie*.

(3) Cassell's Latin Dictionary' என்னும் நூலில் உள்ள பகுதி வருமாறு:—

Anthologica, genit— on, n. (Avθoλoγiā), *anthology, a collection of extracts and small poems*, Plin.

பிரெஞ்சு:

(1) 'அல்பெர்த் தொசா' (Albert Dauzat) என்பவர் தொகுத்த 'Dictionnaire Etymologique' என்னும் நூலிலுள்ள பகுதி வருமாறு:—

Antologie (XVIS.), empr. au grec *anthologia* (proprem. "recueil de fleurs"; *anthos*, fleur, et *legein* an sens "cueillin").

(2) 'Emile Littre - Dictionnaire De La Langue Francaise' என்னும் நூலிலுள்ள பகுதி வருமாறு:—

Anthologie (an-to-lo-jie), S. f. l. Choix, Collection de fleurs. Pen usite an propre. 2. Fig. Recuiel de petites pieces de vers choisis. L' anthologie grecque L' anthologie francaise, "M. de las Rochette nous donnera - t - il enfin cette anthologie?" *P.L. Courrier* Lett. II, 57. 3. En histoire naturelle, traite' Des fleurs.— E. Avθoλoγia, de avθoc, fleur (Voy. *anthe're* et de λoγoe, discours (Voy. *logique*).

(3) 'சொம்மேர்' (E. Sommer) என்பவர் தொகுத்த 'Lexique Franacais - Latin' என்னும் நூலில் உள்ள பகுதி யாவது:—

Anthologie, f. Recueil de petites pieces de poesies. *Antholoca, orum*, n. pl.

ஆங்கிலம்:

(1) 'Encyclopaedia Britannica - Volume 2.' (Printed In Great Britain - 1955. Page No: 29) — இதிலுள்ள பகுதி வருமாறு:—

ANTHOLOGY, a collection of short pieces or extracts from different authors, especially in verse, and usually of literary value……… The term originally demoted a garland or collection of flowers (Gr. Avθoλoγia, Lat. *Florilegium*), and hence a selection of choice pieces tastefully arranged, as in the *Garland of Meleager* which formed the basis for the best-known of anthologie's ………

(2) 'Encyclopaedia Americana - Volume 2'. (New York-U.S.A.-1966-Page No: 17)— இந்த வெளியீட்டிலுள்ளது வருமாறு: -

ANTHOLOGY (Gr. *authologia*, from *anthologos*, flower gathering) is the name given originally to a collection of short, unconnected Greek poems from many sources (see Greek Anthology, The) or to its various enlargements... .. ...

(3) 'The New Funk & Wagnalis Encyclopaedia-volume-2'

ANTHOLOGY: (Gr., "Flower gathering"), the title given to a work consisting of series of literary selections. The term is most often used to refer collections of poems......

மேலே, இலத்தீன், பிரெஞ்சு, ஆங்கிலம் ஆகிய மும் மொழிகளிலுள்ள நூல்களிலிருந்து மொழிக்கு மும்மூன்று நூற்சான்றுகள் பார்த்தோம். இவைபற்றி இங்கே இவ்வளவு விரிவாக எழுத நேர்ந்ததற்குத் தக்க காரணம் உண்டு. கிரீக் இலத்தீன், பிரெஞ்சு, ஆங்கிலம் ஆகிய மொழிகளில், முதலில் பூமாலையைக் குறித்த சொற்கள் பின்னர்ப் பாமாலையையும் குறிக்கலாயின என்னும் உண்மையை, மேற்காட்டியுள்ள அகச் சான்றுகள் நமக்கு நன்கு விளக்குகின்றன. இது குறித்து இன் னும் சிறிது ஆராய்வோம்.

முதலில் இலத்தீன் மொழியிலுள்ள நூல்கள் மூன்றையும் எடுத்துக் கொள்வோம். அவற்றுள் முதல் நூலில் 'ஆந்தொலொழியா' என்பதற்கு, புஷ்பங்களைக் குறித்த சிறு புத்தகம், பூச்சேர்க்கை, நல்ல வாக்கிய முதலியதின் சேர்க்கை, மாலை -ஆகிய பொருள்கள் தரப்பட்டிருப்பதைக் காணலாம். இரண் டாவது நூலில் மணிமாலை, பாமாலை என்னும் பொருள்கள் தரப்பட்டுள்ளன. மூன்றாவது நூலிலோ, பாமாலை (பாக்களின் தொகுப்பு) என்னும் ஒரே பொருள் மட்டும் தரப்பட்டுள்ளன. இதிலிருந்து நாம் அறிவது, 'முதலில் பூமாலையைக் குறித்த சொல், நாளடைவில் பூமாலை, பாமாலை ஆகிய இரண்டை

யும் குறித்து நின்று, பின்னர்ப் பாமாலையை மட்டும் குறிக்கக் கூடிய நிலைக்கு மாறி வந்து விட்டது' என்பதாகும்.

இரண்டாவதாகப் பிரெஞ்சு மொழியிலுள்ள மூன்று நூல்களையும் எடுத்துக் கொள்வோம். அவற்றுள் முதல் நூல், 'ஆந்தொலொழி' என்னும் சொல்லுக்குப் 'பூமாலை' என்னும் பொருள் மட்டுமே கூறுகிறது. 'anthos என்றால் மலர்; logie என்றால் சேர்க்கை-என்றெல்லாம் இந்த நூல் பொருள் விளக்குகிறது. மற்றும், 'ஆந்தொலொழி' என்னும் சொல்லாட்சி, பிரெஞ்சு மொழியில் பதினாறாம் நூற்றாண்டில் ஏற்பட்டதாகவும் இந்நூல் கூறுகிறது. இரண்டாவது நூல், பூமாலை, பாமாலை, பூக்களின் வரலாற்றுநூல் என்னும் முப்பொருள் தருகிறது. பூமாலை படிப்படியாகப் பாமாலைக்கு வந்துவிட்ட வரலாற்றை இதனாலும் அறியலாம்.

இறுதியாக, ஆங்கிலத்திலுள்ள கலைக்களஞ்சியங்கள் (Encyclopaedias) மூன்றையும் காண்போம். இவற்றுள் முதல் கலைக் களஞ்சியம், "ஆந்தாலஜி என்பது பல்வேறு பாக்களின் சேர்க்கையாகும்; (இந்தச்சொல் கிரீக் மொழியிலிருந்துவந்தது); இதன் தொடக்ககாலப் பொருள் பூமாலை அல்லது பூக்களின் தொகுப்பு என்பதாகும் " என்னும் கருத்துப்படக் கூறிச்செல்கிறது. இரண்டாம் கலைக் களஞ்சியமும், மூன்றாம் கலைக் களஞ்சியமும், 'ஆந்தாலஜி என்றால் பாக்களின் தொகுப்பாகும்' என்று வெளிப்படையாகப் பொருள் விளக்கம் செய்து, 'இச் சொல் கிரீக் மொழியிலிருந்து வந்தது. இது தொடக்கத்தில் பூக்களின் தொகுப்புக் குறித்தது என்னும் கருத்தை 'ஏனோ தானோ' என்ற முறையில் அடைப்புக் குறிக்குள் குறிப்பாகக் கூறியுள்ளன. பூமாலை என்னும் பொருள் சிறுகச் சிறுக மறைய, அதன் இடத்தைப் பாமாலை அழுந்தப் பற்றிக் கொண்ட வரலாற்றை இந்த ஆங்கிலக் கலைக்களஞ்சியங்களாலும் தெளிவாக அறியலாம்.

### பாமாலையே பூமாலை

மேற் குறிப்பிட்டுள்ள ஐரோப்பிய மொழிச் சொற்களைப் போலவே, மாலை என்னும் தமிழ்ச் சொல்லும், முன்னர் பூக்களின் தொகுப்பைக் குறித்து நின்று, பின்னர்ப் பாக்களின்

தொகுப்பையும் குறிக்கலாயிற்று என்னும் கருத்து முன்பே கூறப்பட்டுள்ளது. இங்கே, இதிலிருந்து இன்னொரு புதிய கட்டத்திற்கு நாம் செல்ல வேண்டியவர்களாயுள்ளோம். அஃதாவது,—பூமாலை, பாமாலை என்ற இரு வேறு நிலைக்கு இடமின்றி, பாமாலையினையே பூமாலையாக உருவகப்படுத்தும் ஒரு புதுமைதான் அந்தக் கட்டம். இந்த அழகிய அமைப்பைத் தமிழில் நிரம்பக் காணலாம். மதுரைக் காஞ்சியின் இறுதியிலுள்ள

"சொல்லென்னும் பூம்போது தோற்றிப் பொருளென்னும்
நல்லிருந் தீந்தாது நாறுதலால்—மல்லிகையின்
வண்டார் கமழ்தாமம் அன்றே மலையாத
தண்தாரான் கூடல் தமிழ்."

என்னும் பாடலிலும், சேக்கிழாரின் பெரிய புராணத்துத் தடுத்தாட்கொண்ட புராணத்திலுள்ள,

"………அன்பில் பெருகிய சிறப்பின் மிக்க
அர்ச்சனை பாட்டேயாகும் ஆதலால் மண்மேல் நம்மைச்
சொல் தமிழ் பாடுக என்றார்……"

என்னும் பாடல் (70) பகுதியிலும், நல்லாற்றூர்ச் சிவப்பிரகாசரின் சோணசைல மாலையிலுள்ள,

"மதுரம் பெறுகுறு தமிழ்ச்சொல் மலர் நினக்கு அணியும்
பிறவியே வேண்டுவன் தமியேன்..."

என்னும் பாடல் (39) பகுதியிலும், வடலூர் வள்ளலாரின்

"என் சொல்லணியாம் அலங்கல் அணிந்தருளே"

என்னும் திருவருட்பாப் பகுதியிலும், இன்ன பிறவற்றிலும் பாமாலையே பூமாலை யாக்கப்பட்டிருக்கும் புதுமைப் பொலிவினைக் கண்டு மகிழலாம்.

இந்த உருவகத்தைக் கொண்டு, தமிழ் மொழியில் பாடல் தொகுப்புக் கலை எந்த அளவுக்கு வளர்ந்து வந்துள்ளது என்பதை உணரலாம். இப்படி ஓர் உருவகத்தை இருபதாம் நூற்றாண்டில் எழுந்த 'Oxford English Dictionary' என்னும் ஆங்கில அகரவரிசை நூலில் காணமுடிகிறது. இந்த நூல்

'Anthoogy' என்னும் சொல்லுக்கு 'A collection of flowers' (பூக்களின் தொகுப்பு) என்று பொருள கூறியிருப்பதல்லாமல், 'A collection of the flowers of verse' (பாக்களாகிய பூக்களின் தொகுப்பு) என்றும் ஒரு பொருள் கூறியுள்ளது. 'flowes of verse' என்பதில், 'பாக்களாகிய பூக்கள்' என்னும் உருவகம் அமைந்துள்ள அழகைக் கண்டு சுவைக்க முடிகிறது. இத்தகைய உருவகங்களின் வாயிலாக, பல்வேறு பூக்களைத் தொகுத்து (தொடுத்து) மாலையாக்கிப் பயன்படுத்தியது போலவே, பல்வேறு பாக்களையும் தொகுத்து நூலாக்கி மக்கள் பயன்படுத்தி வந்தனர் என்பது நன்கு புலனாகும்.

## நூல் தொகுப்புக் கலை

இதுகாறும் கூறியவற்றால், தமிழ் மொழியில் மட்டுமன்றி, பல்வேறு உலக மொழிகளிலும், உதிரிகளாயிருந்த பல்வேறு பாடல்களை நூல்களாகத் தொகுக்கும் கலை நடைபெற்று வந்தமை புலனாகும். பல்வேறு உதிரிப் பாடல்களை ஒரு நூலாகத் தொகுப்பதற்கும் 'கலை' என்று பெயரா? என்று வினவத் தோன்றலாம்...ஆம்! இஃதும் ஒரு கலையே! கலைகளுள்ளும் அரிய பெரிய கலையாகும் இது! பயன்கலைக் கூறு பாடும் கவின்கலைக் கூறுபாடும் இணைந்த ஓர் உயரிய கலை இது! எந்தெந்த வகையிலெல்லாம் - எந்தெந்த நுட்பமான முறையிலெல்லாம் பாடல்கள் நூல்களாகத் தொகுக்கப்பட்டுள்ளன என்ற வியத்தகு செய்தி, அடுத்து அடுத்து வரும் பாகங்களில் மிகவும் விரிவாக - விவரமாக விளக்கப்படும். பின்வரும் விளக்கங்களைப் படித்தபின்பு, உதிரிப் பாடல்களுக்கு நூல் வடிவங் கொடுக்கிற 'நூல் தொகுப்புக் கலை' மிகவும் கடினமானது - அரியது - அதே நேரத்தில் வியந்து மகிழ்தற்குரியது - பெறலரும் பயனை அளிக்கவும் - வல்லது-என்றெல்லாம் எளிதில் உணரலாம்.

## உலக மொழிகளில்

இந்த நூலில் நாம் விவரிக்க எடுத்துக்கொண்டது தமிழ் நூல் தொகுப்புக்கலையே யாகும். இருப்பினும், மற்ற உலக மொழிகளின் நூல் தொகுப்பைப் பற்றியும் -இன்றியமையாத

உலகமொழிகள் சிலவற்றிலுள்ள தொகை நூல்களைப்பற்றி யும் அறிந்து கொள்வோமாயின், அம்மொழிகளோடு - அம் மொழிகளிலுள்ள தொகை நூல்களோடு, தமிழ் மொழியை தமிழ் மொழியிலுள்ள தொகைநூல்களை ஒத்திட்டு நோக்கிச் சுவைக்க முடியும். அவ்வாறு ஒத்திட்டு நோக்கினால் தான் தமிழ் மொழியில் நூல்கள் தொகுக்கப்பட்டுள்ள முறை சரி யானதுதான் என்ற உண்மை புலனாகும்; அதனோடு, தமிழ் நூல் தொகுப்புக் கலைக்கு உள்ள இமயமலையனைய உயர்வும், 'பசிபிக்' மா கடலனைய பரப்பும் ஆழமும் நன்கு புலப்படும்.

எனவே, தமிழ் மொழியிலுள்ள தொகை நூல்களின்வரலாற் றினை அறிவதற்கு முன்னர், கிரீக், இலத்தீன், பிரெஞ்சு ஆங்கிலம், சம்சுகிருதம், எபிரேயம், சீனம் முதலிய சிலமொழி களிலுள்ள தொகை நூல்களைப் பற்றிய வரலாறுகளை அடுத்த பகுதியில் காண்போம்.

---

# 2. உலக மொழிகளில் நூல் தொகுப்புக் கலை

உலக மொழிகளுள், வளர்ச்சி பெற்றுள்ள பெரும் பாலான மொழிகளில் 'நூல் தொகுப்புக் கலை' இடம் பெற்றுள்ளது. முன்னணியில் உள்ள எல்லா மொழிகளிலும் தொகை நூல்கள் நிரம்ப உள்ளன. இன்று உலக அரங்கில் ஐரோப்பிய மொழி களே பெரிதும் செல்வாக்குற்றிருப்பது வரலாறு கூறும் உண்மை. ஐரோப்பிய மொழிகள் பலவற்றில் தொகை நூல் கள் பல தோன்றுவதற்கு முன்னோடியாக இருந்த மொழி கிரீக் மொழியாகும். ஐரோப்பிய மொழிகளைப் பொறுத்த வரையில் தொன்மைப் பெருமையும் முதன்மைச் சிறப்பும் கிரீக் மொழிக்கே கொடுத்துவிட வேண்டும். கிரீக் தொகை நூல் களை மொழி பெயர்த்துக் கொண்டதின் வாயிலாகப் பல ஐரோப்பிய மொழிகள் தொகை நூல்களைப் பெற்றன. மற் றும், கிரீக் தொகை நூல்களின் மாதிரியைப் பின்பற்றிப் பல தொகை நூல்கள் ஐரோப்பிய மொழிகளில் தோன்றலாயின. எனவே, கிரீக் தொகை நூல்களைப் பற்றிய விவரங்களை முதலில் இங்கே தொடங்குவோம்:

(அ) கிரீக் தொகை நூல்கள்:

கிரீக் மொழியில், பல்வேறு சமயத்தில்-பல்வேறு பொருள் கள் பற்றிப் பலரால் இயற்றப்பட்ட சிறுசிறு பாடல்களே முதலில் தொகை நூல் என்னும் பெயரால் தொகுக்கப்பட்டன. தனித்தனியான சிறுசிறு பாடல்களேயன்றி, பெரிய பெரிய பாடல்களிலிருந்தும், ஒரு தனி நூலிலிருந்தும் பிரித்து எடுக்கப் பட்ட பாடல் பகுதிகளும் இவ்வகைத் தொகை நூல்களில் இடம் பெற்றன. சிறந்த இலக்கிய மதிப்பு (Literary Value) மிக்க பாடல்களே தொகை நூல்களில் இடம்பெற்று ஒளிவீசித் திகழ்ந்தன.

நாளடைவில் கிரீக் 'நூல் தொகுப்புக் கலை' பல்வேறு மாறுதல்களை அடையத் தொடங்கியது. இத்தகைய மாறுதல்

எந்தக் கலைக்கும் உரிய இலக்கணந்தானே! காலத்திற்கு ஏற்ப மாறுதல் பெற்று வளர்ந்து கொண்டே போனால்தானே 'கலை' என்னும் பெயருக்கு உரியதாயிருக்க முடியும்? மாறுதல் பெறப்பெற 'மாடர்ன் ஆர்ட்' (Modern Art) என்று சொல்லப் படுவதைக் காண்கிறோமல்லவா?

காலம் போகப் போக, கிரீக் மொழியியல் பாடல்களே யன்றிச் சிறந்த உரைநடைப் பகுதிகளும் தொகை நூல்களில் சேர்க்கப்பட்டன. புலவர்கள் பலர் எழுதிய பல்வேறு செய்தி களின் தொகுப்புக்கள் எல்லாம் தொகை நூல்கள் ஆயின. குறிப்பிட்ட ஒரு மொழியைப் பற்றிய தொகுப்புக்கள், குறிப் பிட்ட ஓர் இலக்கியம் பற்றிய தொகுப்புக்கள்-அந்த இலக்கியத் திலிருந்து பிரித்தெடுத்த பகுதிகளின் தொகுப்புக்கள், குறிப் பிட்ட ஒரு நாட்டைப் பற்றிய தொகுப்புக்கள், குறிப்பிட்ட ஒரு காலத்தை-ஒரு நூற்றாண்டைச் சார்ந்த தொகுப்புக்கள், குறிப் பிட்ட ஒரு கருத்தை - ஒரு கொள்கையை-ஒரு பொருளை-ஒரு தலைப்பைப் பற்றிய தொகுப்புக்கள், குறிப்பிட்ட ஒரு கலையை -ஒரு தொலைழி ஒரு துறையைப் பற்றிய தொகுப்புக்கள், மற் றும் இன்னபிற தொகுப்புக்கள் எல்லாம் தனித்தனித் தொகை நூல்களாக மதிக்கப் பெற்றன. அறிஞர் பல்லோரின் படைப் புக்கள் சேர்ந்த ஒரு தொகுப்பு ஒரு தொகை நூலாகக் கருதப் பட்டதல்லாமல், ஒரே ஒரு புலவர் பல்வேறு சமயத்தில் பல் வேறு பொருள்கள் பற்றிப் படைத்த பல பகுதிகளின் தொகுப் பும் ஒரு தொகை நூல் என்னும் மதிப்பைப் பெறலாயிற்று. இவ்வாறாக, கிரீக் மொழியில் நூல் தொகுப்புக்கலை. காலத்துக் குக் காலம், படிப்படியாகப் பல மாறுதல்கள் பெற்று வளர்ந்து வரலாயிற்று. இந்த வளர்ச்சி நிலையை, தமிழ் நூல் தொகுப் புக் கலை வளர்ச்சியோடு அடுத்த பகுதிகளில் ஒத்திட்டுப் பார்க்க வேண்டும். அதற்காகவே கிரீக் நூல் தொகுப்புக்கலை வளர்ச்சியைப் பற்றி ஈண்டு இவ்வளவு எழுத நேர்ந்தது. இனி, கிரீக் மொழியிலுள்ள தொகை நூல்கள் சிலவற்றைக் காண்போம்.

கி.மு. ஏழாம் நூற்றாண்டு முதல் கி.பி. பத்தாம் நூற் றாண்டு வரையும்-ஏன்-அதற்கு மேலும் இயற்றப்பட்ட கிரீக்

பாடல்கள் பல நூல்களாகத் தொகுக்கப்பட்டுள்ளன அவற்றுள் முதல் தொகை நூல் 'கார்லண்ட் ஆஃப் மெலீகர்' (Garland of Meleager of Gadara) என்பதாகும். இங்கே சொல்லப்படும் தொகை நூல்கள் கிரீக் நூல்களாயினும், அவற்றைக் கிரீக் எழுத்துக்களாலும் ஒலிப்பு முறையாலும் ஈண்டுக் குறிப்பிடுவதும் அச்சிடுவதும் கடினம் என்பது ஒரு புறமிருக்க, கிரீக் எழுத்துக்களை உரிய ஒலிப்புடன் கூட்டிப் படிப்பதும் பலருக்கும் கடினமாதலின், கிரீக் தொகை நூல்கள் ஈண்டு ஆங்கில எழுத்துக்களாலும் ஆங்கில ஒலிப்பு முறையாலுமே குறிப்பிடப்படும். இந்த அடிப்படையிலேயே 'Garland of Meleagar' என்று நூல் குறிப்பிடப்பட்டுள்ளது. 'Garland of Meleagar' என்றால் 'மெலீகர்' என்னும் அறிஞர் தொகுத்த (தொடுத்த) மாலை என்று பொருளாம். இவர் இந்த நூலை கி.மு. 60-ஆம் ஆண்டளவில் தொகுத்தார் என்று ஒரு சாராரும், கி.மு. 90-ஆம் ஆண்டளவில் தொகுத்தாரென்று மற்றொரு சாராரும் கூறுகின்றனர். எனினும், கி.மு. முதல் நூற்றாண்டின் முற்பகுதியில் தொகுத்தார் என்று ஒரு பொது முடிவு கூறுபவரும் உளர். சிரியாவில் வாழ்ந்த மெலீகர், கிரேக்கத் தத்துவ அறிஞரும் பெரும் பாவலருமாவார். இவர் தாம் இயற்றிய பாடல்கள் சிலவற்றையும், தமக்கு அண்மைக் காலத்தில் வாழ்ந்த கிரேக்கப் புலவர்கள் நாற்பத்தறுவரின் பாடல்கள் பலவற்றையும் தொகுத்து இந்நூலை உருவாக்கினார்.

புலவர் ஒவ்வொருவரையும் ஒவ்வொருவகைப் பூவோடு ஒப்பிட்டுக் காட்டி நூலின் பெயருக்குப் பொருத்தம் தேடியுள்ளார் மெலீகர். இந்நூற் பாடல்கள் கடவுளர்கள், புகழ்பெற்ற அரசர்கள் - வள்ளல்கள் - அறிஞர்கள் முதலிய பெரியோர்கள், சிறப்பு நிகழ்ச்சிகள் ஆகிய பொருள்கள் பற்றியவையாகும். ஆழ்ந்த பொருளும் இனிய நயமும் சுருங்கச் சொல்லி விளங்கவைக்கும் பான்மையும் அமைந்தவை இப்பாடல்கள், இங்ஙனம் சிறந்த புலவர்களின் பாடல்களையே மெலீகர் தேர்ந்தெடுத்துள்ளார்.

இந்நூற் புலவர்களுள் மாதிரிக்காக ஐவர் பெயர்கள் வருமாறு: - Archilochus, Alcaeus, Anacreen, Simonides, Sappho-

ஆகும். பின்னர்ப் பின்னர், நாற்பத்தறுவர் என்ற எண்ணிக்கை கூடுதலுற்று, ஏறக்குறைய அறுபதின்மர் (60 பேர்) பாடல்கள் இத் தொகுப்பில் இடம் பெறலாயின. அடுத்து அடுத்து வெளியிட்ட நான்கு வெளியீட்டாளர்கள், இத் தொகை நூலில் மேன்மேலும் பலப்பல பாடல்களைச் சேர்த்தனர். மேலும் பிற்காலத்தில், பிரெஞ்சுப் பேரறிஞர் 'ரிச்சர்டு பிராங்' (Rchard Brunck) என்பவர், இந்தத் தொகை நூலில் மேலும் பல பாடல்களைச் சேர்த்து இப்பொழுதுள்ள முழு உருவம் உடைய தாக்கி 'Anthologica Graeca' என்னும் பெயரையும் சூட்டி வெளியிட்டார். இந்தத் தொகைநூல் இன்னமும் கிரீக் பாடல்களின் தோற்றத்திற்கு உரிய ஊற்றுவாயாக உள்ளது.

கி.மு. முதல் நூற்றாண்டில் தோன்றிய மெலீகரின் பாமாலைத் தொகுப்பு படிப்படியாக வளர்ச்சிபெற்று வந்த வரலாற்றை இப்போது கண்டோம். இந்தத் தொகைநூல், தொடக்கத்தில் 'ஆந்தொலொழிகா' என்னும் பெயர் சூட்டப் படவில்லை; (Garland) அதாவது 'மாலை' என்னும் பெயரே சூட்டப்பட்டது என்னும் உண்மை ஈண்டு நினைவு கூறத்தக்கது. பிற்காலத்திலேயே, இந்தத் தொகைநூல் ரிச்சர்டு பிராங் (Richard Brunck) என்பவரால் மேலும் பல பாடல்கள் சேர்க்கப்பட்டு, 'ஆந்தொலொழிகா கிரேக்கா' (Anhologica Graeca) என்னும் பெயர் தரப்பட்டது என்பதும் ஈண்டு நினைவில் நிற்க வேண்டும்.

கி.மு. முதல் நூற்றாண்டில் தொகுக்கப்பட்ட மெலீகரின் பாமாலையை அடுத்து, 'ஃபிலிப்புஸ்' (Philippus of Thessal - onica) என்பவர், 'கார்லண்ட் ஃபிலிப்புஸ்' (GarlandPhilippus) என்னும் பெயரில், கி.பி முதல் நூற்றாண்டில் (கி.பி.40) ஒரு தொகைநூல் உருவாக்கினார். மெலீகரைப் பின்பற்றி இவரும் தமது தொகுப்பு நூலுக்கு 'கார்லண்ட்' (மாலை) என்னும் பெயர் கொடுத்திருக்கிறார். இவற்றை யடுத்து மூன்றாவது தொகைநூலாக, கி.பி.இரண்டாம் நூற்றாண்டில்' 'தியாஜெனியானுஸ், (Diagenianus) என்பவர், பட பாடல்களைத் தொகுத்து, 'ஆந்தொலொழிகா' (Anthologica) என்னும் பெயரில் ஒரு தொகை நூல் தந்தார். நூல் தொகுப்புக்

கலையைக் குறிக்கும் ஆந்தாலஜி (Anthology) என்னும் சொல்லுக்கு முதல் அடிப்படையாகிய 'ஆந்தொலொழிகா' என்னும் சொல்லை, ஒரு கிரேக்கத் தொகை நூலுக்குப் பெயராக முதல்முதல் வைத்தவர் இவரே. எனவே, 'தியாமெஸியானுஸ் என்பவரை, 'ஆந்தாலஜி' என்னும் கலைச்சொற்பெயரின் தந்தையாகக் குறிப்பிடலாம். மேற்கூறிய மூன்று தொகைநூற்களுமே, பாடல்களின் முதல் சொற்களின் முதல் எழுத்துக்களை அகவரிசையில் அமைத்துத் தொகுக்கப்பட்டவையாகும். அஃதாவது, நூலுக்கு முன்னோ பின்னோ 'செய்யுள் முதற் குறிப்பு அகர வரிசை' தனியாக அமைக்கத் தேவையில்லாமல் அந்த அகரவரிசை நூலோடு நூலாக-நூலுக்குள்ளேயே அமைக்கப்பட்டுள்ளது. இதிலிருந்து நமக்கு ஓர் உண்மை புலப்படலாம்; அதாவது—பாடல்கள் ஆசிரியர் வாரியாகவோ, அல்லது பொருள் (Subject) வாரியாகவோ, அல்லது வேறு எந்த முறையாகவோ ஒழுங்குபடுத்தி அமைக்கப்படவில்லை; அகர வரிசை ஒன்றையே குறிக்கோளாகக் கொண்டு கண்டபடி அமைக்கப்பட்டுள்ளன-என்பதுதான் அந்த உண்மை.

நான்காவது கிரீக் தொகை நூலாக, கி.பி.இரண்டாம் நூற்றாண்டில் 'ஸ்ட்ராடன்' (Straton of Sardis) என்பவர் தன்னொத்த பாலினத்தார் மாட்டுக் கொள்ளுங் காதல் பாடல்களைத் தொகுத்தார் (Anthology of homo-sexual) epigrams), இந்நூல், தமிழ்நாட்டுச் சூழ்நிலைக்குத் தரக் குறைவானதாகத் தோன்றுகிறதன்றோ?

ஜஸ்தினியன் (Jnstinian) என்னும் அரசன் காலத்தில் (கி.பி.483–565). பல காதல் பாடல்கள். தமிழ் அகப்பொருள் நூலில் உள்ளதுபோலப் பல துறைகளாகப் பகுத்துப் பெயரிடப்பட்டு ஒரு நூலாகத் தொகுக்கப்பட்டன.

கி.பி. ஆறாம் நூற்றாண்டில் (கி.பி·570) 'அகத்தியஸ் (Agathias) என்பவர், முதல்முதலாகப் பொருள் (Subject) வாரியாகப் பாடல்களைப் பாகுபாடுசெய்து அமைத்து ஒரு தொகைநூல் உருவாக்கினார், இந்த நூலின் பெயர், 'Circle of Agathias' என்பதாகும். இவர் தம் பாடல்களுடன் பிற புலவர்களின் பாடல்களையும் இந்நூலில் தொகுத்தார். இது,

சுவையுள்ள ஒரு சிறிய சுருக்கமான தொகை நூலாகும். இந்த நூலைப் போலவே பத்தாம் நூற்றாண்டில் பேரறிஞர் 'கான்ஸ்டான்ஷினஸ் செஃபலஸ்' (Constantinus Cephalas) என்பவர், பாடல்களைப் பொருள்வாரியாக வகுத்தமைத்து ஒரு நூல் தொகுத்தார். ஆனால் இது மிகவும் விரிவானது. பழைய தொகை நூல்களிலுள்ள பாடல்களுடன், மேலும் தனித் தனிப் புலவர் பலரின் பாடல்களையும் சேர்த்துத் தொகுத்து, இதனைப் பெரிய தொகை நூலாக்கிவிட்டார் செஃபலஸ்.

கி.பி.980 ஆம் ஆண்டில் 'பாலட்டின் மான்ஸ்கிரிப்ட்' (Palatine Manuscript) என்னும் கையெழுத்துப்படி எழுதப் பட்டது. இது, செஃபலஸ் என்பவரின் விரிவான பெரிய தொகை நூலிலுள்ள பாடல்களுடன் மேலும் பல பாடல்கள் சேர்க்கப்பட்டு, ஒழுங்குறத் திருத்தியமைக்கப்பட்ட மிகப்பெரிய தொகை நூலாகும். இது, பிற்காலத்தில், அதாவது பதினெட்டு -பத்தொன்பதாம் நூற்றாண்டுக் காலத்தில், 15 பாகங்களாகப் பகுக்கப்பட்டு, 'கிரீக் ஆந்தொலொழிகா. என்னும் பெயரில் புதிய பதிப்பாக அச்சிடப்பட்டு வெளியாயிற்று.

கி.பி.980-இல் தொகுக்கப்பட்ட Palatine Manuscrpt என் னும் இந்தத் தொகை நூலையடுத்து, 'மாக்சிமஸ் பிளானு டெஸ் (Maximus Planudes) என்னும் அறிஞர், கி.பி.1301 ஆம் ஆண்டில், செஃபலஸ் என்பாரின் தொகை நூலிலுள்ள பாடல் களுள் பலவற்றைவிலக்கியும், புதியனவாகச் சில பாடல்களைச் சேர்த்தும், சிற்சில மாறுதல்கள் செய்து ஒரு நூல்தொகுத்தார். இந்தத் தொகுப்பின் பெயர் 'Plandean Anthologica' என்ப தாகும். மேலைநாட்டாரின் கவனத்திற்குக் கிரீக் தொகை நூல்களைக் கொண்டு வந்தது இந்தத் தொகை நூலே என் னும் செய்தி இதன் பெருமைக்குப் போதிய சான்றாகும். Palatine Manuscript என்பது பிற்காலத்தில் 15 பாகங்களாக அச்சிடப்பட்டதாக முன்பு கூறினோம். இவற்றையடுத்துப் பதினாறாவது பாகமாக, Planudean Anthologica என்னும் இந்தத் தொகைநூற் பாடல்கள் வெளியிடப்பட்டன. இந்தத் தொகை நூலை, 'ஜானுஸ் லாஸ்கரிஸ் (Jauns Lascaris) என்ப வர், பிளாரன்ஸ் (Florence) என்னும் இடத்தில், கி.பி. 1494

-இல் முதல்முதலாக அச்சிட்டு வெளிக்கொணர்ந்தார். இந்தப் பதிப்பு வெளியானதிலிருந்து கிரீக் தொகை நூல்களின் செல்வாக்குப் பல மொழிகளிலும் பாய்ந்து பரவத் தொடங்கியது; அதனால் பல மொழிகளிலும் தொகைநூல்கள் தோன்றத் தொடங்கின.

இவ்வளவு பெருமைக்கு உரிய இந்தத் தொகைநூல், அடுத்த பதினாறாம் நூற்றாண்டிலும் பதினேழாம் நூற்றாண்டின் முற்பகுதியிலும் திரும்பத் திரும்பப் பல முறைவெளியிடப் பட்டது. 'ரிச்சர்டு ஃபிரான்சுவா ஃபிலிப்பிராங்க்' (Richard Francois Philippe Brunck) என்பவர், கி.பி.1772-76 ஆண்டுக் காலத்தில், கிரீக்கில் வெளியிட்ட "Analeeta veterum poetarum Graecorum (Collection of Ancient Greek Poetries-தொன்மையான கிரீக் பாடல்களின் தொகுப்பு) என்னும் தொகைநூல் தோன்றும் வரை, Planudean Anthologica என்னும் இந்தத் தொகைநூலே, ஐரோப்பியத்தொகைநூல் உலகில் தனியாட்சி தலைமையாட்சி புரிந்து வந்தது. அஃதாவது, இந்நூல், கி.பி. பதினைந்தாம் நூற்றாண்டின் பிற்பகுதியிலிருந்து பதினெட்டாம் நூற்றாண்டின் முற்பகுதிவரை தனியாட்சி செலுத்தியது 1772-76 ஆம் ஆண்டு காலத்தில் 'பிராங்க்' என்பவர் 'Analect veterum poetarum Graecorum' என்னும் தொகைநூலைவெளியிட்ட பின்னர், இந்த நூலின் செலவாக்குச் சிறிது சிறிதாக மங்கத் தொடங்கியது, ஏறக்குறைய நான்கு நூற்றாண்டுக் காலம் தனியாட்சி புரிந்துவந்த இந்த நூலுக்கு, மேலும் ஒரு பெரிய வீழ்ச்சி காத்திருந்தது. அந்த வரலாறு வருமாறு:—

கி.பி. 980-இல் தொகுத்து எழுதப்பட்ட 'Palatine Manuscript' என்னும் கையெழுத்துப்படி, கி.பி.1606-07-ஆம் ஆண்டுக் கால அளவில் பிரெஞ்சுப் பேரறிஞர் 'கிளோதியஸ் சால்மசியஸ்' (Claudius Salmasius) என்பவரால், 'Elector Palatine at Heidelberg' என்னும் நூலகத்தில் கண்டு பிடிக்கப்பட்டது. இது, கி.பி. 1794-1814 ஆகிய ஆண்டுகளின் இடையில், பதின்மூன்று பாகங்களாக இருமுறை பதிப்பிக்கப்பட்டது முதலாவதாக 'பிராங்க்' (Brunck) என்பவரும், அதன் பின்னர் 'ஃபிரெடிரிச் ஜகோப்' (Friedrich Jacobs) என்பவரும் இதனை அச்சிட்டு

வெளியாக்கினர். இந்தத்தொகைநூல்அச்சாகி வெளியானதும், நான்கு நூற்றாண்டுக்காலம்தனியாட்சி புரிந்துவந்த Planudean Anthological என்னும் நூல் மறையலாயிற்று. மக்களுக்கு வாழ்வு வருவதும் போவதும் போலவே நூல்களுக்கும் உண்டு போலும்!

இவையே யன்றி, இன்னும் பல தொகுப்பு நூல்கள் காலத் திற்குக் காலம் கிரீக் மொழியில் தோன்றின. எத்தனையோ தொகை நூல்கள் அச்சிடப்படாமல் அழிந்தும்போயிருக்கலாம். கி.பி. 980-இல் தொகுத்து எழுதப்பட்ட 'Palatine Manuscript' என்னும் கையெழுத்துப்படி, கி.பி.1606-07 கால அளவில்தான் ஒரு நூல் நிலையத்திலிருந்து கண்டுபிடிக்கப்பட்டது என்றால், இதுபோல் இன்னும் எத்தனையோ கையெழுத்துப் படிகள் அறியப்படாமல், அச்சிடப்படாமல் அழிந்துபோயிருக்கலா மல்லவா? இவ்வாறு நூல்கள் அழிந்து போவது எல்லா மொழி களிலுமே இயற்கை போலும்!

**பதினாறு பாகங்கள்:**

இதுகாறும் கூறப்பட்ட அறிஞர்களாலும் இன்னும் பிறரா லும் தொகுக்கப்பட்ட கிரீக் தொகைநூல்களிலுள்ள பாடல் கள், பதினாறு பாகங்களாக வகுத்து அடக்கப்பட்டுப் பதினாறு நூல்களாக அச்சிடப்பட்டு வெளியாகியுள்ளன என்னும் செய்தி முன்னரே ஓரிடத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது. அஃதாவது:— Palatine Manuscript என்னும் கையெழுத்துப் படியிலுள்ள பாடல்கள் பதினைந்து பாகங்களாகவும் Planudean Manuscript (Planudean Anthological)என்னும் கையெழுத்துப் படியிலுள்ள புதிய பாடல்கள் பதினாறாவது பாகமாகவும் அமைக்கப்பட்டுப் பதினாறு தொகைநூல்களாக அச்சிடப்பட்டு வெளிவந்தன. இந்தப்பதினாறு கிரீக் தொகைநூல்களிலும் அடங்கியுள்ள பாடல்களைப் பற்றி ஈண்டு நாம் ஓரளவேனும் அறிந்து கொள் வோமாயின், நம் தமிழ் மொழியிலுள்ள தொகை நூல்களின் இயல்புகளையும் அருமை பெருமைகளையும் ஆராய்ந்தறிந்து வியந்து மகிழமுடியும். எனவே, இந்தப் பதினாறு தொகை நூல்களைப் பற்றிய விவரங்களையும் முறையே காண்பாம்!

முதல் மூன்று நூல்களையும் சரியான பாடல் தொகை நூலாகக் கூறமுடியாது. பண்டைக் கீழை உரோமப்பேரரசின் (Eastern Roman Empire) காலத்தைச் சேர்ந்த கல்வெட்டுக் கள்-கல்வெட்டுப் பாடல்கள் இவற்றில் இடம் பெற்றுள்ளன இந்தக் கல்வெட்டுக்களுள் சில உண்மையானவை; சில கற்பனை கலந்தவை. கோயில்களிலும் சிலைகளின் அடியிலும் பாறை ஓவியங்களின் அடியிலும் பொறிக்கப்பட்ட கல்வெட்டுக்களின் தொகுப்பு நூல்கள் இந்த மூன்றுமாகும். இஃது இவ்வா றெனில், நம் தமிழ்க் கல்வெட்டுக்களின் பல்வேறு தொகுப்புக் களையும் பல தொகை நூல்களாகக் கூறலாம் போலும்!

நான்காவது நூல், முறையான-சரியான தொகை நூலின் தொடக்கமாக மதிக்கப்படுகிறது. இதில், மெலீகர் (Meleager), ஃபிலிப்புஸ் (Phillippus), அகத்தியஸ் (Agathias) ஆகியோரின் தொகை நூல்களை அறிமுகப்படுத்தும் முறையில், அத் தொகைநூற் பாடல்கள் அடங்கியுள்ளன.

ஐந்தாவது நூல், இக்காலப் படிப்பாளர்க்கு மிக்க ஆர்வ மும் இன்பமும் அளிப்பதாகும். இதில், மிக உயர்ந்த தரமுடைய முந்நூறு காதல் பாடல்கள் உள்ளன. தமிழில் 'அகநானூறு' என்று சொல்வதுபோல, இதனை 'அகமுந்நூறு' என்று சொல்ல லாம் போலும்! கல்லிமாக்கஸ் (Callimachus), ஆஸ்கிலெபியா தெஸ் (Asclepiades), மெலீகர் (Meleager), ஃபிலோதெமுஸ் (Philodemus) ஆகிய பாவலர்கள் இயற்றிய பாடல்களும், கி.மு. மூன்றாம் நூற்றாண்டிலிருந்து முதல் நூற்றாண்டு வரை வாழ்ந்த பாவலர்கள் பலரின் பாடல்களும் கி.பி. ஆறாம் நூற் றாண்டில் வாழ்ந்த 'போலுஸ் சிலண்டரியஸ்,' (Paulus Silent-arius) என்பவரின் பாடல்களும் ஆகியவையே இந்த முந்நூறு பாடல்கள். இது, தமிழிலுள்ள அகப்பொருள் தொகை நூல் களைப் போன்றது.

ஆறாவது நூல் ஒரு புது மாதிரியானது. ஒருவர் ஒன்றை இன்னொருவர்க்கு உரித்தாக்கும் உரிமை ஒப்படைப்புப் பாடல் கள் (Dedicatory epigrams) அடங்கியது இந்நூல். இந்தப் பாடல்கள், கிரீக் மொழியிலுள்ள எல்லாக் காலத்து இலக்கியங் களிலிருந்தும் திரட்டப்பட்டவையாகும். எடுத்துக்காட்டாக

உரிமையுரைப் பாடல் ஒன்று வருமாறு:—இந்தப்பாடல், கிரேக்க அறிஞர் பிளாட்டோ (Plato) என்பவர் இயற்றியதாகக் கூறப்படுகிறது. இதிலுள்ள கருத்தாவது:'—லெய்ஸ்' (Lais)என்னும் அரசவை யணங்கு, தன் முகம் பார்க்கும் கண்ணாடியை 'அஃபிரோதித்' (Aphrodite) என்னும் பேர்வழிக்கு உரிமையாக்கித் தந்துவிட்டாள்-இந்தக் கருத்தமைந்த பாடலே அது!

ஏழாவது நூல், கல்லறைக் கல்வெட்டுப் பாடல்களின் தொகுப்பாகும். அஃதாவது, இறந்து போனவர்கள் மேல் பாடிய இரங்கற் பாக்களின்-இரங்கல் உரையின் தொகுப்பாயிருக்கலாம். எடுத்துக் காட்டாக ஓர் இரங்கல் வருமாறு:— 'தெர்மோபிலே' (Thermopylae) என்னும் இடத்தில் இறந்துபோன 'ஸ்பார்ட்டன்' (Spartan) என்பவர் மீது, 'சிமோனிதெஸ் (Simonides of ceos)என்னும் பாவலர் பாடிய இரங்கற்பாக்கள் இங்கே குறிப்பிடத்தக்கன. இந்தப்பாக்களும், இவ்வாறு பலர் மீது பலர் பாடிய இரங்கற்பாக்களும் இத் தொகுப்பில் இடம் பெற்றுள்ளன. இத்தகு இரங்கற் பாக்கள் தமிழில் நிரம்ப உண்டு. இது பற்றிப் பின்னர்ப் பேசுவோம்.

எட்டாவது நூலில், கி.பி. நான்காம் நூற்றாண்டில் அருளாட்சி புரிந்த, 'கிரகரி' (St. Gregore of Nazianzus)என்னும் போப்பாண்டவரைப் பற்றிய பாடல்கள் தொகுக்கப்பட்டுள்ளன.

ஒன்பதாவது நூலில், எண்ணூறுக்கு மேற்பட்ட பல்வேறு வகையான வெளித் தோற்றப் பாடல்கள்(Epideictic ephigrams) இடம் பெற்றுள்ளன. இந்தப் பாடல்களுள், கவின் விளக்கப் (வருணனைப்) பாடல்களும் உள; உயிரற்ற அஃறிணைப் பொருள்களைப் பற்றிய உரைகளும் உள; கல்வெட்டுப் பகுதிகளும் உள.

பத்தாவது நூலாக, அறிவுரைப் பாடல்களும் பொதுநீதி விளக்கப் பாடல்களும் தொகுக்கப்பட்டுள்ளன.

பதினோராவது தொகை நூலாக, உண்டி - குடிவகைப் பாடல்களும், வசைப் பாடல்களும், வஞ்சப் புகழ்ச்சிப் பாடல்களும் திரட்டிச் சேர்க்கப்பட்டுள்ளன.

பன்னிரண்டாவது தொகைநூல், நம் நாட்டு நாகரிகத்தை நோக்க, மிகவும் அருவருப்பாக எண்ணத் தோன்றுகிறது. ஸ்ட்ராடன்' (Straton) என்பவர், தன் னொத்த பால் இனத்தவரோடு-அதாவது-ஆணோடு ஆண் கொள்ளும் காதல் பாடல்களைத் திரட்டி, ஒரு தொகைநூல் உருவாக்கினார் என்று முன்னோரிடத்தில் குறிப்பிட்டிருக்கிறோம் அல்லவா? அந்தத் தொகைநூலில் உள்ள பாடல்களுடன், அதே பொருள்பற்றிய வேறு பாடல்களும் தொகுக்கப்பட்டு உருவாக்கப்பட்டதே இந்தப் பன்னிரண்டாவது தொகுதி.

பதின்மூன்றாவது, பல்வேறு புதிய புதிய சில்லறைப் பாவினங்களின் தொகுப்பாகும்.

பதினான்காவது நூல், விடுகதைப் பாடல்கள், தெய்வக் குறி சொல்லும் பாடல்கள், 'அல்ஜீப்ரா' (Algebra) என்னும் குறியீட்டுக் கணக்கியலின் துணைகொண்டு இந்தக் காலத்தில் சிக்கல் தீர்க்கும்படியான கணக்கியல் பாடல்கள் ஆகியவற்றின் தொகுப்பாம்.

பதினைந்தாவது தொகுப்பு, பல்வேறு வகைப் பிரிவைச் சேர்ந்த பொருள்களைப் பற்றிப் பல்வேறு தலைப்புக்களில் இயற்றப்பட்ட பாடல்களின் கதம்பக் கூட்டாகும்.

பதினாறாவது தொகைநூல், இதுவரை சொல்லப்படாதவையும், Planudean Manuscript என்னும் கையெழுத்துப் படியில் உள்ளவையுமான மிகச் சிறந்த பாடல்களின் தொகுப்பாகும்.

இவ்வாறாக, கிரீக் தொகை நூல்களைப் பதினாறு பாகங்களாக வகுத்தமைத்து உலக அரங்கில் உலவவிட்டது மிக்க பயனுள்ள செயலாகும். ஏறக்குறைய இரண்டாயிரம் ஆண்டுக் கால அளவில் எழுதப்பட்ட இந்தக் கிரீக் தொகைநூற் பாடல்கள் மக்களுக்கு வரலாற்று ஆர்வம் ஊட்டின. பல மொழிகளிலும் பல தொகைநூல்கள் தோன்றக் காரணமாயிருந்தன. இவற்றைப் பார்த்து இந்த மாதிரியில் பிற மொழிகளில் தொகைநூல்கள் பல தோன்றியதல்லாமல், இந்தக் கிரீக் தொகை நூற் பாடல்கள், இலத்தீன், பிரெஞ்சு, ஆங்கிலம்

முதலிய மொழிகளில் அப்படியே மொழி பெயர்த்துக் கொள்ளப்பட்டும் உள்ளன. இதைக் கொண்டு கிரீக் தொகை நூல்களை நாம் மதிப்பீடு செய்து கொள்ள முடிகிறது.

இருபதாம் நூற்றாண்டிலும்:

இம்மட்டோடு கிரீக் தொகைநூல்களின் வெளியீட்டிற்கு முற்றுப்புள்ளி வைத்து விடுவதற்கில்லை. இருபதாம் நூற்றாண்டு வரையும் மேலும் மேலும் வெளியீடுகள் செய்யப்பட்டன. மாதிரிக்காக ஈண்டு மூன்று வெளியீடுகளைப் பற்றிக் காண்போம்:

(1) 'மாக்கெய்ல்' (J.W.Mackail) என்பவர், கிரீக் தொகை நூல்களிலுள்ள சிறந்த பாடல்கள் பலவற்றைத் தொகுத்து, அவற்றிற்கு ஆங்கில மொழி பெயர்ப்பும் தந்து, உயர்ந்த முன்னுரையும் எழுதி, Select epigrams from the Greek Anthology' என்னும் பெயரில் கி.பி. 1890 - ல் ஒரு தொகை நூல் வெளியிட்டார். இது, 1907 ஆம் ஆண்டிலும் திருத்தமான மறுபதிப்புப் பெற்றது.

(2) 'பேட்டன்' (W.R.Paton) என்பவர், சிறந்த கிரீக் தொகைநூற் பாடல்கள் மிகப் பலவற்றை ஐந்து பாகங்களாகத் தொகுத்து, ஆங்கில மொழி பெயர்ப்புடன், 'Greek Anthology, என்னும் பெயரில் கி.பி. 1916—18 ஆம் ஆண்டுகளில் முறையே வெளியிட்டார்.

(3) 'மூய்ல் மக்சிம் பியர் வால்த்ஸ்' (Jules Maxime Pierre Waltz) என்னும் பிரெஞ்சுப் பேரறிஞர், கிரீக் தொகை நூற் பாடல்கள் பலவற்றைத் தொகுத்து, பிரெஞ்சு மொழி பெயர்ப்புடன் 1928-இல் வெளியிட்டார்.

இவ்வாறாக, கிரீக் தொகைநூல் வெளியீடுகள் பல அவ்வப்போது தோன்றி, ஐரோப்பிய மொழித் தொகை நூல்களிடையே தாய்மைச் சிறப்பு பெற்றுத் திகழ்ந்தன. கிரீக் நூல் தொகுப்புக் கலையின் சுருக்கமான வரலாறு இது தான்! இந்த வரலாறுபற்றி 'ரிச்சர்டு கார்நெட்' (Richard Garnett) என்னும் அறிஞர் விளக்கமாக எழுதியுள்ளார்.

**ஆ. இலத்தீன் தொகை நூல்கள்**

கிரீக் மொழியின் அளவுக்கு இலத்தினுக்குத் தொகை நூற் சிறப்பு இல்லையெனினும், ஐரோப்பிய மொழிகளுள் கிரிக்குக்கு அடுத்த பழமையும் பெருமையும் உடைய இலத்தினிலும் ஒரு சில தொகை நூல்கள் உள்ளன. கிரீக் தொகை நூல்களின் மாதிரியில் தொகுக்கப்பட்டனவும், கிரீக் தொகை நூல்களின் மொழி பெயர்ப்பாயுள்ளனவும் ஆகிய இலத்தீன் தொகை நூல்களேயன்றி, இயல்பாகத் தொகுக்கப்பட்ட முறையானதொகை நூல்கள் சிலவும் இலத்தீனில் உண்டு. சில இலத்தின் தொகைநூல்கள் 'வழிநூல்' பெருமையும் பெற்றுள்ளன. அஃதாவது:— முதல் நூல்களாகிய கிரீக் தொகை நூல்கள் சில இலத்தினில் மொழி பெயர்க்கப் பட்டன; இந்த இலத்தீன் வழிநூல்களைப் பார்த்து, இத் தாலியன். பிரெஞ்சு முதலிய மொழிகளில் அப்படியே மொழி பெயர்த்துக் கொண்டனர். அதாவது, கிரீக்கிலிருந்து நேரே வராமல், இலத்தீன் வழியாகப் பல மொழிகளில் சார்பு நூல்கள் தோன்றின. எனவே, இப்படியொரு சிறப்பும் இலத்தீனுக்கு இருக்கக் காண்கிறோம். இனி இலத்தீன் தொகை நூல்களைப் பற்றிப் பார்ப்போம்.

கி.மு. முதல் நூற்றாண்டின் முற்பகுதியில் வாழ்ந்த 'குயின்துஸ் லுதாசியஸ் கதுலுஸ், (Quintus Lutatius Catulus) என்னும் பாவலர் முதல், கி.பி. நான்காம் நூற்றாண்டின் பிற்பகுதியில் வாழ்ந்த தெசிமுஸ் மக்னுஸ் ஒசோனியுஸ் (Decimus Magnus Ausonius), கிளோதியுஸ் கிளோதியனுஸ் (Claudius Clauidanus) முதலிய பாவலர்கள் வரை, ஐந்நூறு ஆண்டுக் காலத்தில் பலராலும் இயற்றப்பெற்ற இலத்தீன் பாடல்கள் பிற்காலத்தில் பல தொகை நூல்களுள் இடம்பெற்று வெளியிடப்பட்டன. சில தொகை நூல்கள் வருமாறு:—

கி.பி. ஐந்தாம் நூற்றாண்டில், ஜோன்னெஸ் ஸ்டோபேயுஸ், (Joannes Stobaeus) என்னும் அறிஞர் ஒரு தொகை நூல் உருவாக்கினார். இந்நூலில், செய்யுட்களுடன் உரை நடைப் பகுதிகள் சிலவும் பல தலைப்புக்களின் கீழ்த்தொகுக்கப் பட்டன.

ஆறாம் நூற்றாண்டில், ஆப்பிரிக்காவில் ஓரிடத்தில், 'Salamasaion Manuscriptus' என்னும் கையெழுத்துப்படி நூல் தொகுத்து எழுதப்பெற்றது. இதில், தெய்வப் பூசனை சார் பான 'Pervigilum veneris' என்னும் ஒரு வகைப் பாடல்களும் செனகா' (Seneca), பெத்ரோனியுஸ் (Petronius) என்னும் பாவலர்கள் இருவரும் இயற்றினவாகக் கருதப்படும் பாடல்கள் பலவும் இடம் பெற்றுள்ளன.

பதின் மூன்றாம் நூற்றாண்டில், 'கார்மினா புரானா Cormina Burana) என்பவர், தமக்கு அண்மைக் காலத்தில் இயற்றப் பெற்ற-ஆசிரியர் பெயர் தெரியாத உணர்ச்சிப் பாடல்கள் பலவற்றைத் திரட்டி, கல்வியுலகத்திற்குப் பயன் படும் அளவில் ஒரு தொகைநூல் தந்தார்.

1375-இல் 'சோலொமொன்' (Solomon) என்பவர், பல் வேறு அருளாளர்கள், புலவர்கள், துறவிகள், ஆகியோர் மொழிந்த பழமொழிகள், நீதிமொழிகள் ஆகியவற்றைத் திரட்டி ஒரு தொகைநூல் அமைத்தார். இலத்தின் பழமொழிகளுடன் பிரெஞ்சு – ஆங்கிலப் பழமொழிகளும் இந்நூலில் தரப் பட்டுள்ளன.

பதினாறாம் நூற்றாண்டின் முற்பகுதியில் (1500-33) 'தெசி தெருஸ் எராஸ்முஸ்' என்பவர், மேற்கூறியவாறே, பழமொழி – முதுமொழி–நீதிமொழிகளைத் திரட்டி, 'அதழியா' (Adagia என்னும் பெயரில் ஒரு தொகைநூல் படைத்தார் 'Adagiia' என்னும் இலத்தின் சொல் 'நீதித்திரட்டு' என்னும் பொருளைக் குறிக்கும். இந்நூல், இலத்தினில் மிக உயர்ந்த ஒரு புதுத் துறை நூலாகப் போற்றப்பட்டது.

பதினாறாம் நூற்றாண்டின் தொடக்கத்தில், 'வெனெசியன் ஆந்த்ரே நவழெரோ' (Venetian Andrea Navagero) என்பவர் ஒரு தொகை நூலுக்குத் தோற்றங் கொடுத்தார்.

கி.பி. 1573-இல், புதுப்புதுத் துறைக் கலைகளில் வல்லுந ரான 'ழொசேசிப் ழுஸ்துஸ் ஸ்காலிழெர்1 (Joseph Justus Scaliager) என்னும் அறிஞர், 'லெய்தன்' (Leiden) என்னும் இடத்தில் Catalecta Vetarum Poetarum (Collection of

ancient Poetries=பழங்காலச் செய்யுள் திரட்டு) என்னும் பெயரில் ஒரு நூல் தொகுத்து வெளியிட்டார்.

பதினாறு-பதினேழாம் நூற்றாண்டுகளில் கிரீக்கிலிருந்து இலத்தீனில் பல மொழி பெயர்ப்புத் தொகை நூல்கள் தோன்றின. கி.பி. 1518-இல் Sir Thomas More, William Lilly என்பவர்கள் மொழிபெயர்த்து நூல்கள் உருவாக்கினர். 'கிரோசியஸ்' (Hugo Grotus) என்பவரது மொழிபெயர்ப்புத் தொகை நூல், 1583 முதல் 1645 வரை மிகவும் சிறந்ததாகப் பாராட்டப் பெற்றுப் பயன்படுத்தப்பட்டு வந்தது.

இந்தக் காலத்தில், குறிப்பிட்ட கலைகள் முதலிய பல துறை பற்றிய பாடல்கள், தனித்தனித் தொகுதியாகத் தொகுக்கப்பெற்றுப் புதுப்புது முறையில் தொகைநூல்கள் தோன்றலாயின. சிறந்த சுவைமிக்க பாடல்களே இவற்றில் இடம் பெற்றன.

கி.பி. 1608-14 ஆண்டுகளில், 'ழான் க்ருத்தெர்' (Jan Gruter) என்பவர், இத்தாலி, பிரான்சு, செர்மனி, பெல்ஜியம் ஆகிய நாடுகளில் வாழ்ந்த இலத்தீன்மொழி வல்ல பாவலர்கள் இலத்தீனில் இயற்றிய பாடல்கள் பலவற்றைத் தொகுத்து ‚Delitiae' என்னும் பெயரில் ஒரு தொகைநூல் வெளியிட்டார். பன்னாட்டுப் பாவலர்களின் பாடல்களின் தொகுப்பு ஒரு புது முறை யன்றோ!

மிகச் சிறந்த இலத்தீன் பாவலராகிய 'மார்சியல்' (Martial) என்பவரது உழைப்பிற்குப் பின், பதினெட்டாம் நூற்றாண்டுக் காலத்தில், இலத்தீனில் தொகை நூல்களின் தோற்றம் மங்கத் தொடங்கியது. ஆயினும் பத்தொன்பதாம் நூற்றாண்டில் மொழி பெயர்ப்புத் தொகைநூல்கள் சிலவும், கிரீக் மாதிரியைப் பின்பற்றிய தொகைநூல்கள் சிலவும் தோன்றின. வில்லியம் ஜான்சன் கொரி (William Johnson Cory: 1823-92) என்பவர் இந்த முறையில் முயன்று இலத்தீனில் தொகைநூல் படைத்தார்.

'Salamasiun Manuscriptus' என்னும் கையெழுத்துப்படித் தொகைநூல் பற்றி முன்பு (பக்கம்-48) பார்த்தோமல்லவா?

அந்தத் தொகைநூற் பாடல்களுடன் உதிரிப் பாடல்களும் சேர்க்கப்பட்டு 'Anthologica Latina' என்னும் பெயரில், ஒரு பெரிய தொகை நூல் வெளியிடப்பட்டது இது, கி.பி. 1849 –1926 ஆகிய கால அளவில் பரவலாகப் பயன்படுத்தப்பட்டும், பல பதிப்புக்கள் பெற்றும் நடை போட்டு வந்தது. 'அலெச்சாந்தர் ரியெஸ்' (Alexander Riese), 'லொம்மாட்ஸ்க்' (Lommatzsch) முதலியோர் இந்த நூலைப் பதிப்பித்தனர். ஒரே பெயரில், செர்மன் பேரறிஞர் 'ஃபிரான்ஸ் புச்செலர்' (Franz Bucheler) என்பவர், பெரிய அளவில் ஒரு தொகைநூல் வெளியீடு செய்தார். இது கி.பி. 1869-1897 ஆண்டு இடைவெளியிற்பெரிதும் பயன்படுத்தப்பெற்று வந்தது.

இவ்வாறாகக் கிரீக் தொகை நூல்களுக்கு அடுத்த பெருமையுடையனவாக இலத்தீன் தொகை நூல்கள் தோன்றி விளங்கின. கிரீக் தொகைநூல்களைப் போலவே இலத்தீன் தொகை நூல்களும் பல பெரிய பகுதிகளாகப் பகுத்துத் தொகுத்து வெளியிடப்பெற்றுள்ளன.

### இருபத்து மூன்று பகுதிகள்

கிரீக் கையெழுத்துப்படித் தொகுதிக்கு ஒத்த பெருமையுடையதும், இன்றியமையாச் சிறப்புடையதுமான இலத்தீன் கையெழுத்துப்படி முழுமையும் 'ழான் லக்குர்னே'(JeanLacurne) என்பவரால், 'சேமேஸ்' (Saumaise) என்பவர்க்கு அளிக்கப்பட்டதாகச் சொல்லப்படுகிறது. இதில் அடங்கியுள்ள இலத்தீன் தொகைநூல்கள், இருபத்துமூன்று பகுதிகளாக வகைதொகை செய்யப்பட்டிருக்கும் விவரம், 'ரியெஸ்' (Riese) என்பவரால் அறிவிக்கப்பட்டுள்ளது. இலத்தீன் தொகை நூல்களிலுள்ள பாடல்களை இயற்றிய ஆசிரியன் மார் பெயர்களின் முழுப் பட்டியலையும் ரியெஸ் கொடுத்துள்ளார். இனி, இலத்தீன் தொகை நூல்களின் இருபத்து மூன்று பகுதிகளைப் பற்றிய விவரங்கள் முறையே வருமாறு:

(1-6) முதல் ஆறு பகுதிகள் அழிந்து போனமையால், அவற்றைப் பற்றிய விவரம் சரிவரத் தெரியவில்லை.

(7) 'விர்ஜில்' (Virgil) என்னும் பெரும்புலவரின் பாடல் தொகுப்புக்கள் (Centons) ஏழாவது பகுதியாகும்.

(8) உணர்ச்சியோடு உரத்துப் பாடக்கூடியவையும், மேடைகளில் பாடக்கூடியவையுமான இசைப்பாடல்களின் தொகுப்பு (Carmen Declamatorium) எட்டாவது பகுதியாகும்.

(9) முதற் சொல்லும் இறுதிச் சொல்லும் ஒத்துவரக்கூடிய அடிகள் இரண்டு கொண்ட - ஈரடிச் செய்யுட்களின் தொகுப்பு (Versus Serpentini) ஒன்பதாம் பகுதி.

(10) தனித்தனிப் பொருள்களைப் பற்றிய தனித்தனிப் பாடல் தொகுதிகள் பல, பத்தாம் பகுதியாக்கப்பட்டன.

(11) நிலையாமை, இறப்பு போன்றவை தொடர்பான பாடல்களின் தொகுப்பு பதினோராம் பகுதியாகும்.

(12) ஒருவர்க்கு இன்னொருவர் விடுக்கும் கடிதமாக உள்ள 'திருமுக ஓலை'ப் பாடல்களின் தொகுப்புப் (Epistola Declamatoria) பன்னிரண்டாம் பகுதி.

(13) ரோசா முதலிய மலர்களைப் பற்றிய பாடல்களின் தொகுப்பு பதின்மூன்றாம் பகுதியாகும்.

(14) புனைவு விளக்கப் பாடல் (வருணனைப் பாக்கள்) பதினான்காம் பகுதியாக்கப்பட்டுள்ளன.

(15) இசையரங்குகளில் பாடத்தக்க இன்னிசைப் பாடல்களின் தொகுதி பதினைந்தாம் பகுதியாகும்.

(16) வேடிக்கைப் பாடல்கள்-விளையாட்டுப் பாடல்கள் நகைச் சுவைப் பாடல்கள்-போன்றவற்றின் தொகுப்பு(Carmen Ludicrum) பதினாறாம் பகுதியாகும்.

(17) கடவுள் பூசனைத் தொடர்பான ஒருவகைப் பாடல்களின் தொகுப்பு (Pervigilium Veneris) பதினேழாம் பகுதியாகும்.

(18) உரோமப் பேரரசை வீழ்த்தியவர்களின்தொடர்பான பாடல்களின் தொகுப்பு பதினெட்டாம் பகுதியாகும்.

(19) காதல் பாடல்களின் தொகுப்பு, பகுதி பத்தொன்பதாவதாகும்.

(20-21) முடிசூட்டுப் பாடல்களும், பொதுவான புலவர் பலரின் பாடல்களும் இருபதாம் பகுதியாகவும், இருபத்தோராம் பகுதியாகவும் அமைக்கப்பட்டுள்ளன.

(22) புரியாத புதிரான விடுகதைப் பாடல்களின் தொகுப்பு இருபத்திரண்டாம் பகுதியாகும்.

(23) உயர் இன்பம் பெருவாழ்வு (Luxorius) தொடர்பான - செல்வச் செழிப்பு பற்றிய பாடல்கள், இருபத்து மூன்றாம் பகுதியாக அமைந்துள்ளன.

இந்த அமைப்பினை நோக்குங்கால், கிரீக் நூல் தொகுப்புக் கலையுடன் இலத்தின் நூல் தொகுப்புக்கலையும் போட்டி போட்டுக்கொண்டு வளர்ச்சி பெற்று வந்த வரலாறு புலனாகிறது.

## இ. பிரெஞ்சுத் தொகை நூல்கள்

பிரெஞ்சுத் தொகைநூல் வரலாற்றுஉலகில் புகின், கிரீக், இலத்தின் மொழிகளிலிருந்து வந்த மொழிபெயர்ப்புத்தொகை நூல்களையும், அம் மொழி நூல்களின் மாதிரியைப்பின்பற்றிய தொகை நூல்களையுமே தொடக்கத்தில் காண்போம். கிரீக்கிலிருந்து இலத்தின் வழியாகப் பிரெஞ்சு மொழி பெற்ற தொகை நூல்களும் சில உள. இத்தகைய சார்பு நூல்கள். கி.பி. 1550 - 1600 - க்குமான இடைவெளியில் தோன்றின. இவ்வாறு பிறமொழிச் சார்பு இன்றி, இயல்பாகத் தோன்றின, முறையான பிரெஞ்சுத் தொகை நூல்களும் பல உள. சில தொகை நூல்கள் பற்றிய விவரங்கள் வருமாறு:—

2253 என்னும் நூல் நிலையச் சுவடி எண் கொண்ட ('Harley Manuscript' - No. 2253 என்னும்) கையெழுத்துப் படியில், பிரெஞ்சுப் பாடல்கள் பலவற்றின் தொகுப்பு உள்ளது. இது 1320 - இல் எழுதப்பட்டதாகத் தெரிகிறது.

'சொலொமான்' (Solomon), 'செனெகா' (Seneca) ஆகியவர்கள், 1375-இல், பெரியோர்களால் மொழியப்பட்ட பழமொழிகள் நீதிமொழிகள் ஆகியவற்றைத் திரட்டி ஒருதொகை

நூல் படைத்தனர். இதில் பிரெஞ்சுத் தொகுப்புடன், இலத்தீன்-ஆங்கிலத் தொகுப்புக்களும் உடன் சேர்ந்துள்ளன.

துய் பெல்லா (joachim du Bellay) என்னும் பிரெஞ்சு அறிஞர், கி. பி. 1522 – 60 ஆண்டுக் கால இடையில் 'வெனெசியன் ஆந்த்ரே நவமெரோ' (Venetian Andrea Navegero: 1483-1529) என்பவர் தொகுத்த இலத்தீன் தொகை நூலை அடிப்படையாகக் கொண்டு, 'Voeu d' un vanneur de ebl aus vents' (காற்றில் கோதுமையைத் தூற்றிக்கொழித்தெடுபவனது விருப்ப-வெளியீடு) என்னும் பிரெஞ்சுத் தொகை நூலை உருவாக்கினார்.

பத்தொன்பதாம் நூற்றாண்டில் தோன்றிய 'Le Parnasse தொகை நூல் மிகவும் புகழ்பெற்றதாகும். பள்ளிப்பாடல்கள், பல இதழ்ப் (பத்திரிகைப்) பாடல்கள் ஆகியவற்றின் தொகுப்பு இது.

கி.பி. 1928 – இல், ழுய்ல் மக்சிம் பியர் வால்த்ஸ்' (jules Maxime Pierre Waltz) என்பவர், ஒரு கிரீக் தொகை நூலின் பிரெஞ்சு மொழி பெயர்ப்பை வெளியிட்டார்.

இவ்வாறாக, காலத்துக்குக் காலம், பிரெஞ்சுத் தொகை நூல்களுள் சில முதல் நூல்களாகவும், சில வழி நூல்களாகவும், சில சார்பு நூல்களாகவும் தோன்றத் தோன்ற, பிரெஞ்சு நூல் தொகுப்புக்கலை செழித்து வளர்ந்து வரலாயிற்று.

கிரீக்-இலத்தீன் தொகை நூல்களைப் போலவே, பிரெஞ்சுத் தொகை நூல்களும் பிற்காலத்தில் பல தொகுதிகளாக வகுத்து அடக்கி வெளியிடப்பட்டுள்ளன. இந்தத் தொகுதிவாரி வெளியீட்டுப் பணியைப் பாரிசில் உள்ள 'லரூஸ் நூலகம்' (Biblio Theque Larousse) செய்துள்ளது. தொகுத்தளித்தவர் கொத்தியெர் ஃபெர்ரியெர்' (Gauthier Ferrieres) என்னும் அறிஞராவார். இவர், பதினைந்தாம் நூற்றாண்டிலிருந்து பத்தொன்பதாம் நூற்றாண்டு வரை தோன்றியுள்ள தொகை நூல்களை யெல்லாம் எடுத்துக் கொண்டார்; உரைநடைத் தொகுப்புக்களையும் இவர் விட்டாரிலர்; எல்லாத் தொகை

நூல்களையும் காலவாரியாக வகைப்படுத்திப் பத்துத் தொகுதிகளில் அடக்கிவிட்டார். அவை வருமாறு:

(1) பதினைந்து – பதினாறாம் நூற்றாண்டுகளில் தோன்றிய பாடல் தொகைநூல்கள் முதல் தொகுதியாகும்.

(2) பதினைந்து – பதினாறாம் நூற்றாண்டுகளில் தோன்றிய உரைநடைத் தொகை நூல்கள் இரண்டாம் தொகுதியாகும்.

(3) பதினேழாம் நூற்றாண்டுப் பாடல் தொகை நூல்கள் மூன்றாம் தொகுதியாகும்.

(4) பதினேழாம் நூற்றாண்டு உரைநடைத் தொகை நூல்கள் நான்காம் தொகுதியாகும்.

(5) பதினெட்டாம் நூற்றாண்டுப் பாடல் தொகை நூல்கள் ஐந்தாம் தொகுதியாகும்.

(6) பதினெட்டாம் நூற்றாண்டின் உரைநடைத் தொகை நூல்கள் ஆறாம் தொகுதியாகும்.

(7) பத்தொன்பதாம் நூற்றாண்டின் முற்பகுதியில் எழுந்த பாடல் தொகைநூல்கள் ஏழாம் தொகுதியாகும்.

(8) பத்தொன்பதாம் நூற்றாண்டின் முற்பகுதியிலெழுந்த உரைநடைத் தொகைநூல்கள் எட்டாம் தொகுதியாகும்.

(9) பத்தொன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதிப் பாடல் தொகைநூல்கள் ஒன்பதாம் தொகுதியாகும்.

(10) பத்தொன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதி உரை நடைத் தொகைநூல்கள் பத்தாம் தொகுதியாகும்.

மேற்கூறியுள்ள காலவாரித் தொகுதி முறையினை ஊன்றி நோக்குங்கால், காலம் செல்லச் செல்லப் பிரெஞ்சு மொழியில் தொகைநூல்கள் பெருகிக் கொண்டேயிருந்த பேருண்மை புலனாகும். தமிழைவிட, ஐரோப்பிய மொழிகளில் உரைநடை நூல்களும் செய்யுள் நூல்களைப் போலவே சிறந்த இலக்கியங்களாக மதிக்கப்படுவதால், ஆங்கு உரைநடைப் பகுதிகளும் தொகுக்கப் பெற்றுத் தொகைநூல்கள் ஆக்கப்பட்டுள்ளன.

**சில சிறப்புக்கள்**

பிரெஞ்சுத் தொகைநூல்களின் அமைப்பில் குறிப்பிடத்தக்க சில சிறப்புக்கள் உண்டு. பாடலின் முகப்பில் ஒரு தலைப்பு இருக்கும். பாடலின் அடியில் ஆசிரியர் பெயர், ஆண்டு, அந்தப் பாடல் அமைந்துள்ள நூற்பெயர், ஆசிரியரின் சிறு வரலாற்றுக் குறிப்பு, ஆசிரியரைப்பற்றிய பாராட்டுக்கள், அவர் பாடல்களுள் சில சிறந்த பகுதிகள், அவர் கையெழுத்து, அவரது புகைப்படம் முதலியவை இருக்கும். இவ்வளவும் எல்லாத் தொகை நூல்களிலும். எல்லாப் பாடல்களிலும் இருப்பதில்லை. இச் சிறப்புக்களுள் ஒரு சிலவற்றை ஒரு சில தொகை நூல்களிலும்- வேறு சிலவற்றை வேறுவேறு தொகை நூல்களிலுமாக மாறி மாறிக் கண்டு மகிழலாம்.

தனித்தனிப் பிரெஞ்சுத் தொகை நூல்களின் மாதிரிக்காக, சில தொகை நூல்களைப் பற்றிச் சிறிது சிறப்பாக ஈண்டுக் காண்போம்:

## 1. ANTHOLOGIE DE, LA' POESIE LYRIQUE EN FRANCE

இந்த நூலுக்கு, 'பிரெஞ்சு' உணர்ச்சிப்பாடல் தொகை நூல்' என்னும் பொருளில் பெயர் கொடுக்கப்பட்டுள்ளது. இதனைத் தொகுத்து உருவாக்கித்தந்தவர், ழோர்ழ்துயாமெல். (Georges Duhamal) என்னும் அறிஞர். 1946-ஆம் ஆண்டில் இது பாரிசில் அச்சிடப்பட்டது. இதில், 'வில்லான்' (Villon : 1413 - 1489) என்னும் பாவலர் முதல், 'பொதெலேர்' (Baudelaire: 1821 - 1867) என்னும் பாவலர் ஈறாக உள்ள 113 பாவலர்களின் பாடல்கள் தொகுக்கப்பட்டுள்ளன. 571 பக்கங்கள் கொண்ட இந்நூலின் முகப்பில், 35 பக்கங்கள் கொண்ட நீளமான முன்னுரை யொன்றுள்ளது. தொகுப்பாசிரியர், தமது முன்னுரையில், "பூமாலை போன்ற தான இந்தப் பாமாலையை, மக்களின் பொழுதுபோக்குப் பசிக்காக நான் தொகுக்கவில்லை. படிப்பவர்கள், பாடல் ஆசிரியரின் உள்ளத்தோடு ஒன்றி ஈடுபட்டுப் பாட்டைச் சுவைக்க வேண்டும் என்னும் நோக்குடனேயே தொகுத்தேன். குறிப்பிட்ட ஆசிரியர்களின் பாடல்களுள் சிறந்த பாடல்களைத் தேர்ந்தெடுத்துக் கொள்

வதோடு நின்று விடாமல், பல நூல்களையும் படித்துப் பல்வேறு சுவையுணர்வூட்டும் பாடல்கள் பலவற்றையும் யான் இதில் தொகுத்துள்ளேன். இத் தொகுப்பைப் பற்றிச்சிலர் நிறையும் சிலர் குறையும் கூறுகின்றனர். 'இன்னும் சில வகைப் பாடல்களைச் சேர்த்திருக்கலாம்' என்பதுசிலரது கருத்து. "இப் பாடல்களிலிருந்து சிலவற்றை விலக்கிவிட்டிருக்கலாம்' என்பது மற்றொரு சாரார் கருத்து. இதுபற்றியெல்லாம் யான் கவலை கொள்ள வில்லை. இயன்றவரை பலருக்கும் பயன்படும் அளவில் இந்நூலைத் தொகுத்தேன்..." இவ்வாறாகப் பல கருத்துக்களைத் தொகுப்பாசிரியர் தமது முன்னுரையில் சொல்லிக்கொண்டு செல்கிறார்.

இத் தொகை நூல் அமைப்பின் மாதிரிக்காக, முதல் புலவர், இறுதிப் புலவர் ஆகியோரின் பெயர்கட்குக் கீழே கொடுக்கப்பட்டுள்ள குறிப்புக்கள் வருமாறு:-

முதற் புலவர்:

VILLON

Francois de Montcorbier, alias des Loges, plus connu sous le nom de Francois Villon; ne a' Paris en1431- more en 1489.

"Le reste des.........que jamais"
(9 வரிகள் தரப்பட்டுள்ளன)

CLEMENT MAROT

(Avertissement aux lecteurs des poesies de Villon.)

மேலுள்ள பிரெஞ்சுப் பகுதியின் கருத்து வருமாறு:

இந்தப் பாடல் ஆசிரியரின் பெயர் 'ஃபிரான்சுவா வில்லான்' என்று கூறினால் அனைவரும் நன்கு அறிவர். இவரே, 'ஃபிரான்சுவா தெ மோன்த் கொர்பியர்,' 'லோழ்,' என்னும் பெயர்களாலும் குறிப்பிடப்படுவார். இவர் பாரிசில் கி. பி. 1431-இல் பிறந்தார்; 1489-இல் இறந்தார். 'வில்லோன் பாடல்களைப் படிப்பவர்க்கு 'எச்சரிக்கை' என்னும் பொருள் பற்றி 'கிளமான் மரோ (Clement Marot) என்பவர் ஒன்பது

வரிகள் கொண்ட ஒரு பாடல் எழுதி, இவரது பாடல்களின் அருமையைப் புலப்படுத்தியுள்ளார்.

'வில்லான்' என்னும் பெயரை அனைவரும் நன்கு அறிவர் என்னும் செய்தியால், இவரது இலக்கிய உலகப் புதுப் பெயர் -புனை பெயர் 'வில்லான்' என்பதாக இருக்கலாம் என்றும், மற்றப் பெயர்கள் இயர்பெயர்-குடும்பப் பெயர்களாக இருக் கலாம் என்றும் நாம் உய்த்துணரலாம். இவரைப் பற்றி வேறொருபுலவர் சிறப்பித்துப் பாடியிருப்பதாகக் கூறப் பட்டிருப்பதும் இங்கே குறிப்பிடப்படத்தக்கதாகும்.

இறுதிப் புலவர்—113ஆம் புலவர்:

BAUDELAIRE

Pierre-Charles Baudelaire, ne'a' Paris, en 1821; more en 1867. "Vous auez cr'e' un frisson nouveau"

VICTOR HUGO

(cite par Theobhlie Grautier dans la Pre'face des Fleur du Mal)

இந்தப் பகுதியின் கருத்து வருமாறு:

'பியர் ஷார்ல் பொதெலேர்' என்பது இவரது முழுப் பெயர். இவர் பாரிசில் 1821இல் பிறந்தார்; 1867-இல் இறந்தார். இவரை நோக்கி, 'விக்தொர்ஃபூகோ, என்னும் பேரறிஞர். 'நீங்கள் பிறர் அதிர்ச்சியடையும்படியான சிறந்த புதிய படைப்பை அளித்திருக்கிறீர்கள், என்று புகழ்ந்திருக் கிறார். இந்தச் செய்தியை, 'தியோஃபில் கொத்யேர், (Theophile Gautier) என்னும் அறிஞர், 'Fleurs du Ma என்னும் நூலின் முகவுரையிலும் குறிப்பிட்டுள்ளார்.

இவ்வாறாக, மாபெரும் புலவர் விக்தொர் ஃபூகோ அவர் களாலேயே பாராட்டப்பட்டிருப்பது, பொதெலேர் அவர் களின் புலமைச் சிறப்புக்குத் தக்க சான்றாகும்.

இனி இரண்டாவது தொகைநூல் வருமாறு:

2. NOUVELLE ANTHOLOGIE POETIQUE

இது குழந்தைப் பாடல் தொகைநூல். மேலே பார்த்த தொகைநூல் பெரியவர்கட்கு ஏற்றது. எனவே, அதனினும் இந்த நூல் ஒரு தனித்தன்மை உடையதாகும். இந்நூற் பாடல்கள், ஆசிரியர் வாரியாக இன்றித் தலைப்பு வாரியாகத் தொகுக்கப்பட்டுள்ளன. இந்நூலில், I.'Ill Est si Beau L' enf-ant Avee Son Doux Sourire - என்பது முதலாக, XII 'Tu Seras Un Homme, Mon Fils,-என்பது ஈறாகப் பன்னிரண்டு பெரிய தலைப்புக்கள் உள்ளன. இறுதியில், Appendice (பிற்சேர்க்கை) என்னும் பெயரில், 'Fantaisies Et Jeux De Rimes,-என்பது பதின்மூன்றாவது பெரிய தலைப்பாக அமைந்துள்ளது. பெரிய தலைப்பு ஒவ்வொன்றிலும் பல உள் தலைப்புக்கள் உள்ளன. இந்தப் பதின்மூன்று பெரிய தலைப்புக்களுக்குள், (1)-'Aux Feuillantines (Victor Hugo), முதல் (208)-'Acrostiche (Pierre Gringore), வரை ஆக மொத்தம் 208 உள் தலைப்புக்கள் உள்ளன. ஒவ்வோர் உள் தலைப்புப் பெயரின் பக்கத்திலும், அந்தத் தலைப்புக்குரிய பாடலைப் பாடிய ஆசிரியரின் பெயர் அடைப்புக் ( - ) குறிக்குள் கொடுக்கப் பட்டிருக்கும் அழகிய அமைப்பை அட்டவணையில் காணலாம்.

ஒவ்வொரு உள் தலைப்பின் கீழும் 1,2,3,4,5 என எண்ணிட்டுப் பல பாடல்கள் தரப்படவில்லை; ஒரே ஒரு நீளமான பாடல் 5, 10, 15, 20, 25 என ஐந்து அடிகளுக்கு ஒரு முறை அடி எண்கள் இட்டுக் கொடுக்கப்பட்டுள்ளது. பாடல்கள் பல பாவினங்களைச் சேர்ந்தவை.

ஒவ்வொரு பாடலின் அடியிலும் ஆசிரியர் பெயரும், அதனையடுத்து அப்பாடல் அமைந்துள்ள நூலின் பெயர் அல்லது அந்தப் பாடல்பகுதி யமைந்துள்ள பெரிய பாடலின் தலைப்புப் பெயரும் தரப்பட்டுள்ளன. நூலைப் பதிப்பித்தவர் பெயரும், சிலவற்றில் பதிப்பித்த ஆண்டுங்கூட உள்ளன, சில பாடங்களுக்குப் பட விளக்கமும் உண்டு. இம் மட்டுமா? சில பாடல்களின் கீழ், 'இந்தப் பாடல் இன்ன நிறுவனத்தரால் உருவாக்கப்பட்ட இன்ன இசைத் தட்டில் (கிராமஃபோன் ரிகார்டு) பொறிக்கப்பட்டுப் பயன்படுத்தப்

பட்டு வருகிறது, - என்ற குறிப்பும் கொடுக்கப்பட்டுள்ளது. இந் நூற் பாடல்கள் ஆசிரியர் வாரியாக இல்லாமல் தலைப்பு வாரியாகத் தொகுக்கப்பட்டிருப்பினும், பாடல் ஆசிரியர்களின் பெயர்கள் அவர்தம் வாழ்நாள் ஆண்டுடன் அகர வரிசையில் பிற்சேர்க்கையாகத் தரப்பட்டுள்ளமை பாராட்டத்தக்கது.

பயன் மிக்க இந்தக் குழந்தைத் தொகை நூலைத் தொகுத்தவர்கள், 'ழில்பெர்த் ருழெர், (Gilbert Rouger), 'ரோபெர்த் ஃபிரான்ஸ், (Robert France) என்னும் இருவருமாவர். இதனை வெளியிட்டவர், ஃபெர்னாந்த்நதன்' (Fernand Nothan) என்பவர். 'ஃஎன்ரி லெழ்ராந்த்' (Henri Legrand) என்னும் அறிஞர் இந்த நூலுக்கு அழகிய மதிப்புரை அளித்துள்ளார். இது, பாரிசில் அச்சிடப் பெற்று 1958- மார்ச் திங்களில் வெளியாயிற்று.

இந்த நூலைப்பற்றி நாமே பேசிக் கொண்டிருக்கிறோமே! மதிப்புரை அளித்தவரும், தொகுப்பாசிரியர்களும் என்ன கூறுகின்றார்கள் என்று ஒரு சிறிது கேட்போமே!

மதிப்புரையாளர் கூறுவதாவது:- "இந்த நூல் குழந்தைகளுக்காகத் தொகுக்கப்பட்டது. குழந்தைத் தொகுப்பு நூல் எப்படி அமைய வேண்டுமோ - அப்படியே அமைந்துள்ளது இந்நூல். பாடல்கள் ஆசிரியர் வாரியாக இன்றிக் குழந்தைகட்கு ஏற்ற தலைப்புவாரியாகத் தொகுக்கப்பட்டிருப்பதே, இது சிறந்த குழந்தை நூல் என்பதற்குப் போதிய சான்றாகும். எடுத்துக் காட்டாக, முதல் பெருந்தலைப்பு ('Il Est Si Beau L' enfant Avec Son Doux Sourire') குழந்தைகளின் அழகிய -இளைய - இனிய - இன்பமான- மென்மையான- நகைமுக மலர்ச்சியுடன் கூடிய இயல்பைப் பற்றியது. இரண்டாவது பெருந்தலைப்பு ('O Maison De Mon Pere, O MA Maison Que J'Aime") 'என் தந்தையின் வீடே! நான் விரும்பும்வீடே' என்னும் பெயருடன், குழந்தைகளின் விருப்பமான வீட்டுச் சூழ்நிலையை மையமாகக் கொண்டுள்ளது. இவ்வாறாக, குழந்தைகட்கு ஏற்ற ஒவ்வொரு தலைப்பின் கீழும், அவ்வத் தலைப்புக்கு உரிய பல நூல்களிலிருந்து எடுக்கப்பட்ட சிறந்த பாடல்கள் அமைக்கப்பட்டுள்ளன...பாடல் தொகுப்புக்கலை

பட்டுள்ளன...பாடல் தொகுப்புக்கலை ஒரு கடினமான வேலை உயர்ந்த பாவலரின் உள்ளத்தைப் புரிந்து கொள்வது அரிய செயல். பாவலரின் உள்ளத்தின் உணர்ச்சி பாடலில் மறைந்து கிடைக்கும். இத்தகு பாடல்களைத் தொகுப் பவர்கள் தம்மை இழந்து-தம்மை மறந்து இந்த அரிய வேலையில் ஈடுபடுகின்றனர். குழந்தைகள் பாடல்களைப் பின்னர் மறந்து விடக்கூடும். எனவே, அவர்கள் நினைவில் என்றும் நிற்கக்கூடிய கவர்ச்சியான பாடல்களை-அவர்தம் பருவம் பட்டறிவு முதலிய தகுதிகட்கேற்ற பாடல்களை-அவர்தம் வாணாள்முழுதும் பயன்படக் கூடிய பாடல்களைத் தொகுக்க வேண்டும். அந்த அரிய பணியை இந்நூலின் தொகுப்பாசிரியர்கள் அருமையாகப் புரிந்துள்ளனர்...''

இந்தக் கருத்துப்பட, இன்னும் பல செய்திகளை மதிப்புரையாளர் கூறிச் செல்கிறார். அடுத்து, தொகுப்பாசிரியர்கள் கூறியிருப்பதாவது:

''...... இந்த நூற்பாடல்களைச் சிறு பிள்ளைகள் முதல் பெரிய பிள்ளைகள் வரை (உயர்நிலைப் பள்ளிப் பிள்ளைகள் வரை) படிக்கலாம். பாடல்கள் பயனும் கவர்ச்சியும் மிக்கனவாய் இருக்கவேண்டும் எனத் திட்டமிட்டு அவ்வாறே இந்நூலைத் தொகுத்துள்ளோம். பன்னிரண்டு தொகுப்புக்களில் 200 பாடல்களும், பின்னிணைப்பில் 8 பாடல்களும் அமைத்துள்ளோம். பாடல்கள் நடையில் பல்வேறு வகையானவை; குழந்தைகளின் உணர்வைத் தட்டி எழுப்பக் கூடியவை ...... ஒவ்வொரு பாடலுக்கும், அந்தப் பாடலின் கருத்தை உள்ளடக்கிய எழுச்சி மிக்க ஒரு தலைப்புத் தரப்பட்டுள்ளது. திறமை, வீரம், கலையுணர்வு போன்றவற்றை உணர்த்தும் சொற்களே-சொற்றொடர்களே தலைப்புக்களாக உள்ளன. பாடல்களிலுள்ள சிறந்த தொடர்களும் தலைப்புக்களாகத் தரப்பட்டுள்ளன......''

இந்தக் கருத்துப்பட இன்னும் பல கூறியுள்ளனர். பயன் மிக்க இந்த நூல் பாராட்டற் பாலது. அடுத்து மூன்றாவது தொகைநூல் வருமாறு:—

3. The Harrap Anthology of French Poetry

இந்த பிரெஞ்சுத் தொகை நூலின் பெயர் ஆங்கிலத்தில் தரப்பட்டிருப்பது வியப்பாயிருக்கலாம். ஆம்! இஃது ஆங்கிலேயர்கள் படிப்பதற்காகத் தொகுத்தளிக்கப்பட்ட பிரெஞ்சுப் பாடல் தொகைநூலாகும். அதனால்தான், நூற் பெயரும், முன்னுரையும், மற்ற விவரங்களும் ஆங்கிலத்தில் எழுதப்பட்டுள்ளன. மற்றப்படி, நூலின் உள்ளுறை-அதாவது பாடல்கள். பிரெஞ்சு மொழியிலேயே இருக்கக் காணலாம்.

இந்நூலைத் தொகுத்து உருவாக்கியவர் 'ஜோசப்ச்சியாரி' (Joseph Chiari D.e.s. L.) என்பவர். இது, இலண்டனிலுள்ள George G. Harrap & Co Ltd., என்னும் நிறுவனத்தால். அச்சிட்டு வெளியிடப் பெற்றதால் 'The Harrap Anthology' என்று வழங்கப்படுகிறது. இலண்டனில் 1958 ஆம் ஆண்டு இந் நூல் முதலவதாக அச்சிடப்பட்டது. இதன் தொகுப்பாசிரியர் ஒரு நீளமான பெரிய முன்னுரை எழுதியுள்ளார். அந்த முன்னுரையின் உரிமை 'பதிவு' செய்யப்பட்டிருப்பதைக் கொண்டு, அதன் அருமை பெருமையை அறியலாம்.

இங்கே, இதுவரை நாம் மாதிரிக்காக எடுத்துக் கொண்டுள்ள மூன்று பிரெஞ்சுத் தொகைநூல்களுள் முதலாவது பெரியவர்கட்கு ஏற்றது; இரண்டாவது சிறார்கட்கு உரியது. இந்த மூன்றாவது நூலோ, 'அனைவர்க்கும் ஏற்ற பொதுவான நூல். என்று தொகுப்பாசிரியரால் முன்னுரையில் சுட்டிக் காட்டப்பட்டுள்ளது. எனவேதான், வகைக்கு ஒரு நூலாக மூன்று நூல்கள் இங்கே எடுத்துக் காட்டப்படுகின்றன. முதலிரண்டு நூல்களும் பிரெஞ்சுக்காரர்கள் படிப்பதற்கு உரியன; இந்த மூன்றாவது நூல் ஆங்கிலேயர்கட்காகத் தொகுக்கப்பட்டது' இப்படியும் ஒரு முறை உண்டு என்பதை அறிவிப்பதாகவே இந்த மூன்றாவது நூல் இங்கே எடுத்துக் காட்டப்படுகிறது.

இந்த நூலின் தொடக்கத்தில், பதினோராவது நூற்றாண்டின் தொடக்கத்தில் இயற்றப்பட்டதாகக் கருதப்படுகிற ஆசிரியர் பெயர் தெரியாத (Anonymous Eleventh or early

Twelfth century) மூன்று பாடல்கள் தரப்பட்டுள்ளன. அடுத்து, பன்னிரண்டாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் எழுதப்பட்டவையான - ஆசிரியர் பெயர் தெரியாத மூன்று பாடல்கள் இடம் பெற்றுள்ளன.

இந்த ஆறு பாடல்களை அடுத்து, எண்பத்தெட்டுப் பாவலர்களின் பாடல்கள் பாவலர் பெயருடன்தொகுக்கப் பட்டுள்ளன. முதல் பாவலர், 'Richard Coeur De Lion' (1157—99) என்பவர். எண்பத்தெட்டாவது பாவலர், 'Yves Bonnefoy' (1923) என்பவராவார். இந்நூற்பாடல்கள் ஆசிரியர் வாரியாகத் தொகுக்கப்பட்டுள்ளன.

அடுத்து, நாலாவது மாதிரி நூல் ஒன்றையும் சுவைக்கலாமே!

4. Les Poe 'mes De L' Annee 1970

மேலுள்ள நூற்பெயர், '1970 ஆம் ஆண்டுப் பாடல்கள்' என்னும் பொருளைக் குறிக்கிறது. இதனைத் தொகுத்து வெளியாக்கியவர் 'செமேர் (Seghers) என்னும் அறிஞர். இந்த நூலுக்கு '1970 ஆம் ஆண்டுப் பாடல்கள்' எனப் பெயர் கொடுக்கப்பட்டிருப்பினும், 1968 ஆம் ஆண்டு செப்டம்பர் திங்கள் 30 ஆம் நாளுக்கும்-1969 ஆம் ஆண்டு அக்டோபர் திங்கள் முதல் நாளுக்கும் இடைப் பட்ட ஓராண்டுக் காலத்தில், பல்வேறு இதழ்கள், மலர்கள் முதலானவற்றில் வெளியான பாடல்களை இந்த நூலில் தொகுக்கப்பட்டுள்ளன. இந்த நூல் 1970 ஆம் ஆண்டு மேத் திங்கள் 15ஆம் நாள் பாரிசில் அச்சிடப்பட்டு வெளியாயிற்று. 1969 அக்டோபரில் பாடல்கள் தொகுக்கும் வேலையைத் தொடங்கி, 1970 மே 15 ஆம் நாள் அச்சிட்டு வெளியாக்கும் வேலையை முடித்துள்ளனர். ஏறக்குறைய ஏழு அல்லது எட்டுத் திங்கள் காலம்இதற்குச் சரியாய் இருந்திருக்கும். 1968—69 ஆம் ஆண்டுகளில் பாடல்கள் இயற்றபட்டிருப்பினும், நூல் 1970 ஆம் ஆண்டில்தான் வெளியாகி அனைவர் கைக்கும் கிடைத்ததால் 1970 ஆம் ஆண்டுப் படையல்—1970 ஆம் ஆண்டு அளிப்பு' என்னும் பொருளில், '1970 ஆம் ஆண்டுப் பாடல்கள்' என நூலுக்குப் பெயர் தரப்பட்டது போலும்.

இந்நூலில், 'Jean L' Anselme' என்னும் புலவர் முதல் 'Alexandre Voisard' என்னும் புலவர் ஈறாக, எண்பதின்மர் (80 புலவர்) பாடல்கள் ஆசிரியர் வாரியாகத் தொகுக்கப்பட்டுள்ளன. ஒவ்வொரு பாடலுக்கும் உரிய தலைப்பு தரப்பட்டுள்ளது. ஓராண்டுகாலப் பாடல்களின் தொகுப்பாகிய இந் நூல் ஒரு புது மாதிரியாக உள்ளதன்றோ? இப்படியும் ஒரு மாதிரி உண்டு என்பதை அறிவிக்கவே இந்தத் தொகை நூல் ஈண்டு எடுத்துக் காட்டபெற்றது.

ஈ. ஆங்கிலத் தொகை நூல்கள்

கிரீக் மொழியில் கி.மு. முதல் நூற்றாண்டிலேயே முதல் தொகைநூல் தொகுக்கப்பட்டது எனினும், இன்று அனைத்துலகப் பொது மொழியாக ஆட்சி செலுத்திவரும் ஆங்கிலத்தில், பதினாறாம் நூற்றாண்டின் இடைப்பகுதியில் தான் முதல் தொகை நூல் வெளியாயிற்று. 1320 – இல் எழுதப்பட்ட 'Harely Manuscript' என்னும் கையெழுத்துப்படியில், பிரெஞ்சுப் பாடல்களுடன் பல ஆங்கிலப் பாடல்களும் இருந்தது உண்மை. 1375 – இல், 'சோலொமொன்' (Solomon) என்பவர், இலத்தீன் பிரெஞ்சுப் பழமொழிகளுடன் ஆங்கிலப் பழமொழிகளையும் தொகுத்து வெளியாக்கியதும் உண்மை. ஆயினும், சிறந்த ஆங்கிலப் பாடல்கள் முதல்முதலாகத் தனித்த நிலையில்–தனித் தொகைநூலாகத் தொகுக்கப்பட்டு வெளியானது பதினாறாம் நூற்றாண்டின் இடைப்பகுதியிலேதான். கி.பி. 1557-இல், 'டாட்டால்' (Tottel) என்னும் அறிஞர் ஆங்கிலப் பாடல்கள் பலவற்றைத் தொகுத்து, 'Book of Songs and Sonnets' என்னும் பெயரில், முதல் ஆங்கிலத் தொகைநூலை வெளியாக்கினார். இத் தொகை நூலுக்கு, 'Tottel s Miscellany' என்ற வேறு பெயரும் உண்டு. இந்தப் பெயர்தான் பின்னர்ப் பெரிதும் நிலைத்துவிட்டது. Miscellany என்றால், கலவை-கதம்பம் – தொகுதி ஏடு-தொகுப்பு நூல் – என்று பொருளாம். பல்வேறு பாவலர்களின் பல்வேறு பாடல்களை டாட்டல் தொகுத்து வெளியிட்டதால், இந் நூல் Tottel's Miscellany எனப் பெயர்பெற்றது.

மிகச் சிறந்ததும், பலரும் அறிந்ததும், பல ஆங்கிலத் தொகைநூல்களுக்கு முன்னோடியானதும் ஆகிய Tottel's Miscellany என்னும் இத் தொகைநூலிலுள்ள பாடல்களின் விவரம் வருமாறு:--இதில், வியட், (Wyatt) என்னும் பாவல ரின் நாற்பது பாடல்கள் உள; இவற்றுள் சில, பதினான்கு அடிப் பாடலாகிய 'Sonnet' என்னும் வகையைச் சேர்ந்தன; சில, 'Rondeau' என்னும் மண்டலப் பாவகையைச் சேர்ந்தன. இப் பாடல்களுடன், 'சர்ரே' (Surrey) என்பவரின் தொண் ணூற்றாறு பாடல்களுமுள; இவற்றுள்ளும் 'Sonnet' வகைப் பாடல்கள் நிரம்ப உண்டு. இவ் விருவர் பாடல்களுடன், 'நிகோலஸ் கிரிமால்டு' (Nicholas Grimald), 'லார்டு வாக்சு'; (Lord Vaux) முதலியோர் பாடல்கள் பலவும் தொகுக்கப்பட் டுள்ளன. 1557 வரையும் அச்சிடப்படாதிருந்த வியாட், சர்ரே முதலியோர் பாடல்கள் Tottel's Miscellany என்னும் பெயரில் அச்சிடப்பட்டுப் பெரும் பெயர் பெற்றன.

1557 - இல் வெளியான இந்தத் தொகைநூல் இந்த அள வோடு முற்றுப்புள்ளி வைக்கப் பெறவில்லை. அடுத்து வந்தவர் கள், இந்தத் தொகைநூலில் இன்னும் சிற்சில பகுதிகளைச் சேர்த்து, மேலும் மேலும் புதுப் பதிப்புக்கள் வெளியிட்டனர். இந்நூலில் 'A Handful of Pleasant Delights' என்னும் புதிய தொரு பகுதி சேர்க்கப்பெற்று, 1566 - இல், புதிய பதிப்பு வெளியாயிற்று. 1576 - இல், 'The Paradise of Dainty Devices' என்னும் ஒரு புதிய பகுதி இணைக்கப் பெற்று, மேலும் ஒரு புதிய பதிப்பு வந்தது. 1578 - இல், 'A Gorgeous Gallery of Gallant Inventions' என்னும் ஒரு பகுதி சேர்க்கப்பட்டு மற்று மொரு புதிய பதிப்பு வெளிப்போந்தது, இத்தகு தொகுப்பு வெளியீடுகள் பதினாறாம் நூற்றாண்டு முழுதும் தொடர்ந்து கொண்டிருந்தன.

Tottel's Miscellany முதன்முதலாக 1557 - இல் வெளியா யிற்று. அடுத்தாற்போல் 1559 - இல் 'A Mirror for Magistrates' (தீர்ப்பளிக்கும் நடுவர்கட்காக ஒரு கண்ணாடி) என்னும் தொகைநூல் வெளியாயிற்று. இது பதினாறாம் நூற்றாண்டின் மிகப்பெரிய இலக்கிய ஆக்கப் படைப்பாக மதிக்கப்பட்டது.

இதில் இரண்டாவது ரிச்சர்டு மன்னன் காலம் முதல், நான் காவது எட்வர்டு மன்னன் காலம் வரையிலான (from Richard IIto Edward IV) ஆங்கில நாட்டு வரலாற்றை அடிப்படையா கக் கொண்டு பாடலாக எழுதப்பட்டுள்ள பத்தொன்பது வர லாற்றுப் பகுதிகள் தொகுக்கப்பட்டுள்ளன. இத் தொகை நூல் ‘சாக்வில்’ (Sackville) என்பவர் இயற்றிய மிகச் சிறந்த உணர்ச்சிமிக்க – இன்பமான – எதுகை மோனை ஒலிநயம் நிறைந்த ‘Induction’ என்னும் பாடல் பகுதி இணைக்கப்பெற்று 1563 – இல் புதிய பதிப்பாக வெளியாயிற்று. இவ்வாறாக, இந் நூல், 1621 – ஆம் ஆண்டுவரை, மேலும் மேலும் பல புதிய பகுதிகள் சேர்க்கப் பெற்றுப் பலமுறை பதிப்பிக்கப்பட்டுச் சிறப் புற்றுவந்தது.

கி.பி. 1593 – இல், ‘The Phoenix Nest’ என்னும் தொகை நூல் தோன்றியது. Phoenix Nest என்றால், ‘இறந்து மீண்டும் உயிர்பெற்றெழுந்த பறவைகளின் இருப்பிடம்’ என்பது பொரு ளாம். அப்படியெனில், ‘மறைந்து போன-மறைந்து போகக் கூடிய நிலையில் இருந்த பாடல்களின் திரட்டு’ இந்நூல் என நாம் புரிந்துகொள்ள வேண்டும். இந்நூல் தொகுக்கப் பெறா திருந்தால், இந்நூலில் உள்ள பாடல்கள் பிற்காலத்தினருக்குக் கிடைத்திருக்கமாட்டா.

கி.பி. 1600-இல் தோன்றிய ‘England’s Helicon’ என்னும் நூல், பலரும் அறிந்து பாராட்டுகிற – மிகவும் சிறந்த ஆங்கிலத் தொகை நூலாகும். ‘Helicon’ என்பதற்கு, ‘பாடல் ஊற்றின் பிறப்பிடம்’ (தலை ஊற்றுவாய்) என்று பொருளாம். எனவே, இத் தொகைநூல், ஆங்கிலப் பாடல்கட்குப் பிறப்பிடமாயுள்ள பெருமையுடையது என அறியலாம். அந்தக்கால நாட்டுப்புற வாழ்க்கையை ஓவியப்படுத்திக் காட்டும் பாடல்களையும், பல் வேறு சுவையுணர்வு மிக்க பாடல்களையும் இந் நூலில் காண லாம். இந்நூற் பாடல்கள், பாவலர்கள் பலர் பாடிய பல நூல் களிலிருந்து திரட்டியவையாகும். ‘பர்த்தலோமவ் யங்’ (Bartho -lomew Young) என்பவரின் பாடல்கள் இந்நூலில் மிகுந்த இடத்தைப் பிடித்துக் கொண்டுள்ளன.

இவர் பாடல்கள், ‘மோந்தெமயொர், (Montemayor)

என்பவரின் 'தியானா' (Diana=ஒரு பெண் தேவதை) என்னும் இலத்தீன் நூலின் மொழிபெயர்ப்பாகும். மற்றவர்களின் பாடலளவுக்குச் சிறப்பில்லாத இவர் பாடல்கள் மிகுதியாயிருப்பது ஒன்றுதான், இந்தத் தொகை நூலுக்கு உரிய குறையாகச் சொல்லப்படுகிறது. இந்நூலில் இடம் பெற்றுள்ள பாவலர்கள் இருபத்து நால்வருள் சிறந்த சிலர் பெயர்கள் வருமாறு:— 'Sir Philip Sindey, Edmund Spenser, John Dickenson, Robert Greene, Shakespeare, William Browne, Christopher Brooke' இந்நூலில், Philip Sidney என்பவர் பாடல் முதலிலும், Christopher Brooke என்பவரின் பாடல் இறுதியிலும் உள்ளன.

கி.பி. 1601 - இல், 'ராபர்ட் ஜான்ஸ்' (Robert Jones) என்னும் அறிஞர், 'Book of Songs and Airs' என்னும் தொகை நூல் உருவாக்கித் தந்தார்.

ஃபிரான்சிஸ் (Francis). வால்ட்டர் டேவிசன் (Walter Davison) என்னும் உடன்பிறந்தார்கள் இருவரும் சேர்ந்து 'Poetical Rhapsody' என்னும் தொகைநூலை 1602 ஆம் ஆண்டில் தொகுத்து வெளியிட்டனர். இது மிகச் சிறந்ததொரு தொகை நூலாகப் பாராட்டப்படுகிறது. 'Rhapsody' என்றால் 'வீர உணர்ச்சி மிக்க காவியக் கற்பனை நயஞ் செறிந்த பாடல் தொகுப்பு என்றுபொருளாம். இந்த நூல் முதலாம் எலிசபெத் காலத்துத் தொகை நூல்களுள் (Elizabethan Anthologies) இறுதிநூல் என்று சொல்லப்படுகிறது. இந்நூற் பாடல்களை இயற்றிய பாவலர்களுள் சிலர் பெயர்கள் வருமாறு:—Greene, Campion, Henry Wotton, Spenser, Constable, Charles Best.

1640 - இல் 'விட்' (Wit) என்பார், 'Recreations' என்பதற்கு, 'ஓய்வுநேர இன்பப் பொழுது போக்கு-அயர்வு போக்கும் இன்பக் கேளிக்கை, என்றெல்லாம் பொருள் கூறப்படுகிறது. எனவே, இந்தப் பெயரைக் கொண்டு, இந்த நூலிலுள்ள பாடல்களின் இயல்பைப் புரிந்து கொள்ளலாம். இஃதும், பலர் அறிந்து பாராட்டும் மிக உயர்ந்த தொகைநூலாக மதிக்கப்படுகிறது.

பதினெட்டாம் நூற்றாண்டின் நடுப்பகுதியில் - குறிப்பாக 1748 - 58 ஆகிய பத்தாண்டுக் காலத்தில், 'Collection of

Poems', 'Selection of Beauties', 'Elegant Extracts' போன்ற பெயர்களில், பலரால் பல தொகைநூல்கள் தோன்றின. இவற்றுள், 'ராபர்ட் டாட்ஸ்லே' (Robert Dodsley) முதலிய அறிஞர்களின் தொகைநூல்கள் குறிப்பிடத்தக்கன.

1765-இல், 'தாமஸ் பெர்சி', (Thomas Percy) என்பவர். 'Relques of Ancient English Poetry' (பண்டைய ஆங்கிலப் பாடல்களுள் தப்பிப் பிழைத்தவற்றின் திரட்டு) என்னும் அரியநூல் தொகுத்தார். பொதுமக்களிடையே புழங்கும் நாட்டுப்புறப் பாடல்களுக்குப் பெயர்பெற்றது இந்தத் தொகை நூல்.

1767-ல் 'ஆலிவர் கோல்டுஸ்மித் (Oliver Goldsmith) என்னும் பெரும் பேரறிஞர் 'The Beauties of English Poetry' என்னும் தொகை நூலொன்று படைத்துள்ளார்.

பத்தொன்பதாம் நூற்றாண்டிலிருந்து ஒருவகைப் புது மாதிரியான தொகை நூல்கள் தோன்றத் தொடங்கின. பாடல்கள் கால வாரியாகத் தொகுக்கப்பட்டன. இதனால், இலக்கியங்கள் படிப்படியாக வளர்ந்துவந்த வரலாற்று முறையும், அதன் விளைவும் அறியப்படும். மற்றும், காலவாரியாகத் தொகுக்கப்பட்ட நூல்களைப் பற்றியவும், பாடல்களைப் பற்றியவுமான திறனாய்வுக் கட்டுரைகளும் வரலாற்றுக் கட்டுரைகளும் உடன் தொகுக்கப்பட்டன. இம்முறையினால், காலவாரியாகப் பாவலர்களைப் பற்றியும் அறிந்து கொள்ள முடிகிறது. இந்த மாதிரியான தொகுப்புக்கு ஓர் எடுத்துக் காட்டு வேண்டுமாயின், 'தாமஸ் கேம்பல்' (Thomas Campbell) என்னும் அறிஞர் 1819 - ல் தொகுத்த 'Specimens of The British Poets' (ஆங்கிலப் பாவலர் பாடல்களின் மாதிரித் தொகுப்பு) என்னும் நூலைக் கூறலாம்.

புதிய காலத்திற்கு ஏற்ற-சிறப்பாக விதந்து குறிப்பிடத் தக்க ஒரு தொகைநூல் 'Golden Treasury of English Songs and Lyrics' (ஆங்கிலப் பாடல்களின் விலைமதிக்க வொண்ணாத பொற்கருவூலம்) என்னும் பெயரில் 1861-இல் தொகுக்கப்பட்டது. இதன் தொகுப்பாசிரியர் ஃபிரான்சிஸ் டர்னர் பால்கிரேவ்' (Francis Turner Palgrave) என்னும் பெரும்

பாவலராவர். இவர் ஆக்சுஃபோர்டு பல்கலைக் கழகத்தில் புலமைத்துறைத் தலைவராய் (Professor of Poetry), விளங்கிய வர். திறனாய்வுத் துறையிலும் வல்ல இப்புலவர் பெருமானால் தொகுக்கபட்ட இந்நூல், உயர்ந்த பல உணர்ச்சிப் பாடல் களைப் படித்து மகிழும்படி மக்களுக்குக் கல்விச்சுவை ஊட்டி யது. விக்டோரியா காலத்து (Victorian Period) உணர்ச்சிப் பாடல்களுள் மிகச் சிறந்தவை இந்நூலில் இடம் பெற்றிருந் தன. பொதுவாக, கி.பி. 1550 முதல் 1850 வரையிலுமான முந்நூறு ஆண்டுகாலப் பாடல்களுள் மிகச் சிறந்தவை இந் நூலுள் தொகுக்கப்பட்டன என்று கூறலாம். இந்நூற் பாடல் கள், ஆசிரியர் வாரியாகவோ காலவாரியாகவோ இல்லாமல், தலைப்பு வாரியாக வரிசைப்படுத்தப் பட்டுள்ளன. பல தலைப்புக்களை, அதாவது பல பொருள்களைப் பற்றி அறிய விரும்புவோர், இந்தப் பொன்னான கருவூலத்துக்கு வருகை புரியலாம். இதற்கு ஒப்பான சிறந்த தொகைநூல் ஆங்கி லத்தில் வேறு இல்லை என்பது பலரது கருத்து.

'சர் ஆர்தர் கில்லர் கோச்' (Sir Arthur Quiller-Couch) என்பவர் தொகுத்த 'Oxford book of English Verse' என்னும் நூல் 1900-ஆம் ஆண்டு வெளியாயிற்று. இது 1939 வரை புதிய பதிப்புப் பெற்றுச் சிறந்து மிளிர்ந்தது.

மற்றும் இதை ஒட்டிய காலத்தில் இன்னும் பல நூல்கள் எழுந்தன. அவற்றுள், 'தெ லா மேர்' (De La Mare) என்பவர் தொகுத்த 'Come Hither' (இங்கே வந்து காண்க) என்ற நூலும், 'ஆடன்' (W. R. Auden) என்பவர் தொகுத்த, 'The Poets Tongue' (புலவர் நாக்கு) என்னும் நூலும் குறிப்பிடத் தக்கன. 'ராபர்ட் பிரிட்ஜஸ்' (Robert Bridges) என்னும் அறி ஞர் 1961-இல் தொகுத்த 'The Spirit of Man' (மாந்தனின் ஆர்வ எழுச்சி-உள்ளக் கிளர்ச்சி) என்னும் நூலும் சிறந்த தொன்றாகும். இந்நூல்கள் குறிப்பிட்ட கொள்கையை-நோக் கத்தை அடிப்படையாக வைத்துத் தொகுக்கப்பட்டவையாகும்.

'ஃஅரியட் மன்றோ (Harriet Monroe) 'அலிஸ்கொர்பின் ஃஎண்டர்சன்' (Alice Corbin Henderson) என்னும் அமெரிக்கப்

புலவர்கள், 1917-இல், 'The New Poetry'(புதுப் பாடல்) என்னும் நூல் தொகுத்தனர். இந்நூல் வரலாற்றுச் சிறப்பு நோக்குடன் புதுப்பாடல்களை அறிமுகம் செய்யும் இயல்பினது. இது 1932-இலும் புதிய பதிப்புப் பெற்றுள்ளது.

1916-18 ஆண்டளவில், பேட்டன் (W.R. Paton) என்பவர், ஒரு கிரீக் தொகைநூற் பாடல்களை நல்ல ஆங்கிலப் பாடல்களாக மொழி பெயர்த்துத் தொகுத்து, இருமொழிப் பாடல்களையும் இணைத்து வெளியிட்டார். இருபதாம் நூற்றாண்டிலும் கிரீக்கிலிருந்து மொழிபெயர்ப்புத் தொகை நூல்கள் தோன்றினமைக்கு இது சான்றாகும்.

1946 ஆம் ஆண்டில், 'லூயிஸ் அண்டர்மெயர்' (Louis Untermeyer) என்னும் அமெரிக்கப் புலவர், 'Anthology of Famous English and American Poetry' (புகழ்பெற்ற அமெரிக்க-ஆங்கிலப் பாடல்களின் தொகுப்பு) என்னும் பெயரில், ஒரு நூல் தொகுத்து வெளியிட்டார். அதே ஆண்டில், அதே பெயரில், 'வில்லியம் ரோஸ் பெனட்' (William Rose Benett), 'கான்ராடு அய்கன்' (Conrad Aiken) என்னும் அமெரிக்கப் புலவர்கள் இருவரும் ஒரு தொகைநூல் வெளியிட்டனர் என்பது வியப்பிற்குரிய உண்மையாகும்.

இப்படிச் சொல்லிக் கொண்டே போனால், இன்னும் எத்தனையோ தொகை நூல்கள் முன்வந்து நிற்கும். எனவே, மாதிரிக்காக இரண்டு தொகைநூல்களைப் பற்றிய விவரங்கள் அறிவதோடு அமைவோம்.

முதல் நூல் வருமாறு:

(1) An Antholgy of Longer Poems

இந்த நூல், 'மோல்ஸ் (T.W. Moles), 'மூன்' (A.R.Moon) என்பவர்களால் தொகுக்கப்பட்டது.! 'Longmans' Green And Co Ltd.' என்னும் நிறுவனம் இதனை முதல் முதலாக 1938–ல் இலண்டனில் வெளியிட்டது. இதில், கதை தழுவிய நீளமான பாடல்கள் உள்ளன. தமிழில் உள்ள ஆற்றுப் படை பாடல்கள் போல, இந்நூற் பாடல்களும் மிகவும் நீளமானவை. 'மாத்யூ ஆர்னால்டு, (Mathew Arnold) என்னும் புலவரின்

'Sohrap And Rustum' என்னும் தலைப்புடைய பாடல் 892 அடிகள் உடைய மிகப் பெரிய பாடலாகும். இஃது இந்நூலில் பதினான்காவது பாடலாக அமைந்துள்ளது.

இந்நூற் பாடல்கள், பதினெட்டாம் நூற்றாண்டின் இடைப்பகுதியிலிருந்து இருபதாம் நூற்றாண்டின் முற்பகுதி வரையும் நடைபெற்ற வரலாற்று நிகழ்ச்சிகளைப் பின்னணியாகக் கொண்டவை. இவற்றுள் வீரகாவியப் பகுதியும் உண்டு; காதல் காவியப் பகுதியும் உண்டு; எழுச்சிபெறச் செய்யும் கட்டற்ற கற்பனைப் பகுதியும் உண்டு.

இந்நூலில் புலவர் பதினெண்மர் இயற்றிய இருபத்திரண்டு பாடல்கள் உள்ளன. முதல் பாடல் 'ஜான் டயர்' (John Dyer) என்னும் புலவரின் 'Grongar Hill' என்னும் பாடலாகும். இறுதிப் பாடல், 'வில்ஃபிரிட் கிப்சன்' (Wilfrid Gibson) என்னும் பாவலரின், 'The Lodestar' என்னும் பாடலாகும். இந்நூற் பாவலர்கள் பதினெண்மருள், 'ஆலிவர் கோல்டுஸ்மித் (Olilver Goldsmith)' 'வில்லியம் வேர்ட்ஸ் வொர்த்' (William Wordsworth), லார்டு டென்னிசன் (Lord Tennison) முதலிய புகழ் பெற்ற புலவர்களும் உளர்.

இந்நூலில், பாடலுக்கு முன்னர்த் தலைப்பும், இறுதியில் ஆசிரியர் பெயரும், அடுத்துப் பாடல் பற்றிய குறிப்புக்களும் கொடுக்கப்பட்டுள்ளன. நூலின் முகப்பில், தொகுப்பாசிரியரின் சுருக்கமான முன்னுரை உள்ளது.

இனி, இரண்டாவது நூல் வருமாறு:-

2. Anthology of Modern Poetry.

இந்த நூலை, 'ஜான் வைன்' (John Wain) என்பவர் தொகுத்து உருவாக்கினார். 'Hutchinson & Co. (Publishers) Ltd.' என்னும் நிறுவனம் இதனை முதல் பதிப்பாக 1963-இல் இலண்டனில் அச்சிட்டு வெளியிட்டது.

'Modern Poetry' என்னும் தொடரைக் கொண்டே, இந்நூல் புதிய கால - புதிய முறைப் பாடல்களின் தொகுப்பு என உணரலாம். கி.பி. 1870 முதல் 1960 ஆம் ஆண்டு வரை இயற்றப்பட்டுள்ள பாடல்கள் இந்நூலில் தொகுக்கப்பட்டிருப்பதாக,

நூலின் தொகுப்பாசிரியர் தமது முன்னுரையில் குறிப்புக் காட்டியுள்ளார். மேலும், ஆசிரியர் முன்னுரையில் கூறியிருப்பதாவது: – "இந்த நூல் இருமுனைப் பயன்கள் அளிக்கவல்லது. ஒன்று: 'இதனைப் பாடநூலாகவும் பயன்படுத்தலாம். இதனைப் படிப்பவர்கள், புத்துலகப் பாடல்கள்-புதுப்பாணி பாடல் இலக்கியங்கள் வளர்ந்துவரும் வரலாற்று அமைப்பினைச் சிறப்பாக உணர்ந்து கொள்ளலாம். அஃதாவது – பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியிலும், இருபதாம் நூற்றாண்டிலும் இயற்றப்பெற்ற பாடல்களின் இயல்பினைத் தெளிவாய் அறிந்து கொள்ளலாம். இரண்டாவது: இதனை எல்லாருமே இலக்கிய இன்பத்திற்காகப் படிக்கலாம். இலக்கியம் படிப்பதன் இன்றியமையாத பயன் சுவைத்து இன்புறுதலாகும்" – இந்தக் கருத்துப்படத் தொகுப்பாசிரியர் கூறிச் செல்கிறார்.

மற்றும், ஆசிரியர் இருபத்திரண்டு பக்கம் கொண்ட தமது நீளமான முகவுரையில், 'Modern' என்னும் சொல்லுக்கு மிக விரிவான விளக்கமும், பாடல் – இலக்கியம்-புலவர்-தொகை நூல் முதலிய பொருள்கள்பற்றி விரிவான விளக்கமும், பழைய தொகை நூல்கள்-பிற நாடுகளில் உள்ள அமைப்பு முறை முதலியவைபற்றி விளக்கமும் கொடுத்துக்கொண்டு செல்கிறார்.

இந்த நூலில், பாவலர்கள் நாற்பதின்மர் (40 பேர்) இயற்றிய நூற்றாறு (106) பாடல்கள் தொகுக்கப்பட்டுள்ளன. முதல் பாடல், 'ஜெரார்டு மேன்லி ஃஹப்கின்ஸ்' (Gerard Manley Hopkins) என்பவரின் 'The Candle Indoors' என்னும் பாடலாகும். இறுதிப் பாடல் 'யீட்ஸ்' (W.B.Yeats) என்பவரின் 'A Prayer for Old Age' என்னும் பாடலாகும். ஒவ்வொரு பாடலின் தொடக்கத்திலும் முதலில் ஆசிரியர் பெயரும் அடுத்துப் பாடல் தலைப்பும் கொடுக்கப்பட்டுள்ளன.

பாடல்கள் ஆசிரியர் வாரியாகவோ-காலவாரியாகவோ-தலைப்பு வாரியாகவோ வேறு எந்த வகையாகவோ இனப்படுத்தி-வரிசைப்படுத்தித் தொகுக்கப்படாதது இந்நூலில் உள்ள ஒரு புது முறையாகும். நூற்றாறு பாடல்களும் தனித்தனியே ஒன்றன்பின் ஒன்று அமைந்து தொடர்கின்றன. ஆனால், 'பாடல்கள் ஒன்றொடொன்று ஒரு சிறிதளவாவது கருத்துத்

தொடர்புடையனவாயுள்ளன. மற்றும், ஒவ்வொரு பாடலும் தோன்றுவதற்குக் கருப்பொருளாக உள்ள ஒவ்வொரு வாழ்க்கை நிகழ்ச்சிக்கிடையேயும் பொதுத் தொடர்பு உள்ளது. இந்த முறையில் பாடல்கள் வரிசைப் படுத்தப்பட்டுள்ளன' -என்று தொகுப்பாசிரியர் கூறுகிறார். மற்றும், 'பாடல்களைக் கால வாரியாக வகைசெய்து வரிசைப் படுத்துவது, உப்புச் சப்பற்ற – உணர்ச்சியற்ற ஒரு முறையாகும் (Wooden Classification of Chronology)' – என்றும் அவர் தமது முன்னுரையில் கூறியுள்ளார். இஃது ஒருசார் புதுமைக் கருத்தாகும்.

எனவே, இந்நூலில், ஒரு பாவலரின் பாடல்கள் பலவும் பல இடங்களில் சிதறிக் கிடக்கக் காணலாம். எடுத்துக் காட்டாக, 'யீட்ஸ்' (W.B. Yeats) என்பவரின் பதினொரு பாடல்கள் 42, 57, 64, 87, 105, 108, 116, 141, 145, 172, 175 ஆகிய பதினொரு பக்கங்களில் அங்கொன்றும் இங்கொன்றுமாகச் சிதறிக் கிடப்பதை நூலைக் கற்போர் நன்கறிவர். பல நூல்களிலும் உள்ளாங்கு, இந்நூலின் இறுதியிலும், ஆசிரியர் அகர வரிசையும், செய்யுள் முதற் குறிப்பு அகர வரிசையும், பக்க எண்களுடன் அமைக்கப்பட்டுள்ளன. சுருங்கக் கூறின், இந்நூலின் அமைப்பு மிகவும் நன்றாயிருக்கிறது.

### உ. சம்சுகிருதத் தொகை நூல்கள்

சம்சுகிருதம் என்னும் வடமொழியில், தொகை நூல் என்பது, 'சுபாஷிதம்' எனப் பெயர் வழங்கப்படுகிறது. 'சு' என்றால் 'நல்ல' என்று பொருளாம். 'பாஷிதம்' என்பது 'பாஷா' (மொழி) என்னும் அடிப்படையிலிருந்து உருவானது. எனவே, 'சுபாஷிதம்' என்பதற்கு, 'நன்மொழிகளின் திரட்டு-அதாவது – நல்ல பாடல்களின் தொகுப்பு' எனப் பொருள் கொள்ளலாம். ஈண்டு,Dictionarium-Latino-Gallico Tamulicum' என்னும் இலத்தீன்-பிரெஞ்சு- தமிழ்அகராதியில் 'Anthologium' என்னும் சொல்லுக்கு, "Anthologi um, i,n. Anthologie, நல்ல வாக்கிய முதலியதின் சேர்க்கை,-மாலை" எனப் பொருள் கூறப்பட்டிருப்பது ஒப்பு நோக்கற்பாலது. வடமொழித் தொகை நூல்கள் சில, 'சுபாஷிதம்' என்னும் பெயரைக் கொண்டிருப்பதைப் பின்னர்க் காணலாம்.

ஐரோப்பிய மொழிகளுள் தொன்மைப் பெருமையுடைய கிரீக் மொழியில் கி.மு. முதல் நூற்றாண்டிலும், அதற்கு அடுத்த தகுதியுடைய இலத்தீன் மொழியில் கி.பி. ஐந்தாம் நூற்றாண்டளவிலும் முதன் முதலாகத் தொகை நூல்கள் தோன்றின என்று கண்டோம். இந்த மொழிகளைப் போலவே தொன்மைப் பெருமையுடையதும் இந்தோ - ஐரோப்பிய மொழிக் குடும்பத்தைச் (Indo-European Languages) சேர்ந்ததுமாகிய சம்சுகிருத மொழியில், கி.பி. பத்தாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் முதல் தொகைநூல் தோன்றியதாகச் சொல்லப்படுகிறது. பதினைந்து பதினாறாம் நூற்றாண்டளவில் முதல் தொகை நாலைப் பெற்ற - உலகப் பொது மொழிகளாகக் கருதப்படுகின்ற பிரெஞ்சு, ஆங்கிலம் ஆகிய மொழிகட்கு முன்பே, சம்சுகிருதம் பத்தாம் நூற்றாண்டிலேயே முதல் தொகை நூலைப் பெற்றிருப்பது, அதன் தொன்மைப் பெருமைக்கு ஓரளவு முட்டுக் கொடுத்துக்கொண்டு நிற்கிறது. இனிச் சில தொகை நூல்கள் வருமாறு: -

வடமொழியில் முதல் தொகை நூலாகச் சொல்லப் படுவது 'கவீந்த்ர வசன சமுச்சயம்' என்னும் நூலாகும். இது பத்தாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் தொகுக்கப் பெற்றதாம். முன் நூற்றாண்டுகளில் வாழ்ந்த புலவர்களின் பாடல்களுடன், பத்தாம் நூற்றாண்டுப் புலவர்களின் பாடல்களும் இந்நூலில் தொகுக்கப்பட்டுள்ளன. இத்தொகை நூலின் காலத்தை இன்னும் பின்னுக்குத் தள்ளுபவரும் உளர். இந்நூற் பாடல்கள், நீதி, நல்லொழுக்கம், அரசியல், இன்பம் முதலிய பொருள்கள் பற்றியவையாகும். இந்தத் தொகை நூலின் கையெழுத்துப்படி (Manuscript) முதன் முதலில் நேபாளத்தில் அகப்பட்டதாம். 'சமுச்சயம்' என்றால் தொகுதி என்று பொருள். 'கவீந்த்ர வசனம்' என்பது 'கவியரசர்களின் மொழி' எனப் பொருள் படலாம். எனவே, 'சிறந்த கவிஞர்களின் பாடல் தொகுப்பு' என இந்நூலின் பெயருக்குப் பொருள் கொள்ளலாம்.

அடுத்து, 'பிரசன்ன சாகித்ய ரத்நஹாரா' என்னும் தொகை நூல் அறியப்படுகிறது. சாகித்யம் என்றால் பாடல். ரத்நஹாரா என்றால் இரத்தினமாலை. எனவே, சிறந்த

பாடல்களாகிய மணிகளால் தொகுக்கப்பட்ட மாலை எனக் கொள்ளலாம். இதனைத் தொகுத்தவர் 'நந்தனா' என்பவர் 'சிவ விராஜ்யா' என்னும் புலவரின் பாடலிலிருந்து இந்நூல் தொடங்குகிறது. இதில் ஆயிரம் பாடல்கள் தொகுக்கப் பட்டுள்ளன.

'தர்ம பரிக்ஷா' என்னும் சிறந்த நூலின் ஆசிரியராகிய 'அமிதகதி' என்னும் புலவர், 'முஞ்சா' (Munja of Dhara) என்னும் அரசன் காலத்தில் -கி.பி. 994-இல், 'சபாஷித ரத்ந சந்தோகா' என்னும் நூல் தொகுத்தார். சந்தோகா என்றால் குவியல். எனவே, 'நன்மொழி மணிக் குவியல்' என்பது நூற் பெயரின் பொருளாகும்.

'சிரீதர தாசா' என்பவர் கி.பி. 1205-இல், சதுக்தி கர்ணா மிருதா' என்னும் தொகைநூல் உருவாக்கினார். சதுக்தி என்றால் நன்மொழி–நல்லறிவுரை என்று பொருளாம். கர்ணா மிருதம் என்றால் செவியமிழ்தம் ஆகும்.

'ஜல்கனா' என்பவர் கி.பி.1257-இல் சுக்தி முக்தாவளி என் னும் நூல் தொகுத்தார். சுக்தி = கிளிஞ்சல்; முக்த ஆவளி= முத்து வரிசை; எனவே, சுக்தி முக்தாவளி என்றால், கிளிஞ் சலும் முத்தும் சேர்ந்த தொகுப்பு என்று பொருளாம். அஃதா வது, பலவகைப் பாடல்களின் தொகுப்புநூல் என்று கொள்ள வேண்டும்.

1257-இல் 'சுபாஷித முக்தாவளி' என்னும் பெயருடைய நூலும் தொகுக்கப்பட்டது. இதே பெயரில் இத்தொகை நூலின் சுருக்கம் ஒன்றும் உள்ளது.

'காலிங்கராயன்' என்பவர் 'குலசேகர சுக்தி ரத்ந ஹாரா' என்னும் நூலொன்று தொகுத்தார். அறம், பொருள், இன் பம், வீடு என்னும் நான்கு உறுதிப் பொருள்களைப் பற்றிப் பேசும் பாடல்கள் இதில் உள்ளன.

'வேத பாஷ்யம்' என்னும் படைப்பின் ஆசிரியராகிய 'சாயணர்' என்னும் பெரியார், பதினான்காம் நூற்றாண்டில், 'சுபாஷித சுதாநிதி' என்னும் தொகைநூல் தந்தார். சுதாநிதி

என்றால் 'அமிழ்தநிதி.' எனவே. அமிழ்தம் போன்ற பாடற் செல்வங்களின் தொகுப்புநூல் என்று பொருள் கொள்ள வேண்டும்.

'சார்ங்கதரன்' என்பவர் 1363-ஆம் ஆண்டில் தம் பெயரா லேயே 'சார்ங்கதர பத்ததி' என்னும் பெரிய நூல் ஒன்று தொகுத்தார். பத்ததி என்றால் வரிசை-அதாவது-பாடல்களின் வரிசை-பாடல்களின் தொகுப்பு. இந்நூலில், 'கொல்லத்தர்' முதலிய பாவலர்கள் இயற்றிய 4689 பாடல்கள், 163 தலைப் பின்கீழ்த் தொகுக்கப்பட்டுள்ளன.

காஷ்மீரைச் சேர்ந்த வல்லப தேவர் என்பவர் கி.பி.1417-67 ஆகிய கால இடைவெளியில், மிக உயர்ந்த இலக்கிய - வர லாற்றுச் சிறப்புடைய 3527 மேற்கோள் பாடல் பகுதிகளைத் தொகுத்து 'சுபாஷிதாவளி' என்னும் பெயரில் ஒரு பெரிய தொகைநூல் ஈந்தார். சுபாஷித ஆவளி=நல்ல பாடல்களின் தொகுப்பு வரிசை.

நீலகண்ட திட்சிதர், பிரபந்த சாகரர் என்னும் இருபெயர் களை உடைய ஓர் அறிஞர், பதினைந்தாம் நூற்றாண்டில், 'வர்ண சார சங்கிரகம்' என்னும் பெயரில் ஒரு தொகைநூல் உருவாக்கினார். இந்நூல் பல்வறு குறிக்கோள்கள், பருவங் கள், இடங்கள், கடவுள் கொள்கைகள் ஆகியவற்றை விரிவாக விளக்கிச் செல்கிறது.

கி.பி. 1412—1477 ஆண்டுக்கால இடைவெளியில் 'சிரீவரர்' என்பவர் 'சுபாஷிதாவளி' என்னும் பெயருடைய நூல் தொகுத் தார். இதில் ஏறக்குறைய நானூறு புலவர்கள் இடம் பெற்றுள் ளனர்.

'விஜய சேன சூரி' என்பவர் 1591-இல், 54 பாடல்கள் கொண்ட 'சுக்தி ரத்நாவளி' என்னும் தொகைநூல் படைத் தார். இதே பெயரில், ஹேம விஜய கனி' என்பவரால் ஒன்றும் 'வைத்ய ரத்நா' என்பவரால் மற்றொன்று மாக இரு நூல்கள் உருவாக்கப்பட்டுள்ளன.

1614-இல், ஹரிதாசர் என்பவர், இருபத்தோர் இயல்

களின் கீழ்ப் பல்வேறு தலைப்புக்கள் இட்டு பிரஸ்தாவ ரத்ந ஹாரம்' என்னும் நூல் தொகுத்துளர்.

பதினேழாம் நூற்றாண்டின் பிற்பகுதியில், 'சுந்தரதேவர்' என்பவர், 'சுக்தி சுந்தரர்' என்னும் நூல் தொகுத்தார். இதில், பதினாறம் நூற்றாண்டிலும் பதினேழாம் நூற்றாண்டின் முற் பகுதியிலும் வாழ்ந்தவர்களும் அக்பர் முதலிய மன்னர்களால் சிறப்பிக்கப் பெற்றவர்களுமாகிய புலவர்களின் பாடல்கள் தொகுக்கப்பட்டுள்ளன.

ஆசார்ய கவீந்திரர் அல்லது கவீந்திரர் என்று அழைக்கப் படும் அறிஞர், 'கவீந்த்ர சந்த்ரோதயா' என்னும் நூல் தொகுத்தார்.

மற்றும் கவீந்திரர் என்பவர், மிகவும் மதிக்கத்தக்க ஒரு பெரிய தொகைநூல் உருவாக்கியுள்ளார். இதில் ஏறக் குறைய இருபது இராமாயண நூல்களிலிருந்து பாடல்கள் தேர்ந் தெடுத்துத் தொகுக்கப்பட்டுள்ளன. மற்றும் பல்வேறு நூல்களி லிருந்தும் பல நாடகங்களிலிருந்தும் அறுபத்து நான்கு கலை களைப் பற்றிய பலவகை நூல்களிலிருந்தும் திரட்டிய பாடல்கள் பலவும் இத்தொகை நூலில் அடங்கியுள்ளன.

1753-ஆம் ஆண்டில் 'விரா ஜனதா' என்னும் பெரியார் 'பத்ய தரங்கிணி' என்னும் பெயரில் பெரியதொரு தொகை நூல் உருவாக்கித் தந்துள்ளார். பத்திய தரங்கிணி என்றால் 'பாடல்களின் அலைவரிசை' என்று பொருளாம்.

மற்றும் பல்வேறு நூல்களிலிருந்து பாடல்கள் தேர்ந்தெடுக் கப் பெற்றுத் தொகுக்கப்பட்டு 'காவ்ய சங்கிரக' என்னும் நூல் உருவாக்கியுள்ளது. இந்நூற் பாடல்கள் பல தொகுதிகளாகப் பிரிக்கப்பட்டுள்ளன. சிறந்த பெரியார்கள், சிறந்த பொருள்கள், சிறந்த பண்புகள் பற்றி இப்பாடல்கள் விவரிக்கின்றன.

பதினேழாம் நூற்றாண்டின் பிற்பகுதியில், ஹரிகவி என் பவர், 'ஹாராவளி' அல்லது 'சுபாஷித ஹாராவளி' என்னும் பெயரில் ஒரு நூல் தொகுத்துளார். இதில், காஷ்மீர் முதல் தக்கணம் வரை உள்ள தொடர்பைக் காட்டும் வகையில் பாடல்கள் அமைக்கப்பட்டுள்ளன,

மற்றும், ஹரி பாஸ்கரன் என்பவரின் ‘பத்யாமிருதத்தரங்கிணி’ என்னும் நூலும், ரூபகோசுவாமி என்பவரின் ‘பத்யாவளி’ என்னும் நூலும், முகுந்தா என்பவரின் ‘பத்யாவளி’ நூலும், வித்யா பூஷணா என்பாரின் பத்யாவளி நூலும், காசிராமா என்பவரின் ‘பத்ய முக்தாவளி’ என்னும் நூலும், கோவிந்த பட்டா என்பவரின் ‘பத்யமுக்தாவளி’ என்னும் நூலும், கவி பட்டா என்பாரின் ‘பத்யசங்கிரக’ நூலும், வேணி தத்ததா என்பாரின் ‘பத்ய வேணி’ என்னும் நூலும், வடமொழியில் பயனுள்ள தொகைநூல்களாகும். ஆனால், இவை சிறு சிறு தொகைநூல்கள். இவற்றைப் போல இன்னும் பலப்பல சிறு தொகை நூல்கள் வடமொழியில் உள்ளன.

சம்சுகிருதம், உலகப் பழம்பெரு மொழிகளுள் ஒன்று ஆகையாலும், இந்திய மொழிகளுள் தமிழ் போலவே சிறந்த மொழியாதலும், வட இந்திய மொழிகளின் தலைமை மொழி-தாய்மொழியாதலினாலும், அம்மொழியிலுள்ள தொகை நூல்களைப் பற்றிய வரலாற்றையும் ஓரளவு அறிந்து கொள்வது, நாம் பின்னால் மேற்கொள்ளவிருக்கும் தமிழ் ‘நூல் தொகுப்புக்கலை’ ஆராய்ச்சிக்குப் பெரிதும் பயன்படும்.

ஊ. எபிரேயத் தொகை நூல்கள்

பழம்பெருமொழிகளில் எபிரேய மொழியும் ஒன்று. யூதரின் மொழியாகிய இது, கி.மு. மூவாயிரம் ஆண்டுக்கு முன்பிருந்து இன்றுவரை வழக்கில் உள்ளது. இடைக்காலத்தில் யூதர்கள் சிதறுண்டதால், எழுத்து வழக்கு அழிந்து போக, பேச்சுவழக்கு மட்டும் இருந்து வந்தது. மீண்டும் யூதர்கள் புதுவாழ்வு பெற்றதும் எழுத்து வழக்கும் மீண்டு வளர்ந்து வருகிறது. இன்றும் யூதர்களின் கோயில் வழிபாட்டு மொழி இதுதான். இந்த மொழியிலும் அன்றும் இன்றுமாகப் பல தொகை நூல்கள் தோன்றியுள்ளன. மாதிரிக்காகப் பழைய தொகைநூல் ஒன்றைப் பார்த்து அமைவோம்:

‘ஜீடா ஹா-நாசி’ என்னும் பெயருடைய யூதசமயத் தலைவர், கி.பி. இரண்டாம் நூற்றாண்டில், ‘மிஷ்னா’ என்னும் பெயரில் ஒரு நூல் தொகுத்தார். இஃது, இனிமையும் நயமும்

மிக்க நூலென்று சொல்லப்படுகிறது. ஒரு நீதித் தொகுப்பு நூல் தான் இது. 'மோசே' என்பவர் இயற்றியதாகக் கூறப்படும் 'பஞ்சாகமம்' (Pentateuch) என்னும் நூலிலுள்ள நீதிகளும், எழுதப்படாமல் வாய்மொழியாகவே வழங்கப்பட்ட 'அலாக்கா' (Halakah) எனப்படும் நீதிகள் பலவும், இன்னும் சிற்சில நீதிகளும் இந் நூலில் தொகுக்கப்பட்டுள்ளன. எபிரேய மொழியின் முதல் தொகை நூலாக இதனைக் கருதலாம். ஆயினும் சிறந்த பல்வேறு பாடல்களின் தொகுப்பு நூலாக இதனை எண்ண முடியாதன்றோ?

கிரீக், சம்சுகிருதம், தமிழ் ஆகியவை போலவே எபிரேயமும் தொன்மைப் பெருமையுடைய மொழியாதலின், இம் மொழியிலும் 'ஒரு சோறு பதம்' பார்க்க வேண்டிய கட்டாயம் ஏற்பட்டது.

**எ. சீனத் தொகை நூல்கள்**

உலகின் மிகப் பெரிய நாடாகிய சைனாவில் வழங்கப் படுவதும், மிகவும் தொன்மையானதும், பிற மொழிகளைவிட மிகுந்த எண்ணிக்கையில் நூல்களைப் பெற்றிருப்பதும் ஆகிய சீன மொழியை விட்டுவிடுவது ஒரு குறைபாடாகிவிடும். தமிழ் நூல் தொகுப்புக் கலைபற்றி நாம் மேற்கொண்டிருக்கும் ஆராய்ச்சிக்கு, சீனத் தொகைநூல்கள் பற்றிய குறிப்பும் உதவி செய்யும். சீன மொழியில் எத்தனையோ தொகை நூல்கள் தோன்றியிருக்கக் கூடும். மாதிரிக்காக ஈண்டு ஒரு சிலவற்றை எடுத்துக் கொள்வோம்:—

கி.மு. 551 முதல் கி.மு. 479 வரை உயிர் வாழ்ந்த கன்பூஷியஸ் என்னும் தத்துவப் பேரறிஞர், வேதங்கள் போல் சிறப்பாக மதிக்கப்பெற்ற பழைய சீனநூல்களையெல்லாம் திரட்டி, ஆறு பாகங்களாக வகுத்துத் தொகுத்தார். இந்த ஆறு தொகைகளும் பிற்காலத்தில் குறைத்தும் கூட்டியும் பல மாறுதல்கள் செய்யப்பெற்று, தற்போது பதின்மூன்று பாகங்களாக வகுக்கப்பட்டுள்ளன. இந்தப் பதின்மூன்று தொகுதிகளுக்கும் விளக்கவுரைகள் பல உள்ளன. கன்பூஷியசின் தொகை

நூல்கள், பல பாடல்களின் தொகுப்பு நூல்கள்போல் இல்லாமல், பல நூல்களின் திரட்டாக உள்ளன.

கன்பூஷியஸ் திரட்டிய நூல்களுக்குப் பிற்காலத்தில் எழுந்த சீன நூல்கள், மஞ்சு அரசமரபைச் சார்ந்த 'சியென்-லுங்' (Chien - Lung-1736 – 96) என்னும் சீனப் பேரரசனின் ஆதரவில், பதினெட்டாம் நூற்றாண்டின் இடையில், நான்கு பாகங்களாகத் தொகுக்கப் பெற்றன. இவை, நால்வகைத் தொகைநூல்கள் என்று பெயர் வழங்கப் பெறுகின்றன.

1875-இல், 'போ-த்சு-ச்சுவான்-ஷீ- (Po-Tzu-Chuan-Shu') என்னும் நூல் தொகுக்கப் பெற்றது. இது, பழைய சீன மெய்யுணர்வுத் துறை (தத்துவத் துறை) பற்றியதாகும்.

இவ்வாறாகக் காலந்தொறும் சீனமொழியிலும் பல தொகைநூல்கள் தோன்றி வளர்ந்து வந்தன.

## உலகப் பொதுத் தொகை நூல்கள்

இதுகாறும், பழம் பெரு மொழிகள் என்னும் காரணத்தால், கிரீக், இலத்தீன், சம்சுகிருதம், எபிரேயம், சீனம் ஆகிய ஐந்து மொழிகளிலுள்ள தொகைநூல்கள் பற்றியும், பிற்பட்டவை யாயினும் இன்று உலகில் பேரரசு செலுத்துவதாலும், எதிர்கால உலக மொழிகளாய் விளங்கப் போகின்றமையானும் பிரெஞ்சு, ஆங்கிலம் என்னும் இரு மொழிகளின் தொகை நூல்கள் பற்றியும் ஒரு சிறிது ஆய்ந்தோம். இவை போலவே, இத்தாலி, செர்மனி. ரஷ்யன், துருக்கி, அரபு, பாரசிகம், ஜப்பான் முதலிய பல்வேறு மொழிகளிலும் தொகை நூல்கள் பல தோன்றி வளர்ந்து வருகின்றன. எல்லாவற்றையும் பற்றி எழுதப்புகின் எல்லை கடந்து போகும். இன்னும் கேட்டால், உலக மொழிகள் பலவற்றிலும் உள்ள பல்வேறு இலக்கியங்களையும் பற்றித் தொகுத்து விளக்கும் உலகப் பொதுத்தொகை நூல்கள் சிலவும் இன்று எழுந்துள்ளன. எடுத்துக்காட்டாக, 'ஃபிலோ எம்.பக்'(Philo M.Buck, Jr.) என்பவரால் உருவாக்கப் பட்டதும், நியூயார்க் மாக்மில்லன் நிறுவனத்தால் அமெரிக்காவில் வெளியிடப்பட்டதுமாகிய, 'An Anthology of World

Literature' என்னும் உலக இலக்கியப் பொதுத் தொகை நூலைக் குறிப்பிடலாம்.

எனவே, இந்தத் தலைப்பை இம்மட்டோடு நிறுத்தி, உலக மொழிகள் பலவற்றிலுள்ள பல தொகை நூல்களைப் பற்றித் தெரிந்து கொண்டதனால் உண்டான தெளிவை ஒரு துணை யாகக் கையிருப்பில் வைத்துக்கொண்டு, 'தமிழ் மொழியில் நூல் தொகுப்புக் கலை' என்னும் அடுத்த தலைப்பிற்குள் புகுவோமாக!

---

# 3. தமிழ்மொழியில் நூல்தொகுப்புக் கலை

நூல் தொகுப்புக் கலை

முற்கூறிய உலகப் பழம் பெரு மொழிகளைப் போலவே தொன்மைச் சிறப்பும் உயர்தனிச் செம்மையும் உடைய தமிழ் மொழியிலும் அன்றுதொட்டு இன்றுவரை தொகை நூல்கள் தோன்றிப் பெருகி வருகின்றன. தமிழ் நூல் தொகுப்புக்கலை (Tamil Anthology) மிகவும் செழிப்பு உடையது; தரத்தாலும் அளவாலும் பரந்துபட்ட வளமுடையது; பன்னிரண்டாம் நூற்றாண்டிலேயே நூல் தொகுப்புக் கலைக்கு இலக்கணம் கூறும் அளவுக்கு வளர்ச்சி பெற்றது.

ஆம்! பன்னிரண்டாம் நூற்றாண்டில் இயற்றப்பட்டதாகக் கூறப்படும் 'தண்டியலங்காரம்' என்னும் செய்யுள் அணியிலக் கணத் தமிழ் நூலில், செய்யுள் தொகுப்புக்கலைக்கு இலக்கணம் கூறப்பட்டுள்ளது. அது வருமாறு:—

''தொகை நிலைச் செய்யுள் தோன்றக் கூறின்
ஒருவர் உரைத்தவும் பல்லோர் பகர்ந்தவும்
பொருள் இடம் காலம் தொழில் என நான்கினும்
பாட்டினும் அளவினும் கூட்டிய வாகும்''

என்பது தண்டியலங்காரம்—பொதுவணியியல் (5) நூற்பா. தண்டியலங்காரத்திற்குப் பழைய உரை ஒன்றுள்ளது. உரை யாசிரியர் பெயர் சரிவரத் தெரியவில்லை. இந்த நூற்பாவுக்கு உரிய அந்தப் பழைய உரைப்பகுதி வருமாறு:—

''(இதன் பொருள்) தொகைநிலைச் செய்யுள் என்பதனை விளங்கச் சொல்லின், ஒருவரால் உரைக்கப்பட்டுப் பல பாட்டாய் வருவனவும், பலரால் உரைக்கப்பட்டுப் பல பாட்டாய் வருவனவுமால், அவை பொருளால் தொகுத்த பெயர் பெற்றனவும், இடத்தால் தொகுத்த பெயர் பெற்ற னவும், காலத்தால் தொகுத்த பெயர் பெற்றனவும், தொழி

லால் தொகுத்த பெயர் பெற்றனவும், பாட்டால் தொகுத்த பெயர் பெற்றனவும், அளவால் தொகுத்த பெயர் பெற்றனவும் (என்றவாறு).

அவற்றுள், ஒருவரால் உரைக்கப்பட்டது—திருவள்ளுவப் பயன்; பலரால் உரைக்கப்பட்டது - நெடுந்தொகை. இஃது எல்லாத் தொகைக்கும் பொதுவிலக்கணம். பொருளால் தொகுத்தது - புறநானூறு. இடத்தால் தொகுத்தது-களவழி நாற்பது. காலத்தால் தொகுத்தது – கார் நாற்பது. தொழி லால் தொகுத்தது-ஐந்திணை. பாட்டால் தொகுத்தது-கலித் தொகை. அளவால் தொகுத்தது – குறுந்தொகை. இவை சிறப் பிலக்கணம்.

'கூட்டிய' என்ற விதப்பான், இவ் வறுவகையானுமன்றிப் பிறவற்றாற் பெயர்பெற்று வருவனவு முளவேல், அவையுங் கொள்க—''

மேலுள்ள நூற்பாவாலும், பழைய உரைப் பகுதியாலும் அறிய வேண்டுவன பல உள; அவை வருமாறு:—

(1) பலர் பாடல்களின் தொகுப்பே 'தொகைநூல்' எனப் படும் என்பதென்றில்லை; ஒருவர் பாடிய பாடல்களின் தொகுப்பும் தொகைநூல் எனப்படும் என்னும் செய்தி அறியப் படுகிறது. ஆனால், ஒருவர் பாடிய பாடல்கள், ஒன்றோ டொன்று தொடர்பின்றித் தனித்தனிக் கருத்து உடையதாக இருக்க வேண்டும். ஒன்றோடொன்று தொடர்பு கொண்டிருக்கு மாயின், அத்தகைய நூல் தொகை நிலை என்று சொல்லப் படாமல், 'தொடர்நிலை' என்று பெயர் பெறும்—என்று தண்டியலங்காரம் அடுத்த நூற்பாக்களில் அறிவித்துள்ளது. ஈண்டு இராமலிங்கத் தம்பிரான் அவர்களால் எழுதப் பட்டுள்ள குறிப்புரையில், 'தொகை நிலைச் செய்யுளாவது – ஒரு செய்யுளோடு மற்றொரு செய்யுளுக்குத் தொடர்பு யாது மின்றித் தனித்தனியே ஒரு பொருள் உணர்த்துஞ் செய்யுள்கள் பல தொகுக்கப்பட்ட நூல்' என்று கூறப்பட்டிருப்பதும் கருதற் பாலது.

பன்னிரண்டாம் நூற்றாண்டில் தண்டியலங்காரம் என்னும் தமிழ் நூலில் சொல்லப்பட்டுள்ள இந்தக் கருத்து, மேற்

கொண்டு ஏழு நூற்றாண்டுகள் தள்ளி இருபதாம் நூற்றாண்டில் வெளியிடப்பட்ட Encyclopaedia Britannica' என்னும் ஆங்கிலக் கலைக்களஞ்சிய நூலிலும் சொல்லப்பட்டுள்ளது. அந்தப் பகுதி வருமாறு:—

*ANTHOLOGY, a collection of short pieces or extaacts from different authors, especially in verse, and usually of literary value.........and oecasionally of an author.........."

'an author' என, ஓராசிரியர் பாடல்களின் தொகுப்பையும் தொகை நூலென ஆங்கிலக் கலைக்களஞ்சியம் ஒருவாறு ஏற்றுக் கொண்டுள்ளது. இந்த விதி, சம்சுகிருத மொழித் தொகை நூலுக்கும் விலக்கன்று. கிருஷ்ணமாச்சாரியார் (M. Krishnamachariar. M.A.,M.L., Ph.,D., Member of the Royal Asiatic Society of London) என்னும் வடமொழி வல்லுநர், தாம் எழுதிய, 'History of Classical Sanskrit Literature' என்னும் நூலில் (Chapter XV - Section I - Page: 384) வடமொழித் தொகை நூலைப்பற்றிக் குறிப்பிடுகையில்.

..."There May be the Composition of one author or selections from other authors." என்று கூறியிருப்பதும்—Composition of one author என்றுள்ள பகுதியும் ஈண்டு ஒப்பு நோக்கற்பாலது. ஒருவர் பாடல்களைக் கொண்ட தொகை நூலுக்குச் 'சங்காதம்' என்றும், பலர் பாடல்களைக் கொண்ட தொகை நூலுக்குச் 'சோகம்' என்றும், 'காவ்யதர்சம்' என்னும் வடமொழி நூலில் பெயர்கள் குறிப்பிடப்பட்டிருப்பதும் ஈண்டு நினைவுகூரத் தக்கது.

(2) தண்டியலங்காரப் பழைய வுரை, ஒருவரால் உரைக்கப்பட்ட தொகை நூலுக்கு எடுத்துக்காட்டாகத் 'திருவள்ளுவப் பயன்' என்னும் நூலைக் குறிப்பிட்டுள்ளது.

திருவள்ளுவப் பயன் என்பது திருவள்ளுவர் இயற்றிய திருக்குறளின் மற்றொரு பெயராகும். எனவே, இந்த உரையாசிரியரின் கருத்துப்படி நோக்கின் திருக்குறளும் ஒரு தொகை நூல் ஆகிறது. இது சிலருக்கு வியப்பாக அல்லது மருட்சியாகத்

*Encyclopaedia Britannica—Volume 2 (1955)—page. 29

தோன்றலாம். ஒன்றோடொன்று தொடர்பில்லாத பல நீதி களைப் பல தலைப்புகளின் கீழ்த் தனித்தனியே கூறுவதாலும் மூவேறு வகைப்பட்ட அறம்-பொருள்-காமம் என்னும் முப் பொருள்களின் தொகுப்பாயிருப்பதாலும் திருக்குறலும் ஒரு தொகைநூல் எனப்பட்டது போலும்! அங்ஙன மெனில், இது போன்றன பிறவும் தொகை நூல்கள் எனப்படலாம்.

(3) அடுத்து. இந்த உரையில் குறிப்பிட்டுக் காட்டப்பட் டுள்ள-பொருளால் பெயர் பெற்ற புறநானூறும், பாட்டால் பெயர் பெற்ற கலித்தொகையும், அளவால் பெயர் பெற்ற குறுந் தொகையும் பலர் பாடல்களின் கலவைத் தொகுப்பா தலின், இந்நூல்கள் பற்றி எவருக்கும் எவ்வித ஐயப்பாடும் எழ இடமில்லை. ஆனால். ஒவ்வொரு புலவரால் இயற்றப்பட்டன வாகிய களவழிநாற்பதும், கார் நாற்பதும், ஐந்திணை ஐம்பது, ஐந்திணை எழுபது-திணைமொழி ஐம்பது - திணைமாலை நூற்றைம்பது-என்னும் ஐந்திணை பற்றிய நூல்கள் நான்கும் தொகைநூல்களாகுமா என்ற ஐயம் ஒரு சிலருக்குத் தோன்ற லாம்.களவழி நாற்பது என்னும் நூல்,களம்என்னும் குறிப்பிட்ட ஓர் இடத்தைப் பற்றிய நாற்பது பாடல்களின் தொகுப்பாதலா லும், கார் நாற்பது என்னும் நூல், கார் காலம் என்னும் குறிப் பிட்டஒரு காலத்தைப் பற்றிய நாற்பது-பாட்டுக்களின் தொகுப் பாதலாலும்,- ஐந்திணை நூல் ஒவ்வொன்றும், இருத்தல் (முல்லை)-புணர்தல் (குறிஞ்சி) - ஊடல் - (மருதம்)- பிரிதல் (பாலை)-இரங்கல் (நெய்தல்)-என்னும் ஐந்திணைத் தொழில் கள் பற்றிய பாடல்களின் தொகுப்பாதலாலும் தொகை நூல் கள் எனப்பட்டன போலும்! அங்ஙனமெனில், ஒரே புலவரால் பாடப்பட்டிருப்பினும் குறிப்பிட்ட ஒரு பொருள் பற்றிய பல உதிரிப் பாடல்களின் தொகுப்பும், பல பொருள்கள் பற்றிய பல உதிரிப் பாடல்களின் தொகுப்பும் ஆக உள்ளன வெல்லாம், தொகை நூல்கள் எனப்படலாம் போலும்!

(4) மேற்காட்டியுள்ள பழைய உரைப் பகுதியினிடையே, '...இஃது எல்லாத் தொகைக்கும் பொது விலக்கணம்...... இவை சிறப்பிலக்கணம்' என்னும் இருவேறு தொடர்கள் இருப் பதைக் காணலாம். அஃதாவது,—எந்தத் தொகை நூலும்,

ஒருவர் பாடல்களின் தொகுப்பாகவோ, அல்லது பலர் பாடல்களின் தொகுப்பாகவோ இருக்கும், இது தொகை நூலின் பொது இலக்கணம். அடுத்து, ஒரு தொகைநூல், ஒரு பொருளையோ-இடத்தையோ-காலத்தையோ-தொழிலையோ-பாவின வகையையோ - அளவையோ அடிப்படையாகக் கொண்டு தொகுக்கப் பெறும்; இது தொகை நூலின் சிறப்பிலக்கணம்.

(5) பழைய உரைப்பகுதியின் இறுதியில், "கூட்டிய என்ற விதப்பான், இவ் வறுவகையானு மன்றிப் பிறவற்றாற் பெயர் பெற்று வருவனவு முளவேல் அவையுங் கொள்க' என்னும் செய்தி இருக்கக் காணலாம். எனவே, மேற்கூறிய ஆறு வகையே யல்லாமல், குறிப்பிட்ட கடவுளரையோ- பெரியாரையோ - மொழியையோ-இலக்கியத்தையோ - கலையையோ-கொள்கையையோ - பண்பையோ - ஒரு சுவையையோ - இன்ன பிறவற்றையோ அடிப்படையாகக் கொண்டும், இவற்றுள்ளேயே ஒன்றுக்கு மேற்பட்ட பலவற்றை ஒருசேர அடிப்படையாகக் கொண்டும் நூல்கள் தொகுக்கப்பெறும் என்பது புலனாகும். இன்னும், குறிப்பிட்ட ஒரே பொருள் - இடம்-காலம்-தொழில்-பாவினம் அளவு-கடவுளர் - பெரியோர் - மொழி -இலக்கியம் - கலை - கொள்கை - பண்பு - சுவை-பற்றி மட்டும் அல்லாமல், ஒத்த பல பொருள்களைப் பற்றிய தொகுப்பும், பல இடங்களைப் பற்றிய தொகுப்பும், பல காலங்களைப் பற்றிய தொகுப்பும், பல தொழில்களைப் பற்றிய தொகுப்பும், பல பாவினங்கள் பற்றிய தொகுப்பும், கடவுளர் பலரைப் பற்றிய தொகுப்பும், பெரியார்கள்-அறிஞர்கள்-அரசர்கள் முதலியோர் பலரைப் பற்றிய தொகுப்பும், பல மொழிகளைப் பற்றிய தொகுப்பும் பல இலக்கியங்களைப்பற்றிய தொகுப்பும். பல கலைகளைப் பற்றிய தொகுப்பும், பல கொள்கைகளைப் பற்றிய தொகுப்பும், பல பண்புகளைப் பற்றிய தொகுப்பும், பல நீதிகளைப் பற்றிய தொகுப்பும், பல சுவைகளைப் பற்றிய தொகுப்பும், இன்ன பிறவற்றைப் பற்றிய தொகுப்புக்களும் தனிதனித் துறைத் தொகை நூல்களாக மதிக்கப்பெறும் என்றும் நுனித்துணரலாம்.

தண்டியலங்காரம் என்னும் தமிழ் நூல், பன்னிரண்டாம்

நூற்றாண்டில் கூறிய இந்தக் கருத்துக்களை ஒத்துக்கொண்டது போல, 'Encyclopaedia Britannica' (Volume 2-Page: 29-1955) என்னும் ஆங்கிலக் கலைக்களஞ்சியம்.

"An Anthology may consist of the best or the most representative work of a period or of a literary kind, and occasionally of an author, or it may consist of pieces all related to a given theme or subject."—

என்று கூறியிருப்பதும். 'Encyclopaedia Americana' (Volume 2. Page 17-1966) என்னும் அமெரிக்கக் கலைக் களஞ்சியம்.

"Anthology is the name given originally to a collection of short, unconnected Greek poems from many sources or to its various enlargements. In modern times the term has been extended to any collection of pieces of miscellaneous authorship, in prose or verse, chosen to represent a language, a literature, a country, a period or an idea."—

என்று கூறியிருப்பதும், 'Larousse Du XXe Siecle' என்னும் பிரெஞ்சுக் கலைக் களஞ்சியம் (Volume 6-1928).

"...... Elle contient des epigrammes votives, funeraires descriptives erotiques, satiriques morales etc ......"

எனக் கூறியிருப்பதும் ஈண்டு ஒப்பிட்டு உணர்ந்து மகிழ்தற்கு உரியனவாகும்.

(6) தண்டியலங்காரம் தொகை நூலுக்குக் கூறியுள்ள இலக்கணத்தை ஊன்றி நோக்குங்கால் ஓர் உண்மை புலப்படுகிறது. 'இலக்கியம் கண்டதற்கு இலக்கணம் இயம்பல்' என்றபடி இதற்குமுன் தமிழில் உள்ள தொகை நூல்களைத் தண்டியாசிரியர் நினைவில் வைத்துக்கொண்டு இந்த இலக்கணத்தைக் கூறியுள்ளார் என்னும் உண்மைதான் அது. எனவே, பன்னிரண்டாம் நூற்றாண்டிலேயே தொகை நூலுக்கு இலக்கணம் கூறும் அளவிற்கு முன்னமேயே தமிழில் பல்வேறு வகைத் தொகை நூல்கள் பல்கிப்பரவியிருந்தமை புலப்படும்.

இவ்வாறாக, தண்டியலங்காரத்தாலும் அதன் பழைய உரைப் பகுதியாலும், நூல் தொகுப்புக் கலையைப் பற்றிய பல

நுணுக்கங்கள் அறியப்படுகின்றன. இருபதாம் நூற்றாண்டில் ஐரோப்பிய - அமெரிக்கக் கலைக்களஞ்சியங்கள் கூறும் விளக்கத்தை, அன்றே ஒரு தமிழ் நூல் அறிவித்திருப்பது பெருமைக்கு உரியதாகும்.

இத்துணைப் பொருமைக்கு உரிய தமிழ் மொழியில், அன்று தொட்டு இன்று வரை, நூற்றுக் கணக்கில் அன்று, ஆயிரக் கணக்கில் தொகை நூல்கள் தோன்றியுள்ளன.இந்தஎண்ணிக்கை வியப்பளிக்கலாம்; ஆனால் உண்மை. இந்தத் தொகை நூல்களைப் பின்வருமாறு பல்வேறு பிரிவுகளாகப் பிரிக்கலாம். அவை வருமாறு:—

1. தனித்தனிப் பாடல் தொகுப்பு

புறநானூறு, பட்டினத்தார் பாடல் முதலிய நூல்களைப் போல, தனித்தனிப் பாடல்களின் சேர்க்கையாகிய தொகை நூல்கள், இந்த முதல் பிரிவில் அடங்கும். இதிலேயே இரண்டு உட்பிரிவுகள் உள்ளன. அவை:-புறநானூறு, அகநானூறு முதலிய தொகை நூல்கள் பலர் பாடல்களின் தொகுப்பாகும்-. இத்தகையன ஒரு வகை. இவற்றிற்குப் 'பன் மலர் மாலை' எனப் பெயர் தரலாம். அடுத்து. -பட்டினத்தார் பாடல்,- பாரதிதாசன் கவிதைகள் முதலிய தொகை நூல்கள், ஒருவரே பல நேரங்களில் பல பொருள்கள் பற்றிப் பாடிய பாடல்களின் தொகுப்பாகும். இத்தகையன இரண்டாவது வகை. இவற்றை 'தனி மலர் மாலை' என வழங்கலாம். பன் மலர் மாலை என்பது, பல இன மலர்களால் தொகுக்கப்பட்டது. தனி மலர் மாலை என்பது, ஓர் இன மலர்களால் தொகுக்கப்பட்து.

2. தனித்தனி நூல் திரட்டு

ஐங்குறு நூறு. குமரகுருபரர் பிரபந்தத்திரட்டு முதலிய நூல்களைப் போல, தனித்தனி நூல்கள் பலவற்றின் சேர்க்கையாகிய தொகைகள் - திரட்டுகள் இரண்டாம் பிரிவில் அடங்கும். இதிலும் இரண்டு உட்பிரிவுகள் உள. அவையாவன:— ஐங்குறுநூறு என்பது, ஓரம்போகியார் என்னும் புலவர் பாடிய நூறு பாடல்கள் கொண்ட 'மருதம்' என்னும் சிறு நூலும், அம்மூவனார் பாடிய நூறு பாடல் கொண்ட 'நெய்தல்' என்னும் சிறு நூலும், கபிலர் பாடிய நூறு பாடல் கொண்ட 'குறிஞ்சி'

என்னும் சிறு நூலும், ஓதலாந்தையார் பாடிய நூறு பாடல் கொண்ட 'பாலை' என்னும் சிறு நூலும், பேயனார் பாடிய நூறு பாடல் கொண்ட 'முல்லை' என்னும் சிறு நூலும் ஆகிய ஐந்து நூல்களின் திரட்டாகும். ஐங்குறு நூறு என்னும் தொகை நூலை, ஐந்து தனித்தனி நூல்களின் திரட்டு என்று கூறுவது. சிலருக்கு – இல்லை-பலருக்குப் புதுமையாகவும் வியப்பாகவும் இருக்கலாம். ஆனால் உண்மை இதுதான். இது பின்னர்த்தனித் தலைப்பின்கீழ் ஆராயப் பெறும். எனவே, ஐங்குறு நூறு ஒரு திரட்டாகும். 'பதினோராந் திருமுறை' என்னும் நூலும் இது போன்றதே. திருவாலவாயுடையார் முதல் நம்பியாண்டார் நம்பி ஈறாக உள்ள பாவலர்கள் பன்னிருவர் இயற்றிய நாற்பது சிறுசிறு நூல்களின் திரட்டே பதினோராந் திருமுறையாகும். பலர் நூல்களின் திரட்டாகிய இத்தகையன, திரட்டு வகைகள் இரண்டனுள் முதல் வகையாகும். இவற்றிற்குப் 'பன் மாலைத் திரள்' எனப் பெயர் வழங்கலாம்.

அடுத்து,-குமரகுருபரர் பிரபந்தத் திரட்டு' என்பது, குமர குருபரர் அடிகளார் இயற்றிய பல நூல்கள் சேர்ந்த ஒரு திரட்டு நூலாகும். 'சிவப்பிரகாசர் பிரபந்தத் திரட்டு என்பது சிவப்பிரகாச அடிகளார் இயற்றிய பல நூல்கள் இணைந்த ஒரு திரட்டு நூலாகும். ஒருவர் நூல்களின் திரட்டாகிய இத்தகையன,திரட்டு வகைகள் இரண்டனுள் இரண்டாவது வகையாகும் இவற்றிற்குத் 'தனி மாலைத்திரள்' என்னும் பொதுப்பெயர் வழங்கலாம்.

### 3. பாடலும் நூலும் கலப்பு

தனித்தனிப் பாடல்கள் பலவும், தனித்தனி நூல்கள் சிலவும் அல்லது பலவும் கலந்த தொகைநூல்களை மூன்றாம் பிரிவாகச் சொல்லலாம். இதற்குப் பலரும் அறிந்த எடுத்துக் காட்டு ஒன்றுவேண்டுமானால்,'பாரதியார் கவிதைகள் என்னும் நூலைக் கூறலாம். இதில், பல்வேறு பொருள்கள் பற்றிப் பாரதியார் பாடிய உதிரிப் பாடல்கள் பலவும், பாஞ்சாலியின் சபதம் – கண்ணன் பாட்டு – குயிற் பாட்டு – சுய சரிதை - புதிய ஆத்தி சூடி முதலிய சிறு நூல்கள் சிலவும் தொகுக்கப்பட்டிருப்பதைக் காணலாம். இத்தகைய கலப்புத் தொகை நூல்களுக்கு 'மலரும்

மாலையும் என்னும் பொதுப் பெயர் சூட்டலாம். இத்தகைய நூல்களிலும், பலர் பாடல்கள் - நூல்களின் கலப்பு, ஒருவர் பாடல்-நூல்களின் கலப்பு என இரு வகைகள் உண்டு. இவ் விருவகைத் தொகை நூல்களும் தமிழில் நிரம்ப உள்ளன. அவை பின்னர் உரிய பகுதியில் இடம் பெறும்.

தமிழில் உள்ள தொகை நூல் ஒவ்வொன்றும் மேற்கூறி யுள்ள பிரிவுகளுள் ஏதாவது ஒன்றினைச் சார்ந்ததாயிருக்கும். மற்றும், முன்னர்த் தண்டியலங்காரத்தின் துணைகொண்டு எடுத்துக்காட்டப்பட்டுள்ள தொகை நூல் இலக்கண விளக்கப் படி, குறிப்பிட்ட பொருள், இடம், காலம், பண்பு, தொழில், அளவு, பாவினம், இலக்கியம், கலை, சுவை, கொள்கை, மக்கள், கடவுளர் முதலிய தலைப்புக்களுள் ஒன்றையோ பல வற்றையோ அடிப்படையாகக் கொண்டு தொகுக்கப் பெற்றி ருக்கும்.

இனி, அடுத்தபடியாக, தமிழ்த் தொகை நூல்களை, முற் காலத் தொகை நூல்கள், இடைக்காலத் தொகை நூல்கள், பிற்காலத் தொகை நூல்கள், இருபதாம் நூற்றாண்டுத் தொகை நூல்கள் என்னும் பெரும் பகுதிகளின் கீழ் விரிவாக விளக்கமாகக் காணலாம். அந்தந்தப் பகுதியிலும் சில உட் பிரிவுகள் இருக்கும். ஒவ்வொரு தொகை நூலும் எந்தப் பொருளை அடிப்படையாகக் கொண்டு தொகுக்கப் பெற்றது என்ற விவரமும் கிடைக்கும்.

மூவாயிரம் ஆண்டுக்கு முற்பட்டதாகச் சொல்லப்படும் தொல்காப்பியத்திலேயே,* உரைநடை நூல்கள் நான்கு வகைப் படும் என்று கூறப்பட்டிருப்பினும்,தொல்காப்பியர் காலத்திற்குப் பின் தமிழில் தனி உரைநடை நூல்கள் எழுதப்பட்டதாகத் தெரியவில்லை. தொல்காப்பியத்துக்கு முன்னோ பின்னோ எழுதப்பட்டிருப்பினும் ஓர் உரைநடை நூலும் கிடைத்திலது. தமிழகத்திற்கு ஐரோப்பியர் வந்தபின்பே தமிழில் தனி உரை நடை நூல்கள் தோன்றத் தொடங்கின. இன்று பெரிய அளவில் தமிழில் உரைநடை அமைந்துள்ளது. ஐரோப்பிய

---

*தொல்காப்பியம்-பொருளதிகாரம்-செய்யுளியல் நூற்பா 166.

மொழிகளில் பாடல் தொகைநூல்களைப் போலவே உரை நடைத் தொகைநூல்களும் தொகுக்கப்பட்டிருப்பினும், இந்த நூலில் நாம் உரைநடைத் தொகுப்புக்களைத் தொகை நூல் களாகச் சேர்த்துக் கொள்ளவில்லை. ஆனால், தொல்காப்பியம் சங்கநூல்கள் முதலிய இலக்கண - இலக்கிய நூல்களுக்குப் பழைய உரையாசிரியர்கள் எழுதியுள்ள உரைகள், செய்யுள் போன்ற தகுதியுடையனவாதலாலும், அவ்வுரைகளுக்கிடையே பல பாடல்கள் தொகுத்துத் தரப்பட்டிருப்பதாலும், இந்நூலில் பழைய உரையாசிரியர்களின் உரைநூற்கள் இடம் பெறும் ஒவ்வோர் உரைநூலையும் ஒவ்வொரு பாடல் தொகுப்பு நூலாகக் கொள்ளலாம்.

மற்றும், தண்டியலங்கார உரையாசிரியர், திருக்குறள் போன்றவற்றைத் தொகை நூல்கள் என்று கூறியிருப்பினும் அத்தகைய நூல்கள் எல்லாவற்றையும் தொகைநூல்களாக இங்கே எடுத்துக் கொள்ளவில்லை.

அன்றியும்,-முதல் வகுப்பிலிருந்து கலையிளைஞர் (B.A.) வகுப்பு வரையிலும் கற்றுத் தருவதற்காக இதுவரையும் ஆயிரக் கணக்கான தமிழ்ப்பாட நூல்கள் (Tamil Text Books) பல நிறுவனங்களாலும், அரசாங்கத்தாலும், பல்கலைக்கழகங்களா லும் தொகுத்து வெளியிடப்பட்டுள்ளன. ஒவ்வொரு தமிழ்ப் பாட நூலையும் ஒவ்வொரு தொகைநூலாகக் கூறலாம். இந்தத் தமிழ்ப் பாடநூல்களையும் தொகைநூல்களாக நாம் ஈண்டு எடுத்துக் கொள்ளவில்லை.

பண்டு எல்லா நூல்களுமே செய்யுள் நடையிலேயே எழுதப்பட்டன. இந்த நடைமுறை, வேறு பழைய மொழிகளி லும் பின்பற்றப்பட்டு வந்துள்ளது. எந்த நூலையும் செய்யுள் நடையில் எழுதினால், நெட்டுருச் செய்வதற்கும் நினைவில் நிறுத்துவதற்கும், சுவைத்து இன்புறுவதற்கும் தக்கவாய்ப்பாக இருக்கும் என்று கருதி அவ்வாறு செய்யப்பட்டிருக்கலாம். மேலும், மக்கள் உரையாடும் உரைநடையில் எழுதுவதிலும் செய்யுள் நடையில் எழுதுவதே கற்றறிந்த புலவர்கட்குப் பெருமையாகும் என்றும் கருதப்பட்டிருக்கலாம். இந்த அடிப்

படையில், தமிழில் எல்லாத்துறை நூல்களுமே-எல்லாக் கலை நூல்களுமே செய்யுள் நடையில் எழுதப்பட்டது இயல்பே. எனவே, கணக்கு, மருத்துவம், சோதிடம், அகர வரிசை (அகராதி), மொழியியல் (இலக்கணம்) முதலிய அனைத்தும் தமிழில் செய்யுள்நடையிலேயே உள்ளன. ஆகவே, சுவைத்து இன்புறுங் கூறு சிறிது குறைவாயிருப்பினும், இத்தகைய துறை களைச் சேர்ந்த பாடல்களின் தொகுப்பு நூல்களும் தொகை நூல்களாக இந்நூலில் சேர்த்துக்கொள்ளப்பட்டுள்ளன.

**நூல் தொகைப் பட்டியல்**

ஒரு மொழியில் உள்ள நூல்களின் பெயர்களைக் காலவாரி யாகவோ அல்லது வேறு வகையாகவோ வரிசைப் படுத்தித் தொகுக்கப்பட்டுள்ள பட்டியல், 'நூல் தொகைப் பட்டியல்' எனப்படும். இதனை ஆங்கிலத்தில் 'Bibliography (பிபிளியோ கிராஃபி) என்கின்றனர். நூலின் பெயருடன், நூலின் இயல்பு, ஆசிரியர் பெயர், அச்சான ஆண்டு – இடம்-அச்சிட்டவர்-வெளி யிட்டவர் பெயர் முதலிய சிறு விவரங்கள் கொடுப்பதும் உண்டு; எனவே, இதனை, 'நூல் விவர அட்டவணை, என்றும் அழைப்பர். 'ஜான் மர்டாக்' என்னும் அறிஞர், தமிழில் அச் சாகியிருந்த நூல்களின் விவர அட்டவணை ஒன்றை கி.பி. 1865 – ல் வெளியிட்டார். மற்றும், தமிழ் மொழி-இலக்கியம் பற்றி நூற்றொரு பக்கங்கள் கொண்ட ஓர் ஆராய்ச்சி முக வுரையும் இவர் இந்த நூலுக்கு முன்னால் அமைத்துள்ளார். தமிழ் நூற்றொகைப் பட்டியலில் இதனை முதலாவதாகக் கூறலாம். 'கர்னல் மெக்கன்சி' என்னும் பெரியார், 18ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில், தென் நாட்டின் பல இடங்களில் இருந்த பழைய தமிழ்ச் சுவடிகள் பலவற்றைத் தேடிக் கண்டு பிடித்துக் கொணரச் செய்து பட்டியல் தொகுத்து வைத்தார். மனோன்மணிய ஆசிரியர் சுந்தரம்பிள்ளையவர்களும் 'நூற் றொகை விளக்கம்' என்னும் பெயரில், பட்டியல் நூல் ஒன்று வெளியிட்டார். இக் காலத்தில் சில நூல் நிலையங்களும் இவ் வாறு வெளியிட்டுள்ளன. தமிழக அரசும் 'தமிழ் நூல் விவர அட்டவணை என்னும் பெயரில், அண்மைக் காலத்தில் பட்டி யல்கள் வெளியிட்டுள்ளது. இவையெல்லாம் 'நூல் தொகைப் பட்டியல்' (Bibliography) என்னும் பெயர் பெறும்.

**தொகை நூல் பட்டியல்:**

ஆனால், நாம் இந்த ஆராய்ச்சி நூலில் ஆயிரக்கணக்கில் தொகுத்துக் கொடுக்கவிருப்பது 'நூல் தொகைப்பட்டியல்' அன்று. நாம் கொடுக்கப் போவது 'தொகை நூல் பட்டியல்' ஆகும். அஃதாவது, - பல பாடல்களை ஒரு நூலாகத் தொகுத்துள்ள தொகை நூல்கள் பலவற்றை நாம் ஆராய்ந்தறிய இருக்கிறோம். எனவே, நூற் பெயர்த் தொகைக்கும் தொகை நூலுக்கும் உள்ள வேறுபாட்டை நன்கு உணர வேண்டும். வேண்டுமானால், நூல்தொகைப் பட்டியல்கள் பல நூற் பெயர்களின் தொகுப்பாயிருப்பதால், அவற்றையும் ஒருவகைத் தொகை நூல்களாக நாம் ஒருவாறு எடுத்துக் கொள்ளலாம்-அவ்வளவுதான்!

**தமிழ் நூல் தொகுப்புக் கலை**

அடுத்து, -இந்த ஆராய்ச்சி நூலுக்குத் 'தமிழ் நூல், தொகுப்புக் கலை' என்னும் பெயர் பொருந்துமாற்றைக் காண வேண்டும். இந்த பெயரின் இடையேயுள்ள 'நூல் தொகுப்பு என்னும் தொடருக்கு, 'நூலாகத் தொகுத்தல்' 'நூல்களைத் தொகுத்தல்' என இருவகையாகப் பொருள் கொள்ள வேண்டும். அகநானூறு-புறநானூறு போன்றவை பல உதிரிப் பாடல் களை நூலாகத் தொகுத்து உருவாக்கப் பட்டவை யாதலின், இன்னவை, 'நூலாகத் தொகுத்தல், என்னும் பொருளுக்கு உரியன. பதினோராந்திருமுறை, குமரகுருபரர் பிரபந்தத் திரட்டு போன்றவை, பல நூல்களைத் தொகுத்து உருவாக்கிய திரட்டுகள் ஆதலின், இன்னவை, 'நூல்களைத் தொகுத்தல்' என்னும் பொருளுக்கு ஏற்றனவாம். இந்த இருவகையான தொகைநூல்களும் நிரம்ப இடம் பெற்றிருப்பதால், இந்த ஆராய்ச்சி நூலுக்குத், 'தமிழ் நூல் தொகுப்புக்கலை' என்னும் பொதுவான பெயர் தரப்பட்டது.

**கலைக் களஞ்சியம்**

மற்றும், இந்த நூலில் ஏராளமான தொகை நூல்கள் இடம் பெற்றிருப்பதால், தமிழ் நூல் தொகுப்புக் கலை என்னும் பெயரோடு 'களஞ்சியம்' என்பதும் சேர்க்கப்பட்டுத் 'தமிழ் நூல் தொகுப்புக் கலைக் களஞ்சியம்' என்னும் பெயர் இந்நூலுக்குத் தரப்பட்டுள்ளது. ஆங்கிலத்தில் 'Encyclopaedia of Tamil Anthology' என்று சொல்லலாம்.

# 1. தொல்காப்பியத்துக்கு முன்

## [ தலைச் சங்க காலம் ]

இதுவரையும் முழுமையாகக் கிடைத்துள்ள தமிழ் நூல்களுள் மிகவும் முற்பட்டதான தொல்காப்பியம், ஏறக்குறைய மூவாயிரம் ஆண்டுகட்கு முன்னர் – அதாவது – கி.மு. பத்தாம் நூற்றாண்டுக்கு முன்னர் இயற்றப்பட்டதாக ஆராய்ச்சியாளரால் அறிவிக்கப்பட்டுள்ளது. தொல்காப்பியம் இலக்கியம் அன்று; ஓர் இலக்கண நூல். தொல்காப்பியம் – பொருளதிகாரத்தில், செய்யுள் இயற்றுவதற்கு இலக்கணம் கூறும் ‘செய்யுளியல்’ என்னும் ஒரு பகுதி உள்ளதென்றும், அந்தப் பகுதியில் ஆசிரியர் தொல்காப்பியர் தமக்கு முன்னாலேயே புலவர் பலர் செய்யுள் இலக்கண நூல்கள் இயற்றியிருப்பதாகப் பல இடங்களில் சுட்டிக் காட்டியுள்ளார் என்றும் முன்னர் ஓரிடத்தில் கூறியுள்ளோம். மற்றும், ‘இலக்கியம் கண்டதற்கு இலக்கணம்’என்றபடி, இந்த இலக்கண நூல்கள் தோன்றுவதற்கு முன்பே, தமிழில் பல செய்யுள்கள்; பல செய்யுள் நூல்கள் தோன்றியிருந்தன என்ற குறிப்பும் ஆங்கே கொடுக்கப்பட்டுள்ளது. அன்றியும்; முழுச் செய்யுள் நூல்கள் தோன்றுவதற்கு முன்பு, தனித்தனி உதிரிப்பாடல்களே தோன்றியிருக்க முடியும் என்ற செய்தியும் ஆங்கே அறிவிக்கப்பட்டுள்ளது. அங்ஙனமெனில்; தொல்காப்பியம் தோன்றுவதற்கு முன்பே இயற்றப்பட்ட பாடல்கள் எங்கே? பாடல் நூல்கள் எங்கே? இந்த வினாவிற்குத் தக்க விடை கிடைக்குமா?

தொல்காப்பியராலேயே கோடிட்டுக் காட்டப்பட்ட இலக்கண நூல்கள் எல்லாம் இல்லாது ஒழிந்தது போலவே இலக்கியங்களும் மறைந்து போயின. முழு முழு நூல்களே மறைந்து போயிருக்கின்ற நிலையில்; தனித்தனி உதிரிப்பாடல்களின் தலையெழுத்து என்னவாயிருக்க முடியும்; தொல்காப்பியர் காலத்திற்கு முன்பே உதிரிப் பாடல்களைஒருசிலராவது ஓலைச் சுவடிகளில் தொகுத்து எழுதி வைத்துத் தான் இருப்பர். திரட்டுக்கத்தின் அடிப்படையில். தெரிந்த பாடல்களைக் குறித்து வைக்காமல் இருந்திருக்க முடியாது. ஆனால், அத்தகைய

தொகுப்புக்கள் அழிந்து போய்விட்டிருக்க வேண்டும். இது குறித்து வேறு என்ன சொல்ல இருக்கிறது. ஆனாலும், ஏதோ சொல்ல முடியும் போல் தோன்றுகிறது.

தொல்காப்பியத்துக்கு முன்பே தோன்றிய பாடல்களும், தொகை நூல்களும் கிடைக்காமற்போயினும், அவற்றுள் சில வற்றின் பெயர்களையாவது அறிந்து கொள்வதற்கு உரிய தடயம் இறையனார் அகப்பொருள் உரையில் கிடைத் துள்ளது.' அதனை அறிவிக்கும் உரைப்பகுதி வருமாறு:

"தலைச் சங்கம், இடைச்சங்கம், கடைச்சங்கம் எனமூன்று சங்கம் இரீஇயினார் பாண்டியர்.

அவருள், தலைச்சங்கம் இருந்தார் அகத்தியனாரும் திரிபுர மெரித்த விரிசடைக் கடவுளும் குன்றெறிந்த முருகவேளும் முரிஞ்சியூர் முடிநாகராயரும் நிதியின் கிழவனும் என இத் தொடக்கத்தார் ஐந்நூற்று நாற்பத்து ஒன்பதின்மர் என்ப. அவருள்ளிட்டு நாலாயிரத்து நானூற்று நாற்பத்தொன்ப தின்மர் பாடினார் என்ப. அவர்களால் பாடப்பட்டன எத் துணையோ பரிபாடலும், முதுநாரையும், முதுகுருகும், களரியா விரையும் என இத்தொடக்கத்தன. அவர் நாலாயிரத்து நானூற்று நாற்பதிற்றியாண்டு சங்கம் இருந்தார் என்ப. அவர் களைச் சங்கம் இரீஇயினார் காய்ச்சினவழுதி முதலாகக் கடுங்கோன் ஈறாக எண்பத்தொன்பதின்மர் என்ப. அவருள் கவியரங் கேறினார் எழுவர் பாண்டியர் என்ப. அவர் சங்க மிருந்து தமிழராய்ந்தது கடல் கொள்ளப்பட்ட மதுரை என்ப அவர்க்கு நூல் அகத்தியம் என்ப.

இனி, இடைச்சங்க மிருந்தார் அகத்தியனாரும் தொல் காப்பியனாரும் இருந்தையூர்க் கருங்கோழி மோசியும் வெள் ளூர்க் காப்பியனும் சிறு பாண்டரங்கனும் திரையன் மாறனும் துவரைக் கோமாஆம் கீரந்தையும் என இத்தொடக்கத்தார் ஐம்பத்தொன்பதின்மர் என்ப. அவருள்ளிட்டு மூவாயிரத்து எழு நூறுவர் பாடினார் என்ப. அவர்களாற் பாடப்பட்டன கலி யும், குருகும், வெண்டாளியும், வியாழமாலை அகவலும் என இத்தொடக்கத்தன என்ப. அவர்க்கு நூல் அகத்தியமும்,

தொல்காப்பியமும், மாபுராணமும், இசை நுணுக்கமும், பூத புராணமும் என இவை. அவர் மூவாயிராது எழுநூற்றி யாண்டு சங்கமிருந்தார் என்ப. அவரைச்சங்கம் இரீஇயினார் வெண்டேர்ச் செழியன் முதலாக முடத்திருமாறன் ஈறாக ஐம்பத்தொன்பதின்மர் என்ப. அவருள் கவியரங்கேறினார் ஐவர் என்ப. அவர் சங்கமிருந்து தமிழாராய்ந்தது கபாட புரத்து என்ப. அக்காலத்துப் போலும் பாண்டியனாட்டைக் கடல் கொண்டது.

இனிக் கடைச் சங்கமிருந்து தமிழாராய்ந்தார் சிறு மேதாவியாரும் சேந்தம் பூதனாரும் அறிவுடையரனாரும் பெருங்குன்றூர்க் கிழாரும் இளந்திருமாறனும் மதுரை ஆசிரியர் நல்லந்துவனாரும் மதுரை மருதனிளநாகனாரும் கணக் காயனார் மகனார் நக்கீரனாரும் எனத் இத் தொடக்கத்தார் நாற்பத்தொன்பதின்மர் என்ப. அவருள்ளிட்டு நானூற்று நாற்பத்தொன்பதின்மர் பாடினார் என்ப. அவர்களாற் பாடப்பட்டன நெடுந்தொகை நானூறும் குறுந்தொகை நானூறும், நற்றிணை நானூறும், புறநானூறும் ஐங்குறு நூறும், பதிற்றுப்பத்தும், நூற்றைம்பது கலியும், எழுபது பரிபாடலும், கூத்தும், வரியும், சிற்றிசையும், பேரிசையும் என்று இத் தொடக்கத்தன. அவர்க்கு நூல் அகத்தியமும் தொல்காப்பியமும் என்ப. அவர் சங்கமிருந்து தமிழாராய்ந்தது ஆயிரத்து ஐம்பதிற்றியாண்டு என்ப. அவர்களைச் சங்கம் இரீஇயினார் கடல் கொள்ளப்பட்டு போந்திருந்த முடத்திரு மாறன் முதலாக உக்கிரப் பெருவழுதி ஈறாக நாற்பத்தொன்ப தின்மர் என்ப. அவருட் கவியரங்கேறினார் மூவர் என்ப. அவர் சங்கமிருந்து தமிழாராய்ந்தது உத்தர மதுரை என்ப.''

மேலே தந்துள்ள இறையனார் அகப்பொருள் உரையில் குறிப்பிடப்பட்டிருக்கும் புலவர் எண்ணிக்கையையும் ஆண்டு எண்ணிக்கையையும் அறியும்போது தலை சுற்றுகிறது. என்றா லும், நமக்கு இன்றியமையாது வேண்டப்படுகின்ற ஓர் உண்மை இப்பகுதியில் இல்லாமற் போகவில்லை இவ்வுரையில் தெரிவிக்கப்பட்டிருக்கும் செய்திகளுட் சில கற்பனையெனத் தோன்றலாம். முதற் சங்கம் 4,440 ஆண்டும், இரண்டாம் சங்கம்

3,770 ஆண்டும், கடைச்சங்கம்1,850 ஆண்டும் நடைபெற்றன வாம்.ஆக மூன்று சங்கங்களும் நடைபெற்ற மொத்த ஆண்டுகள் 9,990 ஆகும். கடைச்சங்கம் ஏறக்குறைய கி.பி. இரண்டாம் நூற்றாண்டு வரை இருந்ததாகக் கூறப்படுகிறது. அதன் பிறகு 1,800ஆண்டுக்காலம் கடந்துபோக, இப்போது இருபதாம் நூற்றாண்டின் இறுதிப்பகுதியில் இருக்கிறோம் நாம்.

இந்தக் கணக்கின்படி நோக்கின், இற்றைக்கு (1,850+ 1.800=) 3,650 ஆண்டுக்குமுன் கடைச்சங்கமும், இற்றைக்கு (3.650+3,700=) 7.350 ஆண்டுக்கு முன் இடைச்சங்கமும், இற்றைக்கு (7,350+4,440=) 1,1790 ஆண்டுக்கு முன் தலைச் சங்கமும் தோன்றியிருக்க வேண்டும். இம் மூன்று சங்கங்களுக்கும் நடுவே சில பல ஆண்டுகாலம் இடைவெளி இருந்திருப்பின் இச் சங்கங்கள் மேலே குறிப்பிட்டுள்ள ஆண்டுகளுக்கு இன்னும் முன்னமேயே தோன்றியதாகக் கணக்கிட்டுக் கொள்ள வேண்டும். எனவே, ஏறக்குறைய இற்றைக்குப் பன்னீராயிரம் (12,000ஆண்டுகட்கு முன்பே சங்கம் அமைத்து ஆராயும் அளவிற் குத் தமிழ்மொழி வளர்ச்சி பெற்றிருந்தது என்பது புலனாகும்.

இந்த ஆண்டுக் கணக்கை நம்ப முடியும் என்றால், முச் சங்கங்களிலும் பங்குகொண்டு தமிழ் ஆராய்ந்ததாகக் குறிப் பிடப்பட்டுள்ள புலவர்களின் எண்ணிக்கையையும் - அதாவது. -(4.449+3,700+449=) 8,598 என்னும் எண்ணிக்கையையும் மேளதாளத்தோடு நம்பலாம்.

தலைச் சங்கத்தார் அகத்தியம் என்னும் நூலையும், இடைச் சங்கத்தார் அகத்தியம், தொல்காப்பியம், மாபுராணம், இசை நுணுக்கம், பூதபுராணம் ஆகிய நூல்களையும், கடைச் சங்கத் தார் அகத்தியம், தொல்காப்பியம் ஆகிய நூல்களையும் ஆதார நூல்களாகக் கொண்டு தமிழ் ஆராய்ந்ததாகக் கூறப் பட்டுள்ளது. இந்த நூல்களுக்குள் இன்று முழுமையாகக் கிடைத் துள்ள தொல்காப்பியம் இடைச்சங்க காலத்திலேயே பயன் படுத்தப்பட்டதெனின், அது, ஏறக்குறைய ஏழாயிரம் ஆண்டு கட்கு முன்பே தோன்றியிருக்க வேண்டும். இதுபற்றி ஐயப்பாடு எழலாம். ஆனால், தொல்காப்பியம் இற்றைக்கு ஐயாயிரம்

ஆண்டுகட்கு முன் தோன்றியதாக ஆராய்ச்சியாளர் சிலர் அறிவித்திருப்பது ஈண்டு நினைவு கூரத்தக்கது.

அடுத்து, - தலைச்சங்கம், இடைச்சங்கம் ஆகிய இரண்டிலுமே அகத்தியனார் இருந்ததாக அறிவிக்கப்பட்டிருப்பது நம்பத்தக்கதாயில்லை. அகத்தியனார் ஐயாயிரம் ஆண்டுக் காலம் உயிர் வாழ்ந்திருக்க முடியுமா? ஒருவேளை, அகத்தியனார் என்ற பெயரில் இருவர் இருந்தனர் என்று கொண்டால், இந்தக் கருத்து ஒருவாறு பொருந்தலாம்.

முதல் சங்கம் இருந்தது பழைய மதுரையாம். அதாவது-இப்போதுள்ள மதுரைக்குத் தெற்கேயிருந்தது; பின்னர்க் கடலாற் கொள்ளப்பட்டது. இரண்டாவது சங்கம் இருந்தது கபாடபுரமாம். பழைய மதுரை கடல் கொள்ளப்பட்டதால் இடம் மாறிற்றுப் போலும். கடைச்சங்கம் இருந்தது இப்போதுள்ள மதுரை. இது, கடல் கொண்ட பழைய மதுரைக்கு வடக்கேயிருப்பதால் 'உத்தர மதுரை' (உத்தரம்=வடக்கு) எனப்பட்டது. இடம் சார்பான இந்தச் செய்தியை ஏறக்குறைய ஏற்றுக்கொள்ளலாம்.

இனிமேல்தான் இன்றியமையாத ஒரு கட்டத்திற்கு நாம் வரவேண்டியவர்களாயுள்ளோம். முச் சங்கங்களிலும் பாடப்பட்டனவாகக் குறிப்பிடப்பட்டிருக்கும் நூல்களின் பெயர்களை ஊன்றி நோக்க வேண்டும். முதல் இரண்டு சங்கங்களிலும் இயற்றப்பட்டனவாகக் கூறப்பட்டிருக்கும் நூல்கள் இன்று கிடைக்கவில்லை. கடைச்சங்க நூல்களாகக் குறிப்பிடப்பட்டுள்ளவற்றுள் முதல் எட்டு மட்டும் இப்போது கிடைத்துள்ளன; இறுதியாகக் குறிப்பிட்டுள்ள 'கூத்துக்', 'வரி', 'சிற்றிசை', 'பேரிசை' ஆகிய நான்குநூல்களும் இன்று கிடைக்கவில்லை. முச் சங்கங்கட்கும் உரியனவாகச் சில நூல்களின் பெயர்களைக் குறித்ததோடு உரையாசிரியர் அமைந்துவிடவில்லை. அப்பெயர்களைத் தொடர்ந்தாற்போல், 'இத் தொடக்கத்தன' என்று மேலும்கூறியிருப்பது கருதத்தக்கது. 'இத்தொடக்கத்தன' என்றால், இவை முதலாய பல நூல்கள்' என்று பொருளாம். உண்மைதானே? முச்சங்கங்களிலும் இருந்த 8,598 புலவர்களும் பன்னீராயிரம் ஆண்டுகளில், ஆயிரக்கணக்கான

நூல்கள் - நூறாயிரக்கணக்கான பாடல்கள் இயற்றியிருப் பார்களல்லவா? அவைகள் எல்லாம் எங்கே? என்னவோ - ஒருசிலவற்றின் பெயர்களாவது தெரியவந்திருப்பது ஒரு பெரும்பேறே!

'தெரிந்ததிலிருந்து தெரியாததற்குச் செல்லுதல்'— 'அண்மையிலிருந்து சேய்மைக்குச் செல்லுதல்' - நிகழ்காலத் திலிருந்து கடந்த காலத்திற்குச் செல்லுதல், - என்னும் உள நூல் முறைப்படி (Phychological Method) நாம் கடைச்சங்க நூல்களிலிருந்து, இடைச்சங்க, தலைச்சங்க நூல்களுக்குச் செல்லவேண்டும். கடைச்சங்க நூல்களாகக் குறிப்பிடப்பட்ட வற்றுள் 'நெடுந்தொகை நானூறு' முதலாக 'எழுபது பாடல்' ஈறாக உள்ள எட்டு நூல்களும் நிகழ்காலத்தில் நாம் நன்கு கற்றுத் தெரிந்து வைத்திருக்கும் நூல்களாகும்.இவை இருப்பது உண்மை; பொய்யன்று. இவை போலவே இடைச் சங்கத் தனவாகவும் தலைச் சங்கத்தனவாகவும் குறிப்பிடப்பட்டுள்ள நூல்களும் ஒரு காலத்தில் இருந்ததையேயாகும். இப்போது கிடைக்காததால், இவற்றை இல்லாத கற்பனையென்று எவரும் கதைக்க முடியாது. கடைச் சங்கத்தனவாகக் கூறப்பட்டுள்ள வற்றுள்ளும் நான்கு கிடைக்கவில்லையே! கிடைத்துள்ள 'நெடுந்தொகை நானூறு' முதலிய எட்டு நூல்களையுங்கூட, சென்ற நூற்றாண்டினர் அறிந்திருக்கவில்லை. இவ் வெட்டும், அண்மைக் காலத்தில்தான் அறிஞர்களால் கண்டுபிடிக்கப்பட்டு அச்சிடப்பெற்று நம் கைகளில் உலவுகின்றன. எனவே முதல் இரண்டு சங்கத்தனவாகக் குறிப்பிடப்பட்டுள்ள நூல்கள் இருந் தவையே - இந்த இலக்கியச் செல்வங்களை நாம் இழந்து விட் டோம் என்பதில் எள்ளளவும் ஐயமில்லை.

இனி, தொல்காப்பியத்திற்கு முற்பட்ட தலைச்சங்க நூல் களைப் பற்றி ஒரு சிறிது ஆராய்வோம்: இறையனார் அகப் பொருள் உரை, 'அவர்களாற் பாடப்பட்டன எத்துணையோ பரிபாடலும் முது நாரையும் முதுகுருகும் களரியாவிரையும் என இத் தொடக்கத்தன -எனத் தலைச்சங்க நூல்களாக நான்கு நூல்களைப் பெயர் சுட்டித் தெரிவித்துள்ளது. இவற்றை ஒவ்வொன்றாகப் பார்ப்போம்.

1. எத்துணையோ பரிபாடல்

'பரிபாடல்' என வெற்றெனக் கூறாமல், 'எத்துணையோ பரிபாடல்' எனக் கூறியிருப்பது, பல பரிபாடல்களின் தொகுப்பாகிய ஒரு தொகை நூலைக் குறிக்கிறது-என உய்த் துணரலாம். இந்த உய்த்துணர்வுக்குத் தக்க அகச்சான்று உள் ளது.இறையனார் அகப்பொருள் உரை கடைச்சங்க நூல்க ளாகக் குறிப்பிடப்பட்டுள்ள பன்னிரண்டு நூல்களுள், 'எழுபது பரிபாடல் என்னும் பெயரில் ஒரு நூல் சுட்டப்பட்டிருப்பதைக் காணலாம். இந்த நூல் இப்போது கிடைக்கப் பெற்று நம் கையில் உலவி வருகின்ற 'பரிபாடல்' என்னும் தொகை நூலாகும். இஃது, பலர் பாடிய எழுபது பரிபாடல்களின் தொகுப்பு என்பது தெரிந்த முடிபு. கடைச்சங்க நூலாக 'எழுபது பரிபாடல்' என்பதைக் கூறியுள்ள உரையாசிரியர், தலைச்சங்க நூலாக, எத்துணையோ பரிபாடல். என ஒன்றைக் குறிப்பிட்டுள்ளார் எனில், எழுபது பரிபாடல்களின் தொகுப் பாகிய கடைச்சங்கத் தொகை நூல் போலவே, கிடைக்கப் பெறாமையால் எண்ணிக்கை தெரிய முடியாத எத்துணையோ பரிபாடல்களின் தொகுப்பாகிய ஒரு பரிபாடல் தொகை நூல் தலைச்சங்க காலத்திலும் இருந்தது என்பது உய்த்துணரக் கிடக்கிறது. இதனைப் 'பெரும் பரிபாடல். எனப் பிற்காலத்துச் செய்யுள் ஒன்று கூறுகிறது.

இப்படியொரு தொகை நூல் தலைச்சங்க காலத்தில் இருந் திருக்க முடியுமா என எவரும் ஐயுறாமல் இருப்பதற்காக, ஈண்டு இன்னும் சில கருத்துக்களைச் சொல்ல வேண்டும். பரிபாடல் என்பது பின்னர் வேறொரு தலைப்பின்கீழ் விரிவாக ஆராயப்படும் எனினும், தேவைக்கு ஏற்ற அளவு இங்கே சிறிது சுருக்கமாகப் பார்க்கலாம். பழைய பாடல் வகைகளுள் பரி பாடல் என்பதும் ஒன்று. குறள் பாக்களால் ஆன நூல் 'குறள்' (திருக்குறள்) என வழங்கப்படுவது போல, பரிபாடல்களால் ஆன நூல் பரிபாடல் நூல்என வழங்கப்படுகிறது. பரிபாடல் என்பது 'பரிபாட்டு' எனவும் வழங்கப்பெறும். தொல்காப்பியம் தோன்றுவதற்கு முன்பே பரிபாடல் என்னும் பாடல்வகை இருந்தது என்பதற்குத் தொல்காப்பியமே சான்று. 'இலக்கியம்

கண்டதற்கு இலக்கணம், என்றபடி, முன்பே வழக்காற்றில் இருந்துவந்த பரிபாடல்களைப் பார்த்த தொல்காப்பியர், பரிபாடல் என்றால் இப்படியிப்படி இருக்கும் என்று பொது இலக்கணம் வகுத்துவிட்டார். பரிபாடல் இலக்கணத்தைத் தொல்காப்பியம் - பொருள்அதிகாரம் - அகத்திணை இயலில் உள்ள,

"நாடக வழக்கினும் உலகியல் வழக்கினும்
பாடல் சான்ற புலனெறி வழக்கம்
கலியே பரிபாட்டு ஆயிரு பாவினும்
உரிய தாகும் என்மனார் புலவர்." 56

என்னும் நூற்பாவாலும், தொல்காப்பியம் - செய்யுளியலில் உள்ள,

"நெடுவெண் பாட்டே குறுவெண் பாட்டே
கைக்கிளை பரிபாட்டு அங்கதச் செய்யுளோடு
ஒத்தவை எல்லாம் வெண்பா யாப்பின." 114

"பரிபா டல்லே தொகைநிலை வகையின்
இதுபா என்னும் இயனெறி இன்றிப்
பொதுவாய் நிற்றற்கும் உரித்தென மொழிப." 116

"கொச்சகம் அராகம் சுரிதகம் எருத்தொடு
செப்பிய நான்கும் தனக்குறுப் பாகக்
காமங் கண்ணிய நிலைமைத் தாகும்." 117

"சொற்சீ ரடியும் முடுகிய லடியும்
அப்பா நிலைமைக் குரியவாகும்." 118

"கட்டுரை வகையான் எண்ணொடு புணர்ந்து
முற்றடி யின்றிக் குறைவுசீர்த் தாகியும்
ஒழியசை யாகியும் வழியசை புணர்ந்தும்
சொற்சீர்த் திறுதல் சொற்சீர்க் கியல்பே." 119

"பரிபா டல்லே
நாலீ ரைம்பது உயர்படி யாக
ஐயைந் தாகும் இழிபடிக்கு எல்லை." 155

என்னும் நூற்பாக்களாலும் அறியலாம். பரிபாடல் அகத்திணை பற்றிய ஒருவகை இசைப் பாடல். இது வெண்பா யாப்புடன் பிற பாக்களின் யாப்பும் உடைத்தாயிருக்கும்; கொச்சகம், அராகம் முதலிய பல உள்ளுறுப்புக்களைப் பெற்றிருக்கும். எந்தப் பரிப்பாடல் பாட்டும் இருபத்தைந்து அடிகளுக்குக் குறையாமலும், நானூறு அடிகளுக்கு மிகாமலும் இருக்கும். இப்பாடல் காதல் சுவையை அடிப்படையாகக் கொண்டு புனையப்படுவதாகும்.

இவ்வளவு தெளிவாகத் தொல்காப்பியம் இலக்கணம் சொல்லும் அளவுக்கு அன்றே பரிபாடல் தமிழில் வளர்ச்சி பெற்றிருந்தது. தொல்காப்பியத்துக்கு முன்பே பரிபாடலும் கலியும் இல்லையென்றால், தொல்காப்பியர் இவற்றிற்கு இலக்கணம் கூறியிருக்க முடியாதல்லவா? 'இலக்கியம் கண்டதற்கே இலக்கணம்' என்ற விதி, ஈண்டு மீண்டும் நினைவுக்கு வரவேண்டும். செய்யுட்கள் கிடைக்காவிடினும் செய்யுள் இலக்கணம் கிடைத்திருப்பின் செய்யுட்கள் இருந்ததாக நம்பலாம் என்னும் கருத்தில், பேராசிரியர் தொல்காப்பியச் செய்யுளியல் உரையில் பல்வேறிடங்களில் தெரிவித்துள்ள,

"...இலக்கணம் உண்மையின் இலக்கியம் காணாமாயினும் அமையும் (183)"; – "இவற்றுக்கு உதாரணம் காணாமையின் காட்டா மாயினாம்; இலக்கணம் உண்மையின் அமையும் என்பது" "இலக்கணம் உண்மையின் இலக்கியம் பெற்ற வழிக் கண்டு கொள்க; இப்பொழுது அவை வீழ்ந்தன போலும்": "நூற்றைம்பது கலியுள்ளும் கைக்கிளை பற்றி இவ்வாறு வரும் கலிவெண்பாட்டுக் காணாமையின் காட்டாமாயினாம்; இலக்கணம் உண்மையின் இலக்கியம் பெற்றவழிக் கண்டு கொள்க (160)."...

என்னும் உரைப் பகுதிகளும் இன்ன பிறவும் ஈண்டு ஒப்பு நோக்கத்தக்கன. எனவே, தலைச்சங்கத்தில் தமிழ் ஆராய்ந்த புலவர்கள் பலர் இயற்றிய பரிபாடல்கள் பலவற்றின் தொகுப்பு நூலே, இறையனார் அகப்பொருள் உரையில் குறிப்பிடப்பட்டுள்ள பரிபாடல் என்பது தெளிவு கலிப்பாக்

களின் தொகுப்பாகிய கலித்தொகையைப் போலவே, பரி பாடல் தொகை நூலும் பாவகையால் பெயர் பெற்றதாகும்.

தலைச்சங்கம் இற்றைக்கு 11,790 ஆண்டுக்கு முன் தோன்றி 4,440 ஆண்டுகள் நடைபெற்றதாக இறையனார் அகப்பொருள் உரையால் அறிந்தோம். எனவே, தலைச்சங்கத்தைச் சேர்ந்த தாகக் கூறப்பட்டுள்ள இந்தப் பரிபாடல் நூல், இற்றைக்கு ஏறக்குறையப் பத்தாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே இயற்றப் பட்டிருக்கவேண்டும் என்பதும் அறியப்படும். இதில் நம்பிக்கை யில்லாமல் எவ்வளவு குறைத்துப் பார்க்கினும், இற்றைக்கு ஐயாயிரம் ஆண்டுக்கு முன்பாவது தலைச் சங்கத்துப் பரிபாடல் தொகை நூல் இயற்றப்பட்டிருக்கலாம். சுருங்கக் கூறின், தொல்காப்பியத்திற்கு முன்பே தமிழில் பரிபாடல் என் னும் தொகைநூல் இருந்தது என்பது தெளிவு. ஆகவே, நாம் முன்தலைப்பில் கண்ட உலகமொழித் தொகை நூல்களைவிட, இந்தப் பெரும் பரிபாடல் தொகை நூல் மிகவும் முற்பட்டது என்பது உறுதி.

### 2.3. முது நாரை, முது குருகு

இறையனார் அகப்பொருள் உரையில் பரிபாடலுக்கு அடுத்தபடியாகக் குறிப்பிடப்பட்டுள்ள முதுநாரை, முது குருகு என்னும் இரு நூல்களும் புரியாத புதிராக உள்ளன. நாரையும் குருகும் ஓரினத்தவை, - அஃதாவது,-கொக்கினத்தைச் சேர்ந்த பறவைகள். ஆனால் இரண்டும் ஒன்றல்ல. ஒற்றுமையுடைய இவற்றுக் கிடையே வேறுபாடுகள் உண்டு. இதனை யாப் பருங்கல (உறுப்பியல் - 9, 10) விருத்தியுரையில் மேற்கோளாக எடுத்துக்காட்டப் பெற்றுள்ள - நூல் பெயர் தெரியாத,

“குருகு நாரையொடு கொட்பானா
விரிதிரை நீர் வியன் கழனி...”

என்னும் பாடல் பகுதியில் தனித்தனியாய்க் கூறப்பட்டிருப்ப தனாலும் அறியலாம். மற்றும், ஐங்குறு நூற்றில் - நெய்தல் பகுதியில் - வெள்ளாங் குருகுப் பத்தில் உள்ள,

“வெள்ளாங் குருகின் பிள்ளை செத்தெனக்
காணிய சென்ற மடநடை நாரை.”

என்னும் பாடற்பகுதி ஈண்டு எண்ணத்தக்கது. குருகின் குஞ்சைத் தன் குஞ்சு எனக் கருதி நாரை பார்க்கச் சென்றதாக இப் பகுதியில் கூறப்பட்டுள்ளது. இதிலிருந்து, நாரையும் குருகும் ஒற்றுமைக்கிடையே வேற்றுமையுடைய பறவைகள் என்பது புலனாகும்.

இந்தப் பறவைப் பெயர்களால் – அதிலும் 'முது' என்னும் அடைமொழி சேர்த்து,' முது நாரை', 'முது குருகு', என்னும் பெயர்களால் இயற்றப்பட்ட நூல்கள் எப்பொருள் பற்றியனவாய் இருக்கலாம்? மற்றும், இவையிரண்டும், தனி முழு நூல்களாக இருக்குமா? அல்லது, பல உதிரிப் படல்களின் தொகுப்பு நூல்களாக இருக்குமா?

"இவை பெரும்பாலும் தொகுப்பு நூலாக இருக்கமுடியாது. ஒரு பொருள் பற்றி ஒரு புலவரால் எழுதப்பட்ட தனி நூலாகவே இருக்கக்கூடும்" – இவ்வாறு கூறுவது எளிது; ஒரு தொல்லைக்கும் இடமில்லை.எவரும் மறுக்கவும் தயங்குவர்.

ஆனால் இவற்றைத் தொகை நூல்கள் எனக்கூறுவது சிக்கலுக்கு இடம் தரும். பலருடைய மறுப்புக்கு வழி வகுக்கும். இருப்பினும், முடிந்த முடிவாக, இல்லை – ஒரு கொள்கையளவில், இவற்றைத் தொகை நூல்கள் எனக் கூற முயன்று பார்ப்போமே! இந்த முயற்சியின் நோக்கம், ஆராய்ச்சியாளரின் எண்ணத்தைக் கிளறிவிடுவதேயாம்.

இவை, நாரையைப் பற்றியோ. குருகைப் பற்றியோ விளக்கி விவரமாகப் பாடிய பறவை – விலங்கியல் துறை (Zoology) நூல்கள் இல்லை. இடைச்சங்க நூல்களுள்ளும் 'குருகு' என்னும் பெயரில் ஒரு நூல் இறையனார் அகப்பொருள் உரையில் குறிப்பிடப்பட்டுள்ளதை நோக்குங்கால், குருகு என்னும் பெயரில் பாடலோ நூலோ இயற்றும் பழக்கம் அந்தக் காலத்தில் இருந்தது என உயத்துணர முடிகிறது. குருகு என்னும் சொல்லுக்கு, பறவையின மல்லாமல், உயிரில்லாத அஃறிணைகளைக் குறிக்கும் வேறு எத்தனையோ பொருள்கள் (அர்த்தங்கள்) உண்டு எனினும், 'முது குருகு' என்பதிலுள்ள 'முது' என்னும் அடைமொழியை நோக்குங்கால்,

பறவையினம் என்னும் பொருளே பொருத்தமானதாகத் தெரிகிறது. மற்றும், குருகு என்னும் சொல்லுக்கு, சிறப்பாகக் கோழி, அன்றிற் பறவை என்னும் பொருள்களும், பொதுவாகப் பறவை என்னும் பொருளும் உண்டெனினும், உடன் கொடுக்கப்பட்டுள்ள 'முது நாரை' என்னும் பெயரையும் நோக்குங்கால், 'குருகு' என்பதும் கொக்கினத்தைச் சேர்ந்த பறவை என்னும் பொருளையே குறிக்கும் என உணரலாம். இதனை மேலும் தெளிவாக உறுதிப்படுத்த வேண்டுமெனில், இதே பொருளில் 'முது குருகு' என்னும் சொல்லாட்சி, கடைச் சங்க நூலாகிய ஐங்குறு நூற்றிலுள்ள

"சிறுநணி வரைந்தனை கொண்மோ பெருநீர்
வலைவர் தந்த கொழுமீன் வல்சிப்
பறைதபு முதுகுருகு இருக்கும்
துறைகெழு தொண்டி யன்னஇவன் நலனே" (180)

என்னும் பாடலில் உள்ளமை காண்க. எனவே, முது நாரை - முது குருகு என்னும் இரட்டைப் பெயர்களைக் கொண்டும், இடைச்சங்க காலத்தும் குருகு என்னும் பெயரில் ஒரு நூல் இயற்றப்பட்டிருப்பதைக் கொண்டும், நாரை அல்லது குருகு என்னும் பெயரால் நூல் இயற்றும் வழக்கம் பண்டு இருந்தது என்னும் கருத்து உணரக்கிடக்கிறது.

அடுத்து, இந்த நூல்கள் எப்பொருள் பற்றியனவாயிருக்கலாம் எனக் காணவேண்டும். ஆராய்ச்சியாளரின் எண்ணத்திற்கு (சிந்தனைக்கு) ஈண்டு இரண்டு கருத்துக்களைத் தருவோம். ஒன்று: அகநானூற்றில் குறிப்பிட்ட 120 பாடல்களின் தொகுப்புக்குக் 'களிற்றியானை நிரை' என்னும் பெயர் தரப்பட்டிருப்பதை ஈண்டு ஒப்பு நோக்க வேண்டும். ஆண் யானைகளின் வரிசை போன்ற அமைப்புடைய பாடல்களின் தொகுப்பு 'களிற்றியானை நிரை' என வழங்கப் பெறுகிறது. அதுபோலவே, நாரை - குருகின் நீண்டுயர்ந்த தோற்றம் போல் நீளமாக உள்ள பாடல்கள் நாரை - குருகு என்னும் பெயரால் வழங்கப்பட்டிருக்கலாம். ஓரளவு நீண்ட இசைப் பாடல்கள் நாரை - குருகு என்னும் பெயராலும், மிகவும் நீண்ட இசைப் பாடல்கள் முது நாரை - முது குருகு என்னும்

பெயராலும் வழங்கப்பட்டிருக்கலாம். உலகியலில், மிகவும் உயரமாய் இருக்கிறவரைப் பார்த்து 'நெட்டைக் கொக்கு' என்று கேலி செய்வது ஈண்டு நினைவு கூரத்தக்கது. எனவே. மிகவும் நீண்ட இசைப் பாடல்கள் முது நாரை, முது குருகு என்னும் பெயர்களால் வழங்கப்பட்டிருக்கலாம் என உய்த்துணரலாம். 'பரிபாடல்' என்பது, நானூறு அடிகள் வரையும் நீண்டிருக்கும் எனத் தொல்காப்பியம் கூறுவது முன்னரே (பக்கம்-102) அறிவிக்கப்பட்டுள்ளது. இதனால், பண்டைக் காலத்திலேயே மிகவும் நீளமான பாடல்கள் இயற்றும் மரபு இருந்தது என்பது தெளிவு. ஆகவே, நாரை – குருகு போன்ற நீண்ட இசைப் பாடல்களின் தொகுப்புக்களே முது நாரை, முது குருகு என்னும் நூல்கள். எனவே, இவையிரண்டும் ஒருவகைத் தொகை நூல்களே யாகும் – என்னும் முடிவுக்கு வரலாம்.

களரியா விரை, வெண்டாளி, களிற்றியானை நிரை, மணிமிடை பவளம், நித்திலக்கோவை, நான்மணிக் கடிகை, சூளாமணி, சிந்தாமணி, திரிகடுகம், சிறு பஞ்ச மூலம், ஏலாதி முதலிய நூற்பெயர்கள் உண்மையில் நேரடியாக நூல்களைக் குறிக்கும் பெயர்கள் அல்ல; இப்பெயர்கள் மலர்கள், விலங்கினம், அணிகலன்கள், மருந்து வகைகள் முதலியவற்றிற்கு உரிய நேர்ப் பெயர்களாகும். ஆனால், இப்பெயர்கள், உவமையாகு பெயராய், இவை போன்ற இயல்புடைய நூல்களைக் குறிக்க வழங்கப்பட்டு வருகின்றன. இவ்வாறே முதுநாரை, முதுகுருகு என்னும் நூற்பெயர்களையும் கொள்ளலா மல்லவா?

இனி இரண்டாவது கருத்தாவது:– முதுநாரை, முதுகுருகு என்னும் நூல்கள், கொக்கினத்தைப் பற்றி மட்டும் விரிவாக விளக்கும் பறவை நூல்கள் அல்ல வாயினும், நாரையும் குருகும் அவ்வந்நூலில் பல்வேறு கோணங்களில் பங்கு கொண்டு பயன்படுத்தப்பட்டிருக்கலாம். குயில் பத்து குயில் பாட்டு, கிளிக் கண்ணி, கிளிப் பாட்டு, கோத்தும்பி முதலிய பெயர்களில் நூல்கள் இருக்கக் காண்கிறோம். யாப்பருங்கல விருத்தியுரையில் 'தும்பிப் பாட்டு' என்னும் பெயரில் ஒரு பழைய நூல் எடுத்தாளப்பட்டுள்ளது. இவை

யெல்லாம் பறவை நூல்கள் அல்ல; இந்தப் பறவைகளை நோக்கிச் சொல்வது போலவோ, இப் பறவைகளின் வாயிலாகச் சொல்வது போலவோ அமைத்துப் பாடப்பட்ட பல துறை நூல்கள் இவை. இந் நூல்களைப் போன்றனவாக முதுநாரையும் முதுகுருகும் இருக்கலாம் அல்லவா?

அன்னம், மயில், கிளி, குயில், பூவை, தோழி, நெஞ்சு, முகில், வண்டு, தென்றல் ஆகிய பத்தும் தூதாக அனுப்புதற்கு உரியன என்று இரத்தினச் சுருக்கமும் பிரபந்தத் திரட்டும் கூறுகின்றன. இந்த இரு நூல்களின் பட்டியலில் நாரை சேர்க்கப்படாவிடினும், நாரையைத் தூதுவிடும் மரபு தமிழ்ப் புலவர்களிடையே இல்லாமற் போகவில்லை. நாரை விடு தூதாகச் சத்திமுத்தப் புலவர் பாடியுள்ள,

"நாராய் நாராய் செங்கால் நாராய்
பழம்படு பனையின் கிழங்குபிளந் தன்ன
பவளக் கூர்வாய்ச் செங்கால் நாராய்
நீயுநின் மனைவியும் தென் திசைக் குமரி
ஆடி வடதிசைக் கேகுவீ ராயின்
எம்மூர்ச் சத்திமுத்த வாவியுள் தங்கி
நனைசுவர்க் கூரைக் கனைகுரல் பல்லி
பாடுபார்த் திருக்குமெம் மனைவியைக் கண்டு
எங்கோன் மாறன் வழுதி கூடலில்
ஆடை யின்றி வாடையின் மெலிந்து
கையது கொண்டு மெய்யது பொத்திக்
காலது கொண்டு மேலது தழீஇப்
பேழையுள் இருக்கும் பாம்பென உயிர்க்கும்
ஏழை யாளனைக் கண்டனம் எனுமே"

என்னும் பாடல் பலரும் அறிந்த தொன்றாகும். எனவே, முதுநாரையும் முதுகுருகும், நாரையை நோக்கி—குருகை நோக்கிக் கூறும் இசைப் பாடல்களின் தொகுப்பாகவும் இருக்கலாமன்றோ!

இவ்வாறு பறவைகளை நோக்கிக் கூறும் பழக்கம் பிற்காலத்தில் ஏற்பட்டது அன்று, தலைச்சங்க காலத்திலேயே

இந்த மரபு இருந்திருக்கிறது. முன்னமேயே இருந்ததனால் தான், இடைச்சங்கநூலாகிய தொல்காப்பியமும், பறவைகளை நோக்கிக் கூறுவது உண்டு என்று தெரிவித்துள்ளது. இதனைத் தொல்காப்பியம் - செய்யுளியலில் உள்ள

"ஞாயிறு திங்கள் அறிவே நாணே
கடலே கானல் விலங்கே மரனே
புலம்புறு பொழுதே புள்ளே நெஞ்சே
அவையல பிறவும் நுதலிய நெறியால்
சொல்லும் போலவும் கேட்கும் போலவும்
சொல்லியாங் கமையும் என்மனார் புலவர். (192)

என்னும் நூற்பாவாலும், தொல்காப்பியம் பொருளியலில் உள்ள,

"சொல்லா மரபின் அவற்றொடு கெழீஇச்
செய்யா மரபில் தொழிற்படுத் தடக்கியும்

என்னும் நூற்பாவாலும், தொல்காப்பியம், மெய்ப்பாட்டியலில் 'முட்டுவயிற் கழறல்' (23) என்று தொடங்கும் நூற்பாவில் உள்ள, 'தூது முனிவின்மை' என்னும் பகுதிக்கு, 'புள்ளும் மேகமும் போல்வன கண்டு சொல்லுமுன் அவர்க்கு என்று தூதிரந்து பன்முறையானும் சொல்லுதலும்' என்று பேராசிரியர் எழுதியுள்ள உரையானும், இன்ன பிறவற்றாலும் தெரியலாம்.

இதுகாறும் முதுநாரை, முதுகுருகு என்னும் நூல்கள் பற்றி இரண்டு கருத்துக்கள் கூறப்பட்டன. களிற்றியானை நிரை போன்ற பாடல்களின் தொகுப்பாகிய 'களிற்றியானை நிரை, என்ற நூலைப் போல, நாரை - குருகு மாதிரி நீண்ட இசைப் பாடல்களின் தொகுப்புக்களே முதுநாரை, முதுகுருகு என்னும் நூல்கள் - என்ற முதல் கருத்தை ஓரளவு சிலராயினும் ஏற்றுக்கொள்ளலாம். அடுத்து,— நாரையை - குருகை நோக்கிக் கூறுவது போலவோ, அல்லது வேறு பிற கோணங்களிலோ நாரையோடு - குருகோடு தொடர்புடைய பாடல்களின் தொப்புக்களே முதுநாரை, முதுகுருகு என்னும் நூல்களாகும்- என்ற இரண்டாவது கருத்தை ஏற்பதில் தயக்கம் ஏற்படலாம்.

இந்தக் கருத்துக்கள் முற்றமுடிந்த முடிபுகள் அல்ல. இந்தக் கருத்துக்களைச் சிலர் அல்லது பலர் எள்ளி நகையாடவுஞ் செய்யலாம். எனவே, இந்தக் கருத்துக்கள் ஆராய்ச்சியாளரின் அறிவுப் பசிக்கு விட்ட ஒருவகை அறைகூவலேயாகும்.

இந்தப் புதிய கருத்துக்கள் ஒரு புறம் இருக்க, இனி ஈண்டுப் பழைய கருத்து ஒன்றினை நினைவு கூர்வோமாக; சிலப்பதிகார உரையாசிரியர் அடியார்க்கு நல்லார் தமது உரைப்பாயிரத்தில், "இனி இசைத்தமிழ் நூலாகிய பெருநாரை பெருங்குருகும் பிறவும் ......... முதலாவுள்ள தொன்னூல்கள் இறந்தன"—என ஒரு செய்தி அறிவித்துள்ளார்; இங்கே பெருநாரை, பெருங்குருகு என்னும் இரண்டும் இசைத்தமிழ் நூல்கள் எனக் கூறியுள்ளார். பெருநாரையும் முதுநாரையும் ஒன்றாகத்தானே இருக்க முடியும். பெருங்குருகும் முதுகுருகும் ஒன்றுதானே! எனவே, அடியார்க்கு நல்லாரின் உரையின்படி, முதுநாரை முதுகுருகு என்னும் இரண்டும் இசைத் தமிழ் நூல்கள் என்பது புலனாகும்.

இசைத் தமிழ் நூல் என்பது, இசைக்கு இலக்கணம் கூறும் நூலை மட்டும் குறிக்காது, இசைப்பாடல்கள் பலவற்றின் தொகுப்பு நூலையும் குறிக்கும். இந்தக் காலத்தில் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தார் தொகுத்துள்ள, 'தமிழ் இசைப் பாடல்கள்' என்னும் பெயரில் உள்ள தொகை நூல்கள் பலவற்றை ஈண்டு ஒப்பு நோக்கவேண்டும். இந்தத் தமிழ் இசைப் பாடல்கள் சுரதாள- இசையமைப்புடன் தொகுக்கப்பட்டுள்ளன. இவை போன்றே, முதுநாரை, முதுகுருகு என்னும் நூல்களும் இருக்கலாம் அல்லவா! அவ்வளவு ஏன்? பரிபாடல் என்னும் தொகைநூலையும் இசைத் தமிழ் நூல் எனக் கூறலாம். இன்று நமக்குக் கிடைத்துள்ள - கடைச் சங்க காலத் தொகைநூலாகிய பரிபாடல் என்னும் நூலில் உள்ள ஒவ்வொரு பாடலின் கீழும், இசையமைத்தவர் பெயரும், இசையின் (பண்ணின்) பெயரும் இருக்கக் காணலாம். பேரெல்லையாக நானூறு அடி நீளமுடைய பரிபாடலே இசைப்பாடல் என்றால், மிகவும் நீளமான முதுநாரை, முதுகுருகு என்னும் நூல்களும் இசைத்தமிழ் நூல்களாக இருக்கலா மல்லவா!

அடியார்க்கு நல்லார் இவ்விரு நூல்களும் இசைத்தமிழ் நூல்கள் என்னும் குறிப்புமட்டும் தந்துள்ளார். இவற்றிற்கு இப் பெயர்கள் வைக்கப்பட்டதன் காரணத்தையும் ஈண்டு நாம் ஆராய்ந்துள்ளோம். எனவே, பரிபாடல் போலவே, முதுநாரை, முதுகுருகு என்னும் நூல்களும் இசைத்தமிழ் பாடல்களின் தொகுப்பு நூல்களாய் இருக்கலாம்.

4 களரியாவிரை

இனி, இறையனார் அகப்பொருள் உரையில் தலைச்சங்க நூல்கள் என்னும் பெயரில் நான்காவதாகக் குறிப்பிடப்பட்டுள்ள, 'களரியா விரை' என்னும் நூல் குறித்துச் சிறிது ஆய்வோம். களரி என்பது, களம், நிலம், காடு முதலியன வாக இடப் பொருளைக் குறிக்கும். ஆவிரை என்பது ஒரு வகைப் பூ. எனவே, (களரி+ஆவிரை=) களிரியாவிரை என்பது, களரியில் பூத்துள்ள ஆவிரம் பூ என்று பொருள் படும். ஆவிரை என்பது நூல் வழக்காற்றுச் சொல்லாகும். நூல் வழக்காறு என்றால், இன்று நேற்றுத் தோன்றிய நூலில் அன்று. இந்தச் சொல் வழக்காறு, அகநானூறு, குறுந்தொகை, கலித்தொகை, பதிற்றுப்பத்து, குறிஞ்சிப்பாட்டு முதலிய கடைச்சங்க நூல்களில் இருப்பதோடல்லாமல், இடைச் சங்க நூலாகிய தொல்காப்பியத்திலும் உள்ளது. இதனை, தொல் காப்பியம் - எழுத்ததிகாரம் - உயிர்மயங்கியலில் உள்ள

"பனையும் அரையும் ஆவிரைக் கிளவியும்
நினையுங் காலை அம்மொடு சிவணும்
ஐயென் இறுதி அரைவரைந்து கெடுமே
மெய் அவண் ஒழிய என்மனார் புலர்வ". (81)

என்னும் நூற்பாவால் உணரலாம். இந்நூற்பாவில் பனை அரை, ஆவிரை என்னும் மூன்று மரவகைப் பெயர்ச் சொற்களுக்குப் புணர்ச்சிவிதி கூறப்பட்டுள்ளது. தொல்காப்பியர், தமிழில் உள்ள எல்லாச் சொற்களையும் சிறப்பாக எடுத்துக் குறிப்பிட்டுப் புணர்ச்சி விதி கூறிக் கொண்டிருந்தால் கட்டுபடியாகாது-காலம் போதாது; எனவே, மக்கள் வழக்கில் மிகுதியாக உள்ள இன்றியமையாத சில சொற்களை மட்டுமே எடுத்துக் கொண்டு புணர்ச்சிவிதி கூறியுள்ளார்

ஆசிரியர். இதனால், அந்தக் காலத்தில் 'ஆவிரை' என்னும் சொல் மக்களிடையே பெரிதும் வழக்காற்றில் இருந்தது என்னும் நுட்பமான செய்தி புலனாகிறது. இந்த அடிப்படையுடன் 'களரியா விரை' என்னும் நூற்பெயருக்கு வருவோம்.

இந்த நூல், ஆவிரஞ் செடி-கிளை-பூ முதலியவற்றைப் பற்றி விரிவாக விளக்கும் மரவியல் துறை (Botany) நூலாக இருக்க முடியாது. இதற்காக ஒரு தனி நூல் அந்த நாளில் தோன்றியிருக்க முடியாது. காட்டில் மலர்ந்து கண்ணைக் கவரும் ஆவிரம் பூக்களின் கொத்தைப் போல, நாட்டில் மலர்ந்து கற்பவரின் கருத்தைக் கவரும் பாடல்களின் கொத்தே -அதாவது-பாடல்களின் தொகுப்பே-களரியா விரை என்னும் நூலாகும். களிற்றியானை நிரை, நான்மணிக்கடிகை, திரிகடுகம் முதலிய நூல்களின் பெயர்களைப் போலவே, பூங்கொத்தைக் குறிக்கும் 'களரியாவிரை' என்னும் பெயரும் உவமையாகு பெயராய் ஒரு நூலைக் குறிக்கலாயிற்று.

வழக்காற்றில் மிகுதியாக உள்ள சில சொற்களுக்கு மட்டுந்தான் தொல்காப்பியர் சிறப்பாகக் குறிப்பிட்டுப் புணர்ச்சி விதி கூறமுடியும் என்று முன்னர்ப் பேசினோம். ஆம்! தொல்காப்பியப் புணர்ச்சிவிதியில் இடம் பெற்றுள்ள ஆவிரம்பூ வழக்காற்றில் மிகுதியாக உள்ளதேயாகும். புதுச்சேரித் தெருவில் அடிக்கடி ஆவிரம்பூ விற்பதைக் காணலாம். ஒரு கிழவி அடிக்கடி எங்கள் வீட்டிற்கு வந்து, 'ஆவாரம் பூ வாங்கலியா - ஆவாரம்பூ வாங்கலியா?' என்று கேட்டு உயிரை வாங்குவாள். எங்கள்வீட்டிலும் அடிக்கடி ஆவிரம் பூக் கூட்டுக்கறி ஆக்குவதுண்டு.

ஆவிரம் பூ அடிசிலுக்கே யன்றி, மாலையாகத் தொடுத்து அணிந்து கொள்ளவும் பயன்படுகிறது. இந்தச் செய்தியைச்சங்க இலக்கியங்களில் பரக்கக் காணலாம். பெண்கள் ஆவிரம் பூ மாலையைத் தம் மார்பிலே அணிந்து கொள்வர்; அம்மாலை அவர்தம் முலைகளின்மேல் அசைந்தாடிக் கொண்டிருக்கும் என்னும் செய்தியை,

“ முளரித் தீயின் முழங்கழல் விளக்கத்துக்
களரி யாவிரைக் கிளர்பூங் கோதை
வண்ண மார்பின் வனமுலைத் துயல்வர” (301)

என்னும் அகநானூற்றுப் பாடற் பகுதியால் அறியலாம். தான் காதலித்த பெண்ணை மணந்து கொள்ளும் நோக்குடன் மடலேறும் காதலன், ஆவிரம் பூமாலையைத் தன் தலையிலும் மார்பிலும் அணிந்து கொள்வான் என்னும் செய்தியை,

“ பிடியமை நூலொரு பெய்ம்மணி கட்டி
அடர் பொன் அவிரேய்க்கும் ஆவிரங் கண்ணி”

என்னும் கலித்தொகை (140) பாடல் பகுதியாலும், இதற்கு நச்சினார்க்கினியர் எழுதியுள்ள, ‘...தலையினும் மார்பினும் கிடக்கின்ற இவை தகடாகிய பொன்னினது விளக்கத்தை ஒக்கும் ஆவிரம் பூவாற் செய்த கண்ணியும்...’ என்னும் உரைப் பகுதியாலும் அறிந்து கொள்ளலாம், இன்னும் இதனை,

“ ...பனிவார் ஆவிரைப் பன்மலர் சேர்த்தித்
தாருங் கண்ணியும் தைதஇ...”

என்னும் குணநாற்பது பாடல் பகுதியாலும் அறியலாம்.

இந்த மாலையைக் காதலன் ஏறும் மடல்மாக் குதிரைக்கும் சூட்டுவது உண்டு என்னும் செய்தியை,

“பொன்னேர் ஆவிரைப் புதுமலர் மிடைந்த
பன்னூல் மாலைப் பனைபடு கலிமாப்
பூண்மணி கறங்க ஏறி.” (173)

என்னும் குறுந்தொகைப் பாடற் பகுதியால் அறியலாம் இதுகாறும் கூறியவற்றால், மக்களிடையேயும், புலவர்களிடையேயும் ஆவிரம் பூவும் மாலையும் பெற்றிருந்த செல்வாக்கினை அறிய முடிகிறது. எனவேதான், கவர்ச்சியான பயனுள்ள பாடல்களின் தொகுப்பு நூலுக்கு, ‘களரியாவிரை’ என்னும் பெயர் அன்று வைக்கப்பட்டது போலும்! ‘களரியாவிரை’ என்னும் முழுப் பெயர், ‘களரியாவிரைக் கிளர்பூங் கோதை’ என அகநானூற்றில் அப்படியே குறிப்பிடப்பட்டிருப்பது ஈண்டு நுணுகி நோக்கி மகிழ்தற்குரியது.

மற்றும், சங்கப் புலவர்கள் ஆவிரம் பூவிற்குக் கொடுத்துள்ள சிறப்பினை ஈண்டு ஊன்றி நோக்கவேண்டும். "ஆவிரம் பூ அழகிய பொன்மலராம்; பொன்போல் ஒளி வீசுவதாம்; நெருப்புப்போல் 'தகதக' என ஒளிவிட்டு விளங்குவதாம்; விரிந்து மலர்ந்திருக்குமாம். இந்தக் கருத்துக்களை 'அடர்பொன்அவிர் ஏய்க்கும் ஆவிரங்கண்ணி,' 'பொல(பொன்) மலர் ஆவிரை,' 'அணியலங்கு ஆவிரைப் பூ' என்னும் கலித்தொகைப் பாடல் பகுதிகளாலும், 'பொன்னேர் ஆவிரைப் புதுமலர்' என்னும் குறுந்தொகைப் பாடல் பகுதியாலும், ,விரிமலர் ஆவிரை' என்னும் குறிஞ்சிப் பாட்டுப் பகுதியாலும், 'அழல் விளக்கத்துக் களரி யாவிரைக் கிளர் பூங்கோதை' என்னும் அகநானூற்றுப் பாடற் பகுதி யாலும், பிறவற்றாலும் நன்கறியலாம். இலக்கியங்களில் கூறப்பட்டுள்ள இந்தச் சிறப்பினை ஈண்டு விதந்து எடுத்துக் காட்டியதன் நோக்கம், மக்களைக் கவரும் ஆற்றலும் தகுதியும் ஆவிரம் பூவுக்கு மிகுதியாக உண்டு என்பதை அறிவிப் பதேயாம். இவ்வாறாக, மக்களைக் கவரும் தகுதியுடைய ஆவிரம் பூக்களின் தொகுப்பாகிய 'களரி யாவிரை, என்னும் மாலையின் பெயர், மக்களைக் கவர்ந்த பயனுள்ள பாடல்களின் தொகுப்பாகிய நூலுக்கு வைக்கப் பட்டது.

பல மொழிகளிலும் உள்ள தொகை நூல்களுக்கு 'மாலை' என்னும் பெயர் சூட்டப்பட்டிருப்பதைப் பற்றி நாம் முன்னரே பேசியுள்ளோம். தொகை நூலைக் குறிக்கும் 'ஆந்தாலஜி' (Anthology) என்னும் ஆங்கிலச் சொல்லின் அடிப்படைச் சொல்லாகிய 'ஆந்தொலொழியா' என்னும் கிரேக்கச் சொல், 'மலர்களின் தொகுப்பு' என்னும் பொருள் உடையது என்பதும் நாம் முன்னரே அறிந்த செய்தி. முதல் கிரேக்கத் தொகை நூலுக்கு 'மாலை' (Garland of Meleager) என்னும் பெயர் கொடுக்கப்பட்டிருப்பதும் நாம் முன்பே அறிந்ததொன்று. எனவே, அன்று மக்களை மிகவும் கவர்ந்த ஆவிரம் பூ மாலையைக் குறிக்கும், 'களரியாவிரை' என்னும் பெயரைக் கொண்ட தமிழ்நூல் ஒரு தொகை நூலாகத் தான் இருக்கவேண்டும் என்ற முடிவுக்கு நாம் வரலாம்.

'தெரிந்ததிலிருந்து தெரியாததற்குச் செல்லுதல்' என்னும் உளநூல் முறைப்படி ஒன்று காண்போம். இன்று பாவேந்தர் பாரதிதாசனுடைய பாடல்களின் தொகுப்புநூல் ஒன்றுக்கு 'முல்லைக்காடு' என்னும் பெயர் தரப்பட்டுள்ளது. இவ்வாறே, அன்று பாடல் தொகுப்பு நூல் ஒன்று, 'ஆவிரைக் காடு-ஆவிரைக் களரி அதாவது களரியாவிரை, என்னும் பெயர் பெற்றிருந்தது.

இதுகாறும், இறையனார் அகப்பொருள் உரையில் தலைச் சங்க நூல்களாகக் குறிப்பிடப்பட்டுள்ள நான்கு நூல்களையுமே 'தொகை நூல்கள்' என்னும் கண்கொண்டு நாம் ஆராய்ந்து வந்தோம் எனலாம்.

ஒரு சிலர்க்கு இங்கே ஓர் ஐயப்பாடு எழலாம். அஃதாவது, தலைச்சங்கத்தில் இயற்றப்பட்ட நூல்கள் தனி முழுநூல்களாக இல்லாமல், பல உதிரிப் பாடல்களின் தொகுப்பு நூல்களாகவா இருந்திருக்கும்? என்ற ஐயப்பாடு தான் அது. எளிதில் விடை பகர்ந்து இந்த ஐயத்தைப் போக்க முடியும். கடைச்சங்க கால நூல்களாக இப்பொழுது நமக்குக் கிடைத்திருக்கும் நூல்களே தொகை நூல்களாக இருக்கும்போது, தலைச்சங்கத்து நூல்களின் 'தலையெழுத்து' என்னவாயிருந்திருக்கக் கூடும்? இந்த வினாவே நமது விடை! மற்றும், புலவர்கள் பலர் சேர்ந்து முச் சங்கங்களிலும் தமிழ் ஆராய்ந்ததாக இறையனார் அகப் பொருள் உரை கூறியிருப்பது ஈண்டு நினைவுகூறத் தக்கது. குழுவாக உள்ள பலரும் பாடிய பாடல்களைத் தொகுத்து நூல் களாக உருவாக்குவது இயற்கையே. இந்தக் காலத்திலும்' ஒரு மன்றத்தில் உள்ள அறிஞர்களின் ஆராய்ச்சிக்கட்டுரை களைத் தொகுத்து ஒரு நூலாக்கும் மரபு இருந்து வருகிற தல்லவா?

## இறையனார் அகப்பொருள் உரையின் தகுதி

இறையனார் அகப்பொருள் உரைப் பகுதியை அகச் சான் றாகக் கொண்டு, தமிழ்நூல் தொகுப்புக்கலையின் பழமைப் பெருமையைப்பற்றி இதுவரை ஆராய்ந்தோம். இந்த ஆராய்ச் சிக்கு அகச் சான்றாகத் துணைபுரியும் அளவிற்கு இந்த

இறையனார் அகப்பொருள் உரைக்கு உள்ள தகுதி என்ன? ஒரு சிலர்க்கு இப்படி ஓர் ஐயப்பாடு எழலாம் அல்லவா? இந்த உரையில் தரப்பட்டுள்ள சில செய்திகள் கற்பனையென்றும், உரையிலுள்ள புள்ளி விவரங்கள் உண்மைக்குக் கூடுதலானவை என்றும் சிலர் எண்ணக் கூடும். இருக்கலாம்-சில செய்திகள் மிகைப்படுத்தப்பட்டிருக்கலாம். ஆனால், எல்லாவற்றையுமே கற்பனை என்றோ, மிகைப்படுத்தப்பட்டவை என்றோ கூறிவிடுவதற்கில்லை. இந்தக் கருத்தை ஒழுங்கு செய்துகொள்ள, 'இறையனார் அகப்பொருள்' என்னும் நூல் தோன்றிய வரலாறு குறித்தும், அதன் உரை தோன்றிய வரலாறு பற்றியும் ஈண்டு ஒரு சிறிது விவரிக்க வேண்டும்.

நூல் வரலாறு:—ஒரு காலத்தில் (கடைச்சங்க காலத்தில்) பாண்டிய நாட்டில் வற்கடம் (பஞ்சம்) ஏற்பட்டதால், புலவர்கள் அனைவரும் வெளியேறிவிட நூல்கள் அழிந்து போயின. பின்னர், வளம் ஏற்பட்டதும், மீண்டும் நூல்கள் கிடைக்கலாயின-தோன்றலாயின. ஆனால் பொருளதிகாரம் மட்டும் கிடைக்கவில்லை. பொருளதிகாரம் இயற்றவல்லாரும் வந்தாரிலர். எனவே, பாண்டிய மன்னன் இது குறித்துக் கவலையுற்றான். அவனது கவலையைப் போக்க, இறையனாராகிய சிவபெருமான், ஓர் அகப் பொருள் நூல் இயற்றி யளித்தார். அதுதான் 'இறையனார் அகப்பொருள்' என்னும் நூலாகும். இந் நூலுக்குக் 'களவியல்' என்ற பெயரும் உண்டு. இந்நூல் தோன்றிய வரலாறாக இந்தக் கதை சொல்லப்படுகிறது.

இந்தக் கதையிலிருந்து நாம் உறிஞ்சி எடுத்துக் கொள்ள வேண்டிய சாறாவது:—அகப்பொருள் இலக்கண நூல்கள் ஒரு காலத்தில் கிடைக்காமல் அழிந்தொழிந்து மறைந்து போயின. அந் நேரத்தில், பாண்டியன் இறைவனிடம் வேண்டி முறையிட்டுக் கொண்ட விருப்பம் நிறைவேறும் வகையில், இறையனார் என்னும் புலவரால் இந்த நூல் செய்தளிக்கப்பட்டது. இதுதான் உண்மையாயிருக்க முடியும் இதைக் கொண்டு, இந்த நூலின் அருமை பெருமையை உணரலாம். இந்தநூல் தோன்றிய காலம் திட்ட வட்டமாகத் தெரியவில்லை. எப்படியும் இந்த

நூல் கடைச் சங்க காலத்திற்கு உட்பட்டதாகவே இருக்கக் கூடும்.

இனி, உரை வரலாறு வருமாறு;— இறைனார் அகப் பொருளுக்குக் கடைச் சங்கப் புலவர்கள் பலரும் உரை எழுதினர். அவர் உரைகளுள் எவர் உரை சிறந்தது என்று தேர்ந்தெடுக்கும் தலைமைப் பொறுப்பு, இறையனார் ஆணைப் படி, உப்பூரிகுடி கிழார் மகனாவான் உருத்திரசன்மன் என்பவனுக்கு அளிக்கப்பட்டது. அவனோ, பைங்கண்ணன், புன்மயிரன், ஐயாண்டு அகவையன், ஓர் ஊமைப்பிள்ளை யாவான். இவன் முருகனின் மறு பிறவி என்று சொல்லப் படுகிறான். இவன் முன்னிலையில் புலவர்கள் தத்தம் உரைகளைப் படிக்க வேண்டுமாம். எவர் உரையைப் படிக்கும் போது இவன் மகிழ்ச்சிக் கண்ணீர் சொரிந்து மெய்ம்மயிர் சிலிர்க்கின்றானோ அவர் உரையே சிறந்தது என்ற முடிவு முன் கூட்டியே இறையனாரால் வகுத்துக் கொடுக்கப்பட்டது. அவ்வாறே உரைகள் படிக்கப்பட்டன. நக்கீரனாரின் உரை படிக்கப்பட்டபோது மட்டும் உருத்திரசன்மன் மகிழ்ச்சிக் கண்ணீர் சொரிந்து மெய்ம்மயிர் சிலிர்த்தான் எனவே, நக்கீரனாரின் உரையே சிறந்த உரை - உண்மையுரை என்ற தீர்ப்பு எல்லாராலும் ஏற்றுக் கொள்ளப்பட்டது. உரை தோன்றிய வரலாறாக இவ்வாறு கதை சொல்லப்படுகிறது.

இந்தக் கதையிலிருந்து நாம் அறிய வேண்டுவதாவது:— நக்கீரனாரின் உரையே சிறந்த உரையெனச் சங்கப் புலவர்களாலேயே ஏற்றுக் கொள்ளப்பட்டது; எனவே, நாளடைவில் மற்றவர் உரைகள் மறைந்துபோக, நக்கீரனார் உரையே நின்று நிலைத்தது என்பதாகும். ஆனால், இப்பொழுது நம் கையில் நடமாடுகின்ற இறையனார் அகப்பொருள் உரையில்-சில இடங்களில், நக்கீரனார் படர்க்கையில் குறிப்பிடப்பட்டிருப்பதால், இந்தவுரை நக்கீரனார் எழுதியதன்று-என்று சிலர் கூறுவர். இதனை உருத்திரசன்மன் எழுதிய உரை என்பாரும். உளர். இதற்குத் தீர்வு யாது?

இப்பொழுது நாம் பெற்றிருக்கும் உரை முழுவதும்

நக்கீரனார் எழுதியதன்று. முதலில் அவர் உரை எழுதியது உண்மைதான். பின்னர், அந்த உரை பலர் கைப்பட்டு, சிற்சில பகுதிகள் உடன் சேர்க்கப்பெற்று, இப்பொழுது உள்ள நிலையை அடைந்தது! வடமொழியிலுள்ள வேதங்களும், கிறித்துவ மறையாகிய பைபிளும் பலர் கைப்பட்ட பின்னரே இப்பொழுது உள்ள நிலைமையைப் பெற்றுள்ளன என்னும் உண்மை ஈண்டு ஒப்பு நோக்கற்பாலது. எனவே இந்த உரையின் முதல் ஆசிரியர் நக்கீரனாரே. உருத்திரசன்மரோ வேறுபிறரோ இதனை எழுதவில்லை. இதற்கு உரையிலேயே அகச்சான்று உள்ளது. நக்கீரனாருக்குப்பின் பலர் கைப்பட்டது என்றோமே! அந்தப் பலருள், யாரோ ஒருவரோ அல்லது இறுதியான வரோ எழுதிச் சேர்த்துள்ள உரைப்பகுதி, அகச் சான்றுக் காக ஈண்டு அப்படியே வருமாறு:

“உப்பூரி குடிகிழார் மகனாவான் உருத்திர சன்மனாவான் செய்தது இந்நூற்கு உரை என்பாரும் உளர்; அவர் செய்திலர்; மெய்யுரை கேட்டார் என்க. மதுரை ஆலவாயிற் பெருமானடி களாற் செய்யப்பட்ட நூற்கு நக்கீரனாரால் உரை கண்டு, குமார சுவாமியாற் கேட்கப்பட்டது என்க. இனி உரை நடந்து வந்தவாறு சொல்லுதும்:

மதுரைக் கணக்காயனார் மகனார் நக்கீரனார் தம்மகனார் கீரங் கொற்றனார்க்கு உரைத்தார்; அவர் தேனூர் கிழார்க்கு உரைத்தார்; அவர் படியங்கொற்றனார்க்கு உரைத்தார்; அவர் செல்வத்தாசிரியர் பெருஞ்சுவனார்க்கு உரைத்தார்; அவர் மணலூர் ஆசிரியர் புளியங்காய்ப்பெருஞ்சேந்தனார்க்கு உரைத் தார்; அவர் செல்லூராசிரியர் ஆண்டைப் பெருங்குமாரனார்க்கு உரைத்தார்; அவர் திருக்குன்றத் தாசிரியர்க்கு உரைத்தார்; அவர் மாதளவனார் இளநாதனார்க்கு உரைத்தார்; அவர் முசிறியாசிரியர் நீலகண்டனார்க்கு உரைத்தார். இங்ஙனம் வருகின்றது உரை.”

மேலுள்ளது, இறையனார் அகப்பொருளின் முதல் நூற் பாவின் (சூத்திரத்தின்) கீழே, பாயிரம் என்னும் தலைப்பின் கீழ்த் தரப்பட்டுள்ள பகுதியிலிருந்து அப்படியே எடுக்கப்பட்ட தாகும். இதில் தெரிவிக்கப்பட்டுள்ள உரை நடந்துவந்த

வரலாறு, நக்கீரனாரே இந்த உரையின் முதல் ஆசிரியர் என்பதற்குத் தக்க அகச் சான்றாகும். எனவே, நக்கீரனாரின் மரபின் வழிவழி வந்த தகுதிமிக்க ஒரு புலவரே, நக்கீரனாரின் உரையுடன் முச்சங்கங்களைப் பற்றிய செய்திகளையும் இணைத்திருக்கிறார் என்பது தெளிவு. ஆகவே, மூன்று சங்கங்களிலும் தோன்றிய நூல்களைப் பற்றி இறையனார் அகப்பொருள் உரையில் குறிப்பிடப்பட்டுள்ள பகுதி, தகுதிமிக்க புலவர் ஒருவரால் எழுதப்பட்டதேயாகும். அவர் குறிப்பிட்டுள்ள நூல்கள் இன்று கிடைக்கவில்லை என்பதற்காக, அவற்றைக் கற்பனைப் பொருள்கள் என்று கூறிவிட முடியாது. சில நூற்றாண்டுகளுக்கு முன்பு எழுதப்பட்டுள்ள உரை நூல்கள் பலவற்றில் குறிப்பிடப்பட்டுள்ள உரை நூல்களேகூட இன்று நமக்குக் கிடைக்கவில்லையல்லவா? இவை இந்தப் பிற்கால உரையாசிரியர்களின் காலத்தில் இருந்தவையே. பின்னர் மறைந்து விட்டிருக்கின்றன. அவற்றுள் சிலவற்றை, இலங்கை சி.வை. தாமோதரம்பிள்ளை, உ. வே. சாமிநாதையர் முதலியோர் அண்மைக் காலத்தில் வெளிக் கொணர்ந்தனர். இதுபோலவே, இறையனார் அகப்பொருள் உரையில் குறிப்பிடப்பட்டுள்ள தலைச்சங்க நூல்களும் இடைச்சங்க நூல்களும் அந்த உரையாசிரியர் காலத்தில் ஆட்சியில் இருந்திருக்கும்; அவை பின்னர் மறைந்து போயின.

எனவே, தலைச்சங்க காலத்துத் தொகைநூல்களாக இறையனார் அகப்பொருள் உரையில் எடுத்துக்காட்டப்பட்டுள்ள நூல்கள் தொல்காப்பியத்துக்குமுன் ஒரு காலத்தில் இருந்தவையே என்னும் உண்மையை, ஐயம் திரிபு இன்றி உறுதியாக நம்பலாம்.

இறையனார் அகப்பொருள் உரைப் பகுதியைக் கொண்டே முச்சங்க காலத்துத் தொகை நூல்களை அறிமுகம் செய்ய வேண்டி யிருத்தலின், இந்த உரை நூல் பற்றி இந்தத் தலைப்பில் இவ்வளவு விரிவாக எழுத நேர்ந்தது.

இறையனார் அகப்பொருள் உரையை அடிப்படையாகக் கொண்டு இந்தச் செய்திகளைப் பின்வந்த சிலரும் எழுதியுள்ளனர் என்பதை ஈண்டு நினைவுபடுத்தாமல் விடுவதற்கில்லை. அடியார்க்கு நல்லார், சிலப்பதிகாரம் - வேனிற்காதை உரைப்

பகுதியின் ஓரிடத்தில், "...நாலாயிரத்து நானூற்று நாற்பத் தொன்பதின்மர் எண்ணிறந்த பரிபாடலும் முதுநாரையும் முதுகுருகும் களரியா விரையும் உள்ளிட்டவற்றைப் புனைந்து தெரிந்து நாலாயிரத்து நானூற்று நாற்பதிற்றி யாண்டு இரீஇயினார்......" – எனக் கூறியிருப்பது காண்க. மற்றும், பாண்டி நாட்டுச் செவ்லூர்ச் சிற்றம்பலக் கவிராயரின் இல்லத் தில் இருந்த பழைய ஓலைச் சுவடி ஒன்றில் உள்ள ஒரு நீள மான அகவற் பாடலிலும் இச்செய்தி குறிப்பிடப்பட்டுள்ளது. அதிலிருந்து குறிப்பிட்ட பகுதி வருமாறு:-

"அனையர் நானான் காயிர நூற்றொடு
நாற்பத் தொன் பதின்மர் பார்க்கிற் செந்தமிழோர்
புரிந்தன செய்யுள் பெரும் பரிபாடலும்
முதுமையடுத்த நாரையும் குருகும்
கதியுறச் செய்த களரியா விரையும்
ஆங்கவ ரிருந்ததும் அத்தொகை யாகும்......"

இந்தப் பாடல் பகுதியில், தலைச்சங்க காலப் பரிபாடல் நூல், 'பெரும் பரிபாடல்' எனக் கூறப்பட்டிருப்பது எண்ணத் தக்கது மற்றும், இந்த நான்கு நூல்களையும் 'செய்யுள்' எனக் கூறி யிருப்பதை நோக்குங்கால், முது நாரையும் முதுகுருகும் இசைத் தமிழ் நூல்களாயினும், இசையிலக்கணம் கூறும் நூல்கள் அல்ல-இசைத் தமிழ்ப் பாடல்களின் தொகுப்பு நூல்களே என்பது புலனாகும். இவ்வாறு, இன்னும் பலர் இந்நூல்கள் பற்றிக் கூறியிருக்கலாம்.

தலைச்சங்ககாலத் தொகை நூல்களை இம்மட்டோடு நிறுத்திக்கொண்டுத், இனிக் கடைச்சங்க காலத் தொகை நூல்களைப் பற்றி ஆராய்வோம்.

---

# 2. கடைச்சங்க காலத்துக்கு முன்

## இடைச் சங்க காலம்

தொல்காப்பியம் இடைச்சங்க நூலாகும். இதற்கு முற்பட்ட நூல்கள் தலைச்சங்க நூல்களாகும். அவை குறித்து முன்னர் ஆராய்ந்தோம். இடைச்சங்கப் புலவர்கள் தொல்காப்பியத்தை ஆதார நூலாகக் கொண்டு தமிழ் ஆராய்ந்ததாக இறையனார் அகப்பொருள் உரை கூறுகிறது. எனவே, மூவாயிரத்து எழுநூறு (3700) ஆண்டுக்காலம் நடைபெற்ற இடைச்சங்கத்தின் தொடக்கக் காலத்திலேயே தொல்காப்பியம் தோன்றிவிட்டிருக்க வேண்டும். தொல்காப்பியத்தை ஒட்டிய காலமும், அதற்குப் பிற்பட்ட காலமும், கடைச்சங்கம் தோன்றியதற்கு முற்பட்ட காலமும், 'இடைச்சங்க காலம்' எனப்படும். இந்தக் காலத்தில் தோன்றிய நூல்களாக, "அவர்களாற் பாடப்பட்டன கலியும், குருகும், வெண்டாளியும், வியாழமாலை அகவலும் என இத்தொடக்கத்தன என்ப"—என்று இறையனார் அகப்பொருள் உரை, நான்கு நூல்களைப் பெயர் சுட்டிக் குறிப்பிட்டுள்ளது. இனி, இந்நான்கனுள் ஒவ்வொன்றையும் பற்றித் தனித் தனியே ஆராய்வோம்.

5. கலி

தலைச்சங்கத்தனவாக நான்கு நூல்கள் முன்னர்க் கூறப்பட்டுள்ளன. நமது ஆராய்ச்சியின்படி அந்த நான்கினையும் தொகை நூல்களாகக் கொள்ளின், இந்தக் 'கலி' என்னும் நூலினை ஐந்தாவது தொகை நூலாகக் கொள்ளலாம். 'மிரண்டவன் கண்ணுக்கு இருண்டதெல்லாம் பேய்' என்னும் பழமொழிக்கு ஏற்ப, தொகை நூல்களைப் பற்றி நூல் எழுதத் தொடங்கின், எந்த நூலைப் பார்த்தாலும் தொகை நூல் என்று கூறி விடுவதா? அப்படியில்லை. உண்மையில் 'கலி' என்பது, ஒரு தொகை நூல்தான். 'கலி' என்பது பாடல் வகைகளுள் ஒன்றாகிய கலிப்பாவைக் குறிக்கும் என்பது அனைவரும் அறிந்த செய்தி. எனவே அகப்பொருள் பற்றிய பல கலிப்பாக்களின் தொகுப்பே இந்தக் 'கலி' என்னும் நூல் என்பது போதரும்.

இந்தக் கருத்தை உறுதிப்படுத்த நாம் பெரிய முயற்சி எடுத்துக் கொண்டு தொல்லைப்பட வேண்டியதில்லை. இப்பொழுது நமக்குக் கிடைத்திருக்கின்ற கடைச்சங்க காலப் பரிபாடல் தொகை நூலைப் போலவே, தலைச்சங்க காலத்திலும் ஒரு பரிபாடல் தொகை நூல் இருந்தது என்பதை முன்னர்க் கண்டோம். இவ்வாறே, இப்பொழுது நமக்குக் கிடைத்திருக்கின்ற கடைச்சங்க காலக் கலித்தொகை நூலைப் போலவே இடைச்சங்க காலத்திலும் ஒரு கலித்தொகை நூல் இருந்திருக்கிறது. அந்த நூல்தான் இந்தக் 'கலி' என்பது. பரிபாடலும் ஒருவகை இசைப் பாவினத்தைச் சேர்ந்ததாகும். கலியும் ஒருவகை இசைப்பாவாகும். இதனைத் தொல்காப்பியம்-செய்யுளியலில் (242) பேராசிரியர் எழுதியுள்ள, "அவையாவன, கலியும் பரிபாடலும் போலும் இசைப்பாட்டாகிய செந்துறை மார்க்கத்தன வென்பது".-என்னும் உரைப்பகுதியாலும், அதே (242) நூற்பா உரையில் நச்சினார்க்கினியர் எழுதியுள்ள, "அவ்வாறு வருவன, கலியும் பரிபாடலும் போலும் இசைப் பாட்டாகிய செந்துறை மார்க்கத்தன என்றுணர்க" – என்னும் பகுதியாலும் அறியலாம். எனவே, பரிபாடல் தொகைநூலைப் போலவே கலித்தொகை நூலும் பாவின் அடிப்படையில் தொகுக்கப்பட்டுப் பாவால் பெயர் பெற்றதாகும். இதனைப் 'பெருங் கலித்தொகை' என்னும் பெயரால், செவ்வூர்ச் சிற்றம்பலக்கவிராயர் வீட்டு ஓலைச்சுவடிப் பாடல் குறிப்பிடுகிறது.

### 6. குருகு

அடுத்தபடியாகக் 'குருகு' என்னும் நூல் குறிப்பிடப் பட்டுள்ளது. தலைச்சங்கத்தனவாகக் குறிப்பிடப்பட்டுள்ள முதுநாரை, முதுகுருகு என்னும் நூல்கள் பற்றிக் கூறியுள்ள கருத்துக்களையெல்லாம் இதற்கும் கொள்ள வேண்டும். அங்ஙனமெனில், இஃதும் தமிழிசைப் பாடல் தொகை நூல் என்பது போதரும்.

### 7. வெண்டாளி

குருகைத் தொடர்ந்து 'வெண்டாளி' என்னும் நூல் கூறப் பட்டுள்ளது. களரி யாவிரையைப் போலவே 'வெண்டாளி'

என்பதும் ஒருவகை மலராகும். தாளி என்னும் பெயரில் மலரும் உண்டு-செடியும் உண்டு-கொடியும் உண்டு. இங்கே 'வெண்மை' என்னும் அடைமொழி சேர்க்கப்பட்டுள்ளது. வெண்டாளி மலரால் தொடுக்கப்பட்ட மாலையை அணிந்து கொள்வது உண்டு. காட்டுமல்லிகையோடு வெண்டாளி மலரையும் மாலையாகத் தொடுத்து, வேலன் அணிந்து கொள்வதாகத் திருமுருகாற்றுப்படை கூறுகிறது. "குளவியொடு வெண்கூதாளம் தொடுத்த கண்ணியன்" என்பது திருமுருகாற்றுப்படை (192) அடியாகும். குளவி என்பது காட்டுமல்லிகை. கூதாளம் என்பது வெண்டாளி. கண்ணி என்பது மாலை. இந்த அடிக்கு நச்சினார்க்கினியர் எழுதியுள்ள, "காட்டுமல்லிகையுடனே வெண்டாளியையும் கட்டின கண்ணியை யுடையனாய்" - என்னும் உரைப்பகுதியைக் காண்க. இதனால் வெண்டாளிக்குக் கூதாளம் என்னும் பெயரும் உண்டு என்பதை அறியலாம். இன்னும், இதனைப் பட்டினப்பாலையில் உள்ள, "வெண்கூதாளத்துத் தண் பூங் கோதையர்" (அடி-85) என்னும் பகுதிக்கு நச்சினார்க்கினியர் எழுதியுள்ள, "வெண்டாளியினது தண்ணிய பூவாற் செய்த மாலையினையுடையராய்"- என்னும் உரைப் பகுதியானும் தெளியலாம்.

வெண்டாளி என்பதற்கும் கூதாளம் என்பதற்கும் சொல்லமைப்பிலும் நெருங்கிய தொடர்புண்டு. 'கூதாளி' என்னும் சொல்லே கூதாளம், கூதளம் என்றெல்லாம் ஆயிற்று என்று நச்சினார்க்கினியர் தொல்காப்பிய உரையில் கூறுகின்றார். தொல்காப்பியம்-எழுத்ததிகாரம் உயிர் மயங்கியலில் உள்ள

"புளிமரக் கிளவிக்கு அம்மே சாரியை" (42)
"ஏனைப் புளிப்பெயர் மெல்லெழுத்து மிகுமே" (43)
"வல்லெழுத்து மிகினும் மானம் இல்லை
ஒல்வழி யறிதல் வழக்கத் தான" (44)

என்னும் நூற்பாக்களின் இறுதியில் நச்சினார்க்கினியர் எழுதியுள்ள உரையிலிருந்து ஒரு பகுதி வருமாறு:—

"...வழக்கத்தான என்றதனான் இவ் வீற்றுக்கண் எழுத்தோத்தும் இலேசுமின்றி வருவன எல்லாவற்றிற்கும் ஏற்குமாறு

செய்கையறிந்து முடித்துக் கொள்க...கூதாளி, கணவிரி என்பன வற்றிற்கு அம்முக் கொடுத்து இகரங் கெடுத்துக் கூதாளங்கோடு, கணவிரங்கோடு செதிள்தோல் பூ என முடிக்க. 'கூதள நறும் பூ' எனக் குறைந்தும் வரும், இனி இவை மகர ஈறாயும் வழங் கும். அது 'வெண்கூதாளத்துத் தண்பூங் கோதையர்' என அத்துப் பெற்று மகரம் கெட்டும், 'கணவிர மாலையிடூஉக் கழிந்தன்ன' என மகரம் கெட்டும். கணவிரங்கோடு என மெல் லெழுத்துப் பெற்றும் நிற்கும்.''...

இந்த உரைப்பகுதியால், கூதாளி என்பதே கூதாளம், கூதளம் என்றாயிற்று எனத் தெளியலாம். அடிப்படைச்சொல் லாகிய கூதாளி ஏன்பதற்கும், வெண்தாளி (வெண்டாளி) என்பதற்கும் சொல்லமைப்பில் ஒற்றுமை இருக்கிறதல்லவா? திருமுருகாற்றுப் படையிலும் பட்டினப் பாலையிலும் உள்ள 'வெண்கூதாளம்' என்பதற்கு. 'வெண்டாளி' என நச்சினார்க் கினியர் உரை கூறியுள்ள பொருத்தமும் ஈண்டு ஒப்புநோக்கற் பாலது. அவ்வளவு ஏன்? குறுந்தொகையில், 'குறுந்தாட் கூதளி யாடிய நெடுவரை' என்னும் (60) பாடலில் 'கூதளி' எனக் குறிப்பிடப்பட்டிருப்பது காண்க. இதுவே, வேறோர் ஓலைச் சுவடியில் ''குறுந்தாட் கூதாளி'' என்றுள்ளது. இதைக் கொண்டு, நச்சினார்க்கினியர் கூறியிருப்பது சரிதான் என உணரலாம். எனவே, கடைச்சங்க இலக்கியங்களில் கூதளம், கூதாளம் என வரும் இடங்களிலெல்லாம் 'வெண்டாளி' என நாம் துணிந்து பொருள் கொள்ளலாம். இந்த வெண்டாளி, மக்களிடையேயும் புலவர்களிடையேயும் மிகுந்த செல்வாக்குப் பெற்றிருந்தது என் பதைத் தெளிவுறுத்தச் சங்க இலக்கியங்களிலிருந்து மேலும் சில செய்திகள் காண்போம்.

வெண்டாளி மாலை விரும்பி அணியப்பட்டது என்னும் செய்தியை முருகாற்றுப்படையாலும் பட்டினப்பாலையாலும் முன்னர் அறிந்தோம். இன்னும் இதனை, நற்றிணையில் உள்ள,

''குல்லை குளவி கூதளம் குவளை
இல்லமொடுமிடைந்த ஈர்ந்தண் கண்ணியன்''

என்னும் பாடல் (376) பகுதியாலும், புறநானூற்றில் உள்ள

"நாறிதழ்க் குளவியொடு கூதளம் குழைய" (380)

என்னும் பகுதியாலும், அகநானூற்றில் உள்ள

"குளவியொடு மிடைந்த கூதளங் கண்ணி" (272)

"விசும்பு விசைத்தெறிந்த கூதளங் கோதையின்" (273)

என்னும் பாடல் பகுதிகளாலும் அறிந்து கொள்ளலாம். மற்றும், வெண்டாளி என்னும் பெயருக்கு ஏற்ப இம் மலர் வெண்மை நிறம் உடையது என்பதனைப் பட்டினப்பாலையாலும், முருகாற்றுப்படையாலும் முன்னர் அறிந்ததன்றி, மேலும் குறுந்தொகையில் உள்ள

'வெண்கூதாளத் தந்தூம்பு புதுமலர்' (282)

என்னும் பகுதியாலும், அகநானூற்றில் உள்ள

பைம்புதல் நனிசினைக் குருகிருந் தன்ன
வண்பிணி யவிழ்ந்த வெண்கூ தாளத்து" (178

'விசும்பு விசைத்தெறிந்த கூதளங் கோதையின்
பசுங்கால் வெண்குருகு வாப்பறை வளைஇ
ஆர்கலி வளவயிற் போதொடு பரப்ப" (273)

என்னும் பாடல் பகுதிகளாலும், சிலப்பதிகாரத்திலுள்ள

'விரிமலர் அதிரலும் வெண்கூ தாளமும்'

என்னும் (13 – 156) பகுதியாலும் அறியலாம். கிளையில் வெள்ளைக் குருகு அமர்ந்திருப்பதுபோல, வெண்டாளி மலர்கள் கொத்துக் கொத்தாகப் பூத்துள்ளன என்றும், வெண்டாளி மாலையை விண்ணில் விரைந்து எறிந்தாற்போல வெள்ளைக் குருகு சிறகடித்து விண்ணில் விரைந்தெழுந்து சென்றது என்றும், அகநானூற்றுப் பாடல் (178,273) பகுதிகளில் கூறியிருப்பது ஈண்டு மகிழ்தற்குரியது. எனவே, மேற்காட்டியுள்ள இலக்கிய அகச் சான்றுகளைக் கொண்டு, கூதாளம் என்பது, வெண்மையான வெண்டாளி மலரே என்னும் உண்மை! நன்கு புலனாகும்.

ஒரு நூலுக்குப் பெயராக வைக்கும் அளவிற்கு வெண்டாளி

மலரிடம் சில தகுதிகள் உண்டு. அவற்றுள் இன்றியமையாத தகுதி, மக்கள் உள்ளத்தைத் கவரும் நறுமணமாகும். இந்த மலர் மிகவும் மணம் உடையது என்பதனை, நற்றிணையி லுள்ள,

'கூதிர்க் கூதளத்து அலரி நாறும்
மாதர் வண்டின் நயவருந் தீங்குரல், (244)

'கூதள நறும் பொழில் புலம்ப' (313)

என்னும் பகுதிகளாலும், அகநானூற்றில் உள்ள

'சிலம்பிற் கூதளங் கமழும் வெற்பின்' (47)

'குளவியொடு மிடைந்த கூதளங் கண்ணி
அசையா நாற்றம் அசைவளி பகர' (272)

என்னும் பகுதிகளாலும் நன்கறியலாம். கூதள மலர்களில் மொய்த்தலால் வண்டுகளின்மேல் அம் மலர் மணம் வீசுவதாகவும், கூதள மலர்களால் பொழில் (சோலை) மணம் பெற்றிருப்பதாகவும் நற்றிணை கூறுகிறது. கூதள மலர்களால் மலை முழுதும் மணப்பதாகவும், கூதள மலர்களின் விட்டு நீங்காத நறுமணத்தைக் காற்று வெளியில் பரப்புவதாகவும் அகநானூறு கூறுகிறது. இவ்வாறாக, ஒரு நூலுக்குப் பெயர் வைக்கும் அளவு, வெண்டாளி (கூதாளி) புலவர்களிடையே செல்வாக்குப் பெற்றிருந்தது.

அடுத்து,- வெண்டாளி மலர்கள் அங்கொன்றும் இங்கொன்றுமாக இல்லாமல், அடர்ந்து, தொகுப்பாக நெருங்கி மலர்ந்திருக்கும் இயல்புடையதாயிருப்பது, பல பாடல்களின் அடர்ந்த தொகுப்பாகிய ஒரு நூலுக்குப் பெயர் வைப்பதற்கு ஏற்ற தகுதி பெற்றதாகக் கருதப்படும். இந்த மலருக்கு இந்த இயல்பு உண்டு என்பதனைக் குறுந்தொகையில் உள்ள

'நீர்திகழ் சிலம்பின் ஓராங்கு அவிழ்ந்த
வெண்கூ தாளத் தந்தூம்பு புதுமலர்' (282)

என்னும் பகுதியாலும், அகநானூற்றில் உள்ள

'தண்ணயத்து அமன்ற கூதளங் குழைய' (68)

என்னும் பகுதியாலும் அறியலாம். குறுந்தொகையில் உள்ள 'ஓராங்கு அவிழ்ந்த வெண் கூதாளம்' என்னும் தொடருக்கு, 'ஒருசேரத் தொகுப்பாய் மலர்ந்திருக்கிற வெண்டாளி' என்பது பொருளாம். அகநானூற்றில் உள்ள 'அமன்ற கூதளம்' என்பதற்கு, 'நெருங்கிய - நிறைந்த - திரண்ட வெண்டாளி' என்பது பொருளாம். 'அமன்ற' என்பதற்கு 'அமல்' பகுதியாகும். அமல் - அமலை என்றால் 'திரட்சி' என்று, பொருளாம். எனவே, பாடல்களின் திரட்சியாகிய - தொகுதியாகிய ஒரு நூலுக்கு 'வெண்டாளி' என்னும் பெயர் வைத்தது பொருத்தமே.

இதை ஒட்டினாற்போல் இன்னொரு கருத்தும் சொல்ல வேண்டியுள்ளது. ஆவிரம் பூ கொத்துக் கொத்தாக மலர்ந் திருப்பது போல, வெண்டாளியும் கொத்துக் கொத்தாக-குலை குலையாக மலர்ந்திருக்கும். இதனை, அகநானூற்றில் உள்ள

'பைம்புதல் நளிசினைக் குருகிருந் தன்ன
வண்பிணி அவிழ்ந்த வெண்கூ தாளத்து
அலங்குகுலை அலரி தீண்டித் தாதுக'

என்னும் பாடல் (178) பகுதியால் நன்கறியலாம். வெண்டாளி மலர் குலைகுலையாய் - கொத்துக் கொத்தாய் மலர்ந்திருக் கும் காட்சி, கிளையில் வெள்ளைக் குருகு அமர்ந்திருக்கும் தோற்றம்போல் தெரிகிறதாம். வெண்டாளி மலர் குலை குலையாக இருப்பதனால்தான் வெண்குருகுபோலத் தோன்று வதாகப் புலவர் பாட முடிந்தது. ஒரு பாடல் தொகைநூலுக்கு வெண்டாளி என்னும் பெயர் சூட்டியது மிகவும் பொருத்தம் என்பதை உறுதிசெய்ய இந்த அகச்சான்று ஒன்றே போதுமே? பல மலர்கள் சேர்ந்தது ஒரு குலை-ஒரு கொத்து, இதே போலப் பல பாடல்கள் சேர்ந்தது ஒரு தொகைநூல்.

இதுகாறுங் கூறியவற்றிற்கு மகுடம் வைத்தாற்போன்ற அமைப்புடைய ஒரு பாடலை இனிப் பார்ப்போம். முதலில் அந்தப் பாடலின் கருத்து வருமாறு: - 'ஒரு பெண்யானை தன் கணவனாகிய களிற்றைக் காணாது, காட்டுச் சோலையில் மயங்கித் தேடித் திரிகிறது. ஆண் யானையோ, அப்பக்கமாகப் போன அரிமாவுக்கு அஞ்சிக் காட்டுச் செறிவில் மறைந்து

கொண்டிருக்கிறது. காட்டுச் செறிவிலிருந்து தன்னை வேறு பிரித்துக் கண்டுபிடிக்க முடியாதபடி களிறு மறைந்திருப்பது எதுபோன் றிருக்கிறதெனில், வெண்டாளி மலர்கள் கொத்துக் கொத்தாக நிரம்பப் பூத்திருக்கும் கிளையில் ஒருவெண் குருகு அமர்ந்து தன்னை வேறுபிரித்து அறியமுடியாத படி மறைந் திருப்பது போன்றிருக்கிறது'– இந்த நயமான கருத்தமைந்த இனிய பாடல், யாப்பருங்கலத்தின் 30,49ஆம் நூற்பாக்களின் உரையிடையே மேற்கோளாகத் தரப்பட்டுள்ளது; பாடல் வரு மாறு:—

'குருகு வெண்டாளி கோடுபுய்த் துண்டென
மாவழங்கு பெருங்காட்டு மழகளிறு காணாது
மருள்பிடி திரிதருஞ் சோலை
அருளா னாகுதல் ஆயிழை கொடிதே.'

இந்தப் பாடலால், வெண்டாளி வெண்மையானது; கொத் துக் கொத்தாக– குலையாகப் பூக்கக்கூடியது, குருகுக்கும் கொத்துக்கும் வேறுபாடு தெரியாத தோற்றம் உடையது; சோலையில் பூத்து மணந்து பொலிவுற்றிருப்பது- என்னும் கருத்துக்களை அறியலாம். இந்தக் கருத்துக்கள் முன்னரே கூறப்பட்டிருப்பினும், 'கூதளம்' –கூதாளம் என்னும் ஒட்டுப் பெயரால் சங்க நூல்களிலிருந்து எடுத்துக் காட்டப்பட்டன; ஆனால் இந்தப் பாடலில். 'வெண்டாளி' என்னும் நேர்ப் பெயராலேயே கூறப்பட்டிருப்பது விதந்து குறிப்பிடத் தக்க தாகும். வெண்டாளி என்னும் பெயரால்தானே நூலின் பெயர் வழங்கப்படுகிறது!

வெண்டாளி மலரின் மேன்மையை விளம்ப இங்கே இன் னுமொரு செய்தி காத்துக் கிடக்கிறது. அந்தக் கால வழக் கப்படி, தினைப் புனம் காப்பதற்காகத் தலைமகள் ஒருத்தியும் அவள் தோழியும் சில நாட்களாகச் சோலைப்பக்கம் வந்து தங்கியிருந்தனர். தினை முதிர்ந்துவிட்டது. அறுவடை நடக்கப் போகிறது. இனி இவர்கட்கு இங்கு வேலையில்லை. பொழில் புறத்தை விட்டு ஊருக்குத் திரும்ப வேண்டியதுதான். இதனைத் தோழி தலைவியிடம் தெரிவிக்கின்றாள். 'தலைவியே! தினை

முதிர்ந்து விட்டது. நமது வேலையும் முடிந்தது. இனி நாம் இந்தப் பொழில் (சோலை) தனித்துப் புலம்பும்படி நம் ஊருக்கு மீண்டு செல்ல வேண்டும் போல் தோன்றுகிறது., -

இது தோழி கூற்று. இதனை நற்றிணையிலுள்ள

**'கூதள நறும் பொழில் புலம்ப ஊர்வயின்**
**மீள்குவம் போலத் தோன்றும்'** (313)

என்னும் பாடல் பகுதி அறிவிக்கிறது. தாங்கள் பிரிந்து விடின், பொழில் தனித்துப் புலம்பும் எனக் கலலைப்படுகிறார்கள். அந்தப் பொழில் எத்தகையது'! நறுமணம் மிக்கது. அந்த நறு மணம் எதனால் கிடைத்தது? கூதள (வெண்டாளி) மலர் களால் கிடைத்தது. அந்தப் பொழிலுக்குப் பெயர் என்ன? கூதள நறும் பொழில்-வெண்டாளிச் சோலை. எனவே, இந்தப் பெண்களுக்கு வெண்டாளி மலர்ச் சோலை விருப்பத்திற்கு உரிய இடம் என்பது புலப்படும்.

இவ்வாறாக, மக்களிடையேயும் புலவர்களிடையேயும் பெரிய செல்வாக்குப் பெற்றிருந்த வெண்டாளியின் பெயரால் ஒரு தொகை நூல் வழங்கப்படுவதில் வியப்பென்ன இருக்க முடியும்!

இங்கே மற்றொரு கருத்தையும் நினைவு செய்ய வேண்டியுள்ளது. தாமரை மலரில் வெள்ளையும் உண்டு - சிவப்பும் உண்டு. வெள்ளையினின்றும் வேறு பிரித்துணர்த்தச் 'செந்தாமரை' என்றும், சிவப்பினின்றும் வேறு பிரித்தறிவிக்க 'வெண்டாமரை' என்றும் அதற்குப் பெயர் வெவ்வேறாக வழங்கப்படுவதைக் காண்கிறோம். அதேபோல, வெண் கூதாளம்- வெண்டாளி என்றால், செங்கூதாளம் ஒன்று இருக்க வேண்டுமே! ஆம், உண்டு - செங்கூதாளமும் இருக்கிறது. இதனை, சிலப்பதிகாரம்-ஊர்காண் காதையில் உள்ளது.

**''சிறுமலைச் சிலம்பிற் செங்கூ தாளமொடு**
**நறுமலர்க் குறிஞ்சி நாண்மலர் வேய்ந்து''**

என்னும் (அடி: 88) பகுதியில் தெளிவாக உணரலாம். எனவே, செங்கூதாளமும் இருப்பினும் அது சிறுபான்மையது. வெண்

கூதாளமே மிகுதியாயுள்ளது. தாமரை இனத்தில் வெண்டா மரை குறைவு; செந்தாமரை மிகுதி. இதற்கு நேர்மாறாக, கூதாள இனத்தில் செங்கூதாளம் குறைவு, வெண்கூதாளமே மிகுதி. எனவேதான், மக்களிடையேயும் புலவர்களிடையேயும் வெண்கூதாளம் இத்துணை பெருமை பெற்றுள்ளது. அதனால் தான், பல பாடல்களின் தொகுப்பு நூலுக்கு 'வெண்டாளி' என்னும் விருப்பமான பெயர், இடைச்சங்க காலத்தில் இட்டு வழங்கப்பட்டது.

இதுகாறுங் கூறியவற்றால், இடைச்சங்க காலத்தாய வெண்டாளி என்னும் நூல், தலைச்சங்க காலத்தாய களரியா விரை என்னும் நூலைப்போல், பூவின் பெயரால் வழங்கும் ஒரு தொகை நூல் என்னும் முடிபு பெறப்படும். களரியாவிரை என்னும் நூலின் பேரால் முன்பு கூறியுள்ள பொதுச் செய்தி களை யெல்லாம் வெண்டாளி என்னும் இந்நூலுக்கும் கொள்க.

8. வியாழ மாலை அகவல்

வெண்டாளியை யடுத்து, 'வியாழ மாலை அகவல்' என் னும் நூல் இறையனார் அகப்பொருள் உரையில் குறிப்பிடப் பட்டுள்ள தல்லவா? இந்த நூலும் ஒரு தொகை நூலாகத்தான் இருக்கமுடியும். தொகை நூல் என்னும் அறிவிப்பு, நூலின் பெயரிலேயே பட்டையாக எழுதப்பட்டுள்ளது. அதுதான் 'மாலை' என்பது. உலகத் தொகை நூல்கள் பல 'மாலை' என்னும் பெயர் உடையனவாய் உள்ளமையும், ஆந்தாலஜி - ஆந்தொலொழியா என்பதற்கு 'மாலை' என்பது பொருள் என்னும் செய்தியும், கிரீக் மொழியின் முதல் தொகை நூலுக்கு 'மாலை' (Garland) என்று பெயர் என்னும் செய்தியும் முன்னரே நமக்குத் தண்ணீர் பட்டபாடு-அதாவது-நாம் நன்கு அறிந்த செய்திகளாகும். எனவே, 'மாலை' என்னும் பெயரைக் கொண்டுள்ள 'வியாழமாலை அகவல்' என்னும் நூல், பல பாக்களின் தொகுப்பாகிய பாமாலையே யாகும்.

இந்த நூற்பெயரின் இறுதியிலே 'அகவல்' என்னும் ஒரு சொல் இருக்கக் காணலாம். அகவல் என்பது பா வகையுள்

ஒன்று. எனவே, இந்நூல் அகவற் பாக்களின் தொகுப்பாய் இருக்கலாம். இதனை உறுதி செய்ய, ஈண்டு மீண்டும், இறையனார் அகப்பொருள் உரைப் பகுதி வருமாறு: ''அவர்களாற் பாடப்பட்டன கலியும், குருகும், வெண்டாளியும், வியாழ மாலை அகவலும் என இத்தொடக்கத்தன என்ப''—என்பது உரைப் பகுதி. இதில் குறிப்பிட்டுள்ள 'வியாழமாலை அகவலும்' என்னும் நீளமான பெயருக்குப் பதிலாக, வேறோர் ஓலைச் சுவடியில் 'அகவலும்' என்னும் ஒரே ஒரு சொல்தான் இருக்கிறது: 'வியாழ மாலை' என்னும் சொல் அந்த ஓலைச் சுவடியில் இல்லை. இதிலிருந்து, வியாழ மாலை அகவல் என்னும் நூல், சுருக்கமாக 'அகவல்' என்னும் பெயராலும் குறிக்கப் பட்டு வந்தது என்பது உய்த்துணரக்கிடக்கிறது. சீவக சிந்தாமணி என்னும் நூல் சிந்தாமணி எனவும், புறப் பொருள் வெண்பாமாலை என்னும் நூல் வெண்பாமாலை எனவும் இறுதிப்பகுதியால் பெயர் வழங்கப்படுவதுபோல, வியாழமாலை அகவல் என்னும் இந்த நூலும் 'அகவல்' என இறுதிப் பகுதியால் அழைக்கப்பட்டுள்ளது. எனவே, பரிபாடல், கலி என்னும் தொகை நூலைப் போலவே, 'அகவல்' எனப் பாவின் பெயரால் சிறப்பாக அழைக்கப்படும். இந்த நூல், பல்வேறு அகவல் பாக்களின் தொகுப்பு நூல் என்பது தெளிவு.

அகவல் என்பது, வெண்பா, ஆசிரியம், கலி, வஞ்சி என்னும் நால்வகைப் பாக்களுள் ஆசிரியப் பாவைக் குறிக்கும். ஆசிரியம் எனினும் அகவல் எனினும் ஒன்றே. யாப்பருங்கலக் காரிகை யாசிரியர் தமது நூலில் ஆசிரியப் பாவை 'அகவல்' என்னும் சொல்லாலேயே எல்லா இடங்களிலும் குறிப்பிட்டுள்ளார். ஆனால் காரிகைக்கும் முற்பட்டதாகிய 'யாப்பருங்கலம், என்னும் முதல் நூலில், அகவல், ஆசிரியம் என்னும் இரு சொற்களும் மாறி மாறிப் பயன்படுத்தப் பட்டுள்ளன. இவ்விரண்டுக்கும் மிக மிக முற்பட்டதாகிய தொல்காப்பியத்தில் 'ஆசிரியம்' என்ற சொல்லே எல்லா இடங்களிலும் பயன்படுத்தப் பட்டுள்ளது. ஆனால், தொல்காப்பியம் செய்யுளியலில்

''அகவல் என்பது ஆசிரி யம்மே.'' (77)

என்னும் ஒரே ஓர் இடத்தில் மட்டும் அகவல் என்னும் சொல் பயன்படுத்தப்பட்டுள்ளது. இங்கேயும் 'அகவல்' என்னும் சொல் ஆசிரியப் பா என்னும் பொருளில் இல்லை; 'அகவல் ஓசை என்னும் பொருளிலேயே பயன்படுத்தப் பெற்றுள்ளது. அஃதா வது,-'அகவல் என்பது ஆசிரியம்மே' என்னும் தொல்காப்பிய நூற்பாவிற்கு, 'ஆசிரியப்பா அகவல் ஓசை உடையது' என்பது பொருளாம். இந்த நூற்பாவிற்கு இதுதான் பொருள் என்ப தனை, இதனை யடுத்துவரும் நூற்பாக்கள் அறிவிக்கும். அவை யாவன:—

''அ∴தன்‌ றென்ப வெண்பா யாப்பே''. (78)

"துள்ளல் ஓசை கலியென மொழிப." (79)

''தூங்கல் ஓசை வஞ்சி யாகும்.'' (80)

அகவுதல் இல்லாத (செப்பல்) ஓசை வெண்பாவிற்கு உரிய தாகும். கலிப்பாவின் ஓசைக்குத் 'துள்ளல்' என்று பெயராம். வஞ்சிப் பாவின் ஓசைக்குத் 'தூங்கல்' என்று பெயராம். இவ் வாறே, ஆசிரியப்பாவின் ஓசைக்கு 'அகவல்' என்று பெயராம். 'அகவல்' என்பது தொடர்பாக, தொல்காப்பிய உரையாசிரியர் இளம்பூரணர் கூறியுள்ள உரைப்பகுதி வருமாறு:—

''அகவல் என்னும் ஓசை ஆசிரியத்திற்கு என்றவாறு... அகவல் என்பது ஆசிரியன் இட்டதோர் குறி...எழுத்தளவு மிகாமல் குறையாமல் உச்சரிக்க அவ்வழி நின்ற ஓசையால் ஆசிரியம் வந்தவாறு காண்க... வெண்பாவாக யாக்கப்பட்டது. அகவலோசை யன்று என்றவாறு; எனவே அகவுதல் இல்லாத ஓசையாம்... அகவுதல் என்பது ஒரு தொழில்...''

எனவே, அகவல் என்றால், அகவுதல்-அகவுகின்ற ஒலி என அறியலாம். தொல்காப்பியர், 'துள்ளல் ஓசை கலி', 'தூங்கல் ஓசை வஞ்சி', 'அகவல் அல்லாதது வெண்பா' என்று கூறியிருப் பதைக் கொண்டு, 'அகவல் என்பது ஆசிரியம்' என்பதற்கு, 'அகவல் ஓசை ஆசிரியம்' என்றுதானே பொருள் கொள்ள வேண்டும், நச்சினார்க்கினியர் என்னும் உரையாசிரியரும் இவ்

வாறே பொருள் கூறியுள்ளார். அவரது உரைப்பகுதி வருமாறு:—

"வழக்கினுள் அகவல் என்று வழங்கப்படும் ஓசையே ஆசிரியத்திற்கு உரிய என்ப."

'அகவல் என்பது ஆசிரியம்மே' என்னும் நூற்பாவில் உள்ள 'அகவல்' என்பதற்கு 'ஆசிரியப்பா' எனப் பொருள் கொள்ளாமல், 'அகவல் ஓசை' என இளம்பூரணர் பொருள் கொண்டிருக்க, பேராசிரியர் என்னும் உரையாசிரியர், 'அகவல்' என்பதற்கு 'ஆசிரியப்பா' எனப் பொருள் கூறியுள்ளார்; இருப்பினும்' அகவல் என்றால் அகவுதல் - அகவிக் கூறுதல் என்னும் பொருளைப் பேராசிரியர்கூட மறக்கவில்லை. இதனைத் தெரிந்துகொள்ளப் பேராசிரியரின் உரைப்பகுதி வருமாறு:—

"அகவல் என்பது ஆசிரியம்மே-வழக்கினுள் அகவலென்று வழங்கப்படும் பாவினை ஆசிரியத்திற்குரிய பா வென்ப

அகவிக் கூறுதலான் அகவலெனக் கூறப்பட்டது. அஃதாவது, கூற்றும் மாற்றமுமாகி ஒருவன் கேட்ப அவற்கு ஒன்று செப்பிக் கூறாது தாங் கருதியவாறெல்லாம் வரையாது சொல்லுவதோ ராறும் உண்டு. அதனை வழக்கினுள்ளார் அழைத்தல் என்றுஞ் சொல்லுப. அங்ஙனஞ் சொல்லுவார் சொல்லின்கண் எல்லாந் தொடர்ந்து கிடந்த ஓசை அகவல் எனப்படும். அவை தச்சுவினை மாக்கள் கண்ணும், களம் பாடும் வினைஞர் கண்ணும், கட்டும் கழங்கும் இட்டு உரைப்பார் கண்ணும், தம்மில் உறழ்ந்துரைப்பார் கண்ணும், பூசலிழைப்பார் கண்ணும் கேட்கப்படும். கழங்கிட்டு உரைப்பார் அங்ஙனமே வழக்கிலுள்ளதாய்க் கூறும் ஓசை ஆசிரியப்பா வெனப்படும் என்றவாறு."

இது பேராசிரியரின் உரைப்பகுதி, 'அகவல்' என்னும் சொல்லுக்கு, பேராசிரியரைப்போல் 'ஆசிரியப்பா' எனப் பொருள் கூறாமல், இளம்பூரணரைப் போல 'அகவல் ஓசை' என நச்சினார்க்கினியர் பொருள் கூறியிருப்பினும், அகவுதல்-

அகவிக் கூறுதல் என்பதற்குப் பேராசிரியர் கூறியுள்ள விளக்கத்தைப் பின்பற்றியே நச்சினார்க்கினியரும் சிறிது சுருக்கமான விளக்கம் தந்துள்ளார். அது வருமாறு:''

''அகவிக் கூறலின் அகவ லாயிற்று. அஃதாவது, கூற்றும் மாற்றமும் ஆகி ஒருவன் கேட்ப அவற்கு ஒன்று செப்பிக் கூறாது தாங் கருதியவா றெல்லாம் வரையாது கூறுவது. அதனை வழக்கினுள் 'அழைத்தல்' என்ப. அங்ஙனம் கூறுமிடத்துத் தொடர்ந்து கிடந்த வோசை அகவலாம்.

அவை களம்பாடு பொருநர் கண்ணும், கட்டுங்கழங்கும் இட்டுரைப்பார் கண்ணும், தம்மின் உறழ்ந்துரைப்பார் கண்ணும், பூசலிழைப்பார் கண்ணும் கேட்கப்படும். வழக்கின் கண் உள்ளதாய் அங்ஙனம் அழைத்துக் கூறும் ஓசை ஆசிரியப்பா என்றவாறு.'' (இது நச்சினார்க்கினியர் உரை)

வினாவிடையாக ஒருவரோடொருவர் உரையாடுவது போல இன்றி, ஒருவர் தாம் விரும்பியபடியெல்லாம், உரத்துப் பேசுதலும், எடுப்பாகக் கத்திப் பேசுதலும், கூவிப்பாடுதலும், ஒருவரை அழைத்துக் கூறுவதுபோல் பாடுதலும், தெய்வம் ஏறிக் குறி சொல்லுவதுபோல் பாடுதலும் இன்ன பிறவும் 'அகவல்' எனப்படும் – என்னும் 'செய்தியை 'அகவல்' என்பது ஆசிரியம்மே, என்னும் தொல்காப்பிய ,நூற்பாவிற்கு உரையாசிரியர்கள் மூவரும் கூறியுள்ள உரைப்பகுதிகளைக் கொண்டு அறியலாம். எனவே, பொதுவாக அகவல் என்றால், அகவுதல்-அகவிக் கூறுதல்-கூவி அழைத்துப் பாடுதல் என்னும் பொருளுள்ளமை புலப்படும். அகவல் என்றால் அழைத்தல், எடுப்பான ஓசை என்றெல்லாம் நிகண்டுகள் பொருள் கூறுகின்றன. இதனை,

''அகவல் நான்குமவ் வழைத்த லாகும்''

என்னும் திவாகர நிகண்டு நூற்பாவாலும், பிங்கல நிகண்டில் உள்ள.

''அகவல் என்பதும் அழைத்த லாகும்'' (238)

"அகவலும் எடுத்த லோசைப் பெயரே" (351)

என்னும் நூற்பாக்களாலும் அறியலாம். அகவுதல் என்பதற்கு எடுப்பாக அழைத்தல் என்னும் பொருள் உள்ளமையைக் கடைச்சங்க நூல்கள் பலவற்றில் காணலாம். மாதிரிக்காக ஒன்று வருமாறு: மதுரைக்காஞ்சியில் உள்ள,

"வாளுழந்த தன்தாள் வாழ்த்தி
நாளீண்டிய நல் அகவர்" (அடி: 222-3)

என்னும் பகுதியிலுள்ள 'அகவர்' என்பதற்கு, நச்சினார்க்கினியர் எழுதியுள்ள,

"அகவர் என்றார், குலத்தோர் எல்லாரையும் அழைத்துப் புகழ்வர் என்பது பற்றி; ஆகுபெயர் 'அகவல்' போல".

என்னும் உரைப்பகுதி காண்க. தெய்வத்தையோ பிறரையோ அழைத்துப் புகழ்ந்து பாடுதலுக்கும் 'அகவல்' என்ற பெயர் உண்டு. இவ்வாறு பாடும் பெண் 'அகவல் மகள்' என்றும், பாடும் ஆண் 'அகவலன்' என்றும், வழங்கப்படுவர். இதனை,

"அகவல் மகளே அகவல் மகளே
மனவுக் கோப் பன்ன நன்னெடுங் கூந்தல்
அகவல் மகளே பாடுக பாட்டே
இன்னும் பாடுக பாட்டே அவர்
நன்னெடுங் குன்றம் பாடிய பாட்டே"

என்னும் குறுந்தொகைப் (23) பாட்டாலும், சிலப்பதிகாரம் நடுகற் காதையில் உள்ள,

"அந்தீங் குறிஞ்சி அகவல் மகளிரின்
மைந்தர்க்கு ஓங்கிய வருவிருந் தயர்ந்து

என்னும் (அடி:25 – 36) பகுதியாலும், பதிற்றுப்பத்தில் உள்ள

"கண்டி நுண்கோல் கொண்டுகளம் வாழ்த்தும்
அகவலன் பெறுக மாவே" (43)

என்னும் பாடல் பகுதியாலும், பிறவற்றாலும் அறியலாம். தொல்காப்பியம், அதன் உரைகள், சங்க இலக்கியங்கள், நிகண்டுகள் ஆகியவற்றின் துணைகொண்டு இதுகாறும் கூறிய விளக்கங்களால், 'அகவல், என்பது, எந்த வகையான பாடல் என இனம் கண்டுகொள்ளலாம்.

மேலே இட்டுள்ள அடிப்படையுடன், 'வியாழ மாலை அகவல்' என்னும் இடைச்சங்க நூலுக்கு மீண்டும் வருவோம். ஓர் ஓலைச்சுவடியில் 'வியாழ மாலை அகவல்' என்னும் முழுப்பெயர் இல்லாமல், 'அகவல்' என்னும் இறுதிப் பகுதி மட்டுமே பெயராக உள்ளது என்பதையும் ஈண்டு மீண்டும் நினைவு செய்து கொள்ளவேண்டும். ஒரு வகைப் பாவாகிய அகவல் என்னும் பெயரைக்கொண்ட இந்த நூலும், பரிபாடல், கலி என்னும் தொகை நூல்களைப் போலவே, அகவல் பாடல்களின் தொகுப்பாகிய ஒரு தொகை நூல் - அதாவது - பாவகையால் பெயர் பெற்ற தொகை நூல் என்பது புலப் படும்.

மற்றும், அகவல் என்றாலேயே தொகை நூலைக் குறிப் பது என்று சொல்லக்கூடிய காலம் ஒன்று இருந்தது. இதனை, சேந்தன் திவாகர நிகண்டின் ஒலிபற்றிய பெயர்த் தொகுதியி லுள்ள,

''அகவலும் தொகையும் அசிரி யப்பாவே''

என்னும் நூற்பாவாலும், பிங்கல நிகண்டின் பண்பிற் செய லின் பகுதிவகையில் உள்ள,

''அகவலுந் தொகையும் ஆசிரி யப்பா'' (323)

என்னும் நூற்பாவாலும், சூடாமணி நிகண்டின் ஒலிப்பெயர்த் தொகுதியிலுள்ள,

''சூட்டிய அகவல் பேர் ஆசிரியமே தொகை'' (29)

என்னும் பாடல் பகுதியாலும் அறிய முடிகிறது. அஃதாவது, ஆசிரியப்பா என்பதற்கு அகவல், தொகை என வேறு இரண்டு பெயர்கள் உண்டு என்பது இந்நூற்பாக்களின் கருத்தாகும். இதனால், தொகை நூல்கள், அகவல் எனப்படும் ஆசிரியப்

பாக்களால் அன்று தொகுக்கப்பட்டிருந்தன என்னும் நுட்ப மான செய்தி புலனாகிறது. அவ்வளவு ஏன்? கடைச்சங்க காலத் தொகை நூலாகிய பத்துப் பாட்டு என்னும் தொகுப் பில் உள்ள பத்துப் பாடல்களுள் பொருநராற்றுப் படையும் மதுரைக் காஞ்சியும் வஞ்சியடிகள் இடையிடையே கலந்த ஆசிரியப்பாவால் ஆனவை; பட்டினப்பாலை வஞ்சியடிகளால் அமைந்து ஆசிரிய அடிகளால் முடிவது; இம்மூன்றும் தவிர மற்ற ஏழு பாட்டுகளும் முற்றிலும் ஆசிரியப்பாவால் ஆனவை. மற்றும், எட்டுத் தொகை எனப்படும் எட்டுத் தொகை நூல் களுள் பரிபாடலும் கலித்தொகையும் நீங்கலாக, மற்ற அக நானூறு, குறுந்தொகை, நற்றிணை, புறநானூறு, ஐங்குறு நூறு, பதிற்றுப்பத்து, என்னும் ஆறு தொகை நூல்களும் ஆசிரியப்பாக்களின் தொகுப்பே யன்றோ? மற்றும், ‘ஆசிரியமாலை’ என்னும் பெயரில் ஒரு தொகை நூல் உள்ள மையும் ஈண்டு ஒப்பு நோக்கற்பாற்று. இத் தொகை நூல் பற்றி அடுத்த தலைப்பில் ஆராயப்படும்.

இதுகாறும், ‘வியாழ மாலை அகவல்’ என்னும் நூற் பெயரில் உள்ள மாலை என்னும் சொல் பற்றியும், அகவல் என்னும் சொல் குறித்தும் விரிவாக ஆராய்ந்தோம். இவ்விரு சொற்களுமே இந்நூல் ஒரு தொகை நூல் என்பதனை உணர்த்தி நிற்கின்றன. இவையிருக்க, இவற்றுக்கு முன்னால் உள்ள ‘வியாழம்’ என்னும் சொல்லின் பக்கம் இன்னும் நாம் போகவே இல்லையே! இனி, வியாழம் என்னும் சொல் குறித்து ஒரு சிறிது ஆராயலாம்:

வியாழம் என்ற சொல்லுக்கு வியாழக்கிழமை, ஒரு கோள் (கிரகம்), தேவ ஆசான், பாம்பு, ஒருவகை வட்டம் முதலிய பொருள்கள் உண்டு. நமது நூற் பெயரில் உள்ள வியாழம் என்னும் சொல், இந்தப் பொருள்களுள் எதனையும் குறிப்ப தாய் இருக்க முடியாது. ஏனெனில், இந்தப் பொருள்களை அடிப்படையாக வைத்து அந்தக் காலத்தில் ஒரு நூல் பாடி யிருக்க முடியாது. எனவே, இஃது எப்பொருள் பற்றியதாக இருக்கலாம்?

குறிஞ்சியாழ் வகையில் 'வியாழம்'என ஒன்று உள்ளது. இது வியாழக் குறிஞ்சி யாழ்' எனப்படும். இதற்கேற்பக் குறிஞ்சிப் பண்வகையிலும் 'வியாழம்' என ஒன்று உள்ளது. இது 'வியா ழக் குறிஞ்சிப் பண்' எனப்படும். இந்தச் செய்தியை, திவாகர நிகண்டு ஒலிபற்றிய பெயர்த் தொகுதியிலுள்ள,

> ''சாவகக் குறிஞ்சி, மேகராகக் குறிஞ்சி,
> வியாழக் குறிஞ்சி, அந்தாளிக் குறிஞ்சி
> ஆகும் குறிஞ்சிக்கு அடுத்த பல் பெயரே''

என்னும் நூற்பாவாலும், பிங்கல நிகண்டு-அநுபோக வகையில் உள்ள,

> (281)''.........வியாழக் குறிஞ்சி,
> பஞ்சமம், தக்கணாதி, சாவகக் குறிஞ்சி,
> ஆநந்தை, யென இவை.........
> குறிஞ்சி யாழ்த்திற மாகக் கூறுவர்'' (21)

என்னும் நூற்பகுதியாலும் நன்கறியலாம். வியாழக் குறிஞ்சி யைப் பற்றி எட்டாம் நூற்றாண்டில் இயற்றப்பட்ட நிகண்டு களில் கூறப்பட்டுள்ள குறிப்பைக் கண்டோம். ஆனால், ஏழாம் நூற்றாண்டின் முற்பகுதியிலேயே, வியாழக் குறிஞ்சி என்னும் பண் அமைத்துத் தேவாரப் பாடல்கள் பாடப்பட்டுள்ளன. நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பும் ஞான சம்பந்தன்' எனச் சுந்தரரால் பாராட்டப் பெற்றவரும், திருநீலகண்ட யாழ்ப் பாணர் என்னும் யாழ் வல்லுநரை உடன் வைத்துக் கொண்டு பாடிவந்தவருமாகிய திருஞான சம்பந்தர், தம் தேவாரப் பதி கங்களுள் இருபத்தைந்து பதிகங்களை 'வியாழக் குறிஞ்சி' என் னும் பண் அமைத்துப் பாடியுள்ளார். இதனால், 'வியாழக் குறிஞ்சி, என்னும் பண்ணுக்கு அந்தக் காலத்தில் இருந்த செல் வாக்கும் வரவேற்பும் நனி விளங்கும். எனவே, 'வியாழ மாலை, அகவல்' என்னும் நூற்பெயரில், உள்ள 'வியாழம்' என்பது குறிஞ்சிப் பண்ணை உணர்த்துவதேயாகும். ஆகவே, வியாழ மாலை அகவல் என்னும் நூல், குறிஞ்சி யாழ் கொண்டு இசைக் கும் குறிஞ்சிப் பண் அமைந்த அகவல் பாடல்களின் தொகுப்பு நூல் என்பது நன்கு புலனாகும். இந்தக் கருத்துக்குத் துணை

புரியச் சிலப்பதிகாரத்தில் தக்கதோர் அகச்சான்று உள்ளது. வடநாடு சென்று வெற்றிவாகை சூடி மீண்ட சேரன் செங் குட்டுவன், அகவல் பாடல் பாடும் அகவல் மகளிரைக் கொண்டு, மறவர்களுக்கு இசை விருந்து அளித்தானாம். அக வல் மகளிர் யாழ் மீட்டிக் குறிஞ்சிப் பண் இசைத்துப் பாடி மகிழ்வித்தார்களாம். இதனைச் சிலப்பதிகாரம் நடுகற் காதை யில் உள்ள,

> ''வணர்கோட்டுச் சீறியாழ் வாங்குபு தழீஇச்
> ......................................................
> அந்தீங் குறிஞ்சி அகவல் மகளிரின்
> கைந்தர்க்கு ஓங்கிய வருவிருந்து அயர்ந்து'' 31 – 36

என்னும் பகுதி தெரிவிக்கிறது. ஈண்டு, குறிஞ்சி, கவர்ச்சியானது – தித்திப்பானது என்னும் பொருளில் 'அந்தீங் குறிஞ்சி' என்று சிறப்பிக்கப்பட்டிருப்பதும், அடுத்து அகவல் என்பதோடு தொடர்புறுத்தப் பட்டிருப்பதும் நுணுகி நோக்கி மகிழ்தற் குரியது.

இதுகாறுங் கூறியவற்றால், குறிஞ்சிப் பண் அமைந்த பாக் களாகிய பூக்களால் தொகுக்கப்பட்ட மாலையே 'வியாழ மாலை அகவல்' என்னும் நூல் என்பது பெறப்படும். மற்றும், பரிபாடல், முதுநாரை, முதுகுருகு, கலி ஆகியவற்றைப் போலவே, இந்நூலும் ஓர் இசைத்தமிழ்ப் பாடல் தொகை நூல் என்பதும் தெளிவாகும்.

இந்நூல், 'வியாழமாலை அகவல்' என முழுப்பெயரால் நீளமாகவும், இறுதிப்பகுதியாகிய 'அகவல்' என்னும் பெயரால் குறுக்கமாகவும் வழங்கப்பெறும் என முன்னர்க்கண்டோம். இவ் விருவகையே யன்றி,முற் பகுதியாகிய 'வியாழ மாலை' என்னும் பெயராலும் வழங்கப்படும் என்று தெரிகிறது. 'ஜவகர்லால்' நேரு என்பவரை அந்த முழுப் பெயராலும் அழைப்பதுண்டு- இறுதிப்பகுதியாகிய 'நேரு' என்பதாலும் வழங்குவதுண்டு, முற் பகுதியாகிய 'ஜவகர்லால்' என்பதாலும் வழங்குவதுண்டு. இவ் வாறே, இந்நூல் 'வியாழ மாலை' என்றும் வழங்கப்படுகிறது. இதனை, செவ்வூர்ச் சிற்றம்பலக் கவிராயர் வீட்டு ஓலைச் சுவ டிப் பாடலிலுள்ள,

"இருங்கலி கடிந்த பெருங்கலித் தொகையொடு
குருகு வெண்டாளி தெருள் வியாழ மாலை;
அந்நாள் இலக்கணம் அகத்திய மதனொடு...'

என்னும் பகுதி அறிவிக்கின்றது. இறையனார் அகப்பொருள் உரை, இந்த நான்கு நூல்களுள் முதலாவதைக் 'கலி' என்று மட்டுந்தான் குறிப்பிட்டுள்ளது. ஆனால் இந்தப் பாடல் 'பெருங் கலித் தொகை' என்று கூறுகிறது. இப்பொழுது நமக்குக் கிடைத்திருக்கிற கடைச்சங்க நூலாகிய கலித்தொகையை நோக்க, இடைச்சங்கக் கலி பெரியதாதலின் 'பெருங்கலி' என்று கூறியுள்ளது; இஃதும் ஒரு தொகை நூல் என்பதை அறிவிக்கவே 'பெருங் கலித்தொகை' என்றும் கூறியிருக்கிறது. இவ்வாறாக, முதல்நூலாகிய கலி என்பதைத் 'தொகை' என்று சுட்டிக் கூறியிருப்பது, அடுத்தனவாகிய குருகு, வெண்டாளி, வியாழமாலை அகவல் என்னும் மூன்று நூல்களுங்கூடத் தொகை நூல்களே என்பதைக் குறிப்பாக உணர்த்துவதுபோல் தோன்றுகிறது.

இந்த இடைச்சங்க காலத் தொகைநூல்களைப் பற்றி அடியார்க்கு நல்லாரும் சிலப்பதிகார உரைப் பாயிரத்தில் குறிப்பிட்டுள்ளார். அப் பகுதி வருமாறு:—

"......மூவாயிரத் தெழு நூற்றுவர் தம்மாற் பாடப் பட்ட கலியும் குருகும் வெண்டாளியும் முதலிய செய்யுள் இலக்கியம் ஆராய்ந்து செய்த உதயணன் கதையுள்ளும்...பிறவற்றுள்ளுங் கூறினமையானும்......"

இந்த உரைப் பகுதியால், கலி, குருகு, வெண்டாளி, வியாழ மாலை, அகவல் என்னும் நூல்கள் செய்யுள்களால் தொகுக்கப்பட்ட இலக்கியங்கள் எனவும், இவற்றை ஆதார நூல்களாகக் கொண்டு ஆராய்ச்சி செய்து, பிற்காலத்தில் புலவர்கள் நூல்கள் இயற்றினர் எனவும் அறியலாம்.

இனி, இறையனார் அகப்பொருள் உரையில் குறிப்பிடப் படாமல், வேறு நூல்களின் வாயிலாக அறியப்பட்டுள்ள இடைச்சங்க காலத் தொகை நூல்களாகிய பன்னிரு படலம், பதினாறு படலம் என்னும் நூல்கள் குறித்து ஆராய்வோம்.

# 9. பன்னிரு படலம்

## நூல் அறிமுகம்

பன்னிரு படலம் என்பது ஒரு தொகை நூல்- இலக்கணத் தொகை நூல். இஃது இதுகாறும் கிடைத்திலது. என்று கிடைக்குமோ? இப்படியொரு நூல் இருந்தது என்பதை, இப்பொழுது கிடைத்துள்ள சில நூல்களின் வாயிலாகத் தெரிந்துகொள்ள முடிகிறது. இறையனார் அகப்பொருள் உரை. புறப்பொருள் வெண்பாமாலை, யாப்பருங்கல விருத்தி யுரை, தொல்காப்பியம் – இளம்பூரணர் உரை, தொல்காப்பி யம்-பேராசிரியர் உரை, தொல்காப்பியம்- நச்சினார்க்கினியர் உரை, மதுரைக் காஞ்சி–நச்சினார்க்கினியர் உரை, மாறனலங் கார உரை, இலக்கண விளக்க உரை, சிவஞான முனிவரின் தொல்காப்பியப் பாயிர விருத்தியுரை முதலிய நூல்களில் பன் னிரு படலம் பற்றிய செய்திகள் பேசப்பட்டுள்ளன. இந் நூல் களிலுள்ள அகச்சான்றுகளைக் கொண்டு பன்னிரு படலத்தின் உண்மையை நம்ப முடிகிறது.

பதினெட்டாம் நூற்றாண்டில் வாழ்ந்த சிவஞானமுனிவர், தாம் எழுதிய தொல்காப்பியப் பாயிர விருத்தி உரையிலும், அதே நூற்றாண்டில் வாழ்ந்த வைத்தியநாத தேசிகர், நூலும் உரையுமாகத் தாம் எழுதிய தமது இலக்கண விளக்க உரையி லும் பன்னிரு படலச் செய்தி பற்றிப் பேசியிருப்பதால், இந்த நூல் பதினெட்டாம் நூற்றாண்டுவரையும் கிடைக்கப் பெற்று ஆட்சியில் இருந்திருக்கிறது-பின்னரே மறைந்து விட்டது என் பது புலனாகலாம்.

சிவஞான முனிவர், வைத்திய நாத தேசிகர் ஆகியோர் காலத்தில் பன்னிரு படலம் கிடைக்கப் பெற்று ஆட்சியில் இல்லை; தொல்காப்பிய உரையாசிரியர்களின் உரைக்குறிப்புக் களில் பன்னிரு படலத்தைப் பற்றியுள்ள செய்திகளை அடிப் படையாகக்கொண்டு இவர்கள் இருவரும் தத்தம் உரைகளில் பன்னிரு படலத்தைப் பற்றிக் கூறியுள்ளனர்' – என்று சிலர் சொல்லுவாராயின், தொல்காப்பிய உரையாசிரியர்களின்

காலம் வரையிலுமாவது பன்னிரு படலம் ஆட்சியில் இருந்தது என நம்பலாம். தொல்காப்பிய உரையாசிரியர்கள் பன்னிரு படலத்திலிருந்து சில நூற்பாக்களை எடுத்துக்காட்டி நன்கு அலசி ஆராய்ந்து உரை எழுதியிருக்கின்றனராதலின், அவர்கள் காலத்தில் பன்னிரு படலம் ஆட்சியில் இருந்தது என்பதில் ஐயமே இல்லை. மேற்கூறிய தொல்காப்பிய உரையாசிரியர்களுள் காலத்தால் பிற்பட்டவர் நச்சினார்க்கினியர் ஆவார். இவரது காலம் பதினான்காம் நூற்றாண்டு ஆதலின், இந்தக் காலம் வரையிலுமாவது பன்னிரு படலம் ஆட்சியில் இருந்தது என்பது மறுக்கமுடியாத உண்மையாகும்.

அடுத்து, இந்த நூல் எப்பொழுது தோன்றியது? இதன் ஆசிரியர் யார்? எப்பொருள் பற்றியது இது? இதன் பெயர்க் காரணம் என்ன?-இந்த வினாக்களுக்கு விடை காண வேண்டும்.

இந்நூற் பெயர், முதல் முதலாக, காலத்தால் முற்பட்ட இறையனார் அகப்பொருள் உரையில் காணப்படுகிறது. நூல்கள் பெயர் பெற்றதற்கு உரிய காரணங்களை விளக்குமிடத்து,

'அளவினால் பெயர் பெற்றது பன்னிரு படலம் என்பது' என அகப்பொருள் உரை கூறுகிறது. 'இந்த நூல் பன்னிரண்டு படலங்களை உடைத்தாயிருப்பதனால், 'பன்னிரு படலம்' என எண்ணல் அளவையால் பெயர் பெற்றது' என்பது, இந்த உரைப் பகுதியின் விளக்கமாகும்.

ஏழு அல்லது எட்டாம் நூற்றாண்டில் வாழ்ந்த ஐயனாரிதனார் என்பவரால் இயற்றப் பெற்ற 'புறப் பொருள் வெண்பா மாலை' என்னும் நூலின் சிறப்புப் பாயிரச் செய்யுளால், பன்னிரு படலத்தின் ஆசிரியர் பற்றியும் அந்நூல் கூறும் பொருள் பற்றியும் அறிந்து கொள்ளலாம். எனவே, அந்தச் சிறப்புப் பாயிரச் செய்யுள் வருமாறு:

"மன்னிய சிறப்பின் வானோர் வேண்டத்
தென்மலை யிருந்த சீர்சால் முனிவரன்
தன்பால் தண்டமிழ் தாவின் றுணர்ந்த
துன்னருஞ் சீர்த்தித் தொல்காப் பியன் முதல்

பன்னிரு புலவரும் பாங்குறப் பகர்ந்த
பன்னிரு படலமும் பழிப்பின் றுணர்ந்தோன்
ஓங்கிய சிறப்பின் உலகமுழு தாண்ட
வாங்குவில் தடக்கை வானவர் மருமான்
ஐய னாரிதன் அகலிடத் தவர்க்கு
மையறு புறப்பொருள் வழாலின்று விளங்க
வெண்பா மாலை யெனப்பெயர் நிறீஇப்
பண்புற மொழிந்தனன் பான்மையின் தெரிந்தே.''

'அகத்தியனாரிடம் தமிழ் பயின்ற தொல்காப்பியர் முதலிய பன்னிரு புலவர்கள் இயற்றிய தொகுப்பு நூலாகிய பன்னிரு படலம் என்னும் நூலை நன்கு கற்றுத் தெளிந்த ஐயனாரிதனார், புறப்பொருள் பற்றி 'வெண்பா மாலை' என்னும் பெயரில், இந்த நூலை (புறப்பொருள் வெண்பா மாலையை) இயற்றினார்'-என்பது இந்தச் செய்யுளின் கருத்து.

இந்தச் செய்யுளைக் கொண்டு, பன்னிரு படலம் முதல் நூல் எனவும், புறப்பொருள் வெண்பா மாலை அதன் வழிநூல் எனவும் அறியலாம். இதனைத் தொல்காப்பிய உரையாசிரிய ராகிய பேராசிரியரும்,

'பன்னிரு படலம் முதல்நூலாக வழிநூல் செய்த வெண்பா மாலை ஐயனாரிதனாரும் இது கூறினார்' - எனத் (தொல் - மரபியல்-94) தமது உரையில் அறிவித்துள்ளார். மாறனலங் காரம் என்னும் நூலின் உரையாசிரியரும் (நூற்பா:76 உரை யில்),

'...என்பவற்றையும் கூட்டி பன்னிரு படலம் ஆக்கி... திணையும் துறையுமாக விரித்து வெண்பாமாலையாகிய வழி நூலுள் ஐயனாரிதனாரும் கூறியதூஉம்...'

என இக் கருத்தைத் தெரிவித்துள்ளார். எனவே, 'தெரிந்ததி லிருந்து தெரியாததற்குச் செல்லுதல்' என்னும் உளவியல் முறைப்படி, இப்பொழுது நமக்குக் கிடைத்திருக்கிற வழிநூலா கிய புறப்பொருள் வெண்பாமாலையைக் கொண்டு, கிடைக்காத

முதல் நூலாகிய பன்னிரு படலத்தின் பாங்கினைப் புரிந்து கொள்ளலாம். அது வருமாறு: -

புறப்பொருள் வெண்பாமாலை என்னும் நூல் புறப் பொருள் செய்திகளை வெண்பாவால் விளக்குவதாகும்; இந் நூல் வெட்சிப் படலம், கரந்தை படலம், வஞ்சிப் படலம், காஞ்சிப் படலம், உழிஞைப் படலம், நொச்சிப் படலம், தும்பைப் படலம், வாகைப் படலம், பாடாண் படலம், பொதுவியல்படலம், கைக்கிளைப்படலம், பெருந்திணைப் படலம் என்னும் பன்னி ரண்டு படலங்களைஉடையது. எனவே, இந்நூலைப் போலவே, இதன் முதல் நூலாகிய பன்னிரு படலமும், புறப்பொருள் பற்றிய பன்னிரண்டு படலங்களை உடையது என்பதும், அதனா லேயே 'பன்னிரு படலம்'எனப் பெயர் வழங்கப்பட்டது என்ப தும் விளங்கும். முதல் நூலாகிய பன்னிரு படலத்துள் உள்ள பன்னிரண்டு படலங்களைப் பார்த்தே, வழி நூலாகிய புறப் பொருள் வெண்பா மாலையும் பன்னிரண்டு படலங்களை அமைத்துக் கொண்டது என உணர்க. அடுத்து, புறப்பொருள் வெண்பா மாலையின் சிறப்புப் பாயிரச் செய்யுளிலுள்ள,

'துன்னருஞ் சீர்த்தித் தொல்காப் பியன் முதல்
பன்னிரு புலவரும் பாங்குறப் பகர்ந்த
பன்னிரு படலமும் பழிப்பின் றுணர்ந்தோன்'

என்னும் பகுதியைப் பார்க்கவேண்டும். அகத்தியரின் மாணாக் கர்களாகிய தொல்காப்பியர் முதலிய புலவர்கள் பன்னிருவரும் சேர்ந்து செய்த நூல் பன்னிரு படலம் என இச்செய்யுள் கூறுகிறது. எனவே, பன்னிரு படலம் என்பது, பன்னிருவர் இயற்றிய பன்னிரு படலங்களின் தொகுப்பு நூல்-தொகை நூல் என்பது பெறப்படும்; பெறவே, ஒவ்வொருவரும் ஒவ் வொரு படலம் இயற்றிருக்கவேண்டும் என்பது தெளிவு.

பன்னிரு படலத்தை இயற்றிய ஆசிரியர்கள் தொல்காப் பியர் முதலிய பன்னிருவர் எனவே, இந்நூல் இயற்றித் தொகுக்கப்பட்ட காலம், தொல்காப்பியத்தை ஒட்டிய இடைச் சங்க காலம் என்பது புலப்படும்.

ஒவ்வொருவரால் ஒவ்வொரு படலம் வீதமாக இந்தப் பன்னிரண்டு படலங்களும் இயற்றப்பட்டன என்னும் கருத்தை அடிப்படையாக வைத்துக்கொண்டு, பன்னிருவருள் முதல்வராகிய தொல்காப்பியரால் பன்னிரு பாடலங்களுள் முதலாவதாகிய 'வெட்சிப் படலம்' இயற்றப்பட்டது என்னும் கருத்துப் பரவலாகச் சொல்லப்பட்டு வருகிறது.

தொல்காப்பியர் இல்லை

ஆனால், தொல்காப்பிய உரையாசிரியர்களாகிய இளம்பூரணரும் நச்சினார்க்கினியரும், இலக்கண விளக்க நூல்-உரை ஆசிரியராகிய வைத்திய நாதப்புலவரும், பன்னிரு படலத்தின் முதல் படலமாகிய வெட்சிப் படலத்தைத் தொல்காப்பியர் இயற்றினார் என்னும் கருத்தைக் காரணங் காட்டி வன்மையாக மறுத்துள்ளனர். பன்னிரு படலத்தின் தலையெழுத்தைத் தீர்மானிப்பதற்கு இவர்தம் மறுப்புரைகளை நாம் ஊன்றி நோக்க வேண்டும். முறையே அவை வருமாறு:—

இளம்பூரணர், தொல்காப்பியப் புறத்திணை இயல் முதல் நூற்பாவிற்கு முன்னால், 'புறத்திணை இயல்' என்னும் தலைப்பிற்கு விளக்கமாகத் தாம் எழுதியுள்ள,

''ஆன்ற சிறப்பின் அறம் பொருள் இன்பமென
மூன்றுவகை நுதலியது உலகம் அவற்றுள்
அறமும் இன்பமும் அகலா தாகிப்
புறன் எனப் படுவது பொருள் குறித் தன்றே''

என்னும் பன்னிரு படலச் செய்யுளுள் புறப்பொருள் அறமும் இன்பமும் அகலாதாகி எனக் கூறினார்; அவர் கூறுதல் வாகைத்திணைக்கண் 'கட்டில் நீத்த பால்' முதலாகக் 'காமம் நீத்த பால்' ஈறாக அறங்கூறுதலின் அச்சார்பாகக் கூறியது மயங்கக் கூறுதலாம்.

'ஆங்ஙனம் உரைப்பின் அவற்றது வகையால்
பாங்குறக் கிளந்தனர் என்ப அவைதாம்
வெட்சி கரந்தை வஞ்சி காஞ்சி
அட்குவரு சிறப்பின் உழிஞை நொச்சி
அரண்மிகு சிறப்பின் தும்பையுள் ளிட்ட

மறனுடைய மரபின் ஏழே ஏனை
அமர்கொள் மரபின் வாகையும் சிறந்த
பாடாண் பாட்டொடு பொதுவியல் என்ப'

எனவும்,

"கைக்கிளை ஏனைப் பெருந்திணை என்றாங்கு
அத்திணை யிரண்டும் அகத்திணைப் புறனே

எனவும், புறப்பொருள் பன்னிரண்டு வகைப்படக் கூறில், அகமும் பன்னிரண்டாகி மாட்டேறு பெறுதல் வேண்டும். அகத்திணை ஏழாகிப் புறத்திணை பன்னிரண்டாகில், 'மொழிந்த பொருளோடு ஒன்ற வைத்தல்' (தொல், மரபு, 112)என்னும் தந்திர உத்திக்கும் பொருந்தாதாகி, 'மிகைப்படக் கூறல்', தன்னான் ஒரு பொருள் கருதிக் கூறல்' (தொல், மரபு 110) என்னும் குற்றமும் பயக்கும் என்க. அன்றியும் பெருந்திணைப் புறனாகிய காஞ்சி நிலையாமை யாதலானும், பொது வியல் என்பது,

'பல்அமர் செய்து படையுள் தப்பிய
நல்லாண் மாக்கள் எல்லாரும் பெறுதலின்
திறப்பட மொழிந்து தெரிய விரித்து
முதற்பட எண்ணிய எழுதிணைக்கும் உரித்தே'

'முதற்பட எண்ணிய எழுதிணைக்கும் உரித்தே' எனத் தாமே கூறுகின்றா ராதலின், மறத்திற்கு முதலாகிய வெட்சியின் எடுத்துக் கோடற்கண்ணும் கூறாமையானும், கைக்கிளையும் பெருந்திணையும் புறம் என்றாராயின், அகத்திணை ஏழ் என்னாது ஐந்து எனல் வேண்டுமாதலானும், பிரம்மம் முதலாகச் சொல்லப்பட மணம் எட்டனுள்ளும் யாமோர் புறப்பொருளாதல் வேண்டுதலானும், முனைவன் நூலிற்கும் கலி முதலாகிய சான்றோர் செய்யுட்கும் உயர்ந்தோர் வழக்கிற்கும் பொருந்தாது என்க" என்னும் உரைப் பகுதியாலும்

அடுத்து,

'வேந்துவிடு முனைஞர் வேற்றுப்புலக் களவின்
ஆதந்து ஓம்பல் மேவற் றாகும்'

என்னும் தொல்காப்பியப் புறத்திணை இயல் (2) நூற்பாவின் கீழ் இளம்பூரணர் தாம் எழுதியுள்ள,

"பன்னிரு படலத்துள், 'தன்னுறு தொழிலே வேந்துறு தொழிலென்று அன்ன இருவகைத்தே வெட்சி', என இரண்டு கூறுபடக் கூறினாராயினும், முன் வருகின்ற வஞ்சி உழிஞை தும்பை முதலாயின எடுத்துச் செலவு, எயில் காத்தல், போர் செய்தல் என்பன அரசர் மேல் இயன்று வருதலின், வேந்துறு தொழில் ஒழித்துத் தன்னுறு தொழில் எனத் தன் நாட்டும் பிறர் நாட்டும் களவின்கண் ஆன்நிரை கோடலின் இவர் அரசரது ஆணையை நீக்கினாராவர். ஆதலால், அவர் அவ்வாறு கூறல் மிகைபடக் கூறலாம். அதனால், பன்னிரு படலத்துள் வெட்சிப்படலம் தொல்காப்பியர் கூறினார் என்றல் பொருந்தாது' என்னை?

'ஒத்த சூத்திரம் உரைப்பின் காண்டிகை
மெய்ப்படக் கிளந்த வகைய தாகி
ஈரைங் குற்றமும் இன்றி நேரிதின்
முப்பத் திருவகை உத்தியொடு புணரின்
நூலென மொழிப நுணங்குமொழிப் புலவர்.'
(தொல்-மரபியல்-100)

எனவும்,

'சிதைவெனப் படும் அவை வசையற நாடின்
கூறியது கூறல் மாறுகொளக் கூறல்
குன்றக் கூறல் மிகைபடக் கூறல்
பொருளில கூறல் மயங்கக் கூறல்
கேட்டோர்க் கின்னா யாப்பிற் றாதல்
பழித்த மொழியான் இழுக்கக் கூறல்
தன்னான் ஒரு பொருள் கருதிக் கூறல்
என்ன வகையினும் மனங்கோள் இன்மை
அன்ன பிறவும் அவற்றுவிரி வாகும்.' (மரபு-110)

எனவும் கூறிய ஆசிரியர் தாமே மாறு கொளக் கூறல், குன்றக் கூறல், மிகைபடக் கூறல், பொருளில கூறல், மயங்கக் கூறல் தன்னானொரு பொருள் கருதிக் கூறல் என்னும் குற்றம் பயப் பக் கூறினர்ரென வருமாகலான்.'

என்னும் உரைப்பகுதியாலும், அடுத்து, தொல்காப்பியப் புறத்திணை இயலிலுள்ள 'வெறியறி சிறப்பின் வெவ்வாய்

வேலன்' என்னும் (5) நூற்பாவின் இறுதியில் இளம்பூரணர் தாம் எழுதியுள்ள,

"பன்னிரு படலத்துள் கரந்தைக்கண் புண்ணொடு வருதல் முதலாக வேறுபடச்சிலதுறை கூறினாராகலின் புண்படுதல் மாற்றோர் செய்த மறத்துறை யாகலின், அஃது இவர்க்கு மாறாகக் கூறலும் மயங்கக் கூறலுமாம், ஏனையவும் இவ்வாறு மயங்கக் கூறலும். குன்றக் கூறலும் மிகைபடக் கூறலும் ஆயவாறு எடுத்துக் காட்டின் பெருகுமாதலான், உய்த்துணர்ந்து கண்டு கொள்க..."

என்னும் உரைப் பகுதியாலும், பன்னிரு படலத்தின் வெட்சிப் படலத்திற்கும் தொல்காப்பியர்க்கும் எந்தத் தொடர்பும் இல்லை-அதாவது-அதனைத் தொல்காப்பியர் இயற்ற வில்லை என்னும் செய்தியைத் தெளிவாகக் கூறியுள்ளார். அடுத்து நச்சினார்க்கினியரைக் கண்டு அவர் கூறும் மறுப்புரைகளைக் கேட்போம்: தொல்காப்பியம்-புறத்திணையியலில் உள்ள,

'வேந்துவிடு முனைஞர் வேற்றுப்புலக் களவின்
ஆதந்து ஓம்பல் மேவற் றாகும்'

என்னும் (2) நூற்பாவின் கீழ் நச்சினார்க்கினியர் எழுதியுள்ள,

வேந்து விடு முனைஞர் என்றமையான் இருபெரு வேந்தரும் தண்டத் தலைவரை ஏவிவிடுவர் என்றும், ஆதந்தோம்பல் என்றதனால் களவின்கண் கொண்ட ஆவினைமீட்டுத் தந்தோம்பு மென்றும் பொருள் கூறுமாறு சூத்திரஞ் செய்தாராகலின், இருபொரு வேந்தர் தண்டத் தலைவரும் அவரேவலான் நிரை கோடற்கும் மீட்டற்கும் உரியராயினார்; ஆகவே இருவர்க்கும் கோடற் றொழில் உளதாயிற்றாதலின் அடித்துக் கோடலும் மீட்டுக் கோடலும் வெட்சியாயின.

ஆயின், மீட்டல் கரந்தை என்பரால் எனின், அதனையும் இச் சூத்திரத்தானும் வருகின்ற சூத்திரத்தானும் வெட்சியென்றே ஆசிரியர் கொண்டார். மீட்டலை வெட்சிக் கரந்தை

என்பாரும் உளர். மீட்டலைக் கரந்தை என்பார்க்கு அது திணையாயின் குறிஞ்சிக்குப் புறனாகமை யுணர்க....''

என்னும் உரைப்பகுதியாலும், புறத்திணையியலிலுள்ள

''எஞ்சா மண்ணசை வேந்தனை வேந்தன்
அஞ்சுதகத் தலைச்சென்று அடல்குறித் தன்றே.''

என்னும் (7) நூற்பாவின்கீழ் நச்சினார்க்கினியர் எழுதியுள்ள,

''.. ஒருவன் மண் நசையால் மேற்சென்றால், அவனும் அம் மண்ணழியாமற் காத்தற்கே எதிரே வருதலின், இருவர்க்கும் மண் நசையால் மேற்சேறல் உளதாகலின், அவ்விருவரும் வஞ்சி வேந்தர் ஆவர் என்றுணர்க. எதிர் சேறல் காஞ்சி என்பரால் எனின், காஞ்சியென்பது எப்பொருட்கும் நிலையாமை கூறு தலின் பெரிதும் ஆராய்ச்சிப்படும் பொதுவியற் பொருண்மைப் பெயராற் கூறுதலாகாமை யுணர்க...''

என்னும் உரைப் பகுதியாலும், புறத்திணையியலிலுள்ள,

''காஞ்சி தானே பெருந்திணைப் புறனே.''

என்னும் (22) நூற்பாவின்கீழ் நச்சினார்க்கினியர் எழுதியுள்ள,

''..பெருந்திணைக்குக் காஞ்சி புறனாயிற்று. கைக்கிளை முதலாப் பெருந்திணை யிறுவாய் ஏழனையும் அகம் என்றன் அவ் வகத்திற்கு இது புறனாவதன்றிப் புறப்புறம் என்றல் ஆகாமையுணர்க. இது மேலதற்கும் ('பாடாண் பகுதி கைக் கிளைப் புறனே, – தொல்-புறம்-25) ஒக்கும்.''

என்னும் உரைப்பகுதியாலும், பெயரை வெளிப்படையாகச் சுட்டாமல் குறிப்பாகப் பன்னிரு படலம் தொல்காப்பியத்திற்கு உணர்த்தியிருப்பதை அறியலாம்.

தொல்காப்பியமும் பன்னிரு படலமும் மாறுபட்டவை என்பதை நச்சினார்க்கினியர் தொல்காப்பிய உரையில் குறிப் பாகக் கூறியிருப்பினும், தாம் எழுதியுள்ள மதுரைக் காஞ்சி உரையின் முற்பகுதியில் பன்னிரு படலத்தின் பெயரைச் சுட்டி வெளிப்படையாக அறிவித்துள்ளார். அப் பகுதி வருமாறு:—

''மதுரைக் காஞ்சி:இப் பாட்டிற்கு மாங்குடிமருதனார் மதுரைக் காஞ்சி யென்று துறைப் பெயரானன்றித்

திணைப்பெயராற் பெயர் கூறினார். இத் திணைப் பெயர்பன்னிருபடலம் முதலிய நூல்களாற் கூறிய திணைப் பெயர் அன்று, தொல் காப்பியனார் கூறிய திணைப் பெயர்ப் பொருளே இப் பாட்டிற்குப் பொருளாகக் கோடலின், வஞ்சி மேற்செல்லலானும் காஞ்சி எஞ்சா தெதிர் சென்றூன்றலானும் 'வஞ்சியும் காஞ்சியும் தம்முள் மாறே' எனப் பன்னிரு படலத்திற் கூறிய திணைப் பெயர் இப் பாட்டிற்குப் பொருளன்மை யுணர்க. அவர் முது மொழிக் காஞ்சி முதலியவற்றைப் பொதுவியல் என்று ஒரு படலமாக்கிக் கூறலின், அவை திணைப் பெயராகாமை உணர்க.''

மேற்காட்டிய தொல்காப்பிய உரைப் பகுதிகளைக் கொண்டும் மதுரைக் காஞ்சி உரைப்பகுதியைக் கொண்டும், பன்னிரு படலமும் தொல்காப்பியமும் மாறுபட்டன வாதலின், பன்னிரு படலத்தின் வெட்சிப் படலத்தைத் தொல்காப்பியர் இயற்றியிருக்க மாட்டார் என்பதே நச்சினார்க்கினியரின் கருத்து என்பதை நன்குணரலாம். இனி, இலக்கண விளக்க உரையாசிரியர் என்ன கூறுகிறார் என்று கேட்போம்: இலக்கண விளக்கம் - புறத்திணையியலிலுள்ள

''ஆன்ற காட்சியின் அகனன் குணர்ந்தோர்
தோன்றக் கூறிய பறனெனப்படுவது
அறம் பொருள் என்னும் இயல்பிற் றாகிப்
புறம்பயில் ஒழுக்கம் என்மனார் புலவர்''

என்னும் முதல் நூற்பாவின் கீழ், நூலாசிரியரே உரையாசிரியராகவும் இருந்து எழுதியுள்ள.

''...ஆன்ற காட்சியின் அகனன் குணர்ந்தோர் தோன்றக் கூறிய புறன் எனப்படுவது என்றார், குறிஞ்சி முதலியவற்றிற்கு வெட்சி முதலிய புறனாங்கால் அவ் விலக்கணங்கள் ஒருபுடை ஒப்புமைபற்றிச் சார்புடைய வாதல் கூறல் வேண்டுதலின்.

''ஆன்ற சிறப்பின் அறம் பொருள் இன்பமென
மூன்று வகை நுதலியது உலகம் அவற்றுள்
அறமும் இன்பமும் அகலா தாகிப்
புறனெனப் படுவது பொருள் குறித்தன்றே.''

எனப் பன்னிரு படலத்துள் அறஞ் சார்பாகப் புறப் பொருள் குறித்து வருமென்றது என்னை யெனின், அது மயங்கக் கூற லாம். ஆசிரியர் தொல்காப்பியனார் சார்பாகக் கூறாது வாகைத் திணைக்கண் கட்டில் நீத்த பால் முதலாகக் காமம் நீத்த பால் ஈறாக அறத்தையே விதந்து கூறுதலின்.''

என்னும் உரைப் பகுதியாலும், அதே புறத்திணையியலி லுள்ள,

'வெட்சி வஞ்சி உழிஞை தும்பை
உட்குவரு சிறப்பின் வாகையொடு காஞ்சி
பாடாண் திணையும் உளப்படத் தொகைஇ
நாடுங் காலை எழுவகைத் ததுவே'

என்னும் இரண்டாவது நூற்பாவின்கிழ் அதே ஆசிரியர் எழுதி யுள்ள,

''...இக் குறிகள் காரணக் குறிகளாம் பூக்களாற் போந்தன வாகலின்; அற்றேல்,

'ஆங்ஙனம் உரைப்பின் அவற்றது வகையால்
பாங்குறக்கி ளர்ந்தனர் என்ப அவைதாம்
வெட்சி கரந்தை வஞ்சி காஞ்சி
உட்குவரு சிறப்பின் உழிஞை நொச்சி
முரண்மிகு சிறப்பின் தும்பையுள் ளிட்ட
மறனுடை மரபின் ஏழை ஏனைய
முகோள் மரபின் வாயுகைம் சிறந்த
பாடாண் பாட்டொடு பொதுவியல் என்ப
கைக்கிளை ஏனைப் பெருந்திணை என்றாங்கு
அத்திணை இரண்டும் அகத்திணைப்புறனே'

எனப் பன்னிருபடலத்துப் புறத்திணை பன்னிரெண்டெனக் கூறுபவா லெனின்,

'கைக்கிளை முதலாப் பெருந்திணை இறுவாய்
முற்படக் கிளந்த எழுதிணை என்ப'

(தொல் - அகம்-1)

எனக் கூறிய ஆசிரியர். தொல்காப்பியனார்க்குப் பிற்படக் கிளக்கப்படும் புறத்திணை ஏழென்பதே கருத்தாகலானும்,

கரந்தையும் நொச்சியும் முறையே வெட்சிக்கும் உழிஞைக்கும் மறுதலையாய் அவற்றின்பாற் படுமாதலானும், பொதுவியல் என்பது,

பல்லமர் செய்து படையுள் தப்பிய
நல்லரண் மாக்கள் எல்லாரும் பெறுதலின்
திறப்பட மொழிந்து தெரிய விரித்து
முதற்பட எண்ணிய எழுதிணைக்கும் உரித்தே

என அவர்தாமே கூறுபவாகலானும், கைக்கிளையும் பெருந் திணையும் புறமாயின் அகத்திணை ஏழென்னாது ஐந்தெனல் வேண்டுதலானும், பிரமம் முதலாகச் சொல்லப்பட்ட மணம் எட்டினுள்ளும் யாழோர் கூட்டமாகிய மணம் ஒன்றனையும் ஒழித்து ஏனைய புறமாதல் வேண்டுதலானும், முனைவ னூலிற்கும் கலி முதலாகிய சான்றோர் செய்யுட்கும் உயர்ந் தோர் வழக்கிற்கும் இயையாமையானும். அங்ஙனங் கூறுதல் பொருந்தாதென மறுக்க.

என்னும் உரைப்பகுதியாலும், அதே புறத்திணையியலி லுள்ள,

'அவற்றுள்'
வெட்சி தானே குறிஞ்சியது புறனே
உட்குவரப் பொருபோர் உறுமுறை தொடங்கிய
வேந்துவிடு முனைஞர் வேற்றுப் புலக் களவின
ஆதந் தோம்பலும் அந்நிரை மீட்டலும்
எனஇரு பாற்றே அஃதென மொழிப.

என்னும் நான்காம் நூற்பாவின் கீழ், அதே ஆசிரியர் எழுதி யுள்ள,

"ஆதந் தோம்பலும் அந்நிரை மீட்டலும் என இருபாற்று என்னாது,

'தன்னுறு தொழிலே வேந்துறு தொழிலென்று
அன்னஇரு வகைத்தே வெட்சி'

எனப் பன்னிரு படலத்துட் கூறியவாறு கூறின், முன்வருகின்ற வஞ்சி முதலியவற்றின் பொருளாகிய எடுத்துச் செலவு முதலி

யன வேந்தன் மேல் இயன்று வருதலானும், வேந்துறு தொழிலேயன்றித் தன்னுறு தொழிலுங் கூறின் வேந்தனது ஆணையைக் கடந்து தன்னாட்டும் பிறனாட்டுங்களவு நிகழ்த்தி னாராபவாலானும், அது மரபன்று என மறுக்க.''

என்னும் உரைப்பகுதியாலும், தொல்காப்பியர் தம் நூலோடு வேறுபாடுடைய பன்னிரு படலத்தின் வெட்சிப் படலத்தை இயற்றியிருக்கமாட்டார் என இலக்கண விளக்க உரையாசிரியரும் உணர்த்தியுள்ளார் என்பதை அறியலாம்.

தொல்காப்பியர்:

இவ்வாறு ஒரு சிலர் உரைக்கவும், யாப்பருங்கல விருத்தி யுரையாசிரியரும், தொல்காப்பிய உரையாசிரியர்களாகிய பேராசிரியரும், சிவஞான முனிவரும், பிறரும், பன்னிரு படலத்தின் முதற் படலமாகிய வெட்சிப் படலத்தைத் தொல் காப்பியர் இயற்றினார் என்னும் கருத்தை மறுத்தாரிலர்; உடன்பட்டும் உள்ளனர். இவர்தம் உடன் பாட்டுரைகள் முறையே வருமாறு:—

பத்தாம் நூற்றாண்டில் இயற்றியதாகப் கருதப்படுகின்ற யாப்பருங்கலம் - ஒழிபியலில், 'மாலை மாற்றே சக்கரம் சுழி குளம்' என்று தொடங்கும் நூற்பாவிற்கு (3) எழுதப்பட் டுள்ள விருத்தியுரையில் உள்ள,

''இனி அகப் புறமாவன: காந்தள், வள்ளி, சுரநடை, முது மாலை, தாபதம், தபுதாரம், குற்றிசை, குறுங்கலி, பாசறை முல்லை, இல்லாண் முல்லை என்ற இவை பத்தும், கைக்கிளை, பெருந்திணை என்ற இவை இரண்டும் என்க.

'ஆய்ந்த அகப்புறம் ஐயிரண்டும் ஆயுங்கால்
காந்தள்... ..................
அமர்த்தவீ ரைந்தும் அகத்தின் புறமே.'
'கைக்கிளை என்றா பெருந்திணை என்றாங்கு
அத்திணை இரண்டும் அகத்திணைப் புறமே.'

இவை பன்னிரு படலம் ........ வெட்சி ஆகவர்தலானும், கரந்தை உட்குவரச் சென்று விடுத்தலானும்,

'வெட்சியும் கரந்தையும் தம்முள் மாறே'

வஞ்சி மேற் செல்லலானும், காஞ்சி அஞ்சாது எதிர்சென்று ஊன்றலானும்,

'வஞ்சியும் காஞ்சியும் தம்முள் மாறே.'

உழிஞை ஆரெயில் முற்றலானும், நொச்சி விழுமிதின் அவ்வெயிற் காத்தலானும்,

'உழிஞையும் நொச்சியும் தம்முள் மாறே.'
'பொருதல் தும்பை புணர்வ தென்ப.'

இவற்றின் விகற்பமெல்லாம் பன்னிரு படலத்துட் காண்க. புறப்புறமாவன: வாகையும் பாடாண் பாட்டும் பொதுவியல் திணையும் எனக் கொள்க.........இவை ஆமாறு வெண்பா மாலையுள்ளும் பன்னிரு படலத்துள்ளும் காண்க.''

என்னும் உரைப் பகுதியால், யாப்பருங்கல விருத்தி பன்னிரு படலச் செய்திகளைத் தவறென மறுக்கவில்லை-ஏற்றுக் கொண்டுள்ளது என்பது புலனாகும். இளம்பூரணரும் நச்சினார்க்கினியரும் பன்னிருபடலச் செய்திகள் தவறானவை என்று சுட்டிக் காட்டியிருப்பதை ஈண்டு நினைவுகூரவேண்டும். யாப்பருங்கல விருத்தியில் பன்னிரு படலத்திற்கு மறுப்பு இன்மையால், பன்னிரு படலத்தில் தொல்காப்பியர் பெற்றிருக்கும் பங்குக்கும் மறுப்பு இராது என உய்த்துணரலாம்.

இனிப் பேராசிரியர் பக்கம் திரும்பிப் பார்ப்போம். தொல்காப்பியம் மரபியலில் உள்ள

''வினையின் நீங்கி விளங்கிய அறிவின்
முனைவன் கண்டது முதல்நூ லாகும்'' (94)

என்னும் நூற்பாவின் கீழ்ப் பேராசிரியர் எழுதியுள்ள,

''...எனவே, அகத்தியமே முற்காலத்து முதனூல் என்பதூஉம், அதன் வழித்தாகிய தொல்காப்பியம் அதன் வழிநூல் என்பதூஉம் பெற்றாம்.

என்றார்க்கு முந்துநூல் எனப்பட்டன முற்காலத்து வீழ்ந்தன வெனக் கூறித் தொல்காப்பியர் அகத்தியத்தோடு பிறழவும், அவற்று வழிநூல் செய்தார் என்றக்கால் இழுக்கென்னையெனின், - அது வேதவழக்கொடு மாறுகொள்வார் இக்காலத்

துச் சொல்லினும் இறந்தகாலத்துப் பிறபாசாண்டிகளும் மூன்று வகைச் சங்கத்து நான்கு வருணத்தொடுபட்ட சான்றோரும் அது கூறார் என்பது. என்னை? கடைச்சங்கத்தாருட் களவியற் பொருள் கண்ட கணக்காயனார் மகனார் நக்கீரர், 'இடைச் சங்கத்தார்க்கும் கடைச் சங்கத்தார்க்கும் நூலாயிற்றுத் தொல்காப்பியம்' என்றாராகலானும், பிற்காலத்தார்க்கு உரையெழுதினோரும் அது கூறிக் கரிபோக்கினாராகலானும், அவர் புலவு துறந்த நோன்புடையாராகலாற் பொய்கூறாராக லானு மென்பது. இங்ஙனங் கூறாக்கால் இதுவும் மரபுவழு வென்று அஞ்சி அகத்தியர் வழித்தோன்றிய ஆசிரிய ரெல்லா ருள்ளுந் தொல்காப்பியனாரே தலைவரென்பது எல்லாஆசிரிய ருங் கூறுப வென்பது; எங்ஙனமோ வெனின்,

''கூறிய குன்றினு முதனூல் கூட்டித்
தோமின் றுணர்தல் தொல்காப் பியன்றன்
ஆணையின் தமிழறிந் தோர்க்குக் கடனே''

இது பல்காப்பியப் புறனடைச் சூத்திரம்.

''வீங்குகடல் உடுத்த வியன்கண் ஞாலத்துத்
தாங்கா நல்லிசைத் தமிழ்க்குவிளக் காகென
வானோர் ஏத்தும் வாய்மொழிப் பல்புகழ்
ஆனாப் பெருமை அகத்தியன் என்னும்
அருந்தவ முனிவன் ஆக்கிய முதனூல்
பொருந்தக் கற்றுப் புரைதப வுணர்ந்தோர்
நல்லிசை நிறுத்த தொல்காப்பியனும்''

என்பதனால், அகத்தியர் செய்த அகத்தியதினை முதனூலென வும், அவர் வானோர் ஏத்தும் வாய்மொழிப் பல்புகழ் ஆனாப் பெருமையுடையார் எனவும், அவராற் செய்யப்பட்ட முதனூல் பொருந்தக் கற்றுப் புரைதப உணர்ந்தோருள் தலைவராயி னார் தொல்காப்பியனார் எனவும், பன்னிரு படலத்துப் புனைந்துரை வகையாற் பாயிரச் சூத்திரத்துள் உரைக்கப்பட் டது, இனிப் பன்னிரு படலம் முதனூலாக வழிநூல் செய்த வெண்பாமாலை ஐயனாரிதனாரும் இது கூறினார்; என்னை?

''மன்னிய சிறப்பின் வானோர்வேண்டத்
தொன்மலை யிருந்த சீர்சால் முனிவரன்

தன்பால் தண்டமிழ் தாவின் றுணர்ந்த
துன்னருஞ் சீர்த்தித் தொல்காப்பியன் முதற்
பன்னிரு புலவரும் பாங்குறப் பகர்ந்த...''

எனப் பாயிரஞ் செய்தற்கு உடன்பட்டமையின் என்பது—''

என்னும் உரைப் பகுதியைக் கூர்ந்து நோக்குங்கால் அறியப்படுவதாவது:—''பன்னிரு படலம் என்னும் நூலின் முகப்பில், 'வீங்கு கடல் உடுத்த' என்று தொடங்கும் பாயிரச் செய்யுள் ஒன்று உள்ளது. இந்தச் செய்யுள், அகத்தியம் என்னும் முதல் நூலை நன்கு கற்று உணர்ந்தவர்களாகிய தொல்காப்பியரும் பிறருமாகச் சேர்ந்து பன்னிரு படலத்தை இயற்றினர் எனக் கூறுகிறது. இந்தப் பன்னிருபடலத்தை முதல் நூலாகக் கொண்டு ஐயனாரிதனார் என்பவர் புறப் பொருள் வெண்பா மாலை என்னும் நூலை இயற்றினார். இந்த வெண்பா மாலை நூலின் பாயிரச் செய்யுளும், அகத்தியரின் மாணாக்கர்களாகிய தொல்காப்பியர் முதலிய பன்னிரு புலவரும் சேர்ந்து பன்னிரு படலம் என்னும் நூலை இயற்றினர் எனக் கூறுகிறது. பேராசிரியர் தமது உரைப்பகுதியின் ஓரிடத்தில். 'பன்னிரு படலத்துப் புனைந்துரை வகையாற் பாயிரச் சூத்திரத்துள் உரைக்கப்பட்டது' எனக் கூறியிருப்பது, 'பொருந்தக் கற்றுப் புரைதப உணர்ந்தோருள் தலைவராயினார் தொல்காப்பியனார்' என்னும் கருத்துப் புனைந்துரையாகும் எனச் சுட்டிக் காட்டுகிறதேயன்றி, தொல்காப்பியர் முதலியோர் சேர்ந்து பன்னிரு படலம் இயற்றினர் என்பது புனைந்துரை எனச் சுட்டியதாகாது. அதனால்தான் பேராசிரியர், பன்னிரு படலம், புறப்பொருள் வெண்பா மாலை ஆகிய நூல்களின் பாயிரச் செய்யுட்களை ஈண்டு முழுமையும் தராமல், தொல்காப்பியரை முதன்மையாகக் குறிப்பிடும் இடங்களோடு நிறுத்திக் கொண்டார். தொல்காப்பியர்க்குத் தலைமையளிக்கும் பல்காப்பியப் பாடலைப் ஈண்டு எடுத்துக் காட்டியிருப்பதும் ஒப்புநோக்கத் தக்கது. எனவே, பன்னிரு படலத்தில் தொல்காப்பியர்க்கு உள்ள பங்கைப் பேராசிரியர் மறுக்கவில்லை என்பது ஒருவாறு புலனாகும்.

இந்தச் சிக்கலுக்கு முடிவுரை வழங்குவது போல், சிவ

ஞான முனிவர் தொல்காப்பியப் பாயிர விருத்தியுரையில் கூறியுள்ள பகுதி வருமாறு:—

"...அகம் புறம் எனப் பகுத்தவற்றைத் தம்முள் வேறு பாடு நோக்கி அகம் அகப்புறம் புறம் புறப்புறம் என நான்காகப் பகுத்தலும், வெட்சித் திணை உழிஞைத் திணைகளின் மறுதலை வினையை வீற்று வினையாதலும் வேற்றுப் பூச்சூடுதலும் ஆகிய வேறுபாடுபற்றி வேறு திணையாக வைத்தெண்ணுதலும், இன்னோ ரன்னவை பிறவுமாம். இவை இங்ஙனம் வேறுபடினும், புணர்ச்சி முடிபும் சொல் முடிபும் பொருள் முடிபும் வேறுபடாமையின் மரபு நிலை திரியாவாயின. இவ்வுண்மை யுணராதார் பன்னிரு படலம் முதலிய நூல்களை வழீஇயின என்றிகழ்ந்து, பன்னிரு படலத்துள் வெட்சிப் படலம் தொல்காப்பியனார் கூறியதன்று. எனவும் தொல்லாசிரியர் வழக்கொடு முரணித் தமக்கு வேண்டியவாறே கூறுப.'

'பன்னிரு படலத்தின் வெட்சிப் படலத்தைத் தொல்காப்பியனார் இயற்றவில்லை எனக் கூறுபவர்கள் உண்மையுணராதவர்கள், என்று சிவஞான முனிவர் இகழ்ந்து பேசியிருப்பதை மேலுள்ள பகுதியால் அறியலாம். நடுநிலை நின்று நோக்கின், பன்னிரு படலத்தில் தொல்காப்பியர்க்கும் பங்கு உண்டு என்ற முடிவுக்கு நாமும் வரமுடியும்.

குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை, கைக்கிளை, பெருந்திணை என்ற ஏழும் 'அகம்' என்று தொல்காப்பியம் கூறுகிறது. இந்த ஏழனுள் கைக்கிளை, பெருந்திணை என்னும் இரண்டும், 'அகப்புறம் என்று பன்னிரு படலம் கூறுகிறது. இந்தச் சிறு வேறுபாட்டால், பன்னிரு படலத்தில் தொல்காப்பியர்க்குத் தொடர்பில்லை என்று கூறிவிடுவதா? அகத்திணை, புறத்திணை என்னும் இரு திணைகளையும் பற்றிக் கூறுவது தொல்காப்பியம். புறத்திணை ஒன்றைப் பற்றி மட்டும் கூறுவது பன்னிரு படலம். கைக்கிளை ஒருதலைக்காமம் ஆதலாலும், பெருந்திணை பொருந்தாக் காமம் ஆதலாலும், இவையிரண்டும் உண்மையான – நேர்மையான காமம் ஆகிய குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை ஆகிய ஐந்தைப்போல் சரியான அகம் ஆகா; புறநகர் போல, அகத்

திற்குச் சிறிது புறம்பே நிறுத்தப்படவேண்டியவையே என்னும் கருத்தில் கைக்கிளையும் பெருந்திணையும் அகப்புறம் ஆகும் எனப் பன்னிரு படலம் கூறியுள்ளது. இந்தக் கருத்தினை நச்சினார்க்கினியரும் ஒத்துக் கொண்டுள்ளார்-அதிலும்-தொல்காப்பியத்தை அடிப்படையாகக் கொண்டே ஒத்துக் கொண்டுள்ளார் என்பதனை, தொல்காப்பியம் அகத்திணையியலில் உள்ள,

> 'மக்கள் நுதலிய அகனைந் திணையும்
> சுட்டி யொருவர் பெயர்கொளப் பெறாஅர்.'

என்னும் (54 ஆம்) நூற்பாவின்கீழ் அவர் வரைந்துள்ள,

"...மக்கள் நுதலிய' என்பதனானே, மக்களல்லாத தேவரும் நரகரும் தலைவராகக் கூறப்படார் எனவும், 'அகனைந்திணையும்' என்றதனானே, கைக்கிளையும் பெருந்திணையும் சுட்டி ஒருவர் பெயர் கொண்டுங் கொள்ளாதும் வருமெனவுங்கொள்க. 'அகனைந்திணை' எனவே, அகமென்பது நடுவுநின்ற ஐந்திணையாதலின் கைக்கிளையும் பெருந்திணையும் அவற்றின் புறத்து நிற்றலின் அகப்புறம் என்று பெயர் பெறுதலும் பெற்றாம்."—

என்னும் உரைப்பகுதி தெளிவுறுத்துகிறது. எனவே, இவையிரண்டையும் அகம் என்று கூறும் தொல்காப்பியத்தோடு பன்னிரு படலம் மாறுபட்டதாகத் தெரியவில்லை. இவையிரண்டையும் 'அகப்புறம்' என அகத்திணையோடு பன்னிரு படலம் தொடர்புறுத்தியே வைத்துள்ளது. மற்றும் தொல்காப்பியர் ஒருவரே தம் விருப்பம்போல் எழுதிய நூல் தொல்காப்பியம் என்பதும், தொல்காப்பியர் முதலிய பலர் கலந்து ஆராய்ந்து எழுதிய நூல் பன்னிரு படலம் என்பதும் ஈண்டு நினைவிற்கு வரவேண்டும்.

அடுத்து, குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை, கைக்கிளை, பெருந்திணை என்னும் ஏழும் அகம் என்றும் அகத்திணையியலில் கூறி, அகங்கைக்குப் (உள்ளங்கைக்குப்) புறங்கை இருப்பது போல, இந்த அகம் ஏழுக்கும் உரிய புறமாக வெட்சி, வஞ்சி, உழிஞை, தும்பை, வாகை, பாடாண் காஞ்சி என்னும் ஏழையும் புறத்திணையியலில் அழகுப் பொருத்

தமாக அமைத்துள்ளார் தொல்காப்பியர். பன்னிரு படலம் இந்த அமைப்பினும் வேறுபட்டது; புறத்திணை ஒன்று பற்றியே கூறுவது. எனவே, ஒருவர் இயற்றிய தொல்காப்பிய அமைப்பினையும், பலர் இயற்றிய பன்னிரு படல அமைப்பினையும் ஒத்திட்டுப் பார்த்துக் குழப்பி, இரண்டும் மாறுபட்டவை என மயங்கலாகாது.

"ஆக்களைக் கவர்தலும் மீட்டலும் ஆகிய இரண்டுமே வெட்சித் திணை எனத் தொல்காப்பியம் கூறுவதாலும், கவர்தல் வெட்சித் திணை-மீட்டல் கரந்தைத் திணை என்று பன்னிரு படலம் கூறுவதாலும், இரண்டும் மாறுபட்டவை; எனவே, பன்னிரு படலத்தின் வெட்சிப் படலத்தைத் தொல்காப்பியர் இயற்றியிருக்க முடியாது" என்று ஒரு சிலர் கூறியுள்ளனர். இது பொருந்தாது. தொல்காப்பியர் புறத்திணையியலில், 'படையியங்கு அரவம் என்னும் (3) நூற்பாவின் வாயிலாக, 'ஆ கவர்தலாகிய வெட்சியை விவரித்துள்ளார்; அடுத்து 'வெறியறி சிறப்பின்... கரந்தை யன்றியும்...எழு மூன்று துறைத்தே' என்னும் (5) நூற்பாவின் வாயிலாகக் கரந்தையைப் பெயர் சுட்டியே விளக்கியுள்ளார். கரந்தையைப் பற்றிக் கூறும் 'வெறியறி சிறப்பின்' என்னும் நூற்பாவின் உட்கிடையை நச்சினார்க்கினியர் மழுப்பி மறைத்தாலும், இளம்பூரணரால் மனமறிய மறைக்க முடியவில்லை. இந்நூற்பாவைத் தொடர்ந்தாற்போல் இதன் உட்கிடையாக இளம்பூரணர் எழுதியுள்ள பகுதி வருமாறு:-

"வேலன் முதலாக வெட்சித் திணைக்குரிய துறை கூறினார்; இனி அதற்கு மாறாகிய கரந்தைத் திணையாமாறு உணர்த்துதல் நுதலிற்று; அதுவும் ஆநிரை மீட்டல் காரணமாக அந் நிலத்தின்கண் நிகழ்வதாகலின் வெட்சிப் பாற்பாட்டுக்குறிஞ்சிக்குப் புறனாயிற்று."

இதனால், வெட்சித்திணையின் ஒருகூறாக் கரந்தைத் திணையையும் தொல்காப்பியர் ஏற்றுக் கொண்டுள்ளார் என்பது புலனாகும். 'மீட்டலை வெட்சிக் கரந்தை என்பாரும் உளர், என நச்சினார்க்கினியர் கூறியிருப்பதும் ஈண்டு ஒப்பு நோக்கற் பாற்று. அவ்வளவு ஏன்? தொல்காப்பிய

உரையில், வேறோரிடத்தில் பேராசிரியரும் நச்சினார்க்கினி யருங்கூட, வேறொரு கோணத்தில், கரந்தையை ஒரு தனித் திணையாக ஒத்துக் கொண்டுள்ளனர். இச் செய்தியை, தொல் காப்பியம்-செய்யுளியலில் உள்ள,

'கைக்கிளை முதலா எழுபெருந் திணையும்
முற்கிளந் தனவே முறைநெறி வகையின்.'

என்னும் (185 ஆம்) நூற்பாவின் கீழ்ப் பேராசிரியர் வரைந் துள்ள,

"'முறை நெறி வகையின்' என்பது அவற்றுக்கு முறை மையாற் புறமெனப்பட்ட வெட்சி முதல் பாடாண் பகுதியீறா கிய எழுபகுதியோடு மென்றவாறு. எனவே, அவற்றுக்குப் பொதுவாகிய முறையாற் கரந்தை யுள்ளிட்டுப் பதினைந்து திணையுள் ஒன்று செய்யுட் குறிப்பாகி வரல்வேண்டு மெனவும் முன்னோதியவாறே கொள்ளப்படுமெனவும் சொல்லினா னாம்..."

என்னும் உரைப்பகுதியாலும், அதே நூற்பாவின்கீழ் நச்சி னார்க்கினியர் எழுதியுள்ள,

"எனவே, அகமேழும் புறமேழும் அவ்விரண்டற்கும் பொது வாகிய கரந்தை யொன்றுமாகப் பதினைந்தனுள் ஒன்று செய் யுட்குறுப்பா யல்லது வேறுறுப்பின்று என்றவாறாயிற்று."—

என்னும் உரைப் பகுதியாலும் அறியலாம்.

தொல்காப்பியர், வெட்சித் திணைப் பகுதியில் கரந்தை யையும் சேர்த்துக் கூறியிருப்பது போல, உழிஞைத் திணைப் பகுதியில் நொச்சியையும் குறிப்பிட்டுள்ளார் என்னும் உண் மையை, 'குடையும் வாளும்' என்று தொடங்கும் புறத்திணை யியல் (13) நூற்பாவால் அறியலாம்.

இவ்வாறாகத் தொல்காப்பியர், கரந்தையை வெட்சிக்குள் ளும் நொச்சியை உழிஞைக்குள்ளும் அடக்கி, வெட்சி, வஞ்சி, உழிஞை, தும்பை, வாகை, பாடாண், காஞ்சி எனப்புறத் திணை ஏழாகும் என்று கூறிப் போந்தார். பன்னிரு படலமோ' இந்த ஏழுடன் சரந்தை நொச்சி என்பவற்றையும் சேர்த்து

ஒன்பதாக்கி, மேலும் விடுபட்டவற்றைப் பொதுவாகத் தொகுத்துச் சொல்லும் 'பொதுவியல்' என்னும் ஒரு பகுதியைச் சேர்த்துப் பத்தாக்கி, இதற்கு மேலும் கைக்கிளை பெருந்திணை என்னும் இரண்டையும் அகப்புறம் என்னும் பெயரில் சேர்த்துக் கொண்டு பன்னிரண்டாக்கிப் 'பன்னிரு படலம்' என்னும் பெயருக்கு உரியதாயிற்று. எனவே, பன்னிரு படலம் தொல்காப்பியத்தோடு மாறுபட்டது எனக்கூறி, அந்நூலிலிருந்து தொல்காப்பியரைக் கழற்றி விட்டு விடுவதற்கில்லை.

பிற மறுப்புகள்:

இன்னும் ஒரு மறுப்புக்கு நாம் பதில் சொல்ல வேண்டியிருக்கிறது. ஆநிரையைக் கவரவோ மீட்கவோ வீரர்கள் வேந்தரால் அனுப்பப்பட்டே செல்வார்கள் எனத் தொல்காப்பியம் வெட்சித் திணைப் பகுதியில் கூறியிருக்கிறதாம். ஆனால், பன்னிரு படலமோ, மறவர்கள் தாமாக வினையாற்றல், வேந்தரால் ஏவப்பட்டு வினையாற்றல் என்னும் இரு வகையானது வெட்சி எனக் கூறுகிறதாம். இவ்வாறாக இரு நூல்களும் மாறுபடுவதால், பன்னிருபடலத்தின் வெட்சிப் படலத்தைத் தொல்காப்பியர் இயற்றியிருக்க முடியாது என்பது அவர்களது மறுப்பு. பழைய உரையாசிரியர்கள் இப்படியொரு வேறுபாடு காட்டி மறுத்திருப்பது மிகவும் சிறு பிள்ளைத்தனமாகும். 'வேண்டாம் என்ற பெண்டாட்டி கை பட்டாலும் குற்றம்-கால் பட்டாலும் குற்றம்' என்ற மாதிரி யிருக்கிறது இந்த மறுப்பு.

'தன்னுறு தொழிலே வேந்துறு தொழில்' என்று அன்ன இருவகைத்தே வெட்சி' என்பது பன்னிரு படலம். தொல்காப்பியம் இந்த இருவகையினையும் மறுக்கவில்லை. மறவர்கள் தாமாக ஒன்றும் செய்யக் கூடாது என்று தொல்காப்பியம் எங்கே சொல்லியிருக்கிறது? 'வேந்துவிடு முனைஞர் வேற்றுப் புலக் களவின் ஆதந்து ஓம்பல் மேவற்றாகும் (புறம் – 2) என்னும் தொல்காப்பிய நூற்பாவில் உள்ள 'வேந்து விடு முனைஞர்' என்னும் தொடரை அடிப்படையாகக் கொண்டு, உரையாசிரியர்கள் சிலர், வேந்தன் இட்ட வேலைகளைச் செய்வது மட்டுமே வெட்சி என ஒருதலைச் சார்பாகப் பொருள் கொண்டு விட்டனர். 'வேந்து விடு முனைஞர்' என்பதற்கு,

வேந்தனால் இடப்பட்ட வேலைகளை மட்டுமே செய்ய வேண்டிய வீரர்கள் என்பது பொருள் இல்லை; வேந்தனால் அனுப்பப்பட்ட வீரர்கள் என்பதுதான் பொருள்; எல்லாருமே வேந்தனால் அனுப்பப்பட்டே போவார்கள்.

வேந்தனால் அனுப்பப்பட்டவர்கள் ஒவ்வொரு செயலையும் வேந்தனைக் கேட்டுக் கேட்டுச் செய்து கொண்டிருக்க முடியாது. 'தன்னுறு தொழில்' ஆகச் சூழ்நிலைக்கு ஏற்பச் செய்யக் கூடிய செயல்களும் உண்டு. தொல்காப்பியத்திலும் தன்னுறு தொழில்கள் சொல்லப்பட்டுள்ளன. வெட்சித்திணைப் பகுதியில் தொல்காப்பியர் பல துறைகள் சொல்லியுள்ளார். ஒருதுறை என்பது ஒருவகைச் செயலைக் குறிப்பது. தொல்காப்பியர் வெட்சித் திணையில் கூறியுள்ள முதல் துறையையே எடுத்துக் கொள்வோமே! அது 'படையியங்கு அரவம்' என்பது. அப்படி என்றால், 'படை செல்லும்போது உண்டாகும் ஆரவாரம் என்பது பொருள். 'படை இயங்கும்போது ஏற்படும் 'லி' அரசனது ஆணையால் உண்டாவதா என்ன?' 'உண்டாட்டு என்பது ஒரு துறை; உண்டு ஆடிமகிழ்தல் என்பது இதன் பொருள். 'வாடா வள்ளி' என்பது ஒரு துறை; வள்ளிக் கூத்து ஆடுதல் என்பது இதன் பொருள். 'சீர்சால் வேந்தன் சிறப்பு எடுத்துரைத்தல்' என்பது ஒரு துறை; மன்னனது சிறப்பைப் புகழ்ந்துரைத்தல் என்பது இதன் பொருள். இப்படி இன்னும் சில துறைகள் உள. உண்டாடி மகிழ்தற்கும், வள்ளிக் கூத்து ஆடுவதற்கும், மன்னனைப் புகழ்வதற்கும், இன்ன பிறவற்றிற்கும் மன்னனது கட்டளை வேண்டுமா என்ன?

எனவே, இளம்பூரணரும் இலக்கண விளக்க உரையாசிரியரும் கூறும் இந்த மறுப்பு ஏற்றுக் கொள்ளத்தக்கதன்று. நச்சினார்க்கினியர் இளம்பூரணரின் இந்த மறுப்பை ஏற்றுக் கொள்ளாமல், தொல்காப்பிய வெட்சித்திணையில் தன்னுறு தொழிலும் கூறப்பட்டுள்ளதாக அறிவித்திருப்பது ஈண்டு எண்ணத்தக்கது. 'உறுபகை வேந்திடை தெரிதல் வேண்டி ஏந்துபுகழ்ப் போந்தை வேம்பே ஆரென வருஉம் மாபெருந் தானையர் மலைந்த பூ' (தொல்-புறம்-5) என்னும் துறைக்கு நச்சினார்க்கினியர் கூறியுள்ள உரை விளக்கம் வருமாறு:—

"மா முதலியனவற்றால் தமக்கு வரும் புகழைத் தாங்கும் மூவேந்தருடைய பெரும் படையாளர். அப் புகழ்தான் உறும் பகையிடத்து இன்ன வேந்தன் படையாளர் வென்றார் என்ப தற்கு ஓர் அறிகுறி வேண்டிப் போந்தை வேம்பு 'ஆர் என்று கூறிச் சூடின பூவும்-இதன் கருத்து: ஏழகத் தகரும் யானையும் நாயும் கோழியும் பூழும் வட்டும் வல்லும் சொல்லும் முதலிய வற்றால், தமக்கு வரும் வெற்றிப்புகழைத் தாம் எய்துதற்குத் தத்தம் வேந்தர் அறியாமல் படைத்தலைவர் தம்முள் மாறாய் வென்று ஆடுங்கால், இன்ன அரசன் படையாளர் வென்றார் என்றற்கு அவரவர் பூச்சூடி ஆடுவர் என்பதூஉம், அக் கூத்தும் வேத்தியற் கூத்தின் வழீஇயின கருங்கூத்து என்பதூஉம், அது தன்னிறு தொழில் என்பதூஉம் உணர்த்தியதாம். இதனை இங்ஙனம் தன்னுறு தொழில் ஆக்கமால் வேந்துறு தொழிலாக் கின் அது தும்பையாம். புகழ்ந்து கூறிற்றெனின் பாடாண் திணையாம். ஆசிரியர் வெறிக்கூத்திற்கும் வள்ளிக்கூத்திற்கும் இடையே இதனை வைத்தது இக் கருத்தானே என்றுணர்க. உதாரணம்:— 'ஏழக மேற்கொண்டு... போந்தையங் கண்ணி புனைந்து'-இது போந்தை மலைந்தாடியது. 'குறுபூம்ப் போர்... வேம்பு தலைமலையற் பாலதூஉ மன்று' - இது வேம்பு தலை மலைந்தாடியது 'ஆர்வேய்ந்த... போர் செய்து'—இஃது ஆர் மலைந்தாடியது. இவை தன்னுறு தொழிலாயவாறு காண்க."

நச்சினார்க்கினியரின் இந்த உரைப்பகுதியைக் கொண்டு, தொல்காப்பிய வெட்சித்திணைப் பகுதியிலும் தன்னூறு தொழில், வேந்துறு தொழில் என்னும் இரண்டும் கூறப்பட் டுள்ளமையை அறியலாம். எனவே, இளம்பூரணர் முதலியோர் இந்தப் பூச்சாண்டியைக் காட்டிப் பன்னிரு படலத்தின் வெட்சிப் படலத்தைத் தொல்காப்பியர் இயற்றவில்லை எனக் கூறல் பொருந்தாது.

மற்றும் ஒரு மறுப்பு கூறப்படுகிறது. அஃதாவது,— 'நிலை யாமையைப் பற்றிப் பேசுவது காஞ்சித்திணை என்று தொல் காப்பியம் கூறுகிறது. தன் நாட்டைப் பிடிக்க வந்தவனை எதிர்த்துப் போரிடுதல் காஞ்சித்திணை எனப் பன்னிரு படலம் கூறுகிறது. எனவே தொல்காப்பியத்தோடு வேறுபட்ட பன்னிரு

படலத்தில் தொல்காப்பியர்க்குப் பங்கு இருக்க முடியாது'—என்பது அந்த மறுப்பு.

தொல்காப்பியக் காஞ்சித் திணைக்கும் பன்னிரு படலக் காஞ்சித் திணைக்கும் வேறுபாடு இருக்கலாம். ஆனால், தொல் காப்பியர் பன்னிரு படலத்தில் இயற்றியிருப்பது காஞ்சிப் படலம் அல்லவே - வெட்சிப் படலம் என்றல்லவா சொல்லப் படுகிறது! நிற்க, - காஞ்சி என்பதற்கு நிலையாமை என்னும் பொருள் மட்டும் இல்லை; இன்னும் பல பொருள்கள் உண்டு என்பது நினைவிலிருக்க வேண்டும். நாடு பிடிக்க வந்தவனை எதிர்த்தல் காஞ்சி என்று கூறிய பன்னிரு படலம், காஞ்சி என்பதற்கு நிலையாமை என்னும் பொருளும் உண்டு என்பதை அறியாமல் இல்லை. பன்னிரு படல நூலின் பொதுவியல் படலத்தில், காஞ்சி என்னும் பெயரால் நிலையாமையை உணர்த்தும் துறைகள் உள்ளன. இதனை, நச்சினார்க்கினியர் மதுரைக்காஞ்சி உரையில் எழுதியுள்ள,

> 'வஞ்சியும் காஞ்சியும் தம்முள் மாறே எனப் பன்னிரு படலத்திற் கூறிய திணைப் பெயர் இப்பாட்டிற்குப் பொரு ளன்மை யுணர்க. அவர் (பன்னிரு படல ஆசிரியர்) முது மொழிக் காஞ்சி முதலியவற்றைப் பொதுவியல் என்று ஒரு படலமாக்கிக் கூறலின், அவை திணைப்பெயராகாமை உணர்க.'

என்னும் பகுதியால் அறியலாம். மற்றும், 'தெரிந்ததைக் கொண்டு தெரியாததற்குச் செல்லுதல்' என்னும் உளவியல் முறைப்படி, பன்னிரு படலத்தின் வழி நூலாகிய புறப்பொருள் வெண்பா மாலையாலும் இதனை அறியலாம். புறப்பொருள் வெண்பா மாலையில் காஞ்சிப் படலம் என ஒரு படலம் தனியே இருப்பதல்லாமல், பொதுவியல் படலம் என ஒன்றும் உள்ளது. இந்தப் பொதுவியல் படலத்தில், 'காஞ்சிப் பொது வியல்' என ஒரு பிரிவு தனியே உள்ளது. இந்தக் காஞ்சிப் பொதுவியல் நிலையாமையை உணர்த்துகிறது. இதுபற்றிய நூற்பா வருமாறு:—

> 'முதுரை பொருந்திய முதுமொழிக் காஞ்சி
> பெருங்காஞ் சிய்யே பொருள்மொழிக் காஞ்சி

புலவர் ஏத்தும் புத்தேள் நாட்டொடு
முதுகாஞ் சியோடு காடுவாழ்த்து உளப்பட
மையறு சீர்த்தி வருமிரு மூன்றும்
பொய்தீர் காஞ்சிப் பொதுவியல் பால.'

இதைப்போலவே இந்நூலின் முதல் நூலாகிய பன்னிரு படலத்திலும் நிலையாமையை உணர்த்தும் 'காஞ்சிப் பொது வியல்' இருக்கத்தான் செய்யும். எனவே, காஞ்சி என்னும் 'கரடி' விட்டு, தொல்காப்பியத்திற்கும் பன்னிரு படலத்திற்கும் பகை மூட்டி, பன்னிரு படலத்திலிருந்து தொல்காப்பியரை விலக்க முடியாது.

'குட்டித் தொல்காப்பியம்' என்று கூறப்படும் இலக்கண விளக்க நூல் - உரை இரண்டின் ஆசிரியராகிய வைத்தியநாதர், இளம்பூரணரோடு சேர்ந்துகொண்டு, சில இடங்களில் பன்னிரு படலத்தைக் குறைகூறித் தாக்கியிருப்பினும், 'அவன் கெட்டான் குடிகாரன், எனக்கு இரண்டு மொந்தை போடு' என்னும் கதையே போல, சில இடங்களில் தம்மையும் அறியாமல் பன்னிருபடலத்தின் பாதையில் சென்றுள்ளார் என்னும் செய்தியும் ஈண்டு ஒப்பு நோக்கத்தக்கது. பன்னிரு படலத்திற்கு ஏற்புடையனவாக வைத்தியநாதர் கூறியுள்ள சில பகுதிகள் வருமாறு:—

வெட்சிக்கு எதிரான கரந்தையையும் உழிஞைக்கு எதிரான நொச்சியையும் இவர் வெளிப்படையாகக் கூறியுள்ளார். இதனை, இலக்கண விளக்கம் - புறத்திணையியலில் உள்ள,

"வெட்சியும் உழிஞையும் வேற்றுவினை உடைமையின்
உட்குவரு கரந்தையும் நொச்சியும் சூடுதல்
அவ்வினை மருங்கின் அமைந்ததொல் வழக்கே'

என்னும் (3) நூற்பாவால் அறியலாம். 'வெட்சி ஆகவர்தல் (வெட்சி), ஆமீட்டல் (கரந்தை) என இருவகைப்படும் என்றும், உழிஞை அரணை முற்றுதல் (உழிஞை), அரணைக் காத்தல் (நொச்சி) என இருவகைப்படும்' என்றும் கூறியுள்ளார் இதனை,

'அவற்றுள்,

வெட்சி தானே குறிஞ்சியது புறனே
உட்குவரப் பொருபோர் உறுமுறை தொடங்கிய
வேந்துவிடு முனைஞர் வேற்றுப் புலக் களவின்
ஆதந் தோம்பலும் அந்நிரை மீட்டலும்
எனஇரு பாற்றே அஃதென மொழிப, (4)
'உழிஞை தானே மருதத்துப் புறனே
முழுமுதல் அரணம் கூற்றலும் காத்தலும்
எனஇரு வகையது அதுவென மொழிப.' (9)

என்னும் நூற்பாக்களால் அறியலாம். மற்றும், 'மண்டமர்க் கிவர்ந்தோன்' என்று தொடங்கும் (5) நூற்பாவில், வெட்சிக்கு உரிய துறைகளையும், 'நிரைகோட் கேட்ட' என்று தொடங்கும் (6) நூற்பாவில் கரந்தைக்கு உரிய துறைகளையும், 'முடிமிசை உழிஞை சூடி' என்று தொடங்கும் (10) நூற்பாவில் உழிஞைக்கு உரிய துறைகளையும், 'ஏப்புழை ஞாயில்' என்று தொடங்கும் (11) நூற்பாவில் நொச்சிக்கு உரிய துறைகளையும் தனித்தனியே கூறியுள்ளார். இவ்வாறாகப் பன்னிரு படலத்தின் பகுப்புக்களைத் தாமும் ஏற்றுக் கொண்டுள்ளார் இலக்கண விளக்கமுடையார். இது மட்டுமா? பன்னிரு படலத்தில் பொதுவியல் படலம் என்னும் பெயரில் உள்ளதை இவர் ஒழிபு-பொது என்னும் பெயரில் தனியாகக்குறிப்பிட்டு, அதற்கு உரியனவாக, தொல்காப்பியத்திலுள்ள பல துறைகளையும் எடுத்துத் தொகுத்துக் கூறியுள்ளார். இதனை,

'சாற்றாது ஒழிந்தவும் சாற்றிய திணைவயின்
ஏற்றன பொதுவும் எனஇரு திறனும்
ஓதிய புறப்பொருள் ஒழிபெனப் படுமே.'

என்னும் (20) நூற்பாவாலும், 'வேந்திடை தெரிதல்' (21) என்று தொடங்கும் 89 அடிகள் கொண்ட நீளமான நூற்பாவாலும் அறியலாம். மேலும் இவர், தமது நூலுக்குத் தாமே எழுதிய உரையில், மேற்கோள்களாகப் பன்னிரு படலத்தின் வழிநூலாகிய புறப்பொருள் வெண்பாமாலைச் செய்யுள்களை மிகுதியாக எடுத்துக் காட்டியிருப்பதும் ஈண்டுக் குறிப்பிடத்தக்கது. சுருங்கச் சொல்லின், இலக்கண விளக்க ஆசிரியர்

தொல்காப்பியம் பன்னிரு படலம் என்னும் இரு நூல்களையும் தழுவிச் சென்றுள்ளார் எனக் கூறலாம். இதனால், தொல்காப்பியத்திற்கும் பன்னிரு படலத்திற்கும் நடுவே உள்ள இடைவெளி மிகவும் சுருங்கியது என்பது புலப்படும்.

இவ்வாறாக, இளம்பூரணர் முதலியோர் கூறும் மறுப்புரைகளுக்கு இன்னும் பதில் மறுப்புரைகள் பல கூறி, பன்னிருபடலத்தின் வெட்சிப் படலத்தைத் தொல்காப்பியரே இயற்றினார் என்ற சிவஞான முனிவர் போன்றோர் கொள்கையை உறுதி செய்யலாம்.

இதுகாறுங் கூறியவற்றால், ஐயனாரிதனார் தமது புறப்பொருள் வெண்பா மாலையின் சிறப்புப் பாயிரச் செய்யுளில் கூறியுள்ளாங்கு, தொல்காப்பியர் முதலிய புலவர்கள் பன்னிருவர் சேர்ந்து இயற்றிய ஒரு தெகுப்பு நூல் - ஒரு தொகை நூல் பன்னிரு படலம் என்பது வெளிப்படை.

நூல் அமைப்பு:

இனிப் பன்னிரு படல நூல் அமைப்பினைப் பற்றி ஆராய்வாம். தொல்காப்பியத்தில் எழுத்ததிகாரம். சொல்லதிகாரம் பொருளதிகாரம் என்னும் மூன்று பெரும் பிரிவுகள் உள்ளன; ஒவ்வொன்றிலும் 'இயல்' என்னும் பெயரில் ஒன்பது ஒன்பது உட்பிரிவுகள் உள்ளன; கம்பராமாயணத்தில் பெரும் பிரிவுகளாக ஆறு காண்டங்கள் உள்ளன, ஒவ்வொரு காண்டத்திலும் உட்பிரிவுகளாகப் பல படலங்கள் உள்ளன. இந்த இரு நூல்களையும் போன்றதன்று பன்னிரு படலம். இதில் பெரும்பிரிவு உட்பிரிவு என இரு வேறு வகை இல்லை. புறப்பொருள் வெண்பா மாலையைப் போல, 'படலம்' என்னும் பெயரில் பன்னிரண்டு வெற்றுப் பிரிவுகளை யுடையது இது. இதனை, தொல்காப்பியம் செய்யுளியலில் உள்ள,

'மூன்றுறுப் படக்கிய தன்மைத் தாயின்
தோன்றுமொழிப் புலவர் அது பிண்டம் என்ப'

என்னும் (165) நூற்பாவின்கீழ் இளம்பூரணர் எழுதியுள்ள,

அவற்றுள் சூத்திரத்தால் பிண்டமாயிற்று இறையனார் களவியல், ஒத்தினால் பிண்டமாயிற்று பன்னிரு படலம்; அதி

காரத்தால் பிண்டமாயிற்று இந்நூல் (தொல்காப்பியம்) என்று கொள்க; இவற்றைச் சிறு நூல் இடைநூல், பெரு நூல் எனப் படும்.'

என்னும் உரைப்பகுதியால் அறியலாம். இளம்பூரணரின் கருத்துப்படி, - ஒருவகைப் பிரிவும் இல்லாமல் அறுபது சூத்திரங்கள் கொண்ட இறையனார் களவியல் 'சிறுநூல்' வகையைச் சார்ந்ததாகும்; பெரும் பிரிவு இல்லாமல் சிறு பிரிவுகள் மட்டும் உடைய பன்னிருபடலம் 'இடைநூல்' வகையைச் சேர்ந்ததாகும்; பெரும்பிரிவும் சிறுபிரிவும் உடைய தொல்காப்பியம் 'பெருநூல்' வகையைச் சேர்ந்ததாகும். எனவே, பன்னிரு படலத்தில், படலம் என்னும் பெயருடைய பன்னிரண்டு தனிப்பிரிவுகள் மட்டும் உள்ளமை புலனாகும்.

படலம் என்னும் பிரிவு பிற்கால இலக்கியங்களில் இருக்கக் காண்கிறோம். ஆனால், தொல்காப்பியர் காலமாகிய இடைச் சங்க காலத்தில் 'படலம்' என்னும் சொல் ஆட்சியில் இருந்ததா என்ற ஐயம் எழலாம். படலம் என்னும் சொல் தொல்காப் பியத்திலேயே உள்ளது. இதற்கு அகச்சான்றாக, தொல் காப்பியம் - செய்யுளியலில்,

'ஒரு பொருள் நுதலிய சூத்திரத் தானும்
இன மொழி கிளந்த ஒத்தி னானும்
பொதுமொழி கிளந்த படலத் தானும்
மூன்றுறுப் படக்கிய பிண்டத் தானும் என்று
ஆங்கனை மரபின் இயலும் என்ப.' (161)

'ஒரு நெறி யின்றி விரவிய பொருளால்
பொதுமொழி தொடரின் அது படலம் ஆகும்.' (164)

என்னும் நூற்பாக்கள் உள்ளமை காண்க. எனவே, பன்னிரு படலம், தொல்காப்பியர் முதலிய பன்னிருவர் பங்கு பெற் றுள்ள இடைச்சங்க கால நூல் என்று கொள்ளத் தயங்க வேண்டியதில்லை. 'பதினாறு படலம்' என்னும் பெயரிலும் ஓர் இசைத்தமிழ் நூல் உள்ளது என்னும் செய்தி, ஈண்டு ஒப்பு நோக்கற்பாலது. அந்நூல் பற்றிப் பின்னர் தனித் தலைப்பில் பேசப்படும்.

நிற்க, - கிடைக்கப் பெறாத பன்னிரு படலத்தில் வெட்சி முதலிய பன்னிரு படலங்களும் உள்ளன என்பதற்கு ஏறக் குறையச் சான்றுகள் கிடைத்துள்ளன. பாயிரம், வெட்சித்திணை, காஞ்சித்திணை, உழிஞைத்திணை, நொச்சித்திணை, தும்பைத் திணை, வாகைத் திணை, பொதுவியல் திணை, கைக் கிளைத் திணை, பெருந்திணை ஆகியவை தொடர்பான பன்னிரு படல நூற்பாக்கள் சிலவற்றை, மேலே நாம் எடுத்துக் காட்டியுள்ள யாப்பருங்கல விருத்தியுரை, தொல்காப்பிய - இளம்பூரணர் உரை, தொல்காப்பிய - பேராசிரியர் உரை, மதுரைக் காஞ்சி - நச்சினார்க்கினியர் உரை ஆகியவற் றின் வாயிலாக அறிந்துள்ளோம். மேலே அறிந்தனவேயன்றி இன்னும் சில நூற்பாக்கள் சீவகசிந்தாமணி- நச்சினார்க்கினியர் உரையாலும், தொல்காப்பிய உரைகளாலும் யாப்பருங்கல உரையாலும் அறிவிக்கப்பட்டுள்ளன. அவை வருமாறு:—சீவக சிந்தாமணி-கோவிந்தையார் இலம்பகத்தில் 'கொடுமர எயினர் என்று தொடங்கும் (20 ஆம்) பாடலுக்கு நச்சினார்க்கினியர் எழுதியுள்ள உரைப் பகுதியிலிருந்து, பன்னிரு படலத்தின் கரந்தைத்திணையைச் சேர்ந்த,

'பல்லாக் கொண்டார் ஒல்லார் என்னும்
பூசல் கேட்டுக் கையது மாற்றி...'

என்னும் நூற்பா கிடைக்கப் பெற்றுள்ளது. மற்றும், தொல்காப் பியம் புறத்திணை இயலில் உள்ள 'அறுவகைப்பட்ட பார்ப் பனப்-பக்கமும்' என்று தொடங்கும் வாகைத்திணை பற்றிய (16 ஆம்) நூற்பாவிற்கு, இளம்பூரணர் எழுதியுள்ள உரை யிடையே காணப்படுகின்ற,

''பன்னிரு படலத்துள்,

'பனியும் வெயிலும் கூதிரும் யாவும்
துனியில் கொள்கையொடு நோன்மை எய்திய
தணிவுற்று அறிந்த கணிவன் முல்லை'

எனவும் ஓதுதலின் மேலதே பொருளாகக் கொள்க.''—

என்னும் பகுதியிலிருந்து, பன்னிருபடல வாகைத்திணை பற்றிய நூற்பா ஒன்று அறியவருகிறது. அடுத்து யாப்பருங்

கலம்-உறுப்பியலில் உள்ள, ‘வஞ்சியுள் அகவல் மயங்கினும், வரையார்’ என்னும் (9 ஆம்) நூற்பாவின்கீழ் எழுதப்பட்டுள்ள

“வஞ்சியுள் அகவல் மயங்கவும் பெறும் என்னாது மயங்கினும் வரையார் என்று மற்றொரு வாய்பாட்டாற் சொல்ல வேண்டியது என்னை? வஞ்சிப்பாவினுள் ஆசிரியம் மயங்கி வருவது அகத்திணை அல்லாத வழியே என்ப ஒருசாராசிரியர், என்றற்கு வேண்டப்பட்டது; என்னை?

‘அகத்திணை மருங்கின் அளவு மயங்கி
விதப்ப மற்றவை வேறா வேண்டி
வஞ்சி அடியின் யாத்தனர் வஞ்சி
அகத்திணை மருங்கின் அணையு மாறே.’

என்பது பன்னிரு படலத்துட் பெருந்திணைப் படலத்துச் சூத்திரம் ஆகலின்.”—

என்னும் உரைப் பகுதியிலிருந்து பன்னிருபடலத்தின் பெருந்திணைப் படல நூற்பா ஒன்று தெரியவருகிறது. அடுத்து, – கைக்கிளைப் படலத்தைச் சேர்ந்த மூன்று நூற்பாக்கள், தொல்காப்பியச் செய்யுளியலுக்குப் பேராசிரியர் எழுதியுள்ள உரைப் பகுதிகளால் அறியப்படுகின்றன. அவையாவன:- தொல்காப்பியச் செய்யுளியலில் உள்ள ‘கலிவெண்பாட்டே கைக்கிளைச் செய்யுள்’ என்று தொடங்கும் (160 ஆம்) நூற்பாவின் கீழ்ப் பேராசிரியர் எழுதியுள்ள,

“... அவ்விரண்டு பாவின் கூட்டம் இரண்டடியால் வாராவாகலானும் அவையும் நான்கடியிற் சுருங்கா வென்பது உய்த்துக்கொண் டுணர வைத்தான என்பது, என்னை? கைக்கிளைப் படலத்துள்:

‘போற்றி வெண்பா வாகி மற்றதன்
இறுதி ஐஞ்சீர் ஆசிரி யம்மே.’

என்றார் ஆகலின்...”

என்னும் உரைப்பகுதியாலும், அதே நூற்பாவின் கீழ் அவர் மேலும் தொடர்ந்து எழுதியுள்ள,

“...இது நெஞ்சிற்கு உரைத்தது எனத் தலைமகள் சொல்

லினது; நற்காமம் அன்றாம் ஆகலின். இக் கருத்தினானே, இதனைப் புறத்திணையுட் கொண்டாரும் கைக்கிளைப் படலத்து;

'நெஞ்சிற் குரைத்தலும் கேட்போர் இன்றி
அந்தர மருங்கிற் கூறலும் அல்லது
சொல்லலும் கேட்டலும் இல்லை யாக
அகத்திணை மருங்கின் ஐவகை யானும்
இகத்தல் என்ப இவ்வயினான'

என்றார் எனக் கொள்க.''

என்னும் உரைப்பகுதியாலும், செய்யுளியலில் உள்ள 'புற நிலை வாயுறை' என்று தொடங்கும் (161 ஆம்) நூற்பாவின் கீழ் அவர் எழுதியுள்ள,

''...இக் கருத்தினான் வெண்பா அடிவரையில வாயினும் ஆசிரிய அடி மூன்றிகவா என்பது கைக்கிளைப் படலத்துளுஞ் சொல்லப்பட்டது; என்னை?

'முச்சீர் எருத்திற் றாகிமுட் டின்றி
எச்சீ ரானும் ஏகாரத் திறுமே.'

என்றா ராகலின்...''

என்னும் உரைப்பகுதியாலும், கைக்கிளைப் படலத்தைச் சேர்ந்த மூன்று நூற்பாக்களை அறியமுடிகிறது. ஆனால்,— பேராசிரியர் மூன்று இடங்களிலுமே வெற்றுபடியாகக் 'கைக் கிளைப் படலம்' என்றுதானே குறிப்பிட்டுள்ளார்; பன்னிரு படலம் என்றோ பன்னிரு படலக் கைக்கிளைப் படலம் என்றோ அவர் குறிப்பிடவில்லையே! எனவே, இந்தக் கைக்கிளைப் படலத்தைப் பன்னிரு படலத்தின் கைக்கிளைப் படலம் என்று எவ்வாறு கொள்ள முடியும்? கைக்கிளைப் படலம் என்னும் பெயரில் வேறொரு தனி நூல் இருக்கலாம் அல்லவா?- என்றெல் லாம் இங்கே ஐயப்பாடு எழலாம். இதற்குத் தெளிவு காண வேண்டும்:

'கைக்கிளைப் படலம்' என்னும் பெயரில் வேறு தனிநூல் இருப்பதாக அறியப்படாமையின், பேரசிரியரால் குறிப்பிடப் பட்டுள்ள கைக்கிளைப் படலம் என்பது, பன்னிரு படலத்தின்

கைக்கிளைப் படலமாகத்தான் இருக்கக்கூடும். கைக்கிளைச் செய்யுளைப் பற்றிக் கூறும் தொல்காப்பிய நூற்பாவிற்கு உரையெழுதும் பேராசிரியர், இந்த இடத்திலே பன்னிரு படலம் எனப் பொதுவாக நூற்பெயரைச் சுட்டுவதனினும், கைக்கிளைப் படலம் என இடத்திற்கு ஏற்பச் சிறப்பாகத் திணைப் பெயரைச் சுட்டிக் கூறுவதே பொருத்தமாகும். பன்னிரு படலக் கைக்கிளைப் படலம் என்று இரண்டையும் இணைத்துக் கூறியிருக்கலாம் எனின், அது மிகவும் நீளமாய் இருக்குமாதலின் அங்ஙனம் கூறாதுவிட்டார். அன்றியும், பன்னிரு படலத்தில் உள்ள ஒவ்வொரு படலமும் தகுதிமிக்க ஒவ்வோர் ஆசிரியரால் இயற்றப்பட்டதாதலின், ஒவ்வொன்றும் தனிநூல் போன்ற சிறப்புடையது; அதனால், திணைப் பெயரால் படலத்தைச் சுட்டினாலேயே பன்னிரு படலத்தைக் குறிக்கக் கூடிய நிலைமை அந்தக் காலத்தில் இருந்திருக்கும்; எனவேதான் பேராசிரியர் முழு நூல் பெயரைச் சுட்டாமல் திணைப் பெயரைக் குறிப்பிட்டதோடு அமைந்துவிட்டார்.

மற்றும், ஒரு நூலின் ஒரு பிரிவில் உள்ள ஒரு செய்தியைக் கூறவந்தவிடத்து, நூல் பெயரைக் கூறாமல், செய்தி அமைந்துள்ள பிரிவின் பெயரை மட்டும் குறிப்பிடுவது என்றுமே உலக வழக்காகும். எடுத்துக் காட்டாக, - தொல்காப்பியப் பொருளதிகாரத்தில் உள்ள ஒரு செய்தியைக் கூறுங்கால், தொல்காப்பியத்தைக் குறிப்பிடாமல் பொருளதிகாரம் என்று மட்டும் கூறுவதையும், கலித்தொகையில் உள்ள குறிஞ்சிக் கலியிலிருந்து ஒரு செய்தியைச் சொல்லுங்கால் கலித்தொகை என்னும் நூற்பெயரைக் குறிப்பிடாமல் குறிஞ்சிக்கலி எனப் பிரிவின் பெயரைமட்டும் கூறுவதையும், கம்பராமாயணம் - அயோத்தியா காண்டத்திலுள்ள ஒரு கருத்தைச் சொல்ல நேர்ந்தபோது கம்பராமாயணம் என்னும் நூற்பெயரைச் சுட்டாமலேயே அயோத்தியா காண்டம் எனக் காண்டத்தின் பெயரை மட்டுமே குறிப்பிடுவதையும், இன்ன பிற மாதிரிகளையும் உலக வழக்கில் காணலாம். இவ்வாறே, பேராசிரியர் நூற்பெயரைக் குறிப்பிடாமல், கைக்கிளைப் படலம் எனப் பிரிவின் பெயரை மட்டும் குறுப்பிட்டிருப்பினும், அது பன்னிரு படலத்தின் கைக்கிளைப் படலத்தையே குறிக்கும்.

இந்தக் கருத்தை உறுதிசெய்ய இன்னும் ஒரு சான்று உண்டு: 'தெரிந்ததிலிருந்து தெரியாததற்குச் செல்லுதல்' என்னும் உளவியல் முறைப்படி, யாப்பருங்கல விருத்தியுரையிலிருந்து தொல்காப்பியப் பேராசிரியர் உரைக்கு வருவோம். 'அகத்திணை மருங்கின் அளவு மயங்கி' என்று தொடங்கும் நூற்பா, 'பன்னிரு படலத்துட் பெருந்திணைப் படலத்துச் சூத்திரம்' என யாப்பருங்கல விருத்தியுரை கூறியிருப்பதை மேலே எடுத்துக் காட்டியுள்ளோம். நூற்பெயர், பிரிவின்பெயர் ஆகிய இரண்டையும் இணைத்துப் 'பன்னிரு படலத்துட் பெருந்திணைப் படலத்துச் சூத்திரம் எனத் தெளிவாக யாப்பருங்கல உரை கூறியுள்ளது. அது குறிப்பிட்டுள்ள சூத்திரம் பாட்டின் யாப்பு வகையைப் பற்றியதாகும். இந்த அடிப்படையுடன் பேராசிரியரிடம் வருவோம். பேராசிரியர் குறிப்பிட்டுள்ள கைக்கிளைப் படலத்துச் சூத்திரங்களும் பாட்டின் யாப்பு வகையைப் பற்றியனவேயாகும். இதைக் கொண்டு, கைக்கிளைத் திணை இன்ன வகையான பாடலால் இயற்றப்படும்; பெருந்திணை இன்னவிதமான பாடலால் இயற்றப்படும்-எனப்பன்னிரு படலத்துள் சொல்லப்பட்டுள்ளமையை அறியலாம். இவ்விரண்டனுள், பெருந்திணைப் பாடலின் யாப்பு வகையைப் பற்றிக் கூறும் சூத்திரம் 'பன்னிரு படலத்துட் பெருந்திணைப் படலத்துச் சூத்திரம்' என யாப்பருங்கல உரை கூறுவதைக் கொண்டு, கைக்கிளைப் பாடலின் யாப்பு வகையைப் பற்றிக் கூறுவனவாகப் பேராசிரியரால் குறிப்பிடப்பட்டுள்ள மூன்று சூத்திரங்களும், பன்னிருபடலத்துக் கைக்கிளைப் படலச் சூத்திரங்களாகும் என நம்பலாம்.

இவ்வாறாக, பன்னிரு படல நூலின் பன்னிரு படலங்களையும் பற்றிய நூற்பாக்கள் சிலவாயினும் நமக்குக் கிடைத்திருப்பது ஓர் அறிய வாய்ப்பாகும். இங்கே, கைக்கிளைப் படலத்து நூற்பாக்களைப் பற்றி இவ்வளவு விதந்து எழுத நேர்ந்ததற்கு இன்றியமையாத ஒரு காரணம் உண்டு. அஃது அடுத்தாற்போல் அறியப் பெறும்.

**ஆசிரியர்கள்:**

பன்னிரு படலத்தில் ஆசிரியர்கள் தொல்காப்பியர் முதலிய

பன்னிருவர் என அறிவிக்கப்பட்டிருப்பினும், அந்தப் பன்னிருவ ரின் பெயர்களும் திட்டவட்டமாகத் தெரியவில்லை. ஆசிரியர் களைப் பற்றி அறிந்து கொள்ள நமக்கு அகச் சான்றாகத் துணைபுரிபவை பன்னிரு படலப் பாயிரச் செய்யுளும் அதன் வழிநூலாகிய புறப்பொருள் வெண்பா மாலைப் பாயிரச் செய் யுளுமே யாகும். பன்னிரு படலப் பாயிரச் செய்யுள் தொல் காப்பிய - பேராசிரியர் உரை ஒன்றால் மட்டுமே அறியப்படு கிறது. இந்தப் பாயிரச் செய்யுள் முன்பே ஓரிடத்தில் கொடுக் கப்பட்டிருப்பினும், குறிப்பிட்டதொரு பயனுக்காக ஈண்டு இன்னொரு முறை வருமாறு:

'வீங்குடல் உடுத்த வியன்கண் ஞாலத்துத்
தாங்கா நல்லிசைத் தமிழ்க்கு விளக் காகென
வானோர் எத்தும் வாய்மொழிப் பல்புகழ்
ஆனாப் பெருமை அகத்தியன் என்னும்
அருந்தவ முனிவன் ஆக்கிய முதல்நூல்
பொருந்தக் கற்றுப் புரைதப உணர்ந்தோர்
நல்லிசை நிறுத்த தொல்காப் பியனும்'

என்பது வரைக்குமே பேராசிரியர் தந்துள்ளார். தொல்காப்பி யர் அகத்தியரது நூலைக் கற்றவர் என்னும் செய்தியை மட்டுமே குறிப்பிடும் நோக்கங் கொண்ட பேராசிரியர், இந்தச் செய்யுளைத் தொல்காப்பியரோடு நிறுத்திக் கொண்டார். ஆனால், இச் செய்யுள் தொல்காப்பியரோடு நின்றுவிட வில்லை. தொல்காப்பியரைத் தொடர்ந்து மற்றப் புலவர்கள் பதினொருவரின் பெயர்ப் பட்டியல் நீண்டு கொண்டு போகி றது. நமக்கு அந்தப் பட்டியல் கிடைக்கவில்லை. முழுச் செய் யுளும் பேராசிரியருக்குக் கிடைத்திருந்தும், அவருக்கு வேண்டிய பகுதியோடு அவர் நிறுத்திக் கொண்டது நமது தீப்பேறே! தமக்குப் பின்னால் இந்த நூல் கிடைக்காமல் மறைந்து போகும் என்பது பேராசிரியர்க்கு அப்போது எவ்வாறு தெரியும்? தெரிந் திருந்தால் முழுப் பாடலையும் கொடுத்தாலும் கொடுத்திருப் பார். இச் செய்யுளில் உள்ள,

'பொருந்தக் கற்றுப் புரைதப உணர்ந்தோர்
நல்லிசை நிறுத்த தொல்காப் பியனும்'

என்னும் இரண்டடிகளில் உள்ள 'உணர்ந்தோர்' என்னும் பன்மைச் சொல்லையும், 'தொல்காப்பியனும்' என்னும் ஒருமைச் சொல்லையும் ஊன்றி நோக்கவேண்டும். அகத்தியனது முதல்நூலை உணர்ந்தோர் பலர்; அவராவார் தொல்காப்பியனும் அந்தப் புலவனும் இந்தப் புலவனுமாகப் பன்னிருவர்-என்பதாகத் தொல்காப்பியனிலிருந்து பட்டியல் தொடங்குகிறது. என்பதை இச் செய்யுள் அமைப்பு அறிவிக்கின்றதல்லவா? எனவே, 'உணர்ந்தோர்' என்னும் பன்மையும் 'தொல்காப்பியன்' என்னும் ஒருமையும், 'தொல்காப்பியனும்' என்னும் சொல்லின் இறுதியில் உள்ள எண்ணும்மையும், 'அகத்தியரது முதல் நூலைக் கற்றவர்களாகிய தொல்காப்பியனும் பிறருமாகச் சேர்ந்து பன்னிரு படலம் இயற்றினார்' என்னும் கருத்தை நாம் உய்த்துணரும்படிச் செய்கின்றன.

இந்தச் செய்யுள் முழுதும் பேராசிரியரால் தரப்பட்டிருப்பின், பன்னிருவர் என்ற எண்ணிக்கையும், பன்னிருவர் பெயரும் கிடைத்திருக்கலாம். இந்த வாய்ப்பு இன்மையால், இதன் வழி நூலாகிய புறப்பொருள் வெண்பா மாலையின் சிறப்புப் பாயிரச் செய்யுளில் உள்ள, தொல்காப்பியன் முதல் பன்னிரு புலவரும் பாங்குறப் பகர்ந்த பன்னிரு படலம்' என்னும் பகுதியால்தான் 'பன்னிருவர்' என்னும் எண்ணிக்கை நமக்குத் தெரிய வந்துள்ளது. எனவே,-இந்த இரு நூல்களின் பாயிரச் செய்யுள்களும் இணைந்து, 'பன்னிரு படல ஆசிரியர்கள் தொல்காப்பியன் முதலிய பன்னிருவர்' என்னும் செய்தியை மட்டும் தெரிவித்துள்ளன. இனி, இந்தப் பன்னிருவர் யார் யாராக இருக்கலாம் என்று பார்ப்போமே!

அகத்தியனாரின் மாணாக்கர்களைத் தெரிவிக்கத் தொடங்கிய அபிதான சிந்தாமணி ஆசிரியர், 'இவர்தம் மாணாக்கர்கள் தொல்காப்பிய முனிவர், அதங்கோட்டாசான், துராலிங்கன், செம்பூட்சேய், வையாபிகன், வாய்ப்பியன், பனம்பாரன், கழாரம்பன், அவிநயன், காக்கை பாடினியன், நற்றத்தன் வாமனன் முதலியவர்கள்', என்று கூறியுள்ளார்; அஃதாவது, -குறிப்பிட்ட 'பன்னிருவரைப் பெயர் சூட்டிச் சிறப்பாகவும் மற்றையோரை 'முதலியவர்கள்' என்பதில் அடக்கிப் பொது

வாகவும் கூறியுள்ளார். இவ்வாறே இன்னும் சிலர் அகத்தியரின் மாணாக்கர்களைக் குறிப்பிட்டுள்ளனர். 'முதலியவர்கள்' என்னும் சொல்லைக் கொண்டு, இந்தப் பன்னிருவர் அல்லாத பிறரும் உளர் எனத் தெளியலாம். எனவே, பன்னிரு படலத்தின் ஆசிரியர்கள் இந்தப் பன்னிருவராகவும் இருக்கலாம் – அல்லது – இந்தப் பன்னிருவருள் சிலரும், வேறு சிலருமாகச் சேர்ந்த பன்னிருவராகவும் இருக்கலாமன்றோ?

பன்னிரு படலத்தின் ஆசிரியர்கள் பன்னிருவருள் பதின்மர் பெயர்கள் தெரியாவிடினும், தொல்காப்பியருடன் மற்றொருவர் பெயரை மட்டும் தெரிந்து கொள்ளும் வாய்ப்புக் கிடைத்துள்ளது. தொல்காப்பியச் செய்யுளியல் உரையில் (பன்னிரு படலத்தின்) கைக்கிளைப் படலத்துச் சூத்திரங்களாகப் பேராசிரியரால் எடுத்துக் காட்டப்பட்டுள்ள மூன்று சூத்திரங்களுள்,

'ஆச்சீர் எருத்திற் றாகிமுட் டின்றி
எச்சீ ரானும் ஏகாரத் திறுமே.'

என்பதும் ஒன்று என முன்னரே அறிந்து வைத்துள்ளோம். இந்தச் சூத்திரம் எந்தப் பாவைப் பற்றியது என அறிவிக்கவில்லையாதலின், இதனை முழுமைபெற்ற சூத்திரமாகக் கருத முடியாது. இதுபோன்ற ஒரு சூத்திரம் முழுமை பெற்ற நிலையில் சிறு பாட வேறுபாட்டுடன் யாப்பருங்கல விருத்தியுரையில் மேற்கோளாக எடுத்தாளப்பட்டுள்ளது. இந்த முழு உருவத்தை, யாப்பருங்கலம் – செய்யுளியலில் உள்ள,

'அந்த அடியின் அயலடி சிந்தடி
வந்தன நேரிசை ஆசிரி யம்மே.'

என்னும் நூற்பாவின் கீழ் எழுதப்பட்டுள்ள,

"...சிந்து வந்தன என்னாது, பெயர்த்தும் அடி என்றது என்னை? கைக்கிளைப் பொருள்மேல் ஆசிரியம் வருவுழி எருத்தடி முச்சீரான் வரப்பெறாது" என்பர் கடிய நன்னியார் என்பது அறிவித்ததற்கு எனக் கொள்க. என்னை?

'கைக்கிளை ஆசிரியம் வருவ தாயின்
முச்சீர் எருத்தின் றாகி முடிவடி
எச்சீ ரானும் ஏகாரத் திறுமே.'

என்றாராகலின்."

என்னும் உரைப் பகுதியில் காணலாம். (பன்னிரு படலத்தின்) கைக்கிளைப் படலத்துச் சூத்திரமாகப் பேராசிரியரால் தொல்காப்பிய உரையில் எடுத்துக் காட்டப்பெற்றுள்ள இந்தச் சூத்திரம், கடிய நன்னியார் என்னும் புலவரால் இயற்றப் பட்டதென யாப்பருங்கல விருந்தியுரை கூறுதலின், பன்னிரு படலத்தின் கைக்கிளைப் படலத்தைக் கடிய நன்னியார் இயற்றி யிருக்கலாம் எனக்கொள்ளலாமே! இதனை உறுதி செய்யும் வகையில் யாப்பருங்கல விருத்தியுரையில் இன்னும் ஓர் இடம் உள்ளது; யாப்பருங்கலம்-செய்யுளியலில் உள்ள,

'வெண்பா ஆசிரியம் கலியே வஞ்சியெனப்
பண்பாய்ந் துரைத்த பாநான் காகும்'

என்னும் நூற்பாவின் கீழ் வரையப்பட்டுள்ள உரையின் ஒரு பகுதி கருதத் தக்கது. அது வருமாறு:—

"கைக்கிளையும் வெண்பா முதலாய் ஆசிரியம் ஈறாய் வரும்வழி, ஆசிரிய அடி இரண்டேயாய், அவற்றுள் ஈற்றடி நாற்சீராய், ஈற்றயலடி முச்சீராய் வருவது எனக் கொள்க. என்னை?

'இருதலைக் காமம் இன்றிக் கைக்கிளை
ஒருதலைக் காம மாகக் கூறிய
இலக்கண மரபின் இயல்புற நாட்டி
அதர்ப்பட மொழிந்தனர் புலவர் அதுவே
பெறுதி வெண்பா உரித்தாய் மற்றதன்
இறுதி எழுசீர் ஆசிரி யம்மே.'
'வெண்பா ஆசிரி யத்தாய் மற்றதன்
இறுதி எழுச்சீர் ஆசிரி யம்மே.'
'கைக்கிளை மருட்பா வாகி வருகால்
ஆசிரியம் வருவ தாயின் மேவா
முச்சீர் எருத்திற் றாகி முடிவடி
எச்சீ ரானும் ஏகாரத் திறுமே.'

என்பது கடிய நன்னியார் செய்த கைக்கிளைச் சூத்திரம் ஆதலின்."—

இந்த உரைப் பகுதியில் கடிய நன்னியாரின் மூன்று சூத்திரங்கள், 'கைக்கிளைச் சூத்திரம்' என்னும் பெயரில் தரப்பட்

டுள்ளமை காண்க. மேலுள்ள மூன்றாவது சூத்திரத்தின் பிற்பகுதியாகப் பேராசிரியர் காட்டியுள்ள சூத்திரத்தைக் கொள்ள இடமுண்டு. இந்த உரைப் பகுதியில் கூறப்பட்டுள்ள, 'கடிய நன்னியார் செய்த கைக்கிளைச் சூத்திரம்' என்பது பன்னிரு படலத்தின் கைக்கிளைப் படலமாக இருக்கலாம். எனவே, அகத்தியரின் மாணாக்கர்களுள் கடிய நன்னியாரும் ஒருவராக இருக்கலாமன்றோ? இந்தக் கருத்தினை முற்றமுடிந்த முடிபாக உறுதிப் படுத்தா விடினும், அறிஞர்களின் ஆராய்ச்சிப் பசிக்கு விருந்தாக இதனை விட்டுவைப்போமாக!

இதுகாறுங் கூறியவற்றால், நக்கீரர் முதலிய பலரால் பாடப்பட்ட 'பத்துப் பாட்டு' என்னும் தொகுப்பைப்போல், பன்னிரு படலம் என்னும் நூல், தொல்காப்பியர் முதலிய புலவர்கள் பன்னிருவர் இயற்றிய பன்னிரண்டு படலங்களின் தொகுப்பு நூல் என்பது பெறப்படும். இதனை நாம், இடைச் சங்க கால இலக்கணத் தொகை நூல் என்று கொள்ளலாம்.

**ஊமைக்கு உளறு வாயன்:**

தலைச்சங்கத் தொகை நூல்கள் நான்கினைப் பற்றியும் இடைச் சங்கத் தொகை நூல்கள் நான்கினைப் பற்றியும் இறையனார் அகப்பொருள் உரையின் வாயிலாக முன்னமேயே அறிந்து வைத்துள்ளோம். அந்த எட்டு நூல்களின் பெயர் தவிர வேறொன்றும் அறிய முடியவில்லை. ஆனால், இடைச் சங்கத் தொகை நூலாகிய பன்னிரு படலத்தைப் பற்றி ஓரளவாயினும் அறிய முடிகிறது; பன்னிரு படல நூற்பாக்கள் ஒருசிலவாயினும் கிடைத்துள்ளன. இந்த நிலையில், அந்த எட்டு நூல்களினும் பன்னிரு படலம் எவ்வளவோ வாய்ப்புடையது என்று சொல்லலாம். 'ஊமையனுக்கு உளறுவாயன் சண்டப் பிரசண்டன்' என்பது பழமொழியாயிற்றே!

---

# 10. பதினாறு படலம்

நூல் அறிமுகம்:

பன்னிரு படலம் என்னும் இயல்தமிழ் நூலைப்பற்றி மேலே ஆராய்ந்தோம். இதேபோல் பெயர்பெற்ற 'பதினாறு படலம்' என்னும் இசைத்தமிழ் நூல் ஒன்றைச் சிலப்பதிகார அரும்பத வுரையாசிரியர் அறிமுகப்படுத்தியுள்ளார். சிலப்பதிகாரம்- புகார்க் காண்டம் - 'கானல் வரி' என்னும் தலைப்பின் தொடக்கத்தில் உள்ள,

''சித்திரப் படத்துட்புக்குச் செழுங்கோட்டின் மலர்
புனைந்து
மைத்தடங்கண் மணமகளிர் கோலம்போல் வனப்பெய்திப்
பத்தருங் கோடு மாணியு நரம்பு மென்று
இத்திறத்துக் குற்றநீங்கிய யாழ்கையில் தொழுது வாங்
கிப்
பண்ணல் பரிவட்டணை ஆராய்தல் தைவரல்
கண்ணிய செலவு விளையாட்டுக் கையூழ்
நண்ணிய குறும்போக்கு என்று நாட்டிய
எண்வகையால் இசை யெழீஇப்
பண்வகையால் பரிவு தீர்ந்து
மரகதமணித் தாள்செறிந்த மணிக்காந்தள்மெல்விரல்கள்
பயிர்வண்டின் கிளைபோலப் பன்னரம்பின் மிசைப்படர
வார்தல் வடித்தல் உந்தல் உறழ்தல்
சீருடன் உருட்டல் தெருட்டல் அள்ளல்
ஏருடைப் பட்டடை எனஇசையோர் வகுத்த
எட்டு வகையின் இசைக் கரணத்துப்
பட்ட வகைதன் செவியின் ஓர்த்து
ஏவலன் பின் பணி யாதெனக்
கோவலன் கை யாழ் நீட்ட......''

என்னும் பகுதியில், மாதவி, யாழ் நல்ல நிலையில் உள்ளதா என ஆராய்ந்து (சோதித்துப்) பார்த்துக் கோவலன் கையில் கொடுத்தாள், என்னும் செய்தி கூறப்பட்டுள்ளது. மாதவி முதலில் யாழினைக் கையில் ஏந்தி, பண்ணல், பரிவட்டணை

ஆராய்தல், தைவரல், செலவு, விளையாட்டு, கையூழ், குறும் போக்கு என்னும் எட்டு வகையான ஆய்வுகள் (சோதனைகள்) செய்து பண்எழுப்பிப் பார்த்து, யாழில் பண் வகையில் குற்றம் ஒன்றும் இல்லை எனத் தெளிந்தாள். பின்னர்த் தன் மெல்லிய விரல்களால் யாழ் நரம்பைத் தடவி, வார்தல், வடித்தல், உந் தல், உறழ்தல், உருட்டல், தெருட்டல், அள்ளல், பட்டடை என்னும் எட்டுவகை இசை யொலிச் செயலால் (இசைக் கர ணத்தால்) ஆய்வுசெய்து ஒலியெழுப்பிக் காதால் கேட்டுப் பார்த்து குறைபாடு இன்றி எல்லாம் ஒழுங்காய் இருப்பதைக் கண்டுகொண்டு யாழைக் கோவலன் கையில் தந்தாள்—என் பது மேலுள்ள பகுதியின் கருத்தாகும். ஈண்டு, வார்தல் முதலிய எட்டுவகை இசைக் கரணங்களுக்கு அரும்பதவுரையாசிரி யர் கூறியுள்ள பொருள் விளக்கம் வருமாறு:—

"வார்தல் - சுட்டுவிரற் செய்தொழில், வடித்தல்-சுட்டு விரலும் பெருவிரலுங் கூட்டி நரம்பை அகமும் புறமும் ஆராய் தல், உந்தல்-நரம்புகளை உந்தி வலிவிற் பட்டதும் மெலிவிற் பட்டதும் நிரல் பட்டதும் நிரலிழிபட்டதும் என்றறிதல், உறழ் தல்-ஒன்றிடை யிட்டும் இரண்டிடையிட்டும் ஆராய்தல், உருட் டல் - இடக்கைச் சுட்டுவிரல்தானே யுருட்டலும், வலக்கைச் சுட்டுவிரல் தானே யுருட்டலும், சுட்டொடு பெருவிரற் சுட்டி யுருட்டலும், இருபெரு விரலும் இயைந்துடன் உருட்டலும் என வரும்.

'தெருட்டல் என்பது செப்புங் காலை
உருட்டி வருவ தொன்றே மற்றவ்
ஒன்றன் பாட்டுமடை யொன்ற நோக்கின்
வல்லோர் ஆய்ந்த நூலே யாயினும்
வல்லோர் பயிற்றுங் கட்டுரை யாயினும்
பாட்டொழிந் துலகினில் ஒழிந்த செய்கையும்
வேட்டது கொண்டு விதியுற நாடி'

என வரும்.....இவை இசைத்தமிழ்ப்பதினாறு படலத்துட்கரண வோத்துட் காண்க."

இந்த உரைப்பகுதியின் வாயிலாக, சிலப்பதிகார அரும்பத வுரையாசிரியர் 'பதினாறு படலம்' என்னும் இசைத் தமிழ்

நூல் ஒன்றினை அறிமுகம் செய்துள்ளார். அவர் காலத்துக் கிடைத்திருந்த இந்த நூல் இப்போது இல்லை. சிலப்பதிகாரத் திற்குச் சிறந்த உரையெழுதியுள்ள அடியார்க்கு நல்லாருக்கும் முற்பட்டவர் அரும்பத உரையாசிரியர். இவரது பெயர் அறி யப்படாமையாலும், இவர் விரிவுரை எழுதாமல் அரும்பதங் கட்கு மட்டும் உரை விளக்கம் தந்துள்ளமையாலும், இவரை 'அரும்பத உரையாசிரியர்' என்றே அடியார்க்கு நல்லார் முதற் கொண்டு அனைவரும் குறிப்பிடலாயினர். இவர், சிலப்பதி காரத்தில் சொல்லப்பட்டுள்ள இசைக் கரணங்கள் எட்டனுள் வார்தல், வடித்தல், உந்தல், உறழ்தல், உருட்டல் என்னும் முதல் ஐந்திற்கும் தம் சொந்த வாக்கியங்களால் விளக்கம் தந்து, ஆறாவதாகிய 'தெருட்டல்' என்பதின் விளக்கத்திற்காக, பதினாறு படலத்துக் கரண ஒத்தில் உள்ள நூற்பாவை அப் படியே எடுத்துக் கொடுத்துவிட்டார். ஏழாவதும் எட்டாவது மாகிய அள்ளல், பட்டடை என்னும் இரண்டிற்கும் இவர் தந்துள்ள விளக்கம், ஓலை சிதைந்து போனமையால் கிடைக்க வில்லை போலும். இறுதியில், 'இவை இசைத் தமிழ் பதினாறு படலத்துட் கரண வோத்துட் காண்க' என்று கூறி முடித் துள்ளார்.

அரும்பதவுரையாசிரியரின் அறிவிப்பின்படி, பதினாறு பட லம் என்பது, பதினாறு படலங்களைக் கொண்ட ஓர் இசைத் தமிழ்நூல் என்பதும், ஒவ்வொரு படலத்திலும் சொல்லப்பட் டுள்ள தனித்தனிச் செய்திகள் ஒத்து என்னும் பெயரால் வழங்கப்பட்டன என்பதும், மேற்சொன்ன 'வார்தல்' முதலிய எட்டு இசைக் கரணங்களையும் பற்றிக் கூறும் பிரிவு 'கரண ஒத்து' என வழங்கப்பட்டது எனவும் கொள்ளலாம். அங்ஙன மெனில், ஒவ்வொரு படலத்திலும் 'ஒத்து' என்னும் பெயரில் உட்பிரிவுகள் சில உண்டு எனவும் கொள்ளவேண்டி வரும்.

இங்ஙனம் கொள்ளாமல், - ஒத்து என்பதும் படலம் என் பதும் ஒன்றுதான்; படலம் என்பது பெரும் பிரிவு எனவும் ஒத்து என்பது உட்பிரிவு எனவும் கொள்ள முடியாது; எனவே, 'கரண ஒத்து' என்பது பதினாறு படலங்களுள் ஒரு படலத் தையே குறிக்கும் - எனவும் கூறுவதற்கு இடமுண்டு. 'ஒத்தி னால் பிண்டமாயிற்று பன்னிரு படலம்' (தொல் - பொருள் -

செய்யுளியல்-165-உரை) என இளம்பூரணர் கூறியிருப்பது (இது முன்னரே எடுத்துக் காட்டப் பெற்றுள்ளது) ஈண்டு ஒப்பு நோக்க வேண்டியதாகும். எனவே, இளம்பூரணரின் கருத்துப் படி, பன்னிரு படலம் என்னும் நூலில் உள்ள ஒவ்வொரு பட லத்தையும் 'ஒத்து' என்னும் பெயரால் குறிப்பிட முடிவது போலவே, பதினாறு படலம் என்னும் நூலில் உள்ள ஒவ்வொரு படலத்தையுங்கூட 'ஒத்து' என்னும் பெயரால் குறிப்பிட முடியும் என்பது தெளிவு.

**தொகை நூல்**

பதினாறு படலம் என்னும் நூல் பதினாறு சிறு பிரிவுகள் மட்டும் உடையது என்றோ-அல்லது - பதினாறு பெரும் பிரிவுகளும் அவற்றுள் பல உட்பிரிவுகளும் உடையது என்றோ - எவ்வாறு கூறப்படினும் கவலையில்லை; ஆனால், இந்த நூலில் பல்வேறு வகைப்பட்ட பதினாறு படலங்கள் உள்ளன என்பது வெளிப்படை அங்ஙனமெனில் பலரால் செய்யப் பெற்ற படலங்களின் தொகுப்பாகிய ஒரு பன்னிரு படலம் என்னும் தொகை நூலைப்போலவே, பதினாறு படலம் என்னும் நூலும் பலரால் செய்யப் பெற்ற படலங்களின் தொகுப்பாகிய தொகை நூலாக இருக்கலாம் அன்றோ? பன்னிரு படலம் பன்னிருவரால் செய்யப்பட்டிருப்பது போல, பதினாறு படலம் பதினறுவரால் (பதினாறு பேரால்) செய்யப்பட்டிருக்கலாமே!

பன்னிரு படலம் பன்னிருவரால் செய்யப் பெறாமல் ஒருவரால் செய்யப் பெற்றிருப்பின், பன்னிரு படலம் எனப் பெயர் பெறாமல் புறத்திணைப் படலம் என்றோ அல்லது ஆசிரியர் பெயராலோ வழங்கப் பெற்றிருக்கும். அதேபோல், பதினாறு படலம் என்னும் நூலும் பலரால் இன்றி ஒரே ஆசிரியரால் செய்யப் பெற்றிருப்பின், பதினாறு படலம் எனப் பெயர் வழங்கப் பெறாமல், இசைத்துறைப் பெயராலோ அல்லது ஆசிரியர் பெயராலோ வழங்கப் பெற்றிருக்கும். அங்ஙனம் இன்றிப் பலரால் செய்யப்பட்ட தொகுப்பாய் இருந்தமையால்தான், பலரால் பாடப்பட்ட 'பத்துப்பாட்டு' என்னும் தொகுப்புப் போல, 'பதினாறு படலம்' என வழங்கப்

பட்டது. எனவே, இந்நூல் ஓர் இசைத் தமிழ்த் தொகை நூல் என்பது புலனாகும்.

சிலப்பதிகார அரும்பத வுரையாசிரியர், வெற்றுபடியாகப் பதினாறுபடலத்துள், எனக் கூறாமல்''இசைத்தமிழ்ப் 'பதினாறு படலத்துள்' எனக் கூறியிருப்பதால், இயல்தமிழ்ப் பதினாறு படலம் என ஒன்றோ-அல்லது - நாடகத்தமிழ்ப் பதினாறு படலம் என ஒன்றோ இருக்கலாம் போலும் என்ற ஐயம் எழலாம். ஆனால், இப்படியொன்றும் இருந்திராது. இந்த நூலுக்கு முன்பே 'பன்னிரு படலம்' என்னும் இயல் தமிழ் நூல் இருந்ததாலும், பன்னிரு படலத்தின் பிரிவுகள் கைக் கிளைப் படலம், பெருந்திணைப் படலம் என்றெல்லாம் தனித் தனியே வழங்கப்பட்டு வந்ததாலும், இன்னும் படலம் என்று முடியும் பெயரால் வேறு நூல்களும் இருந்திருக்கலா மாதலா லும், எந்தப் படலம் என்னும் குழப்பத்தினின்றும் வேறு பிரித்துத் தெளிவுறுத்தவே, அரும்பத வுரையாசிரியர் 'இசைத் தமிழ்ப் பதினாறு படலம்' எனக் கூறியிருக்கலாம். செஞ்ஞாயிறு என்பதால் வெள்ளை ஞாயிறு ஒன்று இருப்பதாகவும், வெண்டிங்கள் என்பதால் சிவப்புத் திங்கள் என ஒன்று இருப்ப தாகவும் பொருள் இல்லை; செஞ்ஞாயிற்றை நோக்க வெண்டிங் கள் எனவும் வெண்டிங்களை நோக்கச் செஞ்ஞாயிறு எனவும் வழங்கினர். இது போன்றதே 'இசைத்தமிழ்ப் பதினாறு படலம்' என்பதுமாகும். எது எப்படியிருந்த போதிலும், - இசைத் தமிழ் பற்றிய பலர் இயற்றிய படலங்களின் தொகுப்பு நூல் பதினாறு படலம் என்ற முடிவுக்கு நாம் வரமுடியும்.

சிலப்பதிகார அரும்பத வுரையாசிரியர், இசைக் கரணங்கள் எட்டனுள் தெருட்டல் என்பதற்கு இலக்கணமாகப் பதினாறு படலத்திலிருந்து ஒரு நூற்பா எடுத்துக் காட்டியுள்ளார்; இந்த உரைப்பகுதிக்கு முன்னால், சிலம்பில் கூறப்பட்டுள்ள பண்ணல், பரிவட்டணை, ஆராய்தல், தைவரல், செலவு, விளை யாட்டு, கையூழ், குறும்போக்கு என்னும் எண்வகை ஆய்வு கட்கும் உரிய இலக்கணமாக எட்டு நூற்பாக்கள் 'எடுத்துக் காட்டியுள்ளார். முறையே அவை வருமாறு:—

1. **வலக்கை பெருவிரல் குரல்கொளச் சிறுவிரல்
விலக்கின் றிளிவழி கேட்டும்...**

இணைவழி யாராய்ந் திணைகொள முடிப்பது
விளைப்பரு மரபிற் *பண்ணல்* ஆகும்.'

2. '*பரிவட் டணையின்* இலக்கணந் தானே
மூவகை நடையின் முடிவிற் றாகி
வலக்கை யிருவிரல் வனப்புறத் தழீஇ
இடக்கை விரலி னியைவ தாகத்
தொடையொடு தோன்றியுந் தோன்றா தாகியும்
நடையொடு தோன்றும் நயத்த தாகும்.'

3. '*ஆராய்தல்* என்பது அமைவரக் கிளப்பிற்
குரல்முத லாக விணைவழி கேட்டும்
இணையி லாவழிப் பயனொடு கேட்டும்
தாரமு முழையுந் தம்மிற் கேட்டும்
குரலு மிளியுந் தம்மிற் கேட்டும்
துத்தமும் விளரியுந் துன்னுறக் கேட்டும்
விளரி கைக்கிளை விதியுளக் கேட்டும்
தளரா தாகிய தன்மைத் தாகும்.'

4. '*தைவரல்* என்பது சாற்றுங் காலை
மையறு சிறப்பின் மனமகிழ் வெய்தித்
தொடையொடு பட்டும் படாஅ தாகியும்
நடையொடு தோன்றி யாப்புநடை யின்றி
ஒவச் செய்தியின் வட்டணை யொழுகிச்
சீரேற் றியன்று மியலா தாகியும்
நீர வாகு நிறைய தென்ப.'

5. '*செலவு* எனப்படுவதன் செய்கை தானே
பாலை பண்ணே திறமே கூடமென
நால்வகை யிடத்து நயத்த தாகி
இயக்கமு நடையு மெய்திய வகைத்தாய்ப்
பதினோ ராடலும் பாணியு மியல்பும்
விதிநான்கு தொடர்ந்து விளங்கிச் செல்வதுவே.'

6. '*விளையாட்டு* என்பது விரிக்குங் காலைக்
கிளவிய வகையின் எழுவகை யெழாலும்
அளவிய தகைய தாகு மென்ப.'

7. 'கையூழ் என்பது கருதுங் காலை
எவ்விடத் தானு மின்பமுஞ் சுவையும்
செவ்விதிற் றோன்றிச் சிலைத்துவர லின்றி
நடை நிலை திரியாது நண்ணத் தோன்றி
நாற்பத் தொன்பது வனப்பும் வண்ணமும்
பாற்படத் தோன்றும் பகுதித் தாகும்.'

8. 'துள்ளற் கண்ணுங் குடக்குத் துள்ளும்
தள்ளா தாகிய வுடனிலைப் புணர்ச்சி
கொள்வன வெல்லாங் குறும்போக்கு ஆகும்.

இந்த எட்டு நூற்பாக்களையும் நூற்பெயர் குறிப்பிடாமல் அரும்பத வுரையாசிரியர் எடுத்துக் காட்டியுள்ளார்; எட்டாவது நூற்பாவின் இறுதியில், "இவையெல்லாம் ஈண்டு விரித்துரைப்பிற் பெருகும்"-என்று எழுதியுள்ளார்; இதற்குப் பின்னால், வார்தல் வடித்தல் முதலிய எண்வகை இசைக் கரணங்கட்கு விளக்கம் சொல்லத் தொடங்கி, 'தெருட்டல்' என்பதை விளக்குகிற பதினாறு படலத்து நூற்பாவினை எடுத்துக்காட்டி, "இவை இசைத்தமிழ்ப் பதினாறு படலத்துட் கரணவோத்துட் காண்க"-என்று கூறி முடித்துள்ளார். இந்த முன்-பின் சூழ்நிலையை வைத்துக் கணித்துப் பார்க்குங்கால், நூற்பெயர் குறிப்பிடாமல் அரும்பத வுரையாசிரியரால் எடுத்துக் காட்டப்பெற்றுள்ள-மேலுள்ள எட்டு நூற்பாக்களும் பதினாறு படலத்துள் ஒரு படலத்தை, அல்லது ஒரு படல ஒத்தைச் சேர்ந்தவையாகவே இருக்கும் எனக் கருதலாம். இசைத் தமிழ் இலக்கணத்தை இவ்வளவு விளக்கமாகச் சொல்லும் பதினாறு படலம் நமக்குக் கிடைக்காமற் போனது தீப் பேறே.

இவ்வாறாக, பன்னிரு படலமும் பதினாறு படலமும் போல, இன்னும் எந்தெந்தத் துறைகளையோ சேர்ந்த எத்தனையோ தொகைநூல்கள் இடைச்சங்க காலத்திலும், அதனையொட்டிய காலத்திலும் இருந்திருக்கக் கூடும்.

---

# 3. கடைச் சங்க காலம்

இப்பொழுது சங்க இலக்கியங்கள் என்னும் பெயரில், மேற்கணக்கு எனப்படும் பதினெட்டு நூல்களும், கீழ்க்கணக்கு எனப்படும் பதினெட்டு நூல்களும், முத்தொள்ளாயிரம் முதலிய சில நூல்களும் வழங்கப்பட்டு வருகின்றன. இவை, பொதுவாகச் சங்க இலக்கியங்கள் எனப்பட்டினும், கடைச்சங்க கால இலக்கியங்களே. கடைச்சங்க இலக்கியங்களுள் தொகை நூல்களாக உள்ளனவற்றைப் பற்றி ஆராய்வோம்.

11. பதினெண் மேற்கணக்கு

பதினெண் மேற்கணக்கு என்னும் பெயர், பதினெட்டு நூல்களைக் குறிக்கும் ஒரு தொகைப் பெயராகும். இந்தப் பெயருக்குள் பதினெட்டு நூல்கள் அடங்கியுள்ளன. 'கணக்கு' என்றால், 'நூல்' என்று பொருளாம். அடியளவால் மேலான (பெரிய) பாடல்களையுடைய பதினெட்டு நூல்கள் பதினெண் மேற்கணக்கு எனப்பட்டன. அடியளவால் கீழான (சிறிய) பாடல்களையுடைய பதினெட்டுக் கீழ்க் கணக்கினின்றும் வேறு பிரித்துக் காட்டுவதற்காக, இவை பதினெண் மேற்கணக்கு எனப்பட்டன. பத்துப் பாட்டு எனப்படும் பத்து நூல்களும், எட்டுத் தொகை எனப்படும் எட்டு நூல்களும் ஆகிய பதினெட்டு நூல்களும், பதினெண் மேற் கணக்குஎனப்படும். 'இலக்கியம் கண்டதற்கு இலக்கணம் இயம்பல் என்ற முறையில், பன்னிரு பாட்டியல் என்னும் செய்யுள் இலக்கண நூலில், மேற்கணக்கு கீழ்கணக்கு என்பவற்றிற்கு விளக்கம் கூறப்பட்டுள்ளது. இதனைப் பன்னிரு பாட்டியல் - இனவியலில் உள்ள,

'மேல்கீழ்க் கணக்கென இருவகைக் கணக்கே.'
'மேற்கணக் கெனவும் கீழ்க்கணக் கெனவும்
பாற்படு வகையால் பகர்ந்தனர் கொளலே.'
'அகவலும் கலிப்பாவும்பரி பாடலும்
பதிற்றைந் தாதி பதிற்றைம்ப தீறா
மிகுத்துடன் தொகுப்பன மேற்கணக் கெனவும்

வெள்ளைத் தொகையும் அவ்வகை எண்பெறின்
எள்ளறு கீழ்க்கணக் கெனவும் கொளலே.'
'ஐம்பது முதலா ஐந்நூ றீறா
ஐவகைப் பாவும் பொருள்நெறி மரபின்
தொகுக்கப் படுவது மேற்கணக் காகும்.'
'அடிநிமிர் பில்லாச் செய்யுள் தொகுதி
அறம் பொருள் இன்பம் அடுக்கி அவ்வகைத்
திறம்பட வுரைப்பது கீழ்க்கணக் காகும்.'

என்னும் நூற்பாக்களால் அறியலாம். இந்த நூற்பாக்களின் பொருள், பின்னால் ஒவ்வொரு நூலையும் பற்றித் தனித் தனியே ஆராயும்போது) தானே விளங்கும்.

## 12. பத்துப் பாட்டு

பதினெண் மேற்கணக்கில் 'பத்துப் பாட்டு' என்னும் தொகுப்பில் உள்ள பத்து நூல்களும் அடங்கும். இந்தப் பத்து நூல்களும் தொகை நூல்கள் இல்லையாயினும், இந்தப் பத்தை யும் சேர்த்துப் பத்துப்பாட்டு எனப்படுவது ஒரு தொகைப் பெய ராகும். அதாவது,-இந்தப் பத்துநூல்களும் சேர்ந்த தொகுப்பு, பன்னிரு படலம்போல ஒரு தொகைநூலாக மதிக்கப்பெறும். இந்தத் தொகுப்பில் உள்ள ஒவ்வொரு பாட்டும் ஒரு நூலின் பெருமானம் உடையது. இந்தப் பத்தினையும் 'பத்துப்பாட்டு' என எண்ணிக்கையிட்டுக் கூறுவதல்லாமல், 'பாட்டு' எனப் பொதுவாக-வெற்றுபடியாகக் கூறுவதும் உண்டு. 'இதனைத் தொல்காப்பியம்-செய்யுளியல்-பேராசிரியர் உரையில் உள்ள,

"இவ் வாற்றான்...... ஆசிரியவடி முந்நூற்றிருபத்து நான் கும் பாட்டினும் தொகையினும் வருமாறு கண்டு கொள்க. (50)"

"...அவை ஆசிரியர் நூல் செய்த காலத்துளவாயினும், கடைச் சங்கத்தார் காலத்து வீழ்ந்தமையின், பாட்டினும் தொகையினும் அவற்றை நாட்டிக் கொண்டு செய்யுள் செய்திலர்; அவற்றுக்கு இது மரபிலக்கண மாகலி னென்பது இனி, பாட்டினும் தொகையினும் உள்ள சொல்லே மீட்டொரு காலத்துக்கு உரித்தன்றிப் போயின்......(80)"

மேலே பேராசிரியர் உரையில் பாட்டு எனப்படுவது பத்துப்

பாட்டு ஆகும். மற்றும், நச்சினார்க்கினியர் செய்யுளியலில் (175) எழுதியுள்ள,

"தலைவியை வற்புறுத்தும் செவிலியர் புனைந்துரைத்து நகுவித்துப் பொழுது போக்குதற்குரியர் என்றவாறு. இக்கருத் தானே சான்றோர்.

'செம்முகச் செவிலியர் கைம்மிகக் குழீஇக்
குறியவு நெடியவு முரைபல பயிற்றி
இன்னே வருகுவர் இன்றுணை யோரென
முகத்தவை மொழியவு மொல்லாள்'

என்றார் பாட்டினுள். பிற சான்றோரும் 'செம்முகச் செவிலியர் பொய்ந் நொடி பகர' என்றார்."

என்னும் உரைப்பகுதியில் உள்ள 'பாட்டினுள்' என்பது பத்துப் பாட்டைக் குறிக்கிறது. நச்சினார்க்கினியர் 'பாட்டு' என்னும் பெயரில் எடுத்துக் காட்டியுள்ள நான்கு அடிகளும் பத்துப்பாட்டுள் ஒன்றாகிய நெடுநல்வாடையில் (153—156) உள்ளனவாகும். இவ்வாறாகச் சான்றோர் ஆட்சியில்,பத்து நூல் களின் தொகைப் பெயராகத் - திரட்டுப் பெயராகப் 'பாட்டு' என்பது பயன்படுத்தப் பட்டுள்ளது. 'இலக்கியம் கண்டதற்கு இலக்கணம் இயம்பல்' என்ற முறையில், பன்னிரு பாட்டியல் என்னும் நூலில் பத்துப் பாட்டுக்குப் பின்வருமாறு இலக்கணம் கூறப்பட்டுள்ளது:-

'நூறடிச் சிறுமை நூறுபத் தளவே
ஏறிய அடியின் ஈரைம் பாட்டுத்
தொடுப்பது பத்துப் பாட்டெனப் படுமே''.
'அதுவே,
அகவலின் வருமென அறைகுநர் புலவர்'

பத்துப் பாட்டின் பாடல்கள் நூறு அடிக்குக் குறையா மலும், ஆயிரம் அடிக்கு மிகாமலும், பெரும்பாலும் ஆசிரியப் பாவால் வரும் - என்பது கருத்து. இந்தப் பத்துப் பாட்டுக்களும் இன்னின்னவை என்பதை,

'முருகு பொருநாறு பாணிரண்டு முல்லை
பெருகு வளமதுரைக் காஞ்சி—மருவினிய

கோலநெடு நல்வாடை கோல்குறிஞ்சி பட்டினப்
பாலை கடாத்தொடும் பத்து.'

என்னும் பழைய வெண்பாவால் அறியலாம். இனி, ஒவ்வொன் றையும் பற்றித் தனித்தனியே காண்போம்:-

1. திருமுருகாற்றுப்படை:

317 அடிகள் கொண்ட, ஆசிரியப்பாவால் ஆன இந்தப் பாடலின் ஆசிரியர் நக்கீரர். முருகனை வழிபட்டு அருள் பெற்ற ஓர் அன்பன், எதிர்வந்த மற்றோர் அன்பனை நோக்கி முருகனை இன்னின்ன இடத்திலெல்லாம் சென்று, இன்னின்ன முறைப்படி வழிபடின் அருள் பெறலாம் என அவனை ஆற்றுப் படுத்துவதாக (வழிப்படுத்தியனுப்புவதாக) உள்ளது இந்நூல். இதில் முருகனது சிறப்பும், ஆறுபடை வீடுகளும், முருகன் தொடர்பான பல செய்திகளும் விளக்கப்பட்டுள்ளன.

2. பொருநர் ஆற்றுப்படை:

248 அடிகளையுடைய இடையிடையே வஞ்சியடி கலந்த ஆசிரியப்பாவால் ஆகிய இந்நூலின் ஆசிரியர் முடத்தாமக் கண்ணியார் ஆவார். பரிசு பெற்ற பொருநன் ஒருவன் மற்றொரு பொருநனைச் சோழன் கரிகாற் பெருவளத்தானிடம் ஆற்றுப்படுத்தி யனுப்புவதாக அமைந்துள்ளது இந் நூல். இதில், கரிகாற்பெருவளத்தான் சிறப்பும், இசை மாண்பும் பிறவும் இயம்பப்பட்டுள்ளன. (பொருநர்=ஆடிப்பாடுபவர்)

3. சிறுபாண் ஆற்றுப்படை:

இடைக்கழி நாட்டு நல்லூர் நத்தத்தனார் பாடிய இந்நூல், 269 அடிகள் கொண்ட ஆசிரியப்பாவால் ஆகியது. பரிசில் பெற்ற சிறு பாணன் ஒருவன் பெறாத சிறு பாணன் ஒருவனை ஓய்மாட்டு நல்லியக் கோடனிடம் ஆற்றுப்படுத்தி அனுப்பிய தாக உள்ளது இந்நூல்.

4. பெரும்பா ணாற்றுப்படை:

500 அடிகள் கொண்ட ஆசிரியப் பாவாலான இதனைக் கடியலூர் உருத்திரங் கண்ணனார் பாடினார். பரிசு பெற்ற

பெரும்பாணன் ஒருவன், பெறாதான் ஒருவனைக் காஞ்சித் தொண்டைமான் இளந்திரையனிடத்து ஆற்றுப்படுத்துவது இந் நூல்.

5. முல்லைப்பாட்டு:

103 அடிகள் கொண்ட ஆசிரியப்பாவால் அமைந்தது. இதன் ஆசிரியர், காவிரிப்பூம்பட்டினத்துப் பொன் வாணிகனார் மகனார் நப்பூதனார் ஆவார். இப் பாடல் அகப்பொருள் பற்றியது. தலைவன் பிரிந்திருக்கத் தலைவி ஆற்றியிருந்த அருமையினையும், போர்முடித்துத் தலைவன் மீண்ட பெருமை யினையும்பற்றிப் பேசுவது இந்நூல். (முல்லை=ஆற்றியிருத்தல்.)

6. மதுரை காஞ்சி:

வஞ்சியடிகள் கலந்த - 782 அடிகள் கொண்ட ஆசிரியப் பாவால் அமைந்த இந்நூலின் ஆசிரியர் மாங்குடி மருதனார். தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழி யனுக்கு, உலக நிலையாமையை உணர்த்தி, வீடுபேறு எய்துதற்கு உரிய நல்வழிகளைச் செவியறிவுறுத்துவதாக அமைந்துள்ளது இந்நூல். பாண்டியன் நெடுஞ்செழியனது பெருமையும், மதுரையின் மாண்புறு வளமும் இந்நூலில் விரிவாகக் கூறப்பெற்றுள்ளன. (காஞ்சி=நிலையாமை.)

7. நெடுநல் வாடை:

நக்கீரனாரால் இயற்றப்பெற்ற அகப்பெருள் கலந்த இந் நூல், 188 அடிகள் கொண்ட ஆசிரியப் பாவால் அமைந்தது. பகைவரை வெல்லச் சென்ற பாண்டியன் நெடுஞ்செழியனைப் பிரிந்து, நீண்ட வாடைக் காலத்தில் வருந்திக் கொண்டிருக்கும் தலைவிக்கு ஆறுதல் செய்வது பற்றியது இந்நூல். இதில், வாடைக் குளிரின் வன்மையும், தலைவி தங்கியிருக்கும் இடத் தின் இயல்பும், அரசனது போர்க்களச் செய்தியும் சுவைபெறப் புனைவு செய்யப்பட்டுள்ளன.

8. குறிஞ்சிப் பாட்டு:

ஆரிய வேந்தன் பிரகத்தன் என்பான் தமிழ் இன்பத்தைச் சுவைத்தறிவதற்காகக் கபிலரால் இயற்றப்பட்ட இந்தப்

பாடல், 261 அடிகள் கொண்ட ஆசிரியப் பாவால் ஆன அகப் பொருள் நூலாகும். தலைவன் தலைவியரது களவுப் புணர்ச்சியும், அது தொடர்பான அகப்பொருள் செய்திகளும் இப் பாடலில் நயம்பட நவிலப்பட்டுள்ளன. (குறிஞ்சி=புணர்தல்).

குறிஞ்சிப் பாட்டு என்னும் இந்நாலுக்குப் 'பெருங் குறிஞ்சி' என்ற பெயரும் உண்டு என்னும் செய்தியை, "கபிலர் பாடிய பெருங்குறிஞ்சியில் வரைவின்றிப் பூ மயங்கிய வாறு காண்க." (தொல் - பொருள் - அகம் - 19) என்னும் நச்சினார்க்கினியர் உரைப்பகுதியாலும், 'எருவை நறுந்தோடு' என்னும் பரிபாடல் (19:77) தொடருக்குப் பரிமேலழகர் எழுதியுள்ள, "எருவையது நறுந்தோட்டையுடைய பூ; எருவை என்பது, எருவை செருவிளை மணிப்பூங் கருவிளை' (குறிஞ்சிப்பாட்டு - வரி 68) எனக் கபிலர் பாடிய பெருங்குறிஞ்சியிலும் வந்தது" என்னும் உரைப்பகுதியாலும் நன்கறியலாம்.

9. பட்டினப்பாலை:

பெரும்பாலும் வஞ்சியடிகளால் ஆகி ஆசிரிய அடிகளால் முடிவுறுவதும், 301 அடிகள் கொண்டதுமாகிய இந்தப் பாடல் ஓர் அகப்பொருள் நூலாகும். தலைவியைப் பிரிந்து செல்லவேண்டிய தலைவன், தலைவியைப் பிரியவியலாது எனக் கற்பனையாகத் தன் நெஞ்சிற்குக் கூறுவதாக, சோழன் கரிகாற் பெருவளத்தானைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டு, கடியலூர் உருத்திரங் கண்ணனார் பாடியது இந்நால். (பட்டினம்=காவிரிப்பூம்பட்டினம்; பாலை=பிரிதல்) காவிரிப்பூம்பட்டினத்தானது பிரிவைப் பற்றிய அகப்பொருள் நூலாதலின் இப்பெயர் பெற்றது இது. இந்நூலில் சோழ நாடு - காவிரிப்பூம்பட்டினம் ஆகியவற்றின் சிறப்பும், வளமும், சோழனது மாண்பும், இவை தொடர்பான பல செய்திகளும் விதந்து குறிப்பிடப்பட்டுள்ளன, இந்நூலை இயற்றியதற்காக உருத்திரங்கண்ணனார் நூறாயிரக்கணக்கான பொன் பரிசு பெற்றதாகப் பல நூல்களில் கூறப்பட்டுள்ளது.

பட்டினப் பாலை என்னும் பெயருடைய இந்தப் பாட்டு, பெரும்பாலும் வஞ்சியடிகளால் ஆகியிருத்தலின் 'வஞ்சி நெடும் பாட்டு' என யாப்பருங்கல விருத்தி, இலக்கண விளக்க

உரை, தமிழ் விடுதூது முதலிய நூல்களால் வழங்கப்படுகிறது.

10. மலைபடு கடாம்: கூத்தர் ஆற்றுப்படை என்னும் வேறு பெயர் உடையதும், 583 அடிகள் கொண்ட ஆசிரியப் பாவால் அமைந்ததுமாகிய இந்நூலின் ஆசிரியர், இரணிய முட்டத்துப் பெருங்குன்றூர்க் கிழார் பெருங்கௌசிகனார் என்பவர். பரிசு பெற்ற கூத்தன் ஒருவன் பெறாத கூத்தன் ஒருவனை, செங்கண்மாத்து வேள் நன்னன்செய் நன்னனிடம் ஆற்றுப்படுத்தியதாக அமைந்திருப்பது இப் பாட்டு. இதில், நன்னன் தொடர்பான செய்திகளும் பிறவும் விவரிக்கப் பட்டுள்ளன.

'மலைபடு கடாம்' என்பதற்கு, மலைபோன்ற யானையின் பிளிறல் முழக்கம் என்பது கருத்து. இந்தத் தொடர் இந்நூலில் 'மலைபடு கடாஅம் மாதிரத்தியம் (348 ஆம் அடி) என இடையே ஓரிடத்தில் வந்துள்ளது. இஃது எடுப்பான தொடரா யிருப்பதால், இதையே நூலுக்குப் பெயராக வைத்துவிட்டனர். இவ்வாறு பெயர் வைப்பது அக்காலத்திய மரபு.

இந்த நூல் கூத்தரைப் பற்றியதாதலின் இது 'கூத்தர் ஆற்றுப்படை' எனவும் பெயர் வழங்கப்பெறும். இதனைத்

'ஆசிரியப் பாட்டின் அளவிற்கு எல்லை
ஆயிர மாகும் இழிபுமூன் றடியே.'

என்னும் தொல்காப்பியச் செய்யுளியல் (157 - ஆம்) நூற்பாவின்கீழ் நச்சினார்க்கினியர் எழுதியுள்ள,

"நீலமேனி வாலிழை பாகத், தொருவ னிருதாள் நிழற்கீழ், மூவகை யுலகு முகிழ்த்தன முறையே' - இது சுருக்கத்திற்கு எல்லை; கூத்தராற்றுப்படை தலையளவிற்கு எல்லை; மதுரைக் காஞ்சியும் பட்டினப் பாலையும் ஒழிந்த பாட்டேழும் ......இடையளவிற்கு எல்லை..."

என்னும் உரைப்பகுதி தெற்றெனப் புலப்படுத்துகின்றது. நச்சினார்க்கினியர் உரையில் தரப்பட்டுள்ள, 'நீல மேனி'

எனத் தொடங்கும் பாடல் ஐங்குறு நூறு - வாழ்த்துப்பாடல் ஆகும்; அடுத்து, 'கூத்தராற்றுப்படை' எனப்பட்டிருப்பது, பத்துப்பாட்டுள் ஒன்றாகிய 'மலைபடு கடாம்' ஆகும். 'மலைபடு கடாம் அல்லாத வேறு கூத்தராற்றுப்படை இது'- எனக்கூறலாகதோ எனில், நச்சினார்க்கினியர், கூத்தராற்றுப் படையைத் தொடர்ந்து, பத்துப்பாட்டைச் சேர்ந்த மதுரைக் காஞ்சியையும் பட்டினப் பாலையையும் சேர்த்துக்கொண்டு, இவை (மூன்றும்) ஒழிந்த 'பாட்டுஏழும்' எனப் பத்துப்பாட்டில் உள்ள மற்ற ஏழு பாட்டுகளைக் குறிப்பிட்டுள்ளா ராதலின், இந்தக் கூத்தராற்றுப் படை என்பது மலைபடுகடாமேயாகும்.

இதுகாறும், பத்துப்பாட்டு என்னும் தொகுப்பில் உள்ள பத்துப் பாட்டுக்களைப் பற்றிய விவரம் சுருக்கமாகத் தரப் பட்டது. ஒவ்வொரு பாட்டும் ஒரு தொகை நூல் இல்லையெனினும், பத்துப் பாட்டுக்களும் சேர்ந்த திரட்டு உருவம் ஒரு தொகையாக மதிக்கப்படுகிறது. பத்துவகை மலர்களின் தொகுப்பாகிய ஒரு மாலை போன்றது இஃது என்னும் கருத்தை, நச்சினார்க்கினியர் உரைச் சிறப்புப் பாயிரச் செய்யுளில் உள்ள,

"ஆன்றோர் புகழ்ந்த அறிவினில் தெரிந்து
சான்றோர் உரைத்த தண்டமிழ்த் தெரியல்
ஒருபது பாட்டும் உணர்பவர்க் கெல்லாம்..."

என்னும் பகுதியால் அறியலாம். பத்துப் பாட்டை ஒரு 'தமிழ்த் தெரியல்' என்று சொல்லுகிறது இந்தச் செய்யுள். தமிழ்த் தெரியல் என்றால் தமிழ் மாலை என்று பொருளாம். பலர் எழுதிய தொகுப்பாதலின் இதனைப் 'பன்மலர் மாலைத் திரள்'எனலாம்.

தொகுத்தவரும் காலமும்:

கடைச் சங்கப் புலவர்களால் இயற்றப்பட்ட இந்தப் பத்துப் பாடல்களையும், 'பத்துப்பாட்டு' என்னும் பெயரில் தொகுத்தவர் யார்? தொகுத்த காலம் எது? இந்த வினாக்கட்கு நச்சினார்க்கினியர் விடை பகர்ந்துள்ளார். தொகுத்துள்ளவர்கள் சங்கப் புலவர்களே; எனவே, தொகுக்கப்பட்ட காலம் கடைச்சங்க காலம் என்பதும் தெளிவு. இதனை,

மலைபடு கடாத்தில் உள்ள 'தீயின் அன்ன ஒண்செங் காந்தள்' என்னும் (145 - ஆம்) அடியின்கீழ் நச்சினார்க்கினியர் எழுதியுள்ள,

"...செய்யுள் (மலைபடு கடாம்) செய்த கௌசிகனார் ஆனந்தக் குற்றம் என்னும் குற்றம் அறியாமல் செய்யுள் செய்தாரேல்' இவர் நல்லிசைப் புலவர் ஆகார்; இவர் செய்த செய்யுளை (மலைபடுகடாத்தை) நல்லிசைப் புலவர் செய்த ஏனைச் செய்யுட்களுடன் சங்கத்தார் கோவாமல் (தொகுக்காமல்) நீக்குவர்; அங்ஙனம் நீக்காது கோத்தற்குக் (தொகுத்ததற்குக்) காரணம், ஆனந்தக் குற்றம் என்பதொரு குற்றம் இச் செய்யுட்கு உறாமையான் என்றுணர்க."

என்னும் உரைப்பகுதியால் நன்கு தெளியலாம். பத்துப் பாட்டு என்னும் தொகை நூலை, கடைச் சங்க காலத்தில் சங்கப் புலவர்கள் தொகுத்தனர் என்னும் உண்மை நச்சினார்க்கினியர் உரையால் அறியப்படும். சங்கத் தொகை நூல்கள் கடைச் சங்க காலத்திற்குப் பின், கி.பி. மூன்று அல்லது நான்காம் நூற்றாண்டில் தொகுக்கப்பட்டன என்று சிலர் கூறும் கருத்துப் பொருந்தாது என்பதும், நச்சினார்க்கினியரின் உரைப் பகுதியால் தெரியவரும். கடைச் சங்க காலம் எது என்பது முன்னரே ஓரிடத்தில் கூறப்பட்டுள்ளது.

ஆங்கிலத் தொகை நூல்களுள் 'An Anthology of Longer Poems' என்னும் நூலும் ஒன்று என முன்னரே ஓரிடத்தில் சொல்லப்பட்டுள்ளது. 'நீளமான பாடல்களின் தொகுப்பு' என்பது இத்தொகை நூலின் பெயர். இதில் இருபத்திரண்டு நீளமான பாடல்கள் உள்ளன; இவற்றுள் 'மாத்யூ ஆர்னால்டு' (Mathew Arnold) என்பவர் இயற்றிய 'Sohrap And Rustum' என்னும் பாடல் 892 அடிகள் கொண்டதாகும். இவ்வாறு நீளமான பாடல்கள் கொண்டுள்ள இந்த ஆங்கிலத் தொகுப்புப் போன்றதாக நமது பத்துப்பாட்டைக் கூறலாம் அல்லவா? பழத்தமிழ் நூற் பாட்டுக்களுள் மிகவும் நீளமானவை இவையே யன்றோ?

ஆற்றுப் படுத்தும் அரிய பண்பு:

இந்தப் பத்துப் பாட்டைத் தொகுத்தது எதற்காக? இதனால் மக்கள் இனத்திற்கு யாது பயன்? ஒரு பயனும் இன்றேல், இதனைத் தொகுத்துப் போற்றிக் காத்தது பொருளற்ற செயலாய்ப் போய்விடுமே! ஆம், இதற்கு விடை இதோ, வருகிறது:-

ஒருவர், தாம் பெற்ற இன்பத்தைப் பிறரும் பெறும்படி ஆற்றுப்படுத்தும் (வழிவகை செய்யும்) அரிய பெரிய பண் பாட்டிற்கு 'ஆற்றுப்படை' என்னும் அழகிய பெயர் தமிழ் நூல்களில் வழங்கப்பட்டிருப்பதை மேலே கண்டோம்.

'தம்மினும் மேலாக, அல்ல - தமக்கு நிகராகவும் பிறர் வந்துவிடக்கூடாது' என்று எண்ணும் மக்கள் இந்த இருபதாம் நூற்றாண்டிலும் இருக்கும்போது, - தாம் பெற்ற நன்மையைப் பிறர் அறியக்கூடாது - பிறர் பெறக்கூடாது என்று மறைக்கும் மக்கள் பலர் இந்த இருபதாம் நூற்றாண்டிலும் இருக்கும்போது, - தாம் தீமையடைந்துவிடின் அந்தத் தீமையைப் பிறரும் பெறவேண்டும் - பெறச் செய்ய வேண்டும் எனச் சூழ்ந்து அதற்கென முயலும் கீழ் மக்கள் மிகப் பலர் இந்த இருபதாம் நூற்றாண்டிலும் இருக்கும் போது,- இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்பே 'ஆற்றுப்படை' செய்யும் அரிய பண்பாடு தமிழ் மக்களிடையே இருந்ததெனில், அதனை எந்தச் சொற்களால் பாராட்டுவது!

பத்துப் பாட்டுள் பாதி - அதாவது-ஐந்து நூல்கள் ஆற்றுப் படைகளாக இருப்பதை நாம் அறிந்துள்ளோம். ஆற்றுப் படுத் தும் அரிய பண்பாட்டை அடித்தளமாகக்கொண்டு, இரண்டா யிரம் ஆண்டுகட்கு முன்பே தமிழில் முழு நூல்கள் பல தோன்றி யிருப்பதைக் கொண்டு தமிழ்ப் பண்பாட்டின் உயர் எல்லையை உணரலாம். இலக்கியம் எனப்படுவது, தான் தோன்றிய இடத்தில் - தான் தோன்றிய காலத்தில் வாழ்ந்த மக்களின் மனப் பண்பை எடுத்துக் காட்டும் ஒருவகைக் கண்ணாடி யாகும், இதற்குச் சான்றாக, ஆற்றுப் படைகளைக் கொண்ட பத்துப்

பாட்டே போதும். எனவே, பத்துப்பட்டின் காலத்தைத் தமிழ் இலக்கியத்தின் பொற்காலம் எனலாம்.

இந்த ஆற்றுப்படைப் பண்பு, இலக்கண நூலாகிய தொல் காப்பியத்திலேயே பேசப்பட்டுள்ளது. இதனைத் தொல்காப் பியம் - பொருளாதிகாரம் - புறத்திணையியலில் உள்ள,

'கூத்தரும் பாணரும் பொருநரும் விறலியும்
ஆற்றிடைக் காட்சி உறழத் தோன்றிப்
பெற்ற பெருவளம் பெறாஅர்க்கு அறவுறீஇச்
சென்று பயனெதிரச் சொன்ன பக்கமும்'

என்னும் (36 - ஆம்) நூற்பாப் பகுதியால் அறியலாம் இந்தப் பழம்பெரும் பண்பாட்டிற்கு ஏற்ப இயற்றப்பட்ட ஆற்றுப் படை நூல்கள் அழிந்தொழிந்து போகாமல், என்றென்றும் நின்று நிலைத்து, இந்தப் பண்பாட்டை மக்கள் இனத்திற்குப் பறைசாற்றி அறிவித்துக் கொண்டிருக்கும் வகையில், பத்துப் பாட்டு தொகுக்கப்பெற்றுப் பயனளித்துக் கொண்டிருப்பது பாராட்டத் தக்கதாகும்.

---

# 13. எட்டுத் தொகை

பதினெண் மேற்கணக்கில், பத்துப்பாட்டே யன்றி. 'எட்டுத் தொகை' என்னும் தொகைப் பெயரால் சுட்டப்படும் எட்டு நூல்களும் அடங்கும். இவற்றுள், ஒவ்வொரு நூலும் ஒரு தொகை நூலாகும்: அஃதாவது, பலரால் பாடப்பட்ட பல பாடல்களின் தொகுப்பு நூலாகும். இதனாலேயே இவ்வெட்டு நூல்களும் 'எட்டுத் தொகை' என வழங்கப்படுகின்றன. இன்னும் இவை. 'எண்கோவை' எனவும், 'எண் பெருந் தொகை' எனவும் வழங்கப்படுவதும் உண்டு. 'எப்பொருள் எச்சொலின், என்னும் நன்னூல் (387 – ஆம்) நூற் பாவின் உரையில், "ஐம்பெருங் காப்பியம், எண் பெருந்தொகை, பத்துப் பாட்டு, பதினெண் கீழ்க் கணக்கு என்னும் இவ் விலக்கியங்களுள்ளும் விரிந்த உரிச்சொல் பனுவல்களுள்ளும் உரைத் தவாறு அறிந்து வழங்குக;-என, மயிலை நாதர் எட்டுத் தொகையை 'எண்பெருந்தொகை' என வழங்கியிருப்பது காண்க. இந்தத் தொகை நூல்களை இளம்பூரணர் 'செய்யுட் கோவை' என்னும் சிறப்புப் பெயரால் குறிப்பிட்டுள்ளார். இதனை, தொல்காப்பியம் அகத்திணையியலில் 'மாயோன் மேய காடுறை யுலகமும்' என்று தொடங்கும்' (5ஆம்) நூற் பாவின் கீழ் அவர் வரைந்துள்ள,

"...இன்னும், 'சொல்லிய முறையாற் சொல்லவும் படும்' என்றதனான், இம் முறையன்றிச் சொல்லவும் படும் என்று கொள்க. அஃதாவது, அவற்றுள் யாதானும் ஒன்றை முன்னும் பின்னுமாக வைத்துக் கூறுதல். அது சான்றோர் செய்யுட் கோவையினும் பிற நூலகத்துங் கண்டு கொள்க"—

என்னும் உரைப்பகுதியால் அறியலாம். எட்டுத்தொகையைப் பற்றி ஆராயுமுன், எட்டு நூல்களும் இன்னின்னவை என்பதை அறிய வேண்டுமல்லவா? இவற்றை.

"நற்றிணை நல்ல குறுந்தொகை ஐங்குறுநூறு
ஒத்த பதிற்றுப் பத்து ஓங்கு பரிபாடல்

கற்றறிந்தோர் ஏத்தும் கலியோடு அகம்புறம் என்று
இத்திறத்து எட்டுத் தொகை.''

என்னும் பழைய பாடலால் அறியலாம். நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, பதிற்றுப் பத்து, பரிபாடல், கலித்தொகை. அகநானூறு, புறநானூறு என்பன எட்டுத்தொகை நூல்கள் என்பது இதன் பொருள்.

**தொகை**

பத்துப் பாட்டு நூல்களைப் 'பாட்டு' என்னும் பெயரால் பொதுவாக - சுருக்கமாக வழங்குதல் போலவே, எட்டுத் தொகை நூல்களையும் 'தொகை' என்னும் பெயரால் பொதுவாக-சுருக்கமாக வழங்குவது உண்டு. இதனை, பேராசிரியர் உரையிலிருந்து முன்பு ஓரிடத்தில் காட்டியுள்ள,

> "...பாட்டினும் தொகையினும் வருமாறு கண்டுகொள்க (செய்யுளியல்-50)", "பாட்டினும் தொகையினும் அவற்றை நாட்டிக் கொண்டு...பாட்டினும் தொகையினும் உள்ள சொல்லே ...(செய்யுளியல் - 80)"

என்னும் பகுதிகளால் அறியலாம். இன்னும் இதனை, செய்யுளியலில், 'பரிபாடல்லே' என்று தொடங்கும் (162-ஆம்) நூற்பாவிற்கு நச்சினார்க்கினியர் எழுதியுள்ள,

> "இது முறையே பரிபாடற்கு எல்லை கூறுகின்றது. பரிபாடற்கு உறுப்பாகிய வெண்பாவும் பொதுப்பாவும் நானூறடிப் பெருக்கத்திற்கு எல்லையாகவும் இருபத்தைத் தடிச் சுருக்கத்திற்கு எல்லையாகவும் பெறும். என்றவாறு அவை தொகையுட் காண்க"

என்னும் உரைப்பகுதியால் தெளிவாக அறியலாம். பரிபாடலுக்கு இலக்கணம் கூறும் இந்நூற்பாவின் உரையில் நச்சினார்க்கினியர் 'தொகை' என்று குறிப்பிட்டிருப்பது எட்டுந் தொகையாகும். இந்த எட்டுத் தொகைநூல்களுள் பரிபாடலும் ஒன்றல்லவா? மற்றும், அகத்திணையியலில் உள்ள 'மாயோன் மேய காடுறை யுலகமும்' என்று தெடங்கும் (5ஆம்) நூற். பாவின் கீழ்,

"உம்மை எதிர்மறை யாகலின், இம் முறையன்றிச் சொல்லவும் படும் என்பது பொருளாயிற்று. அது தொகை களினும் கீழ்க் கணக்குக்களிலும் இம் முறை மயங்கிவரக் கோத்தவாறு காண்க",—

எனவும், புறத்திணையியலில் 'அமரர் கண் முடியும் அறு வகையாலும்' என்று தொடங்கும்(26-ஆம்) நூற்பாவின் கீழே 'எரியெள்ளுவன்ன நிறத்தன்' என்னும் (பதிற்றுப்பத்து) பாடலைக் கடவுள் வாழ்த்துக்கு எடுத்துக்காட்டாகத் தந்து, அதன் கீழே,

"இது கடவுள் வாழ்த்து. தொகைகளிலும் கீழ்க்கணக் கிலும் உள்ள கடவுள் வாழ்த்தெல்லாம் இதன்கண் அடக் குக"—

எனவும், நச்சினார்க்கினியர் வரைந்துள்ள உரைப்பகுதி களும் இதற்குத் தக்க சான்றாகும்.

இந்த உரையாசிரியர்களின் காலத்திற்கும் பலநூற்றாண்டு கட்கு முன்பே - அதாவது - ஏழாம் நூற்றாண்டின் முற்பகுதி யிலேயே இந்த நூல்கள் 'தொகை' என்னும் பொதுப் பெயரால் சுட்டப்பட்டன என்று கருதுவதற்கு உரிய குறிப்பு ஒன்று திரு ஞான சம்பந்தர் தேவாரத்தில் கிடைத்திருக்கிறது. சம்பந்தர் சமணரை வெல்வதற்காக இயற்றிய வையையாற்றில் இட்ட தாகக் கூறப்படுகின்ற 'திருப்பாசுரம்' என்னும் தேவாரப் பதிகத்தில் உள்ள

"அற்றன்றி அந்தண் மதுரைத் தொகை ஆககினுனும்
தெற்றென்ற தெய்வந் தெளியார் ஒலை தெண்ணீர்ப்
பற்றின்றிப் பாங்கெதிர்வி னூரவும் பண்பு நோக்கில்
பெற்றொன் றுயர்த்தபெருமான் பெருமானு மன்றே"

என்னும் (11) பாடலில் உள்ள, 'மதுரைத் தொகை ஆக்கி னான்' என்னும் தொடர் ஈண்டு எண்ணிப் பார்த்தற் குரியது. 'மதுரையில் தொகை நூல்கள் பல தோன்றச் செய்தவன்' என்பது இதன் பொருளாய் இருக்கலாம். இந்தப் பாதையிலேயே சேக்கிழாரின் பெரியபுராணமும் செல்லு கிறது. பெரிய புராணத்தில் திருஞானசம்பந்தரின் வரலாற்

றைப் பாடிவரும் சேக்கிழார், சம்பந்தரின் திருப்பாசுரப் பதிகத்திலுள்ள ஒவ்வொரு பாடலுக்கும் பாட்டாலேயே பொருள் கூறுகிறார். மேலே காட்டியுள்ள, 'அற்றன்றி' என்று தொடங்கும் சம்பந்தர் பாடலுக்கு உரிய பொருள் விளக்கமாகப் பெரியபுராணத்தில் சேக்கிழார் பாடியுள்ள பாடல் வருமாறு:–

"ஆன 'அற்றன்றி' என்ற அத்திருப் பாட்டில் கூடல்
மாநக ரத்துச் சங்கம் வைத்தவன் தேற்றத் தேறா
ஈனர்கள் எல்லைக் கிட்ட ஏடுநீர் எதிர்தந்து செல்லில்
ஞானம் ஈசன்பால் அன்பே என்றனர் ஞானம் உண்டார்."

இந்தப் பாடலில், 'மதுரைத் தொகை யாக்கினான்' என்பதற்கு, 'மா நகரத்துச் சங்கம் வைத்தவன்' என்று சேக்கிழார் பொருள் கூறியுள்ளார். 'தொகை' என்பதன் பொருளாகச் 'சங்கம்' எனச் சேக்கிழார் ஒரு போக்குக் காட்டியிருப்பினும், ஆராய்ச்சி யுள்ளம் தொகை நூல்களை மறப்பதற்கில்லை. 'தொகை. என்பதற்குச் 'சங்கம்' எனப் பொருள் கூறுவதனினும் தொகை நூல்கள் எனப் பொருள் கூறவே தக்க வாய்ப்பு உள்ளது. ஈண்டு, 'ஆக்கினான்' என்னும் சொல்லையும் நோக்கவேண்டும். சங்கம் ஆக்கினான் என்பதனினும் நூல்கள் ஆக்கினான் (உண்டாகச் செய்தான்) என்று பொருள் கூறுதலே மொழிமரபுக்கு ஏற்றதாகும். ஆகக்கூடியும், சேக்கிழார் இங்கே நூல்கள் தோன்றிய சங்கத்தை நினைவு செய்திருப்பது போற்றத்தக்கது.

அடுத்து, —எட்டுத் தொகையின் பொதுவான – சுருக்கமான இலக்கணத்தை, பன்னிரு பாட்டியலிலிருந்து முன்னர்க் காட்டப்பட்டுள்ள,

"அகவலும் கலிப்பாவும் பரிபாடலும்
பதிற்றைந் தாதி பதிற்றைம்ப தீறா
மிகுத்துடன் தொகுப்பன மேற்கணக் கெனவும்..."

என்னும் நூற்பாப் பகுதியால் அறியலாம். எட்டுத்தொகை நூல்கள் அகவலாலாவது, கலிப்பாவாலாவது, பரிபாடலாலாவது ஆக்கப்பட்டு, ஐம்பது பாடல்களுக்குக் குறையாமலும்,

ஐந்நூறு பாடல்களுக்கு மிகாமலும் கொண்டிருக்கும் - என்பது இதன் கருந்து.

வரிசை முறை:

மேலே காட்டப்பட்டுள்ள, 'நற்றிணை நல்ல குறுந்தொகை என்று தொடங்கும் பாடலில், நற்றிணை முதலாகப்புறநானூறு ஈறாக எட்டு நூல்களும் வரிசைப்படுத்தப் பட்டிருப்பினும் இந்த வரிசையமைப்பை ஏற்றுக்கொள்வதற்கில்லை. சீர் - தளை, எதுகை - மோனை பொருந்தப்பாடல் அமைக்க வேண்டும் என்பதற்கு ஏற்ப, இந்த வரிசை முறை பின்பற்றப் பட்டுள்ளதாகத் தெரிகிறது. உண்மையான பழைய வரிசை முறை இறையனார் அகப்பொருள் உரையில் காணக்கிடக் கின்றது. அது வருமாறு: -

"...கடைச்சங்கமிருந்து தமிழாய்ந்தார்...மதுரை மருதனிள நாகனாரும் கணக்காயனார் மகனார் நக்கீரனாரும் என இத் தொடக்கத்தார்...அவர்களாற் பாடப்பட்டா நெடுந்தொகை நானூறும், குறுந்தொகை நானூறும், நற்றிணை நானூறும் புறநானூறும், ஐங்குறு நூறும், பதிற்றுப்பத்தும், நூற்றைம்பது கலியும், எழுபது பரிபாடலும், கூத்தும், வரியும், சிற்றிசையும் பேரிசையும் என்று இத்தொடக்கத்தன,''

இந்த உரைப்பகுதியில், அகநானூறு என்னும் வேறொரு பெயரும் கொண்ட நெடுந்தொகை முதலாக, எட்டு நூல் களும் வரிசைப்படுத்தப் பட்டிருப்பது காண்க.

இந்த வரிசைமுறை ஆராய்ச்சியாளரின் அறிவுப்பசிக்கு அரிய விருந்தாகும். பிற்கால நூல்களாகிய யாப்பருங்கலம், யாப்பருங்கலக் காரிகை, வீரசோழியம், இலக்கண விளக்கம் முதலிய நூல்களில், பாக்கள் வெண்பா, அகவல் பா (ஆசிரியப் பா), கலிப்பா, வஞ்சிப்பா என நான்கு வகையனவாக இந்த வரிசையில் கூறப்பட்டுள்ளன. ஆனால், பழம்பெருநூலாகிய தொல்காப்பியம், வேறு மாதிரியாகக் கூறுகிறது. தொல் காப்பிய முறை வருமாறு: -

பாக்களின் வகையைத் தொகுத்துச்சொல்லின், ஆசிரியப்பா, வெண்பா என இரண்டு வகையாகும்; விரித்துச் சொல்லின்

ஆசிரியப்பா, வஞ்சிப்பா, வெண்பா, கலிப்பா என நான்கு வகையாகும். ஆசிரிய நடையையுடையது வஞ்சியாதலின் அதனை ஆசிரியத்துள் அடக்கலாம். வெண்பா நடையுடையது கலியாதலின் அதனை வெண்பாவுள் அடக்கலாம். இந்தக் கருத்துக்களைத் தொல்காப்பியம் செய்யுளியலில் உள்ள

'ஆசிரியம் வஞ்சி வெண்பாக் கலியென
நாலியற் றென்ப பாவகை விரியே., (101)

'பாவிரி மருங்கினைப் பண்புறத் தொகுப்பின்
ஆசிரி யப்பா வெண்பா என்றாங்கு
ஆயிரு பாவினுள் அடங்கும் என்ப' (103)

'ஆசிரிய நடைத்தே வஞ்சி ஏனை
வெண்பா நடைத்தே கலியென மொழிப.' (104)

என்னும் நூற்பாக்களால் தெளிவாக அறியலாம். இந்தப் பாக்களைச் சார்ந்து மருட்பா, பரிபாடல் (பரிபாட்டு) போன்றவை வரும்.

யாப்பருங்கலம் முதலிய நூல்கள் கடைச்சங்க காலத்திற்குப் பிற்பட்டவை யாதலானும், கடைச்சங்கப் புலவர்ளுக்குத் தொல்காப்பியமே இலக்கண நூலாய் இருந்தமையானும், கடைச்சங்க நூல்களாகிய எட்டுத்தொகை நூல்ளின் வரிசையமைப்பைத் தொல்காப்பியத்தை ஒட்டியே நாம் ஆராயவேண்டும். எட்டுத்தொகை நூல்களுள், ஆசிரியப்பாவால் ஆறும், கலிப்பாவால் ஒன்றும், பரிபாடலால் ஒன்றும் ஆக்கப்பட்டுள்ளன. எனவே, ஆசிரியப்பாவால் ஆன ஆறு நூல்களையும் முதலிலும், கலியை ஏழாவதாகவும், பரிபாடலை எட்டாவதாகவும் இறையனார் அகப்பொருள் உரையாசிரியர் வரிசைப்படுத்தியிருப்பது முறைதானே! கலி, பரிபாடல் இரண்டனுள் கலி நால்வகைத் தலைமைப்பாக்களுள் ஒன்றாதலானும், பரிபாடல் துணைப் பா ஆதலாலும், பரிபாடலுக்கு முன் கலியை அமைத்தது பொருத்தமே. தொல்காப்பியர் அகத்திணையியலில், இவ்விருபாக்களுக்குள்,

'கலியே பரிபாட்டு ஆயிரு பாவினும்
உரிய தாகும் என்மனார் புலவர், (56)

எனக் கலியையே முதலில் கூறியுள்ளாரல்லவா? இன்னும் சொல்லப் போனால்,—பரிபாடலைக் கலிப்பாவினுள் அடக்கி விடலாம் என்னும் ஒரு கொள்கையும் உண்டு. இதனைப் பேராசிரியர் (செய்யுளியல்-130)எழுதியுள்ள,

"இனிப் பரிபாடலுங் கலிப்பாவினுள் அடங்கு மென்பாரும் உளர். கலியும் பரிபாடலும் என எட்டுத்தொகையுள் இரண்டு தொகை தம்மின் வேறாதலின், அவ்வாறு கூறுவார் செய்யுள் அறியாதார் என்பது..."

என்னும் உரைப்பகுதியாலும், நச்சினார்க்கினியர் (செய்யுளியல் - 130) எழுதியுள்ள,

"பரிபாடலுங் கலியாகாவோ வெனின், கலியும் பரிபாடலும் என வேறாக இரண்டு தொகை வழங்குதலானும் உறுப்பின் வேறுபாட்டானும் வேறென்றுணர்க.

என்னும் உரைப்பகுதியாலும் அறியலாம். இதனால் கலித் தெகைக்குப் பின்னால் வைக்கப்பட வேண்டியது பரிபாடல் என்பது தெளிவாகப் புலனாகும். இந்த முறையை ஒட்டியே பன்னிரு பாட்டியல் என்னும் நூலும்,

'அகவலும் கலிப்பாவும் பரிபாடலும்
பதிற்றைந் தாதி பதிற்ம்றைம்ப தீரா
மிகுத்துடன் தொகுப்பன மேற்கணக்கு...,

எனக் கூறியுள்ளது. எனவே, 'நற்றிணை நல்ல குறுந்தொகை என்று தொடங்கும் பழைய செய்யுளில் அமைக்கப்பட்டுள்ள நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, பதிற்றுப்பத்து பரிபாடல், கலித்தொகை, அகநானூறு, புறநானூறு. என்னும் வரிசைமுறை பொருந்தாது என்பதும், சீர் தளை எதுகை மோனை அமையப் பாடல் இயற்றும் நோக்கத் திற்காக முறை மாறான வரிசையமைப்பு இந்தப்பாடலில் கையாளப்பட்டுள்ளது என்பதும் நன்கு தெளிவாகும்.

இனி, இறையனார் அகப்பொருள் உரையில், ஆசிரியப்பா வால் ஆன ஆறு தொகை நூல்களும் வரிசைப்படுத்தப் பட்டுள்ள முறையை ஆராயவேண்டும். (1) நெடுந்தொகை

நானூறு, (2) குறுந்தொகை நானூறு, (3) நற்றிணைநானூறு, (4) புறநானூறு, (5) ஐங்குறுநூறு, (6) பதிற்றுப்பத்து, – என்பது அந்த வரிசை முறை. இந்த ஆறு நூல்களுள் நானூறு பாடல்கள் கொண்டவை நான்கு: ஐந்நூறு பாடல்கள் கொண்டது ஒன்று; நூறு பாடல் கொண்டது ஒன்று. நானூறு பாடல்கள் கொண்ட நூல்கள் பெரும்பான்மை (Majority) பெற்றிருப்பதால் அவை நான்கும் முதலிலும் சிறிய சிறிய (குறுகிய) ஐந்நூறு பாடல்கள் கொண்ட ஐங்குறு நூறு ஐந்தாவதாகவும், அளவால் மிகவும் குறைந்த நூறு பாடல்கள் கொண்ட சிறிய நூலாகிய பதிற்றுப்பத்து ஆறாவதாகவும் நிரல்செய்யப் பெற்றுள்ளன.

நானூறு பாடல்கள் கொண்ட நான்கு நூல்களுள்ளும் நெடுந்தொகை நானூறு, குறுந்தொகை நானூறு, நற்றிணை நானூறு ஆகிய மூன்றும் அகப்பொருள் பற்றியனவாதலின் அவை முதலிலும், புறநானூறு புறப்பொருள் பற்றியதாதலின் அது இறுதியில் – நான்காவதாகவும் நிறுத்தப் மெற்றுள்ளன. இந்த நான்கனுள் அகம் பற்றியன மூன்றும் புறம் பற்றியது ஒன்றுமாக உள்ள பெரும்பான்மை – சிறுபான்மை என்பது ஒருபுறம் இருக்க, அகம் புறம் என்னும் இரண்டனுள், அகமே தொல் காப்பியம் முதற்கொண்டு எல்லா நூல்களிலும் முதலில் பேசப்பட்டிருப்பது ஈண்டு நினைவுகூரத்தக்கது.

அகப்பொருள் பற்றிய நூல்கள் மூன்றனுள்ளும், அடியளவால் பெரிய பாடல்களையுடைய நெடுந்தொகை முதலாவதாகவும், அடியளவால் சிறிய பாடல்களையுடைய குறுந் தொகை இரண்டாவதாகவும், இரண்டிற்கும் இடைப் பட்ட அளவுள்ள பாடல்களையுடைய நற்றிணை மூன்றாவதாகவும் அமைக்கப் பெற்றுள்ளன. இடைப்பட்ட அளவுள்ள பாடல் களைக் கொண்ட நற்றிணையை இடையிலே-இரண்டாவதாக அல்லவா அமைக்கவேண்டும்? – என்ற வினா ஈண்டு எழலாம் நெடுந்தொகை என்பதற்கு எதிர்ச் சொல்லான (Opposite) குறுந்தொகை என்பதைப் பக்கத்தில் நிறுத்தின் பொருள் தெளிவுக்கு ஏற்புடைத்தாயிருக்குமாதலாலும், மிகுந்த அளவில் மேற்கோளாக உரையாசிரியர்களாலும் பிறராலும் எடுத்தாளப்படும் அளவிற்குக் குறுந்தொகையே நற்றிணையினும்

சிறப்புமிக்கதாய் மிளிர்வதாலும், இஃது இரண்டாவதாகவும் நற்றிணை மூன்றாவதாகவும் நிரல் செய்யப் பெற்றது. எனவே, இறையனார் அகப்பொருள் உரையின் வரிசை முறையே பொருத்தமானது என்பது புலப்படும். ''அவையாவன: நெடுந் தொகை முதலாகிய தொகை எட்டும் என்றவாறு''. என்னும் பேராசிரியரின் (தொல்-செய்யுளியல்-236) உரைப் பகுதியும் ''அவ்வகை என்றதனான் அவை வேறு வேறாக வந்து ஈண்டிய தொகைநிலைச் செய்யுளென்றுணர்க; அவை நெடுந்தொகை முதலிய தொகை யெட்டுமாம்'' -என்னும் நச்சினார்க்கினிய ரின் (செய்யுளியல்-236) உரைப் பகுதியும் ஈண்டு ஒப்புநோக் கற்பாலன. இனி, நாமும் இந்த ஆராய்ச்சி நூலில் இந்த வரிசை முறையினையே பின்பற்றுவோமாக!

**தொகுத்தவரும் காலமும்:**

எட்டுத் தொகை நூல்களையும் பற்றிப் பின்னர்த் தனித் தனித் தலைப்பின்கீழ் விளக்கமாக ஆராயப்போகின்றோமாயி னும், இவை பற்றி இங்கே பொதுவாகச் சில கருத்துக்களை ஆராயவேண்டியுள்ளது. இந்த எட்டு நூல்களையும் தொகுத் தவர் யார்? தொகுத்த காலம் எது?-என முதலில் ஆராய வேண்டும். தொகுத்தவர்கள் கடைச்சங்க காலப் புலவர்களும் அரசர்களும் ஆவர்; எனவே, தொகுத்த காலம் கடைச்சங்க காலம் என்பது தானே விளங்கும். இதற்குரிய சான்று வரு மாறு:—

பத்துப் பாட்டைத் தொகுத்தவர்கள் கடைச்சங்கத்தார்கள் என்பதை, மலைபடுகடாம் - நச்சினார்க்கினியர் உரையி லுள்ள, ''இவர் செய்த செய்யுளை (மலைபடு கடாத்தை) நல்லி சைப் புலவர் செய்த ஏனைச் செய்யுள்களுடன் சங்கத்தார் கோவாமல் (தொகுக்காமல்) நீக்குவர்; அங்ஙனம் நீக்காது கோத்தற்குக் காரணம், ஆனந்தக் குற்றம் என்பதொரு குற்றம் இச்செய்யுட்கு உறாமையான் என்றுணர்க''-என்னும் பகுதியால் அறியலாம் என்னும் செய்தி முன்னரே கூறப்பட்டுள்ளது. பதினெண் மேற்கணக்கைச் சேர்ந்த பத்துப் பாட்டைத் தொகுத்தவர்கள் கடைச்சங்கத்தார்கள் எனில், அதே மேற் கணக்கைச் சேர்ந்த எட்டுத்தொகை நூல்களையும் தொகுத்த வர்களும் அவர்களாகத்தானே இருக்க முடியும்! இதற்குப்

பேராசிரியர் உரையிலும் சான்று உள்ளது. செய்யுளியலில் (149) அவர் எழுதியுள்ள,

"...இனி, நூற்றைம்பது கலியும், எழுபது பரிபாடலும் எனச் சங்கத்தார் தொகுத்தவற்றுள் ஒன்றனை யில்லை யென்றார்; அஃதிக்காலத்தினும் வீழ்ந்த தின்மையின் அவ ரிலக்கணத்தினை வழுப்படுத்த தென்பது...'

கலித்தொகை, பரிபாடல் முதலிய தொகை நூல்களைக் கடைச் சங்கத்தார் தொகுத்தனர் என்பதைப் பேராசிரியரின் உரைப்பகுதி நன்கு தெளிவுபடுத்தி யுள்ளது. எனவே, எட்டுத் தொகை நூல்கள் கி.பி. மூன்று அல்லது நான்காம் நூற்றாண்டில் தொகுக்கப்பட்டன என்று சிலர் கூறுவது பொருந்தாது எனத் தெளியலாம். இதனை இன்னுந்தான் சிறிது ஆராய்ந்து காண்போமே!

எட்டுத் தொகை நூல்களின் இறுதியில் தொகுத்தவர் பெயரும் தொகுப்பித்தவர் பெயரும் குறிப்பிடப்பட்டுள்ளன. ஆனால், எட்டிலும் இந்த அமைப்பு இல்லை. இரு நூல்களில் தொகுத்தவர் பெயர் மட்டிலும், ஒரு நூலில் தொகுப்பித்தவர் பெயர் மட்டிலும், இரு நூல்களில் இருதரத்தார் பெயர்களும் குறிப்பிடப்பட்டுள்ளன; மூன்று நூல்களில் இரண்டுமேயில்லை. இதுபற்றிய விவரம் வருமாறு: -

நெடுந்தொகையைத் (அகநானூற்றைத்) தொகுத்தவர் உப்பூரிகுடிகிழார் மகனார் உருத்திரசன்மர்; தொகுப்பித்தவர் -அதாவது - தொகுக்கும்படி தூண்டியவர் பாண்டியன் உக்கிரப் பெருவழுதி. இதனை, இந்நூலின் இறுதியில் முன்னோராலேயே எழுதப்பட்டுள்ள,

"இத் தொகைப் பாட்டிற்கு அடியளவு சிறுமை பதின் மூன்று, பெருமை முப்பத்தொன்று. தொகுப்பித்தான் பாண்டியன் உக்கிரப் பெருவழுதி, தொகுத்தான் மதுரை உப்பூரி குடிகிழார் மகனாவான் உருத்திரசன்மன் என் பான்"

என்னும் பகுதியால் அறியலாம். அடுத்து,-குறுந் தொகை.

யைத் தொகுத்தவர் பூரிக்கோ. இதனை இந்நூல் இறுதியில் முன்னோரால் எழுதப்பட்டுள்ள,

"இத் தொகை முடிந்தான் பூரிக்கோ. இத் தொகை பாடிய கவிகள் இருநூற்றவர். இத்தொகை நாலடிச் சிற்றெல்லையாகவும் எட்டடிப் பேரெல்லையாகவும் தொகுக்கப்பட்டது."

என்னும் பகுதியால் அறியலாம். இதனைத் தொகுப்பித்தவர் பெயர் தெரியவில்லை. அடுத்து,-நற்றிணையைத் தொகுத்தவர் பெயர் தெரியவில்லை; தொகுப்பித்தவர், பன்னாடு தந்த பாண்டியன் மாறன் வழுதி என்பவர். இதனை, நற்றிணையின் இறுதியில் முன்னோரால் எழுதப்பட்டுள்ள,

"இத் தொகை ஒன்பதடிச் சிறுமையாகப் பன்னிரண்டடிகாறும் உயரப்பெற்றது; இத் தொகை தொகுப்பித்தான் பன்னாடு தந்த பாண்டியன் மாறன் வழுதி."

என்னும் பகுதியால் அறியலாம். நான்காவதாகிய புறநானூற்றைத் தொகுத்தவர், தொகுப்பித்தவர் இருவர் பெயருமே அறியப்படவில்லை. ஐந்தாவது நூலாகிய ஐங்குறுநூற்றைத் தொகுத்தவரையும் தொகுப்பித்தவரையும் இந்நூலின் இறுதியில் முன்னோரால் எழுதப்பெற்றுள்ள.

"இத் தொகை தொகுத்தார், புலத்துறை முற்றிய கூடலூர் கிழார், இத் தொகை தொகுப்பித்தார், யானைக்கட்சேய் மாந்தரஞ் சேரல் இரும்பொறையார்"

என்னும் பகுதியால் அறியலாம். அடுத்து, - ஏழாவதாகிய கலித் தொகையைத் தொகுப்பித்தவர் பெயர் தெரியவில்லை: தொகுத்தவர் நல்லந்துவனார். இதனை, இந்நூலிற்கு உரையெழுதிய நச்சினார்க்கினியர் இறுதியில் எழுதியுள்ள,

"முல்லை குறிஞ்சி மருதம் நெய்தலெனச் சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே-என்புழிச் சொல்லாத முறையாற் சொல்லவும் படுமென்றலின், இத்தொகையைப் பாலை குறிஞ்சி மருதம் முல்லை நெய்தலென இம் முறையே கோத்தார் நல்லந்துவனார்"

என்னும் பகுதியால் அறியலாம். ஆறாவது நூலாகிய பதிற்றுப் பத்தும், எட்டாவது நூலாகிய பரிபாடலும் முழுமையும் கிடைக்காமையால், இறுதியில் இருக்கக்கூடிய தொகுத்தவர் பெயரும் தொகுப்பித்தவர் பெயரும் அறிய முடியவில்லை.

புறநானூறு, பதிற்றுப் பத்து, பரிபாடல் என்னும் மூன்று நூல்கட்கும் இருதரத்தார் பெயர்களும் தெரியவில்லையாயினும், மற்ற ஐந்து நூல்களையும் தொகுத்தவரும் தொகுப்பித்தவருமாக அறியப்பட்டிருப்பவர்கள் மொத்தம் எழுவராவர். இந்த எழுவருமே கடைச்சங்க காலத்தவர். இவர்களுள் மூவர் மன்னர்கள்; பாண்டியன் உக்கிரப் பெருவழுதி, பன்னாடு தந்த பாண்டியன் மாறன் வழுதி என்னும் இருவரும் பாண்டிய மன்னர்கள்; யானைகட்சேய் மாந்தரஞ் சேரல் இரும்பொறையார் சேர வேந்தர். இவ் வெழுவருள் நால்வர் பாடல்கள் எட்டுத் தொகை நூல்களில் உள்ளன. உக்கிரப் பெருவழுதி பாடிய பாடல்கள் அகநானூற்றில் (26) ஒன்றும், நற்றிணையில் (98) ஒன்றுமாக இரண்டு உள்ளன. பன்னாடு தந்த பாண்டியன் மாறன் வழுதி இயற்றிய பாடல்கள், 'பாண்டியன் பன்னாடு தந்தான்' என்னும் பெயரில் குறுந்தொகையில் (270) ஒன்றும், 'பாண்டியன் மாறன் வழுதி' என்னும் பெயரில் நற்றிணையில் (97) ஒன்றுமாக இரண்டு உள்ளன. பாண்டியன் பன்னாடு தந்தானும், பாண்டியன் மாறன் வழுதியும், 'பன்னாடு தந்த பாண்டியன் மாறன் வழுதி' என்னும் ஒருவராகத்தான் இருக்கக்கூடும். கூடலூர் கிழார் இயற்றிய பாடல்கள் குறுந்தொகையில் (166, 167, 214) மூன்றும், புறநானூற்றில் (229) ஒன்றுமாக நான்கு உள்ளன. நல்லந்துவனார் இயற்றிய பாடல் அகநானூற்றில் (43) ஒன்று உள்ளது, நற்றிணையில் (88) ஒன்று உள்ளது; பரிபாடலில் (6, 8, 11, 20) நான்கு பாடல்கள் உள்ளன, அன்றியும், கலித்தொகையில் உள்ள நெய்தல் கலிப்பகுதி முழுவதும் (33—பாடல்களும்) நல்லந்துவனாரின் படைப்பே யாகும்.

எழுவருள், பாடல்கள் இயற்றியுள்ள நால்வர் போக, மற்ற மூவருள் உருத்திரசன்மர் ஒருவர், இவரைப் பற்றி ஏதேதோ கதை சொல்லப்படுகிறது. இறையனார் அகப்பொருளுக்குச்

சங்கப் புலவர்கள் பலர் இயற்றிய உரைகளுள் நக்கீரரது உரையே சிறந்தது எனத் தேர்ந்தெடுத்தவர் உருத்திரசன்மர், என்னும் செய்தி முன்பே ஓரிடத்தில் கூறப்பட்டுள்ளது. எனவே, உருத்திரசன்மர் கடைச்சங்க காலத்தவர் என்பது உறுதி. உருத் திரனார் என்னும் பெயரால், குறுந்தொகையில் (274) ஒரு பாடல் இருக்கிறது. இந்தப் பாடலை இயற்றிய உருத்திரனா ரும், உருத்திரசன்மரும் ஒருவரே என உறுதியாக எவ்வாறு சொல்ல முடியும்?

அடுத்து, குறுந்தொகை தொகுத்த பூரிக்கோ பற்றி ஒன்றும் புலப்படவில்லை. ஐங்குறுநூறு தொகுத்த கூடலூர் கிழாரின் பாடல்கள் மூன்றும், நற்றிணை தொகுப்பித்த பன்னாடு தந்த பாண்டியன் மாறன் வழுதியின் பாடல் ஒன்றும் குறுந்தொகை யில் இருப்பதால், குறுந்தொகை தொகுத்த பூரிக்கோவும் இவர்கள் காலத்தவராகவே இருக்கக் கூடும். 'கோ' என்பதால் இவர் அரச மரபினராயிருக்கலாம். சங்க நூல்களில் இவருடைய பாடல்கள் இல்லையாயினும் இவரும் கடைச்சங்க காலத்தவரே யாவர்.

மூன்றாவதாக, யானைக்கட் சேய் மாந்தரஞ் சேரல் இரும்பொறையாரிடம் வருவோம். இவர் கடைச் சங்க காலத்துச் சேர மன்னர்களுள் ஒருவர். சேர வேந்தர்களுள் கருவூர்ச் சேரமான் சாத்தன், சேரமான் இளங்குட்டுவன், சேரமான் கணைக்கால் இரும்பொறை, சேரமான் கோட்டம் பலத்துத் துஞ்சிய மாக்கோதை, சேரமானெந்தை. முடங்கிக் கிடந்த நெடுஞ்சேரலாதன் முதலியோர் இயற்றிய பாடல்கள் பல சங்கத்தொகை நூல்களில் இருப்பினும், யானைகட் சேய் மாந்தரஞ் சேரல் இரும்பொறை ஒன்றும் படியதாகக் காணப் படவில்லை. ஆனால், இவரைப் பற்றிக் 'குறுங்கோழியூர் கிழார்' என்னும் புலவர் பாடிய பாடல்கள் (17,20,22) மூன்றும் கூடலூர் கிழார் பாடிய பாடல் (229) ஒன்றுமாக மொத்தம் நான்கு பாடல்கள் புறநாறூற்றில் உள்ளன. எனவே, இம் மன்னர் கடைச் சங்க காலத்தவர் என்பது தெளிவு. இதற்கு இன்னும் பல சான்றுகள் தரமுடியுமாயினும் இம்மட்டோடு அமைவோம். இந்த மன்னரது ஆட்சிக் காலம் கி.மு. முதல் நூற்றாண்டு (கி.மு. 62-கி.மு. 42) எனப் பேராசிரியர்

கா. சுப்பிரமணியப் பிள்ளையவர்கள் (M.L. பிள்ளை) மொழிந்துள்ளனர். கால ஆண்டு பற்றிக் கருத்துவேறுபாடு இருப்பினும், கடைச் சங்க காலத்தவர் என்பது உறுதி எனவே, தொகுத்தவர்கள். தொகுப்பித் தவர்கள் என அறியப்படும் எழுவருமே கடைச்சங்க காலத்தவர் என்பது புலனாகும்.

இதுகாறும் கூறியவற்றால், பத்துப்பாட்டு எட்டுத் தொகை நூல்களைக் கடைச் சங்கத்தார் தொகுத்ததாக நச்சினார்க்கினியர், பேராசிரியர் முதலிய அறிஞர்கள் கூறி யிருப்பது சாலவும் பொருந்தும் என்பதும், இவற்றைத் தொகுத்த காலத்தை, கி.பி. நான்காம் நூற்றாண்டுவரையும் இக்கால ஆராய்ச்சியாளர் சிலர் தள்ளிப் போட்டுக்கொண்டு போவது சிறிதும் பொருந்தாது என்பதும் முற்றமுடிந்த முடிபாகும். சுருங்கக் கூறின், கி.பி. முதல் நூற்றாண்டிற்குள் இவை தொகுக்கப்பட்டிருக்க வேண்டும்.

இங்கே, இன்னொரு செய்தியையும் அறிவிக்கக் கடமைப் பட்டுள்ளோம். கி.பி. முதல் நூற்றாண்டிற்குள் இவை தொகுக்கப் பட்டிருக்க வேண்டும் என்று கூறியது போலவே கி.மு. நான்காம் நூற்றாண்டிற்குப் பின்பே இவை தொகுக் கப்பட்டிருக்க வேண்டும் என்னும் செய்தியையும் தெரிவிக்க வேண்டும். இதற்குரிய சான்றாவது:—

பாடலிபுரத்தைத் தலைநகராகக் கொண்டு மகதநாட்டை யாண்ட நந்தரைப் பற்றிய செய்தி நெடுந்தொகை என்னும் அகநானூற்றுப் பாடல்கள் இரண்டில் சொல்லப்பட்டுள்ளது. நந்தமன்னர் தம்மிடம் மிக்கிருந்த மணி, பொன் முதலான செல்வங்களைப் படையெடுத்து வரும் மாற்றார் கைப்பற்றா மல் காப்பதற்காக, அவற்றை வன்மையான ஒரு பெட்டியில் இட்டுப் பூட்டி, கங்கையாற்றிடையே ஒரு சுருங்கை அறை கட்டி, அதில் மறைத்து வைத்ததாக வரலாறு கூறுகிறது. இந்த வரலாற்றுச் செய்தியினை, அகநானூற்றில் உள்ள,

பல் புகழ் நிறைந்த வெல்போர் நந்தர்
சீர்மிகு பாடலிக் குழீஇக் கங்கை (265).

நீர்முதல் நிதியங் கரந்த கொல்லோ'
நீந்தன் வெறுக்கை எய்தினும் மற்றவண்
தங்கலர் வாழி தோழி' (251)

என்னும் மாமூலனாரின் பாடல் பகுதிகள் அறிவிக்கின்றன. நந்த மன்னர் இவ்வாறு மறைத்து வைத்தது, 'மா அலெக் சாந்தர்' இந்தியாவின் மீது படையெடுத்து வந்த போதாகும் என்று வரலாற்றறிஞர்கள் கூறியுள்ளனர். 'மா அலெக்சாந் தரின் காலம் கி.மு. 356 முதல் கி'மு. 323 வரையுமாகும் அதாவது-கி.மு. நான்காம் நூற்றாண்டாகும். நந்தர்காலமும் கி.மு. நான்காம் நூற்றாண்டென வரலாறு கூறுகிறது. வட இந்தியாவில் நடைபெற்ற இந்த நிகழ்ச்சி தென்னகத்தில் பரவ நீண்டநாள் தேவைப்படாது. அந்த நாளைய தென்னக மன்னர்க்கு வட இந்தியாவோடு வெற்றித் தொடர்பு உண்டு.

கி.மு. நான்காம் நூற்றாண்டில் நடைபெற்ற ஒரு நிகழ்ச் சியைக் கூறும் அகநானூற்றுப் பாடல்கள், கி.மு. நான்காம் நூற்றாண்டிற்குப் பின்னரே இயற்றப்பட்டிருக்கும். இந்தப் பாடல்கள் அகநானூற்றில் தொகுக்கப்பட்டுள்ளன வெனில், இந்தத் தொகுப்புப் பணி, கி.மு. நான்காம் நூற்றாண்டிற்குப் பின்பே நடைபெற்றிருக்க வேண்டும் என்பது புலனாகலாம்.

### தொகுத்த வரலாறு

எட்டுத் தொகை நூல்களைத் தொகுத்த வரலாற்று முறை பற்றிப் பலர் பலவாறு கூறலாமாயினும், ஏறக்குறைய எல்லாரையும் தழுவினாற்போல் பொதுவாகத் தொகுத்து நாம் ஒரு முறையினைக் கூறலாம். 'இப்படியிருக்கலாம்' என ஒரு தோற்றமாகக் (உத்தேசமாகக்) கூறப்படும் முறையே யாகும் இது.

பாண்டியரது ஆதரவில் மதுரையில் நடைபெற்ற கடைச் சங்கத்தில் புலவர்கள் பலர் குழுமித் தமிழாராய்ந்து வந்தனர். அங்கிருந்த புலவர்களே யன்றித் தமிழகம் முழுவதும் பல இடங்களிலும் புலவர்கள் வாழ்ந்து வந்தனர். தமிழகம் முழு வதும் வாழ்ந்த புலவர்களுக்கு எப்படியோ மதுரைத் தமிழ்ச் சங்கத்தோடு தொடர்பு இருந்தது. கடைச் சங்க காலத்தில்

வாழ்ந்த புலவர்கள் பல பாடல்கள் இயற்றினர். கடைச் சங்க காலத்துக்கு முன் இயற்றப்பட்ட பாடல்கள் பலவும் நாட்டில் நடமாடிக் கொண்டிருந்தன. தக்க முறையில் காவாமையால் இந்தப் பாடல்களுள் பல நாளடைவில் மறையத் தொடங்கின. எனவே, இருக்கும் பாடல்களையாயினும் தொகுத்துப் பல் வேறு நூல் உருவங்களில் நிலைக்கச் செய்யவேண்டும் என அரசரும் புலவரும் விரும்பினர். இதை மேற்பார்வையிட்டுச் செய்யச் சங்கத்தில் சில சிறுசிறு குழுக்களும் அமைக்கப்பட்டிருக் கலாம்.

உதிரிப் பாடல்கள் ஆயிரக்கணக்கில் இருந்தன. தலைவன் தலைவியரது அகவாழ்வைப் பற்றிப் பேசும் 'அகப்பொருள்' பாடல்களும் இருந்தன. அகப்பொருள் அல்லாத-வெளிப் புற வாழ்வைப் பற்றி விவரிக்கும் 'புறப்பொருள்' பாடல்களும் இருந்தன. புறப்பொருள் பாடல்களினும் அகப் பொருள் பாடல்களே மிகுதியாயிருந்தன. இதனால், தமிழர்கள் புற வாழ்க்கையினும் அக வாழ்க்கையிலேயே மிகுந்த ஆர்வம் கொண்டவர்கள் என்று பொருள் கொள்ளலாகாது; அகவாழ் வின் நிலைக்களனாகிய வீடு திருந்தின், புற வாழ்வின் நிலைக் களனாகிய நாடு திருந்தும் என்பது ஈண்டு நினைவு கூரத்தக்கது. இந்த அடிப்படையில், அன்றைய நாளில் அகப்பொருள் பாடல்கள் பல்கி மலிந்தன.

பாக்களுள்ளும், கலிப்பா, பரிபாட்டு முதலியவற்றைக் காட்டிலும் ஆசிரியப் பாக்களே மிக்கிருந்தன. அந்தக் காலத் தில் ஆசிரியரைப்போல ஆசிரியப் பாக்களே தலைமை பெற்றி ருந்தன. எனவே, அறிஞர்கள் முதலில் ஆசிரியப் பாக்களைத் திரட்டினர். அவை பல பொருள் பற்றிப் பல காலத்தில் பலரால் பாடப்பெற்ற உதிரிப் பாடல்களாகும். அவற்றுள் புறப்பாடல்களினும் அகப்பாடல்கள் மிக்கிருந்தன. அஃதாவது, அகப்பாடல்களும் புறப்பாடல்களும் மூன்றுக்கு ஒன்று (3:1) என்ற விகிதத்தில் இருக்கக் கண்டனர். அவற்றுள் சிறந்தன வற்றைத் தூற்றிப் புடைத்துத் தேர்ந்தெடுத்தனர். அகப் பொருள் பாடல்கள் ஆயிரத்திரு நூறு கிடைத்தன. இவற்றை ஒரே நூலாகத் தொகுப்பின் படியெடுப்பதற்கும் படிப்பதற்கும்

கையாள்வதற்கும் அலுப்பு சலிப்பாய் இருக்கு மெனக் கருதி மூன்று பிரிவாக்கினர். இவ்வாறு மூன்றாகப் பிரிக்காமல் அறுநூறு - அறுநூறு பாடல்களாக இரண்டாகப் பிரித்திரிக் கலாம்; ஆனால், பாடல்களின் அளவும் அமைப்பும் இரண்டு சரிபாதியாகப் பிரிக்கும் அளவில் இல்லை. நானூறு - நானூறு - நானூறு பாடல்களாக மூன்றாகப் பிரித்துத் தொகுக்கும் நிலையிலேயே பாடல்களின் அளவும் அமைப்பும் இருந்தன.

அகப்பொருள் பற்றிய ஆயிரத்திருநூறு ஆசிரியப் பாக் களும் நான்கு அடிகளுக்குக் குறையாமலும் முப்பத்தோர் அடிகளுக்கு மேற்படாமலும் இருந்தன. இவற்றுள், பெரிய பாடல்களை யெல்லாம் சேர்த்து ஒரு நூலாகவும், சிறிய பாடல்களை யெல்லாம் சேர்த்து ஒரு நூலாகவும், நடுத்தர மான பாடல்களையெல்லாம் சேர்த்து ஒரு நூலாகவும் தொகுக்க விரும்பினர். இந்தத் திட்டத்தின்படி, பதின் மூன்று அடிகளுக்குக் குறையாமல் பார்த்தால் நானூறு பாடல்களும், பதின் மூன்று அடிகளுக்குக் கீழே ஒன்பது அடிகளுக்குக் குறை யாமல் பார்த்தால் நானூறு பாடல்களும், ஒன்பது அடி களுக்குக் கீழே நான்கு அடிகளுக்கு குறையாமல் நானூறு பாக் களும் தேறுவதைக் கண்டறிந்தனர். இந்த இயற்கை யமைப்பைப் பயன்படுத்திக் கொண்டு, ஆயிரத்திருநூறு பாடல் களையும் நானூறு பாடல்கள் வீதம் பகுத்து மூன்று நூல் களாகத் தொகுத்தனர். ஆயிரத்திருநூறு பாடல்களுக்கும் மிகுதியாகவும் கிடைத்திருக்கலாம்; ஆயினும், மேற்கூறிய அடி யளவுக்குப் பொருந்தி வரும்படியாக உள்ள நானூறு-நானூறு - நானூறு பாடல்களாக ஆயிரத்திருநூறு பாடல்களைத் தேர்ந்தெடுத்துக் கொண்டிருக்கலாம். இவ்வாறு தொகுத்த மூன்று நூல்களின் விவரம் வருமாறு:—

ஆயிரத் திருநூறு பாடல்களுள், பதின்மூன்று அடிகளுக்குக் குறையாமல் முப்பத்தோர் அடிகள் வரையும் கொண்ட நானூறு நீண்டநெடும் பாடல்களின் தொகுப்புக்கு 'நெடுந் தொகை நானூறு' எனப் பெயர் வழங்கப்பட்டது. ஒன்பது அடிகளுக்குக் கீழே நான்கு அடிகள் வரையுங்கொண்ட நானூறு சிறிய-குறுகிய பாடல்களின் தொகுப்புக்குக் 'குறுந்தொகை

நானூறு' எனப் பெயர் வழங்கப்பட்டது; இவ்விரண்டிற்கும் இடைப்பட்டதாக, ஒன்பது அடி முதல் பன்னிரண்டு அடிவரை கொண்ட நானூறு நல்ல பாடல்களின் தொகுப்புக்கு 'நற்றிணை நானூறு' எனப் பெயர் வழங்கப்பட்டது. நெடுந் தொகைக்கும் குறுந்தொகைக்கும் இடைப்பட்டது நற் றிணையை 'இடைத் தொகை' என்று வழங்கியிருக்கலாமே எனின், அஃது அவ்வளவு அழகுபடாது. அப்படி வழங்குவது மரபு அன்று. 'முதல்தொகை', 'கடைத்தொகை' என்று பெயர் வைத்திருந்தால், இடைப்பட்டதை இடைத் தொகை' என லாம்; இஃது அப்படியில்லையல்வா? எனவே, பொருத்தமாக ஏதாவது ஒரு பெயர் வைக்க வேண்டுமே என்பதற்காக, 'நற்றிணை' என்னும் பெயர் வழங்கப்பட்டது. நல்திணை-நல்ல திணை – நற்றிணை. குறிஞ்சி, முல்லை,மருதம், நெய்தல் பாலை என்னும் ஐந்து திணைகளையும் பற்றிக்கூறும் நல்லநூல் என் னும் பொருளில் நற்றிணை என்னும் பெயர் சூட்டப்பட்டது. இம்மூன்று நூல்களும் 'நானூறு' என்னும் எண்ணுப் பெயர் பின்னே இணைக்கப் பெற்றும் வழங்கப்படும்; இணைக்கப் படாமல் வெற்றுபடியாகவும் வழங்கப்படும்.

இந்த மூன்று நூல்களையும் தொகுத்தவர்களும் தொகுப் பித்தவர்களும் ஆகிய உருத்திரசன்மர், உக்கிரப் பெருவழுதி, பூரிக்கோ, பன்னாடு தந்த பாண்டியன் மாறன் வழுதி ஆகியோர் கடைச் சங்க காலத்தவர்கள்-புலமைபெற்றவர்கள், என்னும் செய்தி முன்பே விளக்கப்பட்டுள்ளது. நூல் தொகுப் பில் மற்றும் பலரும் பங்கு கொண்டிருப்பினும், இந்நால்வரும் இன்றியமையாப் பொறுப்பு ஏற்றுக்கொண்டு, குறிப்பிட்ட குழுக்களுக்குத் தலைமை தாங்கியிருப்பர்.

இதுகாறும், நானூறு பாடல்கள்விதம் கொண்ட அகப் பொருள் தொகை நூல்கள் மூன்றினைப் பற்றிப் பார்த்தோம். இனிப் புறப்பொருள் தொகை நூலுக்குள் புகுவோம். புறப் பொருள் பற்றிய உதிரிப் பாடல்கள் ஏறக்குறைய நானூறு கிடைத்திருக்கும். அவற்றைத் தொகுத்துப் 'புறநானூறு என்னும் பெயரில் ஒரு நூலாக உருவாக்கினர். சரியாக நானூறு பாடல்களே கிடைத்திருக்குமென்று சொல்லமுடி

யாது. இன்னும் மிகுதியாகவும் கிடைத்திருக்கும். ஆயினும், மேற்கூறிய அகப்பொருள் தொகை நூல்கள் மூன்றும் இந்தப் புறநானூறும் ஒத்த எண்ணிக்கையில் அமையும்படி (Adjustment) சரி செய்யப்பட்டிருக்க வேண்டும். புறநானூற்றைத் தொகுத்தவர் பெயரும் தொகுப்பித்தவர் பெயரும் அறியப் படவில்லையாதலின், பொதுவாக இந்தப் பொறுப்பைச் சங்கத்தார் தலையிலேயே போட்டுவிடவேண்டும்.

நானூறு

மேற்கூறிய நான்கு தொகை நூல்களிலும் நானூறு பாடல்கள் விதம் சேர்த்திருப்பது இயற்கையாய் நிகழ்ந்த செயலாகத் தான் இருக்கவேண்டும். 'நானூறு என்னும் எண்ணில் ஏதோ மாண்பு '(மகிமை) இருக்கிறது' என்று எண்ணி இவ்வாறு செய்திருக்க முடியாது. சிறந்தனவாகத் தேர்ந்தெடுத்துக் கிடைக்கப்பெற்ற பாடல்களைப் பகுக்குங்கால், இந்த விதம் -விகிதம் இயற்கையாய் அமைந்திருக்கிறது. வேண்டுமானால் ஒன்று சொல்லலாம்: அகப்பொருள் பாடல்கள் ஆயிரத்திரு-நூறு கிடைக்க அவற்றை நானூறு விதம் மூன்று நூல்களாகத் தொகுக்கவேண்டி வந்ததால், பின்னர்ப் புறப்பொருள் பாடல் களிலும் சிறந்த நானூறைத் தேர்ந்தெடுத்துப் 'புறநானூறு என்னும் பெயரில் ஒரு நூல் உருவாக்கினர் எனலாம். அல்லது, -புறப்பாடல்கள் ஏறக்குறைய நானூறு தோன்றியதால், அவற்றை ஒரு தொகையாக்குவது என்றும், அதைப்போலவே, அகப்பாடல்களையும் நானூறு விதம் சரி செய்து தொகை யாக்குவதென்றும் திட்டமிட்டுச் செய்திருக்கலாம்.

இங்கே இன்னொன்றும் கருதத்தக்கது: இந்த நான்கு தொகை நூல்களிலும் நானூறு பாடல்கள் இருப்பதைக் கண்ட தால், நானூறு பாடல்கள் கொண்ட நூல் உருவாக்கும் மரபு பின்னர்த் தோன்றியிருக்கிறது. கீழ்க்கணக்கு நூல்களாகிய நாலடியார், பழமொழி என்னும் இரண்டும் நானூறு-நானூறு பாடல்களைக் கொண்டிருப்பது இதற்கு எடுத்துக் காட்டாகும்.

இதுகாறும் கூறிய செய்திகளை அடிப்படையாகக் கொண்டு நோக்கின், நெடுந்தொகை, குறுந்தொகை, நற்றிணை, புற

நானூறு என்னும் நான்கு நூல்களும் ஒரே காலத்தில் ஒரே இடத்தில் ஒரே பெரிய தலைமையைச் சேர்ந்த அறிஞர்களால் திட்டமிட்டுத் தொகுத்து உருவாக்கப்பட்டன-என்னும் கருத்துப் புலனாகலாம். இதனால், எல்லாப் பாடல்களும் ஒரே காலத்தில் பாடப்பட்டவை என்று கூறி விட முடியாது; தொகுப்பதற்கு ஆயிரம் ஆண்டுகட்குமுன் இயற்றப்பட்ட பாடல்களும் இருந்திருக்கலாம். பலராலும் பல காலத்தில் எழுதப்பட்ட பாடல்கள் ஒரு காலத்தில் ஓரிடத்தில் தொகுக்கப்பட்டன என்பதுதான் உண்மை.

எது முதல்?

மேற்கூறிய நான்கு தொகைகளுள் நெடுந்தொகை, குறுந்தொகை, நற்றிணை என்னும் அகப்பொருள் நூல்கள் மூன்றும் முதலில் ஒழுங்கு செய்யப் பட்டிருக்குமா? அல்லது புறநானூறு முதலில் ஒழுங்கு செய்யப்பட்டிருக்குமா? இந்த வினாவிற்கு விடையிறுப்பது அரிது, இருப்பினும் முயன்று பார்ப்போம்:

கடைச் சங்க காலப் புலவர்களுள், அணிலாடு முன்றிலார், ஓரில் பிச்சையார், ஓர் ஏர்உழவனார், கங்குல் வெள்ளத்தார் கல்பொரு சிறுநுரையார், செம்புலப் பெயனீரார், தும்பிசேர் கீரனார், தேய்புரிப் பழங்கயிற்றினார், மீனெறி தூண்டிலார், விழிக்கட் பேதைப் பெருங்கண்ணனார் முதலியோர் பாடல்கள் எட்டுத் தொகை நூல்களில் இருப்பதைக் காணலாம். மேலே குறிப்பிட்டுள்ள புலவர்களின் பெயர்கள் இயற்கையான இடுகுறிப் பெயராய்-இயற்பெயராய் இல்லாமல், காரணப் பெயராய் இருப்பது புலப்படும். அந்தப் பெயர்களிலுள்ள முழுத்தொடரோ, அல்லது ஒரு பகுதியோ, அவரவர் பாடிய பாடலில் அமைந்திருக்கக் காணலாம். இவ்வாறாக ஏறக்குறைய முப்பதின்மர் பெயர்கள் அமைந்துள்ளன எனலாம். குறிப்பிட்ட ஒரு பாடலின் ஆசிரியர் பெயர் தெரியவில்லையெனில், அப்பாடலில் உள்ள ஒரு சிறந்த தொடரால் கற்பனையாக ஒரு பெயரைப் படைத்து, அதுதான் ஆசிரியர் பெயர் எனச் சூட்டுவது அக்காலத்து மரபு எனத் தெரிகிறது.-எடுத்துக்காட்டாகப்-பெயர் முழுதும் பாடலில் அமைந்த புலவர் ஒருவரையும் அவர்தம் பாடல்களுடன் இவண் காண்போம்:

'ஓர் ஏர் உழவனார்' என்னும் புலவரின் பாடல்கள் குறுந் தொகையில் ஒன்றும், புறநானூற்றில் ஒன்றும் உள்ளன. அவை வருமாறு:

[குறுந்தொகை—131]

'ஆடமை புரையும் வனப்பிற் பணைத்தோட்
பேரமர்க் கண்ணி யிருந்த வூரே
நெடுஞ்சே ணாரிடை யதுவே நெஞ்சே
ஈரம் பட்ட செவ்விப் பைம்புனத்து
ஓர் ஏர் உழவன் போலப்
பெருவிதுப் புற்றன்றால் நோகோ யானே.'

[புறநானூறு—193]

'அதளெறிந் தன்ன நெடுவெண் களரின்
ஒருவ னாட்டும் புல்வாய் போல
ஓடி யுய்தலுங் கூடுமன்
ஒக்கல் வாழ்க்கை தட்குமா காலே.'

மேலுள்ள இரு பாடல்களுள் குறுந்தொகைப் பாடலில், 'ஓர் ஏர் உழவன் போல' என ஒரே ஏரையுடைய உழவனை விதந்து பேசியிருப்பதால், அந்த 'ஓர் ஏர் உழவன்' என்னும் தொடராலேயே 'ஓர் ஏர் உழவனார்' என ஆசிரியர் பெயர் வழங்கப்பட்டுள்ளார். பெயர் முழுதும் பாடலில் அமைந்துள்ள புலவர் இவர். இப் புலவர் பெயரால் உள்ள 'அதளெறிந் தன்ன' என்னும் புறநானூற்றுப் பாடலில், ஓர் ஏர் உழவன் என்னும் தொடரிலுள்ள ஒரு சொல்கூட இல்லையென்பது நினைவில் வைத்திருக்கவேண்டியதாகும்.

அடுத்து,-'தும்பி சேர் கீரனார், என்னும் புலவரின் பாடல்கள் குறுந்தொகையில் (61,315,316,320,392) ஐந்தும், நற்றிணையில் (277) ஒன்றும், புறநானூற்றில் (249) ஒன்றும் உள்ளன அவற்றுள் குறுந்தொகைப் பாடல் ஒன்றும் நற்றிணைப் பாடலும், புறநானூற்று பாடலும் வருமாறு.

[குறுந்தொகை—362]

'அம்ம வாழியோ மணிச்சிறைத் தும்பி!
நன்மொழிக் கச்ச மில்லை யவர்நாட்டு

அண்ணல் நெடுவரைச் சேறி யாயிற்
கடவை மிடைந்த துடைவையஞ் சிறுதினைத்
துளரெறி நுண்துகட் களைஞர் தங்கை
தமரிற் றீரா ளென்மோ அரசர்
நிரைசெல் நுண்தோல் போலப்
பிரசஞ் தூங்கு மலைகிழ வோர்க்கே.'

[*நற்றிணை—277*]

'கொடியை வாழி *தும்பி*! இந்நோய்
படுகதில் லம்ம யானினக் குரைத்தென
மெய்யே கருமை யன்றியஞ் செவ்வன்
அறிவுங் கரிதோ அறனிலோய் நினக்கே
மனையுறக் காக்கு மாண்பெருங் கிடக்கை
நுண்முள் வேலித் தாதொடு பொதுளிய
தாறுபடு பீரம் ஊதி வேறுபட
நாற்ற மின்மையிற் பசலை யூதாய்
சிறுகுறும் பறவைக் கோடி விரைவுடன்
நெஞ்சுநெகிழ் செய்ததன் பபனோ அன்பிலர்
வெம்மலை யருஞ்சுர மிறந்தோர்க்கு
என்னிலை யுரையாய் சென்றவண் வரவே.'

[*புறநானூறு—249*]

'கதிர்முக் காரல் கீழ்ச்சேற் றொளிப்பக்
கணைக் கோட்டு வாளை மீநீர்ப் பிறழ
எரிப்பூம் பழனம் நெரித்துடன் வலைஞர்
அரிக்குரற் றடாரியின் யாமை மிளிரப்
பனைநுகும் பன்ன சினைமுதிர் வராலொடு
உறழ்வே லன்ன வொண்கயல் முகக்கும்
அகனாட் டண்ணல் புகாவே நெடுநைப்
பகலிடங் கண்ணிப் பலரொடுங் கூடி
ஒருவழிப் பட்டன்று மன்னே யின்றே
அடங்கிய கற்பின் ஆய்நுதல் மடந்தை
உயர்நிலை யுலக மவன்புக...வரி

நீறாடு சுளகிற் சீறிடம் நீக்கி
அழுத லானாக் கண்ணள்
மெழுகு மாப்பிகண் கலுழ்நீ ரானே.'

மேலுள்ள மூன்று பாடல்களுள், குறுந்தொகைப் பாடலிலும் நற்றிணைப் பாடலிலும் தும்பியைத் தூது விடுவதாக ஆசிரியர் அறிவித்துள்ளார். இவர் பெயர் 'கீரனார்' என்பது 'கீரனார்' என்னும் பெயரில் பலர் உள்ளனராதலின் அவர்களினின்றும் வேறுபிரித்துக் காட்ட இவர் 'தும்பி சேர் கீரனார்' என வழங்கப்பட்டார். இவருடைய பாடல்களிலுள்ள 'தும்பி' என்னும் சொல் இவரது பெயரோடு இணைக்கப்பட்டது. இந்தக் காரணத்தால் இவர் 'தும்பி சேர் கீரனார்' ஆனார். இவர் பெயரால் உள்ள 'கதிர்மூக் காரல்' என்னும் புறநானூற்றுப்பாடலில், தும்பியைப் பற்றிய வாடையே இல்லை என்பது நினைவில் வைத்துக்கொள்ள வேண்டியதாகும்.

உண்மையான இயற்பெயர் தெரியாமையால் குறுந்தொகைப் பாடலிலும் நற்றிணைப் பாடலிலும் உள்ள தொடர்களால் பெயர் வைக்கப்பெற்ற புலவர் இருவரை மேலே கண்டோம். இவ்விருவரின் பாடல்கள் இதேபெயர்களுடன் புறநானூற்றிலும் உள்ளன. குறுந்தொகையிலும் நற்றிணையிலும் தொடர்களைக் கொண்டு ஆசிரியர்கட்குப் பெயர்கள் வைக்கப்பட்டன; ஆனால், அந்தத் தொடர்கள் புறநானூற்றில் இல்லாத நிலையிலும், அந்தப் புறப்பாடல்களின் ஆசிரியர்களாக அவர்களை எவ்வாறு கூறமுடியும்? இதில் ஏதோ ஓர் உண்மை இருக்கிறது; கண்டுபிடிப்போம்:

நெடுந்தொகையும் குறுந்தொகையும் நற்றிணையும் முதலில் தொகுக்கப்பட்டு விட்டன. இந்நூற் பாடல்களுள் ஆசிரியர் பெயர் தெரியாதனவற்றிற்கு, அவ்வப் பாடல்களிலுள்ள சிறப்புத் தொடர்களால் ஆசிரியர் பெயர்கள் உருவாக்கப்பட்டன. இம் மூன்று நூல்களும் தொகுக்கப்பட்ட பின்னர்ப் புற நானூறு தொகுக்கப்பட்டது. இந்நூலில் ஆசிரியர் பெயர் தெரியாத பாடல்களுக்கு, முன்பே தொகுத்த குறுந்தொகையில் உள்ள தொடரால் பெயர்பெற்ற ஆசிரியர்கள் உரியவர்களாக்கப்பட்டனர்.

இங்கே ஓர் ஐயம் எழலாம்! குறுந்தொகைப் பாடலிலுள்ள தொடரால் பெயர் பெற்றவரே இந்தப் புறநானூற்றுப் பாடலையும் பாடினார் என்பது எவ்வாறு தெரியும் என்ற ஐயம் இங்கே எழலாம் அல்லவா? இதற்கும் இதோ விடை இருக்கிறது:—

முதலில் ஓர் ஏர் உழவனாரைப் பற்றிப் பார்ப்போம். ஒரு வீட்டில் ஓர் ஓலைச் சுவடியில் ஆசிரியர் பெயர் இல்லாமல் இரண்டு ஆசிரியப் பாக்கள் ஒரே கையெழுத்தால் எழுதப்பட்டிருந்தன. அவற்றுள், ஒரு பாடல் அகப்பாடல்; மற்றொன்று புறப்பாடல். அந்தச் சுவடி சங்கத்தார் கைக்குச் சென்றது. சங்கத்தினர், அகப்பாடலில் உள்ள 'ஓர்ஏர் உழவன்' என்னும் சிறப்புத் தொடரைக் கொண்டு, 'ஓர் ஏர் உழவனார்' என அப்பாடலின் ஆசிரியருக்குப் பெயர் சூட்டி, அந்தப் பாடலைக் குறுந்தொகைத் தொகுப்பில் சேர்த்தனர். இரு பாடல்களுள் அகப்பாடல் போக எஞ்சியிருப்பது புறப்பாடல். அகப்பாடலோடு இணைந்திருந்த அந்தப் புறப்பாடலை, 'ஓர் ஏர் உழவனார்' என்னும் அதே ஆசிரியர் பெயருடன் பின்னர்ப் புறநானூற்றுத் தொகுப்பில் சேர்த்துவிட்டனர்,

அடுத்து,—தும்பி சேர் கீரனாரிடம் வருவோம். ஒரு வீட்டில் கீரனார் என்னும் ஆசிரியர் பெயருடன் ஓர் ஓலைச் சுவடியில் ஒரே கையெழுத்தில் ஏழு பாடல்கள் இருந்தன. அவற்றுள், அகப்பொருள் பாடல்கள் ஆறு, புறப்பொருள் பாடல் ஒன்று. அகப்பொருள் பாடல்கள் ஆறுக்குள் இரண்டில் தும்பி பற்றிய செய்தி இருந்தது. எனவே, மற்ற கீரனார்களினின்றும் வேறுபாடு தெரிவதற்காக, இந்தப் பாடல்களின் ஆசிரியராகிய கீரனாரைத் 'தும்பி சேர் கீரனார்' என்றாக்கி, ஆறு பாடல்களுள் ஐந்து குறியனவா யிருந்ததால் குறுந்தொகைத் தொகுப்பிலும், ஒன்று இடைப்பட்டதாயிருந்தால் நற்றிணைத் தொகுப்பிலும் சேர்த்தனர். ஆறுபோக எஞ்சியிருப்பது ஒரு புறப்பாடல். அதனை அதே ஆசிரியர் பெயருடன் பின்னர்ப் புறநானூற்றுத்தொகுப்பில் சேர்த்தனர். இதுதான் உண்மையாயிருக்கக் கூடுமல்லவா?

இவ்வாறன்றிச் சிலர் வேறு விதமாகவும் கூறலாம். ஓர்ஏர் உழவனார் என்பது, தொடரால் பெற்ற காரணப் பெய

அன்று; அவரது இயற்பெயரே. சம்பந்தர், சுந்தரர் முதலான வர்கள் தம் பாடல்களில் தம் பெயர்களை அமைத்திருப்பது போல, ஓர் ஏர் உழவனாரும் தமது பாடலில் தமது பெயர் அமையச் செய்தார்-என்று சிலர் கூறலாமல்லவா? இது பொருந்தாது. சம்பந்தர் சுந்தரர் முதலியோரின் பெயர்கள் முழு உருவத்தில் அப்படியே உள்ளன. ஆனால், ஓர் ஏர் உழவ னார் முதலியோரின் பெயர்கள் முழுஉருவத்தில் பெயர்களாக இல்லை; அரைகுறைத் தொடர்களாக உள்ளன; அத்தொடர் களைக் கொண்டு பெயர்களை உருவாக்க வேண்டியதாயிற்று; எனவே, இந்தக் கொள்கை பொருந்தாது.

நிற்க,-பாடல்களிலுள்ள தொடர்களால் பெயர்பெற்ற புல வர்களை அடிப்படையாகக் கொண்டு இதுகாறுங் கூறியவற் றால்,—நெடுந்தொகை, குறுந்தொகை, நற்றிணை என்னும் மூன்று அகப்பொருள் நூல்களும் முதலில் தொகுக்கப்பட்டன. என்பதும், புறப்பொருள் நூலாகிய புறநானூறு பின்னர் தொகுக்கப்பட்டது என்பதும், (ஆகக்கூடியும் நான்கும் ஏறக் குறைய ஒரேகாலத்தில் ஒரே இடத்தில் ஒரே பெரிய தலைமை யின் கீழ்த் தொகுக்கப்பட்டன என்பதும்) புலனாகலாம்.

### ஐந்து குறு நூறுகள்

இனி, எட்டுத் தொகை நூல்களுள் ஐந்தாவதான ஐங்குறு நூற்றிற்கு வருவோம். குறுகிய ஐந்நூறு பாடல்களைக் கொண் டது ஐங்குறுநூறு; அகப்பொருள் பற்றிய இது, மூன்றடிக்குக் குறையாத - ஆறடிக்கு மிகாத ஆசிரியப்பாக்களால் ஆனது. மேலே கூறிய நெடுந்தொகை, குறுந்தொகை, நற்றிணை என் னும் மூன்று அகப்பொருள் நூல்களும் உதிரிப் பாடல்களின் தொகுப்புக்கள். ஐங்குறுநூறு அத்தகையதன்று. நூறு-நூறு பாடல்கள் வீதம் புலவர் ஐவரால் பாடப்பெற்ற ($100 \times 5 = 500$) ஐந்நூறு பாடல்களைக் கொண்டதாதலின் இது தனிநூலாகத் தொகுக்கப்பெற்றது. மற்றும், முற்கூறிய மூன்று அகப்பொருள் தொகை நூல்களிலும், குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்னும் ஐந்திணைப் பாடல்களும் மாறி மாறி வரும். ஐங்குறு நூறோ, நூறு - நூறு பாடல்கள் வீதம் கொண்ட தனித்தனித் திணையாக-அதாவது - திணை வாரியாக அமைத்

துத் தொகுக்கப்பட்டதாகும். எனவேதான் இது தனித்தொகை நூலாயிற்று.

இந்த நூல், முற்கூறிய நானூறு பாடல்கள் கொண்ட நான்கு நூல்கட்கும் பின்னால் 'தொகுத்துப் பெயர் வைக்கப் பட்டதாகும். அவை நானூறு பாடல்கள் கொண்டிருந்ததால் இஃது ஐந்நூறு எனப்பட்டது; நீண்ட பாடல்களைக் கொண்ட அந் நூல்களினும் குறுகிய பாடல்களைக் கொண்டதால் இது 'குறு' என்னும் குறுகிய அடைமொழி பெற்றது; ஐந்து திணை களும் கலந்துவரும் அந்த நூல்களைப் போல் இல்லாமல், ஐந்து திணைகளும் தனித்தனியாக அமைக்கப்பெற்றதால் இஃது 'ஐங்குறுநூறு' எனப்பட்டது. நீண்ட நான்கு நூறுகளை நோக்க, ஐந்து குறுநூறு ஆயிற்று இது. இவ்வாறாக இதன் பெயர் அமைப்பைக் கொண்டே, இந்நூல், முற்கூறிய 'நான்கு நூல்களுக்குப் பின்னால் தொகுக்கப்பட்டுப் பெயரிடப்பட்டது என்பது புலனாகும்.

இந்நூலைத் தொகுத்தவர் - தொகுப்பித்தவர் பற்றியும் தொகுக்கப்பட்ட முறை பற்றியும், பின்னால் இந்நூலைப் பற்றிய தனித்தலைப்பில் விரிவாகக் காணலாம்.

### பதிற்றுப் பத்து

எட்டுத் தொகை நூல்களுள் ஆசிரியப்பாவால் ஆன ஆறு நூல்களுள் இன்னும் எஞ்சியிருப்பது 'பதிற்றுப்பத்து' ஆகும். இது புறப்பொருள் பற்றியது. பதிற்றுப்பத்து என்றால், பத்துப் பத்து ($10 \times 10 = 100$) – அதாவது – நூறு பாடல் கொண்ட நூல் என்பது பொருளாகும். இது, மற்றத் தொகை நூல்களைப் போல் இன்றி, குறிப்பிட்ட பத்துச் சேரமன்னர்களைப் பற்றிக் குறிப்பிட்ட பத்துப் புலவர்களால் பத்துப்பத்துப்பாடல் வீதம் பாடப்பெற்ற நூறு பாடல்களைக் கொண்டதாதலின் தனி நூலாகத் தொகுக்கப்பெற்றது. இது பற்றிய விவரங்களைப் பின்னால் தனித்தலைப்பில் விளக்கமாகக் காணலாம்.

### கலித் தொகை

எட்டுத் தொகையில் ஏழாவதாகிய கலித்தொகை, ஆசிரியப் பாவால் ஆன முற்கூறிய அறுநூல்கள் போலின்றிக் கலிப்பாவால் ஆனதாகையாலும், ஐந்து திணைகளையும் பற்றித் தனித்தனியே ஐவர் பாடிய தனித்தனியான ஐந்து பகுதிகளின்

திரட்டு ஆகையாலும், இது தனிநூலாகத் தொகுக்கப் பெற்றது. இந்நூல் தொடர்பான ஏனைய விவரங்களைப் பின்னால் தனித்தலைப்பில் அறியலாம்.

பரிபாடல்

எட்டுத் தொகை நூல்களுள் இறுதியானதாகிய பரிபாடல் என்னும் நூல், பரிபாட்டு என்னும் தனிப்பா வகையால் ஆனதாகையாலும், மிகக்குறைந்த அளவில் எழுபது பாடல் களே உடையதாதலாலும், இறுதியில் தனி நூலாகத் தொகுக்கப் பட்டது. இந்நூல் சார்பான விவரங்களையும் பின்னால் தனித் தலைப்பில் விளக்கமாக அறியலாம்.

இதுகாறும், எட்டுத்தொகை நூல்கள் தொகுக்கப்பட்ட வரலாற்றுமுறை குறித்து ஓரளவு ஆராய்ந்தோம். மதுரையில் தமிழ் ஆராய்ந்த சங்கத்தார்கள் இந்நூல்களைத் தொகுத்தனர் என்ற குறிப்பு, அகநானூற்றுப் பாயிரப் பாடலிலும் தெரிவிக்கப் பட்டுள்ளது. அது வருமாறு:—

'நின்ற நீதி வென்ற நேமிப்
பழுதில் கொள்கை வழுதியர் அவைக்கண்
அறிவுவீற் றிருந்த செறிவுடை மனத்து
வான்றோய் நல்லிசைச் சான்றோர் குழீஇ
அருந்தமிழ் மூன்றும் தெரிந்த காலை
ஆய்ந்த கொள்கைத் தீந்தமிழ்ப் பாட்டுள்
நெடிய வாகி அடிநிமிர்ந் தொழுகிய
இன்பப் பகுதி யின் பொருட் பாடல்
நனூ றெடுத்து நூனவில் புலவர்
களித்த மும்மதக் களிற்றி யானைநிரை
மணியொடு முடைந்த அணிகிளர் பவளம்
மேவிய நித்திலக் கோவை என்றாங்கு
அத்தகு பண்பின் முத்திற மாக
முன்னினர் தொகுத்த நன்னெடுந் தொகைக்கு...'

என்னும் பகுதியை ஊன்றி நோக்கின், நாம் மேலே தந்துள்ள தொகுப்பு வரலாற்று முறை பொருத்தமானது என்பது புல னாகும்.

இனி, எட்டுத் தொகை நூல்களுள் ஒவ்வொன்றினையும் தனித்தனியாக விதந்து ஆராய்வோம்.

---

# 14. நெடுந்தொகை

இந்நூல், இறையனார் அகப்பொருள் உரையில், 'நெடுந் தொகை நானூறு' என்னும் பெயரால், எட்டுத்தொகை நூல் களுள் முதலாவதாக நிறுத்தப்பெற்றுள்ளது. பேராசிரியர், நச்சினார்க்கினியர் போன்றோரும் இதனையே முதல் தொகை நூலாகக் குறிப்பிட்டுள்ளனர். இந்த நூல், நெடுந்தொகை என்னும் பெயருடன், அகம், அகப்பாட்டு, அகநானூறு என்னும் பெயர்களாலும் வழங்கப்பட்டு வருகிறது.

## நெடுந்தொகை

இந்த நூலுக்கு நெடுந்தொகை என்னும் பெயர் உண்மையை, இறையனார் அகப்பொருள் உரையாலும், "நெடுந்தொகை முதலாகிய தொகையெட்டும் என்றவாறு" - என்னும் பேராசிரியர் (செய்யுளியல் - 236) உரைப்பகுதி யாலும், "அவை நெடுந்தொகை முதலிய தொகை எட்டுமாம்' -என்னும் நச்சினார்க்கினியரின் (செய்யுளியல் - 236) உரைப் பகுதியாலும் அறியலாம் என்னும் செய்தி முன்னரே ஓரிடத்தில் அறிவிக்கப்பட்டுள்ளது. இந்த ஆட்சி இன்னும் சில இடங்களில் உள்ளது என்பதற்கு ஓர் எடுத்துக் காட்டாக நச்சினார்க்கினி யரின் உரைப்பகுதி யொன்றினைக் காண்பாம்: தொல்காப் பியம்-அகத்திணையியலில் 'நாடக வழக்கினும் உலகியல் வழக் கினும்' என்று தொடங்கும் (53 ஆம்) நூற்பாவின்கீழ், நச்சி னார்க்கினியர் எழுதியுள்ள,

"ஆசிரியமும் வெண்பாவும் வஞ்சியும் அகம் புறம் என்னும் இரண்டிற்கும் பொதுவாய் வருமாறு நெடுந் தொகையும் புற மும் கீழ்க்கணக்கும் மதுரைக் காஞ்சியும் பட்டினப்பாலையும் என்பனவற்றுட் காண்க"-

இந்த உரைப்பகுதியில், புறநானூற்றைப் 'புறம்' எனவும் அகநானூற்றை 'நெடுந்தொகை' எனவும் நச்சினார்க்கினியர் குறிப்பிட்டிருப்பது காண்க. இதற்கு இன்னும் தக்க அகச்சான்று வேண்டுமெனில், அகநானூற்றின் பாயிரப் பாடல்கள் இரண்டில்

காணலாம். 'நின்ற நீதி' என்று தொடங்கும் நீளமான பாயிரப் பாடலின் இடையேயுள்ள,

'முன்னினர் தொகுத்த நன்னெடுந் தொகைக்குக்
கருத் தெனப் பண்பினோர் உரைத்தவை நாடின்'

என்னும் பகுதியில், 'நெடுந்தொகை' என்னும் பெயர் அறிமுகப்படுத்தப் பட்டிருப்பது காண்க. மற்றும், 'வியமெல் லாம்' என்று தொடங்கும் பாயிரப் பாடலின் இறுதியிலுள்ள,

தொகையில் நெடியதனைத் தோலாச் செவியான்
வகையி னெடியதனை வைப்பு'

என்னும் பகுதியிலுள்ள 'தொகையில் நெடியதனை' என்பதில் 'நெடுந்தொகை' என்னும் பெயர் மாற்றுருவத்தில் மறைந்து கொண்டிருப்பது காண்க. இந்த நெடுந்தொகை என்னும், பெயர், நீண்ட நாளாக, மக்களிடையேயும் ஆட்சியில் இருந் திருக்கிறது. இதனை, அகநானூற்று ஓலைச் சுவடி ஒன்றின் இறுதியில் எழுதப்பட்டுள்ள,

'ஆறு நாட்டுக்குச் சேர்ந்த பெரும் பழனையில் இருக்கும் நல்லையப் புலவர் மகன் பொன்னையன் நெடுங்தொகை.'

என்னும் பகுதியால் அறியலாம். அஃதாவது, இந்த ஓலைச் சுவடி பொன்னையன் என்பவருடையது, அதில் நூற்பெயர் 'நெடுந்தொகை' எனக் குறிக்கப்பட்டுள்ளது. பொன்னையனது ஊராகிய 'பெரும் பழனை' என்பது, திருநெல்வேலி மாவட் டத்தைச் சேர்ந்த 'பெரும் பழஞ்சி' என்ற ஊராயிருக்கலாம் என்று கருதப்படுகிறது.

நெடுங் தொகை நானூறு

இந்த நூல் இறையனார் அகப்பொருள் உரையில் 'நெடுந் தொகை நானூறு' என எண்ணளவுடன் குறிப்பிடப்பட்டி ருப்பது போலவே, அகநானூற்றின் இறுதியிலுள்ள பாயிரச் செய்யுளை அடுத்திருக்கிற உரைப்பகுதியிலும் கூறப்பட்டுள்ளது.

''நெடுந்தொகை நானூறும் கருத்தினோடு முடிந்தன''
இவை பாடின கவிகள் நூற்று நாற்பத்தைவர்.''—

என்பது அந்தப் பகுதி. 'நெடுந்தொகை நானூறு' என்னும் பெயர் பரவலாக வழக்காற்றில் இருந்தது என்பதற்கு இஃது ஓர் எடுத்துக் காட்டாகும்.

அகநானூறு:

நெடுந்தொகை, நானூறு பாட்டு உடைமையால், 'நெடுந் தொகை நானூறு' என முற்காலத்தில் அழைக்கப்பட்டது போல, 'அகநானூறு' எனப் பிற்காலத்தில் அழைக்கப்படலா யிற்று. பழைய அகநானூற்று ஓலைச்சுவடி யொன்றில், இறுதி யாகப் பாயிரச் செய்யுட்களும் முடிந்த பிறகு, 'அகநானூறு முடிந்தது' எனப் பொறிக்கப்பட்டுள்ளது. எனவே, பல நூற்றாண்டுகட்கு முன்பே, 'அகநானூறு' என அழைக்கும் வழக்காறு தோன்றிவிட்டது என உணரலாம்.

அகம்:

இனி அகநானூறு 'அகம்' என்னும் சுருக்கப் பெயரால் சுட்டப்பட்டிருப்பதற்குச் சில எடுத்துக்காட்டுக்கள் வருமாறு:— தொல்காப்பியம் - உவம இயலின் இறுதி (37 - ஆம்) நூற்பா வின்கீழ்ப் பேராசிரியர் வரைந்துள்ள,

"... அவையிற்றை எவ்வாறு கோடுமெனின், அவைகள் தாம் அகத்துள்ளும் பிற சான்றோர் செய்யுளுள்ளும் வருதலிற் குற்ற மாகா ..."—

என்னும் உரைப்பகுதியில் நெடுந்தொகை நூல் 'அகம் எனப் பெயர் வழங்கப்பட்டுள்ளமை காண்க. உரையிடையே (உதாரணமாக) மேற்கோள் செய்யுட்களை நூற்பெயருடன் எடுத்துக் காட்டுவதில் தலைசிறந்தவர் நச்சினார்க்கினியர். இவர் ஏறக்குறையப் பத்து இடங்களிலும் அகநானூற்றை 'அகம்' என்னும் பெயரால் வழங்கியுள்ளார் எனலாம். எடுத்துக் காட்டாகத் தொல்காப்பிய அகத்திணையியல் உரையி லிருந்து மூன்று இடங்களைக் காண்போம், 'கொண்டுதலைக் கழியினும்' என்று தொடங்கும் (தொல்-அகம்-15) நூற்பாவின் கீழ், 'வேனிற் பாதிரிக் கூனி மாமலர்' என்று தொடங்கும் அக நானூற்றுப் (257) பாடலை முழுதும் தந்து, அந்தப் பாடலின்

கீழ்) "இது கொண்டுதலைக் கழிதற்கண் தலைவன் நடையை வியந்தது இஃது அகம்"—

என அகநானூற்றை 'அகம்' என்று சுட்டியுள்ளார். அடுத்து –'தன்னும் அவனும் அவளுஞ் சுட்டி, என்று தொடங்கும் (தொல் - அகம் - 36) நூற்பாவின்கீழ், 'ஈன்று புறந்தந்த எம்மும் உள்ளாள், என்று தொடங்கும் அகநானூற்றுப் (35) பாடலை முழுதும் தந்து, அப்பாடலின்கீழ்,

"இவ்வகம் (அகம்) தலைவன் மிகவும் அன்பு செய்க வென்று தெய்வத்திற்குப் பராஅயது"—

என நெடுந்தொகைப் பாடலை 'அகம்'எனக் கூறியுள்ளார். இன்னும் ஒன்றே ஒன்று! 'தலைவரும் விழும நிலையெடுத் துரைப்பினும்' என்று தொடங்கும் (தொல்-அகம்-39) நூற்பா வின் கீழ், 'வேலும் விளங்கின வினையரு மியன்றனர்' என்று தொடங்கும் அகநாநூற்றுப் (259) பாடலை முழுதும் தந்து, அதன் கீழ்,

"இவ் வகம் போக்குதற்கண் முயங்கிக் கூறியது"—

என அகநானூற்றை 'அகம்' என்று குறிப்பிட்டுள்ளார். இவ்வாறு இன்னும் பல இடங்கள் உள. எட்டுத் தொகை நூல் கள் இன்னின்ன என்று கூறுகிற,

'நற்றிணை நல்ல குறுந்தொகை ஐங்குறுநூறு
ஒத்த பதிற்றுப்பத் தோங்கு பரிபாடல்
கற்றறிந்தோர் ஏத்தும் கலியோடுஅகம்புறம் என்று
இத்திறந்த எட்டுத் தொகை'

என்னும் பழைய பாடலிலும் 'அகம்' எனக் குறிப்பிடப்பட்டுள் ளமை காண்க. அகநானூற்றின் பாயிரப் பகுதியின் இறுதியில் அந்நூலின் தொகுப்பு முறையைப் பற்றிக் கூறுகிற,

'பாலை வியமெல்லாம் பத்தாம் பனி நெய்தல்
நாலு நளி முல்லை நாடுங்கால்—மேலையோர்
தேறும் இரண்டெட்டிவை குறிஞ்சி செந்தமிழின்
ஆறு மருதம் அகம்'

என்னும் பாடலும் 'அகம்' எனக் குறிப்பிட்டிருப்பது காண்க

எட்டுத்தொகை நூல்களுள் ஆறு நூல்கள் அகத்திணை பற்றியனவாயிருப்பினும், இந்நூலை மட்டுமே 'அகம்' எனக் குறிப்பிடுவதிலிருந்து, இந்நூலின் தலைமையும் முதன்மையும் நன்கு விளங்கும். உரையாசிரியர்கள் அகத்திணைகள் ஐந்தையும் விளக்குவதற்கு, மற்ற அகப்பொருள் நூல்களைவிட அகநானூற்றிலிருந்தே மிகுதியாக மேற்கோள்கள்காட்டியிருப்பதும் ஈண்டு எண்ணத் தக்கது.

அகப் பாட்டு:

இனி, நெடுந்தொகை 'அகப்பாட்டு' என்னும் பெயரால் வழங்கப்பட்டுள்ளமைக்குச் சில சான்றுகள் காண்போம். நச்சினார்க்கினியர் முப்பதுக்கும் மேற்பட்ட இடங்களில்,அகப்பாட்டு என்னும் பெயரைக் கையாண்டுள்ளார். தொல்காப்பியம் – பொருளதிகாரத்திலுள்ள முதல் ஐந்து இயல்களுக்கு நச்சினார்க்கினியர் வரைந்துள்ள உரைப்பகுதிகளிலிருந்து இயலுக்கு ஒன்று விதமாக ஐந்து சான்றுகள் காண்போம்

(1) அகத்திணையியலில் 'புணர்த்தல் பிரிதல் இருத்தல் இரங்கல்,என்றுதொடங்கும் (14-ஆம்) நூற்பாவின்கீழ், 'கானலும் கழறாது, கழியும் கூறாது, என்னும் அகநானூற்றுப் (170 ஆம்) பாடலைத்தந்து அதன் கீழே, இவ் வகப்பாட்டு நெய்தல்; இரங்கல் உரிப்பொருட்டாயிற்று''— என்று கூறியுள்ளார்.

(2) புறத்திணையியலில் 'வெறியறி சிறப்பின் வெவ்வாய் வேலன்' என்று தொடங்கும்(5ஆம்) நூற்பாவின்கீழ், 'பல்லிதழ் மென்மலர்' என்னும் அகநானூற்றுப்(109) பாடலைச் சுட்டி

'பல்லிதழ் மென்மலர் என்னும் அகப்பாட்டினுள் 'அறனில் வேந்தன் ஆளும், வறனுறு குன்றம் பல விலங்கினவே எனக் காட்டுத் தலைவனை நாட்டுத்தலைவன் பெயராற் கூறினார், —என்று கூறியுள்ளார்.

(3) களவியலில் 'களவலராயினும் என்று தொடங்கும் (24, -ஆம்) நூற்பாவின் கீழ், 'உரு முரறு கருவிய' என்னும்அகநானூற்றுப் (158) பாடலைச் சுட்டிக் காட்டி,

'உரு முரறு கருவிய' என்னும் அகப்பாட்டினுள் 'மிடையூர்

பிழியக் கண்டனன்' இவனென 'வலையல்வாழி வேண் டன்னை' என்றது, தலைவி புறத்துப் போகக் கண்டு செவிலி கூறிய தனைத் தோழி கொண்டு கூறினாள்...''—எனவரைந்துள்ளார்

(4) கற்பியலில், 'வினைவயிற் பிரிந்தோன்' என்று தொடங்கும் (53 ஆம்) நூற்பாவின் கீழ், 'இருந்த வேந்தன்' என்று தொடங்கும் அகநானூற்றுப் (384) பாடலைக் குறிப்பிட்டு அதிலிருந்து ஏழு அடிகளையும் எடுத்துக் காட்டி,

'இருந்த வேந்தன் அருந்தொழில் முடித்தென' என்னும் அகப்பாட்டினுள், 'புரிந்த காதலொடு பெருந்தேர் யானும்...... உரைமதி வாழியோ வலவ' (7 அடிகள்) என உள்ளம் போல உற்றுழி உதவிற்று எனத் தலைவன் கூறியவாறு காண்க''—என்று கூறியுள்ளார்.

(5) பொருளியலில் 'நோயும் இன்பமும்' என்று தொடங்கும் (2 ஆம்) நூற்பாவின்கீழ், 'அன்றவண் ஒழிந்தன்றும் இலையே' என்னும் அகநானூற்றுப்'' (19-ஆம்) பாடலிலிருந்து ஏழு அடிகளை எடுத்துக் காட்டி,

'அன்றவண் ஒழிந்தன்றும் இலையே' என்னும் அகப்பாட்டினுள், 'வருந்தினை வாழியென் நெஞ்சே ... ... செல்லினிச் சிறக்கநின் னுள்ளம்' (7 அடிகள்) என அறிவுடையது போல் அழுகைபற்றிக் கூறிற்று''—என்று வரைந்துள்ளார்.

இவ்வாறு இன்னும் சில நூல்களிலிருந்து பல சான்றுகள் தரலாம். 'அகநானூற்றை 'அகப்பாட்டு' என வழங்கும் பழக்கம், தொல்காப்பியத்தின் வாயிலாகக் கற்றுக் கொள்ளப் பட்டது எனக் கூறலாம். தொல்காப்பியம் – செய்யுளியலில் 'அவைதாம் பாஅ வண்ணம் தாஅ வண்ணம்' என்று தொடங்கும் (205-ஆம்) நூற்பாவின் இடையே உள்ள 'அகப்பாட்டு வண்ணம், புறப்பாட்டு வண்ணம்' என்னும் பகுதியிலும், 'அகப் பாட்டு வண்ணம், முடியாத் தன்மையின் முடிந்ததன் மேற்றே', என்னும் (செய்யுளியல் – 215) நூற்பாவிலும், 'அகப்பாட்டு என்னும் பெயர் அறிமுகப்படுத்தப்பட்டுள்ளதன்றோ? இதைக் கொண்டு, அகநானூற்றை 'அகப்பாட்டு' எனக் கூறும் வழக்காற்றைப் பிற்காலத்தார் கற்றுக் கொண்டிருக்கலாம் அல்லவா?

மூன்று பிரிவுகள்:

நெடுந்தொகை, நெடுந்தொகை நானூறு, அகம், அகப்பாட்டு, அகநானூறு என்றெல்லாம் பெயர் வழங்கப்படு கின்ற நானூறு பாடல்களைக் கொண்ட இந்நூல் மூன்று பிரிவு களாக வழங்கப்படுகின்றது. அப்பிரிவுகளின் பெயர்கள்: களிற்றி யானை நிரை, மணிமிடை பவளம், நித்திலக் கோவை என்பன.

இந்நூலின் நானூறு பாடல்களுள் முதல் 120 பாடல்கள் 'களிற்றியானை நிரை' என்னும் தனிப்பெயரிலும், 121 முதல் 300 வரையும் உள்ள 190 பாடல்கள் 'மணிமிடை பவளம்' என் னும் தனிப்பெயரிலும், 301 முதல் 400 வரையும் உள்ள இறுதி நூறு பாடல்கள் 'நித்திலக்கோவை' என்னும் தனிப் பெயரிலும் தொகுக்கப்பட்டுள்ளன. இது சார்பான செய்திகளைத் தெரிந்து கொள்ளும் வகையில், அகநானூற்றின் இறுதியில் பாயிரம் என்னும் பெயரில் இருபத்தேழு அடிகள் கொண்ட அகவல் பா ஒன்றும், அதைத் தொடர்ந்து உரைநடைப் பத்திகள் மூன்றும் காணப்படுகின்றன. அவை நமது ஆராய்ச்சிக்கு மிகவும் இன்றி யமையாதன வாதலின், அதிலுள்ளாங்கு அப்படியே ஈண்டு வருமாறு:—

[பாயிரம்]

“நின்ற நீதி வென்ற நேமிப்
பழுதில் கொள்கை வழுதியர் அவைக்கண்
அறிவுவீற் றிருந்த செறிவுடை மனத்து
வான் றோய் நல்லிசைச் சான்றோர் குழீஇ
அருந்தமிழ் மூன்றும் தெரிந்த காலை
ஆய்ந்த கொள்கைத் தீந்தமிழ்ப் பாட்டுள்
நெடிய வாகி அடிநிமிர்ந் தொழுகிய
இன்பப் பகுதி யின்பொருட் பாடல்
நானூ றெடுத்து நூனவில் புலவர்
களித்த மும்மதக் களிற்றி யானை நிரை
மணியொடு மிடைந்த அணிகிளர் பவளம்
மேவிய நித்திலக் கோவையென் றாங்கு
அத்தகு பண்பின் முத்திற மாக

"முன்னினர் தொகுத்த நன்னெடுந் தொகைக்குக்
கருத்தெனப் பண்பினோர் உரைத்தவை நாடின்
அவ்வகைக் கவைதாம் செவ்விய வன்றி
அரியவை யாகிய பொருண்மை நோக்கிக்
கோட்ட மின்றிப் பாட்டொடு பொருந்தத்
தகவொடு சிறந்த அகவல் நடையால்
கருத்தினி தியற்றி யோனே பரித்தேர்
வளவர் காக்கும் வளநாட் டுள்ளும
நாடெனச் சிறந்த பீடுகெழு சிறப்பிற்
கெடலருஞ் சிறப்பின் இடையள நாட்டுத்
தீதில் கொள்கை மூதூ ருள்ளும்
ஊரெனச் சிறந்த சீர்கெழு மணக்குடிச்
செம்மை சான்ற தேவன்
தொன்மை சான்ற நன்மை யோனே."

"இத் தொகைக்குக் கருத்து அகவலாற் பாடினான், இடையள நாட்டு மணக்குடியான் பால்வண்ண தேவனான வில்லவதரையன். நெடுந்தொகை நானூறும் கருத்தினோடு முடிந்தன. இவை பாடின கவிகள் நூற்று நாற்பத்தைவர்.

இத் தொகைப் பாட்டிற்கு அடியளவு சிறுமை பதின் மூன்று; பெருமை முப்பத் தொன்று. தொகுப்பித்தான் பாண்டியன் உக்கிரப் பெருவழுதி. தொகுத்தான் மதுரை உப்பூரி குடிகிழார் மகனாவான் உருத்திர சன்மன் என்பான்.

'வண்டுபடத் ததைந்த கண்ணி' என்பது முதலாக, 'நெடு வேண் மார்பின்' என்பது ஈறாகக் கிடந்த பாட்டு நூற்றிரு பதும் களிற்றியானை நிரை யெனப்படும். இப்பெயர் காரணத் தாற் பெற்றது; இது பொருட் காரணமாகக்கொள்க. 'நாநகை' யுடைய நெஞ்சே' என்பது முதலாக 'நாள் வலை முகந்த' என்பது ஈறாகக் கிடந்த பாட்டு நூற்றெண்பதும் மணிமிடை பவளம் எனப்படும். இதுவுங்காரணப் பெயர்; என்னை, செய் யுளும் பொருளும் ஒவ்வாமையால். 'வறனுறு செய்தி' என்பது முதலாக 'நகை நன் றம்ம' என்பது ஈறாகக் கிடந்த பாட்டு நூறும் நித்திலக் கோவை யெனப்படும்; செய்யுளும் பொருளும் ஒக்குமாகலான்."—

மேலுள்ளவற்றால் அறியப்படும் செய்திகளாவன:-'பாண்டியரது அவைக்களத்தில் புலவர் பெருமக்கள் குழுமி முத்தமிழ் ஆய்ந்தனர்; அகத்திணை பற்றிய பாடல்களுள் நீண்ட பெரிய நானூறு பாடல்களை 'நெடுந்தொகை' என்னும் பெயரால் தொகுத்தனர், அந்த நெடுந்தொகை களிற்றியானைநிரை, மணிமிடை பவளம், நித்திலக் கோவை என்னும் மூன்று உட்பிரிவுகளை உடையது. நெடுந்தொகையின் கருத்தை,இடையள நாட்டு மணக்குடியைச் சேர்ந்த பால்வண்ண தேவனான வில்லவதரையன் என்பவர் பாடினார்'-என்னும் செய்தியைப் பாயிரப் பாடலால் அறியலாம். 'தொகைக்குக் கருத்து அகவலால் பாடினான்' என்றால், ஒன்றும் புலப்படவில்லை. அகவல் என்பது இந்தப்பாயிரப் பாடலைக் குறிக்கின்றதா, அல்லது வேறு எதையாவது குறிக்கின்றதா என்பது தெரியவில்லை. அது தெரியா விடினும். அகநானூறு மூன்று பிரிவாகத் தொகுக்கப்பட்டது என்னும் செய்தி இந்தப் பழம் பாடலால் நன்கு விளங்குகின்றது. நமக்கு அது போதும்.

அடுத்து,-பாயிரப் பாடலைத் தொடர்ந்து உள்ள மூன்று பத்திகளுள் மூன்றாவது பத்தியில், அகநானூற்றின் மூன்று பிரிவுகளுக்கும் உரிய பெயர்க் காரணங்கள் கூறப்பட்டுள்ளமை ஆராய்ச்சிக்கு உரியது. இனி, மூன்றினையும் முறையே ஒவ்வொன்றாக ஆய்வோம்:

---

# 15. களிற்றியானை நிரை

அகநானூற்றுப் பாயிரப் பாடலின் பின்னால், ‘‘வண்டு படத் ததைந்த கண்ணி’ என்பது முதலாக ‘நெடுவெண் மார்பின்’ என்பது ஈறாகக் கிடந்த பாட்டு நூற்றிருபதும் களிற்றியானை நிரை யெனப்படும். இப்பெயர் காரணத்தாற் பெற்றது; இது பொருட் காரணமாகக் கொள்க’’-எனக் களிற்றியானை நிரையைப் பற்றிக் கூறப்பட்டுள்ளது. இது பொருள் காரணமாகப் பெற்ற பெயராம். இந்த விளக்கம் போதுமானதாக இல்லை.

களிறு=ஆண் யானை; நிரை=அணி, வரிசை. களிற்று யானை நிரை என்றால், ஆண் யானைகளின் அணி என்று பொருளாம். ஆண் யானைகளின் அணி எடுப்பான தோற்றத்துடன் இருக்கும். அதுபோல, எடுப்பான நடையும் மிடுக்கான கருத்தும் கொண்ட பாடல்களின் தொகுப்பு களிற்றியானை என வழங்கப்பட்டது. உடலுக்கு நன்மை பயக்கும் சுக்கு, மிளகு திப்பிலி என்னும் மூன்று மருந்துச் சரக்குகளின் தொகுப்பாகிய ‘திரிகடுகம்’ என்னும் பெயர், உயிருக்கு நன்மையளிக்கும் மும் மூன்று கருத்துக்கள் கொண்ட பாடல்களின் தொகுப்பாகிய ஒரு நூலுக்கு உவமையாகு பெயராய் வழங்கப்படுவது போன்றதே களிற்றியானை நிரை என்னும் வழக்காறு மாகும். மற்றப்படி, களிற்றியானையைப் பற்றிப் பேசும் பாடல்கள் மிகுதியாய் இருப்பதால் இப் பெயர் பெற்றது என்று கூற முடியாது, அடுத்த மணிமிடை பவளம் என்னும் தொகுதியிலும் களிற்றியானை பற்றி மிகுதியாகப் பேசப் பட்டுள்ளது. நூல் தொகுக்கும்போது, முதலில் நூற்றிருபது பாடல்கள் சீர் செய்யப்பட்டிருக்கும்; எனவே, அப் பகுதிக்கு ‘முதல் பாகம்’ என்று பெயர் கொடுப்பதற்குப் பதிலாக‘‘களிற்றியானை நிரை என்னும் எடுப்பான—பொருள் பொதிந்த பெயர் வழங்கப் பெற்றது. ‘களிற்றியானை, என்னும் வழக்காறு பழைய நூல்களில் பல இடங்களில், உள்ளமை ஈண்டு எண்ணத்தக்கது. பதிற்றுப்பத்தில் மூன்றாம் பத்தின் பதிகப் பாட்டின் இடையே,

‘ கருங் களிற் றியானைப் புணர்நிரை நீட்டி
இருகடல் நீரும் ஒரு பகல் ஆடி’

எனக் ‘களிற்றியானை நிரை’ என்னும் முழுத்தொடரும் அமைந்திருப்பது கண்டு மகிழ்க.

களிற்றியானை நிரை என்பது அகநானூற்றின் ஒரு பிரிவாக இருப்பினும், ஒரு தனி நூல் போலவே அது மதிக்கப் பட்டுள்ளது. நச்சினார்க்கினியர் தமது உரையில் அகநானூற் றுப் பாடல்களை மேற்கோளாக எடுத்துக் காட்டுங்கால் அகம், அகப்பாட்டு என்றெல்லாம் நூற்பெயரைக் குறிப்பிடுவ தல்லாமல், பல இடங்களில் ‘களிற்றியானை நிரை’ என்னும் பெயரையும் குறிப்பிட்டுள்ளார். மேலெழுந்தவாரியாகப் பார்த்ததற்கே, பத்து இடங்களுக்கு மேல் அவர் உரையில் இப் பெயர் எடுத்தாளப்பட்டிருப்பது தெரிகிறது. எடுத்துக்காட்டாக இரண்டு வருமாறு: –

(1) தொல்காப்பியம் அகத்திணையியலில் ‘முதல் கரு உரிப்பொருள் என்ற மூன்றே’ என்று தொடங்கும் (3 – ஆம்) நூற்பாவின் கீழ், ‘வண்டுபடத் ததைந்த கண்ணி’ என்று தொடங்கும் அகநானூற்று முதல் பாடல் முழுவதையும் தந்து, அதன் கீழே, “இக் களிற்றியானை நிரையுள், பாலைக்கு முதலும் கருவும் வந்து உரிப் பொருளாற் சிறப்பெய்தி முடிந் தது.” – என்று நச்சினார்க்கினியர் எழுதியுள்ளார்.

(2) ‘நடுவு நிலைத் திணையே நண்பகல் வேனிலொடு’ என்று தொடங்கும் (தொல் – அகம் – 9) நூற்பாவின் கீழ் ‘கள்ளியங் காட்ட புள்ளியம் பொறிக்கலை’ என்று தொடங். கும் அகநானூற்றின் தொண்ணூற் றேழாவதுபாடல் முழுவ தையும் தந்து, அதன் கீழே, “இக் களிற்றியானை நிரையுள் இருவகை வேனிலும் பாலைக்கண் வந்தன.” – என்று அவர் வரைந்துள்ளார்.

இந்த அமைப்பை நோக்குங்கால் களிற்றியானை நிரையை ஒரு தனித் தொகை நூலாகவே கூறலாம் போலும்!

# 16. மணிமிடை பவளம்

மணிமிடை பவளம் என்னும் பிரிவைப் பற்றி, அகநானூற்றுப் பாயிரப் பாடலின் பின்னால், 'நா நகையுடைய நெஞ்சே' என்பது முதலாக, 'நாள் வலை முகர்ந்த' என்பது ஈறாகக் கிடந்த பாட்டு நூற்றெண்பதும் மணிமிடை பவளம் எனப் படும். இதுவுங் காரணப் பெயர்; என்னை, செய்யுளும் பொருளும் ஒவ்வாமையால்.''-எனக் கூறப்பட்டுள்ளது. இதில் கூறப் பட்டுள்ள பெயர்க் காரணம் தெளிவாக இல்லை என்று கூறுவதனினும் பொருத்தமாக இல்லை என்றே கூறிவிடலாம்.

மணி என்பது நீலமணி; இது நீலநிறமாய் இருக்கும். பவளம் சிவப்பாய் இருக்கும். நீலமும் சிவப்பும் எதிர் மாறானவை என்பதால், மணி மிடை பவளம் என்னும் பெயர் கொண்ட இந்த நூலில் செய்யுளும் பொருளும் ஒவ்வாமல் இருப்பதாகக் கருதி, அந்தக் காரணத்தினாலேயே இந்தப் பெயர் வைக்கப்பட்டது எனப் பாயிரப் பகுதியை எழுதியவர் கூறியுள்ளார். மணிமிடை பவளம் என்றால், - நீலமணி கலந்த பவளம் - நீல மணியோடுகலந்த பவளம்- அஃதாவது நீல மணியும் பவளமும் மாறிமாறிக் கலந்து கோத்த மாலை என்று பொருளாம். இந்த விளக்கத்தின் உதவிக்கு வேறெங்கும் செல்ல வேண்டியதில்லை; அகநானூற்றிலேயே இரண்டு இடங்களில் இந்தவிளக்கம் இடம் பெற்றுள்ளது. அவையாவன:

''அரக்கத் தன்ன செந்நிலப் பெருவழிக்
காயாஞ் செம்மல் தா அய்ப் பலவுடன்
ஈயன் மூதாய் வரிப்பப் பவளமொடு
மணிமிடைந் தன்ன குன்றம் கவைஇய''

என்னும் அகநானூற்றுப் (14-ஆம்) பாடல் பகுதியில், நீல நிற மான காயாம் பூக்கள் சிவந்த தம்பலப் பூச்சிகளுடன், வழியில் கலந்து கிடக்கும் காட்சி விவரிக்கப்பட்டுள்ளது. இதே காட்சி விளக்கம்,

''மணிமிடை பவளம் போல அணிமிகக்
காயாஞ் செம்மல் தாஅய்ப் பலவுடன்
ஈயல் மூதாய் ஈர்ம்புறம் வரிப்ப''

என்னும் அகநானூற்றுப் (304-ஆம்) பாடல் பகுதியிலும் இடம் பெற்றுள்ளது. முதல் பாட்டிலாயினும் 'பவளமொடு மணி மிடைந்தன்ன' என்ற தொடர் உள்ளது; இரண்டாம் பாட்டிலோ 'மணி மிடை பவளம்' என்னும் தொடர் அப்படியே உள்ளது. இந்தத் தொடரின் அறிமுகத்தைக் கொண்டே மணி மிடை பவளம், என்னும் பெயரைக் கற்றுக் கொண்டிருக்கக் கூடும். ஆனால், இங்கேயுள்ள வியப்பிற்கு உரிய செய்தி என்னவெனில், மணிமிடை பவளம் பற்றிப் பேசும் அகநானூற்றுப் பாடல்கள் இரண்டுமே, 'மணிமிடை பவளம்' என்னும் தொகுப்பினுள் இல்லாததுதான்! மேலே காட்டியுள்ள இரண்டனுள் முதல் பாட்டு களிற்றியானை நிரையிலும், இரண்டாவது பாட்டு நித்திலக் கோவையிலும் உள்ளன. இதற்கு என்ன செய்வது!

ஆக, அகநானூற்றின் நடுவேயுள்ள குறிப்பிட்ட நாற்றெண்பது பாடல்களின் தொகுப்புக்கு, 'மணி மிடை பவளம்' எனப் பெயர் வைத்ததற்கு ஏதாவது ஒரு காரணம் இருக்கவேண்டும்; இல்லாவிடினும், நாம் ஏதாவதொரு காரணம் – தக்கதாய்ச் சொல்லியாக வேண்டும். நீலமணியும் செம்பவளமும் ஆகிய இருவேறு வகைப்பட்ட மணிகளால் ஆன மாலை போல, நடையாலும் கருத்து வெளிப்பாட்டாலும், இரு வேறு வகைப் பட்ட பாக்களின் தொகுப்புக்கு 'மணிமிடை பவளம்' என்னும் பெயர் உவமையாகு பெயரால் வழங்கப்பட்டது என்பதாக ஒரு காரணம் சொல்லலாம். இந்தக் கண்கொண்டு மணிமிடை பவளச் செய்யுட்களை நுணுகி நோக்கி ஆராய்வார்க்கு உண்மை புலப்படாமற் போகாது. பிற்காலத்தில் தமிழ்ச் சொற்களும் வடமொழிச் சொற்களும் மாறிமாறிக் கலந்து எழுதப்பட்ட நடை, 'மணிப் பவள நடை' (மணிப் பிரவாளம்) என வழங்கப்பட்டது. ஈண்டு ஒப்பு நோக்கற் பாலது.

அகநானூறு தொகுத்தவர், முதலில் நூற்றிருபது பாடல்களைச் சீர்செய்து 'முதல் பாகம்' போலக் கருதிக் களிற்றி யானை நிரை என்னும் பெயர் ஈந்தார். பின்னர், அடுத்த நாற்றெண்பது பாடல்களை ஆய்வு செய்து ஒழுங்கு படுத்தி 'இரண்டாம் பாகம்' போலக் கருதி மணி மிடை பவளம் என்னும் பெயர் சூட்டினார்.

களிற்றி யானை நிரையைப் போலவே மணிமிடை பவளமும் ஒரு தனி நூல் போலவே மதிக்கப்பட்டது. நச்சினார்க்கினியர், தமது உரையில், களிற்றியானை நிரை என்னும் பெயரைவிட மணிமிடை பவளம் என்னும் பெயரை மிகுதியாகக் குறிப்பிட்டுள்ளார் எனலாம். எடுத்துக் காட்டாக இரண்டு இடங்கள் வருமாறு:–

(1) தொல்காப்பியம் அகத்திணையியலில், 'திணை மயக் குறுதலும் கடிநிலை யிலவே' என்று தொடங்கும் (12 ஆம்) நூற்பாவின் கீழ், 'துஞ்சுவது போல விருளி விண்புக' என்று தொடங்கும் அகநானூற்றுப் (139-ஆம்) பாடலை முழுதும் தந்து, அதன் கீழே, "இம் மணிமிடைபவளத்துப் பாலைக்கண் முன்பனியும் வைகறையும் ஒருங்கு வந்தன"-என நச்சினார்க்கினியர் எழுதியுள்ளார்.

(2) தொல்காப்பியம் களவியலில் 'களவல ராயினும் காம மெய்ப் படுப்பினும்' என்று தொடங்கும் (24-ஆம்) நூற்பாவின் கீழ், 'இரும் புலி தொலைத்த பெருங்கை வேழத்து' என்று தொடங்கும் அகநானூற்றுப் (272-ஆம்) பாடல் முழுவதையும் தந்து, அதன் கீழே, "இம் மணிமிடை பவளத்துத் தலைவனைச் செவிலி கண்டு முருகெனப் பராவினமை தோழி கொண்டு கூறினாள்."- என்று அவர் வரைந்துள்ளார்.

இத்தகைய வழக்காற்றைக் கொண்டு, மணிமிடை பவளத்தையும் ஒரு தனித் தொகை நூலாகக் கூறலாமல்லவா?

---

# 17. நித்திலக் கோவை

மூன்றாவது பிரிவாகிய நித்திலக் கோவையைப் பற்றி, அகநானூற்றுப் பாயிரச் செய்யுளின் பின்னால், "வறனுறு செய்தி' என்பது முதலாக, 'நகை நன்றம்ம' என்பது ஈறாகக் கிடந்த பாட்டு நூறும் நித்திலக் கோவை யெனப்படும்; செய்யுளும் பொருளும் ஒக்குமாகலான்"-என்று வரையப் பட்டுள்ளது. இந்தப் பெயர்க் காரணமும் தெளிவாயில்லை.

நித்திலம்=முத்து; கோவை=கோக்கப்பட்ட மாலை; நித்திலக் கோவை=முத்து மாலை. ஓரின மணியாகிய முத்துக் களால் கோக்கப்பட்ட முத்து மாலை போல, நடையாலும் கருத்து வெளிப்பாட்டாலும் ஒத்த இயல்புடைய பாக்களால் தொகுக்கப்பட்ட நூலுக்கு 'நித்திலக் கோவை' என்னும் பெயர் உவமையாகு பெயராய் வழங்கப் பெற்றுள்ளது. மணி மிடை பவளம்போல இருவேறு வகையின்றி ஓரினமாய் இருத்தலின் '...பாட்டு நூறும் நித்திலக் கோவை யெனப்படும்; செய்யுளும் பொருளும் ஒக்குமாகலான்'- எனப் பாயிரப் பகுதியில் கூறப் பட்டுள்ளது; அஃதாவது, ஏதோ ஒரு வகையில் ஒற்றுமைகாட் டப் பாயிரப்பகுதி முயன்றுள்ளது.

அகநானூறு தொகுத்தவர், முதல் முன்னூறு பாடல்களை யும் ஒழுங்கு செய்து 'இரண்டு பாகங்கள்' போல் களிற்றி யானை நிரை, மணிமிடை பவளம் என்னும் பெயர்கள் தந்து பிரிவினை செய்த பின்னர், இறுதி நூறு பாடல்களையும் ஆய்ந்து சீர்செய்து, 'மூன்றாம் பாகம்' போலக் கருதி, நித்திலக் கோவை என்னும் பெயர் வழங்கினார்.

களிற்றியானை நிரை, மணிமிடை பவளம் ஆகியவற்றைப் போல, நித்திலக் கோவையும் ஒரு தனிநூல் மாதிரியே மதிக்கப் பெற்றுள்ளது. நச்சினார்க்கினியர் தமது உரையில் நித்திலக் கோவை என்னும் பெயரையும் விதந்து குறிப்பிட்டுள்ளார். எடுத்துக் காட்டொன்று வருமாறு:-

தொல்காப்பியம்-களவியலில் 'நாற்றமும் தோற்றமும் ஒழுக்கமும் உண்டியும் என்று தொடங்கும் (23-ஆம்) நூற்பா

வின் கீழ், 'கான மானதர் யானையும் வழங்கும்' என்று தொடங்கும் அகநானூற்றுப் (318-ஆம்) பாடல் முழுவதையும் தந்து, அதன் கீழே, என்னும் ''நித்திலக் கோவை' யுள், 'வரினே ஏமுறு துயரம் நாமிவ ணொழிய, நின்னாய் பயிர் குறிநிலை, கொண்ட கோட்டை, ஊதல் வேண்டுமாற் சிறிது' என்றவாறு நித்திலக் கோவை என்னும் பெயரை விதந்து கூறியுள்ளார்.

எனவே, நித்திலக் கோவையையும் ஒரு தனித் தொகை நூலாகக் கூறலாம்.

நானூறு பாடல்கள் வீதம் கொண்ட குறுந்தொகையிலும், நற்றிணையிலும் எந்தப் பிரிவும் இல்லாதிருக்கவும், அகநானூற்றில் மட்டும் மூன்று பிரிவுகள் இருப்பது, ஒருவகைச் சிறந்த தொகுப்புக் கலையாகும். தொகை நூல்களுக்குள் இது முதலிலே தொகுக்கப்பட்ட தாதலின், இவ்வாறு பிரிக்க நேர்ந்தது எனலாம். நானூறு பாடல்களையும் ஒருசேரப் படிப்பது மலைப்பாயிருக்கு மாதலானும், பகுதி பகுதியாகப் பிரித்து விட்டால் படிப்பதற்கும் கையாள்வதற்கும் (கையில் வைத்துப் பயன்படுத்துவதற்கும்) எளிதாயிருக்கு மாதலானும், இந்தப் பிரிவில் உள்ள பாடல் எனப் பாடல்களைச் சுட்டியறிவுறுத்துவதற்கு வசதியாய் இருக்கு மாதலானும், இன்னபிற காரணங்களாலும் அகநானூறு மூன்றாகப் பிரிக்கப் பெற்றிருக்கலாம். மூன்றாகப் பிரித்தது பெரிதில்லை. மூன்று பிரிவுக்கும் களிற்றி யானை நிரை, மணி மிடை பவளம், நித்திலக் கோவை என்னும் எடுப்பான-கவர்ச்சியான இனிய பெயர்களை வழங்கியிருப்பது ஒரு பெரிய கலைக்கூறாகும்.

### தொகுத்த முறை

அகநானூறு தொகுத்த முறையில் வியத்தற்கும் நயத்தற்கும் உரிய வேறொரு கலைத்திறன் உள்ளது. அகத்திணை குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என ஐந்து வகைப்படும் என்பதும், இந்த ஐந்தும் 'அகன் ஐந்திணை' எனப்படும் என்பதும் அறிந்த செய்திகளே இந்த ஐந்து திணைகளையும் பற்றிய நானூறு. பாடல்களைக் கொண்டது அகநானூறு. இந்நூலில் உள்ள நானூறு பாடல்களும் ஐந்து திணைகளுக்கும் பங்கிடப் பட்டிருக்கும் முறை -

அதாவது - ஐந்து திணைகளுக்கும் உரிய பாடல்களை எண்ணிட்டு வரிசைப் படுத்தியமைத்திருக்கும் முறை ஓர் அருங் கலைச் செயலாகும். அந்தக் கலையழகு வருமாறு;-

நானூறு பாடல்களில் நாற்பது பத்துப் பாடல்கள் (10×40=400) உள்ளன. ஒவ்வொரு ப்த்துப் பாடல்களிலும் ஒற்றைப் படையாக உள்ள ஒன்று, மூன்று, ஐந்து, ஏழு ஒன்பது என்னும் ஐந்துவித எண்கள் கொண்ட பாடல்கள் பாலைத்திணைக்கு உரியனவாம்; இரட்டைப் படையாக உள்ள மற்ற எண்களுள் இரண்டு, எட்டு என்னும் இரண்டுவித எண்கள் கொண்ட பாடல்கள் குறிஞ்சித் திணைக்கு உரியனவாம்; நான்கு என்னும் எண் கொண்ட பாடல் முல்லைத்திணைக்கு உரியதமாம், ஆறு என்னும் எண் கொண்டது மருதத்திணைக்கு உரியது; பத்து என்னும் எண்ணுடையது நெய்தல் திணையாம். எனவே, ஒவ்வொரு பத்துப் பாடல்களிலும் பாலைக்கு ஐந்து விதமும், குறிஞ்சிக்கு இரண்டு வீதமும், முல்லைக்கும் மருதத்திற்கும் நெய்தலுக்கும் ஒவ்வொன்று வீதமும் இருக்கும் என அறியலாம். ஆகவே, நானூறு பாடல்களிலும், பாலைக்கு நாற்பது ஐந்துவிதம் (5×40=200) இருநூறு பாடல்களும் குறிஞ்சிக்கு நாற்பது இரண்டு வீதம் (2×40=80) எண்பது பாடல்களும், முல்லைக்கு நாற்பது ஒன்று வீதம் (1×40=40) நாற்பது பாடல்களும், மருதத்திற்கு நாற்பது ஒன்று வீதம் (1×40=40) நாற்பது பாடல்களும், நெய்தலுக்கு நாற்பது மூன்று வீதம் (1×40=40) பாடல்களும் இருக்கும்.

எடுத்துக்காட்டாகப் பார்ப்போமாயின், 11, 53, 105, 207 319 ஆகிய எண்கள் கொண்ட பாடல்கள் பாலைத் திணையாகவும், 122, 378 ஆகிய எண்கள் கொண்ட பாடல்கள் குறிஞ்சித் திணையாகவும், 154ஆம் எண் கொண்ட பாடல் முல்லைத் திணையாகவும், 276 - ஆம் எண்ணுள்ள பாடல் மருதமாகவும், 390 ஆம் எண் உள்ளது நெய்தலாகவும் இருக்கக் காணலாம். இந்தத் தொகுப்பு முறையினை. அகநானூற்றுப் பாயிரப் பகுதியின் இறுதியிலுள்ள மூன்று பாடல்கள் மிகவும் தெளிவாக விளக்கியுள்ளன. அவை வருமாறு,

1. ''வியமெல்லாம் வேண்டேர் இயக்கம் கயமலர்ந்த
தாமரையா றாகத் தகைபெறீஇக் காமர்
நறுமுல்லை நான்காக நாட்டி வெறிமாண்ட
எட்டும் இரண்டும் குறிஞ்சியாக் குட்டத்து
இவர்திரை பத்தா இயற்பட யாத்தான்
தொகையி னெடியதனைத் தோலாச் செவியான்
வகையி னெடியதனை வைப்பு.

2, 'ஒன்றுமுன் றைந்தேழொன் பான்பாலை ஒதாது
நின்றவற்றின் நான்கு நெறிமுல்லை—அன்றியே
ஆறாம் மருதம் அணிநெய்தல் ஐயிரண்டு
கூறா தவை குறிஞ்சிக் கூறு.'

3. 'பாலை வியமெல்லாம் பத்தாம் பனிநெய்தல்
நாலு நளிமுல்லை நாடுங்கால்—மேலையோர்
தேறும் இரண்டெட் டிவை குறிஞ்சி செந்தமிழின்
ஆறு மருதம் அகம்.''

வியம் - ஒற்றை யெண்கள். வேண்டேர் இயக்கம்-பாலை. தாமரை - மருதம். குட்டத்து இவர் திரை-நெய்தல். தோலாச் செவியான் - கேள்வி யுணர்வு மிக்கவன்.

இந்தத் தொகுப்பு முறை மிகவும் வேலைப்பாடு கொண்ட ஒரு செயலாகும். அகநானூற்றுத் தொகுப்பில் பங்கு கொண்டவர்கள், பாடல்களைத் திணைக்கு ஏற்ற எண்களில் தேர்ந்தெடுத்து அமைப்பதற்கு எவ்வளவோ பாடுபட்டிருப்பார்கள். இந்தத் தொகுப்பு முறையிலிருந்து நாம் தெரிந்து கொள்ள வேண்டிய செய்திகள் சிலவுள; அவையாவன; –

(1) சில திணைகட்கு உரிய பாடல்கள் தேவைக்கு ஏற்ற எண்ணிக்கையிலிருந்து சிறிதளவு குறைந்தும் இருக்கலாம்; எப்படியோ நல்ல பாடல்களைத் தேடிப்பிடித்து எண்ணிக்கையை ஈடுகட்டியிருக்கலாம்.

(2) சில திணைகட்கு உரிய பாடல்கள் தேவைக்கு ஏற்ற எண்ணிக்கைக்கு மேல் மிகுதியாக இருந்திருக்கலாம், அவற்றுள்

சிலவற்றைக் கழித்து, மிகச் சிறந்த பாடல்களை மட்டும் தேர்ந்தெடுந்து அமைத்திருக்கலாம்.

(3) இன்னின்ன பாடல்கள் இன்னின்ன திணைகளைச் சேர்ந்தவை எனக் கண்டுபிடித்து, ஒவ்வொரு பாடலுக்கும் ஏற்ற திணையும் துறையும் கொடுப்பதற்குக் காலமும் முயற்சியும் மிகுதியாகச் செலவழிந்திருக்கும். இருப்பினும்; பாடல் எண்ணைச் சொன்னால் இன்ன திணை என அறிவதற்கும், குறிப் பிட்ட திணைக்குரிய பாடல்களைத் தொகுத்து ஆய்வதற்கும் இம்முயற்சி வசதி செய்கிறது.

(4) இந்த நூலில். ஐந்திணைகளுள் முல்லை, மருதம், நெய்தல் ஆகியவற்றினும் குறிஞ்சி இருமடங்கு இடம் பெற்றுள்ளது. குறிஞ்சியினும் மிகுதியாகப் பாலையானது நூலில் பாதியளவைத் தன்னுரிமை யாக்கிக் கொண்டுள்ளது.

(5) நூலில் பாகியைப் பாலைப் பாடல்களே நிரப்பியிருப்பதால், பாலை, குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என்னும் ஐந்திணைகளுக்கும் முறையே உரிய உரிப் பொருளாகிய பிரிதல், புணர்தல், இருத்தல், ஊடல், இரங்கல் என்னும் ஐந்தனுள், பாலைத் திணைக்கு உரிய பிரிவுச் சுவையினையே மக்கள் பெரிதும் விரும்பிப் படித்துள்ளனர் என்பது புலப்படும். அதனால்தான், பாலைத் திணைப் பாடல்கள் பாவலர்களால் மிகுதியாகப் பாடப்பட்டுள்ளன.

இவ்வாறாகப் பல எண்ணங்களை இத் தொகுப்புமுறை ஏற்படுத்துகிறது. இவற்றுள், பாலைத்திணை மிகுதியாயிருப்பது. பற்றிய எண்ணத்தை ஈண்டு இன்னும் சிறிது விவரிக்க வேண்டும். ஐந்திணைகளைக் குறிஞ்சி, பாலை என்னும் இரண்டனுள் அடக்கிவிடலாம். அஃதாவது. - மருதத்தை, குறிஞ்சியிலும், முல்லை நெய்தல் என்னும் இரண்டையும் பாலையிலும் அடக்கலாம். குறிஞ்சி என்பது புணர்தல்; மருதம் என்பது ஊடுதல் (போலிப் பிணக்கு). புணர்தலிலும் தலைவனும் தலைவியும் ஒன்றாயுள்ளனர்; ஊடலின் போதும் தலைவனும் தலைவியும் ஒன்றாயுள்ளனர்; ஊடுதலின் முடிவு (Result) கூடுதலே (புணர்தலே) யாகும்; எனவே ஊடுதலாகிய மருதத்

தைப் புணர்தலாகிய குறிஞ்சியுள் அடக்கலாம். அடுத்து,— பாலை என்பது பிரிதல், முல்லை என்பது பிரிந்தபோது ஆற்றி யிருத்தல்' நெய்தல் என்பது பிரிந்தபோது ஆற்றாது இறங்கு தல் – அதாவது – வருந்துதல், எனவே பாலை, முல்லை, நெய் தல் என்னும் மூன்றுமே பிரிவுத் தொடர்பானவை என்பது பெறப்படும். பிரிதலாகிய பாலை இல்லையேல், பிரிந்து ஆற்றி யிருத்தலாகிய முல்லைக்கும், பிரிந்து ஆற்ற முடியாமல் இரங்கு தலாகிய நெய்தலுக்கும் வேலையே இல்லை. எனவே, பிரிவின் கூறுகளாகிய முல்லையையும் நெய்தலையும் பாலைக்குள் அடக் கலாம். ஆகவே, ஐந்து என விரித்துச் சொல்லும் திணை களை, குறிஞ்சி பாலை என்று இரண்டாகத் தொகுத்துச் சொல்லிவிடலாம். இந்தக் கருத்து தொல்காப்பியத்தில் வெளிப்படையாகச் சொல்லப்பட்டிராவிடினும், செய்யுளியலில் உள்ள,

‘இன்பமும் இடும்பையும் புணர்வும் பிரிவும்
ஒழுக்கமும் என்றிவை யிழுக்குநெறி யின்றி
இதுவா கித்திணைக் குரிப்பொருள் என்னாது
பொதுவாய் நிற்றல் பொருள்வகை என்ப.’

என்னும் (208 - ஆம்) நூற்பாவிலிருந்து குறிப்பாய் எடுத்துக் கொள்ள இடமிருப்பதாகத் தெரியவில்லையா? எனவேதான், அகநானூற்றில் மற்ற மூன்றினும் குறிஞ்சியும் பாலையுமே மிகுந்த இடத்தைப் பெற்றுள்ளன.

இனிக் குறிஞ்சியையும் பாலையையும் பற்றி ஆய்வோம்: குறிஞ்சி புணர்தல்: பாலை பிரிதல் இவையிரண்டும் ஒன்றுக் கொன்று எதிர் மாறானவை. குறிஞ்சி என்னும் கட்சித் தலை வனுக்கு ஆதரவாக மருதத்தான் ஒருவன் மட்டுமே வாக்கு (Vote) அளித்துள்ளான். பாலை என்னும் கட்சித் தலைவ னுக்கோ முல்லையான், நெய்தலான் ஆகிய இருவரின் வாக்கு கள் (Votes) கிடைத்துள்ளன. எனவே, குறிஞ்சிக் கட்சியினும் பாலைக் கட்சியே பெரிய கட்சியாகக் காட்சியளிக்கிறது. இந்த அடிப்படையில் நோக்கின், அகநானூற்றிலுள்ள நானூறு வாக்குகளுள் (பாடல்களுள்) குறிஞ்சிக் கட்சிக்கு (குறிஞ்சி 80+

மருதம் 40=120) நூற்றிருபது வாக்குகளும், பாலைக் கட்சிக்கு (பாலை 200+முல்லை 40+நெய்தல் 40=280) இருநூற்றெண் பது வாக்குகளும் கிடைத்துள்ளமை புலனாகும். பாலை மூன்றில் இரண்டு பங்குக்கு மேற்பட்ட பெரும்பான்மை (Majority) வாக்குகள் பெற்றுமிகப்பெரிய கட்சியாகஅகநானூற் றில் ஆட்சி செலுத்திக் கொண்டிருக்கிறது.

வேடிக்கைக்காக மேலே சொல்லியுள்ளபடி, மக்களாட்சி (சனநாயக) முறையில் பாலை பெற்றிருக்கும் பெரும்பான்மை அறிவிப்பதாவது, 'பாலைத்திணைக்கு உரியதான பிரிவு என்னும் துன்பச் சுவைப் பாடல்களையே பெரிதும் மக்கள் விரும்பியுள்ளனர்' என்பதாகும். இருப்பினும், பொதுவில், குறிஞ்சிக்கு உரியதான புணர்தலாகிய இன்பச் சுவையினையே மக்கள் பெரிதும் விரும்பிப் படிப்பர் எனக்கூறிச் சிலர் கருத்து வேறுபாடும் கொள்ளலாம்.

நாடகக் கதையினை இன்பியல் (Comedy), துன்பியல் (Tragedy) என இரண்டாகப் பிரித்துக் கூறுவர். இன்பமாக முடிவது இன்பியல்; துன்பமாக முடிவது துன்பியல். ஈண்டு நாம் குறிஞ்சியை இன்பியல் போன்றது என்றும், பாலையைத் துன் பியல் போன்றதென்றும் கூறலாம். இதனை, 'இன்பமும் இடும்பையும் புணர்வும் பிரிவும்' என்னும் தொல்காப்பிய நூற்பா (செய்யுளியல் - 208) குறிப்பாய் உணர்த்துவதுபோல் இல்லையா? இந்த இன்பியல், துன்பியல் இரண்டனுள், இளைஞர்களுள் பெரும்பாலோர் இன்பியலையும், முதியவர் களுள் பெரும் பாலோர் துன்பியலையும் மிகுதியாக விரும்பிப் படிப்பர் எனலாம்.

யான், 'மலர் மணம்' என்னும் நெடுங்கதை (நாவல்) ஒன்று எழுதி வெளியிட்டுள்ளேன். அது துன்பியலாகும். அந் நூலில், கதைத் தலைவன் - தலைவியரது காதல் வாழ்வு முற்பகுதியிலும், மணம் செய்து கொண்டு நடத்திய குடும்ப வாழ்வு இடைப்பகுதியிலும், துன்பமான பிரிவு இறுதியிலும் இடம் பெற்றுள்ளன. அச்சாகும் முன், யான் நூலை எழுதிக் கொண்டிருந்தபோது, என் உறவினர் வீட்டு இளைஞன்

ஒருவன் நாடோறும் வந்து, யான் எழுதஎழுதத் தாள்களை வாங்கி ஆர்வமுடன் படித்துக் கொண்டேயிருந்தான். கதையில் தலைவன் - தலைவியரது காதல்வாழ்வு முடிந்து மண வாழ்க்கை தொடங்கியது. அவ்வளவுதான்; மறுநாளிலிருந்து அந்த இளைஞனைக் காணவில்லை. நூல் அச்சானவுடன் வாங்கிப் படித்த இளைஞர் ஒருவர் என்னை நோக்கி, 'காதலர்கள் திருமணம் செய்து கொண்டதோடு நீங்கள் கதையை முடித்திருக்க வேண்டியதுதானே? பின்னால் ஏன் பிரியவிட்டீர்கள்?;- என்று வெகுளியுடன் வினவினார். மலேயாவிலிருந்து ஓர் இளைஞர், 'விறுவிறுப்பாக வந்து கொண்டிருந்த கதையை நீங்கள் துன்பியலாக முடித்து வாசகர்களை ஏமாற்றியிருக்கக் கூடாது; இன்பியலாக முடித்திருக்க வேண்டும்; - என்று கடுஞ் சினத்துடன் கடிதம் எழுதியிருந்தார். இப்படி இன்னும் சிலர்! ஆனால், எனது கதையின் துன்பியல் முடிவைப் பற்றிப் பெரியவர்கள் குறை கூறவில்லை.

முதலில் இன்பியலை மிகுதியாக விரும்பிப் படிப்பவர்கள், பின்னர் அதில் தெவிட்டல் ஏற்பட, துன்பியலில் சுவைகாணத் தொடங்குவர். இவ்வாறே, புணர்ச்சி பற்றிய குறிஞ்சிப் பாடல்களை விரும்பிப் படித்தவர்கள், பின்னர், பிரிவுபற்றிய பாலைப் பாடல்களின் சுவையில் ஈடுபாடுகொள்வர். புணர்ச்சி என்பது காமவெறியாட்டத்தின் விளைவாகும். பிரிவின்போது தான் காதல் உணர்வு கொழுந்து விட்டுத் தளிர்த்துக் காணப்படும். காதல் சுவையின் உயர்ந்த 'எவரெஸ்ட்' கொடுமுடி எல்லையைக் காணவேண்டுமாயின், புணர்ச்சிபற்றிய பாடல்களில் காண முடியாது; பிரிவு பற்றிய பாடல்களில் அதனை நன்கு காண முடியும். எனவேதான் பிரிவுபற்றியபாலைப் பாடல்களை மிகுதியாகப் படித்துச் சுவைக்கும் பழக்கம் மக்களிடையே ஏற்பட்டது அதனால், பாவலர்களும் பாலைப் பாடல்களை மிகுதியாகப் பாடினர். படிப்பவர்கட்கு மட்டுமன்றி; பாடும் பாவலர்கட்கும் காதலர்களின் பிரிவுநிலையைக் கற்பனை செய்து ஓவியப்படுத்திக் காட்டுவதிலேயே சுவை மிகுதி.

இதுகாறுங் கூறியவற்றால், அகநானூற்றில் பாலைப்

பாடல்கள் மிகுதியாக இடம்பெற்றிருப்பதற்கு உரிய பொருத்த மான காரணம் புலப்படலாம்.

முறை வைப்பு:

தொல்காப்பியத்தில் முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல், பாலை என்னும் வரிசையில் ஐந்திணைகள் கூறப்பட்டுள்ள மையை, அகத்திணையியலில் உள்ள,

'மாயோன் மேய காடுறை யுலகமும்
சேயோன் மேய மைவரை யுலகமும்
வேந்தன் மேய தீம்புனல் உலகமும்
வருணன் மேய பெருமணல் உலகமும்
முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல் எனச்
சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே (5)

'நடுநிலைத் திணையே நண்பகல் வேனிலொடு
முடிவுநிலை மருங்கின் முன்னிய நெறித்தே' (8)

(நடுவுநிலைத்திணை=பாலை)

என்னும் நூற்பாக்களால் அறியலாம். தொல்லாசிரிராகிய தொல்காப்பியர் இந்த முறையில் வரிசைபடுத்தியிருந்த அக நானூற்றில் பாலை, குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என்னும் வரிசையில் – தொல்காப்பியத்திற்கு மாறாகப் பாடல் களை அமைத்துத் தொகுத்திருப்பது பொருந்துமா? என ஓர் ஐயம் எழலாம். 'தொல்காப்பிய முறைக்கு மாறாகவும் அமைக் கலாம்; அதற்குத் தொல்காப்பியத்திலேயே ஒப்புதல் அளிக்கப் பட்டுள்ளது' – என்பதாக உரையாசிரியர்கள் கூறியுள்ளனர். இதனை, 'மாயோன் மேய' என்னும் நூற்பாவின்கீழ் நச்சினார்க்கினியர் எழுதியுள்ள,

"உம்மை எதிர்மறை யாகலின், இம் முறையன்றிச் சொல்லவும்படும் என்பது பொருளாயிற்று. அது தொகை களினும் கீழ்க்கணக்குகளினும் இம்முறை மயங்கிவரக் கோத்த வாறு காண்க."-

என்னும் உரைப்பகுதியாலும், அதே நூற்பாவின்கீழ் இளம் பூரணர் எழுதியுள்ள,

"உம்மை எதிர்மறையாகலின்' இம்முறையன்றிப் பிறவாய் பாட்டாற் சொல்லவும் படும் என்றவாறு. காடு நாடு மலை கடல் என்பதே பெருவழக்கு. இன்னும் 'சொல்லிய முறை யாற் சொல்லவும் படும்' என்றதனான், இம் முறையன்றிச் சொல்லவும்படும் என்று கொள்க. அஃதாவது, அவற்றுள் யாதானும் ஒன்றை முன்னும் பின்னுமாக வைத்துக் கூறுதல். அது சான்றோர் செய்யுட் கோவையினும் பிற நூலகத்துங் கண்டு கொள்க."

என்னும் உரைப் பகுதியாலும் உணரலாம். தொகை நூல்களுள் தொல்காப்பிய முறை மாறிவந்திருப்பதாக உரை யாசிரியர்கள் உணர்த்தியுள்ளனர். எனவே, நெடுந் தொகையுள் பாலைக்கு முதலிடம் தந்திருப்பதில் பிழையொன்றும் இல்லை.

ஈண்டு மேலும் ஒன்று நோக்கத் தக்கது. ஐங்குறு நூற்றிலும் கலித்தொகையிலும் ஐந்திணைப் பாடல்கள் கலந்து தொகுக்கப்படாமல், திணைவாரியாகத் தொகுக்கப்பட்டிருப் பதுபோல, அகநானூற்றிலும் தொகுக்கப்பட்டிருக்கலாமே - என்ற வினா எழலாம். அவ்விரு நூல்களிலும் ஒவ்வொரு திணைக்கு உரிய பாடல்களும் ஒவ்வொரு புலவரால் பாடப் பட்டவை யாதலானும், ஏறக்குறைய ஒத்த எண்ணிக்கை யுடையவை யாதலானும், அந்த நூல்களில் திணை வாரியாகத் தொகுக்கப்பட்டன. அகநானூற்றிலோ, ஒவ் வொரு திணைக்கும் உரிய பாடல்கள் பலரால் பாடப் பட்டவை யாதலானும், ஒத்த எண்ணிக்கையில் இன்றி, 200,80 40,40,4. என்னும், வேறுபட்ட எண்ணிக்கையில் இருத்தலானும் திணைவாரியாகத் தொகுக்க முடியவில்லை.

அகநானூற்றுத் தொகுப்பு முறை மிகவும் அழகியது. நானூறில் பாதிப் பாடல்கள் பாலையாயிருப்பதால், ஒன்று விட்டு ஒன்றாக ஒற்றையெண்களில் பாலையை யமைத்தும், பாலைப் பாக்களின் இடையிடையே ஒன்றுவிட்டு ஒன்றாக மற்றப் பாக்களை அமைத்தும் தொகுத்துள்ள முறையின் அழகே அழகு! தமிழர்கள் பாடல் தொகுப்புக் கலையில் காட்டி யுள்ள உயர்திறனுக்குச் சான்றுபகர இஃது ஒன்றே போதுமே!

இந்தத் தொகுப்புமுறையில் சில வசதிகள் உள்ளன. ஒரே திணையைப்பற்றிய பாடல்களைத் தொடர்ந்து படிப்பதால் ஏற்படக்கூடிய சலிப்புக்கு இதில் இடமில்லை. பாடலுக்குப் பாடல் மாற்றம் இருப்பதால் கவர்ச்சியூட்டி ஆர்வமுடன் படிக்கத் தூண்டும். ஆராச்சியாளர்கள் எண்ணைக் கொண்டு திணையையும், திணையைக் கொண்டு எண்ணையும் தீர்மானித்துச் செயலாற்ற இது வசதியானது. பாடல்களின் தலைப்பாகத் திணைப்பெயர்களும் தொடர்ந்து துறைகளும் தரப்பட்டுள்ளன. இவ்வாறு இதில் பல நன்மைகள் உண்டு.

**அகநானூற்று ஆசிரியர்கள்:**

அகநானூறு, குறைந்த அளவு பதின்மூன்று அடிகளும், மிகுந்த அளவு முப்பத்தோரடிகளும் கொண்ட நானூறு பாக்களால் தொகுக்கப்பட்டது என்பதும், இதனைத் தொகுப்பித்தவர் பாண்டியன் உக்கிரப் பெருவழுதி என்பதும், தொகுத்தவர் உருத்திரசன்மர் என்பதும், இன்ன பிறவும் நாம் முன்னரே அறிந்த செய்திகளாம். ஆனால், அகநானூற்றுப் பாடல்களை யெற்றிய ஆசிரியர்களைப்பற்றி நாம் இதுவரை மூச்சுப் பேச்சுக் காட்டவில்லையே, அவர்கள் இன்றி அகநானூறு ஏது?

அகநானூற்றின் இறுதியில் பாயிரப் பாடலை விளக்குகிற உரைநடைப் பகுதியில், "நெடுந்தொகை நானூறு கருத்தினோடு முடிந்தன; இவை பாடின கவிகள் நூற்று நாற்பத்தைவர்"-என்னும் செய்தி தெரிவிக்கப்பட்டுள்ளது. நெடுந்தொகைப் பாடல்கள் நானூறு என்றும், இந்த நானூற்றையும் ஒருவரோ அல்லது நானூறு புலவர்களோ பாடவில்லை-நூற்று நாற்பத்தைந்து புலவர்கள் பாடினர் என்றும் இது தெளிவாக அறிவிக்கிறது. சில புலவர்கள் பல பாடல்கள் பாடியுள்ளனர். இந்த நூற்று நாற்பத்தைவருள் மிக்க எண்ணிக்கையில் பாடல்கள் பாடியுள்ள புலவர்கள் பதின்மரைப் பாடல்களின் மொத்த எண்ணிக்கையுள் ஈண்டு வரிசைப்படுத்திக் காண்பாம்:

| புலவர்கள் | | பாடல்கள் எண்ணிக்கை |
|---|---|---|
| 1. | பரணர் | ... 34 |
| 2. | மாமூலனார் | ... 27 |
| 3. | மதுரை மருதனிள நாகனார் | ... 23 |
| 4. | கபிலர் | ... 18 |
| 5. | நக்கீரர் | ... 17 |
| 6. | கயமனார் | ... 12 |
| 7. | பாலை பாடிய பெருங்கடுங்கோ | ... 12 |
| 8. | குடவாயிற் கீரத்தனார் | ... 10 |
| 9. | எயினந்தை மகனார் இளங்கீரனார் | ... 9 |
| 10. | உலோச்சனார் | ... 8 |

மேலுள்ள அட்டவணையைக் காணுங்கால், அக நானூற்றில் மிகுதியான (34) பாடல்களைப் பாடி முதலிடம் பெற்றுள்ள தலைமைப் புலவர் பரணர் என்பது விளங்கும். நக்கீரர் தமது அங்கதப் பாட்டு ஒன்றில்,

'முரணில் பொதியில் முதல்புத்தேள் வாழி
பரண கபிலரும் வாழி—

எனப் பரணருக்கு முதன்மை தந்து வாழ்த்தியிருப்பது பொருத்தமேயாகும் கபில பரணர் - பரண கபிலர் எனப் பின்வந்த பெரியோர்களும் பரணரையும் கபிலரையும் சிறப்பித்துக் குறிப்பிட்டுள்ளனர். மாமூலனார் இருபத்தேழு பாடல்களும், மருதனிள நாகனார் இருபத்துமூன்று பாடல்களும்பாடி, முறையே இரண்டாவது, மூன்றாவது இடங்களைப்பெற்றுள்ளனர்.

அகநானூற்றின் முதல் பாடலைப் பாடயவர் மாமூலனாராவார். நானூறாவது பாடலின் ஆசிரியர் உலோச்சனார். இடையிலுள்ள 114, 117, 165 ஆகிய எண்கள் கொண்ட மூன்று பாடல்களின் ஆசிரியர்கள் இன்னின்னார் என அறியப்படவில்லை. இந் நூலில் ஒவ்வொரு பாடலின் இறுதியிலும் ஆசிரியர் பெயர் அமைந்துள்ளது.

இந்த நூலின் நானூறு பாடல்களுக்கு முன்னால், பாரதம் பாடிய பெருந்தேவனார் இயற்றிய கடவுள் வாழ்த்துப் பாடல் ஒன்று அமைக்கப் பெற்றுள்ளது. சுருங்கக் கூறின், அகநானூற்றுப் புலவர்கள் மிகவும் போற்றற்குரியர்: பாடல்கள் அனைத்தும் பெரிதும் சுவைக்கத்தக்கனவாகும்.

---

# 18. குறுந்தொகை

## தொகுப்புப் பொறுப்பு

இந்த நூல், இறையனார் அகப்பொருள் உரையில் 'குறுந் தொகை நானூறு, என்றும் பெயருடன் இரண்டாவதாக அமைந்துள்ளது. இந் நூலைப் பொறுத்தவரையும், 'நற்றிணை நல்ல குறுந்தொகை, என்று தொடங்கும் செய்யுளிலும், 'நல்ல' என்னும் சிறப்பு அடைமொழியுடன் இரண்டாவது இடம் அளிக்கப்பெற்றுள்ளது. இந்த நூலின் தொகுப்புமுறை பற்றி முன்பு ஓரிடத்தில் விரிவாகக் கூறியுள்ளோமாயினும், இதுபற்றி இந் நூலின் இறுதியில் தரப்பட்டிருக்கும் பகுதியினைப் பார்ப் போம்:

"இத்தொகை முடித்தான் பூரிக்கோ. இத்தொகை பாடிய கவிகள் இருநூற்றைவர். இத்தொகை நாலடிச் சிற்றெல்லை யாகவும், எட்டடிப் பேரெல்லையாகவும் தொகுக்கப்பட்டது."

இந்தப் பகுதியைக் கொண்டு பார்க்குங்கால் சில சிக்கல் கள் எழுகின்றன. மற்றத் தொகை நூல்களின் இறுதியில் தொகுத்தான்-தொகுப்பித்தான் என்று இருக்கக் காணலாம். ஆனால் இங்கே, 'இத் தொகை முடித்தான் பூரிக்கோ' என்று உள்ளது. முடித்தான் என்றால், தொகுத்தவனா? - தொகுப் பித்தவனா? 'முடித்தான்' என்பது, தொகுத்தான்-தொகுப் பித்தான் என்னும் இரண்டிற்கும் பொதுவாய் இருப்பது போல் தோன்றவில்லையா எனவே,-இந்த நூலைத் தொகுத்தவர் ஒருவர்? தொகுப்பித்தவர் வேறொருவர் என இருவர் இல்லை-எல்லாப் பொறுப்பும் 'பூரிக்கோ' என்பவரையே சாரும் என்பது புலப்படவில்லையா?

## ஆசிரியர் எண்ணிக்கை

அடுத்து, - 'இத்தொகை பாடிய கவிகள் இருநூற்றைவர்' (205 பேர்) - என்று எழுதப்பட்டுள்ளது. நூலிலுள்ள புலவர் களின் பெயர்களை எண்ணிப் பார்த்தால்? ஏறக்குறைய எண் ணிக்கை ஒத்து வருகிறது. ஆனால், நூலின் இடையிடையே உள்ளபத்துப் பாடல்களுக்கு ஆசிரியர் பெயர் அறிவிக்கப்பட்

டிருக்கவில்லை. அப்பாடல்களின் எண்கள் வருமாறு:— 191,201, 256, 313, 321, 326, 375, 379, 381, 395 - என்பன வாம். இந்தப் பாடல்களின் ஆசிரியர் பெயர்கள் தெரிந் தால், ஆசிரியர் எண்ணிக்கை இன்னும் கூடுதல் ஆகலாம். ஆனால் இந்தப்பத்துப் பாடல்களின் ஆசிரியர் பெயர்கள் அழி யாதிருந்த ஓலைச் சுவடியைப் பார்த்துப் பெயர்களைக் கூட்டி இறுதியில் தொகை போட்டிருந்தால், 'இந்நூற்றைவர்' எனப் போட்டிருக்க முடியாதே! ஒருவேளை. இந்த நூலில் பெயர் தெரிந்துள்ள புலவர்களுள் சிலரே இந்தப் பாடல்களையும் பாடியிருக்கலாமோ என்னவோ! நூலில் ஒருவர் பாடல்கள் ஒன்றுக்கு மேல் பல உள்ளன அல்லவா? பின்னர் ஓலைச்சுவடி யில் இந்தப்பத்துப் பெயர்களும் சிதைந்து விட்டிருக்கலாம். அந்தச் சுவடியைப் பார்த்தே பலரும் 'படி' எடுத்திருக்கலாம். அல்லது, - பத்துப் பாடல்களின் ஆசிரியர் பெயர்கள் சிதைந்த பின்னர்,அவ்வாறு சிதைந்த ஓலைச் சுவடியைப்பார்த்துப் பெயர் தெரிந்த வரைக்கும் கூட்டிக் கொண்டு, இருநூற்றைவர், என்னும் எண்ணிக்கை தரப்பட்டிருக்கலாமோ என்னவோ? ஓலைச் சுவடியின் சிதைவாலோ, ஏடு பெயர்த்து எழுதுவோரின் தவறாலோ, புலவர்களின் பெயரமைப்புக் குழப்பத்தாலோ, எப்படியோ இந்த நிலை ஏற்பட்டுவிட்டது.

பாடல் எண்ணிக்கை:

அடுத்து. - 'இத்தொகை நாலடிச் சிற்றெல்லையாகவும் எட்டடிப் பேரெல்லையாகவும் தொகுக்கப்பட்டது. - என்று குறிப்பிடப்பட்டுள்ளது. ஆனால், இந்நூலில் உள்ள 307, 391 - ஆம் எண் கொண்ட பாடல் இரண்டும் ஓர் அடி கூடுதலாக - ஒன்பது அடிகள் உடையனவாயுள்ளன. இது, நூல்தொகுத்த முறைக்கு மாறாய் உள்ளதல்லவா? மற்றும், 'குறுந்தொகை நானூறு, என்னும் பெயருக்கு மாறாக, இந்நூலில், கடவுள் வாழ்த்துப் பாடலைச் சேர்க்காமலேயே, ஒரு பாடல் எப்படியோ கூடுதலாகி நானூற்றொரு பாடல்கள் இருப்பதும் ஈண்டுக் கருதத்தக்கது. கடவுள் வாழ்த்தைச் சேர்த்தால் நானூற்றிரண்டு பாடல்கள் ஆகிவிடுகின்றன. இந்த மாறு பாட்டிற்கு, தமிழ் ஐயா உ. வே. சாமிநாத ஐயரவர்கள் நல்ல தொரு தீர்வு கண்டுள்ளார்கள். அஃதாவது,-சில ஓலைச்

சுவடிகளில் 391 – ஆம் பாடல் எட்டடிகளுடன் உள்ளது எனக் கூறியுள்ளார்கள். அதனை எட்டடிச் செய்யுளாகவே கொள்ள லாம் அதில் பிற்காலத்தில் எப்படியோ ஓர் அடி இடையிலே புகுந்துவிட்டிருக்க வேண்டும். இது, ஏடு பெயர்த்து எழுது வோரால் நேர்ந்திருக்கலாம். அடுத்து, 307 – ஆம் செய்யுளைக் குறுந்தொகைப் பாடல் இல்லையென நீக்கிவிடலாம் எனக் கூறியுள்ளார்கள். இவ்வாறு செய்வதால், குறுந்தொகையில் ஒன்பது அடிச் செய்யுள் இல்லாமையோடு, நானூறு பாடல்கள் என்ற எண்ணிக்கையும் சரியாய் விடுகிறது. அங்ஙனமெனில். இப்போது 307 ஆவதாகக் காணப்படும் இந்தப் பாடலை எந் தக் 'காகம்' எங்கிருந்து தூக்கிக் கொண்டுவந்து குறுந்தொகைக் குள் போட்டிருக்கக்கூடும்? இந்த வினாவிற்கும் தக்க விடையி ருக்கிறது. ஆசிரியப் பாவாலான இந்த அகப்பொருள் பாடல் குறுந்தொகை, நற்றிணை, நெடுந்தொகை என்னும் மூன்று தொகை நூல்களுள் ஏதேனும் ஒன்றினைச் சேர்ந்ததாயிருக்க வேண்டும். ஒன்பது அடிகள் கொண்ட இந்தப் பாடல், எட்டு அடிகளுக்கு மேற்படாத குறுந்தொகைப் பாடலாக இருக்க முடியாதது போலவே, பதின் மூன்று அடிகளுக்கு குறையாத நெடுந்தொகைப் பாடலாகவும் இருக்கமுடியாது; எனவே, இந்தப் பாடல், ஒன்பது அடிச் சிற்றெல்லையுடைய நற்றிணைப் பாடலாக இருக்கலாம். அங்ஙனம் இதனை நற்றிணையில் சேர்த்தால், நற்றிணையில் நானூற்றுக்கு மேல் ஒன்று கூடி விடுமே என்று வினவலாம். அந்த இடர்பாட்டிற்கு இடமில்லை நற்றிணையில் 234-ஆம் பாடல் கிடைக்கவில்லை; எந்த ஓலைச் சுவடியிலும் 234-ஆம் பாடல் இல்லை. எனவே குறுந்தொகை யில் கூடுதலாக உள்ள 307-ஆம் செய்யுளை, நற்றிணையில் இல் லாத 234-ஆம் பாடலாகச் சேர்த்துக் கொள்ளலாம்.

பழங்காலத்தில் நற்றிணை, குறுந்தொகை முதலிய ஓலைச் சுவடிகள் ஒன்றாக வைக்கப்பட்டிருந்திருக்கும். நற்றிணையின் 234-ஆம் பாடல் எழுதியிருந்த ஓலை நழுவிக் கீழே விழுந்திருக் கும். அதனை எடுத்துத் தவறுதலாகக் குறுந்தொகை ஓலைச் சுவடியில் செருகிவிட்டிருப்பர். இவ்வாறாகக் கூடுதலாகவும் குறைவாகவும் அமைந்துவிட்ட குறுந்தொகை நற்றிணைச் சுவடிகளைப் பார்த்து அவற்றில் உள்ளவாறே பின்னர்ப் 'படி'

எடுத்தவர் எழுதிவிட்டிருக்கிறார். இந்தச் சுவடிகளே எங்கும் பரவிவிட்டன. இவ்வாறாகத் தவறியமைந்த அந்தப் பாடலை, நற்றிணையைப் பற்றிய அடுத்த தலைப்பில் காண்போம்:

### ஆசிரியர்கள்

இந்நூலின் ஆசிரியர்கள் இருநூற்றைவருள், முதல் பாடலை இயற்றியவர் 'திப்புத் தோளார்' என்பவர்; இறுதிப் பாடலின் ஆசிரியர் 'அம்மூவனார்' ஆவார். நூலின் முகப்பில் உள்ள கடவுள் வாழ்த்துப் பாடலின் ஆசிரியர் பாரதம் பாடிய பெருந்தேவனார். இந்நூலாசிரியர்களுள் பத்துப் பாடல்களுக்குக் குறையாமல் பாடியுள்ள ஆசிரியர்களின் பெயர்களைப் பாடல்களின் மொத்த எண்ணிக்கையுடன் வரிசைப்படுத்திக் காண்பாம்:

| புலவர்கள் | பாடல் எண்ணிக்கை |
|---|---|
| 1. கபிலர் | ... 29 |
| 2. பரணர் | ... 17 |
| 3. ஔவையார் | ... 15 |
| 4. அம்மூவனார் | ... 11 |
| 5. பாலை பாடிய பெருங்கடுங்கோ | .. 10 |

குறுந்தொகையில் மிகுதியான (29) பாடல்களைப் பாடி முதலிடம் பெற்றுள்ளவர் கபிலர் என்பதும், அடுத்த எண்ணிக்கையில் (17) பாடி இரண்டாவது இடம் பெற்றிருப்பவர் பரணர் என்பதும் விளங்குகிறது. புலவர்கள், 'கபில பரணர்' என இவ்விருவரையும் சிறப்பித்துத் தலைமையானவர்களாகக் குறிப்பிட்டிருப்பதும், இலக்கண உரையாசிரியர்கள் 'கபிலரது பாட்டு' என எடுத்துக்காட்டுத் தந்திருப்பதும் பொருத்தமேயாகும். இந்நூலில் ஔவையார் மூன்றாவது இடம் பெற்றுள்ளார்.

### நூலின் அமைப்பும் மாண்பும்

இந்த நூலில், முதலில் பாடலும், பாடலின் கீழே நூலைத் தொகுத்தவராலோ பிறராலோ தரப்பட்ட துறையும், துறையின் கீழே பாடலாசிரியரின் பெயரும் அமைக்கப் பெற்றுள்

ளன. பழைய இலக்கண இலக்கிய உரையாசிரியர்களுள் ஏறக் குறைய முப்பதின்மர் இந்நூற் பாடலைத் தத்தம் 'உரைகளில் மேற்கோளாகக் காட்டியிருப்பதிலிருந்து, இந்நூலின் மாண்பு விளங்கும். பிற தொகை நூல்களிலும், குறுந்தொகைப் பாடல் களே மிகுதியாக மேற்கோளாகக் கையாளப்பட்டுள்ளன. இந்நூலிலிருந்து, ஏறக்குறைய இருநூற்று முப்பத்தைந்து பாடல்கள் உரையாசிரியர்களால் எடுத்தாளப்பட்டுள்ளமை யைக் கொண்டு, இந்நூல் தொகுப்பின் இன்றியமையாமை புலனாகும். நச்சினார்க்கினியர், ஏறக்குறைய இருபது இடங் களில் நூற்பெயரைக் குறிப்பிட்டே பாடல்களை எடுத்துக் காட்டியுள்ளார். நூற்பெயர் குறிப்பிடாத இடங்கள் பல உள.

குறுந்தொகையில், குறிஞ்சித் திணைக்கு 146 பாடல்களும், பாலைக்கு 91 பாடல்களும், நெய்தலுக்கு 71 பாக்களும், முல் லைக்கு 45 பாடல்களுமாக மொத்தம் 401 பாடல்கள் உள் ளன. இவற்றுள் 9 அடிகள் கொண்டதும், நற்றிணையைச் சேர்ந்தது என்று கருதப்படுவதுமாகிய 307 ஆம் பாடல் பாலைத்திணையாதலின், அதனை நீக்கிவிடின் பாலைத் திணைக்கு 90 பாடல்களே உரியன எனக் கொள்ளவேண்டும்.

குறுந்தொகைப் பாடல்களின் நயத்தில் இறங்குவோமா யின் ஒரு தனி நூலாக விரியுமாதலின், தொகுப்புக்கலை பற்றிய இந்த ஆராய்ச்சி நூலில் அது தேவையில்லை எனக் கருதி இம்மட்டில் அமைவோம். இந்தப் பொதுவிதி எல்லாத் தொகைநூல்கட்கும் பொருந்தும்.

---

# 19. நற்றிணை

ஒன்பதடிச் சிற்றெல்லையும் பன்னிரண்டடிப்பேரெல்லையும் கொண்ட நானூறு ஆசிரியப் பாக்களின் தொகுப்பாகிய 'நற்றிணை நானூறு' எட்டுத் தொகையில் மூன்றாவது நூலாகும். ஐந்து அகத்திணைகள் பற்றிய தொகை நூல்களுக்குள்ளே, 'திணை' என்னும் பெயர் உடைய - அதிலும்-.நல்திணை' (நற்றிணை) என்னும் பெயர் உடைய நூல் இஃது ஒன்றுதான்! இந் நூலின் தொகுப்புமுறை முன்பே விளக்கப்பட்டுள்ளது. நச்சினார்க்கினியர் ஏறக்குறைய இருபது இடங்களில் நற்றிணை என நூற்பெயரைக் குறிப்பிட்டுத் தொல்காப்பிய உரையில் பாடல்களை எடுத்தாண்டுள்ளார்.

**ஆசிரியர்கள்:**

இந்நூலில் ஐம்பத்தேழு ஆசிரியர்களின் பெயர்கள் தெரியவில்லை. பெயர் தெரிந்த புலவர்கள் நூற்றெழுபத்தைவர். முதல் பாடலின் ஆசிரியர் கபிலர்; இறுதிப் பாடலின் ஆசிரியர் ஆலங்குடி வங்கனார். நூலுக்கு முன்னால் உள்ள கடவுள் வாழ்த்துப் பாடலின் ஆசிரியர் பாரதம் பாடிய பெருந்தேவனார். இந் நூலாசிரியர்களுள் மிகுந்த பாடல்கள் பாடி முதலிடம் பெற்றிருப்பவர்கள் கபிலரும் உலோச்சனாருமாவர், இவர்கள் இருபது பாடல்கள் பாடியுள்ளனர். பன்னிரண்டு வீதம் பாடியுள்ள பரணரும் மருதனிள நாகனாரும் முறையே மூன்றாம் இடம் பெறுகின்றனர். பத்துப் பத்துப் பாடல்கள் பாடியுள்ள அம்மூவனாரும் பாலை பாடிய பெருங்கடுங்கோவும் முறையே ஐந்தாம் இடத்திற்கு உரிய வராவர்.நற்றிணையிலும் கபிலரும் பரணரும் முதன்மை பெற்றிருப்பது காண்க.

**நூல் அமைப்பு:**

இந்நூலில்பாடலின் முன்னால், முதலில் ஆசிரியர் பெயரும் அடுத்துத் திணை-துறைப் பெயரும் உள்ளன. பின்னரே பாடல் தரப்பட்டுள்ளது. நற்றிணையில், குறிஞ்சித்திணைக்கு 132 பாடல்களும், பாலைக்கு 106 பாடல்களும், நெய்தலுக்கு 101 பாடல்களும், மருதத்திற்கு 32 பாக்களும், முல்லைக்கு 29 பாக்

களும் உரியனவாம். இவற்றுள் மருதத்திற்கு உரிய பாக்களின் எண்ணமைப்பு மட்டும் வியத்தற்குரியதாயுள்ளது. மருதத்திற்கு உரிய முப்பத்திரண்டு பாடல்களுள் ஒன்று தவிர மற்றவை பத்து என்னும் எண்முறையமைப்பைக் கொண்டுள்ளன. மருதப் பாடல்களின் எண்கள் வருமாறு:-20, 30, 40, 50, 60, 70 80, 90, 100, 120, 150, 170, 180, 200, 210, 216, 230, 250, 260, 280, 290, 300, 310, 320, 330, 340, 350, 360, 370, 380, 390, 400,-ஆகிய முப்பத்திரண்டு எண்களாம். இவற்றுள் 216 ஆம் பாடல் தவிர மற்றவை யாவும் பத்து என்னும் எண் முறை யமைப்பைப் பெற்றிருப்பதைக் காணலாம். மருதப்பாடல்களுள் ஒன்று மட்டும் 216 என்னும் ஆறு என்ற எண் முறையைத் கொண்டிருப்பது வியப்பாயுள்ளது. இதில் ஏதோ இயற்கைக் தவறுதல் ஏற்பட்டிருப்பதாகத் தோன்றுகிறது. 210 - ஆம் பாடலும் 230 - ஆம் பாடலும் மருதமாயிருப்பதால், 022-ஆம் பாடலும் மருதமாயிருக்க வேண்டும். ஆனால், நூலில்220-ஆம் எண் பெற்றுள்ள ''சிறுமணி தொடர்ந்து'' என்னும் பாடல் குறிஞ்சி பற்றியதாயுள்ளது. இதுதான் 216 - ஆம் பாடலா யிருக்கலாம். இது கைத்தவறுதலாக 220 - ஆம் எண்ணுக்கு மாறிப் போயிருக்கலாம். எனவே, இதனை 216-ஆம் எண் கொண்டதாக்கி, இப்போது 216 - ஆம் எண் கொண்டுள்ள ''துனிதீர் கூட்டமொடு''என்னும் மருதப் பாடலுக்கு 220-ஆம் எண் தந்துவிடின் அமைப்பு முறை அழகாயிருக்கும். இதனால் நற்றிணையின் மருதப் பாடல்கள் அனைத்துமே பத்து என்னும் எண்முறை கொண்டவை என்னும் பொருத்தப்பாடு நிலவும். நற்றிணையில் மருதப் பாடல்களையாவது இவ்வாறு பொருத் தமான எண்முறையில் தொகுத்திருப்பது ஒருவகைக் கலைக் கூறாகும்.

### கிடைக்காத பாடல்

நற்றிணையின் 234-ஆம் பாடல் எந்த ஓலைச்சுவடியிலும் கிடைக்கவில்லை. நற்றிணையின் இரண்டாம் பதிப்பை 1956-ஆம் ஆண்டில் வெளியிட்டுள்ள சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார், இறையனார் அகப்பொருளின் 28 - ஆம் நூற் பாவின் உரையில் நூற்பெயர் குறிப்பிடாமல் மேற்கோளாக

எடுத்துக் காட்டப்பெற்றுள்ள ஒரு பாடலை, நற்றிணையில் காணமற்போன 234 – ஆம் பாடலாக இருக்கலாம் எனப் பின்னிணைப்பில் தந்துள்ளனர். அப் பாடல் வருமாறு:—

‘சான்றோர் வருத்திய வருத்தமும் நுமது
வான்றோய் வன்ன குடிமையும் நோக்கித்
திருமணி வரன்றும் குன்றம் கொடியவள்
வருமுலை யாகம் வழங்கினோம் நன்றே
அஃதான்று,
அடைபொருள் கருதுவி ராயின் குடையொடு
கழுமலம் தந்த நற்றேர்ச் செம்பியன்
பங்குனி விழவின் வஞ்சியோடு
உள்ளி விழவின் உறந்தையும் சிறிதே’

இந்தப் பாடல் நற்றிணையின் 234 – ஆம் பாடலாக இருக்கலாம் என ஒரு தோற்றமாக எடுத்துக் காட்டப்பட்டுள்ளது இறையனார். அகப்பொருள் உரையில் ஏறக்குறையப் பதினைந்து இடங்களில் நற்றிணைப் பாடல்கள் எடுத்துக் காட்டப்பட்டுள்ளமையின், இஃதும் நற்றிணைப் பாடலாயிருக்க லாம் எனச் சொல்லத் தோன்றினும், மேலே குறுந்தொகை என்னும் தலைப்பில் நாம் குறிப்பிட்டுள்ள ஒரு பாடலை ஈண்டு நினைவுக்குக் கொண்டுவரவேண்டும். ஒன்பது அடிக ளுடன் குறுந்தொகையில் கூடுதலாக உள்ள 307-ஆம் பாடலை நற்றிணையின் 234-ஆம் பாடலாகக் கொள்ளலாம் என முன்பு கூறியுள்ளோம். அந்தப் பாடல் வருமாறு:

வளையுடைத் தனைய தாகிப் பலர்தொழச்
செவ்வாய் வானத் தையெனத் தோன்றி
இன்னம் பிறந்தன்று பிறையே யன்னோ
மறந்தனர் கொல்லோ தாமே களிறுதன்
உயங்குநடை மடப்பிடி வருத்த நோனாது
நிலையுயர் யாஅந் தொலையக் குத்தி
வெண்ணார் கொண்டு கைசுவைத் தண்ணாந்
தழுங்க னெஞ்சமொடு முழங்கும்
அத்த நீளிடை அழப்பிரிந் தோரே.’

எ - து. பிரிவிடைக் கடுஞ்சொற் சொல்லிய தோழிக்குக் கிழத்தி சொல்லியது.

கடம்பனூர்ச் சாண்டிலியன்,

இந்தப் பாடலின் கீழே துறையும் ஆசிரியர் பெயரும் தரப் பட்டுள்ளன. ஆசிரியர், கடம்பனூர்ச் சாண்டிலியன்என்பவராம். ஒன்பது அடி கொண்ட இந்தப் பாடலே நற்றிணையின் 234 - ஆம் பாடலாக இருக்கவேண்டும். நற்றிணை-கழகப் பதிப்பின் பின்னிணைப்பில் குறிப்பிடப்பட்டுள்ள 'சான்றோர் வருந்திய' என்றுதொடங்கும் இறையனார் அகப்பொருள்உரைமேற்கோள் பாடல், நற்றிணையின் 234 - ஆம் பாடலாக இருப்பதற்கு வழி யில்லை; ஏனெனில், அப்பாடலில் முழுமையாக எட்டு அடி களே உள்ளன; அதன் இடையில் 'அஃதான்று' என்னும் தனிச் சீர் உள்ளது; அந்தத் தனிச் சீரை ஒரு தனி அடியாகக் கொண்டால்தான், அந்தப் பாட்டு ஒன்பது அடிகள் உடைய தாகி நற்றிணைக்கு ஏற்றதாக முடியும்; அஃது அவ்வளவு சிறப்பின்மையின், அந்தப் பாடலை நற்றிணையின் 234-ஆம் பாடலாகக் கொள்ளாமல், குறுந்தொகையிலுள்ள 307-ஆம் பாடலைக் கொள்வதே பொருத்தமாய்த் தெரிகிறது. இது பாலைத்திணைக்கு உரியது. எனவே, இனிக் குறுந்தொகை அச்சிடுபவர்கள், அதில் இப்பொழுதுள்ள 307-ஆம் பாடலை விலக்கியே அச்சிடலாம். அதேபோல; இனி நற்றிணை அச்சிடு பவர்கள், 234-ஆம் பாடலின் இடத்தைக் காலியாக விடாமல் அந்த இடத்தில் குறுந்தொகையிலுள்ள 'வளையுடைத் தனைய தாகி' என்று தொடங்கும் 307-ஆம் பாலைப் பாடலை அமைத்துஅச்சிடலாம். இதனை ஆராய்ச்சியாளர்கள் எண்ணிப் பார்ப்பார்களாக!

---

# 20. புறநானூறு

இந்த நூல், இறையனார் அகப்பொருள் உரையில் 'புறநானூறு' என்னும் பெயருடன் நான்காவதாக வைக்கப் பெற்றுள்ளது. புறப்பொருள் பற்றிய நூல்களுள் தலைமை நூலாகிய இது, புறம், புறப்பாட்டு, புறம்பு நானூறு என்னும் பெயர்களாலும் வழங்கப்படுகிறது.

புறம்:

இந்நூல் 'புறம்' என்னும் சுருக்கப்பெயரால் வழங்கப்படு வதற்கு மூன்று எடுத்துக் காட்டுக்கள் வருமாறு:—

(1) தொல்காப்பியம்-அகத்திணையியலில் "நாடக வழக் கினும் உலகியல் வழக்கினும்' என்று தொடங்கும் (53 - ஆம்) நூற்பாவின் உரையில்,

"ஆசிரியமும் வெண்பாவும் வஞ்சியும் அகம் புற மென்னும் இரண்டிற்கும் பொதுவாய் வருமாறு நெடுந் தொகையும் புறமும் கீழ்க்கணக்கும் மதுரைக்காஞ்சியும் பட்டினப்பாலையும் என்பனவற்றுட் காண்க"—

எனப் புறநானூற்றைப் 'புறம்' என நச்சினார்க்கினியர் கூறியிருப்பது காண்க.

(2) அடுத்து,-தொல்காப்பியம் - புறத்திணையியலில் 'வெறி யறி சிறப்பின் வெவ்வாய் வேலன்' என்று தொடங்கும் (5-ஆம்) நூற்பாவின் உரையிடையே, நச்சினார்க்கினியர், 'பெருநீர் மேவற் றண்ணடை யெருமை' என்று தொடங்கும் புற நனூற்றுப் (297-ஆம்) பாடல் முழுவதையும் தந்து, அப் பாடலின் கீழே, அப் பாடலின் சில அடிகளிலுள்ள கருத்தைச் சுட்டிக் காட்டி,

"மடல் வன் போந்தை போல் நிற்ப லென நெடுமொழி தன்னோடு புணர்த்தவாறு காண்க. சீறூர் புரவாகக் கொள் ளேன், தண்ணடை கொள்வே னெனத் தன்னுறு தொழில் கூறினான். இதுவும் பொது. புறம்"

என்று வரைந்து, இந்தப் பாடல் உள்ள நூலின் பெயராகப் புறம் என இறுதியில் குறிப்பிட்டிருப்பது காண்க. இவ்வாறு இன்னும் சில இடங்களில் அவர் குறிப்பிட்டுள்ளார்.

(3) மற்றும், எட்டுத் தொகை நூல்கள் இன்னின்னவை என்று அறிவிக்கின்ற,

நற்றிணை நல்ல குறுந்தொகை ஐங்குறுநூறு
ஒத்த பதிற்றுப் பத்து ஓங்கு பரிபாடல்
கற்றறிந்தோர் ஏத்தும் கலியோடு அகம் புறம் என்று
இத் திறத்த எட்டுத் தொகை'

என்னும் பழம் பாடலிலும் புறநானூறு 'புறம்' எனச் சுருங்கச் சொல்லப்பட்டுள்ளமையைக் காணலாம்.

புறப்பாட்டு

இனி, இந்நூல் 'புறப்பாட்டு' என்னும் பெயரால் வழங்கப் பட்டுள்ளமைக்குச் சான்றுகள் காணலாம். தொல்காப்பிய உரையில் நச்சினார்க்கினியர் முப்பத்தைந்திற்கும் மேற்பட்ட இடங்களில் இந்த நூலைப் 'புறப்பாட்டு' என்னும் பெயரால் குறிப்பிட்டுள்ளார்; மூன்று இடங்கள் மட்டும் வருமாறு:—

(1) தொல்காப்பியம் - அகத்திணையியலில் 'புறத்திணை மருங்கின் பொருந்தின் அல்லது' என்று தொடங்கும் (55-ஆம்) நூற்பாவின் கீழ்,

''...புறத்திணைக் கண் இயற்பெயர் அளவிவரும் என்ப தனானே, 'முரசு கடிப் பிகுப்பவும் வால்வளை துவைப்பவும்' (158) என்னும் புறப்பாட்டு, எழுவர் மாய்ந்த பின்றை' எனப் புறத்திணைத் தலைவர் பலராய் வந்தது''—

என வரைந்துள்ளார். (2) அடுத்து, புறத்திணையியலில் 'கொள்ளார் தேஎங் குறித்த கொற்றமும்' என்று தொடங்கும் (12 - ஆம்)நூற்பாவின் கீழ்,

''கழிந்தது பொழிந்தென' (203) என்னும் புறப்பாட்டினுள், 'ஒன்னார் ஆரெயில் அவர்கட் டாகவும் நுமதெனப் பாண்கட

விறுக்கும் வள்ளியோய்' என்பதும் அது. 'ஆனா வீகை யடு போர்' (42) என்னும் புறப்பாட்டும் அது.''—

என்று எழுதியுள்ளார். (3) மற்றும், புறத்திணையியலில் 'தாவி னல்லிசை கருதிய கிடந்தோர்க்கு' என்று தொடங்கும் (36-ஆம்) நூற்பாவின்கீழ், 'மண்டிணிந்த நிலனும்' என்று தொடங்கும் நீளமான புறநானூற்றுப் (2) பாடல் முழுவதை யும் தந்து, அதைத் தொடர்ந்தாற்போல்,

"என்னும் புறப்பாட்டுப் பகை நிலத்தரசற்குப் பயங்கவாறு கூறிப் பின்னர்த் திரியாச் சுற்றமொடு விளங்கி நடுக்கின்றி நிற்பாயென அச்சந்தோன்றக் கூறி ஒம்படுத்தலின் ஒம்படை வாழ்த்தாயிற்று. 'காலனுங் காலம்' (41) என்னும் புறப்பாட்டும் அது''—

என்று கூறியுள்ளார். இவ்வாறு இன்னும் பல சான்றுகள் தரலாம். புறநானூற்றைப்'புறப்பாட்டு' என வழங்கும் பழக்கம் தொல்காப்பியத்தின் வாயிலாகக் கற்றுக்கொள்ளப்பட்டது என்று சொல்லலாம். தொல்காப்பியம் செய்யுளியலில், 'அவை தாம் பாஅ வண்ணம் தாஅ வண்ணம்' என்று தொடங்கும் (205 – ஆம்) நூற்பாவின் இடையேயுள்ள 'அகப்பாட்டு வண்ணம் புறப்பாட்டு வண்ணம்' என்னும் பகுதியிலும் 'புறப் பாட்டு வண்ணம் முடிந்தது போன்று முடியாததாகும்' என்னும் (செய்யுளியல்-217) நூற்பாவிலும், 'புறப்பாட்டு' என்னும் பெயர் அறிமுகப்படுத்தப்பட்டுள்ளதல்லவா? இதைக் கொண்டு, புறநானூற்றைப் 'புறப்பாட்டு' எனக் கூறும் 'வழக்காற்றைப் பிற்காலத்தினர் கற்றுக் கொண்டிருக்கலாம்.

## புறச் செய்யுட்கள்

புறநானூற்றுப் பாடல்களைப் 'புறச் செய்யுட்கள்' என்று கூறும் வழக்கம் நச்சினார்க்கினியருக்கு உண்டு. இதனை, தொல்காப்பியம்-கற்பியலில், 'தோழி தாயே' என்று தொடங் கும் (52-ஆம்) நூற்பாவின்கீழ் அவர் வரைந்துள்ள,

''......இதற்குக் கோப்பெருஞ் சோழன் துறந்துழிப் பிசிராந்தையாரும் பொத்தியாரும் போல்வார் துறந்தாரென்று

கூறும் புறச்செய்யுட்கள் உதாரணம் என்றவாறு'— என்னும் உரைப் பகுதியால் அறியலாம். 'புறநானூறு' என்னும் நூற் பெயர், வேறு வடிவங்களிலும் வழங்கப்பெறும் என்பதை அறிவிக்கவே இவ்வளவு கூறப்பட்டது.

### புறநானூறு

இனிப் 'புறநானூறு' என்னும் பெயர் வழக்காற்றுற்கும் சான்று காட்ட வேண்டுமல்லவா? தொல்காப்பியம் - புறத் திணையியலில், 'தானை யானை குதிரை யென்ற' என்று தொடங்கும் (17 - ஆம்) நூற்பாவின் கீழ் நச்சினார்க்கினியர் வரைந்துள்ள,

"இவை தனித்து வராது தொடர்நிலைச் செய்யுட்கண் வரும், அவை தகடூர் யாத்திரையினும் பாரதத்தினுங் காண்க புறநானூற்றுள் தனித்து வருவனவுங் கொள்க."— என்னும் உரைப்பகுதியிலும், அதே இயலில், 'கொடுப்பார் ஏத்திக் கொடாஅர்ப் பழித்தலும்,' என்று தொடங்கும் (35 - ஆறு) நூற்பாவின் கீழ் அவர் வரைந்துள்ள,

"தத்தம் புதுநூல் வழிகளால் புறநானூற்றிற்குத் துறை கூறினாரேனும், அகத்தியமும் தொல்காப்பியமுமே தொகை களுக்கு நூலாகலின், அவர் சூத்திரப் பொருளாகத் துறை கூறவேண்டு மென்றுணர்க"—

என்னும் உரைப்பகுதியிலும், 'புறநானூறு' என்னும் பெயர் வழக்காறு உள்ளமை காண்க.

### நூல் தொகுப்பும் அமைப்பும்

புறநானூற்றைத் தொகுத்தவர் பெயரோ தொகுப்பித் தவர் பெயரோ தெரியவில்லை. மற்றும், இதற்கு அடியளவும் இல்லை. எத்தனை அடிகள் கொண்டதாகவும் இருக்கலாம். அகத்திணைப் பாடல்கள் ஆயிரத்திருநூறு கிடைத்ததால், அவற்றை நெடுந்தொகை, குறுந்தொகை, நற்றிணை என மூன்று தொகை நூல்களாக ஆக்குவதற்காக அம் மூன்று நூற் பாடல்களுக்கும் அடியளவு வரையறுக்க வேண்டிய தாயிற்று. ஆனால், புறத்திணைப் பாடல்கள் நானூறு

அளவுக்கே கிடைத்ததால், அடியளவு பாராமல் நானூறு பாடல்களைத் தொகுத்து ஒரு நூலாக உருவாக்கினர்.

நெடுந்தொகை, குறுந்தொகை, நற்றிணை ஆகிய மூன்று நூல்களிலும், கடவுள் வாழ்த்து நீங்கலாக நானூறு பாடல்கள் வீதம் உள்ளன. ஆனால், புறநானூற்றிலோ, பாரதம் பாடிய பெருந்தேவனாரின் கடவுள்வாழ்த்துப் பாடல் உட்பட நானூறு பாடல்கள் உள்ளன. மேற்கொண்டு இருக்க வேண்டிய இன்னொரு பாடல் என்ன ஆயிற்று என்று தெரியவில்லை. இந்த நானூறு பாடல்களுக்குள்ளேயே, 267 - ஆம் பாடலும் 268 - ஆம் பாடலும் கிடைக்கவில்லை. இந்த இரண்டுடன், இன்னும் ஒரு பாடல் கிடைக்கவில்லை எனக்கூறிக் கிடைக்காத பாடல்களின் எண்ணிக்கையை மூன்றாக்கலாம். ஒருவேளை, இயற்கையாகவே, பாரதம்பாடிய பெருந்தேவனாரின் கடவுள்வாழ்த்துப் பாடலையும் சேர்த்துத்தான் நானூறு பாடல்களாகத் தொகுத்தார்களோ என்னவோ! கடவுள் வாழ்த்து அகத்திணையாகாது, புறத்திணையைச் சேர்ந்ததேயாகும். எனவே, மற்ற மூன்று அகப்பொருள் தொகை நூல்களில் நானூறு பாடல்களுள் ஒன்றாகக் கடவுள் வாழ்த்துப் பாடலை அடக்காமல், அதனைத் தனியாத முன்னால் அமைத்தனர். ஆனால், புறநானூறு புறப்பொருள் நூல் ஆதலின், நானூறு பாடல்களுக்குள் ஒன்றாகக் கடவுள் வாழ்த்தினையும் சேர்க்க முடிந்தது. பாரதம் பாடிய பெருந்தேவனார் கடைச் சங்கப் புலவர்களுள் ஒருவர் என்பது ஈண்டு நினைவிருக்கவேண்டும்.

நானூறு பாடல்களுள் 267, 268 - ஆம் பாடல்கள் முற்றும் கிடைக்கவில்லை. 328 - ஆம் பாடலில், முதல் அடியின் முதல் சீரின் முதல் அசை இல்லை. 370 - ஆம் பாடலில் முதல் அடி முழுதும் இல்லை. 244 - ஆம் பாடலில் முதல் இரண்டரை அடிகள் மட்டுமே உள, பிற்பகுதி இல்லை. 355 - ஆம் பாடலில் முதல் மூன்றடிகள் தவிரப் பிற்பகுதி இல்லை. இவைதவிர, ஏறக்குறைய 40 பாடல்களுக்கு இடையிடையே சில சொற்களும் - சொற்றொடர்களும் - அடிகளும் இல்லை. இந்த இழப்புக்கள் சுவடி ஓலைகளின் சிதைவால் ஏற்பட்டவை.

புறநானூற்றில் முதலில் பாடலும், அதன் கீழே திணையும், துறையும், அவற்றின் கீழே ஆசிரியர் பெயரும் அமைக்கப் பட்டுள்ளன. இந் நூற்பாடல்களுக்கு உரிய துறைகள், நூலைத் தொகுத்தவரால் கொடுக்கப் பட்டதாகத் தெரியவில்லை; பின் வந்தவர்கள் கொடுத்திருக்க வேண்டும்- என்பது நச்சினார்க்கினியர் கருத்து. இதனை, தொல்காப்பியம்– புறத்திணையியலில், 'கொடுப்பார் ஏத்திக் கொடாஅர்ப் பழித்தலும் என்று, தொடங்கும் (35 – ஆம்) நூற்பாவின் கீழ் அவர் எழுதியுள்ள.

"தத்தம் புதுநூல் வழிகளால் புறநானூற்றிற்குத் துறை கூறினாரேனும், அகத்தியமும் தொல்காப்பியமுமே தொகைகளுக்கு நூலாகலின், அவர் சூத்திரப் பொருளாகத் துறைகூற வேண்டுமென் றுணர்க."

என்னும் உரைப் பகுதியால் அறியலாம். புறநானூற்றில் புறப்பொருளுக்கு உரிய பன்னிரண்டு திணைகளும் ஏறக் குறைய இடம் பெற்றுள்ளன. அத்திணைகள் பற்றிய விவரம் வருமாறு:— (1) வெட்சி=ஆனிரைகளைக் கவர்தல். (2) கரந்தை=ஆனிரைகளை மீட்டல். (3) வஞ்சி=பகைவர். நாட்டின் மேல் படையெடுத்தல். (4) காஞ்சி=நாட்டிற்கு உரியவர் தம் நாட்டைக் காத்தல். (5) உழிஞை=பகைவர் அரணைத் தாக்குதல். (6) நொச்சி=அரணுக்கு உரியவர் தம் அரணைக் காத்தல். (7) தும்பை=இருதரப்பினரும் தம் வலிமையை நிலைநாட்டப் போரிடுதல். (8) 'வாகை=வெற்றி பெறுதல், போர் வெற்றியேயன்றி மற்றத் துறை வெற்றிகளும் வாகையுள் அடங்கும். (9) பாடாண்=ஒருவருடைய கொடை, வீரம் முதலிய சிறப்புக்களைப் புகழ்ந்து பாடுதல். (10) பொதுவியல்=இதுவரை சொன்னவற்றிற்குப் பொதுவான செய்திகளையும், சொல்லாது விட்ட செய்திகளையும், நிலையாமை, வீடுபேறு முதலிய பொருள் பற்றியும் விளக்குதல். (11) கைக்கிளை=ஆண் பெண் இருபாலருள் ஒருவரிடம் மட்டும் உள்ள ஒருதலைக் காமம். (12) பெருந்திணை=பொருந்தாக் காமம்.

இனி, புறநானூற்றில் ஒவ்வொரு திணைக்கும் உரிய பாடல் எண்ணிக்கை முறையே வருமாறு:—

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1. | வெட்சி | ... 5 | 7. | தும்பை | ... 27 |
| 2. | கரந்தை | ... 12 | 8. | வாகை | ... 80 |
| 3. | வஞ்சி | ... 11 | 9. | பாடாண் திணை | ... 139 |
| 4. | காஞ்சி | ... 33 | 10. | பொதுவியல் | ... 73 |
| 5. | உழிஞை | ... ? | 11. | கைக்கிளை | ... 3 |
| 6. | நொச்சி | ... 6 | 12. | பெருந்திணை | ... 5 |

புறநானூற்றில் இரண்டு பாடல்கள் முழுதும் கிடைக்கவில்லை. எனவே, அவற்றிற்குரிய திணைகள் தெரியவில்லை. வேறு சில பாடல்களின் திணைகளும் அறிவிக்கப்படவில்லை: அந்த இடம் செல்லரித்து விட்டது போலும்! மேலே தரப்பட்டுள்ள பட்டியலில் உழிஞைத் திணைக்கு ஒரு பாடலும் இல்லாததை அறியலாம். ஒருவேளை, கிடைக்காத பாடல்கள் உழிஞைத் திணையைப் பற்றியனவாயும் இருக்கலாம். உழிஞைத் திணைக்கெனத் தனிப்பாடல்கள் இல்லாவிடினும், சிலவேறு திணைப்பாடல்களின் ஊடே உழிஞைத் திணையும் மறைமுகமாக ஊடுருவி இடம் பெற்றிருப்பதை நூலை ஊன்றிக் கற்பவர் உணர்வர்.

புறநானூற்றில், பன்னிரு திணைகளுள், பாடாண் திணை நூற்று முப்பத்தொன்பது பாடல்களுக்குக் குறையாமல் பெற்று முதலிடத்தில் நிற்கிறது. எண்பது பாடல்களுக்குக் குறையாத வாகைத் திணை இரண்டாவது இடமும் எழுபத்து மூன்று பாடல்களுக்குக் குறையாத பொதுவியல் திணை மூன்றாவது இடமும் முறையே பெற்றுள்ளன. மற்றத் திணைகள் மற்றப் பாடல்களைக் குறைந்த அளவில் பங்கிட்டுக் கொண்டுள்ளன.

இந்த அமைப்பினை நோக்குங்காற் - மாடு பிடித்தல் நாடு பிடித்தல், அரண் முற்றுகை, வலிமைப் போர் ஆகிய புறத்திணையைக் காட்டிலும் ஒருதலைக்காமமும்பொருந்தாக் காமமும் ஆகிய அகப்புறத்திணையைக் காட்டிலும், பாடாண் திணை, வாகைத்திணை, பொதுவியல்திணை என்னும் மூன்று புறத்திணைகளே புறநானூற்றில் பெரும்பாலும் பேசப்

பட்டுள்ளன என்னும் உண்மை புலனாகும். முடியுடைப் பேரரசர்கள் – சிற்றரசர்கள் – குறுநில மன்னர்கள்-வள்ளல்கள் முதலியோரின் கொடை, வீரம், பண்பு .முதலியவை சிறப்பிக்கப் பெற்றிருக்கும் காட்சியைப் புறநானூற்றில் மிகுதியாகக் காணலாம்: அடுத்து, பொதுவான உலக இயல்புகள் – நடைமுறைகள் – மெய்யறிவுக் கோட்பாடுகள், நிலையாமை யுணர்வுகள், உள்ளப் பண்பாட்டுக் கூறுகள் முதலியவை மிகுதியாக இடம் பெற்றுள்ளமையை அறியலாம். எனவே, தமிழர்கள் அகப்பொருள் அல்லாத புறப்பொருள் என்னும் பெயரால் போரைப்பற்றியே பாடிக் கொண்டிருந்தார்கள் என்று கூற முடியாது: இம்மையிலும் மறுமையிலும் வாழ்வு வளம்பெறுதற்கு வேண்டிய வழி முறைகளையே வகுத்துள்ளார்கள்-என்னும் பேருண்மையும்புலனாகும். மற்றும், புறநானூற்றால், பண்டைக்கால வரலாறும் பண்பாடும் தெரியவருகின்றன.

புறநானூறு திணைவாரியாகத் தொகுக்கப் படவில்லை; பன்னிரு திணைகளும் கண்டபடி மாறிமாறிக் கலந்துள்ளன. புறநானூறு புலவர் வாரியாகவும் தொகுக்கப்படவில்லை; பலர் பாடல்களும் விட்டுவிட்டு மாறிமாறிக் கலந்தே அமைக்கப்பட்டுள்ளன. ஆனால், புறநானூற்றுத் தொகுப்பில் ஒரு வகைக் கலைநயம் கையாளப்பட்டுள்ளது; அஃதாவது, – புறநானூறு அரசர்களை மையமாகக் கொண்டு தொகுக்கப் பட்டுள்ளதாகத் தோன்றுகிறது. அரசர்களுள்ளும் முடியுடை மூவேந்தர் முதலிடம் பெற்றுள்ளனர்; அடுத்து சிற்றரசர்கள், குறுநில மன்னர்கள், வள்ளல்கள், முதலியோர், மாறிமாறி இடம் பெற்றுள்ளனர். முற்பகுதியில் இடம்பெற்றுள்ள முடியுடைய வேந்தர்கள் தொடர்பான பாடல்கள் நூல் முழுவதும் இடையே ஒரோவழி இருக்கத்தான் செய்கின்றன.

முடியுடை மூவேந்தர் தொடர்பான பாடல்களை அமைத்த முறையில் ஒருவகை அழகு உள்ளது. சேரமன்னர் முதலிலும் பாண்டியர் இரண்டாவதாகவும் சோழர் மூன்றாவதாகவும் மாறிமாறி இடம் பெற்றுள்ளனர். எடுத்துக்காட்டாக, – புற

நானூற்றில் முதல் பாட்டு கடவுள் வாழ்த்து; இரண்டாவது பாட்டு சேரமன்னர் ஒருவர் பற்றியது; மூன்றாவது பாட்டு பாண்டிய மன்னர் ஒருவர் தொடர்பானது; நான்காவது பாடல் சோழர் ஒருவர் பற்றியது; மீண்டும் அதே முறை-ஐந் தாவது பாட்டு சேரர்; ஆறாவது பாண்டியர்; ஏழாவது சோழர்; மீண்டும் அதே எட்டாவது சேரர்; ஒன்பதாவது பாண்டியர்; பத்தாவது சோழர்; இப்படியே சுழல்முறை செல் கிறது. போகப் போகச் சில இடங்களில் சேரரும் பாண்டியரும் மட்டும் மாறிமாறி வருவர்; சில இடங்களில் பாண்டியரும் சோழரும் மாறிமாறி வருவர்; சில இடங்களில் ஒருகுடி மன் னர் சார்பான பாடல்கள் சில தொடர்ந்து வரும்; நெடுந் தொலைவு சென்றதும், இந்தச் சுழல் முறையில்லாமல், பல ரைப் பற்றிய பாடல்களும், பல்பொருள் பற்றிய பாடல்களும் மாறிமாறிக் கலந்து வரும். கிடைத்திருக்கும் பாடல்களின் எண் ணிக்கைக்கு ஏற்பவும் பாடல்களில் அமைந்துள்ள பொருள் கட்கு ஏற்பவும் சுழல்முறை கையாளப்பட்டுள்ளது.

சேரர் – பாண்டியர் – சோழர் என்னும் சுழல்முறைக்கு எடுத்துக்காட்டாக, முதல் சுழலில் உள்ள பெயர்கள் வரு மாறு:—இரண்டாவது பாட்டு சேரமான் பெருஞ்சோற்றுதியஞ் சேரலாதனை முரஞ்சியூர் முடிநாக ராயர் பாடியது; மூன்றா வது பாட்டு: பாண்டியன் கருங்கை யொள்வாட் பெரும்பெயர் வழுதியை இரும்பிடர்த் தலையார் பாடியது; நான்காவது பாட்டு: சோழன் உருவப் பஃறேர் இளஞ்சேட் சென்னியைப் பரணர் பாடியது; இவ் வாறாகச் சுழல்முறை சென்றுகொண் டிருக்கிறது. இந்தச் சுற்றுச் சுழல் முறை நமக்கு அறிவிப்பதா வது:—

இப்போது பலரும் சொல்லி வருகிற 'சேர சோழ பாண்டி யர்' என்னும் வரிசை முறைக்கு மாறாக, 'சேர பாண்டிய சோழர்' என்னும் வரிசை முறையை இச்சுழல் முறை நமக்கு நினைவூட்டுகிறது. புறநானூற்றைத் தொகுத்தவர் பெயரோ நூலின் இறுதியில் – அல்லது, முதலில் – எங்கும் தரப்பட வில்லை; ஆயினும், புறநானூற்றைக் கடைச் சங்கத்தினர் தொகுத்தனர் என்னும் முடிவுக்கு நாம் முன்னரே வந்துள்

ளோம். புறநானூறுதொகுத்தவர்கள் 'நீக்குப்போக்கு' தெரிந்தவர்கள். புறநானூற்றிலுள்ள சேரர் தொடர்பான பாடல்களையெல்லாம் ஒரு சேரத் தொகுத்து முதலில் அமைத்தால், மற்ற இருகுடி மன்னர்க்கும் என்னவோபோல் இருக்கும். இதே போலப் பாண்டியர்களின் பாடல்கள் அனைத்தையுமோ, சோழர்களின் பாடல்கள் அனைத்தையுமோ ஒரு சேரத் தொகுத்து முன்னால் அமைத்தால் மற்றவர்க்கு என்னவோ போல் இருக்கலாம். எனவே, முடியுடை மூவேந்தர்க்குள் வேறுபாட்டிற்கு இடமின்றி மூவர் பாடல்களையும் தலைக்கு ஒன்று வீதம் மாற்றிமாற்றி அமைத்துத் தொகுத்தனர்.

இந்தப் பொருத்தமான சுழல் முறையிலேகூட, சேரரை முதலிலும், பாண்டியரை இடையிலும், சோழரை இறுதியிலும் அமைத்ததற்கு ஏதேனும் தக்க காரணம் இருக்கமுடியுமா? இதற்கு உரிய தக்க காரணமாக ஒன்றும் சொல்லத் தோன்றவில்லை. மூவருள் யாராவது ஒருவர் முதலிலும், இன்னொருவர் இடையிலும், மற்றொருவர் இறுதியிலும் இருந்துதானே தீரவேண்டும்!

இவ்வாறு புறநானூறு தொகுத்தவர்க்கு முன்னோடி தொல்காப்பியராவார். தொல்காப்பியம் - பொருள் அதிகாரம்-புறத்திணையியல் 5 ஆம் நூற்பாவில், மூவேந்தரின் பூக்களைக் குறிக்கு மிடத்தில்

"வேந்திடை தெரிதல் வேண்டி ஏந்துபுகழ்ப் போந்தை வேம்பே ஆர்என வருஉம் மாபெருந் தானையர்மலைந்த பூவும்" என்று தொல்காப்பியர் குறிப்பிட்டுள்ளார். போந்தை (பனை) சேரர்க்கும், வேம்பு பாண்டியர்க்கும் ஆர் (ஆத்தி சோழர்க்கும் உரியனவாம். இங்கே, சேரர், பாண்டியர், சோழர் என்னும் முறைவைப்பு உள்ளமை காணலாம்.

மற்றும், ஒய்மானாட்டு நல்லியக் கோடனை இடைக்கழி நாட்டு நல்லூர் நத்தத்தனார் பாடிய சிறுபாணாற்றுப்படை என்னும் நூலிலும் இத்தகைய முறைவைப்பு உள்ளது. இந்நூலில், சேரரின் வஞ்சிநகர் முதலிலும், பாண்டியரின் மதுரை

இரண்டாவதாகவும், சோழரின் உறந்தை மூன்றாவதாகவும் கூறப்பட்டுள்ளன.

> ''வடபுல இமயத்து வாங்குவில் பொறித்த
> எழுவுறழ் திணிதோள் இயல்தேர்க்குட்டுவன்
> வருபுனல் வாயில் வஞ்சியும் வறிதே...'' (48 – 50)

> ''கண்ணார் கண்ணிக் கடுந்தேர்ச் செழியன்
> தமிழ்நிலை பெற்ற தாங்கரு மரபின்
> மகிழ்நனை மறுகின் மதுரையும் வறிதே...'' (65 – 67)

> ''தூங்கெயில் எறிந்த தொடி விளங்கு தடக்கை
> நாடா நல்லிசை நல்தேர்ச் செம்பியன்
> ஓடாப் பூட்கை உறந்தையும் வறிதே...'' (81 – 83)

என்பன பாடல் பகுதிகள். இத்தகைய முறைவைப்பே புறநானூற்றிலும் பின்பற்றப்பட்டுள்ளது.

மூன்று நிலைகள்

தமிழ் ஐயா. உ.வே.சாமிநாத ஐயர் அவர்கள் தமது புறநானூற்றுப் பதிப்பு முகவுரையில் பின்வருமாறு ஒரு கருத்துத் தெரிவித்துள்ளார்கள்:—

''எனக்குக் கிடைத்த ஏட்டுச் சுவடிகளுள் ஒரு பிரதியின் தொடக்கத்தில் 'அறநிலை' என்று வரையப் பெற்றிருந்தது. அப்படியே பொருள்நிலை, இன்பநிலை என்ற பகுதிகள் எந்த எந்தப் பாடலிலிருந்து தொடங்குமோ வென்று தேடிப் பார்த்ததில் ஒரு பிரதியிலும் கிடைக்கவில்லை; ஆனாலும் இந்நூல் அறநிலை, பொருள்நிலை, இன்பநிலை என்னும் மூன்று பகுதிகளாகப் பகுக்கப் பெற்றிருக்க வேண்டுமென்பது இதனால் ஊகித்தறியப் படுகின்றது.''—

இவ்வாறு உ.வே.சா. அவர்கள் எழுதியுள்ளார்கள். ஓர் ஓலைச்சுவடியின் தொடக்கத்தில் 'அறநிலை' என்று இருந்ததால், புறநானூறு மூன்று நிலைகளாகப் பகுக்கப்பட்டிருக்க வேண்டும் என்பது உ.வே.சா. கருத்து. இதுபற்றி இதற்கு மேல் அவர்கள் ஒன்றும் தெரிவிக்கவில்லை. ஆனால், இதுபற்றி இன்னும் ஒரு சிறிது நாம் சொல்ல வேண்டியுள்ளது.

எந்த ஓலைச் சுவடியிலுமே இடையில் பொருள்நிலை, இன்பநிலை என்னும் தலைப்புக்கள் இல்லை என்றும், அறநிலை என்னும் தலைப்பு ஓர் ஓலைச் சுவடியில் மட்டும் – தொடக்கத்தில் மட்டும் – இருந்தது என்றும் உ.வே.சா. அவர்கள் அறிவித்துள்ளார்கள். இந்த நிலையில், புறநானூறு மூன்று நிலைகளாகப் பகுக்கப் பெற்றிருக்க வேண்டும் என்று கூறுவதற்கு என்ன சான்று காட்ட முடியும்? உ.வே.சா. இருந்தால் அவரிடம் நேரில் சில செய்திகளைக் கேட்டறியலாம், அவர் இல்லையே!

இப்பொழுது நமக்குக் கிடைத்திருக்கும் புறநானூற்றுத் தொகுப்புப் படியில் (பிரதியில்), அறநிலை பற்றிய பாடல்களனைத்தும் தனியாகவும், பொருள்நிலை பற்றிய பாடல்கள் அனைத்தும் தனியாகவும், இன்பநிலை பற்றிய பாடல்கள் அனைத்தும் தனியாகவும் தொகுத்து அமைக்கப் பெற்றிருக்கவில்லை. இந்த மூன்று நிலைப் பாடல்களும் மாறி மாறிக் கலந்தே உள்ளன. இந்த அமைப்பின்படி நோக்கின், புறநானூறு மூன்றுநிலைகளாகப் பகுக்கப்பட்டிருக்க வேண்டும் என்று எவ்வாறு கருத முடியும்? ஒருவேளை, 'அறநிலை' என்று தொடக்கத்தில் குறித்திருந்ததாக உ.வே.சா. குறிப்பிட்டுள்ள ஓலைச் சுவடியில் மட்டும், மூன்று நிலைப் பாடல்களும் தனித் தனியாகப் பகுக்கப்பட்டு எழுதப்பட்டிருக்கக் கூடுமா? அந்தச் சுவடியை நேரில் பார்த்தாலேயே உண்மை விளங்கும். அந்தச் சுவடியில் அப்படியிருந்ததாக உ.வே.சா. அவர்களும் குறிப்பிடவில்லையே!

புறநானூற்றைத் தொகுத்தவர்கள் மூன்றுநிலைப் பாடல்களையும் கண்டபடி மாறி மாறி அமைத்திருப்பினும், பிற்பாடு வந்த ஓர் அறிஞர், தமது விருப்பம்போல், நானூறு பாடல்களையும் மூன்று நிலைகளாக அடுக்கி வரிசைப்படுத்தி எழுதி வைத்துக் கொண்டு பயன்படுத்தி வந்திருக்கலாம். பின் வருபவர்கள் இவ்வாறு தம் வசதிக்கு ஏற்ப வரிசைப்படுத்திக்கொள்வது வழக்கந்தான். எட்டாம் நூற்றாண்டில் இயற்றப்பட்ட சேந்தன் திவாகரம், பிங்கலம் என்னும் நிகண்டுகளில், இக்கால அகர வரிசை (Alphabetical Order) முறையில் சொற்

பொருள் விளக்கம் தரப்படாமல் கண்டபடி இருந்தது. எனவே, பின் வந்தவர்கள், சொற்பொருள் விளக்கும் சூத்திரங்களை அகர வரிசையில் அடுக்கி ஓலைச் சுவடியில் எழுதி வைத்துக் கொண்டார்கள், பிற்காலத்தில் இந்த அகரவரிசை முறை யிலேயே அச்சிடப்பட்டது. ஆனால், நிகண்டு ஆசிரியர்கள் இந்த அகர வரிசை முறையில் எழுதவில்லை. பிற்காலத்தார் தம் விருப்பம்போல் சூத்திரங்களை வரிசைப்படுத்தி அமைத் துக் கொண்டனர்.இவ்வாறே, புறநானூற்றிலும் மூன்றுநிலைப் பாடல்கள் பின் வந்தவரால் வரிசைப்படுத்தி எழுதப்பட்டிருக் கலாம். இத்தகு மனப்பான்மையின் விளைவே, ஓர் ஓலைச் சுவடியின் தொடக்கத்தில் 'அறநிலை' என்னும் தலைப்பு தலைகாட்டியிருப்பதற்குக் காரணமாயிருக்கலாம்.

ஈண்டு இதுகுறித்து இன்னொரு விதமாகவும் எண்ணத் தோன்றுகிறது, பின்வந்தவர் புறநானூற்றுப் பாடல்களை மூன்று தனித்தனி நிலைகளாகப் பிரித்து எழுதி வைக்கும் முறை ஒரு புறம் இருக்க,-அந்தந்த நிலைக்கு உரிய பாடலுக்கு மேல் அறநிலை, பொருள்நிலை, இன்பநிலை என்னும் மூன்ற னுள் உரிய தலைப்பு ஒன்றினை எழுதி வைக்கும் முறையினை யும் கையாண்டிருக்கலாம் அல்லவா? சில பாடல்கள் இயற்கை யாகவே குறிப்பிட்ட ஒரு நிலையைச் சேர்ந்தனவாய்ப் பக்கத் தில்-பக்கத்தில் உள்ளன. சில இடங்களில், குறிப்பிட்ட ஒரு வரை ஒருவரே பாடிய பாடல்கள் சில, 'அவனை அவர் பாடி யது' என்னும் கீழ்க் குறிப்புத் தொடருடன் தொடர்ந்து காணப்படும். இவ்வாறே, ஓரிடத்தில் கைக்கிளைத் திணைப் பாடல்கள் தொடர்ந்தும் மற்றோரிடத்தில் பெருந்திணைப் பாடல்கள் தொடர்ந்தும் இருக்கவும் காணலாம். இத்தகைய இடங்களில் பல பாடல்கட்கும் சேர்த்து ஒரு தலைப்பு இட்டி ருக்கலாம். இங்ஙனம் செய்திருப்பின், மூன்று தலைப்புக்களும் புறநானூற்றுக்கு இடையிடையே பல இடங்களில் மாறி மாறி இடப்பட்டிருக்கும். ,இவ்வாறும் யாரேனும் செய்திருக்கலாம். இத்தகு முயற்சியின் ஒரு பகுதியே, ஓர் ஓலைச் சுவடியின் தொடக்கத்தில் 'அறநிலை' என்னும் தலைப்பு இருந்ததாகும் -என்றும் கொள்ளலாம். ஆனால், இத்தகு முயற்சியில் முழு

வெற்றி கிடைக்காமல் ஒழிந்தது. இதில் முழு வெற்றி பெற்ற சுவடிகள் மறைந்து போயிருக்க வேண்டும். இப்படி ஏதேனும் ஓர் அடிப்படையை வைத்து நோக்கினாலேயே, உ.வே.சா. அவர்கள் கூறியிருப்பதை நம்ப முடியுமன்றோ!

இங்கே ஓர் ஐயம் எழ இடம் உண்டு. புறப்பொருளில் அறநிலை, பொருள்நிலை என்னும் இரண்டுதானே இருக்க முடியும்? இன்பநிலையும் எவ்வாறு இருக்கக் கூடும்? இன்ப நிலை அகப்பொருளுக்கு உரியதல்லவா?, என்ற ஐயமே அது. இதற்குத் தகுந்த விடை இல்லாமற் போகவில்லை. புறப் பொருளுக்கு அறம், பொருள், இன்பம் என்னும் மூன்று நிலை களும் உண்டு எனப் பன்னிரு படலம் கூறுகின்றது. பன்னிரு படலம் இடைச்சங்க காலநூல் என்பதை மீண்டும் நினைவு செய்துகொள்ளவேண்டும்.

இனிப் பன்னிரு படல நூற்பாக்கள் வருமாறு: –

‘ஆன்ற சிறப்பின் அறம்பொருள் இன்பமென
மூன்றுவகை நுதலியது உலகம் அவற்றுள்
அறமும் இன்பமும் அகலா தாகிப்
புறன்எனப் படுவது பொருள்குறித் தன்றே.’
‘ஆங்ஙனம் உரைப்பின் அவற்றது வகையால்
பாங்குறக் கிளந்தனர் என்ப அவைதாம்
வெட்சி கரந்தை வஞ்சி காஞ்சி
உட்குவரு சிறப்பின் உழிஞை நொச்சி
முரண்மிகு சிறப்பின் தும்பையுள் ளிட்ட
மறனுடை மரபின் ஏழே எனை
அமர்கொள் மரபின் வாகையும் சிறந்த
பாடாண் பாட்டொடு பொதுவியல் என்ப.,
‘கைக்கிளை ஏனைப் பெருந்திணை என்றாங்கு
அத்திணை யிரண்டும் அகத்திணைப் புறனே.,

புறத்திணைக்கு அறம், பொருள், இன்பம் என்னும் மூன்று நிலைகளும் உண்டு. வெட்சி, கரந்தை, வஞ்சி, காஞ்சி, உழிஞை, நொச்சி, தும்பை ஆகிய ஏழும் புறம் ஆகும்; வாகை, பாடாண் பொதுவியல் ஆகிய மூன்றும் புறத்துக்கும் புறமானவை (புறப்

புறம்) ஆகும்; கைக்கிளை, பெருந்திணை ஆகிய இரண்டும் அகத்திற்குப் புறமான அகப்புறம் ஆகும்; ஆக இவை பன்னிரண்டும் ஏதாவது ஒரு வகையில் புறம் என்னும் தகுதிக்கு உரியவையாகும்-என்பது மேலுள்ள நூற்பாக்களின் கருத்து.

இந்த இலக்கணப்படியே புறநானூற்றுப் பாடல்கள் அமைந்துள்ளன. அப்பாடல்களுள், வெட்சி, கரந்தை, வஞ்சி, காஞ்சி, உழிஞை, நொச்சி, தும்பை என்னும் ஏழு திணைகளைச் சேர்ந்த அனைத்துப் பாடல்களும், வாகை-பாடாண்-பொதுவியல் ஆகிய திணைப்பாடல்களுள் சிலவும் 'பொருள் நிலை யாகும்; வாகை, பாடாண், பொதுவியல் ஆகிய திணைப்பாடல் களுள் பல 'அறநிலை' யாகும். ஒருதலைக் காமமாகிய கைக்கிளை, பொருந்தாக் காமம் ஆகிய பெருந்திணை என்னும் இரு திணைப்பாடல்கள் அனைத்தும் 'இன்ப நிலை' யாகும். உ.வே.சா. அவர்கள் அறிவித்துள்ளபடி புறநானூற்றை மூன்று நிலைகளாகப் பாகுபாடு செய்திருப்பவர்கள் இந்த அடிப்படை யில்தான் அமைத்திருக்கக் கூடும்.

கைக்கிளை, பெருந்திணை என்னும் இரண்டினையும் அகம் என்று தொல்காப்பியம் கூறினும், பன்னிரு படலம் போன்ற நூல்கள், இவ்விரண்டும் அகத்தோடு தொடர்புடைய புறம் (அகப்புறம்) என்று கூறியுள்ளன. நச்சினார்க்கினியரும், தொல் காப்பியம்-அகத்திணையியலில் உள்ள 'மக்கள் நுதலிய அகன் ஐந்திணையும்' என்னும் (54 - ஆம்) நூற்பாவின் கீழ்.

"அகனைந்திணை எனவே, அகமென்பது நடுவுநின்ற ஐந் திணை யாதலின் கைக்கிளையும் பெருந்திணையும் அவற்றின் புறத்து நிற்றலின், 'அகப்புறம்' என்று பெயர் பெறுதலும் பெற்றாம்—

என்று கூறித் தொல்காப்பியத்தின் ஒட்டுறவைக்கொண்டே கைக்கிளையையும்பெருந்திணையையும் அகம்புறமாக்கிக் காட்டி யுள்ளார். எனவேதான், கைக்கிளைப்பாடல்களையும் பெருந் திணைப் பாடல்களையும் அந்தக் காலத்தில் புறநானூற்றில் சேர்த்துத் தொகுத்தார்கள். எனவே, புறநானூற்றில் 'இன்ப நிலை' இருப்பது குறித்து எந்த ஐயத்திற்கும் இடம் வேண்டிய தில்லை.

புறத்திலும் அறம் பொருள் இன்பம் என்னும் மூன்றுநிலை

களும் உண்டு எனப் பன்னிரு படலம் போன்ற நூல்கள் கூறி யிருத்தலாலும், திருக்குறளிலும் நாலடியாரிலுங்கூட இந்த மூன்று நிலைகளும் இருத்தலாலும், இவ்வாறு புறநானூற்றிலும் அமைத்துப் பார்க்கலாமே எனப் பின்வந்தவர் எவரோ இந்த மூன்று நிலைகளையும் புதிதாகப் புறநானூற்றிலும் புகுத்தி யிருக்க வேண்டும். இது சார்பாக இவ்வளவுதான் சொல்லமுடி கிறது. மேலும் அறிஞர்கள் ஆராய்ந்து காண்பாராக!

புறநானூற்றுப் புலவர்கள்

புறநானூற்றில் கிடைக்காத இரண்டு பாடல்கள் உட்பட மொத்தம் பதினாறு பாடல்களின் ஆசிரியர் பெயர்கள் தெரிய வில்லை. பெயர் தெரிந்த புலவர்கள் நூற்றைம்பத்தெழுவர் (157 பேர்) ஆவர். இவர்களுள், 33 பாடல்களுக்கு உரியவ ரான ஒளவையார் முதலிடமும், 28 பாடல்கட்கு உரிய கபிலர் இரண்டாவது இடமும், 15 பாடல்கட்கு உரிய கோவூர்க்கிழார் மூன்றாவது இடமும், 13 பாடல்களுக்கு உரியவர்களான பரணரும் உறையூர் ஏணிச்சேரி முடமோசியாரும் நான்காவது இடமும், பத்துப் பாடல்களுக்கு உரிய பெருஞ்சித்திரனார் ஆறாவது இடமும் முறையே பெற்றுள்ளனர். இந்த நூலிலும் ஒளவையாருக்கு அடுத்தபடி, கபிலர் முன்னணியில் இருப்பது காண்க. அவரோடு இணைந்த பரணரும் அப்படியொன்றும் குறைந்துவிடவில்லை.

அகப்பொருள் பற்றிய தொகை நூல்களிலும் புறப்பொருள் பற்றிய புறநானூற்றில் ஒளவையாரின் பாடல்கள் மிக்க இடம் பெற்றிருப்பது, அந்த நாளில் அரசர்களிடையே அவருக்கு இருந்த செல்வாக்கின் மிகுதியை அறிவிக்கின்றது. இரண்டாயி ரம் ஆண்டுகளுக்குமுன் எந்த நாட்டில் இவ்வளவுசெல்வாக் கினைப் பெண்மணி யொருவர் பெற்றிருக்க முடியும்!

புறநானூற்றைத் தொகுத்தவர்கள் பொன்னைத்தொகுத் துத் தந்தவர்களாவர்! 'யாதும் ஊரே யாவரும் கேளிர்' முதலிய உயர்ந்த கோட்பாடுகளை உலகிற்கு அளிக்கும் புற நானூற்றைத் தொகுத்துக் கொடுத்தவர்க்கு உலகம் செய்யக் கூடிய கைம்மாறு யாதோ? மற்றும், முறையான தமிழக வர லாறு இல்லாத குறையை இந்நூல் ஓரளவேனும் ஈடு செய்வ தால் இந்நூலின் தொகுப்பாளர்க்குத் தமிழர்கள் செய்யக்கூடிய கடப்பாடு என்னவோ?

---

# 21. ஐங்குறுநூறு

## பெயர் அமைப்பு

இந்த நூல், இறையனார் அகப்பொருள் உரையில் 'ஐங்குறுநூறு' என்னும் பெயருடன் ஐந்தாவதாக நிறுத்தப் பெற்றுள்ளது. அகப்பொருள் பற்றிய மருதம், நெய்தல், குறிஞ்சி, பாலை, முல்லை என்னும் ஐந்து திணைகளிலும் – ஒவ்வொரு திணைக்கும் நூறுவீதமாக அமைந்த குறுகிய ஐந்நூறு ஆசிரியப் பாக்களின் தொகுப்பாதலின், இஃது 'ஐங்குறுநூறு' என்று வழங்கப் பட்டது. இந்நூற் பாடல்கள் மூன்றடிச் சிற்றெல்லையும் ஆறடிப் பேரெல்லையும் உடையவை. நெடுந்தொகை, குறுந்தொகை, நற்றிணை, புறநானூறு என்னும் நானூறு பாக்கள் கொண்ட நான்கு தொகைநூல்களைக் காட்டிலும், அடியளவால் இது குறுகியதாதலின் ஐங் 'குறு' நூறு எனப்பட்டது.

அந்த நான்கு நூல்களும் இந்த நூலும் ஆசிரியப்பாவால் ஆனவை என்ற விதத்திலும் முதல் மூன்று நூல்களும் இந்நூலும் அகப்பொருள் பற்றியவை என்ற வகையிலும் ஒற்றுமை உடையனவாயினும், இவ்விரு தரப்புக்கும் இடையே சில வேற்றுமைகள் உண்டு. (1) பாடலின் அடியளவாலும் பாடலின் எண்ணிக்கையாலும் இவ்விரு தரப்பும் வேறுபட்டிருப்ப தல்லாமல் மேலும் குறிப்பிடத்தக்க சிலவேறுபாடுகள் கொண்டுள்ளன. அவை வருமாறு:

(2) அந்த நான்கும் நூற்றுவர்க்கு மேற்பட்ட பலரால் இயற்றப்பட்டவை; இந்நூல் குறிப்பிட்ட ஐவரால் ஆனது.

(3) அவை நான்கும் உதிரிப் பாடல்களின் தொகுப்புக்கள்; ஐங்குறு நூறோ, ஐவரால் ஆக்கப்பட்ட ஐந்து சிறு நூல்களின் திரட்டாகும்.

(4) அந்த நான்கினுள், முதல் மூன்றிலும் ஐந்து திணைப் பாடல்களும் மாறிமாறிக் கலந்துள்ளன. ஐங்குறு நூற்றில் திணைவாரியாகப் பாடல்கள் உள்ளன; அஃதாவது,— ஒரு

திணைக்கு உரிய நூறு பாடல்கள் முடிந்த பின்னரே, அடுத்த திணைக்கு உரிய பாடல்கள் தொடங்கும்.

(5) அந்த மூன்றனுள் நெடுந்தொகை என்னும் நூலில் பாலை, குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என்னும் வரிசை முறை ஒரு வகையில் கடைப்பிடிக்கப்பட்டுள்ளது; குறுந் தொகையிலும் நற்றிணையிலும் எந்த வரிசை முறையும் இன்றி ஐந்து திணைகளும் கண்டபடி மாறிமாறிக் கலந்துள்ளன. ஆனால், ஐங்குறு நூற்றில், மருதம், நெய்தல், குறிஞ்சி, பாலை, முல்லை என்னும் வரிசைமுறை அமைந்துள்ளது.

(6) அந்த நூல்களில், இன்னின்ன திணைக்கு இத்தனை யித்தனை பாடல்கள் என்ற வரையறையின்றி, திணைக்குத் திணை கண்டபடி ஏறவும் தாழவும் உள்ளன. ஐங்குறு நூற்றில் ஒவ்வொரு திணைக்கும் நூறு - நூறு பாடல்கள் சரியீட்டில் உள்ளன.

இவ்வாறாக, 'அகப்பொருள் பற்றிய ஆசிரியப் பாவாலான தொகை நூல்களுக் குள்ளேயே சில வேறுபாடுகளைக் காண முடிகிறது.' இந்தவேறுபாடுகளைக் கொண்டும் இந்த வேறுபாடு களின் அடிப்படையில் எழுந்த 'ஐங்குறு நூறு' என்னும் பெயர் அமைப்பைக் கொண்டும், அந்த மூன்று அகப்பொருள் தொகை நூல்களுக்குப் பின்னரே ஐங்குறு நூறு தொகுத்து வடிவமைக் கப்பட்டது என உய்த்துணரலாம். இதனை அறிவிக்கவே, இந்த வேறுபாடுகள் ஆராயப்பட்டன.

**ஆசிரியர்கள்**

இந்நூலின் மருதப் பகுதியைப்பாடிய புலவர் ஓரம் போகியார் நெய்தலைப் பாடியவர் அம் மூவனார், குறிஞ்சிப் பகுதியின் ஆசிரியர் கபிலர்; பாலை பாடியவர் ஓதலாந்தை யார் முல்லையின் ஆசிரியர் பேயனார். இதனை,

**'மருதமோ ரம்போகி நெய்தலம் மூவன்**
**கருதுங் குறிஞ்சி கபிலன்—கருதிய**
**பாலையோத லாந்தை பனிமுல்லை பேயனே**
**நூலையோ தைங்குறு நூறு'.**

என்னும் வெண்பாவால் உணரலாம். இந்த ஐவரும், பாடிய ஐந்நூறு பாடல்களுக்கு முன்னால் அமைக்கப் பெற்றுள்ள கடவுள் வாழ்த்துப் பாடலைப் பாடியவர், பாரதம் பாடிய பெருந்தேவனார் ஆவார்.

தொகுப்பாளர்கள்

இந்நூல் படியின் இறுதியில், ''இத்தொகை தொகுத்தார் புலத்துறை முற்றிய கூடலூர் கிழார்; இத்தொகை தொகுப் பித்தார் யானைக்கட் சேய் மாந்தரஞ் சேரல் இரும்பொறை யார்''—என, நூல் தொகுத்தவர் பெயரும் தொகுப்பித்தவர் பெயரும் குறிப்பிடப்பட்டுள்ளன. இந்நூலைத் தொகுத்த கூடலூர் கிழார்' சங்கப்புலவர்களுள் ஒருவர். இவர் பாடல்கள் குறுந்தொகையில் (166, 167, 214) மூன்றும், புறநானூற்றில் ஒன்றும் உள்ளன. இவர் புலமை முதிர்ந்தவர் என்பதனைப் 'புலத்துறை' முற்றிய கூடலூர் 'கிழார்' என்னும்பெயர் அமைப் பால் அறியலாம். கீழ்க்கணக்கு நூல்களுள் ஒன்றாகிய முது மொழிக் காஞ்சியை இயற்றிய 'மதுரைக் கூடலூர் கிழார்' என்னும் புலவரினும் இவர் வேறானவர் என்பதை யறியவும், 'புலத்துறை முற்றிய கூடலூர் கிழார் என்னும் சிறப்பு அடை மொழிப் பெயர் உதவுகிறது. கூடலூர் என்னும் பெயரில் பல ஊர்கள் உள்ளன. புலத்துறை முற்றிய கூடலூர் கிழார் மலை நாட்டன்கண் உள்ள கூடலூர்க்காரர். இவர் யானைக்கட்சேய் மாந்தரஞ் சேரல் இரும்பொறை என்னும் சேர மன்னனின் விருப்பத்தின்படி இந்நூலைத் தொகுத்தார்.

இந்தச் சேரமன்னன் சேரநாட்டுக் கடற்கரைப் பட்டின மாகிய தொண்டியைத் தலைநகராகக் கொண்டு ஆண்டவன்; தமிழ் ஆர்வம் உடையவன்; தமிழ் வளர்த்தவன்; தமிழ்ப் புலவர்களை ஆதரித்தவன். இவனைக் கூடலூர்கிழார், குறுங்கோழியூர் கிழார், பொருந்தில் இளங்கீரனார் ஆகிய புலவர் மூவர் போற்றிப் பாடியுள்ளனர். எனவே, இவன் கூடலூர் கிழாரைக் கொண்டு ஐங்குறுநூற்றைத் தொகுப் பித்ததில் வியப்பில்லை. இவர்கள் இருவருக்கு மிடையே நெருங்கிய பிணைப்பு இருந்தமை புறநானூற் றுப் பாடல் ஒன்றால் புலப்படுகிறது. இந்தச் சேரனது

ஆட்சியின்போது ஒருநாள் விண்மீன் ஒன்று விழுந்ததாம்; அதைக் கண்ட கூடலூர் கிழார், 'இத்தனையாவது நாளில் அரசன் இறந்து விடுவான்' என்று கணித்துத்தெரிந்து கொண்டு, அந்த முடிவுக்கு அஞ்சி வருந்தியிருந்தாராம். அவ்வாறே அந்த நாளில் இம் மன்னன் இறந்துவிட்டானாம். இவனது இழப்பைப் பொறாத கூடலூர் கிழார் மிகவும் இரங்கிப் பாடிய நீளமான பாடல் ஒன்று புறநானூற்றில் உள்ளது. அது, 'ஆடியல் அழல் குட்டத்து' என்று தொடங்கும் (229 – ஆம்) பாடலாகும். இதைக் கொண்டு இவர்களின் நெருங்கிய உறவை அறியலாம். எனவே, இந்தச் சேர மன்னனது தலைமையில் – ஆதரவில், கூடலூர் கிழார் ஐங்குறுநூறு தொகுத்தார் என்னும் செய்தி முற்றிலும் பொருந்தும்.

சில தொகை நூல்கள் பாண்டியரின் மேற்பார்வையில் தொகுக்கப்பட்டிருக்க, ஐங்குறுநூறு சேரர் மேற்பார்வையில் தொகுக்கப்பட்டிருக்கிறது. முடியுடை மூவேந்தர்க்குள் ஆட்சியைப்பொறுத்தவரை வேறுபாடிருப்பினும், தமிழ் வளர்ச்சியைப் பொருத்தவரை வேறுபாடு இல்லை. ஒரே புலவர் முத்தரப்பு மன்னர்களையும் பற்றிப் பாடியிருப்பது காண்க. மூவேந்தர்களின் ஆதரவில்–மேற்பார்வையில் தமிழ்ச் சங்கப் புலவர்கள் ஒருங்கிணைந்து செயல்பட்டனர். எனவே, எங்கு எவர் தலைமையில் எவரால் தொகுக்கப் படினும் அனைவர்க்கும் பொதுவே! இந்த ஒருங்கிணைந்த செயல்முறைக்குச் சான்று பகர, புறநானூற்றில் மூவேந்தர்களும் சுழல் முறையில் மாறி மாறி இடம் பெற்றிருப்பதொன்றே போதுமானதாகும்.

தொகையமைப்பு:

பல உதிரிப் பாடல்களின் தொகுப்பு 'பன்மலர் மாலை' போன்றதென்றும், பல சிறு நூல்களின் திரட்டு 'பன் மாலைத் திரள்' போன்றதென்றும் முன்பு ஓரிடத்தில் கூறப்பட்டுள்ளது. முதல் நான்கு தொகை நூல்களும் பல உதிரிப்பாடல்களின் தொகுப்பு ஆதலின், அவை 'பன்மலர் மாலை'யாகும். ஐங்குறுநூறு ஐந்து சிறு நூல்களின் திரட்டு ஆதலின் 'பன்மாலைத் திரள்' ஆகும். ஐங்குறுநூற்றில் ஐந்து சிறு நூல்கள் உள்ளன. ஒவ்வொரு நூலும் ஒவ்வொரு புலவரால் ஒவ்வொரு திணை

பற்றிப் பாடப்பெற்ற நூறுபாக்களைக் கொண்டதாகும். இந்த ஐந்து நூல்களும் எப்படி உருவாயின? கூடலூர் கிழார்க்கு எவ்வாறு கிடைத்தன?

சொல்லி வைத்தாற்போல்-அச்சில் வார்த்தற்போல், ஐந் திணைகளையும் பற்றி ஆளுக்கு நூறு பாடல்கள் வீதம், முன் கூட்டியே ஒருவர்க்கொருவர் பேசி வைத்துக்கொண்டு எழுதி னார்களா? நீ இந்தத் திணைபற்றி – அவர் அந்தத் திணை – நான் இந்தத் திணை பற்றி-என்று ஒருவர்க்கொருவர் பங்கு போட்டு எழுதினார்களா? அதிலும் ஒவ்வொரு திணைபற்றியும் நூறு ஆசிரியப் பாடல்கள் மட்டுமே எழுதுவது என்பது திட்டமா? மற்றும், பாடல்கள் மூன்று அடிக்குக் குறையாமலும் ஆறடிக்கு மிகாமலும் இருக்க வேண்டும் என்பது ஏற்பாடா? இவ்வளவு பொருத்தங்களும் இயற்கையாய் அமைந்தனவா? செயற்கையாய் அமைக்கப்பட்டனவா? இவ்வளவு பொருத்தங் களும் அமைய ஐந்து நூல்கள் கிடைத்ததால் கூடலூர் கிழார் அவற்றைத் தொகுத்து ஒரு நூலாக உருவாக்கினாரா?

ஒருவேளை, இப்படியிருக்குமா? பிற்காலத்தில் ஒவ்வொரு புலவரும் கலம்பகம் நூறு பாடல், அந்தாதி நூறு பாடல், பிள்ளைத் தமிழ் நூறு பாடல் என்று ஏராளமாகப் பாடித் தள்ளியது போலவே, முற்காலத்தில்-சங்க காலத்தில், புலவர் பலர் ஒவ்வொரு திணை பற்றியும் நூறு நூறு பாடல்கள் வீதம் பாடித் தள்ளினார்களா? இவ்வாறு, ஒவ்வொரு திணை பற்றி யும் நூறு பாடல்கள் கொண்ட நூல்கள் பல இருக்க, அவற்றுள் மிகச் சிறந்தனவாக-திணைக்கு ஒன்று வீதம் ஐந்து நூல்களைத் தேர்ந்தெடுத்து, ‘ஐங்குறு நூறு’ என்னும் பெயரில் கூடலூர் கிழார் தொகுத்தளித்தாரா?

ஐங்குறுநூறு இப்படியிப்படி உருவாகியிருக்கலாம் என்று மேலே இரண்டு முறைகள் கற்பனை செய்து காட்டப்பட்டன. அவற்றுள் ஏதேனும் ஒன்றை நம்பத் தோன்றினும், இன்னும் வேறுமுறையிலும் இந்நூல் உருவாகியிருக்கலாம்!

ஐங்குறுநூறு போலவே ஐந்து அகப்பொருள் திணைகளைப் பற்றிப் பேசும் ஆசிரியப்பாவால் ஆன நெடுந்தொகை, குறுந் தொகை, நற்றிணை என்னும் மூன்று தொகை நூல்களின்

பெயர்களைப் பார்த்த பின்னரே, 'ஐங்குறு நூறு' என்னும் பெயர் வைக்கப்பட்டது என்னும் செய்தி ஈண்டு மீண்டும் நினைவுக்கு வரவேண்டும். அவை நானூறாக இருப்பதால் இது 'ஐ—நூறு' எனப்பட்டது; அவற்றினும் இது குறுகிய பாடல்களை உடைத்தாயிருப்பதால், இது 'குறு நூறு' எனப் பட்டது. எனவே, ஐங்குறுநூறு என்னும் பெயர் அமைப்பி லிருந்தே, அந்த மூன்று நூல்களும் தொகுக்கப்பட்ட மாதிரி யிலேயே இந்த நூலும் தொகுக்கப்பட்டது என உணரலாம். இதற்கு விளக்கம் வேண்டும்:

எண்ணிறந்து கிடந்த பாடல்களிலிருந்து தேர்ந்தெடுத்து ஒரு நானூறை நெடுந்தொகை என்னும் பெயரிலும், மற்றொரு நானூறைக் குறுந்தொகை என்னும் பெயரிலும், இன்னொரு நானூறை நற்றிணை என்னும் பெயரிலும் தொகுத்தார் களல்லவா! அவ்வாறே ஐந்நூறு பாடல்களைத் தேர்ந்தெடுத்து ஐங்குறுநூறு என்னும் பெயரில் தொகுத்தனர். ஐங்குறு நூற்று ஆசிரியர்கள் ஐவரும் அவரவர் பாடியுள்ள திணையில் மிகவும் வல்லுநர் (Expert) ஆவர். அவர்கள் ஐங்குறு நூற்றில் உள்ள நூறு - நூறு பாடல்களோடு அமைந்து விடவில்லை. அவர வர்க்கு விருப்பமான திணையில் நூற்றுக்கு மேல் எண்ணிறந்த பாடல்கள் பாடியிருந்தனர். அப் பாடல்களுள் நெடுந் தொகைக்குச் சிலவும் குறுந்தொகைக்குச் சிலவும், நற்றிணைக் குச் சிலவும் அடியளவிற்கு ஏற்ப எடுத்துக் கொள்ளப்பட்டன. எஞ்சியிருந்தனவற்றுள் சிறந்தனவாகத் திணைக்கு நூறு வீதம் தேர்ந்தெடுத்துக் கொண்டு, ஐங்குறு நூறு என்னும் பெயரில் கூடலூர் கிழார் தொகுத்தார். இந்த உண்மையைப் பின்வரும் விளக்கத்தால் அறியலாம்:

ஐங்குறு நூற்றில்,-மருதத்திணை பற்றிப் பாடியுள்ள ஓரம் போகியார், நெடுந்தொகையில் இரண்டு பாடல்களும், குறுந் தொகையில் ஐந்து பாடல்களும், நற்றிணையில் இரண்டு பாடல் களுமாக மற்ற நூல்களில் மொத்தம் ஒன்பது பாடல்கள் பாடியுள்ளார்; இந்த ஒன்பதில் ஏழு பாடல்கள் மருதமாகும். இரண்டாவதாக நெய்தல் திணையைப் பாடியுள்ள அம்மூவனார் நெடுந்தொகையில் ஆறும், குறுந்தொகையில் பதினொன்

றும், நற்றிணையில் பத்துமாக மொத்தம் இருபத்தேழு பாடல்கள் பாடியுள்ளார்; இவற்றுள் இருபத்து மூன்று பாடல்கள் நெய்தலாகும். குறிஞ்சி பாடிய கபிலர், நெடுந்தொகையில் பதினெட்டும் குறுந்தொகையில் இருபத்தொன்பதும், நற்றிணையில் இருபதும், கலித் தொகையில் இருபத் தொன்பதுமாக மொத்தம் தொண்ணூற்றாறு பாடல்கள் பாடியுள்ளார்; இவற்றுள் தொண்ணூறு பாடல்கள் குறிஞ்சியாகும்; இவையன்றி பத்துப் பாட்டுள் ஒன்றாகிய 'குறிஞ்சிப் பாட்டு' என்னும் நூலையும் கபிலர் பாடியுள்ளார். நான்காவதாகப் பாலை பற்றிப் பாடியுள்ள ஓதலாந்தையார், குறுந்தொகையில் மட்டும் மூன்று பாடல்கள் பாடியுள்ளார்; இம் மூன்றில் இரண்டு பாலையாகும். இறுதியாக முல்லைத் திணை பற்றிப் பாடியுள்ள பேயனார், நெடுந்தொகையில் ஒன்றும் குறுந்தொகையில் நான்குமாக மொத்தம் ஐந்து பாடியுள்ளார்; இவ்வைந்தனுள் மூன்று முல்லையாகும்.

இந்த அமைப்பினை நோக்குங்கால்,—ஐங்குறு நூற்றுப் புலவர் ஐவருள், அவரவரும் ஐங்குறுநூற்றில் பாடியுள்ள தத்தம் திணைப்பற்றிய பாடல்களையே பிற நூல்களிலும் மிகுதியாகப் பாடியுள்ளமை புலப்படும். இதனால், அவரவரும் அவ்வத் திணையில் வல்லுநர் என்பது உறுதியாகிறது. இவ்வாறாக, இவர்கள் குறிப்பிட்ட திணைபற்றிப் பாடியிருந்த பாடல்கள் பலவற்றிலிருந்து, சிறந்தனவாக நூறு-நூறு வீதம் தேர்ந்தெடுத்துக் கூடலூர்கிழார் ஐங்குறுநூற்றை உருவாக்கியுள்ளார்.

இந்த ஐவரைப் போலவே, இன்னும் பலர் குறிப்பிட்ட திணைகளில் வல்லுநரா யிருந்திருப்பர். சான்றாகக் கலித் தொகைப் புலவர்களை எடுத்துக் கொள்வோம். கலித்தொகையில், பாலைக்கலியைப் பாலை பாடிய பெருங்கடுங்கோவும், குறிஞ்சிக் கலியைக் கபிலரும், மருதக் கலியை மருதனிள நாகனாரும், முல்லைக் கலியைச் சோழன் நல்லுருத்திரனும், நெய்தல் கலியை நல்லந்துவனாரும் பாடியுள்ளனர். இவ்வைவருள் கபிலர் மட்டும் ஐங்குறு நூற்றிலும் இடம் பெற்றுள்ளார்; இவர் குறிஞ்சிபற்றி நூற்றுக்கணக்கில் பாடியதே அதற்குக் காரணமாகும். பாலை பாடிய பெருங்

கடுங்கோ பிற அகத்திணை நூல்களிலும் பாலைபற்றி நிரம்பப் பாடியுள்ளார்; ஆனால் இவர் பாடல்கள் ஐங்குறு நூற்றுக்கு ஏற்றவாறு நூற்றுக் கணக்கில் இருக்கவில்லை போலும்! மற்றக் கலித்தொகைப் புலவர் மூவருள் சோழன் நல்லுருத்திரனும் நல்லந்துவனாரும் கலித்தொகையில் தவிரப் பிற நூல்களில் தத்தம் திணைபற்றி ஒரு பாடலும் பாடவில்லை; எனவே தான், இவர்கள் ஐங்குறு நூற்றில் இடம் பெற முடியவில்லை. மருதக்கலி பாடிய மருதவிள நாகனார் பிற நூல்களில் பாடியுள்ள முப்பத்தொன்பது பாடல்களுள் மருதம் பற்றியவை நான்கே பாடல்கள்தாம். இவர் கலித்தொகையில் மருதக்கலி பாடியதாலேயே மருதவிளநாகனார் எனப் பெயர் பெற்றார்; மற்றப்படி இவர் நிரம்ப மருதப் பாடல்கள் பாடாமையால் ஐங்குறு நூற்றில் இடம் பெறவில்லை. இவரன்றி, ‘மருதம் பாடிய இளங்கடுங்கோ’ என்னும் புலவர் ஒருவர் உள்ளார்; இவர் நெடுந்தொகையில் இரண்டு மருதப் பாடல்களும், நற்றிணையில் ஒரு மருதப் பாடலும் மட்டுமே பாடியுள்ளார்; இவரும் மருதம் பற்றி நிரம்பப் பாடாததால் ஐங்குறு நூற்றில் இடம்பெறவில்லை.

இங்கே மற்றொரு செய்தியும் நினைவுகூரத் தக்கது. ஐந்து திணைகளைப் பற்றித் தனித்தனியே கூறும் கலித்தொகை கலிப்பாவால் ஆனது; ஐங்குறு நூறோ ஆசிரியப்பாவால் ஆனது. எனவே, கலித்தொகை ஆசிரியர்கள் கலிப்பா பாடுவதில் வல்லுநர்; ஐங்குறு நூற்று ஆசிரியர்கள் ஆசிரியப்பா பாடுவதில் வல்லுநர் என உணரவேண்டும். வெண்பாவில் புகழேந்தியும் விருத்தத்தில் கம்பரும் வல்லுநர்கள் என்பதும். உலா பாடுவதில் ஒட்டக்கூத்தரும், பரணி பாடுவதில் சயங்கொண்டாரும், கலம்பகத்தில் இரட்டையர்களும் வல்லுநர்கள் என்பதும் நாம் அறியாததல்ல. கலிப்பாவில் ஒரு சிலர் வல்லவர், ஆசிரியப்பாவில் ஒரு சிலர் வல்லவர் என்பது போலவே, ஒவ்வொரு திணையிலும் ஒவ்வொருவர் வல்லவர் என்பதும் ஈண்டு எண்ணத்தக்கது. அந்த வல்லமைக்கு ஏற்ப, அந்தந்தத் திணைபற்றி அழகிய பாடல்கள் மிகுதியாகப் பாடியிருப்பர்.

இதுகாறும் கூறியவற்றால், குறிப்பிட்ட திணைபற்றி

நூற்றுக்கு மேற்பட்ட பாடல்கள் இயற்றிய புலவர்களே ஐங்குறு நூற்றில் இடம்பெற முடிந்தது என்னும் உண்மை புல னாகும். இந்த ஐவரேயன்றி இன்னும் சிலர் நூற்றுக்கு மேல் பாடியிருக்கலாம்; ஆனால் அவை அழிந்து போயிருக்கக்கூடும்- அல்லது - ஐங்குறு நூற்றுப் பாடல்களிலும் சிறப்பில்லாதனவா யிருந்திருக்கக் கூடும். எனவேதான், குறிப்பிட்ட சிறந்த ஐவரின் ஐந்நூறு பாடல்களைக் கூடலூர் கிழார் தேர்ந் தெடுத்து, 'ஐங்குறுநூறு' உருவாக்கினார்.

ஐங்குறு நூற்றிலுள்ள ஒவ்வொரு திணையும் உதிரிப் பாடல்களின் தொகுப்பாயினும் நூறு - நூறு பாடல்கள் வீதம் கொண்டிருப்பதால், ஒவ்வொரு திணையும் ஒரு நூலின் பெறுமானம் உடையதாகும். எனவேதான், ஐங்குறுநூறு ஐந்து நூல்களின் திரட்டு எனப்பட்டது. இது 'பன் மாலைத் திரள்' வகையைச் சேர்ந்தது.

நூல் அமைப்பு

ஐங்குறு நூற்றுத் தொகுப்பில் ஒரு புதுமாதிரியான கலை நயம் கையாளப்பட்டது. ஒவ்வொரு திணையும் பத்துப் பகுதி களாகப் பிரிக்கப் பட்டுள்ளது. ஒவ்வொரு பகுதியிலும் பத்துப் பாடல்கள் உள்ளன. அதனால் ஒவ்வொரு பகுதியும் 'பத்து' என்னும் பெயரால் வழங்கப்பட்டுள்ளது. இதைப் பார்த்தே, பின்வந்த நாயன்மார், ஆழ்வார்கள் முதலியோரின் பத்துப் பாடல்கள் கொண்ட பகுதிகள் 'பத்து' எனவும், 'பதிகம்' என வும் அழைக்கப்பட்டிருக்க வேண்டும். ஐந்நூறு பாடல்கள் கொண்ட ஐங்குறு நூறு ஐம்பது பத்துக்களாகப் பகுக்கப் பட்டுள்ளது.

ஐங்குறு நூற்றில் ஒவ்வொரு பத்துக்கும் பெயர் வைத்தி ருக்கும் முறை, மிக்க கலைநயம் வாய்ந்ததாகும். சில பத்துக் கள் அந்தந்தத் திணைக்குரிய விலங்குகள், பறவைகள் போன்ற கருப் பொருள்களாலும், சில பத்துக்கள் இன்னார்க்கு இன் னார் சொல்லியது என்பது போன்ற துறைப் பெயர்களாலும், சில பத்துக்கள் பாடல்களிலுள்ள சிறப்புச் சொற்களாலும் சிறப்புத் தொடர்களாலும், சில பத்துக்கள் பாடல்களில்

பொதிந்துள்ள பொதுக் கருத்தாலும், சில பத்துக்கள் இன்ன பிற காரணங்களாலும் பெயர் வழங்கப்பட்டுள்ளன. எடுத்துக் காட்டாகச் சில பெயர்கள் வருமாறு:

வேட்கைப் பத்து, எருமைப் பத்து, தாய்க்கு உரைத்த பத்து, வெள்ளாங்குருகுப் பத்து, தொண்டிப் பத்து, அன்னாய் வாழிப் பத்து, கிள்ளைப் பத்து, செலவழுங்குவித்த பத்து, இள வேனில் பத்து, பாசறைப் பத்து - முதலியனவாம். ஒவ்வொரு பத்திலும் உள்ள பத்துப் பாடல்களிலும், அந்தப் பத்தின் தலைப்பாக உள்ள சொல்லோ, சொற்றொடரோ, பறவை - விலங்குப் பெயரோ, துறைக் கருத்தோ தவறாமல் இருக்கும் எடுத்துக் காட்டாக, - தாய்க்கு உரைத்த பத்தில் பத்துப் பாடல்களின் தொடக்கத்திலும், 'அன்னை வாழி வேண் டன்னை' என்னும் தொடர் உள்ளது. தொண்டிப் பத்தில் எல்லாப் பாடல்களிலும் 'தொண்டி' என்பது உள்ளது. இந்தப் பத்தில் உள்ள பாடல்கள் அனைத்தும் அந்தாதித் தொடை யாய் அமைந்திருப்பது சுவையாயிருக்கிறது. அஃதாவது,— முதல் பாடலின் இறுதிப் பகுதி அடுத்த பாடலின் முதல் பகுதி யாக அமைந்துள்ளது. பத்துப் பாடல்களும் இங்ஙனம் சங்கிலித் தொடர்போல் கோத்துக் கொண்டுள்ளன. பிற்காலத்தில் தோன்றிய அந்தாதி நூல்களுக்கு, இந்தத் தொண்டிப் பத்து முதல் முன்னோடியாய் ஐங்குறு நூற்றில் அமைந்திருப்பது நயத்தற்கும் வியத்தற்கும் உரியது. எடுத்துக் காட்டாக,— முதல் மூன்று பாக்களின் அந்தாதி அமைப்பினைக் காண்பாம். முதல் பாடலின் இறுதியடி, 'ஒண்டொடி யரிவை என் நெஞ்சு கொண்டோளே' என்பது; இரண்டாவது பாட்டின் முதலடி, 'ஒண்டொடி யரிவை கொண்டனள் நெஞ்சே' என்பது; இரண் டாம் பாடலின் இறுதியடி, 'இரவினானும் துயில் அறியேனே' என்பது; மூன்றாம் பாட்டின் முதலடி, 'இரவினானும் இன் துயில் அறியாது' என்பதாகும். இப்படியே சங்கிலித் தொடர் போய்க் கொண்டிருக்கிறது. அடுத்து,—

கிழவற்கு உரைத்த பத்தின் எல்லாப் பாடல்களிலும், 'கண்டிகு மல்லமோ கொண்க நின் கேளே' என்பது முதல் அடியாகவும், புறவணி பத்தின் பாடல்கள் அனைத்திலும்

'நன்றே, காதலர் சென்ற ஆறே' என்பது முதல் அடியாகவும் இருப்பதும் நன்றாயுள்ளது. வெள்ளாங் குருகுப் பத்தின் எல்லாப் பாடல்களிலும்,

'வெள்ளாங் குருகின் பிள்ளை செத்தெனக்
காணிய சென்ற மடநடை நாரை'

என்னும் இரண்டு அடிகளும் முதல் இரண்டு அடிகளாய் அமைந்திருப்பது மிகவும் நயமாயிருக்கிறது.

இந்த அமைப்பினை நோக்குங்கால்,— ஐங்குறுநூற்றுப் புலவர்கள், பத்துப் பாடல்கள் கொண்ட எண்ணிறந்த 'பத்துக்கள்' பாடியிருக்க வேண்டும் என்பது புலனாகும். ஒவ்வொருவரும் திட்டமிட்டு அழகுறப் பாடிய பத்துக்கள் பலவற்றுள்,பத்துப் பத்துக்கள் வீதம் ஐம்பது பத்துக்களைத் தேர்ந்தெடுத்துக் கூடலூர் கிழார் ஐங்குறு நூற்றைத் தொகுத்து உருவாக்கியுள்ளார் என உய்த்துணரலாம்.

தனிப் பாடல்கள்

ஐங்குறு நூற்றில் 129,130 ஆகிய என் கொண்ட பாடல்கள் இரண்டும் முழுதும் கிடைக்கவில்லை. 416 – ஆம் பாடலில் இரண்டாம் அடியில் பாதிக்கு மேலும், 490 – ஆம் பாடலில் இரண்டாம் அடியில் பாதிக்கு மேலும் மூன்றாம் அடி முழுதும் கிடைக்கவில்லை. ஆனால், தென்காசிச் சுப்பையாப் பிள்ளையவர்களின் வீட்டுச் சுவடியில் மட்டும், கூடுதலாக ஆறுபாடல்கள் இருப்பதாக உ.வே. சாமிநாத ஐயரவர்கள் தெரிவித்து, அவர்தம் பதிப்பின் இறுதியில் அந்த ஆறு பாடல்களையும் தந்துள்ளார்கள்,

ஐங்குறு நூற்றில் முழுதும் கிடைக்காத 129, 130 ஆம் பாடல்கள் இரண்டும் கிழவற்கு உரைத்த பத்தைச் சேர்ந்தவை அந்தப் பத்தின் முதல் எட்டுப் பாடல்களுமே 'கண்டிகுமல்லமோ கொண்க நின் கேளே' என்பதையே முதல் அடியாகக் கொண்டுள்ளன. எனவே, கிடைக்காத இறுதிப் பாடல்கள் இரண்டிலுங்கூட அந்த அடியே முதல் அடியாக இருக்க வேண்டும். சுப்பையாப் பிள்ளை வீட்டுச் சுவடியில் கூடுதலாக

உள்ள ஆறு பாடல்களுள் எதிலும் அந்த அடி இல்லாமையால் கிடைக்காத (129,130) இருபாடல்கள், இந்த ஆறுபடால் களுள் இல்லை என்பது தெளிவு. மற்றும் இந்த ஆறு பாடல் களுள் முதல் நான்கு பாடல்களிலும், 'உள்ளார் கொல்லோ தோழி' என்னும் தொடரே தொடக்கத்தில் உள்ளது. இவ் வாறு தொடங்கும் பத்துப் பாடல்கள் கொண்ட 'பத்து, ஒன்று இருந்ததென்பது இதனால் புலனாகலாம். எனவே, எண்ணிறந்த பத்துக்களுள் குறிப்பிட்ட ஐம்பது பத்துக்களைக் கூடலூர் கிழார் தேர்ந்தெடுத்துத் தொகுத்து ஐங்குறு நூற்றை உருவாக்கினார் என நாம் கூறியது பொருத்தமே யாகும்.

ஆழ்வார் நாயன்மார் முதலிய பிற்காலத்தவரின் படைப் புக்களுள் ஒரு பொருள்பற்றிப் பத்துப்பாடல்கள் கொண்ட பத்துக்கள் பலவகைப் பாவினங்களால் இயற்றப்பட்டிருப்பினும், சங்ககாலப் பதினெண் கீழ்க் கணக்கைச் சேர்ந்த திருக்குறளி லும் நாலடியாரிலும் ஒரு பொருள் பற்றிய 'பத்துக்கள்' வெண் பாப் பாடலால் ஆக்கப்பட்டுள்ளமையைக் காணலாம். ஆனால், சங்ககாலப் பதினெண் மேற்கணக்கைச் சேர்ந்த ஐங்குறு நூற்றிலும், பதிற்றுப் பத்திலும், ஒரு பொருள் பற்றிய 'பத்துக் கள்' ஆசிரியப்பாவால் ஆக்கப்பட்டிருப்பது குறிப்பிடத்தக்கது இதனை, நச்சினார்க்கினியர், 'தொல்காப்பியம்-செய்யுளியலில் 'தரவின்றாகித் தாழிசை பெற்றும்' என்று தொடங்கும் (149 -ஆம்) நூற்பாவின் கீழ்வரைந்துள்ள,

"இவ்வாறு கொச்சகத்தினை வரைந்தோதவே, ஆசிரியமும் வெண்பாவும் ஒரு பொருள்மேல் பல மூன்றும் ஐந்தும் ஏழும். ஒன்பதும் பத்தும் ஆகி வருதலும் பிறவாறாய் வருதலும் வரை யறை யிலதாயின்; அவை ஐங்குறுநூறு, முத்தொள்ளாயிரம், கீழ்க்கணக்கு முதலியவற்றுள்ளும், பிறவற்றுள்ளுங்காண்க"—

என்னும் உரைப் பகுதியில் குறிப்பிட்டுள்ளமை காண்க.

**துறைத் தொடர்கள்:**

ஒவ்வொரு பாடலின் கீழும் துறைபோன்ற தொடர் எழுதப்பட்டுள்ளது. இது, பாடலின் உட்கிடையைச் சுருங்க அறிவிக்கின்றது. இத்தகைய துறைத் தொடர்களைப் பாட

லாசிரியர் எழுதினாரா, அல்லது தொகுத்தவர் எழுதினாரா என்பது புலப்படவில்லை. இவற்றைப் பின்வந்தவர் எவரேனும் எழுதியிருக்கலாம் என்று கூறினும் வியப்படைவதற்கில்லை.

திணைப் பெயர் வழக்கு:

அகநானூற்றுப் பாடல்கள் களிற்றியானை நிரை, மணி மிடை பவளம், நித்திலக் கோவை என்னும் மூன்று பிரிவினைப் பெயரால் தொல்காப்பிய உரையாசிரியரால் சுட்டப்பட்டிருப் பது போலவே, ஐங்குறு நூற்றுப் பாடல்களும் திணை பிரி வினைப் பெயரால் வழங்கப்பட்டுள்ளன. தொல்காப்பியம் - உவம இயலிலுள்ள ‘கிழவோட்டு உவம மீரிடத் துரித்தே’ என்னும் (29 - ஆம்) நூற்பாவின் கீழ், பேராசிரியர், ஐங்குறு நூற்றின் நெய்தல் பகுதியிலுள்ள ‘அன்னை வாழி வேண் டன்னை கழிய’ என்னும் (108-ஆம்) பாடல் முழுவதையும் தந்து, அப் பாடலின் கீழே, ‘‘என்பது நெய்தல்’’ என்று எழுதி யுள்ளார், மற்றும் அதைத் தொடர்ந்தாற் போல், ஐங்குறு நூற்றின் குறிஞ்சிப் பகுதியில் உள்ள ‘குன்றக் குறவன் புல்வேய் குரம்பை’ என்னும் (252-ஆம்) பாடல் முழுவதையும் தந்து, அதன் கீழே,

‘‘என்னும் குறிஞ்சிப் பாட்டினுள் வறுமை கூர்ந்த புல்வேய் குரம்பையை மழை புறமறைத்தாற்போல வாடை செய்யும் நோய் தீர்க்க வந்தானென்று உள்ளுறை யுவமஞ் செய்தவாறு கண்டு கொள்க.’’—

என்று, ஐங்குறு நூற்றுப் பாடலைக் ‘குறிஞ்சிப் பாட்டு’ என்னும் பெயரால் வழங்கியுள்ளார். பத்துப்பாட்டில் ஒன்றா கிய ‘குறிஞ்சிப் பாட்டு’ என்னும் தனிநூல் ஈண்டு நினைவுகூரத் தக்கது. இப்படியாகக் குழப்பம் ஏற்படும் என்பதற்காகத்தான், பத்துப் பாட்டைச் சேர்ந்த ‘குறிஞ்சிப் பாட்டு’ என்னும் நூலைப் ‘பெருங்குறிஞ்சி’ என்னும் பெயரால் வழங்குவதுண்டு. இந்தச் செய்தி ‘பத்துப் பாட்டு’ என்னும் தலைப்பில் முன்பே அறிவிக்கப்பட்டுள்ளது. கலித்தொகையின் ஐந்து உட்பிரிவுகளும் பாலைக்கலி, குறிஞ்சிக் கலி, மருதக்கலி, முல்லைக் கலி, நெய்தல் கலி என வழங்கப்படுவதும் ஈண்டு ஒப்பு நோக்கற்பாலது.

நூற்பெயருடன் செய்யுட்களைக் குறிப்பிடும் வழக்கமுடைய நச்சினார்க்கினியர், தொல்காப்பிய உரையில் ஏறக்குறைய இருபது இடங்கட்குமேல் ஐங்குறு நூறு, என்னும் பெயரை அப்படியே முழுதும் குறிப்பிட்டுள்ளார்.

முறை வைப்பு:

தொல்காப்பியத்தில் 'மாயோன் மேய'' 'நடுவுநிலைத் திணையே' என்னும் நூற்பாக்களில் முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல், பாலை என்னும் வரிசையில் ஐந்து திணைகள் சொல்லப்பட்டிருக்க, தொகை நூல்களில் இந்த முறை மாறியிருப்பினும் தவறில்லை; 'சொல்லிய முறையால் சொல்லவும், படுமே' என்று தொல்காப்பியர் கூறியுள்ள 'சொல்லவும்' என்பதிலுள்ள உம்மையால், இந்த முறையில் சொல்லாமல் வேறு முறையாலும் சொல்லலாம் என்பது பெறப்படுகிறது- என்னும் கருத்தை, இளம்பூரணரும் நச்சினார்க்கினியரும் தொல்காப்பிய உரையில் கூறியிருக்கும் செய்தி, முன்பே 'நெடுந்தொகை' என்னும் தலைப்பில் விளக்கப்பட்டுள்ளது. மற்றும், இது சார்பாக ஐங்குறு நூற்றைக் குறிப்பிட்டே கலித்தொகை உரைத் தொடக்கத்தில் நச்சினார்க்கினியர் கூறியுள்ள பகுதி வருமாறு:—

'இனிச் 'சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே' என்ற வழிச் சொல்லாத முறையாற் சொல்லவும் படுமென்று பொருள் கொண்டமை பற்றி......ஐங்குறு நூற்றினும் பிறவற்றினும் வேறுபடக் கோத்தவாறுங் காண்க.'—

இவ்வாறு ஐந்திணை முறைமாற்றம் பற்றிக் கூறியுள்ளார். மற்றும் நாற்கவிராசநம்பி அகப்பொருளின் அகத் திணையியலில் உள்ள

'குறிஞ்சி பாலை முல்லை மருதம்
நெய்தல் ஐந்திணைக்கு எய்தியபெயரே'

என்னும் (6-ஆம்) நூற்பாவின் கீழே பழைய உரையாசிரியர் வரைந்துள்ள,

''சொல்லிய முறையாற் சொல்லவும் படும்' என்ற உம்மையாற் பிறவாற்றானும் சொல்லப்படும் என்பதுபட நிற்றலா

னும், பத்துப் பாட்டும் கலித்தொகையும் ஐங்குறு நூறும் கீழ்க் கணக்கும் சிற்றட்டகமும் முதலாகிய சான்றோர் செய்யுட்கள் எல்லாம் வேண்டிய முறையானே வைத்தலானும் இவ்வாற் றான் எண்ணப்பட்டது எனக் கொள்க,''— என்னும் உரைப் பகுதியிலும், ஐங்குறுநூறு குறிப்பிட்டுக் கூறப்பட்டிருப்பது காண்க. எனவே, பிறநூல்களில் உள்ள முறை வைப்புக்கு மாறாக, ஐங்குறு நூற்றில் மருதம், நெய்தல்,குறிஞ்சி, பாலை, முல்லை என்னும் வரிசையில் திணைகள் முறைப்படுத்தப்பட்டி ருப்பது இயல்பே என உணரலாம்.

பிற நூல்களுக்கு மாறாக ஐங்குறுநூற்றில் திணைமுறை வைப்பு இருப்பது தவறில்லை. ஆனால், ஐங்குறுநூற்றில் மருதமும் நெய்தலும் முதலிலுல், குறிஞ்சி இடையிலும், பாலை யும் முல்லையும் இறுதியிலும் வைத்துத் தொகுக்கப் பெற்றது எவ்வாறு பொருந்தும்? இது பொருந்தும். இதற்கு விடையாகத் தக்க காரணம் கூறமுடியும்:

ஐங்குறுநூற்றின் முதலில் உள்ள மருதப் பகுதியின் முதல் பத்து 'வேட்கைப் பத்து' என்னும் பெயருடையது' இதிலுள்ள பத்துப் பாடல்களிலுமே, 'வாழியாதன் வாழி யவினி' என்னும் தொடரே முதல் அடியாக உள்ளது. எனவே, மருதப் பத்து 'வாழி' என்னும் மங்கலச் சொல்லுடன் தொடங்கப்பட்டிருப்பது புலனாகும். இந்த மங்கலத்தொடக் கத்தால் மருதப் பகுதி ஐங்குறு நூற்றில் முதலிடம் பெற்றிருக் கலாம் – மற்றும்,-'வாழி ஆதன் வாழி அவினி' என்னும் தொட ரால் வாழ்த்தப்பட்டிருக்கும் 'ஆதன்' என்பவன் சேரமன்னன்; இந்த நூலைத் தொகுக்கச் செய்த யானைக்கட் சேய் மாந் தரஞ் சேரல் இரும்பொறையாரும் சேர மன்னர்; நூலைத் தொகுத்த கூடலூர்கிழாரும் சேரநாட்டுப் பகுதியைச் சேர்ந் தவர், எனவே, சேரமன்னன் ஒருவனது வாழ்த்துடன் தொடங் கும் மருதத் திணையை அவர்கள் முதலில் வைத்ததில் வியப் பில்லை.

இந்த முதல் அடியில், 'வாழி ஆதன் வாழி அவினி' என ஆதன், அவினி என்னும் இருவர் வாழ்த்தப்பட்டுள்ளனர். இந்த

இருவரும் ஒருவரா அல்லது வெவ்வேறானவரா? இவ்விரு பெயர்களையும் இணைத்து 'ஆதனவினி' என்று சிலர் எழுதியுள்ளனர். இவ்வாறே 'ஆதன்' என்பதை முதலாகக் கொண்டு ஆதனழிசி, ஆதனெழினி, ஆதனுங்கன், ஆதனோரி முதலிய பெயர்களில் இன்னும் சிலர் உளர் 'நெடுவேளாதன்' என்றதொரு பெயரும் புறநானூற்றில் (338) காணப்படுகிறது. மற்றப் பெயர்கள் ஒரு புறம் இருக்க,-ஆதனவினி என்னும் பெயரை மட்டுமே ஈண்டு நாம் எடுத்துக் கொள்ள வேண்டும். 'அவினி' என்னும் பெயர் ஐங்குறு நூற்றின் முதல் அடியில் தவிர, சங்க நூல்களில் வேறெதிலும் வந்திருப்பதாகத் தெரியவில்லை. எனவே, ஆதனுக்கும் அவினிக்கும் தொடர்பிருக்கிறது. ஆதனும் அவினியும் ஒருவராயிருக்கட்டும்-அல்லது-உறவு கொண்ட இருவேறு சேரமன்னராயிருக்கட்டும்-அதுபற்றியும் நமக்குக் கவலை வேண்டா! 'ஆதன்' என்ற பெயர் வரையிலும் ஈண்டு எடுத்துக் கொள்வோம். இந்த ஆதன் யார்?

இந்த ஆதன் என்பவன், 'செல்வக்கடுங்கோ வாழியாதன்' என்னும் சேரமன்னனாய் ஏன் இருக்கக் கூடாது? இவன் கடுங்கோ வாழியாதன், செல்வக் கடுங்கோ, சேரமான் செல்வக் கடுங்கோ, சேரமான் செல்வக் கடுங்கோ வாழியாதன், சேரமான் சிக்கற் பள்ளித் துஞ்சிய செல்வக் கடுங்கோ வாழியாதன் என்றெல்லாம் பெயர் வழங்கப்பெறுகிறான். இவன் பெயருக்கு இறுதியில் உள்ள 'வாழியாதன்' என்னும் பகுதியை உற்று நோக்கவேண்டும். இந்த வாழியாதன் என்னும் பெயர் இரட்டுற மொழிதலாக அமைந்து அழகு தரும்படி ஐங்குறு நூற்றுப் பாடல் 'வாழியாதன்' என்று தொடங்கப்பட்டதா? அல்லது,-'வாழியாதன்' என ஐங்குறு நூற்றில் ஒரு பத்து முழுவதும் திரும்பத் திரும்பச் சிறப்புற வாழ்த்தப்பட்டதனால், இவன் பெயருக்குப் பின்னால் 'வாழியாதன்' என்பது இணைக்கப்பட்டிருக்கக்கூடுமா? இந்த அமைப்புக்குப் பதிற்றுப் பத்தும் துணை செய்கிறது:—

பதிற்றுப் பத்தின் ஏழாம் பத்துக்கு உரியவன் செல்வக் கடுங்கோ வாழியாதன். இவன்மேல் இந்தப் பத்தைக் கபிலர்

பாடியுள்ளார். இவர் இந்தப் பத்தின் மூன்றாம் பாடலின் இறுதியில்,

''ஆயிர வெள்ள வூழி
வாழி யாத வாழிய பலவே''

என இவனை வாழ்த்தியுள்ளார். இதில் 'வாழி யாத' என்பது விளி போலவும் வாழ்த்துப் போலவும் இரட்டுற மொழிதலாக இருப்பது காண்க. குண்டுகட் பாலியாதனார் என்னும் புலவரின் புறநானூற்றுப்(387 – ஆம்) பாடலிலும், 'செல்வக் கடுங்கோ வாழியாதன்' என்னும் பெயர்த்தொடர் முப்பதாம் அடியாக அப்படியே முழுதும் உள்ளது. எனவே, ஐங்குறு நூற்றில் 'வாழி யாதன்' என்று வாழ்த்தப்பட்டிருப்பவன், செல்வக் கடுங்கோ வாழியாதனாக இருக்கலாமன்றோ? 'இவனைப் பற்றி இங்கே இவ்வளவு சொல்ல வேண்டியதின் காரணமாவது:—

சேர மன்னர்களுள், உதியஞ்சேரல் மரபினர், இரும்பொறை மரபினர் என இருவகையினர் இருந்தனர். இவர்களுள், செல்வக்கடுங்கோ வாழியாதன் இரும்பொறை மரபினைச் சேர்ந்தவன். ஐங்குறு நூற்றைத் தொகுப்பித்த யானைக்கட்சேய் மாந்தரஞ்சேரல் இரும்பொறையும் இரும்பொறை மரபைச் சேர்ந்தவன். செல்வக்கடுங்கோ வாழியாதனுக்குப் பின் யானைக்கட்சேய் மாந்தரஞ்சேரல் இரும்பொறை ஆண்டதாக அறிஞர்கள் கருதுகின்றனர். முன்னவனது ஆட்சிக்காலம் கி.மு. 87 முதல் கி.மு. 62 வரை என்றும், பின்னவனது ஆட்சிக்காலம் கி.மு. 62 முதல் கி.மு. 42 வரை என்றும் கா. சுப்பிரமணியப் பிள்ளையவர்கள் கூறியுள்ளனர். இந்தக் காலக்கணக்கு சிறிது முன்பின்னாக இருப்பினும், இந்த மன்னர்கள் இருவருக்குள்ளும் நெருங்கிய உறவுமுறைத் தொடர்பு உண்டு என்பதில் ஐயமில்லை. எனவேதான், யானைக்கட்சேய் மாந்தரஞ்சேரல் இரும்பொறையால் தொகுப்பிக்கப்பட்ட ஐங்குறுநூற்றில், 'வாழி யாதன்' என்று தொடங்கும் மருதத்திணை முதலில் அமைக்கப் பெற்றது. இதனை நன்கு எண்ணிக் காண்க!

மருதத்திணையை முதலில் வைத்ததில் இன்னும் ஒரு வாழ்த்துப் பொருத்தம் உள்ளது. இந்தத் திணையின் முதல் பத்தின்

முதலடிகள்'வாழி யாதன் வாழி யவினி' என அரசனை வாழ்த்து கின்றன. இரண்டாம் அடிகளோ, பற்பல முறைகளில் பொது வாழ்த்துக்கள் அளிக்கின்றன. இது விளங்குவதற்காக, முதல் பத்தின் பத்துப் பாடல்களிலும் உள்ள இரண்டாம் அடிகள் முறையே வருமாறு:—

(1) 'நெல்பல பொலிக பொன்பெரிது சிறக்க.'

(2) 'விளைக வயலே வருக இரவலர்.'

(3) 'பால்பல ஊறுக பகடுபல சிறக்க.'

(4) 'பகைவர் புல் லார்க பார்ப்பார் ஓதுக.'

(5) 'பசியில் லாகுக பிணிசேண் நீங்குக.'

(6) 'வேந்து பகை தணிக யாண்டுபல நந்துக.'

(7) 'அறம்நனி சிறக்க அல்லது கெடுக.'

(8) 'அரசுமுறை செய்க களவுஇல் லாகுக.'

(9) 'நன்று பெரிது சிறக்க தீது இல்லாகுக.'

(10) 'மாரி வாய்க்க வளம்நனி சிறக்க.

இந்தப் பத்து அடிகளும் பத்துப் பாடல்களின் இரண்டாம் அடிகளாகும். இந்த அடிகளிலுள்ள வாழ்த்துக்களினும், சிறந்த வாழ்த்துக்களை இன்னும் எங்கே காண முடியும் எனவே இத் தகைய வாழ்த்துக்கள் நிறைந்த தொடக்கத்தையுடைய மருதத் திணையை முதலில் வைத்தது மிகவும் பொருத்தமாகு மல்லவா?

மற்றும், இந்தப் பத்தின் எல்லாப் பாடல்களிலும், 'எனவேட் டோளே யாயே யாமே' என்பது மூன்றாம் அடியாகவும் 'என வேட்டேமே' என்பது பாடலின் இறுதிப் பகுதியாகவும்அமைந் திருப்பது நயமாயுள்ளது. மாதிரிக்காக, இந்தப் பத்தின் முதல் பாடலும் இறுதிப் பாடலும் வருமாறு:—

(வேட்கைப் பத்து - முதல் பாடல்)

'வாழி யாதன் வாழி யவினி
நெல்பல பொலிக பொன்பெரிது சிறக்க

'எனவேட் டோளே யாயே யாமே
நனைய காஞ்சிச் சினைய சிறுமீன்
யாணர் ஊரன் வாழ்க
பாணனும் வாழ்க எனவேட் டேமே.'

(பத்தாவது பாடல்)

'வாழி யாதன் வாழி யவினி
மாரி வாய்க்க வளம்நனி சிறக்க
எனவேட் டோளே யாயே யாமே
பூத்த மாஅத்துப் புலாலஞ் சிறுமீன்
தண்டுறை யூரன் தன்னொடு
கொண்டனன் செல்க எனவேட் டேமே.'

இவ்வளவு சிறப்புமிக்க வேட்கைப் பத்தை முதலிலே கொண்ட மருதத்திணை ஐங்குறு நூற்றில் முதலில் அமைக்கப் பெற்றிருப்பது மிக்க பொருத்தமே!

மருதத்திணையை யடுத்து நெய்தல் திணை இரண்டாவதாக நிறுத்தப் பெற்றுள்ளது. இந்தத் திணையிலும், முதல் பத்தில் உள்ள எல்லாப் பாடல்களும் 'அன்னை வாழி வேண்டன்னை' எனவும், இரண்டாம் பத்தில் உள்ள எல்லாப் பாடல்களும் 'அம்ம வாழி தோழி' எனவும் வாழ்த்தொலியுடன் தொடங்கப் பட்டிருப்பதால், நெய்தல் திணை இரண்டாவதாக்கப்பட்டது என்று கூறலாம். இதனினும் சிறந்த காரணம் ஒன்று உண்டு. ஐங்குறு நூற்றைத் தொகுப்பித்தவன் யானைக்கட்சேய் மாந்தரஞ் சேரல் இரும்பொறை. இவன் தொண்டியை யாண்டவன். இந்தத் தொண்டியின் பெயரால், தொண்டிப் பத்து' என்னும் ஒரு பத்து நெய்தல் திணைப் பகுதியில் உள்ளது. இந்தப் பத்திலுள்ள பாடல்கள் அனைத்திலும் தொண்டி மிகவும் சிறப்பித்துப் பாராட்டப் பெற்றுள்ளது. தொண்டி கடற்கரைப் பட்டணமாகும். நெய்தல் திணையும் கடற்கரை சார்ந்தது. எனவே, ஐங்குறு நூற்றில் நெய்தல் திணை இரண்டாவது இடம் பெற்றிருப்பது பொருத்தமேயாகும்.

மூன்றாவதாகக் குறிஞ்சித் திணை வைக்கப் பெற்றுள்ளது. இதைப் பாடியவர் கபிலர். இவர் சங்கப் புலவர்களுள் தலைமைப் புலவர் ஆவார். பரிபாடல் தவிர மற்ற எல்லாத் தொகை நூல்களிலும் இவர் பாடல்கள் உள்ளன. மேலும், குறிஞ்சியில் மிக வல்லுநர் இவர். எனவே, கபிலரைச் சிறப் பிக்கும் முகத்தான், குறிஞ்சித் திணைக்கு நடுவிடம் கொடுத் ததில் வியப்பில்லை. குறிஞ்சித் திணையின் முதல் பத்திலுள்ள எல்லாப் பாடல்களும் 'அன்னாய் வாழி வேண்டன்னை' என் னும் வாழ்த்தொலியுடன் தொடங்கப் பட்டிருப்பதும், அத னால் அந்தப் பத்து 'அன்னாய் வாழிப் பத்து' என்னும் பெயர் பெற்றிருப்பதும் இவண் குறிப்பிடத்தக்கது.

இன்னும் எஞ்சியிருப்பன பாலைத் திணையும் முல்லைத் திணையுமாகும். இவற்றுள், பாலை என்பது பிரிவு பற்றியது; முல்லை என்பது பிரிந்த பிறகு ஆற்றியிருப்பது. பிரிந்தபின் தானே ஆற்றியிருப்பது? எனவே, இவ்விரண்டனுள் பாலை முதலுரிமை பெற்று ஐங்குறு நூற்றில் நான்காவதிடம் பெற்றுள்ளது. எஞ்சிய முல்லை ஐந்தாவதாக இறுதியில் இருத்தப் பெற்றது.

இவ்வாறு கூர்ந்து நோக்குவார்க்கு, ஐங்குறு நூற்று ஐந்திணை முறை வைப்பிற்குரிய பொருத்தமான காரணம் புலப்படாமற் போகாது. ஐங்குறு நூற்று அமைப்பும் தொகுப் பும் மிகவும் நயந்து வியந்து சுவைத்தற்குரியன.

## 22. பதிற்றுப் பத்து

### பெயர் வைப்பு

'பதிற்றுப் பத்து' என்பது ஒருவகைப் பெருக்கல் வாய்ப்பாடு ஆகும் - அதாவது பத்தாவது பெருக்கல் வாய்ப் பாட்டில் ஒரு கூறு ஆகும். இதன் விடை நூறு. பதிற்றுப் பத்து' என்பதற்கு, 'பத்தால் பெருக்கப்பட்ட பத்து' என்பது பொருள். பத்தால் பெருக்கப்பட்ட பத்து ( 10×10=100) நூறு அல்லவா? இங்கே,

'பதிற்று' என்பதிலுள்ள, 'இற்று' என்னும் சாரியை, '×' என்னும் பெருக்கல் குறியின் பொருளில் அமைந்திருக்கிறது. எனவே, பதிற்றுப் பத்து என்பது நூறு பாடல்கள் கொண்ட நூல் என்பது புலனாகும்.

இந்நூல், இறையனார் அகப்பொருள் உரையில் 'பதிற்றுப் பத்து' என்னும் பெயருடன் ஆறாவதாக அமைந்துள்ளது. நெடுந்தொகை நானூறு, குறுந்தொகை நானூறு, நற்றிணை நானூறு, புறநானூறு என்னும் எண்ணுப் பெயர் நூற்பெயரின் பிற்பாதியாக உள்ளது. ஐந்தாவது நூலாகிய ஐங்குறு நூற்றின் பெயர் முழுவதுமே ஐந்நூறு என எண்ணுப் பெயராக உள்ளது. ஐந்தாவதைப் போலவே, ஆறாவதாகிய பதிற்றுப் பத்தும், பத்துப் பத்து – அதாவது-நூறு எனப் பெயர் முழுவதும், எண்ணுப் பெயரால் அமைந்துள்ளது.

இவ்வாறு, வெற்று எண்ணுப் பெயர்களை நூல்களின் பெயர்களாக வைத்திருப்பது வியப்பா யிருக்கிறதல்லவா ? இந்த அமைப்பு நமக்கு அறிவிப்பதாவது:—அந்த நானூறு - இந்த நானூறு என முதல் நான்கு நூல்கட்கும் நானூறு என்னும் பெயர் வழங்கப் பட்டு விட்டதால், ஐந்நூறு பாடல் கொண்ட ஐந்தாவது நூல் வெற்றுபடியாக ஐங்குறுநூறு என, அதாவது-ஐந்நூறு எனப் பெயர் சூட்டப்பட்டது. அதைத் தொடர்ந்து, அடுத்த ஆறாவது நூல் நூறு பாடல்கள் கொண்டிருப்பதால், வெற்றுபடியாகவே பதிற்றுப் பத்து (நூறு) எனப் பெயர் வழங்கப்பட்டது. இதைக் கொண்டு, நானூறு பாடல்கள் கொண்ட நான்கு நூல்களும் முதலில் பெயர் வைக்கப்பட்டன. அவற்றிற்குப் பின்னால் ஐங்குறு நூறு பெயர் வைக்கப்பட்டது; அதற்குப் பின்னால் பதிற்றுப் பத்து பெயர் வைக்கப்பட்டது:-என உணரலாம்.

நச்சினார்க்கினியர் தம் உரைகளில் பல இடங்களில் பதிற்றுப் பத்துப் பாடல்களை மேற்கோளாக எடுத்தாண்டுள்ளார்: தொல்காப்பிய உரையில் ஏறக்குறையப் பத்து இடங்களில் 'பதிற்றுப் பத்து' என்னும் நூற்பெயரையும் சுட்டிக் காட்டியுள்ளார்.

**புறத்திணை**

முதல் ஐந்து நூல்களைப் போலவே பதிற்றுப் பத்தும் ஆசிரியப் பாவால் ஆனது. புறநானூற்றைப் போலவே பதிற்றுப் பத்தின் பாடல்கட்கும் அடிவரையறையில்லை. பதிற்றுப் பத்தும் புறநானூறு போலவே புறப்பொருள் பற்றிய தொகை நூலாகும். ஆனால், புறநானூற்றில் புறப் பொருளுக்கு உரிய பன்னிரண்டு திணைகளும் ஏறக்குறைய உள்ளன; பதிற்றுப் பத்தில் அவ்வாறு இல்லை. பதிற்றுப் பத்துப் பாடல்கள் அனைத்தும், மன்னர்கள் பதின்மரைப் புலவர்கள் பதின்மர் புகழ்ந்து பாடிய பாடாண் பாட்டுக் களாகும். எனவே, புறப் பொருளுக்குரிய பன்னிரு திணைகளுள் பாடாண்திணை ஒன்றையே பதிற்றுப்பத்துப் பாடல்கள் சார்ந்தவை என்பது புலனாகும். பதிற்றுப்பத்துப் பாடல்களில் மன்னர்களின் போர்ச் செய்திகள் விவரிக்கப் பட்டிருப்பதால், அப்பாடல் களுள் சில, வஞ்சி உழிஞை வாகை போன்ற வேறு சில திணை களைச் சேர்ந்தவைபோல் தோன்றினும், மன்னர்களைப் புகழ்ந்து பாடிப் பரிசில் பெற்றிருத்தலின் அவையனைத்துமே பாடாண் திணையே யாகும். இதனை நச்சினார்க்கினியர் நன்கு விளக்கியுள்ளார். தொல்காப்பியம்-புறத்திணையியலில் உள்ள 'பாடாண் பகுதி கைக்கிளைப் புறனே' என்னும் (25-ஆம்)நூற் பாவின் உரைப்பகுதியில் நச்சினார்க்கினியர், 'அவலெறி யுலக்கை வாழைச் சேர்த்தி' என்னும் பதிற்றுப்பத்துப் (29) பாடல் முழுவதையும் எடுத்துத் தந்து அப் பாடலைத் தொடர்ந்து.

'இதில் இமயவரம்பன் தம்பி பல்யானைச் செல்கெழு குட்டு வனைப் பாலைக் கௌதமனார் துறக்கம் வேண்டினார் என்பது குறிப்பு வகையாற் கொள்ள வைத்தலின், இது வஞ்சிப் பொருள் வந்த பாடாண் ஆயிற்று. 'இலங்கு தொடி மருப் பின், என்னும் பதிற்றுப் பத்து, உள்ளியது முடிக்கும் வேந்தனது சிறப்பாகிய உழிஞையாயினும், பதின்றுலாம் பொன் பரிசில் பெற்றமையின் பாடாண் ஆயிற்று.''—

என்று வரைந்துள்ளார். மேலும் இதைத் தொடர்ந்து, 'பார்ப்பார்க் கல்லது பணிபறி யலையே' என்னும் (63 - ஆம்)

பதிற்றுப் பத்துப் பாடல் முழுவதையும் தந்து, அதன் கீழே,

“இது வாகைத் துறைப் பாடாண் பாட்டு. இப் பதிற்றுப் பத்து நூறும் இவ்வாறே வருதலின் பாடாண் திணையே யாயிற்று. புறத்துள்ளும் இவ்வாறு வருவனவும் உணர்க”—

என்று எழுதியுள்ளார். நச்சினார்க்கினியரின் இவ்வுரைப் பகுதியால், பதிற்றுப் பத்து முழுவதும் பாடாண் திணை என்பது உறுதிப்படும். ‘புறத்துள்ளும் இவ்வாறு வருவனவும் உணர்க” என்று, அவர் ‘புறத்துள்ளும்’ எனச் சுட்டியிருப்பது புறநானூற்றையாகும். பன்னிரண்டு திணைகளும் அமைந்துள்ள புறநானூற்றில் மூன்றில் ஒரு பங்குக்கு மேற்பட்ட (137) பாடல்கள் பாடாண் திணையைச் சார்ந்தவை என்பது ஈண்டு ஒப்பு நோக்கற்பாலது.

## நூல் அமைப்பு

பதிற்றுப் பத்து பத்துப் பத்துப் பகுதிகள் கொண்டுள்ளது. ஒவ்வொரு பகுதியிலும் பத்துப் பாடல்கள் உள்ளன. அதனால், ஒவ்வொரு பகுதியும் ஒரு ‘பத்து’ என வழங்கப்படுகிறது. எனவே, பத்துப் ‘பத்துக்கள்’ கொண்டது பதிற்றுப் பத்து என்பது புலப்படும். இக் காரணம்பற்றியும் ‘பதிற்றுப் பத்து’ என்னும் பெயர் வழங்கப்பட்டது எனலாம். ஐங்குறு நூற்றில் ஐம்பது பத்துக்கள் உள்ளமை போலப் பதிற்றுப் பத்தில் பத்துப் பத்துக்கள் உள்ளன. இந்தப் ‘பத்து’ முறையைப் பார்த்தே பிற்காலத்தார், அந்தப் பத்து-இந்தப் பத்து எனப் பல பத்துக்கள் பாடலாயினர்.

ஐங்குறு நூற்றில் ‘தொண்டிப் பத்து’ அந்தாதித்தொடையாய் இருப்பது போலவே, பதிற்றுப் பத்தில் நான்காம் பத்து அந்தாதித் தொடையாய் உள்ளது. இந்தப் பத்தில் முதல் பாட்டின் இறுதி, ‘மாண்டனை பலவே’ என்பதாகும்; இரண்டாவது பாட்டின் முதலும், ‘மாண்டனை பலவே’ என்பதாகும்; இரண்டாவது பாட்டின் இறுதி ‘இறும் பூதாற் பெரிதே’ என்பது; மூன்றாவது பாட்டின் முதலும் ‘இறும் பூதாற் பெரிதே’ என்பதாகும். இவ்வாறு பத்துப் பாடல்களும் சங்கி

லித் தொடர்போல் அந்தாதித் தொடையாய் அமைந்துள்ளன. பதிற்றுப் பத்தின் இந்த அந்தாதி அமைப்பைப் பார்த்துத் தான், பிற்காலத்தில் 'பதிற்றுப் பத்தந்தாதி' என்னும் பெயரில் பல நூல்கள் தோன்றின போலும். எடுத்துக்காட்டாக,– மதுரைப் பதிற்றுப் பத்தந்தாதி, திருக்கருவைப் பதிற்றுப் பத்தந்தாதி, இளசைப் பதிற்றுப் பத்தந்தாதி முதலியன காண்க. அந்தாதித் தொடையில் பத்துப் பாடல்கள் மட்டும் கொண்ட சிறுநால், 'பதிற்றந்தாதி' எனப்படும் என இலக்கண விளக்கப் பாட்டியல் கூறுவதும், பதிற்றுப் பத்தின் நான்காம் பத்தால் பெற்ற படிப்பினையே போலும்!

'வெண்பாப் பத்துக் கலித்துறைப் பத்துப்
பண்புற மொழிதல் பதிற்றந் தாதி'

என்பது இலக்கண விளக்கப் பாட்டியல். (81 – ஆம் நூற்பா.)

பதிற்றந்தாதியைப் போலவே, 'ஒருபா ஒருபஃது' என்னும் நூலின் தோற்றமும் இத்தகைய படிப்பினையின் விளைவே! ஆசிரியமோ, வெண்பாவோ, கலித்துறையோ அந்தாதித் தொடையில் பத்துப் பாடப்பெறின் 'ஒருபா ஒரு ப∴து' எனப் படும், இதனை,

'வெள்ளை ஆதல் அகவல் ஆதல்
தள்ளா ஒருபது ஒருபா ஒருப∴து'

என்னும் பன்னிருபாட்டியல் (219–ஆம்) நூற்பாவாலும்,

'அகவல் வெண்பாக் கலித்துறை யதுகொண்டு
ஒருபா ஒருப∴து உறின் அப் பெயராம்'

என்னும் இலக்கண விளக்கப் பாட்டியல் (451 - ஆம்) நூற்பாவாலும் அறியலாம். எடுத்துக்காட்டாக,—பட்டினத்தார் இயற்றிய 'திருவொற்றியூர் ஒருபா ஒருபஃது' என்னும் சிறு நூலைக் காண்க. இதில், பத்து ஆசிரியப்பாக்கள் அந்தாதித் தொடையில் அமைந்துள்ளன.

இவ்வாறாகப் பிற்காலத்தில் பல நூல்கள் தோன்றுவதற்குப் பதிற்றுப்பத்து முன்னோடியாக இருந்தது என்பதை அறியும் போது, இத்தொகை நூலின் இன்றியமையாமை விளங்குகிறது.

இந்த நாலில் ஒவ்வொரு பத்தின் தொடக்கத்திலும் 'பதிகம்' என்னும் பெயரில் ஒரு பகுதி உள்ளது. இதில், பாடியவர் பெயர், பாடப்பட்டவர் பெயர், அவரது ஆட்சியாண்டு, பாடல் தலைப்புக்கள், பெற்ற பரிசு முதலிய விவரங்கள் தரப் பட்டுள்ளன. ஒவ்வொரு பத்திலும் ஒவ்வொரு பாடலின் இறுதியிலும் துறை, வண்ணம், தூக்கு, பாடலின் பெயர் ஆகியவை தரப்பட்டுள்ளன. எடுத்துக் காட்டாக,— இரண்டாம் பத்தின் முதல்பாட்டின் இறுதியில்,

துறை: செந்துறைப் பாடாண் பாட்டு.
வண்ணம்: ஒழுகு வண்ணம்.
தூக்கு: செந்தூக்கு:
பெயர்: புண்ணுமிழ் குருதி.

என்று கொடுக்கப்பட்டிருப்பது காண்க. அடுத்து,—ஒவ்வொரு பத்தின் இறுதியிலும் பாடப்பட்டவர் பெயரும், பாடியவர் பெயரும், பாட்டு எண்ணிக்கையும் தரப்பட்டுள்ளன. எடுத்துக்காட்டாக,-இரண்டாம் பத்தின் இறுதியில்,-

"இமய வரம்பன் நெடுஞ்சேரலாதனைக் குமட்டூர்க் கண்ணனார் பாடினார் பத்துப்பாட்டு முற்றும்"—

என்றிருப்பது காணலாம்.

இந் நூலுக்குப் பழைய உரை ஒன்று உள்ளது. அந்த உரையில்லாத ஓலைச் சுவடிகளில் 'பதிகம்' என்னும் பகுதி எந்தப் பத்தின் முன்னாலும் இல்லை. எனவே, இந்தப் பதிகங்கள், நூலாசிரியர்களாலோ அல்லது நூலைத் தொகுத்தவராலோ இயற்றப் படவில்லை; பின்னால் வந்த உரையாசிரியராலோ அல்லது வேறு யாராலோ இயற்றப்பட்டிருக்க வேண்டும்—என உணரலாம். இந்தப் பதிகங்கட்கும் பழையவுரை இருப்பதால், அந்த உரை எழுதும்போது பதிகங்களும் இருந்தமை புலப்படும். ஆனால், உரையில்லாமல் பாடல்கள் மட்டும் உள்ள ஓலைச்சுவடிகளில் தூக்கு, வண்ணம், துறை, பெயர் ஆகியவையிருப்பதால், இவற்றைப் பாடலாசிரியரோ அல்லது நூல் தொகுத்தவரோ எழுதியிருக்க வேண்டும் எனத் தெளியலாம். ஆகவே, பதிகங்கள் மட்டும், நூல் தொகுத்த

பின்னர், பிற்காலத்தார் ஒருவரால் இயற்றப் பட்டன என்பதும் தெளிவாகிறது. இந்தப் பதிகப்பகுதிகளை நச்சினார்க்கினியர். அடியார்க்கு நல்லார் முதலியோர் எடுத்தாண்டிருப்பதால், பதினான்காம் நூற்றாண்டிற்கு முன்பே இந்தப் பதிகங்கள் இயற்றப் பட்டன என்பதும் தெளிவு.

பாடினோரும் பாடப்பட்டோரும்:

பதிற்றுப்பத்தின் முதல்பத்தும் இறுதிப்பத்தும் இந்நாள் வரையும் கிடைக்காமையால், அவை, யாரபைப்பற்றி யாரால் பாடப்பட்டன என்று அறிய முடியவில்லை. இடையிலுள்ள எட்டுப் பத்துக்கட்கும் பாடினோர் பெயரும் பாடப்பட்டோர் பெயரும் அரசரது ஆட்சி ஆண்டுக் காலமும் தெரிகின்றன. அவை முறையே வருமாறு:—

இரண்டாம் பத்து: இமயம்வரம்பன் நெடுஞ்சேரலாதனைக் குமட்டூர்க் கண்ணனார் பாடியது. இம் மன்னன் ஆண்ட மொத்த ஆண்டுக்காலம்: ஐம்பத் தெட்டாண்டு.

மூன்று: பல்யானைச் செல்கெழுகுட்டுவனைப் பாலைக் கௌதமனார் பாடியது. ஆட்சிக்காலம்: இருபத்தைந் தாண்டு.

நான்கு: களங்காய்க் கண்ணி நார் முடிச்சேரலைக் காப்பியாற்றுக் காப்பியனார் பாடியது. இருபத்தைந்தாண்டு.

ஐந்து: கடல் பிறக்கோட்டிய செங்குட்டுவனைப் பரணர் பாடியது. அரசனது ஆட்சிக்காலம்: ஐம்பத்தைந்தாண்டு.

ஆறு: ஆடுகோட் பாட்டுச் சேரலாதனைக் காக்கை பாடினியார் நச்செள்ளையார் பாடியது. ஆட்சி: முப்பத்தெட்டாண்டு.

ஏழு: செல்வக் கடுங்கோ வாழியாதனைக் கபிலர்பாடியது. ஆட்சி: இருபத்தைந்தாண்டு.

எட்டு: தகடூர் எறிந்த பெருஞ்சேரல் இரும்பொறையை அரிசில் கிழார் பாடியது. ஆட்சிக்காலம்: பதினேழாண்டு.

ஒன்பது: குடக்கோ இளஞ்சேரல் இரும்பொறையைப்

பெருங்குன்றூர் கிழார் பாடியது. ஆட்சிக்காலம்: பதினா றாண்டு.

பாடப்பட்டோர் அனைவரும் சேர மன்னர்களே, இவர் களை இந்தப் புலவர்கள் பாடி, நம்ப முடியாமல் வியக்கத் தகுந்தவாறு மிகப் பெரியஅளவில் பரிசு பெற்றுள்ளார்கள். தலைமைப் புலவர்களாகிய கபிலரும் பரணரும் பதிற்றுப் பத்திலும் இடம் பெற்றிருப்பது குறிப்பிடத்தக்கது.

பதிற்றுப் பத்தில் இடம் பெற்றுள்ள சேர மன்னர்கள் சேர நாட்டிலேயே வெவ்வேறிடங்களில் முன் பின்னான காலங் களில் அரசாண்டவர்கள். இவர்கள் உதியன் மரபினர் எனவும், இரும்பொறை மரபினர் எனவும் இரு வகையர், இவ்விரு வகையினரும் தாயத்தினர் - பங்காளி முறையினர். மேலே குறிப்பிட்டுள்ள எண்மருள் முதல் ஐவரும் உதியன் மரபினர்; இறுதி மூவரும் இரும்பொறை மரபினர். உதியஞ் சேரலின் மக்கள் இமய வரம்பன் நெடுஞ்சேரலாதனும் பல்யானைச் செல்கெழு குட்டுவனும் ஆகிய இருவராவர். இவர்களுள் முன்ன வன் இரண்டாம் பத்திலும், பின்னவன் மூன்றாம் பத்திலும் பாடப்பட்டுள்ளனர். இமயவரம்பன் நெடுஞ் சேரலாதனுக்கு வேளாவிக் கோமான் மகள் வயிற்றில் பிறந்த களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரல் நான்காம் பத்திலும், ஆடுகோட் பாட்டுச் சேரலாதன் ஆறாம் பத்திலுமாகப் பாடப்பட்டுள்ள னர். அதே இமய வரம்பன் நெடுஞ் சேரலாதனுக்குச் சோழன் மணக்கிள்ளி மகள் வயிற்றில் பிறந்த கடல் பிறக்கோட்டிய செங்குட்டுவன் ஐந்தாம் பத்தில் பாடப் பெற்றுள்ளான்; சிலப் பதிகாரத்தில் வரும் சேரன் செங்குட்டுவன் இவனே. சிலப்பதி கார ஆசிரியர் இளங்கோவடிகள் மணக்கிள்ளி மகள் வயிற் றில் பிறந்த இளவலாயிருக்க வேண்டும். இதுகாறுங் கூறப் பட்ட ஐந்து பத்தின் தலைவர்களாகிய ஐவரும், அண்ணன்- தம்பியரும், அப்பன்-பிள்ளையுமான உறவு முறை உடையவர் என்பது புலனாகும்,

அடுத்து,-அந்தவஞ் சேரல் இரும் பொறையின் மகனான செல்வக்கடுங்கோ வாழியாதன் ஏழாம் பத்திற்கு உரியவன் ஆவான், இந்தச் செல்வக் கடுங்கோவின் மைந்தனாகிய தகடூர்

எறிந்த பெருஞ்சேரல் இரும்பொறை ஒன்பதாம் பத்தில் இடம் பெற்றுள்ளான். எனவே, ஏழு - எட்டு, ஒன்பதாம் பத்திற்கு உரியவர்கள், தந்தையும் - மைந்தனும் பாட்டனும் - பேரனுமாகிய உறவு முறையினர் என்பது பெறப்படும்.

இந்த அமைப்பைக் கொண்டு, பதிற்றுப்பத்தின் முதல் பத்திற்கும் பத்தாம் பத்திற்கும் உரிய சேர மன்னர்களை உய்த்துணரலாம். இரண்டாம் பத்தின் தலைவனாகிய இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் உதியஞ்சேரலின் மைந்தனாகையால், முதல் பத்தின் தலைவன் உதியஞ்சேரலாகத்தான் இருக்கக்கூடும் எனக் குழந்தையும் கூறமுடியுமே! இமயவரம்பனின் இளவலும் மக்களும் அடுத்தடுத்த பத்துக்களில் இடம் பெற்றிருப்பதால், அவன் தந்தை உதியஞ்சேரல் முதல் பத்திற்கு உரியவனாயிருப்பதில் வியப்பொன்றும் இல்லை. ஆனால், எப்படியோ முதல் பத்துக் காணாதொழிந்தது. இதன் ஆசிரியர் பெயரை அறிவது அரிது.

இவ்வாறே பத்தாம் பத்தின் தலைவனையும் கண்டுபிடிக்க முடியும். ஏழு-எட்டு-ஒன்பதாம் பத்துக்களின் தலைவர்கள் இரும்பொறை மரபினர் என அறிந்தோம். எனவே, பத்தாம் பத்தின் தலைவன் இரும்பொறை மரபினனாகவே இருத்தல் கூடும். முற்கூறிய மூவரே யன்றி, இரும்பொறை மரபைச் சேர்ந்த மற்ற மன்னர்களுள், 'இரும்பொறை' என்னும் குடிப் பெயருடன் கூடியவர்கள், கோச்சேரமான் யானைக்கட்சேய் மாந்தரஞ் சேரல் இரும்பொறை, சேரமான் கருவூர் ஏறிய ஒள்வாட் கோப்பெருஞ்சேரல் இரும்பொறை என்னும் இருவரே யாவர். இவர்களுள் பின்னையோனினும் முன்னையோனே தலைசிறந்தவனாகப் பாராட்டப் பெற்றுள்ளான்; இரும்பொறை மரபைச் சேர்ந்த மற்ற மன்னர்களுக்குள்ளும், இவனே தமிழோடும்-தமிழ்ப் புலவர்களோடும் மிகுதியாகத் தொடர்பு கொண்டுள்ளான்; மற்ற இரும்பொறை மன்னர்களினும் இவனே மிகுந்த புலவர்களால் பாடப் பெற்றுள்ளான், இவனைக் கூடலூர் கிழார், குறுங்கோழியூர் கிழார், பொருந்தில் இளங்கீரனார் முதலியோர் பாடியுள்ளனர்; கூடலூர் கிழாரைக் கொண்டு ஐங்குறுநூற்றைத் தொகுப்பித்த தனிப் பெருமையும்

இவனுக்கு உண்டு: எனவே, பதிற்றுப் பத்தின் பத்தாம் பத்துத் தலைவன் யானைக்கட்சேய் மாந்தரஞ் சேரல் இரும்பொறை யாக இருக்கலாம். இவன் தலைமைப் புலவராகிய கபிலருக்கு நண்பன் எனக் கூறப்படும் தமிழ்த்துறை தொடர்பான செய்தி யும், பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ் செழியனோடும், சோழன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி யோடும் போரிட்டவன் எனக் கூறப்படும் போர்த்துறைத் தொடர்பான செய்தியும்,பதிற்றுப்பத்தின் ஒருபத்துக்குத் தலை வனாய் விளங்கக் கூடிய தகுதியுடையவன் இவன் என்பதற்கு மேலும் சான்று பகரும். இவன், பதிற்றுப்பத்தில் இடம் பெற் றுள்ள இரும்பொறை மரபைச் சேர்ந்த மன்னர்கள் மூவருக்கும் அப்பன்-பிள்ளை, அல்லது அண்ணன்-தம்பி என்ற உறவு முறை யுள்ள தாயத்தினனாவான்.

பத்தாம் பத்தின் தலைவனென உய்த்துணரப்பட்ட யானைக்கட்சேய் மாந்தரஞ் சேரல் இரும்பொறையை அந்தப் பத்தில் பாடியவர் கூடலூர் கிழாராக இருக்கலாம். இவன் ஆதரவின்கீழ் இவனது ஆணைப்படிஐங்குறுநூற்றை இப்புலவர் தொகுத்திருப்பதைக் கொண்டும், இவனது ஆட்சியின் போது ஒரு விண்மீன் வீழ்ந்ததால்,இவன் இன்ன நாளில் இறந்துவிடக் கூடுமே என இப் புலவர் நடுங்கியிருந்ததைக் கொண்டும், அவ்வாறே இவன் இறந்துவிட்டபோது இப் புலவர் மிகவும் வருந்திப் பாடியிருப்பதைக் கொண்டும்,பத்தாம் பத்தை இவரே பாடியிருக்கலாம் எனக் கருத இடமுண்டு.ஈண்டு மேலும் ஒன்று நோக்கத் தக்கது. பதிற்றுப் பத்துப் பாடிய புலவர் ஒவ்வொரு வர்க்கும் தொடர்புடைய மன்னர் ஒவ்வொருவரும் வரையறை யின்றி மிகுந்த பரிசில் அளித்திருப்பதாகச் சொல்லப்பட்டுள் ளது. இவ்வாறே, யானைக்கட்சேய் மாந்தரஞ் சேரல் இரும் பொறையும் வரையறையின்றி வழங்கும் வள்ளல் எனவும்,தாம் அவனிடத்துப் பரிசு பெறும் இரவலர் எனவும், கூடலூர் கிழார் புறநானூற்றுப் பாடலில் (229) கூறியுள்ளார், பாடல் பகுதி வருமாறு:—

'...ஒருமீன் விழுந்தன்றால் விசும்பி னானே
அதுகண்டு,

யாமும் பிறரும் பல்வேறு இரவலர்...
அழிந்த நெஞ்சம் மடியுளம் பரப்ப
அஞ்சினம் எழுநாள் வந்தன் றின்றே...
தன்துணை யாயம் மறந்தனன் கொல்லோ
பகைவர்ப் பிணிக்கும் ஆற்றல் நசைவர்க்கு
அளந்து கொடை அறியா ஈகை
மணிவரை யன்ன மாஅ யோனே!'

பதிற்றுப்பத்தின் மற்ற மன்னர்களைப் போலவே, யானைக்கட்சேய் மாந்தரஞ் சேரல் இரும்பொறையும் வரை யறையில்லாத வள்ளன்மை யுடையவன் என்றும், அதனால் இவன் பத்தாம் பத்தின் தலைமைக்குத் தக்கவன் என்றும், மேற்காட்டியுள்ள புறப்பாடலின் பகுதியால் உய்த்துணரலாம்.

பதிகங்கள்:

பதிற்றுப் பத்தின் ஒவ்வொரு பத்திற்கும் முன்னால் ஒவ் வொரு பதிகம் இருப்பதாக முன்பு கூறினோம். இப்பதிகங்கள் நூல் தொகுக்கப்பட்ட பின் எழுதப்பட்டவை எனப்படினும், நூல் தொகுப்பிற்குப்பின் பலகாலம் சென்று எழுதப்பட்டிருக்க மாட்டா. நூல் தொகுப்பை யடுத்தே எழுதபட்டிருக்கக் கூடும். இற்றைக்கு ஏறக்குறைய ஆயிரத்தைஞ்ஞூறு ஆண்டுகட்கு முன்பே எழுதப்பட்டதால்தான் இப் பதிகங்களில் போதிய விவரங்கள் தரப்பட்டுள்ளன. இந்தப் பதிகங்கள் இல்லையேல், இந்நூலைப் பற்றி அவ்வளவாக ஒன்றும் அறிய முடியாது. இதை விளங்கச் செய்ய, மாதிரிக்காக இரண்டாம் பத்தின் முகப்பில் உள்ள பதிகப் பகுதி வருமாறு: -

"இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனை ஆசிரியர்
குமட்டூர்க் கண்ணனார் பாடிய இரண்டாம் பத்து.

பதிகம்

"மன்னிய பெரும்புகழ் மறுவில் வாய்மொழி
இன்னிசை முரசின் உதியஞ் சேரற்கு
வெளியன் வேண்மான் நல்லினி யீன்றமகன்
அமைவரல் அருவி இமையம் விற்பொறித்

திமிழ்கடல் வேலித் தமிழகம் விளங்கத்
தன்கோல் நிறீஇத் தகைசால் சிறப்பொடு
பேரிசை மரபின் ஆரியர் வணக்கி
நெய்தலை பெய்து கையிற் கொளீஇ
அருவிலை நன்கலம் வயிரமொடு கொண்டு
பெருவிறல் மூதூர்த் தந்துபிறர்க் குதவி
அமையார்த் தேய்த்த அணங்குடை நோன்றாள்
இமைய வரம்பன் நெடுஞ்சேர லாதனைக்

குமட்டூர்க் கண்ணனார் பாடினார் பத்துப்பாட்டு. அவைதாம். புண்ணுமிழ் குருதி, மறம் வீங்கு பல் புகழ், பூத்த நெய்தல், சான்றோர் மெய்ம்மறை, நிரைய வெள்ளம், துயிலின் பாயல், வலம்படு வியன் பணை, கூந்தல் விறலியர், வளனுறு பைதிரம், அட்டு மலர் மார்பன்—இவை பாட்டின் பதிகம்.

பாடிப் பெற்ற பரிசில்: உம்பற்காட்டு ஐஞ்ஞூறூர் பிரம தாயம் கொடுத்து முப்பத்தெட்டி யாண்டு தென்னாட்டுள் வருவதனிற் பாகம் கொடுத்தான் அக்கோ.

இமையவரம்பன் நெடுஞ்சேரலாதன் ஐம்பத்தெட்டியாண்டு வீற்றிருந்தான்.''—

மேலுள்ளது பதிகப் பகுதி; அஃதாவது,—பாடலாலும் உரைநடையாலும் எழுதப்பட்டுள்ளது. இதே மாதிரியில் பின்னுள்ள பதிகங்களும் இருக்கின்றன. மேலுள்ள பதிகத்தின் பாடல் பகுதியில், இந்தப் பத்துக்கு உரிய அரசன் இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் என்பதும், அவன் பெற்றோர் உதியஞ்சேரல் –வேண்மாள் நல்லினி என்பதும், அவன் பெற்ற வெற்றிச் சிறப்புக்களும் விவரிக்கப்பட்டுள்ளன. பாட்டுப் பகுதியைத் தொடர்ந்து உரைநடையாக உள்ள மூன்று பத்திகளுள் முதல் பத்தியில், பாடலாசிரியரின் பெயரும், பாட்டு எண்ணிக்கையும் ஒவ்வொரு பாட்டின் பெயரும் கூறப்பட்டுள்ளன; இரண்டாம் பத்தியில், பாடிப்பெற்ற பரிசு விவரம் கொடுக்கப்பட்டுள்ளது; மூன்றாம் பத்தியில் அரசன் ஆட்சிசெலுத்திய மொத்த ஆண்டுக் காலம் தெரிவிக்கப்பட்டுள்ளது. பின்னுள்ள எல்லாப் பதிகங்களிலும் இதேபோன்ற முறை கட்டுப்பாடாய்க் கையாளப்பட்

டுள்ளது. இப் பதிகங்கள் வரலாற்று ஆராய்ச்சிக்கு மிகவும் பயன்படுவன வன்றோ?

பதிகப் பகுதியில் பத்துப் பாடல்களின் பெயர்களும் குறிப்பிடப்பட்டுள்ளமை கூர்ந்து நோக்கற்பாலது. பாடலில் உள்ள சிறப்புத்தொடர் ஒன்று பாடலின் பெயராக அமைக்கப்பட்டுள்ளது. முதல் பாடலில், 'வருநிறம் திறந்த புண்ணுமிழ் குருதியின்' என்னும் எட்டாவது அடியிலுள்ள 'புண்ணுமிழ் குருதி' என்னும் சிறப்பான பொருள்பொதிந்த தொடர் அப்பாடலுக்குப் பெயராக்கப்பட்டுள்ளது. சங்கப் புலவர்களுள் சிலர், அவரவர் பாடலில் உள்ள சிறப்புத் தொடரால் பெயர் பெற்றுள்ளமை ஈண்டு ஒப்பு நோக்கற்பாலது. ஐங்குறு நூற்றில் பல பத்துக்கள் சிறப்புச் சொல் அல்லது சிறப்புத் தொடரால் பெயர் பெற்றுள்ளமையும் ஈண்டு நினைவுகூரத் தக்கது. பிற்காலத் தெழுந்த நூல்கள் சிலவற்றில் பாடலின் முதல்சொல் அல்லது முதல்தொடர் பெயராய் அமைந்திருப்பது, பதிற்றுபத்தும் ஐங்குறுநாறும் அளித்த படிப்பினையா யிருக்கலாம்.

பதிற்றுப் பத்துப் பதிகங்களின் அமைப்பைப் பார்த்துப் பிற்காலத்தினர் பெற்ற படிப்பினைகள் இன்னும் சில உண்டு. பிற்காலச் சோழவேந்தர்களின் கல்வெட்டுகளின் தொடக்கத்தில், 'மெய்க்கீர்த்தி' என்னும் பகுதியொன்று இருக்கக்காணலாம். இந்த மெய்க்கீர்த்தியில் மன்னரது படை வீரம், கொடைவீரம், இன்ன பிற சிறப்புக்கள், ஆட்சியாண்டு முதலியவை கூறப் பெற்றிருக்கும். இந்த மெய்க்கீர்த்தியமைப்பு, முதல் முதலாக முதலாம் இராசராசசோழனின் கல்வெட்டுகளில்தான் காணப் படுகிறது. இந்த மெய்க்கீர்த்தி, பதிற்றுப் பத்துப் பதிகப் பாடல்கள் போலவே இருப்பதால், அந்தப் பதிகங்களைப் பார்த்தே அதேமாதிரியில் இது எழுதப்பட்டிருக்க வேண்டும். முதலாம் இராசராசன் பத்தாம் நூற்றாண்டுக் காரனாதலால், பத்தாம் நூற்றாண்டுகட்கும் பல நூறாண்டுகட்கு முன்பே பதிற்றுப் பத்தின் பதிகங்கள் எழுதப்பட்டுப் பரவலாகப் பயன் தந்து வந்தன என்பது புலனாகலாம்.

பதிற்றுப் பத்துப் பதிகம் தந்த அடுத்த படிப்பினை வருமாறு:—பதிற்றுப்பத்தில் பத்துப் பாடல்கள் கொண்ட ஒவ்

வொரு பத்துக்கும் முன்னால் உள்ள 'பதிகம்' என்னும் பெயரைப் பார்த்து, பிற்காலத்தவர், பத்துப் பாடல்கள் கொண்ட சிறுசிறு மடல்களுக்குச் (சிறு நூல்களுக்குப்) 'பதிகம்' என்னும் பெயர்வைக்கத் தொடங்கிவிட்டனர். அந்தப் பதிகம்—இந்தப் பதிகம் என இந்தக் காலத்தில் ஆயிரக் கணக்கான பதிகங்களைக் காணலாம். ஒவ்வொரு பதிகத்திலும் பத்துப் பாடல்கள் இருக்கும். 'பதிகம்' என்னும் சொல்லுக்குப் பத்துக் கொண்டது எனப் பொருள் செய்து ஏராளமான பதிகங்களை இயற்றித் தள்ளியுள்ளனர்.

மற்றும், 'பதிகம்' என்னும்சொல் 'பதியம்' என மாறிப் 'பாட்டு' என்னும் பொருளில்,

'அன்ன வயற்புதுவை ஆண்டாள் அரங்கற்குப்
பன்னு திருப்பாவைப் பல்பதியம்—இன்னிசையில்
பாடிக் கொடுத்தாள்நற் பாமாலை பூமாலை
சூடிக் கொடுத்தாளைச் சொல்'

என ஆண்டாளின் திருப்பாவைத் தனியனில் ஆளப்பட்டிருப்பதும் ஈண்டு எண்ணத்தக்கது. இந்தத் தனியன் ஒன்பதாம் நூற்றாண்டில் உய்யக்கொண்டார் என்பவரால் இயற்றப் பெற்றதாகும்.

பதின்மூன்றாம் நூற்றாண்டில் நன்னூல் இயற்றிய பவணந்தி முனிவர், நன்னூல் - பொதுப் பாயிரம் முதல் நூற்பாவில், பாயிரம் என்பதற்கு உரிய வேறுபெயர்களுள் 'பதிகம்' என்பதும் ஒன்று எனத் தெரிவித்துள்ளார்;—

'முகவுரை பதிகம் அணிந்துரை நூன்முகம்
புறவுரை தந்துரை புனைந்துறை பாயிரம்'

என்பது அந் நூற்பா இதன் விருத்தியுரையில் 'பதிகம்' என்னும் சொல்லை விளக்கவந்த சங்கர நமச்சிவாயர்,

'பதிகக் கிளவி பல்வகைப் பொருளைத்
தொகுதி யாகச் சொல்லுதல் தானே'—

என்பவாகலின்...பல்வகைப் பொருளையும் தொகுத்துச் சொல்லுதலின் பதிகமென்றும்...பெயராம் என்றவாறு''.—

என்று கூறியுள்ளார். பின்னால் விரிவாகச் சொல்லப்போகும் செய்திகளை முன்கூட்டித் தொகுத்துச் சொல்வது பாயிரமாகும். பதிற்றுப் பத்தில் ஒவ்வொரு பத்துக்கும் முன்னால் உள்ள பதிகம், அந்தப் பத்தைப் பற்றிய செய்திகளைச் சுருக்கிச் சொல்வதால், ஒவ்வொரு பதிகத்தையும் ஒவ்வொரு பத்தினுடைய பாயிரம் என்று சொல்லலாம் போல் தோன்றுகிறதல்லவா? எனவே, இந்தப் 'பதிகம்' என்னும் பெயரைப் பார்த்தே நன்னூலார் பாயிரத்திற்குப் 'பதிகம்' என்னும் பெயரும் உண்டு என்று கூறியிருக்க வேண்டும். இதை நன்கு உணர்ந்து கொண்ட சங்கர நமச்சிவாயர்.

"பதிகக் கிளவி பல்வகைப் பொருளைத்
தொகுதி யாகச் சொல்லுதல் தானே"

என்னும் திவாகர - பிங்கல நிகண்டு நூற்பாவை எடுத்துக் காட்டி நல்ல விளக்கம் தந்துள்ளார். இந்த மேற்கோள் நூற்பாவும் பதிற்றுப்பத்தின் பதிகத்தைப் பார்த்தே இயற்றப்பட்டிருக்க வேண்டும். இலக்கியம் கண்டதற்கே இலக்கணம் அன்றோ? மற்றும், எந்தப் பழைய பாட்டியல் நூலிலும் இடம் பெறாத 'பதிகம்' என்னும் நூலுக்குப் பன்னிரு பாட்டியல் என்னும் நூலில் பின்வருமாறு இலக்கணம் சொல்லப்பட்டுள்ளது:—

"ஆசிரி யத்துறை அதனது விருத்தம்
கலியின் விருத்தம் அவற்றின் நான்கடி.
எட்டின் காறும் உயர்ந்த வெண்பா
மிசைவைத்து ஈரைந்து நாலைந்து என்னப்
பாட்டுவரத் தொடுப்பது பதிகம் ஆகும்."

இதில், பத்துப் பாட்டு இருப்பதன்றி, இருபது பாட்டு இருப்பதும் பதிகம் என்று சொல்லப்படுகிறது. ஆகக் கூடியும், பதிகம் என்னும் பெயரைப் பிற்காலத்தார் பல கோணங்களில் பயன்படுத்திக் கொள்வதற்கு முன்னோடியாக இருந்தது பதிற்றுப் பத்தின் பதிகம் என்பது பெறப்படும்.

பிற்காலத்தில், பதிகம் என்பதற்குப் பலவாறு விளக்கம் செய்து கொண்டுள்ளனராயினும், பதிற்றுப் பத்தில் பதிகப்

பாடலை யடுத்துள்ள உரைநடைப் பகுதியில் வேறொரு வகை யான விளக்கம் குறிப்பாகத் தரப்பட்டுள்ளது. இரண்டாம் பத்துப் பாடலை யடுத்துள்ள உரைநடைப் பகுதியை மீண்டும் காண்பாம்:

"குமட்டூர்க் கண்ணனார் பாடினார் பத்துப் பாட்டு. அவைதாம்: புண்ணுமிழ் குருதி, மறம் வீங்கு பல்புகழ், பூத்த நெய்தல், சான்றோர் மெய்ம்மறை, நிரைய வெள்ளம், துயி லின் பாயல், வலம்படு வியன் பணை, கூந்தல் விறலியர், வள னறு பைதிரம், அட்டு மலர் மார்பன் - இவை பாட்டின் பதி கம்"—

இதில், 'பாடினார் பத்துப் பாட்டு' என்று பாடல் தொகை யைச் சொல்லி, பின்னர், 'அவைதாம்' என்று அந்தப் பத்துப் பாட்டுக்களின் பெயர்களைச் சொல்லத் தொடங்கி, 'புண் ணுமிழ் குருதி' முதல் 'அட்டு மலர் மார்பன்' வரையுள்ள பாட் டின் பத்துத் தலைப்புப் பெயர்களைச் சொல்லத் தொடங்கி, 'புண்ணுமிழ் குருதி' முதல் 'அட்டு மலர் மார்பன்' வரையுள்ள பாட்டின் பத்துத் தலைப்புப் பெயர்களையும் தந்து, இறுதி யில் 'இவை பாட்டின் பதிகம்' எனக் கூறியுள்ளமை காண்க. 'இவை பாட்டின் பதிகம்' என்னும் தொடருக்குப் பொருள் என்ன? 'இவை' என்பது, பத்துத் தலைப்புப் பெயர்களையும் குறிக்கிறது; 'பாட்டின்' என்பது, மேலே 'பாடினார் பத்துப் பாட்டு' எனப்பட்டுள்ளதே—அந்தப் பத்துப் பாட்டையும் குறிக்கிறது; 'பதிகம்' என்பது, பாட்டில் பதிந்துள்ள பொருள் பொதிந்த பகுதி என்னும் கருத்தை யறிவிக்கிறது; அதாவது பதிகம் என்றால் 'பதிந்திருப்பது' என்று பொருள் பண்ணக் கூடியதாயுள்ளது; செடி கொடிகளைப் பதிய வைப் பதற்குப் 'பதிபோடுதல்:- பதிவு போடுதல்-பதியம் போடுதல்- என்றெல்லாம் பெயர் வழக்காறு உள்ளமை காண்க. மறைசை யந்தாதி என்னும் நூலில், இந்தப்பொருளில், 'பதிகம் பரிக்கும் குழல் (17) என்பதாகச் செய்யுள் வழக்காறு இருப்பதும் அறிக.

எனவே, பதிற்றுப்பத்தில் உள்ள 'பதிகம்' என்பதற்கு, பின் னால் விரிவாகச் சொல்லப்பட்டிருக்கும் செய்திகள் முன்னால்

சுருக்கமாகப் 'பதிந்திருப்பது' என்று பொருள் கொள்ளலாம். பதிந்தது பதிகம். இந்தப் பொருளின் அடிப்படையிலேயே, நன்னூலில் பவணந்தியார், பாயிரத்திற்குப் 'பதிகம்' என்னும் பெயரும் உண்டு எனக் கூறியுள்ளார்.

இதற்கு மேலும் சான்று வேண்டுமாயின், மணிமேகலை, சிலப்பதிகாரம் என்னும் இருபெருங் காவியங்கட்குச் செல்லலாம். மணிமேகலையில் முப்பது காதைகள் உள்ளன. இந்த முப்பது காதைகளையும் நூலுக்கு முன்னால் உள்ள பதிகம் என்னும் பகுதி குறிப்பிடுகிறது. இந்தப் 'பதிகம்' என்னும் சொல்லுக்குக் 'கதை பொதி பாட்டு' எனப் பொருள் கூறப்பட்டுள்ளது. தொண்ணூற்றெட்டு அடிகள் கொண்ட இந்தப் பதிகத்தில, காவியத்தின் உட்பொருள் முழுதும் சுருங்கத் தரப்பட்டுளளது. இந்தப் பதிகம் முப்பது காதைகளின் பெயர்களையும் முதலில் கூறி, இறுதியில்,

"...இளங்கோ வேந்தன் அருளிக் கேட்ப
வளங்கெழு கூல வாணிகன் சாத்தன்
மாவண் தமிழ்த்திறம் மணிமேகலை துறவு
ஆறைம் பாட்டினுள அறியவைத் தனனென்."

என முடிக்கப் பெற்றுள்ளது. இவ்வாறே சிலப்பதிகாரத்தின் முன்னாலும் தொண்ணூறு அடிகள் கொண்ட பதிகம் ஒன்றுள்ளது. இதில சிலப்பதிகாரச் சுருக்கமும் நூலிலுள்ள முப்பது காதைப் பெயர்களும் தரப்பட்டுள்ளன. இறுதியில்,

"...இவ்வா றைந்தும்
உரையிடை யிட்ட பாட்டுடைச் செய்யுள்
உரைசால் அடிகள் அருள மதுரைக்
கூலவாணிகன் சாத்தன் கேட்டனன்
இது,
பால்வகை தெரிந்த பதிகத்தின் மரபென்."

எனப் பதிகம் முடிக்கப் பெற்றுள்ளது. நூலின் உட்கிடையை முதலில் கூறி, இதுதான் 'பதிகம்' என இறுதி அடியில் குறிப்பிடப்பட்டிருப்பது காண்க. இதுகொண்டு, பதிகம் என்றால் என்ன என்பதை நன்கு தெளிந்து கொள்ளலாம்.

இனி, பதிற்றுப் பத்தின் பதிகங்களின் இறுதியில் கூறப் பட்டுள்ள பரிசில் விவரம் முறையே வருமாறு:—

இரண்டாம் பத்து:—(முன்னரே கூறப்பட்டுள்ளது).

மூன்றாம் பத்து:—'பாடிப் பெற்ற பரிசில்; நீர் வேண்டியது கொண்மின் என, யானும் என், பார்ப்பனியும் சுவர்க்கம் புகல் வேண்டும். என பார்ப்பாரிற் பெரியோரைக் கேட்டு ஒன்பது பெருவேள்வி வேட்பிக்க, பத்தாம் பெருவேள்வி யிற் பார்ப்பானையும் பார்ப்பனியையும் காணாராயினர்.'

நான்காம் பத்து.—'பாடிப் பெற்ற பரிசில்' நாற்பது நூறா யிரம் பொன் ஒருங்கு கொடுத்துத் தான் ஆள்வதிற் பாகம் கொடுத்தான் அக்கோ.'

ஐந்தாம் பத்து:— 'பாடிப் பெற்ற பரிசில்; உம்பற் காட்டு வாரியையும் தன் மகன் குட்டுவன் சேரலையும் கொடுத்தான் அக்கோ.' (மகனைக் கொடுத்தான் என்றால், மாணாக்கனாக ஒப்படைத்திருப்பான் என்று கருதலாம்.)

ஆறாம் பத்து:—'பாடிப் பெற்ற பரிசில்: கலன் அணிக என்று அவர்க்கு ஒன்பது காப் பொன்னும் நூறாயிரங் காண மும் கொடுத்துத் தன் பக்கத்துக் கொண்டான் அக்கோ.'

ஏழாம் பத்து:—பாடிப் பெற்ற பரிசில்: சிறுபுறமென நூறாயிரங் காணங் கொடுத்து, நன்றா என்னும் குன்றேறி நின்று தன் கண்ணிற்கண்ட நாடெல்லாம் காட்டிக் கொடுத் தான் அக்கோ.'

எட்டாம் பத்து:—'பாடிப் பெற்ற பரிசில்: தானும் கோயிலாளும் புறம்போந்து நின்று கோயிலுள்ள வெல்லாம் கொண்மின் என்று, காணம் ஒன்பது நூறாயிரத்தோடு அரசு கட்டிற் கொடுப்ப, அவர், யான் இரப்ப இதனை யாள்க என்று அமைச்சுப் பூண்டார்.

ஒன்பதாம் பத்து:— 'பாடிப் பெற்ற பரிசில்: மருளில் லார்க்கு மருளக் கொடுக்க வென்று உவகையின் முப்பத்திரா யிரம் காணங் கொடுத்து, அவர் அறியாமை ஊரும் மனையும்,

வளமிகப் படைத்து, ஏரும் இன்பமும் இயல்வரப்பரப்பி எண்ணற்காகா அருங்கல வெறுக்கையோடு பன்னூறாயிரம் பாற்பட வகுத்துக் காப்பு மறம் தான் விட்டான் அக்கோ.'

ஒவ்வொரு புலவரும் பெற்றுள்ள பரிசு விவரங்களைப் படிக்குங்கால் தலை சுற்றுகிறது. ஒருவர் அரசனைப் பத்து வேள்விகள் செய்யவைத்துத் தன் மனைவியுடன் சுவர்க்கம் போயுள்ளார். சுவர்க்கத்திலும் மனைவியைப் விட்டுப் பிரிய மனமில்லாத அவர் நல்லவர் போலும்! மற்றொருவர், அரசனது ஆட்சியில் பாதிப் பாகம் பெற்றுள்ளார். இன்னொருவர் மன்னன் மகனையே பெற்றுக் கொண்டுள்ளார்-வேறொருவர், குன்றின்மேல் ஏறிநின்று கண்ணில் தெரியும் பகுதியெல்லாம் எய்தியுள்ளார். ஒருவர், அரண்மனைப் பொருள்களுடன் அரசு கட்டிலும் கொடுப்பக் கொள்ளாது அமைச்சர் பதவியை ஏற்றுள்ளார். இன்னொருவர், தம்மூர் சென்ற பிறகு, தமக்குத் தெரியாமலே அங்கே முன்கூட்டி உரியவாக்கப் பட்டிருந்த ஊரும் மனையும் இன்ன பிறவும் எதிர்பாராது பெற்றுள்ளார். இவையன்றி, ஒவ்வொருவரும் கணக்கற்ற பொன்னும் பொருளும் ஊர்களும் பெற்றுள்ளதாகப் பதிகங்களுள் பறைசாற்றப் படுகின்றன. இதனால், அன்று தமிழ்ப் புலவோர்க்கு இருந்த பெருஞ்சிறப்பும், மன்னர்களின் பெருவண்மையும் புலனாகும். ஆனால், இந்தப் பரிசு விவரங்களைச் சிலர் நம்பாமல் ஐயுறக் கூடும். இவை உண்மையே என்பது அறிஞர்களின் கருத்து. சான்றும் கூற முடியும்.

மூன்றாம் பத்தில் தன்னைப் பாடிய பாலைக் கௌதமனாரின் வேண்டுகோளின் படி, பல்யானைச் செல்கெழு குட்டுவன் வேள்விகள் செய்து, அவரை மேலுலகிற்கு அனுப்பினான் என்னும் செய்தியை, அம் மன்னனின் அண்ணன் மகனாகிய இளங்கோவடிகள் சிலப்பதிகாரத்தில்-வஞ்சிக்காண்டம் நடுகற் காதையில்,

''நான்மறை யாளன் செய்யுட் கொண்டு
மேல்நிலை யுலகம் விடுத்தோ னாயினும்'' (137-38)

என்னும் பகுதியில் அறிவித்துள்ளார். இந் நிகழ்ச்சி இளங்கோவடிகள் அறிந்ததா யிருக்க வேண்டும். மன்னன் தொடர்ந்து

வேள்விசெய்து கொண்டு வந்திருப்பான்; பத்தாவது வேள்வியின் போது பாலைக் கௌதமனார் இயற்கை எய்தி விட்டிருக்கிறார். இயற்கையாய் இது நடந்திருக்கலாம். வேள்விகள் என்னவோ, புலவரின் நன்மைக்காகச் செய்யப்பட்டுள்ளன – அவ்வளவுதான்

மற்றப் பரிசுகளையும் நம்புவதற்குச் சான்றுகள் உள்ளன. பாலைக் கௌதமனார்க்காக வேள்வி செய்யப்பட்ட வரலாறு இன்றும் மலைநாட்டில் வழங்கப் படுகிறதாம். மற்றும், புறநானூற்றுப் பாடல்கள், கல்வெட்டுகள், செப்பேடுகள் போன்றவற்றிலும் சான்றுகள் கிடைத்துள்ளன. குமட்டூர்க் கண்ணனார், பரணர், காக்கை பாடினியார், நச்செள்ளையார் ஆகியோர் பரிசாகப் பெற்ற இடங்கள் கண்ணன் காடு, பரணன் கானம், காக்கையூர் என முறையே கல்வெட்டுக்களிலும் செப்பேடுகளிலும் குறிப்பிடப்பட்டுள்ளதாக உயர்திரு. சதாசிவப் பண்டாரத்தாரவர்கள் கூறியிருப்பது ஈண்டு எண்ணத்தக்கது.

கடவுள் வாழ்த்து

எல்லாத்தொகைநூல்களிலும் கடவுள் வாழ்த்து இருந்தும் பதிற்றுப்பத்தில் இல்லாமைக்குக் காரணம், நூலின் முன் பகுதியாகிய முதற்பத்து கிடைக்கா தொழிந்தமையேயாகும். முதல் பத்துப் பாடல்களே கிடைக்காதபோது. அவற்றிற்கும் முன்னால் இருந்த கடவுள்வாழ்த்து எவ்வாறு கிடைத்திருக்க முடியும்? பதிற்றுப்பத்தின் கடவுள் வாழ்த்துப்பாடல் பழைய ஓலைச் சுவடிகளில் இல்லாது போயினும். இக்காலத்தினர் அச்சிட்டு வெளியிட்டுள்ள பதிற்றுப் பத்துப் பதிப்புக்களில், ‘எரியெள்ளுவன்ன நிறத்தன்’ என்று தொடங்கும் பன்னிரண்டடி கொண்ட பாடல் ஒன்று, கடவுள் வாழ்த்துப் பாடலாக நூலின் முன்னால் சேர்த்து அச்சிடப்பெற்றுள்ளது. இந்தப் பாடல், தொல்காப்பியம் - புறத்திணையியலில் ‘அமரர் கண் முடியும் அறுவகை யானும்’ என்று தொடங்கும் (26 - ஆம்) நூற்பாவின் உரைப்பகுதியிடையே நச்சினார்க்கினியரால் எடுத்துக்காட்டப் பெற்றுள்ளது. பாடல் முழுவதும் வருமாறு:-

‘எரியெள்ளு வன்ன நிறத்தன் விரியிணர்க்
கொன்றையம் பைந்தார் அகலத்தன் பொன்றார்
எயிலெரி யூட்டிய வில்லன் பயிலிருட்
காடமர்ந் தாடிய ஆடலன் நீடிப்

புறம்புதை தாழ்ந்த சடையன் குறங் கறைந்து
வெண்மணி யார்க்கும் விழவினன் நுண்ணூற்
சிரந்தை யிரட்டும் விரலனிரண் டுருவா
யீரணி பெற்றவெழிற் றகையன் நேரும்
இளம்பிறை சேர்ந்த நுதலன் களங்கனி
மாறேர்க்கும் பண்பின் மறுமிடற்றன் தேறிய
சூலம் பிடித்த சுடர்ப்படைக்
காலக் கடவுட் குயர்கமா வலனே.'

தொல்காப்பிய உரையில் பெரும்பாலான பாடல்களை நூற்பெயருடன் கொடுக்கும் நச்சினார்க்கினியர், இந்தப் பாடலுக்கு உரிய நூற்பெயரைக் கூறாது விட்டிருப்பது நமது திப் பேறே. அப்படியிருக்கவும், இந்தப் பாடல் பதிற்றுப் பத்தின் கடவுள் வாழ்த்தாயிருக்கலாம் என ஒரு தோற்றமாக இக் காலத்தினர் இதனை எடுத்துச் சேர்த்துள்ளனர். இது பதிற்றுப் பத்தின் கடவுள் வாழ்த்துப் பாடலே என்பதை நாம் ஆராய்ந்து நிறுவ முடியும்: –

'அமரர்கண் முடியும் அறுவகையானும்' என்னும் தொல்காப்பிய நூற்பாவின் உரையிடையே, கடவுள் வாழ்த்துப் பாடலுக்கு எடுத்துக்காட்டுத் (உதாரணம்) தரவந்த நச்சினார்க் கினியர், 'எரியெள்ளுவன்ன நிறத்தன்' என்று தொடங்கும் இந்தப் பாடல் முழுவதையும் தந்து, இப்பாடலின் கீழே,

"இது கடவுள் வாழ்த்து" தொகைகளிலும் கீழ்க்கணக்கிலும் உள்ள கடவுள் வாழ்த்தெல்லாம் இதன்கண் அடங்கும்—

என வரைந்துள்ளார். கடவுள் வாழ்த்துக்கு எடுத்துக் காட்டாகத் தொகை நூல்களிலும் கீழ்க்கணக்கு நூல்களிலும் உள்ள கடவுள்வாழ்த்துப் பாடல்களையே விதந்து குறிப்பிட் டுள்ள நச்சினார்க்கினியரால் காட்டப்பட்டுள்ள 'எரியெள்ளு வன்ன நிறத்தன்' என்னும் கடவுள் வாழ்த்துப் பாடலும், ஏதேனும் ஒரு தொகை நூலைச் சேர்ந்த பாடலாகத்தானே இருக்கக் கூடும்? தொகை நூல்களுள் பதிற்றுப்பத்தில் தவிர மற்றவற்றில் எல்லாம் கடவுள் வாழ்த்துப் பாடல் இருப் பதால், இந்தப் பாடல் பதிற்றுப்பத்தின் கடவுள் வாழ்த்துப்

பாடலாகத்தானே இருக்கக் கூடும்? பதிற்றுப்பத்தின் பதிகப் பாடலை முதற்கொண்டு எடுத்தாளும் நச்சினார்க்கினியர், அந் நூலின் கடவுள் வாழ்த்துப் பாடலை எடுத்தாண்டிருப்பதில் வியப்பேது மில்லை.

"இது பதிற்றுப்பத்தின் கடவுள்வாழ்த்துப் பாடலெனில், இப்பாடலின் கீழே பதிற்றுப் பத்து' என நூலின் பெயரை நச்சினார்க்கினியர் குறிப்பிட்டிருப்பாரே?' -எனச் சிலர் வினவலாம். நூற்பெயரைக் குறிப்பிடும் வழக்கம் அவரிடம் மிகவும் உண்டெனினும், சில இடங்களில் அவர் குறிப்பிடா மலேயே சென்றுள்ளார். மற்றும், இந்தக் கடவுள் வாழ்த்துப் பாடல், பதிற்றுப் பத்தைச் சேர்ந்த நூறு பாட்டுக்களுள் ஒன்றன்று ஆதலானும், தனியாக வேறொருவரால் இயற்றிச் சேர்க்கப்பட்ட தாதலானும், இந்தப் பாடலைப் 'பதிற்றுப் பத்து' என்னும் நூற்பெயரால் குறிப்பிடாது விட்டார் போலும்! எனவே, நச்சினார்க்கினியர் வரைந்துள்ள உரைப் பகுதியின் சூழ்நிலையை நன்கு ஆராய்வார்க்கு, இப் பாடல் பதிற்றுப் பத்தின் கடவுள் வாழ்த்தே என்பது விளங்காமற் போகாது.

பாடலையே பனிமூட்டம் சூழ்ந்துள்ளபோது, அதன் ஆசிரியர் பெயரை எவ்வாறு அறிவது? இந்தப் பாடலைப் பாரதம் பாடிய பெருந்தேவனார் தலையில் கட்டி விடலாமா? ஏன் செய்யக் கூடாது? இதற்குமுன் பேசப்பட்டுள்ள ஐந்து தொகை நூல்களின் முன்னால் உள்ள கடவுள் வாழ்த்துப் பாடல்கள் பாரதம் பாடிய பெருந்தேவனாரால் பாடப்பட்டிருக்கும்போது, ஆறாவது தொகை நூலாகிய பதிற்றுப் பத்தின் கடவுள் வாழத்துப் பாடல் மட்டும் ஏன் இவருடையதாக இருக்க முடியாது? இவரால் பாடப்பட்டனவாகிய 'கார்விரி கொன்றைப் பொன்னேர் புதுமலர்த் தாரன்' என்று தொடங்கும் அக நானூற்றுக் கடவுள் வாழ்த்துப் பாடலையும், 'கண்ணி கார் நறுங் கொன்றை கார்வண்ண மார்பின் தாரும் கொன்றை' என்று தொடங்கும் புறநானூற்றுக் கடவுள் வாழ்த்துப் பாடலையும் ஊன்றி நோக்கி, அவற்றின் அமைப்பினை ஆராய்ந்து காணின், பதிற்றுப் பத்தின் கடவுள் வாழ்த்தாகக் கருதப்படும்

'எரியெள்ளு வன்ன நிறத்தன், விரியிணர்க் கொன்றையம் பைந்தார் 'அகலத்தன்' என்று தொடங்கும் பாடலும், பாரதம்பாடிய பெருந்தேவனா ருடையதாகவே இருக்கக்கூடும் என்பது புரியாமற் போகாது.

பதிற்றுப் பத்தின் இந்தக் கடவுள் வாழ்த்துப் பாடலைப் பற்றி ஒரு தடை எழுப்பப் பட்டுள்ளது. பதிற்றுப் பத்து உட்பட இதுவரை பேசப்பட்டு வந்துள்ள ஆறு தொகை நூல்களும் ஆசிரியப் பாவால் ஆனவை; முதல் ஐந்து நூல்களின் கடவுள் வாழ்த்துக்களும் பெருந்தேவனாரால் ஆசிரியப் பாவாலேயே இயற்றப்பட்டுள்ளன. ஆனால், பதிற்றுப் பத்துக் கடவுள் வாழ்த்தாகக் கருதப்படும் 'எரியெள்ளு வன்ன நிறத்தன்' என்னும் பாடல், வெண்பாவும் ஆசிரியப்பாவும் கலந்த மருட்பாவாகும். எனவே, ஆசிரியப்பாவால் ஆன பதிற்றுப்பத்தின் கடவுள் வாழ்த்தும் ஆசிரியப் பாவாகத்தானே இருக்க வேண்டும்? அங்ஙனமன்றி மருட்பாவாக இருத்தலின், இது பதிற்றுப் பத்தின் கடவுள் வாழ்த்தாக இருக்கமுடியாது; அதேபோல, மற்ற கடவுள் வாழ்த்துக்களை ஆசிரியப்பாவால் இயற்றியுள்ள பெருந்தேவனாரின் பாடலாகவும் இஃது இருக்க முடியாது – இப்படியாக ஒரு தடை எழுப்பப்பட்டுள்ளது. மற்றும், வேறொருவரால் இயற்றப்பட்டதாகக் கூறப்படும் கலித்தொகைக் கடவுள் வாழ்த்துப் பாடல், கலித்தொகைப் பாடல்கள் போலவே கலிப்பாவாக இருப்பதும் இங்கே சுட்டிக் காட்டப் படுகிறது. இந்தத் தடைக்கு வேண்டுமே விடை!

ஆசிரியப் பாவால் ஆன ஒரு நூலுக்கு, வெண்பாவும் ஆசிரியமும் கலந்த மருட்பாவால் கடவுள் வாழ்த்து அமைப்பதில் அப்படியொன்றும் தவறு இருப்பதாகத் தோன்றவில்லை. இதில் ஓரளவு ஆசிரியமும் கலந்திருப்பதால்-பிற்பகுதி ஆசிரியப்பாவால் முடிந்திருப்பதால், இதனைப் பொருத்தப்பாடுடையதென்றே அமைதி செய்துகொள்ளலாம். அன்றியும், ஆசிரியமாகவே எல்லாப் பாடல்களும் இல்லாமல், மருட்பாவும் கலந்து மாறுதல் பெற்றிருப்பது ஒருவகைச் சுவையின்பம் அல்லவா? மாறுதலை விரும்புவது மக்கள் இயல்புதானே! பாரதம் பாடிய பெருந்தேவனார்க்கு வெண்பாப் பாடுதலும்

கைவந்த கலையாகும் என்பதும் ஈண்டு நினைவுகூரத் தக்கது. எனவே, மருட்பா என்னும் கரடியை விட்டு மறுக்க வேண்டிய தில்லை. தெரியாத ஒன்றைப் பற்றித் திட்டவட்டமாக முடிவு கூறுதல் அரிதெனினும், இதனை ஆராய்ந்து காண்க.

இல்லாத பத்துக்கள்:

பதிற்றுப் பத்தில் முதல் பத்தும் பத்தாம் பத்தும் ஆகிய இருபது பத்துக்களைச் சேர்ந்த இருபது பாடல்களும் இல்லை யென்பது அறிந்த செய்தி. பதிற்றுப் பத்து ஓலைச் சுவடி களில் இந்த இருபதும் இல்லையாயினும், இவற்றுள் ஐந்து பாடல்கள் மட்டும், புறத்திரட்டாலும் தொல்காப்பிய உரை களாலும் சிந்தாமணி உரையாலும் அறியப்படுகின்றன. இவ்வைந்தனுள் மூன்று பாடல்கள் முழுமையாகக் கிடைத் துள்ளன; ஒரு பாடலில் இறுதி மூன்று அடிகள் மட்டும் அகப்பட்டுள்ளன; மற்றொரு பாடலின், 'முதற்குறிப்பு' மட்டும் அறியப்பட்டுள்ளது. இவை பற்றிய விவரம் வருமாறு:-

புறத்திரட்டு என்பது பன்னிரண்டாம் நூற்றாண்டிற்கு மேல் தொகுக்கப்பட்ட தொகை நூலாகும். இதில், பலநூல்களிலுள்ள சிற்சில பாடல்கள் நூற் பெயர்களுடன் தொகுக்கப்பட்டுள்ளன. பதிற்றுப் பத்திலிருந்து ஆறு பாடல் கள் பதிற்றுப் பத்து என்னும் நூற்பெயருடன் புறத்திரட்டில் தொகுக்கப் பட்டுள்ளன. இந்த ஆறனுள், புறத்திரட்டுச் செய்யுள் வரிசைப்படி 845,1267,1283,1505 என்னும்நான்கு எண் கள், நான்கு பாடல்கள், பதிற்றுப் பத்தில் இப்போது கிடைத் துள்ள எண்பது பாடல்களுள் உள்ளன. இந்த நான்கும்பதிற்றுப் பத்துப் பாடல் வரிசைப்படி முறையே 28 (845), 83 (1267), 29 (1283), 63 (1505) என்னும் எண் கொண்டவையாகும். ஆறனுள் மற்ற இரு பாடலும் இப்போது கிடைத்துள்ள எண்பது பாடல்களுள் இல்லை; எனவே இவையிரண்டும் பதிற்றுப் பத்தின் முதல் பத்தையோ பத்தாம் பத்தையோ சேர்ந்தன வாயிருத்தல் வேண்டும். இவை புறத்திரட்டில் 1260, 1275 எண்கள் கொண்டனவாகும். இவற்றுள் 1260 - ஆம் எண் கொண்ட பாடல் வருமாறு:

'இருங்கண் யானையொ டருங்கலந் தெறுத்துப்
பணிந்துகுறை மொழிவ தல்லது பகைவர்
வணங்கா ராதல் யாவதோ மற்றே
யுருமுடன்று சிலைத்தலின் விசும்பதிர்ந் தாங்குக்
கண்ணதிர்பு முழங்கும் கடுங்குரல் முரசமொடு
கால்கிளர்ந் தன்ன ஊர்தி கான்முளை
எரிநிகழ்ந் தன்ன நிறையருஞ் சீற்றத்து
நளியிரும் பரப்பின் மாக்கடல் முன்னி
நீர்துனைந் தன்ன செலவின்
நிலந்திரைப் பன்ன தானையோய் நினக்கே.'

இந்தப் பாடல் நூற்பெயருடன் புறத்திரட்டில் கிடைத்திருப்ப தன்றி, தொல்காப்பியம் – புறத்திணையியலில் 'இயங்கு படை யரவம்' என்று தொடங்கும் (7-ஆம்) நூற்பாவின் உரையிடையே, 'வயங்கல் எய்திய பெருமை'என்னும் துறைக்கு எடுத்துக்காட்டாக இளம்பூரணராலும் தரப்பட்டுள்ளது; ஆனால், இளம்பூரணர் நூற்பெயர் குறிப்பிடாமல் பாடலை மட்டும் முழுதும் தந்துள்ளார். இதே நூற்பாவின் உரையிடையே, 'வென்றோர் விளக்கம்' என்னும் துறைக்கு எடுத்துக் காட்டாக, இந்தப் பாடலின் முதல் மூன்று அடிகளை மட்டும், பதிற்றுப்பத்து என்னும் நூற்பெயருடன் நச்சினார்க்கினியர் கொடுத்துள்ளார். மற்றும், சீவக சிந்தாமணி–நாமகள் இலம் பகத்தில் உள்ள 'உருவ மாமதி' என்று தொடங்கும் (310) செய்யுளின் உரையிடையே, ''முன்பு நிறைமதி போலும் முகத்தில் ஒளி, இப்பொழுது வருத்தத்தாற் கெட்ட கரிய வொளி; 'இருங் கண் யானை' போல...''- என இந்தப் பதிற்றுப் பத்துப் பாடலின் முற்பகுதியை நச்சினார்க்கினியர் எடுத்தாண்டிருப்பதும் காண்க. எனவே, 'இருங்கண் யானையொடு' என்று தொடங்கும் பாடல், பதிற்றுப் பத்தில் இல்லாத இருபது பாடல்களுள் ஒன்று என்பது விளங்கும். அடுத்து,- புறத்திரட்டில் 1275-ஆம் எண் கொண்டுள்ள பதிற்றுப் பத்துப் பாடல் வருமாறு:-

'வந்தனென் பெரும கண்டனென் செலற்கே
களிறு கலிமாத் தேரொடு சுரந்து

நன்கல னீயும் நகைசா லிருக்கை
மாரி யென்னாய் பனியென மடியாய்
பகைவெம் மையினசையா வூக்கலை
வேறுபுலத் திறுத்த விறல்வெங் தானையொடு
மாறா மைந்தர் மாறுநிலை தேய
மைந்துமலி யூக்கத்த கந்துகால் கீழ்ந்து
கடாஅ யானைமுழங்கும்
இடாஅ வேணிநின் பாசறை யோனே.'

இந்தப் பாடல் புறத்திரட்டில் தவிர வேறு எதிலும் காணப்படவில்லை. எனவே, தெரியாதிருந்த இந்தப் பதிற்றுப் பத்துப்பாடலைத் தெரிவித்த பெருமை புறத்திரட்டு ஒன்றுக்கே உரியது.

மேற்காட்டிய இரு முழுப்பாடல் தவிர, இன்னொரு முழுப் பாடல் நச்சினார்க்கினியர் உரையால் அறியப்படுகிறது. தொல் காப்பியம் – புறத்திணையியலில், 'கொள்ளார் தேஎங் குறித்த கொற்றமும்' என்று தொடங்கும் (12 – ஆம்) நூற்பாவின் உரையிடையே நச்சினார்க்கினியர் பின்வருமாறு ஒரு பகுதி வரைந்துள்ளார்:—

"உதாரணம் முற்காட்டியவே; வேறு வேறு காட்டினும் அமையும். இத்திணைக்குப் படையியங்கரவம் முதலியனவும் அதிகாரத்தாற் கொள்க; அது,

'இலங்கு தொடி மருப்பிற் கடாஅம் வார்ந்து
நிலம்புடையூஉ வெழுதரும் வலம்படு குஞ்சரம்
எரியவிழ்ந் தன்ன விரியுளை சூட்டிக்
கால்கிளர்ந் தன்ன கடுஞ்செலல் இவுளி
கோன்முனைக் கொடியினம் வரவா வல்லோ
னோன்வினை கடுக்குந் தோன்றல பெரிதெழுந்
தருவியி னொலிக்கும் வரிபுனை நெடுந்தேர்
கண்வேட் டனவே முரசங் கண்ணுற்றுக்
கதத்தெழு மாதிரங் கல்லென வொலிப்பக்
கறங்கிசை வயிரொடு வலம்புரி யார்ப்ப
நெடுமதில் நிரைஞாயிற்

கடிமிளைக் குண்டு கிடங்கின்
மீப்புடை யாரரண் காப்புடைந் தேஎ
நெஞ்சுபுக லழிந்து நிலைதளர் பொரீஇ
யொல்லா மன்னர் நடுங்க
நல்ல மன்றவிவண் வீங்கிய செலவே'.

என வரும்.''—

மேலே நச்சினார்க்கினியர் எடுத்துக் காட்டியுள்ள பாடல் பதிற்றுப் பத்துப் பாடலாகும். அவர் இங்கே நூல் பெயரைக் குறிப்பிடவில்லை. ஆனால் அவரே, தொல்காப்பியம் - புறத் திணையியலில் உள்ள 'பாடாண் பகுதி கைக்கிளைப் புறனே என்னும் (25-ஆம்) நூற்பாவின் உரையிடையே,

''இலங்கு தொடி மருப்பின்' என்னும் பதிற்றுப் பத்து உள்ளியது முடிக்கும் வேந்தனது சிறப்பாகிய உழிஞை யாயி னும், பதின்றுலாம் பொன் பரிசில் பெற்றமையிற் பாடாணா யிற்று.''—

என, 'இலங்கு தொடி மருப்பின்' என்று தொடங்கும் இப் பாடலைப் பதிற்றுப்பத்துப் பாடல் எனக் குறிப்பிட்டுள்ளார். இந்தப் பாடல், கிடைத்துள்ள எண்பது பாடல்களுள் இல்லாமை யால், இது முதல்பத்து அல்லது பத்தாம் பத்தைச் சேர்ந்த தாக இருக்கவேண்டும்.

அடுத்து,-தொல்காப்பியம்-கற்பியலில் 'தற்புகழ் கிளவி' எனத் தொடங்கும் (39-ஆம்) நூற்பாவின் உரையிறுதியில்,

''தலைவன் முன்னர் இல்லையெனவே அவன் முன்னரல் லாத விடத்துப் புகழ்தல் பெற்றாம். அவை காமக் கிழத்தி யரும் அவர்க்குப் பாங்காயினாருங் கேட்பப் புகழ்தலாம்.

'பேணுதகு சிறப்பிற் பெண்ணியல் பாயினும்
என்னோடு புரையுநள் அல்லள்
தன்னொடு புரையுநர்த் தானறி குநளே'

எனப் பதிற்றுப் பத்தில் வந்தது.''—

என நச்சினார்க்கினியர் வரைந்திருப்பதிலிருந்து, மேலே அவரால் காட்டப்பட்டுள்ள மூன்று அடிகளும், பதிற்றுப் பத்துப்

பாடல் ஒன்றின் இறுதி அடிகள் என்பது புலனாகும். இந்த மூன்று அடிகளும், இப்போதுள்ள எண்பது பாடல்களுள் எதிலும் இல்லாமையால், பதிற்றுப் பத்தின் முதல் பத்து அல்லது பத்தாம் பத்தைச் சேர்ந்த ஏதோ ஒரு பாடலின் இறுதிப் பகுதி என்பது தெளிவு. நச்சினார்க்கினியர் இந்தப் பாடல் முழுவதையும் கொடாதது நமது தீப்பேறே.

மற்றும், - தொல்காப்பியப் புறத்திணையியலில் 'அறுவகைப் பட்ட பார்ப்பனப் பக்கமும்' என்று தொடங்கும் (20-ஆம்) நூற்பாவின் உரையிடையே,

"விசையந் தப்பிய' என்னும் பதிற்றுப்பத்து ஈகை கூறிற்று" —

என நச்சினார்க்கினியர், பதிற்றுப் பத்துப் பாடலொன்றைச் சுட்டிக் காட்டியுள்ளார். இந்தப் பாடலும் எண்பது பாடல்களுள் இல்லை. எனவே, இஃதும், முதல் அல்லது பத்தாம் பத்தைச் சேர்ந்ததாகவே இருக்க வேண்டும். நச்சினார்க்கினியர் இந்தப் பாடலை முதற்குறிப்போடு விட்டு விட்டது நமக்குப் பேரிழப்பாகும்.

புதையலெனக் கிடைந்த ஐந்து பாடல்களுள், 'விசையந் தப்பிய' என்னும் பாடல் அந்த முதற்குறிப்போடு மட்டும் நின்று விட்டதாதலின், அதனை விடுத்து, மற்ற நான்கு பாடல்களுள் முதல் பத்திற்கு உரியவை எவை-பத்தாம் பத்திற்கு உரியவை எவை-என ஒரு சிறிது காண்பாம்:-

முதல் பத்து உதியஞ் சேரலைப் பற்றியது என முன்பு நாம் முடிவு கட்டியுள்ளோம். உதியஞ்சேரலின் மகன் இமய வரம்பன் நெடுஞ்சேரலாதன்; அவன் மகன் சேரன் செங்குட்டுவன். எனவே, சேரன் செங்குட்டுவனின் பாட்டனும் இமய வரம்பனின் தந்தையுமாவான் உதியஞ் சேரல் என்பது பெற்றாம். இமயம் வரை படையெடுத்துச் சென்று வென்று வந்தவர்கள் என்பது சிலப்பதிகாரம் முதலியவற்றால் அறியப்பட்ட வரலாறு. எனவே, இவர்தம் முன்னோனாகிய உதியஞ் சேரலும் வடக்கே நெடுந்தொலைவு படையெடுத்துச் சென்று வென்றுவந்தவன் என்ற வரலாறு அறியப்படும். உதியஞ்சேரல்

வடக்கே படையெடுத்துச் சென்றதன் தொடர்ச்சியாகவே அவன் மகனும் பேரனும் சென்று வந்திருக்கிறார்கள். "தென்னகத்தார் வடநாட்டுக்குப் படையெடுத்து வந்தபோது எம் போலும் முடிமன்னர் ஈங்கில்லை போலும்"—என்று வடநாட்டு மன்னர்களாகிய கனக விசயர் கதைத்ததைப் பொறுக்காமல் செங்குட்டுவன் அவர்கள் மேல் படையெடுத்துச் சென்றான் என்று வரலாறு கூறுகிறதென்றால், அவனுக்கு முன்பே பாட்டன்மார் படையெடுத்துச் சென்ற வரலாறு அறிந்த தொன்றே.

இந்த அடிப்படையுடன் நோக்குங்கால், - புறத்திரட்டாலும் தொல்காப்பிய உரைகளாலும் அறியப்பட்டுள்ள பதிற்றுப் பத்துப் பாடல்கள் நான்கனுள், 'இருங்கண் யானையொடு' என்று தொடங்கும் பாடலிலும், 'இலங்கு தொடி மருப்பின்' என்று தொடங்கும் பாடலிலும், மன்னனது வெளிநாட்டுப் பயணச்செலவு குறிப்பிடப் பட்டிருத்தலினாலும், முதல்பாடல் புறத்திரட்டில் 'பகை வயிற்சேறல்' என்னும் தலைப்பின்கீழ்க் கொடுக்கப்பட்டிருத்தலினாலும், இரண்டாவது பாடல் முன்னதற்கு இளைத்ததாய்த் தெரியவில்லையாதலினாலும், இவ்விரு பாடல்களையும், உதியஞ்சேரலுக்கு உரியதாகக் கருதப்படும் முதல்பத்தைச் சேர்ந்தவை எனக் கூறலாம்.

அடுத்து,—பத்தாம் பத்து, யானைக்கட் சேய் மாந்தரஞ் சேரல் இரும்பொறையைப் பற்றிக் கூடலூர் கிழாரால் பாடப் பட்டிருக்கலாம் என முன்பு கூறப்பட்டுள்ளது. புறத்திரட்டால் அறியப் பெற்றுள்ள, 'வந்தனென் பெரும கண்டெனென் செயற்கே...கடாஅ யானை முழங்கும் இடாஅ வேணிநின் பாசறை யோனே' என்னும் பாடலில், புலவர் அரசனைக் கண்டு வருவதற்காகப் பாசறைப் பக்கம் சென்ற செய்தி கூறப் பட்டிருத்தலானும், பாடலிடையே 'நன்கலன் ஈயும் நகைசால் இருக்கை' என அரசனது ஈகை சிறப்பிக்கப் பெற்றிருத்தலானும், இந்தச் செய்தி யானைக்கட்சேய் மாந்தரஞ்சேரல் இரும் பொறையைக் கூடலூர் கிழார் பாடியுள்ள புறநானூற்றுப் பாடலோடு ஒத்து வராததால், இந்தப் பாடலைப் பத்தாம் பத்துக்கு உரிய பாடலாகக் கருதலாம். குதிரையைக் குறிக்கும் 'கலிமா' என்னும் பெயர், இந்தப் பதிற்றுப் பத்துப் பாடலிலும்,

கூடலூர் கிழாரின் புறநானூற்றுப் பாடலிலும் வந்திருப்பது ஈண்டு எண்ணத்தக்கது.

இறுதியாக,—பதிற்றுப் பத்துப் பாடல் ஒன்றின் பிற்பகுதி யாகிய 'பேணு தகு சிறப்பின்' என்று தொடங்கும் மூன்று அடிகளைக் காண்பாம்: இந்தப் பகுதியில், பெண்களைப் பற்றிய அந்தப்புரத்துச் செய்தி கூறப்பட்டுள்ளது. நச்சினார்க்கினியரும், தலைவி கூறுவதற்கு எடுத்துக் காட்டாகவே இந்தப் பாடலைக் குறிப்பிட்டுள்ளார். மன்னனுக்கு ஒருத்திக்குமேல் துணைவியர் இன்னும் சிலர் உளர் என்னும் சூழ்நிலையில் பின்னப்பட்டு இப்பாடற் பகுதி எடுத்தாளப்பட்டுள்ளது. இந்தப் பகுதி யானைக்கட்சேயைக் கூடலூர்கிழார்பாடியுள்ள புறநானூற்றுப் பாடலிலுள்ள,

'ஒண்டொடி மகளிர்க்கு உறுதுணை யாகித்
தன்துணை யாயம் மறந்தனன் கொல்லோ'

என்னும் பகுதியோடு ஒத்து வருகின்றதல்லவா? எனவே, இந்தப் பதிற்றுப்பத்துப் பாடற்பகுதி, யானைக்கட் சேயைக் கூடலூர் கிழார் பாடியதாகக் கருதப்படும் பத்தாம் பத்தின் ஒரு பாடலைச் சேர்ந்ததாயிருக்கலாம் எனக் கருதலாம்.

இனம் தெரியாத பதிற்றுப் பத்துப் பாடல்கள் நான்கும், முதல் பத்துக்கும் பத்தாம் பத்துக்கும் இங்கே பங்கிடப் பெற் றுள்ளன. இந்த உய்த்துணர்வு தவறாகவும் இருக்கலாம்-சரி யாகவும் இருக்கலாம். கிடைக்காத இரு பத்துக்களும் கிடைக் குங்கால் உண்மை விளங்கும்.

மறைந்த மாயம்

பதிற்றுப் பத்தின் முதல் பத்தும் இறுதிப் பத்தும் மறைந்த மாயம் எப்படியோ! இதில் மாயம் ஒன்றும் இல்லை. ஒரு நூலின் முதல் பகுதியும் இறுதிப் பகுதியும் கிழிந்து அழிந்து போவது இயல்பே. இந்தக் காலத்திலும் – சிறுவர்கள் என் றென்ன – பெரியவர்கள் வைத்துப் பயன்படுத்தும் அச்சு நூல் களும் முன்னும் பின்னும் கிழிந்து சிதைந்து போவதைக் காண் கின்றோம். இவ்வாறே, பதிற்றுப் பத்தின் முதலும் கடையும் அழிந்துபோயின.

பதிற்றுப் பத்தின் நூறு பாடல்களுள் முதல் இரண்டு மூன்று பாடல்களும் இறுதி யிரண்டு மூன்று பாடல்களும்

சிதைந்து போயிருப்பின் இயற்கை யெனலாம்; ஆனால், சொல்லிவைத்தார் போல் ஒன்றுகூட நில்லாமல் முதலில் சரி யாய்ப் பத்துப் பாடல்களும் இறுதியில் சரியாய்ப் பத்துப் பாடல்களும் இல்லாதுபோனது எவ்வாறு? இதிலும் வியப் பொன்றும் இல்லை. இந்த நிலைமையிலிருந்து நமக்கு விளங்கு வதாவது:—

பதிற்றுப் பத்தின் ஒவ்வொரு பத்துக்கும் உரிய ஓலைச் சுவடிகள் தனித்தனிப் பத்தாகக் கட்டுக் கட்டி முறையே அடுக்கி வைக்கப்பட்டிருந்தன. இந்த நிலையில்,–'முதலும் கடை யும் சிதைவது இயற்கை' என்ற பொது முறைப்படி, முதல் கட்டும் இறுதிக் கட்டும் சிதைந்து போயின.

சரி,-கட்டாக இருந்தது எவ்வாறு காணாமற் போயிற்று? யாராவது திருடிக் கொண்டிருக்கலா மெனில், முதலையும் கடையையும் மட்டும் திருடுவானேன்? செல்லரித்திருக்கலா மெனில், முதல் கட்டிலும் இறுதிக்கட்டிலும் ஓர் ஓலையைக் கூட மீதி வைக்கவில்லையா? அவ்வாறே நடந்திருப்பினும, எல்லாருடைய வீட்டு ஓலைச் சுவடிகளிலுமா இவ்வாறு நடந் திருக்கக்கூடும்? சிலர் வீட்டில் இப்படி நடந்திருப்பினும், வேறு சிலர் வீட்டிலாயினும் முழுதும் இருந்திருக்கக் கூடுமே! அப்படியே எல்லாருடைய விட்டிலும் செல்லரித்திருப்பினும், சிலர் வீட்டில் முன்பகுதியில் மட்டும் அரித்திருக்க வேண்டும்-வேறு சிலர் விட்டில் பின் பகுதியில் மட்டும் அரிந்திருக்க வேண்டுமல்லவா? அவ்வாறே எல்லாருடைய வீட்டிலும் இருபுறங்களிலும் அரித் திருப்பினும், சிலர் வீட்டில் முன்பகுதியிலாவது சில பாடல் களும், சிலர் விட்டில் பின் பகுதியிலாவது சில பாடல்களும், விட்டு வைக்கப்பட்டிருக்கலாமே! எல்லாருடைய சுவடிகளிலும் முதல் பத்து முழுதும், இறுதிப் பத்து முழுதும் தொலைந்து போனது எவ்வாறு? அதிலும், தமிழ் வழங்கும் பல்வேறு பகுதி களிலும் இந்த நிலைமை ஏற்பட்டது எவ்வாறு?

1904 – ஆம் ஆண்டு முதன் முதலாகப் பதிற்றுப் பத்தைப் பதிப்பித்த தமிழ் ஐயா உ.வே. சாமிநாத ஐயரவர்கள் தமது ஆராய்ச்சிக்குக் கிடைத்த பதிற்றுப்பத்தின் ஆறு ஓலைச் சுவடிப்

படிகளைப் பற்றி தமது முகவுரையில் குறிப்பிட்டுள்ளார். அவை ஆறும் வருமாறு:-

1. திருவாவடுதுறை ஆதீனத்துப் பிரதி.
2. சென்னை இராசாங்கத்துக் கையெழுத்துப் புத்தக சாலைப் பிரதி.
3. ஆழ்வார் திருநகரி, தே. லட்சுமணக் கவிராயர் வீட்டுப் பிரதி.
4. ஜே.எம். வேலுப்பிள்ளையவர்கள் பிரதி.
5. தி.த. கனகசுந்தரம் பிள்ளையவர்கள் பிரதி.
6. திருமயிலை வித்துவான் சண்முகம் பிள்ளையவர்கள் பிரதி.

உ.வே.சா. அவர்கள் குறிப்பிட்டுள்ள இந்த ஆறு படி (பிரதி) களிலும் முதல் பத்தும் இறுதிப் பத்தும் இல்லையாம்: இவை ஆறும் வெவ்வேறு இடங்களைச் சேர்ந்தவை. வேலுப்பிள்ளை திருநெல்வேலியைச் சேர்ந்தவர். கனகசுந்தரம்பிள்ளை இலங்கை-யாழ்ப்பாணத்தார். இவ்வாறு பலரிடமும் இருந்த படிகளுள் ஒன்றிலாயினும் இரண்டு பத்துக்களும் இருக்கக் கூடாதா? ஒரு பத்தாயினும்-ஒரு பத்தில் சில பாடல்களாயினும் இருக்கக் கூடாதா? இந்த ஆறுபடிகளே யன்றி, இன்னும் சில படிகள் தமக்குக் கிடைத்ததாக உ.வே.சா. கூறியுள்ளார். எதிலுமே இரண்டும் இல்லை-பழைய உரை இருந்த படிகளிலும் இல்லையாம்.

பழைய உரையுடன் கூடிய படியொன்றில் ஒன்பதாம் பத்தின் இறுதியில், "பதிற்றுப் பத்து மூலமும் உரையும். முடிந்தது; சுப மஸ்து"—என்று எழுதப்பட்டிருந்ததாக உயர்திரு ஔவை. சு. துரைசாமிப் பிள்ளையவர்கள் தெரிவித்துள்ளார்கள்.

புறத்திரட்டு தொகுக்கப்பட்ட காலத்திலும், பதினான்காம் நூற்றாண்டினராகிய நச்சினார்க்கினியர் காலத்திலும், முழு உருவத்தில் இருந்த பதிற்றுப் பத்திலிருந்து இரு பத்துக்கள் பிற்காலத்தில் காணாமற்போனது எவ்வாறு? இதற்குத் தக்க விடை கூற முடியும்.

பழைய தமிழ் நூல்களுள் இப்பொழுது கிடைத்திருப்பன

சிலவே; அழிந்து போனவையே மிகப் பல. பல நூல்களின் பெயர்கள் மட்டும் இப்போது அறியப்படுகின்றன – நூல்கள் கிடைக்கவில்லை. சில நூல்களில் தப்பித் தவறிச் சில பகுதிகள் மட்டும் கிடைத்துள்ளன. இதற்குக் காரணம் என்ன? பழைய ஓலைச் சுவடிகள் பலவும் இயற்கையாகவும் அழிந்தன-வேண்டும் என்றே திட்டமிட்டும் அழிக்கப்பட்டன. இந்த இருமுறைகளில் ஏதோ ஒரு முறையில், பதிற்றுப் பத்தும் அழிந்து போயிற்று – அல்லது–அழிக்கப்பட்டு விட்டது. ஏசுநாதர் மீண்டும் உயிர்த் தெழுந்ததைப் போல, எங்கோ ஒளிந்து கொண்டிருந்த ஒரே ஒரு சுவடி மட்டும் பின்பொருநாள் தலைகாட்டியது. இந்தச் சுவடியில் முதல் பத்தும் இறுதிப் பத்தும் இழக்கப்பட்டிருந்தன. இந்தச் சுவடியைப் பார்த்தே பின்னர்ப் பல படிகள் பலராலும் எடுத்துக்கொள்ளப் பட்டன. இவ்வாறு முதலும் கடையும் குறைந்த உருவத்தில் பதிற்றுப் பத்து மீண்டும் பரவத் தொடங் கியது. இப்பொழுது கிடைத்துள்ள ஓலைச் சுவடிப் படிகளி லெல்லாம் முதலும் இறுதியும் இல்லாது போனதன் காரணம் இப்போது ஒருவாறு விளங்கலாம். சரி,-மீண்டும் உயிர்த் தெழுந்ததாகக் கூறப்பட்ட ஒரே ஓர் ஓலைச் சுவடியில் முதலும் கடையும் குறைந்தது எவ்வாறு?

பதிற்றுப் பத்தின் ஒவ்வொரு பத்தும் தனித்தனியாகக் கட்டப்பட்டுப் பின் இணைத்து வைக்கப்பட்டிருந்திருக்கும் என முன்பே கூறினோம். இந்தப் பதிற்றுப் பத்துச் சுவடி மற்ற நூல்சுவடிகளின் இடையே வைக்கப்பட்டிருக்கும். இந்நிலையில், பதிற்றுப்பத்துச் சுவடியின் முன்னால் வைக்கப் பட்டிருந்த வேறு நூல் சுவடியுடன் பதிற்றுப்பத்தின் முதல் பத்து கலந்து விட்டிருக்கும்; பதிற்றுப் பத்துச் சுவடியின் பின்னால் வைக்கப் பட்டிருந்த வேறு நூல் சுவடியுடன் பதிற்றுப்பத்தின் இறுதிப் பத்து கலந்து விட்டிருக்கும். இச் சுவடிகளைக் கையாண்டு படித்தவர் இறந்து போக, அவரின் வழித்தோன்றல்கள் இவற் றைப் பற்றி ஒன்றும் அறிய மாட்டாமையால், இவ்வாறு முதல்பத்தும் இறுதிப் பத்தும் வேறுநூல்சுவடிகளுடன் தவறுதலாகக் கலக்க விட்டிருக்கலாம்; அல்லதுவேறு விதமாக வும் நேர்ந்திருக்கலாம்; அஃதாவது;—

'முதலும் இறுதியும் சிதைவது இயற்கை' என்னும் பொது முறைப்படி, பதிற்றுப் பத்துச் சுவடியைக் கையாண்டு படித்து வந்தவர்களால் முதல் பத்தும் இறுதிப் பத்தும் சிதைந்த நிலையில் இருக்க, பின் வந்தவர்கள் அவற்றைப் பற்றி ஒன்றும் அறியாராதலின், சிதைந்த நிலையிலிருந்த அந்த இரு பத்துக்களை எடுத்து எறிந்து விட்டு, இடையிலே நல்ல நிலையில் இருந்த எட்டுப் பத்துக்களை மட்டும் எடுத்துத் தனியே கட்டி வைத்திருக்கலாம். இப்படியாக ஏதோ ஒரு வகையில் முதல் பத்தும் இறுதிப் பத்தும் இழக்கப்பட்டு விட, இடையிலே உள்ள எட்டுப் பத்துக்கள் மட்டும், 'பதிற்றுப் பத்து' என்னும் உருவத்தில் உயிர்த்திருந்தன. பதிற்றுப் பத்தின் ஓலைச் சுவடிப் படிகள் எல்லாம் அழிந்து போக-அல்லது – அழிக்கப்பட்டு விட, ஒரே ஓர் ஓலைச் சுவடிப் படி மட்டும் உயிர்த்தெழுந்திருந்ததாக முன்பு கூறினோமே, அந்தப் 'படி' தான் இப்படி எட்டுப் பத்துக்களோடு நின்றுவிட்ட படியாகும். அந்தப் படியைப் பார்த்துப் பின்னர் பல படிகள் எடுக்கப்பட்டன. பதிற்றுப் பத்தின் முதல் பத்தும் இறுதிப் பத்தும் மறைந்த மாய வரலாறு இவ்வாறாகத்தான் இருக்கக் கூடும்.

பதிற்றுப் பத்தின் முதல் பத்தும் இறுதிப் பத்தும் இழக்கப் பட்டன வெனில், நூல் பெயர் எவ்வாறு தெரிய வந்தது? முதல் பத்தின் முகப்பில், 'பதிற்றுப் பத்து' என நூற்பெயர் எழுதப் பட்டிருக்கும்; இறுதிப் பத்தின் இறுதியிலும் 'பதிற்றுப் பத்து முற்றும்' என நூற்பெயர் குறிப்பிடப்பட்டிருக்கும். ஆனால் இவ்விரு பத்துக்களும் கிடைக்'காமையால், இடையே எஞ்சியிருந்த எட்டுப் பத்துக்களும் பதிற்றுப் பத்து என்னும் நூலைச் சேர்ந்தவை என்பது எவ்வாறு தெரிய வந்தது? இதற்கு விடை கூறல் எளிது:—

கிடைத்திருக்கும் எட்டுப் பத்தின் எண்பது பாடல்களுள், சில புறத்திரட்டிலும் தொல்காப்பிய உரையிலும் பிறவற்றிலும் நூற்பெயருடன் கொடுக்கப் பட்டிருப்பதால் அந்தப் பாடல்களைக் கொண்ட எட்டுப் பத்துக்களும் பதிற்றுப் பத்தைச் சேர்ந்தவை என உணரப்படவே, பதிற்றுப் பத்து என ஒரு நூல் இருக்கவேண்டும் எனவும் அந்நூலின் முதல் பத்தும்

இறுதிப் பத்தும் இழக்கப்பட்டன எனவும் எளிதில் அறிய முடிந் தது. மற்றும், பதிற்றுப் பத்தும் பாடல்களை வழி வழியாகச் செவி வழிக் கேட்டறிந்து வந்தவர்கட்கும் நூற்பெயர் தெரிந் திருக்கு மல்லவா? இவ்வாறாக, நூற்பெயரை அறிந்து கொள்ள இன்னும் எத்தனையோ வகைத் துணைகள் உண்டு.

தொகுப்பு:

பதிற்றுப் பத்தின் இறுதிப் பகுதி கிடைக்காததால் நூலைத் தொகுத்தவர் பெயரும் தொகுப்பித்தவர் பெயரும் தெரிய வில்லை. இந்நூலின் பத்துப் பத்துக்களுமே பத்துச் சேரமன்னர் களைப் பற்றியதா யிருத்தலின், இந்நூலைச் சேர மன்னர் ஒருவர் தொகுப்பித்திருக்கலாம். பொதுவான அகத்திணை நூலாகிய ஐங்குறுநூறே யானைக்கட்சேய் மாந்தரஞ் சேரல் இரும்பொறை என்னும் சேரமன்னரால் தொகுக்கப்பட்டிருப் கும். போது. சேர மன்னர்களை பற்றிய இந்நூல் சேரமன்னர் ஒருவரால் தொகுக்கப் பட்டிருந்தால் வியப்படைவதற்கில்லை. இவ்வாறே. நூல் தொகுத்தவரும், சேர மன்னர்களோடு நெருங்கிய தொடர்புடைய சேரநாட்டுப் புலவர் ஒருவரா யிருக்கலாம். அல்லது தொகுத்தவரும் தொகுப்பித்தவரும் வேறு பிறராயும் இருக்கலாம். இஃது ஓர் உய்த்துணர்வே யன்றி முற்றமுடிந்த முடிபன்று. அடுத்து, - நூல் தொகுத்த முறை யாதாயிருக்கலாம் என்பது பற்றி ஆராய வேண்டுமே!

நூல் தொகுத்தவருக்குப் பத்துப் பத்துக்களும் எவ்வாறு - எந்த உருவத்தில் கிடைத்திருக்கக்கூடும்? சொல்லி வைத் தாற் போல். பத்து மன்னர்களைப் பற்றி மட்டுமே - பத்துப் புலவர் மட்டுமே-பத்துப் பத்துப் பாடல்கள் வீதம் மட்டுமே எவ்வாறு பாடியிருக்க முடியும்? ஒரு வேளை, முன்கூட்டித் திட்டமிட்டே இவ்வாறு செய்யப் பட்டதா?

தொகுப்பித்தவரும் தொகுத்தவரும் வேண்டிக் கொள்ள, பத்து மன்னர்கள்மேல் பத்துப் புலவர்களால் பப்பத்துப் பாடல் கள் பாடிக் கொடுக்கப்பட, இந்நூல் தொகுத்து உருவாக்கப்பட் டும் இருக்கலாம். இவ்வாறு நடந்திருப்பின், இந்தப் பத்துப் புலவர்களுள் ஒருவரே இந்நூலைத் தொகுக்கும் பணியையும்

ஏற்றுக் கொண்டிருப்பர். கலித்தொகைப் பாடல்களைப் பாடிய புலவர்களுள் ஒருவரான நல்லந்துவனார் என்பவரே கலித் தொகையைத் தொகுத்தார் என்னும் செய்தி ஈண்டு ஒப்பு நோக்கற்பாலது. ஆனால், இப்படி முன்கூட்டித் திட்டமிட்டுப் பதின்மரிடம் சொல்லிப் பாடவைத்துத் தொகுக்கப்பட்டது என்னும் செய்தி ஒத்துக்கொள்ளக் கூடியதா? உண்மையானதா? இவ்வாறு சொல்லிப் பாடச் செய்திருந்தால், தொகுப் பாளர்க்குப் பெரிய வேலை யொன்றும் இருந்திராது.

ஈண்டு, மற்றத் தொகை நூல்கள் தொகுக்கப்பட்டதிலி ருந்த தொல்லையையும் தொகுப்புக் கலை நுட்பத்தையும் ஊன்றி நோக்கவேண்டும். எண்ணிறந்து பரந்துபட்டுக் கிடந்த? பாடல்கள் பலவற்றிலிருந்து, எடுத்துக் கொண்ட பொருளுக்கு ஏற்பச் சிறந்துநிற்கும் சில பாடல்களைத் தேர்ந்தெடுத்து ஒரு நூலாகத் தொகுப்பதே தொகுப்புக் கலை யாகும் – அவ் வாறு தொகுக்கப்பட்டதே தொகை நூல் எனப்படும். அவ்வாறு தொகுத்த புலவரே, 'இந்நூலைத் தொகுத்தவர் இன்னார் என்று விதந்து குறிப்பிடுதற்கு உரிய சிறப்பினை யுடையவர் ஆவார். சொல்லி வைத்துச் செய்த நூறு பாடல்களைத் தொகுப்பது ஒரு தொகை யாகாது-அவ்வாறு தொகுத்தவர்' 'தொகுப்பாளர்' என்னும் சிறப்புத் தகுதிக்கு உரியவராக முடி யாது.

எனவே, பத்துக்கு மேற்பட்ட சேரமன்னர்கள் பலரைப் பற்றி, பத்துக்கு மேற்பட்ட புலவர்கள் பலர் பப்பத்து வீதத் துக்கு மேல் பாடிய எண்ணிறந்த பாடல்களிலிருந்துதொகுத்து உருவாக்கப்பட்டதே பதிற்றுப்பத்து என்னும் நூல் என்பது புலனாகலாம். சேரமன்னர் ஒருவர்மேல் புலவர் ஒருவரே பத்துக்குமேல் பல பாக்கள்பாடியிருப்பர். இவ்வாறு பலர்மேல் பலர் பாடிய பல பாக்களைக் கண்ட ஒருவர், சிறந்த பத்து மன்னர்களைப்பற்றிப் பத்துப் புலவர்கள் பாடியுள்ள பத்துப் பத்துப் பாடல்வீதம் நூறு பாடல்களை மட்டும் தேர்ந்தெடுத்து அழகுபெறப் 'பதிற்றுப் பத்து' என்னும் பெயருடன் ஒரு நூலா கத் தொகுத்திருக்கலாம். இந்த அமைப்பைப் பார்த்த-பின்வந்த ஒருவர், 'இன்னார் மேல் இன்னார் பாடினார் பத்துப் பாட்டு.

எனப் பதிகத்தில் எழுதிவிட்டிருக்க வேண்டும். அல்லது, இன்னொரு விதமாகவும் இருக்கலாம்.

ஒரு புலவர், ஒரு மன்னன் மேல் 'பத்து' என்னும் .பெயரில் பத்துப் பாடல்கள் பாடும் மரபு அந்தக் காலத்தில் இருந்திருக்கலாம். அந்த மரபின் படியும் இந்தப் பத்துப் பத்துக்களும் பாடப் பட்டிருக்கலாம். எனவே, இப்பத்துக்கள் சொல்லி வைத்துச் செயற்கையாய்ப் பாடப்பட்டன அல்ல, இயற்கையாய் பாடப்பட்ட பத்துக்கள் எனக் கொள்ளலாம். இயற்கையாய்ப் பாடப்பட்டன வெனினும், பத்துப் பத்துக்கள் மட்டுமே பாடப் பட்டிருக்கமாட்டா: பத்துக்குமேல் எண்ணிறந்த பத்துக்கள் பாடப்பட்டிருந்திருக்கும் அஃதாவது மன்னர்கள் பலரைப்பற்றிப் புலவர்கள் பலர் 'பத்து' என்னும் பெயரில் பத்துப் பாடல்கள் கொண்ட பல பத்துக்கள் பாடியிருக்கலாம். அந்தப்பத்துக்கள் பல வற்றிலிருந்து சிறந்த பத்துப் பத்துக்களைத் தேர்ந்தெடுத்து இந்தப் பதிற்றுப் பத்து நூலாகத் தொகுத்திருக்கலாம். 'பத்து' என்னும் பெயரில் பத்துப் பாடல்கள் கொண்ட பத்துக்கள்பல ஐங்குறு நூற்றில் இருப்பதும் ஈண்டு ஒப்பு நோக்கற்பாற்று. எனவே, 'பத்து' பாடும் மரபு பழங்காலத் திலேயே இருந்தது என்பது தெளிவு.

இதுகாறும், பதிற்றுப் பத்துத் தொகுப்புமுறையைப் பல கோணங்களில் நின்று பார்த்தோம். இறுதியாக, – 'பத்து' என்னும் பெயரில் பத்துப் பாடல்கள் வீதம் பாடப் பட்டிருந்த பத்துக்கள் பலவற்றிலிருந்து சிறந்த பத்துப் பத்துக்களைத் தேர்ந்தெடுத்துத் தொகுத்து உருவாக்கியதே பதிற்றுப்பத்து – என்ற முடிவுக்கு வரலாம்,

அடுத்து, – நூல் தொகுத்தவரின் சிறந்த வேலைப்பாடு ஒன்றினை இவண் குறிப்பிட வேண்டும். பதிற்றுப் பத்தின் ஒவ்வொரு பாடலுக்கும் துறையும் வண்ணமும் தூக்கும் பெயரும் கொடுத்திருப்பதுதான் அந்த வேலைப்பாடு. ஒவ்வொரு பாடலையும் படித்துப் பார்த்து, பொருள் பொதிந்து சிறந்துநிற்கும் ஒரு தொடரை அந்தப் பாடலில் இருந்து தேர்ந்தெடுத்து அந்தப் பாடலுக்குப் பெயராகத் தந்துள்ளார். துறை, வண்ணம், தூக்கு ஆகியவற்றைத் தொல்காப்பியத்தை

ஒட்டித் தந்துள்ளார். ஆனால், துறைக்கு முன் திணை கொடுக்கப் படவில்லை. எல்லாப் பாடல்களுமே பாடாண்திணை என முன்பு சான்றுடன் கூறியுள்ளோம். எல்லாமே பாடாண்திணையாய் இருப்பதால் திணை கூறப்படவில்லை என்று சொல்ல முடியாது. முதல் பத்தின் தொடக்கத்தில், முதல் பாட்டின், திணை பாடாண் திணை எனக் கூறிப் பின்வரும் பாடல்கள் யாவும் அதே திணை என்று குறிப்பிட்டிருப்பார். நூலின் முற்பகுதி கிடைக்காமற் போனதால், அந்த விவரமும் கிடைக்காமற் போயிற்று. மற்ற அகத்திணைத் தொகை நூல்களுக்கும் புறநானூற்றிற்கும் திணையும் துறையும் கூறப்பட்டிருப்பது போலவே, பதிற்றுப் பத்துக்கும் திணையும் துறையும் கூறியதல்லாமல், அந்தத் தொகை நூல்களில் கூறப்படாத வண்ணமும் தூக்கும் கூடுதலாகக் கூறியிருப்பது, பதிற்றுப் பத்துத் தொகுப்பாளரின் வேலைப்பாடு மிகுந்த தொகுப்புக் கலைத் திறனுக்குச் சிறந்த சான்றாகும்.

தொகுப்பின் பயன்:

பதிற்றுப் பத்து நூல் தொகுத்து உருவாக்கியதனால் பெறப்பட்ட பயன்களாகப் பல கூறமுடியும். இந்நூல் அமைப்பைப் பார்த்துப் பத்து, பதிகம், பதிற்றந்தாதி, ஒருபா ஒருபஃது, பதிற்றுப்பத் தந்தாதி போன்ற பெயர்களில், பிற்காலத்தில் பல நூல்கள் தோன்றிய பயன் ஒருபுறம் இருக்க. –

தமிழர்களின் வீரம், கொடை, புலமைத் திறமை, இலக்கியச் சுவையின்பம், பண்பு, வாழ்வு முறை முதலியவற்றின் சிறப்பு அறியப்பட்ட பயன் மறறொரு புறம் இருக்க,—

முடியுடை மூவேந்தர்களுள் ஒருவகையினராகிய சேர மன்னர்களின் வரலாற்றினை ஓரளவு கருக்கமாகவாவது தொகுத்து அறிவதற்கு இந்தத் தொகுப்புப் பெருந்துணை புரியும் பயனை மறக்க முடியாது. பண்டை நாளில் தமிழில் முறையாக வரலாறு எழுதப்படாத குறையை இத்தகைய தொகுப்புக்களே ஓரளவு ஈடு செய்கின்றன. எனவே, தமிழக வரலாற்றுத் துறையில் புறநானூற்றைப் போலவே பதிற்றுப் பத்துக்கும் தக்க பங்கு உண்டு என்பது வெளிப்படை.

———

## 23,24. கலித்தொகையும் பரிபாடலும்

பாடல் எண்ணிக்கை:

இறையனார் அகப்பொருள் உரையில் கலித்தொகை என்னும் நூல் 'நூற்றைம்பது கலி' என்னும் பெயருடன் ஏழாவது தொகை நூலாகவும், பரிபாடல் என்னும் நூல், 'எழுபது பரிபாடல்' என்னும் பெயருடன் எட்டாவதாகவும் அமைக்கப் பெற்றுள்ளன. நெடுந்தொகை நானூறு, குறுந்தொகை நானூறு, நற்றிணை நானூறு,புறநானூறு என்னும் நூற்பெயர்களின் இறுதியில் நூற்பாடல்களின் எண்ணளவு குறிக்கப் பட்டிருப்பது போல் இல்லாமல், நூற்றைம்பது கலி, எழுபது பரிபாடல் என நூற்பாடல்களின் எண்ணளவு நூற்பெயர்களின் முன்னாலேயே குறிப்பிடப் பட்டிருப்பது ஒரு புதுமாதிரியாகும்.

தலைச்சங்க நூல்களுள் 'பரிபாடல்' என்னும் ஒன்றையும்' இடைச்சங்க நூல்களும் 'கலி' என ஒன்றையும் இறையனார் அகப்பொருள் உரை குறிப்பிட்டுக் கூறியிருப்பதால், அவற்றினும் வேறுபாடு தெரிவதற்காக, நூற்றைம்பது கலி, எழுபது பரிபாடல் என இக் கடைச்சங்கத் தொகை நூல்களை இறையனார் அகப்பொருள் உரை எண்ணிக்கையிட்டுக் கூறியது போலும்! இவ்வாறு எண்ணிட்டுக்,கூறியிருப்பதால் இன்னொரு நன்மையும் உண்டு. கலித்தொகையில் இத்தனை பாடல்களும் பரிபாடலில் இத்தனை பாடல்களும் உண்டு என்னும் உறுதியான முடிவு நமக்குக் கிடைக்கிறது. இப்போதுள்ள பரிபாடல் நூலில் இருபத்திரண்டு பாடல்களே உள்ளன; மற்றவை கிடைக்கவில்லை. ஆயினும், இறையனார் அகப்பொருள் உரையால், பரிபாடல் எழுபது பாடல் கொண்டது என்னும் உண்மை தெரியவருகிறது.

இறையனார் அகப்பொருள் உரையின் மரபை யொட்டிப் பின்வந்தவரும் நூற்றைம்பது கலி, எழுபது பரிபாடல் எனக் கூறலாயினர். தொல்காப்பியம்-செய்யுளியலில் உள் 'தரவின்றாஇத் தாழிசை பெற்றும்' என்றும் (149-ஆம்) நூற்பாவின்கீழ்ப் பேராசிரியர் வரைந்துள்ள.

"இனி நூற்றைம்பது கலியும் எழுபது பரிபாடலும் எனச் சங்கத்தார் தொகுத்தவற்றுள் ஒன்றனை யில்லை யென்றார்...'

என்னும் உரைப் பகுதியும், மற்றும் செய்யுளியலில், 'ஒத் தாழிசைக் கலி' என்னும் (130 - ஆம்) நூற்பாவின் கீழ், "... நூற்றைம்பது கலியுள்ளும் ஒத்தாழிசை அறுபத்தெட்டுவந்தன வாகலின் அது பெருவரவின எனப்பட்டுச் சிறப்புடைத் தாயிற்று..." எனவும், 'அவற்றுள் ஒத்தாழிசைக்கலி இரு வகைத்தாகும்' என்னும் (131 - ஆம்) நூற்பாவின் கீழ், "... அற்றன்று, நூற்றைம்பது கலியுள்ளும் ஒத்தாழிசைக் கலியின் அராக உறுப்பும் அம்போதரங்க உறுப்பும் பெற்றுவருவன இன்மையின் அவை பொருளன்றென்பது...' எனவும், 'ஒரு பொருள் நுதலிய' என்னும் (153 - ஆம்) நூற் பாவின் கீழ், "நூற்றைம்பது கலியுள்ளும் கலிவெண்பாட்டு எட்டாகலின்' அவற்றுள் ஒரு பொருள் நுதலி வருவன பிறவும் உள ..." என வும், 'தரவும் போக்கும்' என்னும் (154 - ஆம்) நூற்பாவின்கீழ், "...நூற்றைம்பது கலியுள்ளும் அன்னதோர் கலிவெண்பாட்டின் மையின் அது சான்றோர் செய்யுளோடு மாறுகோளா மென மறுக்க..."எனவும், 'பாநிலை வகையே' என்னும் (155-ஆம்) நூற்பாவின் கீழ், "...இது நூற்றைம்பது கலியுள் ஒன்றா கலின் வெண்பா வாகியும் தனித்து வரும்..." எனவும், 'கலி வெண்பாட்டே' என்று தொடங்கும் (செய்யுளியல் - 160ஆம் நூற்பாவின் கீழ், "...நூற்றைம்பது கலியுள்ளும் கைக்கிளை பற்றி இவ்வாறு வரும் கலிவெண்பாட்டுக் காணாமாயினமை யிற் காட்டாமாயினாம்... நூற்றைம்பது கலியுள்ளும் இவை கோப்புண்டன வென்பது நினையாதாரும் இவற்றுள் ஒரு பொருள் முதலிய ஒழிந்தனவெல்லாம் வெண்பாவென்று அடி வரை கூறற்தொழிய..."— எனவும், பேராசிரியர்வரைந்துள்ள உரைப் பகுதிகளும் காண்க. மற்றும், தொல்காப்பியம் - செய்யுளியலில் 'ஒத்தாழிசைக் கலி' என்னும் (130 - ஆம்) நூற்பாவின்கீழ் நச்சினார்க்கினியர் வரைந்துள்ள.

"...நூற்றைம்பது கலியுள்ளும் ஒத்தாழிசைக் கலி அறுபத் தெட்டு வந்தது..."

என்னும் உரைப்பகுதியிலும், 'ஒரு பொருள் நுதலிய என் னும் (செய் - 153. ஆம்) நூற்பாவின் கீழ் அவர் வரைந்துள்ள

"நூற்றைம்பது கலியுள் கலிவெண்பாட்டு எட்டு; அவற்றுள் ஒரு பொருள் நுதலி வருவனவற்றின் பொருள் வல்லார் வாய்க் கேட்டுணர்க..."

என்னும் உரைப் பகுதியிலும், 'தரவும் போக்கும்' என்னும் (செய் – 154 ஆம்) நூற்பாவின்கீழ் அவர் வரைந்துள்ள,

"நூற்றைம்பது கலியுள் அவ்வாறு வருவன இன்மையின் அது சான்றோர் செய்யுளொடு மாறு கொள்ளுமென மறுக்க"—

என்னும் உரைப் பகுதியிலும், கலித்தொகை 'நூற்றைம்பது கலி' எனக் குறிப்பிடப் பட்டிருப்பது காண்க.

**கலி என்னும் பெயர்:**

மேலே காட்டப்பட்டுள்ள பேராசிரியர் உரைப்பகுதிகளிலும் நச்சினார்க்கினியர் உரைப் பகுதியிலும் கலித்தொகை 'கலி' என்னும் பெயரால் சுட்டப்பட்டிருப்பதைக் காணலாம். இவர்கள் இன்னும் வேறிடங்களிலும் 'கலி' என்னும் பெயரால் குறிப்பிட்டுள்ளனர். 'ஒத்தாழிசைக் கலி' என்னும் (செய்-130 – ஆம்) நூற்பாவின் கீழ்ப் பேராசிரியர் வரைந்துள்ள,

"...கலியும் பரிபாடலும் என எட்டுத் தொகையுள் இரண்டு தொகை தம்மின் வேறாதலின் அவ்வாறு கூறுவர் செய்யுள் அறியாதார் என்பது..."

என்னும் உரைப் பகுதியிலும், ஆசிரியப் பாட்டின் என்னும் (செய் – 157 – ஆம்) நூற்பாவின் கீழ் நச்சினார்க்கினியர் எழுதியுள்ள,

"...பரிபாடலும் கலியும் ஒழிந்த தொகையாறும் இடையளவிற்கு எல்லை..."

என்னும் உரைப்பகுதியிலும், 'கலி' என்னும் பெயரால் கலித்தொகை குறிப்பிடப் பட்டிருப்பது காண்க.

**கலிப்பா என்னும் பெயர்:**

கலித்தொகை 'கலிப்பா' என்னும் பெயராலும் சுட்டப்பட்டுள்ளது. இதனை, 'வெண்பா வியலினும் பண்புற முடியும்' என்னும் செய்யுளியல் (76-ஆம் நூற்பாவின்கீழ்ப் பேராசிரியர்,

'அரிதாய வறன் என்னும் (11) கலிப்பாவினுள், எனவும், 'மணிநிறமலர்ப் பொய்கை என்னும் (70) கலிப்பாவினுள்' எனவும் கூறியிருப்பதனால் அறியலாம்.

கலிப் பாட்டு:

கலித்தொகை 'கலிப்பாட்டு' என்னும் பெயராலும் குறிப் பிடப் பட்டுள்ளது. இதனைத் தொல்காப்பியம் - கற்பியலில்' 'புணர்ந்துடன் போகிய' என்னும் (7 - ஆம்) நூற்பாவின்கீழ் நச்சினார்க்கினியர் வரைந்துள்ள.

"அரிதாய வறனெய்தி' என்னும் (11) கலிப்பாட்டுத் தலைவன் அன்புறுதக்கன கூறக்கேட்ட தலைவி அவற்றைக் கூறிப்புனைநலம் வாட்டுநர் அல்லரென வரவுகருதி கூறிய வாறு காண்க"—

என்னும் உரைப்பகுதியில் காணலாம்.

பரிபாட்டு

கலித்தொகை 'கலிப்பாட்டு' என வழங்கப்பட்டிருப்பது போலவே, பரிபாட்டு' என வழங்கப்பட்டுள்ளது. இதனைப் பரிபாடல் என்னும் தொகைநூலின் முதல் பாட்டின் உரையில் பரிமேலழகர் எழுதியுள்ள 'பரிபாட்டென்பது இசைப் பாவாதலின், இஃது இசைப்பகுப்புப் படைத்த புலவரும் பண்ணும் மிட்டு...'

என்னும் உரைப் பகுதியால் உணரலாம். தொல்காப்பி யரேகூட, 'கலியே பரிபாட்டு ஆயிரு பாவினும்' (அகத்திணை யியல்-56) எனவும், கைக்கிளை பரிபாட்டு அங்கதத் செய்யு ளோடு (செய்யுளியல்-118) எனவும், பரிபாடலைப் 'பரிபாட்டு' எனக் கூறியுள்ளமையைக் காணலாம். உரையாசிரியர்களும் 'பரிபாட்டு' என வழங்கியுள்ளனர்.

இசைப்பாட்டு

"பாடல் வகையால் பெயர் வழங்கப் படுகிற கலித் தொகையும் பரிபாடலும் இசைப்பாட்டால் ஆனவையாகும். 'பரிபாட்டு என்பது இசைப்பாவாதலின்" எனப் பரிமேலழகர் கூறியிருப்பது மேலே எடுத்துக்காட்டப் பட்டுள்ளது. மற்றும்

'இழைபு' என்னும் வனப்புக்கு இலக்கணம் கூறும் 'ஒற்றொடு புணர்ந்த' என்னும் செய்யுளியல் (242-ஆம்) நூற்பாவின்கீழ்ப் பேராசிரியர் எழுதியுள்ள, 'அவையாவன, கலியும் பரிபாடலும் போலும் இசைப்பாட்டாகிய செந்துறை மார்க்கத்தன வென்பது''-என்னும் உரைப்பகுதியாலும், அதே நூற்பாவின்கீழ் நச்சினார்க்கினியர் வரைந்துள்ள, ''அவ்வாறு வருவன கலியும் பரிபாடலும் போலும் இசைப்பாட்டாகிய செந்துறை மார்க்கத்தன என்றுணர்க''- என்னும் உரைப்பகுதியாலும் இதனை நன்கறியலாம். இது காறும்.இருநூல்களையும் பற்றிய பொதுச் செய்திகள் பேசப்பட்டன. இனி ஒவ்வொன்றையும் பற்றித் தனித்தனியே காண்போம்.

# 23. நூற்றைம்பது கலித்தொகை

## எண்ணிக்கையும் ஆசிரியரும்

கடவுள் வாழ்த்து உட்பட நூற்றைம்பது கலிப்பாக்களின் தொகுப்பு கலித்தொகையாகும். ஐங்குறு நூற்றைப் போலவே கலித்தொகையிலும் பாடல்கள் திணைவாரியாகத் தொகுக்கப் பட்டுள்ளன. முதல் பாடல் கடவுள் வாழ்த்து; முதலில் நிறுத்தப்பட்டுள்ள பாலைத்திணை முப்பத்தைந்து பாடல் கொண்டது; இரண்டாவதான குறிஞ்சி இருபத் தொன்பது; அடுத்த மருதம் முப்பத்தைந்து; நான்காவது முல்லை பதினேழு; இறுதியில் உள்ள நெய்தல் முப்பத்து மூன்று; ஆக மொத்தம் நூற்றைம்பது பாடல்கள் ஆகின்றன இதனை,

''இறை வாழ்த்தொன் றேழைந்து பாலைநா லேழொன்
றிறைகுறிஞ்சி யின்மருத மேழைந் —துறைமுல்லை
ஈரெட்டொன் றாநெய்தல் எண்ணான்கொன் றைங்கலியாச்
சேரெண்ணோ முவைம்ப தே.''

என்னும் பழம்பாட லொன்றால் அறியலாம். இவற்றுள் கடவுள் வாழ்த்துப் பாடியவர் நல்லந்துவனார் என்றுசொல்லப் படுகிறார். பாலைக் கலியைச் சேரமான் பாலை பாடிய பெருங்கோவும், குறிஞ்சிக் கலியைக் கபிலரும், மருதக்கலியை

மருதனிள நாகனாரும், முல்லைக் கலியைச் சோழன் நல்லுருத்திரனும், நெய்தல் கலியை நல்லந்துவனாரும் இயற்றியதாகச் சொல்கின்றனர். இந்தத் திணையமைப்பு முறைவைப்பினையும், ஒவ்வொரு திணைக்கும் உரிய ஆசிரியர் இன்னின்னார். என்பதனையும்,

"போக்கெல்லாம் பாலை புணர்தல் நறுங்குறிஞ்சி
ஆக்கமளி ஊடல் அணிமருதம்—கோக்கொன்றி
இல்லிருத்தல் முல்லை இரங்கியபோக் நேர்நெய்தல்
புல்லும் கலிமுறை கோப்பு."

"பெருங் கடுங்கோன் பாலை கபிலன் குறிஞ்சி
மருதனிள நாகன் மருத—மருஞ்சோழன்
நல்லுருத் திரன் முல்லை நல்லந் துவனெய்தல்
கல்விவலார் கண்ட கலி."

என்னும் பழம்பாடல்கள் அறிவிக்கின்றன.

தொகுத்தவர்

இந்நூலைத் தொகுப்பித்தவர் பெயர் தெரியவில்லை. தொகுத்தவர் நல்லந்துவனார். கலித்தொகை நூல் முழுமைக்கும் நச்சினார்க்கினியர் உரையெழுதியுள்ளார். அவர் தமது உரையின் முகப்பிலும் இறுதியிலும் கலித்தொகையை நல்லந்துவனார் கோத்ததாக – தொகுத்ததாகக் கூறியுள்ளார். முதலில், முகப்பிலுள்ள உரைப்பகுதி வருமாறு:-

"...ஆதலான் ஈண்டுப் பாலைத் திணையையும் திணையாக ஆசிரியர் நல்லந்துவனார் கோத்தாரென்று கூறுக." இனி உரையின் இறுதிப் பகுதி வருமாறு: "இத் தொகையைப் பாலை குறிஞ்சி மருதம் முல்லை நெய்தல் என இம்முறையே கோத்தார் நல்லந்துவனார்"—

இந்த உரைப் பகுதிகளால், கலித்தொகை தொகுத்தவர் நல்லந்துவனார் என்பது விளங்கும். இன்னும் இதனை,

" நாடும் பொருள் சான்ற நல்லந் துவனாசான்
சூடுபிறைச் சொக்கன் துணைப்புலவோர் – தேடுவார்
கூட்டுணவே வாழ்த்தோடு கொங்காங் கலியினையே
கூட்டினான் ஞாலத்தோர்க்கு."

என்னும் பழம் பாடலாலும் அறியலாம்.

**எத்தனை ஆசிரியர்கள்?**

கலித்தொகையின் ஆசிரியர்கள் ஐவர் என மேலே கூறப் பட்டுள்ளது. ஆனால், சி.வை. தாமோதரம் பிள்ளை, கே.என் சிவராசப் பிள்ளை, எஸ்.வையாபுரிப் பிள்ளை, வே. வெங்கட ராசுலு ரெட்டியார் முதலிய தமிழறிஞர்கள் கலித்தொகை யைப் பாடியவர் ஒருவரே எனக் கூறியுள்ளனர். ஐவர் பாடிய தாகக் கூறும் வெண்பா எந்தக் கலித்தொகை ஓலைச் சுவடி யிலும் இல்லையாதலின், அது பிற்காலத்தார் ஒருவரின் கற்பனைச் சரக்கு என்பது இவர்களின் கொள்கை. இயற்றியவர் ஐவர் அல்லர்-ஒருவரே என்பதற்கு இவர்கள் கூறும் காரணங் கள் வருமாறு:-

"பாலைக் கலியைப் பாலை பாடிய பெருங்கடுங்கோவும் குறிஞ்சிக் கலியைக் கபிலரும் பாடினர் என்பது ஓரளவு பொருந்தும், இவர்கள் மற்றத் தொகைநூல்களிலும் முறையே பாலை பற்றியும் குறிஞ்சி பற்றியும் நிரம்பப் பாடியுள்ளனர் ஆதலின், ஆனால், மருதனிள நாகனார் வேறு தொகை நூல் களில் மருதத்தைப் பற்றி நிரம்பப் பாடியிருக்கவில்லை யாதலின், அவர் மருதக் கலியைப் பாடியிருக்க முடியாது. சோழன் நல்லுருத்திரன் புறநானூற்றில் ஒரு செய்யுளே பாடியுள்ளார். ஆதலின், அவர் முல்லைக் கலியைப் பாடி யிருக்க முடியாது. நல்லந்துவனார் வேறு நூல்களில் நெய்தல் திணையைப் பற்றி ஒரு பாடலும் பாடவில்லை யாதலின் அவர் நெய்தல்கலியைப் பாடியிருக்க முடியாது."—

மேலேயுள்ளவாறு அறிஞர்கள் கூறி, கலித்தொகையை ஐவர் இயற்றவில்லை - ஒருவரே இயற்றினார் - என்று கூறு கின்றனர். இது பொருந்தாது. பாலைக்கலியைப் பெருங்கடுங் கோவும் குறிஞ்சியைக் கபிலரும் பாடினர் என்பது பொருந்தும் போது, கலித்தொகை முழுவதையும் ஒருவரே இயற்றினார் என்பது எவ்வாறு பொருந்தும்? அடுத்து, - மருதனிள நாக னார் மற்ற நூல்களில் மருதம் பற்றி நிரம்பப் பாடவில்லை யாதலின், இவர் மருதக்கலியைப் பாடியிருக்க முடியாது என் கின்றனர். மற்ற நூல்களில் மிகுதியாகப் பாடாமற் போனால்

என்ன? கலித்தொகையில் மருதம்பற்றி முப்பத்தைந்து பாடல் கள் பாடியுள்ளாராதலின், இவர் மருதனிள நாகனார் எனத் திணைப் பெயரால் அடைமொழி தந்து வழங்கப்படுகிறார் எனக் கூறலாமல்லவா! இவ்வாறே, நல்லுருத்திரனும் நல்லந் துவனாரும் வேறு நூல்களில் முறையே முல்லை பற்றியும் நெய்தல் பற்றியும் பாடாமற் போனாலென்ன?மற்றத் தொகை நூல்கள் ஆசிரியத்தாலானவை. இவர்கள் கலிப்பாப் பாடுவதில் வல்லமையும் ஆர்வமும் உடையவரா யிருக்கலாம்; அதனால் இத்திணைகள் பற்றிக் கலிப்பாவால் பாடியிருக்கலாம். இவர்கள் ஆசிரியப்பாவாலும் இத்திணைகள்பற்றிப் பாடியிருக்கலாம்; அவை கிடைக்காமற் போயிருக்கலாம். அல்லது,-மற்றத் தொகை நூல்களில் எண்ணிக்கை சரியாய் போய்விட்டதால், இவர்கள் பாடல் இடம்பெறாமல் போயிருக்கலாம். எனவே, மற்ற நூல்களில் இவர்கள் இத்திணைகளைப் பற்றிப் பாடி யிருக்கவில்லை யென்பதனால், கலித்தொகையிலும் இவர்கள் இத்திணைகள் பற்றிப் பாடியிருக்க முடியாது எனக் கூறுதல் பொருந்தாது. முன்பு, ஐங்குறுநூறு என்னும் தனித் தலைப்பில் திணை வாரியாகப் புலவர் ஐவரையும் பற்றிக் கூறியுள்ள ஆய்வுரையை ஈண்டு நினைவுகூர்தல் நல்லது.

இவ்வாறே இன்னும் என்னன்னவோ பொருந்தாக் காரணங் கள் கூறிக் கலித்தொகையை ஒருவரே இயற்றினார் என அவர் கள் தெரிவித்துள்ளனர். அவர்கள் கூறியுள்ள மற்றக் காரணங் களை எளிதில் மறுத்துவிடலாம். மற்ற ஏழு தொகை நூல் களும் புலவர் பலர் இயற்றிய பாடல்களின் தொகுப்பாயிருக் கும் போது, கலித்தொகைமட்டும் ஒருவர் இயற்றியதாக இருக்க முடியாது. எனவே, அவர்தம் கூற்றை விடுப்போம்.

இது சார்பாக இன்னொரு கொள்கையும் ஒருவரால் கூறப் படுகிறது. 'கலித்தொகையை இயற்றியவர் ஒருவரும் அல்லர் -ஐவரும் அல்லர்-ஐவருக்கும் மேற்பட்ட பலர்-என்பது இவர் தம் கொள்கை. இதற்கு இவர்கள் கூறும் காரணங்களாவன:-

(1) குறிப்பிட்ட ஒருதிணைக் கலிக்குள்ளேயே சொன்ன கருத்துக்களே திரும்பத்திரும்பக் கூறப்பட்டுள்ளன.

(2) சில கருத்துக்கள் முன்னுக்குப்பின் முரணாயுள்ளன.
(3) பாடல்கள் மொழி நடையில் வேறுபட்டுள்ளன.
(4) உயர்வற்ற எளிய செய்திகள் சில இடம் பெற்றுள்ளன.

(5) வடவர் செய்திகள்-ஆரியக் கொள்கைகள் ஒருசில உள்ளன. எனவே, பழங்காலத்து உயர்ந்த புலவர் முதல் பிற்காலத்து எளிய புலவர்வரை பலரால் இயற்றப்பட்ட உதிரிப் பாடல்களின் தொகுப்பே கலித்தொகை - என்று இவர்கள் கூறுகின்றனர்.

இவ்வாறு ஏதேனும் குறைபாடு எல்லா நூல்கட்கும் சொல்லிக் கொண்டிருக்கலாம். ஆரியக் கொள்கைகள் தொல் காப்பியத்திலேயே புகுந்துவிட்டன. எனவே, இந்தக் காரணங் களை யெல்லாம் அவ்வளவாக ஏற்றுக் கொள்வதற்கில்லை. கலித்தொகை மற்றத் தொகைநூல்களைப் போலவே ஐவருக் குமேல் பலரால் பாடப்பட்டிருக்குமாயின், மற்றத் தொகை நூலைப்போலவே பலரால் பாடப்பட்டது கலித்தொகை என்று சொல்லியிருப்பார்களே. இந்த ஐவரை மட்டும் குறிப் பிட்டதேன்? அங்ஙனமெனில், நெடுந்தொகையினையும் ஐவர் அல்லது பதின்மரே பாடினர் என்று கூறியிருக்கலாமே பலரை மறைத்து ஐவரை மட்டும் குறிப்பிடுவதால் கிடைக்கும் ஆதாயம் என்ன? ஏதோ தக்க ஆதாரம் இல்லாமல் இந்த ஐவர் பெயர்களைக் குறிப்பிட்டிருக்க முடியாது. எனவே, இது குறித்து வீணாகக் குழம்பிக் கொண்டிருக்க வேண்டியதில்லை.

### தொகுப்பு முறை

கலித்தொகையை நல்லந்துவனார் தொகுத்தார் என்பது முன்னரே கூறப்பட்டுள்ளது. இவர் ஐந்து கலியுள் நெய்தல் கலியையும் பாடியவராவர். இதனை, நெய்தல் கலியில் இருபத் தைந்தாம் பாடலின் உரையிடையே நச்சினார்க்கினியர் வரைந் துள்ள உரைப் பகுதியாலும் அறியலாம். அதுவருமாறு:—

"சொல்லொடும் குறிப்போடும் முடிவுகொள் இயற்கை,

புல்லிய கிளவி யெச்ச மாகும்' என்பதனாற் சொல்லெச்சமுங் குறிப்பெச்சமுமாகத் தம் பேரறிவு தோன்ற ஆசிரியர் நல்லந்து வனார் செய்யுட் செய்தார்.''.

இந்த உரைப்பகுதியால், நெய்தல் கலியின் ஆசிரியர் நல்லந்துவனார் என்பது நன்கு விளங்கும். நல்லந்துவனார் தாம் பாடிய நெய்தல் கலியை இறுதியில் அமைத்துத் தொகுத்துக் கலித்தொகையை உருவாக்கியுள்ளார். கலித்தொகையில் ஒவ் வொரு திணைக்கும் உரிய பாடல் எண்ணிக்கையை நோக்குங் கால், எப்படியாவது நூற்றைம்பது என்னும் எண்ணிக்கை அமையவேண்டும் என நல்லந்துவனார் திட்டமிட்டுச் செய் திருப்பதாகத் தெரிகிறது. மற்ற நால்வரும் நான்கு திணைகள் பற்றிப் பாடியுள்ள கலிப்பாக்களுள் சிறந்தன சில வற்றைத் தேர்ந்தெடுத்துக் கொண்டிருக்க வேண்டும். அல்லது, மற்ற நால்வரும் இப்பொழுது கலித்தொகையில் உள்ள பாடல்களைமட்டுமே பாடியிருக்கக்கூடும். அல்லது, - மற்ற நால்வரும் இன்னும் மிகுதியாகப் பாடியிருப் பினும், இந்த அளவு பாடல்களே நல்லந்துவனார்க்குக் கிடைத் திருக்கக் கூடும். அந்தப் பாடல்களுக்கு முன்னால் கடவுள் வாழ்த்து ஒன்று பாடிச் சேர்த்திருக்க வேண்டும். இறுதியில், தம் நெய்தல் கலிப் பாடல்களையும் சேர்த்து நூற்றைம்பது என்னும் ஓர் அழகிய எண்ணிக்கை உருவாக்க வேண்டும் என எண்ணியிருப்பார். அதற்காக, முப்பத்து மூன்று நெய்தல்கலிப் பாடல்களைச் சேர்த்து எண்ணிக்கையை ஒழுங்குசெய்து நூலைத் தொகுத்து உருவாக்கி யிருக்கிறார்.

கலித்தொகை உரையின் முகப்பில், "...ஆதலான் ஈண்டுப் பாலைத் திணையையும் திணையாக ஆசிரியர் நல்லந்துவனார் கோத்தார் என்று கூறுக......ஆகலின், இத்தொகைக் கண்ணும் அவை மயங்கிவரக் கோத்தார் என்று கூறி விடுக்க...ஐங்குறு நூற்றினும் பிறவற்றினும் வேறுபடக் கோத்தவாறுங் காண்க. ... என்றும், உரையின் இறுதியில் "இம்முறையே கோத்தார் நல்லந்துவனார்'' என்றும் நச்சினார்க்கினியர் எழுதியிருப்பதி லிருந்து, கலித்தொகை முழுவதையும் நல்லந்துவனார் இயற்ற வில்லை – அவர் தொகுத்தார் – என்பது விளங்கும். கோத்தல்

என்றால் தொகுப்பது தானே! நல்லந்துவனார் பாடல்கள் அகநானூறு, நற்றிணை, பரிபாடல் ஆகியவற்றிலும் இருப்ப தால், இவர், மற்றத்தொகை நூல்களைப் போலவே கலித் தொகையினையும் சங்க காலத்திலேயே தொகுத்துவிட்டார் என்பது புலனாகலாம்.

**நூல் அமைப்பும் முறைவைப்பும்:**

நூலின் முதலில் கடவுள் வாழ்த்துப் பாடலும், அடுத்து, பாலை, குறிஞ்சி, மருதம், முல்லை, நெய்தல் என்னும் வரிசை யில் அவ்வத்திணைக்கு உரிய பாடல்களும் அமைக்கப்பட் டுள்ளன. ஒவ்வொரு பாடலின் இறுதியிலும், அந்தப் பாடல் எது பற்றியது என்பதை அறிவிக்கும் துறை கூறப்பட்டுள்ளது. இது, உரையாசிரியர் நச்சினார்க்கினியர் கைச்சரக்கு என உணரலாம்.

நெடுந்தொகை, குறுந்தொகை, நற்றிணை என்னும் மூன்று நூல்களைப்போல் கலித்தொகையும் அகப்பொருள் நூலா யினும், அவற்றிற்கும் இதற்கும் சில வேறுபாடுகள் உண்டு. அவையாவன:—

(1) அவை மூன்றும் ஆசிரியப் பாவால் ஆனவை; இது கலிப்பாவால் ஆனது.

(2) அவற்றின் பாடல்கள் அடி வரையறை உடையவை; இதற்கு அடிவரையறை யில்லை.

(3) அவை நூற்றுவர்க்கு மேற்பட்ட பலரால் இயற்றப் பட்டவை; ஐங்குறுநூறு போல் இது குறிப்பிட்ட ஐவரால் இயற்றப்பட்டது.

(4) அவை உதிரிப் பாடல்களின் தொகுப்புக்கள், இது ஐங்குறு நூறுபோல் ஐவரால் ஆக்கப்பட்ட ஐந்து சிறு நூல் களின் திரட்டாகும். எனவே, இதனைப் 'பன்மாலைத்திரள்' எனலாம்.

(5) அவற்றில் ஐந்திணைப் பாடல்களும் மாறி மாறிக் கலந்துள்ள. இது, ஐங்குறு நூறு போல் திணை வாரியாக உள்ளது.

(6) மற்ற நூல்களில் ஐந்திணைவரிசை முறைவைப்பு

வெவ்வேறு விதமாக உள்ளது; இதில் பாலை, குறிஞ்சி, மருதம், முல்லை, நெய்தல் என்னும் முறைவைப்பு உள்ளது.

ஐந்திணைகளும் எந்த வரிசையிலும் இருக்கலாம் என்னும் செய்தி முன்பு பலவிடங்களில் விளக்கப்பட்டுள்ளது. இது பற்றிக் கலித்தொகை உரையின் இறுதியில் நச்சினார்க்கினியரும் கூறியுள்ளார். அப் பகுதி வருமாறு:

''முல்லை குறிஞ்சி மருதம் நெய்தலெனச் சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே'' என்புழிச் சொல்லாத முறை யாற் சொல்லவும்படும் என்றலின், இத்தொகையைப் பாலை குறிஞ்சி மருதம் முல்லை நெய்தல் என இம் முறையே கோத்தார் நல்லந்துவனார்;.

இதனால், திணைகளின் முறைவைப்பு எப்படியும் இருக்க லாம் என்பது தெளிவு. நல்லந்துவனார் தாம் பாடிய நெய்தல் திணையை இறுதியில் வைத்திருப்பது அவரது அடக்கத்தை அறிவிக்கிறது.

திணைப்பெயர் வழக்கு:

நெடுந்தொகைப் பாடல்கள் களிற்றியானை நிரை, மணி மிடை பவளம், நித்திலக் கோவை என்னும் மூன்று பிரிவினைப் பெயர்களால் தொல்காப்பிய உரையில் சுட்டப்பட் டிருப்பது போலவே, கலித்தொகைப் பாடல்கள் பாலைக்கலி, குறிஞ்சிக்கலி, மருதக்கலி, முல்லைக்கலி, நெய்தல்கலி எனத் திணைப் பிரிவினைப் பெயர்களால் வழங்கப்பட்டுள்ளன. இதற்குத் தொல்காப்பிய உரைகளிலிருந்து எத்தனையோ எடுத்துக் காட்டுக்கள் தரமுடியும். இதனை விரிப்பிற் பெருகு மாதலின் இம் மட்டில் விடுப்போம். இந்தத் திணைப்பெயர் வழக்காறு இந்தக் காலத்திலும் உள்ளமை ஈண்டு நினைவு கூரத் தக்கது.

திணைப்பெயர் வழக்கை மிகுதியாகக் கையாண்டிருப்பவர் நச்சினார்க்கினியர் எனலாம். இவர் இன்னொரு புதுமையை யும் கையாண்டுள்ளார். தொல்காப்பியம் செய்யுளியலில் 'தரவும் போக்கும்' என்னும் (154-ஆம்) நூற்பாவின் உரை யிடையே, ''காராரப் பெய்த' என்னும் முல்லைப்பாட்டுள்...''

என, முல்லைக் கலியை 'முல்லைப் பாட்டு' எனக் குறிப்பிட்டுள்ளார்.' பத்துப்பாட்டிலும், 'முல்லைப்பாட்டு' என்னும் பெயருடைய நூல் ஒன்றிருப்பது ஈண்டு நினைவுகூரத் தக்கது.

இந்தத் துறையில் பேராசிரியரும் இளைத்தவராகத் தெரியவில்லை; நச்சினார்க்கினியரினும் முனைப்பாகவே காணப்படுகிறார். தொல்காப்பியம் – செய்யுளியலில், கலிப்பாவுக்கு இலக்கணம் கூறுகிற நூற்பாக்களின் உரைப்பகுதிகளில், "காராரப் பெய்த' (கலித்தொகை – 109) என்னும் முல்லைப் பாட்டு" எனவும், "வாரி நெரிப்பட் டிரும்புறந் தாஅழ்ந்து' (கலி-114) என்னும் முல்லைப் பாட்டும்" எனவும், "சுணங்கணி வனமுலைச் சுடர் கொண்ட '(கலி–60) என்னும் குறிஞ்சிப் பாட்டினுள்" எனவும், கலித்தொகைப் பாடல்களை முல்லைப் பாட்டு எனவும் குறிஞ்சிப்பாட்டு எனவும் பேராசிரியர் குறிப்பிட்டுள்ளார். முல்லைப்பாட்டு என்னும் நூலைப் போலவே குறிஞ்சிப்பாட்டு என்னும் நூலும் பத்துப் பாட்டில் ஒன்றாகும் என்னும் செய்தியும் இங்கே நினைவுகூரற் பாலது. இவ்வாறு கலித்தொகை உரையாசிரியர்களால் பல பெயர்களில் எடுத்தாளப்பட்டுள்ளது.

'கற்றறிந்தோர் ஏத்தும் கலி', 'கல்வி வலார் கண்ட கலி. என்றெல்லாம் சிறப்பிக்கப் பெற்றுள்ள கலித்தொகை கற்பதற்கு மிகவும் சுவையானது; அதன் நயம் மிகவும் இனியது. இந்நூற்பாடல்களை உரையாசிரியர்கள் மிகுதியாக எடுத்தாண்டுள்ளனர். நச்சினார்க்கினியர் ஐம்பதுக்கும் மேற்பட்ட இடங்களில் இந்நூலை எடுத்தாண்டிருப்பதிலிருந்து இதன் பெருமை நன்கு விளங்கும்.

## 24. எழுபது பரிபாடல்

தலைச்சங்க நூல்களுள் ஒன்றாக 'எத்துணையோ பரிபாடல் என ஒரு நூல் இறையனார் அகப்பொருள் உரையில் குறிப்பிடப்பட்டுள்ள செய்தி முன்னரே விளக்கப்பட்டுள்ளது. அதனின்றும் வேறு பிரித்துக் காட்டுவதற்காக, 'எழுபது

பரிபாடல்' என்னும் பெயரில் இந்தக் கடைச்சங்கத் தொகை நூல்இங்கே குறிப்பிடப்பட்டுள்ளது. பரிபாடல் என்னும் பாடல் வகையைப் பற்றிய பொதுச் செய்திகள், தலைச்சங்க நூல்களுள் ஒன்றான 'எத்துணையோ பரிபாடல்' என்னும் தலைப்பின்கீழ் முன்பு விரிவாக விளக்கப்பட்டுள்ளது. போதாக் குறைக்கு இந்தத் தலைப்புக்கு முன்னே உள்ள 'கலித்தொகையும் பரிபாடலும்' என்னும் பொதுத்தலைப்பின் கீழும் உரிய செய்திகள் தரப்பட்டுள்ளன.

தொல்காப்பியம்-செய்யுளியலில் பரிபாடலுக்கு இலக்கணம் கூறப்பட்டுள்ள நூற்பாக்கள் அனைத்தும் முன்பு எடுத்துக் காட்டப்பட்டுள்ளன. அந் நூற்பாக்களுக்கு உரையாசிரியர்கள் வரைந்துள்ள உரைப்பகுதிகளைக் காணின், பரிபாடலுக்கு உரிய இலக்கணங்கள் நன்கு புலனாகும். உரையாசிரியர்கள் கூறியுள்ளபடி, பரிந்துவரும் பாடலாகிய அந்தப் பரிபாடல் என்னும் வகைப் பாடல்களின் தொகுப்பாகிய 'எழுபது பரிபாடல்' என்னும் நூலுக்கு வருவோம்.

பாடல் பங்கு:

எழுபது பரிபாடல்களுள் திருமாலுக்கு எட்டுப்பாடல்களும் முருகனுக்கு முப்பத்தொரு பாடல்களும், காடு கிழாளுக்கு ஒன்றும், வையை யாற்றிற்கு இருபத்தாறும், மதுரைக்கு நான்கும் உரிய பாங்காகும். இதனை,

> "திருமாற்கு இருநான்கு செவ்வேட்கு முப்பத்
> தொருபாட்டுக் காடுகாட் கொன்று—மருவினிய
> வையையிரு பத்தாறு மாமதுரை நான்கென்ப
> செய்யபரி பாடல் திறம்"

என்னும் பழைய வெண்பாவால் அறியலாம். இவ்வாறு எழுபது பரிபாடலால் தொகுக்கப்பட்ட இந்நூலில் இப்போது இருபத்திரண்டு பாடல்களே கிடைத்து அச்சிடப்பட்டுள்ளன. இவ்விருபத்திரண்டனுள் திருமாலுக்கு ஆறும், முருகனுக்கு எட்டும் வையைக்கு எட்டும் உரியனவாம். கிடைத்துள்ள ஓலைச் சுவடிகளில் மற்றப் பாடல்கள் காணப்படவில்லை. கிடைத்துள்ள பாடல்களுக்குப் பரிமேலழகர் உரையும் கிடைத்துள்ளன. அவர்

எழுபது பாடல்களுக்கும் உரையெழுதியிருப்பார். நமக்குக் கிடைத்தவை உரையுடன்கூடிய இருபத்திரண்டு பாடல்களே.

பாடல் ஆசிரியர்கள்:

கிடைத்துள்ளவற்றுள் முதலும் இறுதியும்தவிர இடையி லுள்ள இருபது பாடல்களுக்கும் உரிய ஆசிரியர் பெயர்கள் கிடைத்துள்ளன. அவர்கள் பதின்மூவர் ஆவர். பெயர்கள் வருமாறு:— ஆசிரியர் நல்லந்துவனார் (6,8,11,20), இளம் பெரு வழுதியார் (15), கடுவன் இளவெயினனார் (3,4,5), கரும் பிள்ளைப் பூதனார் (10), கீரந்தையார் (2), குன்றம் பூதனார் (9,18), கேசவனார் (14), நப்பண்ணனார் (19), நல்லச் சுதனார் (21), நல்லழிசியார் (16,17), நல்லெழுனியார் (12), நல்வழுதி யார் (12), மையோடக் கோவனார் (7)— ஆகியவர் ஆவர். இப் பதின்மூவருள் ஆசிரியர் நல்லந்துவனார் நான்கு பாடல் களுக்கு உரியவராகி முதன்மை பெற்றுள்ளார்.

பரிபாடல் ஓலைச் சுவடியில் முதல் பாடல் இல்லை அதனால், அதன் ஆசிரியர் பெயர் தெரியாது போயிற்று. தொல்காப்பியம் செய்யுளியலிலுள்ள 'கட்டுரை வகையின்' என்னும் (119-ஆம்) நூற்பாவின்கீழ் இளம்பூரணர் எழுதியுள்ள உரையிடையே காணப்படும், 'ஆயிரம் விரித்த' என்னும் செய் யுள் பரிபாடல் நூலின் முதல் செய்யுளாக அமைக்கப்பட்டது. இந்தப் பகுதிக்கு இறுதிப் பகுதிக்கு உரிய உரை ஓலைச்சுவடி யின் முகப்பில் இருந்ததால், இந்தப் பாடல் தானே முதல் பாட்டாக இருக்கமுடியும்! அடுத்த படியாக,- பரிபாடலின் இருபத்திரண்டாம் பாடலின் இறுதிப்பகுதி கிடைக்காததாய் அதன் ஆசிரியர் பெயரும் தெரியவில்லை.

இசையாசிரியர்கள்:

பரிபாடல் ஒருவகை இசைப்பாட்டு என்பது முன்னரே கூறப்பட்டது. ஒவ்வொரு பாட்டுக்கும் இசை வகுக்கப்பட் டுள்ளது. ஒவ்வொரு பாட்டின் இறுதியில் பாடல் ஆசிரியர் பெயருடன் இசையமைத்த ஆசிரியர் பெயரும், இசைப் பெய ரும் தரப்பட்டுள்ளன. முதல் பாடலுக்கும் இறுதிப் பாடலுக்கும் பாடல் ஆசிரியர் பெயர் தெரியாதது போலவே இசையாசிரியர் பெயரும் தெரியவில்லை. மற்றும், பதின்மூன்றாம் பாட

வின் இசையாசிரியர் பெயரும் தெரியாதபடி ஓலைச்சுவடி சிதைந்துள்ளது. எனவே, பத்தொன்பது பாடல்களுக்கு இசை யமைத்த பதின்மர் பெயர்கள் தெரியவருகின்றன. அவர்கள் கண்ணகனார் (21-ஆம் பாடல்), கண்ணனாகனார் (5), கேசவ னார் (14), நந்நாகனார் (12), நல்லச்சுதனார்(16,17,18,20), நன் னாகனார் (2), பித்தாமத்தர் (7), பெட்டகனார் (3,4), மருத் துவன் நல்லச்சுதனார் (6,8,9,10,15,19) ஆகியவராவர். இவர் களுள் கேசவனார் தம் (14) பாடலுக்குத் தாமே இசைவகுத் துள்ளமை குறிப்பிடத்தக்கது.

நூல் அமைப்பும் தொகுப்பும்:

இருக்கும் இருபத்திரண்டு பாடல்களையும் அடிப்படை யாகக் கொண்டு நூலமைப்பை ஆராயுங்கால், பாடல்கள் ஆசிரியர் வாரியாகவோ அல்லது பொருள் வாரியாகவோ வரிசைப் படுத்தப் பட்டிருப்பதாகத் தெரியவில்லை. ஆசிரியர் பதின்மூவரின் பாடல்களும் மாறிமாறிக் கலந்து வந்துள்ளன. அவ்வாறே, திருமால், செவ்வேள், வையை ஆகிய முப் பொருள் பற்றிய பாடல்களும் மாறிமாறிக் கலந்தே அமைக்கப் பெற்றுள்ளன. இதைக் காண வியப்பாயிருந்தது. நூலைத் தொகுத்தவர் ஆசிரியர் வாரியாகப் பாடல்களை வரிசைப்படுத் தாவிடினும், பொருள் வாரியாகவாவது வரிசைப் படுத்தி யிருக்கலாமே! அஃதாவது,- முதலில் திருமாலைப் பற்றிய பாடல்களையும், இரண்டாவதாகச் செவ்வேளைப் பற்றிய பாடல்களையும், அடுத்து வையையைப் பற்றிய பாடல்களை யும், அடுத்து மதுரையைப் பற்றியபாட ல்களையுமாக-இப்படி யாவது வரிசைப்படுத்தித் தொகுத்திருக்கலாமே!

இவ்வாறு பொருள் வாரியாகவாவது தொகுக்காமல், கண்டபடி அமைத்துத் தொகுத்திருப்பதை எண்ணியபோது தொகுப்பாசிரியர்மேல் வருத்தம் ஏற்பட்டது. பின்னர் ஓர் உண்மை புலப்பட்டபோது, தொகுப்பாசிரியர்மேல் ஏற்பட்ட வருத்தம் நீங்கியது. அந்த உண்மையாவது:— பரிபாடல் ஓர் இசைப்பாட்டு என்றோம். எனவே, இந்நூற் பாடல்கள் தேவாரம்போல இசைவாரியாக வரிசைப்படுத்தித் தொகுக்கப் பட்டுள்ளன என்னும் உண்மை கூர்ந்து நோக்கியபின் விளங்

கிற்று. முதல் பாடலுக்கும் இருபத்திரண்டாம் பாடலுக்கும் இசை தெரியாது. இரண்டு முதல் பன்னிரண்டு வரையான பாடல்கள் 'பண்ணுப் பாலையாழ்' என்னும் இசையமைந்தவை. பதின்மூன்று முதல் பதினேழு வரையும் 'பண் நோதிறம்' என்னும் இசையுடையவை. பதினெட்டு முதல் இருபத்தொன்று வரை, 'காந்தாரம்' என்னும் பண்ணிசை பெற்றனவாகும். இந்த அமைப்பை நோக்குங்கால், இந்நூற் பாடல்கள் இசை வாரியாக வரிசைப்படுத்தித் தொகுக்கப்பட்ட பேருண்மை நன்கு புலனாகலாம். அந்தக் காலத்தில் பரிபாடல் பண்ணமைத்துப் பாடப்பட்டது என்னும் செய்தியும் இதனால் விளங்குகிறது. பரிபாடல் அமைப்பின் மாதிரிக்காக, செவ்வேளைப் பற்றிய ஐந்தாம் பாடலின் இறுதியில் உள்ள பகுதி வருமாறு:—

கடவுள் வாழ்த்து
கடுவனிள வெயினனார் பாட்டு
கண்ண னாகனார் இசை
பண்ணுப் பாலைப் யாழ்

மேலுள்ளவாறு ஒவ்வொரு பாடலின் இறுதியிலும் உரிய விவரங்கள் இருக்கக் காணலாம். இவ்வாறு பாடலாசிரியர் பெயர். இசையாசிரியர் பெயர், பண் பெயர் எல்லாம் தந்து நூலைத் தொகுத்த தொகுப்பாசிரியர் மிகவும் பாராட்டத் தக்கவர். ஒவ்வொரு தொகை நூலின் இறுதியிலும் தொகுத்தவர் பெயரும், தொகுப்பித்தவர் பெயரும் குறிப்பிடப்பட்டிருக்கும். ஆனால், பரிபாடல் ஒலைச்சுவடி முழுதும் கிடைக்காமையால், தொகுத்தவரையும் தொகுப்பித்தவரையும் அறிந்து கொள்ள வாய்ப்பில்லாமற் போயிற்று. பாடல்களே ஏழில் ஐந்து பங்கு கிடைக்காதபோது. தொகுத்தவர் பெயரும் தொகுப்பித்தவர் பெயரும் கிடைக்காததில் வியப்பில்லை.

பரிபாடலில் கிடைத்துள்ள பாடல்கள் வரையும் நோக்குங்கால், கேசவனார் என்னும் புலவர்மட்டும் தமது (14-ஆம்) பாடலுக்குத் தாமே இசையமைத்துள்ளார் என்பதும், மற்றவர் பாடலுக்கு வேறு பிறர் இசையமைத்துள்ளனர் என்பதும் புலனாகும். ஒவ்வொரு பாடலாசிரியரும் தத்தம் பாடலுக்கு

இசையமைத்து உதவுமாறு இசையாசிரியர்களை அணுகிக் கேட்டு அமைத்து வைத்துச் சென்றிருப்பாரா? அல்லது. இசையாசிரியர்கள் தமக்குக் கிடைத்த பாடல்களுக்குத் தாமாக இசையமைத்துப் பாடிப்பார்த்து மகிழ்ந்திருப்பார்களா? அல்லது, பரிபாடலைத் தொகுத்தவர், ஒவ்வொரு பாடலுக்கும் இசையமைத்துத் தருமாறு இசையாசிரியச் பலரை யணுகிக் கேட்டு இசையமைக்கச் செய்து நூலைத் தொகுத்திருப்பாரா?

மேற் கூறிய எல்லா வகையிலும் இசையமைக்கப்பட்டிருக்கலாம். எழுபது பாடல்களுள் சிலவற்றிற்குப் பாடலாசிரியர்களே இசையமைத்திருக்கலாம். சிலவற்றிற்குப் பாடலாசிரியர்கள் இசையாசிரியர்களை யணுகிக்கேட்டு இசையமைக்கச் செய்திருக்கலாம். சிலவற்றிற்கு இசையாசிரியர்கள் தாமாகவேஇசையமைத்துப் பாடியிருக்கலாம். இவ்வாறு இசையமைத்துப் பாடப்பட்டு நாடுமுழுதும் பரவியிருந்த பாடல்களை ஒருவர் தொகுத்து ஒரு தொகைநூலாக்கி யிருக்கலாம். இசையமைக்கப் படாதிருந்திருக்கக் கூடிய சில பாடல்களுக்கு இசையமைக்கச் செய்யும் பொறுப்பைத் தொகுப்பாசிரியரும் எடுத்துக் கொண்டிருக்கலாம் இந்தக் காலத்தில் தமிழிசைப் பாடல்தொகுப்பு நூல்கள், மேலே கூறப் பட்டுள்ள எல்லாவகையிலும் இசையமைக்கப் பட்டுள்ளமை ஈண்டு ஒப்புநோக்கற்பாலது.

**கண்டெடுத்த பாடல்கள்:**

கிடைத்திருக்கும் பரிபாடல் நூலின் இருபத்திரண்டு பாடல்களும் முதல் பாட்டு தொல்காப்பிய – இளம்பூரணர் உரையினால் அறியப்பட்டுச் சேர்க்கப்பட்டது என்னும் செய்தி முன்னரே அறிவிக்கப்பட்டுள்ளது. இந்த இருபத்திரண்டு பாடல்கள் அல்லாமல், மேற்கொண்டு இரண்டு முழுப்பாடல்களும் பதினொரு குறைப்பாடல்களும் பல்வேறு நூல்களிலிருந்து கண்டு பிடிக்கப்பட்டுள்ளன-ஏன் – கண்டெடுக்கப்பட்டுள்ளன என்றே கூறலாம். இவைபற்றிய விவரம் வருமாறு:—

(1) தொல்காப்பியம்-செய்யுளியலில் பரிபாடலுக்கு இலக்கணம் கூறும் ‘கொச்சகம் அராகம்’ என்னும் (121-ஆம்) நூற்பாவின் உரையிடையே, பேராசிரியரும் நச்சினார்க்கினியரும்

"வானாரெழிலி" என்று தொடங்கும் நீளமான முழுப்பாடல் ஒன்றினை எடுத்துக்காட்டியுள்ளனர். பரிபாடல் இனப்பாடலுக்குஎடுத்துக் காட்டாக இப்பாட்டுக் காட்டப் பட்டுள்ளமையின், இஃது, 'எழுபது பரிபாடல்' என்னும் நூற்பாடல்களுள் ஒன்றாக இருக்கக்கூடும். இது திருமாலைப் பற்றியது.

(2) தொல்காப்பியம்-செய்யுளியலில் பரிபாடலுக்கு இலக்கணங் கூறும் 'கட்டுரை வகையான்' என்னும் (119-ஆம்) நூற்பாவின் உரையிடையே, இளம்பூரணர், 'மாநிலம் தோன்றாமை' என்று தொடங்கும் நீளமான முழுப்பாடல் ஒன்றினை எடுத்துக் காட்டியுள்ளார். இஃதும் எழுபது பரிபாடலுள் ஒன்றாக இருக்கவேண்டும். இது வையையைப் பற்றியது,

(3) 'கொச்சகம் அராகம்' (செய்யுளியல் - 121) என்னும் நூற்பாவின் உரையிடையே.

"அறவோர் உள்ளார் அருமறை காப்ப' என்னும் பரிபாடலுள்,

"செறுநர் விழையாச் செறிந்தநங் கேண்மை
மறுமுறை யானும் இயைக நெறிமாண்ட
தண்வரல் வையை யெமக்கு'—
இது வெள்ளைச் சுரிதகத்தான் இற்றது"

எனப் பேராசிரியர் வரைந்துள்ளார். இவ்வாறே நச்சினார்க்கினியரும் வரைந்துள்ளார். இதனால், "அறவோர் உள்ளார்' என்று தொடங்கும் பரிபாடல் ஒன்று இருத்தமை புலனாகும். இப் பாடல் வையையைப் பற்றியது.

(4) செய்யுளியலில், 'பரிபாடல்லே' என்று தொடங்கும் (120 - ஆம்) நூற்பாவின் உரையிடையே,

"மண்ணார்ந் திசைத்த முழவொடு கொண்ட தோள்
கண்ணோ டௌவிழூஉங் காரிகை கண்டார்க்குத்
தம்மோடு நிற்குமோ நெஞ்சு'—

எனப் பரிபாடல் வெண்பா உறுப்பாக வந்தது"- எனப் பேராசிரியர் ஒரு பரிபாடலின் பகுதியை எடுத்துக் காட்டியுள்

ளார். இவ்வாறே நச்சினார்க்கினியரும் வரைந்துள்ளார். இது ஒரு கடவுளைப் பற்றிய பரிபாடல் பகுதியாக இருக்கலாம்.

(5) நம்பியகப் பொருளில் உள்ள 'அணிந்துழி நாணியது உணர்ந்து தெளிவித்தலும்' என்னும் (129-ஆம்) நூற்பாவின் உரையிடையே, பழைய உரையாசிரியர் எழுதியுள்ள,

''அணிந்துழி நாணியது உணர்ந்து தெளிவித்ததற்கு விதி யாதோ வெனின்,

' முன்புற் றறியா முதற்புணர்ச்சி மொய்குழலை
யின்புற்றணிந்த வியலணியும்—வன்பணியு
நாணேனும் தொல்லை யணியென்ன நன்னுதலை
...ணந்து'

என்னும் பரிபாட்டினுட் செய்யுளாம் எனக் கொள்க.''

என்னும் உரைப்பகுதியால், பரிபாடல் பாடல்ஒன்றின் ஒரு பகுதி தெரிய வருகிறது. இது வையை பற்றியதாயிருக்க லாமோ? (6 – 11 ).புறத்திரட்டு என்னும் தொகுப்பு நூலிலி ருந்து பரிபாடல் நூலின் ஆறு பாடல்களின் பகுதிகள் அறியப் பட்டுள்ளன. ஒவ்வொரு பாடல் பகுதியின் கீழும் புறத்திரட்டு என எழுதப்பட்டுள்ளது. இந்த ஆறு பாடல் பகுதிகளும் புறத் திரட்டு நூலில் 866, 874, 875, 876, 877, 878 என முறையே வரிசை எண்கள் தரப்பட்டுள்ளன. இந்த ஆறு பாடல் பகுதி களின் முதற் குறிப்புக்கள் வருமாறு:-

'உலகம் ஒரு நிறையா' (4 அடிகள்)
'மாயோன் கொப்பூழ்' (11 அடிகள்)
'தண்டமிழ் வேலி' (4 அடிகள்)
'செய்யாட் கிழைத்த' (4 அடிகள்)
'கார்த்திகை காதில்' (4 அடிகள்)
'ஈவாரைக் கொண்டாடி' (4 அடிகள்)

இந்த ஆறு பாடல்களும் மதுரையைப் பற்றியன வாகும்.

(12) தொல்காப்பியம் - மெய்ப்பாட்டியலில் 'செல்வம் புலனே' என்னும் (11 – ஆம்) நூற்பா உரையின் இறுதியில்,

''வையை வருபுனல் ஆடல் இனிதுகொல்
செவ்வேற்கோ குன்ற நுகர்தல் இனிது கொல்

வைவ்வேல் நுதியன்ன கண்ணார் துணையாக
எவ்வாறு செய்வாங்கொல் யாமென நாளும்
வழிமயக் குற்று மருடல் நெடியான்
நெடுமாடக் கூடற் கியல்பு''

என்னும் பாடல் பகுதி இளம்பூரணரால் எடுத்துக்காட்டப் பட்டுள்ளது. இது பரிபாடல் நூற்பாடல் ஒன்றின் பகுதியாக இருக்கலாம் என அறிஞர் சிலர் கருத்துத் தெரிவித்துள்ளனர். அங்ஙனமாயின், இதனை மதுரை பற்றிய பாடலாகக் கொள் ளலாம்.

(13) 'இருமை வகை தெரிந்து' என்னும் (23-ஆம்) திருக் குறளின் உரையில், ''தெரிமாண் தமிழ் மும்மைத் தென்னம் பொருப்பன்' என்புழிப்போல, இருமைஎன்றது ஈண்டுஎண்ணின் கண் நின்றது''—எனப் பரிமேலழகர் ஒரு பாடலை எடுத்துக் காட்டியுள்ளார். இங்கே காட்டப்பட்டுள்ள,

''தெரிமாண் தமிழ்மும்மைத் தென்னம் பொருப்பன்
பரிமா நிரையின் பரந்தன்று வையை''

என்னும் பாடல் பகுதி, பரிபாடல்நூற் பாடலொன்றின் பகுதி என்பதாகத் திருக்குறள் பரிமேலழகர் உரை - நுண்பொருள் மாலை என்னும் நூலில் அறிவிக்கப்பட்டுள்ளது. இப் பாடல் வையை பற்றியதாகத் தோன்றுகிறது.

இவ்வாறாக, இழக்கப்பட்ட பரிபாடல் பாக்களுள் இரு முழுப் பாக்களும் பதினொரு பாடற்பகுதிகளும் பிற நூல் களின் வாயிலாக அறியப்படுகின்றன. எழுபது பரிபாடல்களும் என்று எங்கே எவ்வாறு கிடைக்குமோ

முதல் பத்தும் இறுதிப் பத்தும் இல்லாத பதிற்றுப்பத்து நூலின் ஓலைச்சுவடி ஒன்றே ஒன்று கிடைத்தது போலவே, இருபத்திரண்டாவது பாடல்வரை மட்டுமே உள்ள பரிபாடல் ஓலைச்சுவடி ஒன்றே ஒன்று தப்பித் தவறி கிடைத்திருக்க, அதைக்கொண்டு அதேபோல் பல படிகள் எடுக்கப்பட்டுப் படிக் கப்பட்டிருக்க வேண்டும்.

இந்த எழுபது பரிபாடல்களே யல்லாமல், இன்னும்பல பரிபாடல்கள் காலந்தோறும் எழுதப்பட்டு வந்துள்ளன.

அவற்றுள், 'பாப்பாவினம்' என்னும் நூலின் ஆசிரியரால் இயற்றப்பெற்றுள்ள நான்கு பரிபாடல்கள் குறிப்பிடத்தக்கன.

நூலின் ஆட்சியும் மாட்சியும்

பதின்மூன்றாம் நூற்றாண்டினர் எனப்படும் பரிமேலழகரும், பதினான்காம் நூற்றாண்டினர் எனப்படும் நச்சினார்க்கினியரும் பரிபாடல் பாடல் பகுதிகளைத் தம் உரைகளில் எடுத்தாண்டுள்ளனர். பதினாறாம் நூற்றாண்டிற்கு முன் தொகுக்கப் பட்டதாகச் சொல்லப்படும் புறத்திரட்டில், பரிபாடல் பாடற் பகுதிகள் ஆறு இடம் பெற்றுள்ளன. எனவே, பதினைந்தாம் நூற்றாண்டு வரையும் எழுபது பரிபாடல்களும் முழு உருவத்தில் ஆட்சியில் இருந்தமை பெறப்படும்.

கடலில் அமிழ்தம் தோன்றியதாகக் கதை சொல்லப் படுகிறது. கடைச் சங்கம் என்னும் கடலிலிருந்து பரிபாடல் என்னும் அமிழ்தம் தோன்றியதாம். இதுபலராலும் பெயர்த்தெழுதிப் படிகள் எடுக்கப்பட்டும் பொருள் விளக்கப்பட்டும் பாடப்பட்டும் பரவியிருந்ததாம். இந்நிலையில், அரசு மாற்றங்களினாலும், படியெடுப்போர், பாடுவோர் முதலியோரால் செய்யப்பட்ட தவறுகளினாலும் பரிபாடல் தனது பழைய உருவத்திலிருந்து மாறுதல் பெற்றிருந்ததாம். இதனைப் பரிமேலழகர் கவனித்துத் திருத்தி ஒழுங்குசெய்து உரையெழுதினாராம். இச்செய்திகளைப் பின்வரும் உரைச் சிறப்புப்பாயிரப் பாடலால் அறியலாம்.

"கண்ணுதற் கடவுள் அண்ணலங் குறுமுனி
முனைவேல் முருகன் எனவிவர் முதலிய
திருந்துமொழிப் புலவர் அருந்தமிழ் ஆய்ந்த
சங்கம் என்னும் துங்கமலி கடலுள்
அரிதின் எழுந்த பரிபாட் டமுதம்
அரசுநிலை திரீஇய அளப்பருங் காலம்
கோதில் சொன்மகள் நோதகக் கிடத்தலின்
பாடிய சான்றவர் பீடுநன் குணர
மிகைபடு பொருளை நகைபடு புன்சொலின்
தந்திடை மடுத்த கந்திதன் பிழைப்பும்
எழுதினர் பிழைப்பும் எழுத்துரு வொக்கும்
பகுதியின் வந்த பாடகர் பிழைப்பும்

ஒருங்குடன் கிடந்த ஒவ்வாப் பாடம்
திருந்திய காட்சியோர் செவிமுதல் வெதுப்பலின்
சிற்றறி வினர்க்கும் தெற்றெனத் தோன்ற
மதியின் றகைப்பு விதியுளி யகற்றி
எல்லையில் சிறப்பின் தொல்லோர் பாடிய
அணிதிகழ் பாடத்துத் துணிதரு பொருளைச்
சுருங்கிய உரையின் விளங்கக் காட்டினன்
நீணிலங் கடந்தோன் தாள்தொழு மரபின்
பரிமே லழகன் உரிமையின் உணர்ந்தே.''

இந்தப் பாடலில் பரிமேலழகரின் உரைச் சிறப்பினும், அந்த நாளில் பரிபாடல் பெற்றிருந்த ஆட்சியும் மாட்சியுமே மிகவும் புலப்படுத்தப்பட்டுள்ளன. அரசு மாற்றங்களால் சிலகாலம் பரிபாடல் ஆட்சியிழந்திருந்தது குறித்துக் கலைமகளே வருந்தி யிருந்ததாகவும், பலர் பரிபாடலைத் தவறுதலாக எழுதியதை யும் பாடியதையும் அறிந்த பெரியோர் வருந்தியதாகவும், இந்தக் குறை பரிமேலழகரின் முயற்சியால் நீங்கியதாகவும் இப் பாயிரப் பாடல் அறிவிக்கிறது. இதனால், அந்நாளில் பரிபாடல் பெற்றிருந்த பரந்து பட்ட ஆட்சியும் மாட்சியும் நனிவிளங்கும் உரையாசிரியர்கள் இந் நூற் பாடல்களை மேற்கோளாக எடுத் தாண்டு போற்றியுள்ளனர்.

இதுகாறும் பதினெண் மேற்கணக்கு நூல்களைப்பற்றி ஆராய்ந்தோம். இனிப் பதினெண் கீழ்க்கணக்கு நூல்களை நோக்கிச் செல்வோம்.

# 25. பதினெண் கீழ்க்கணக்கு

### தொகைப் பெயர்

பத்துப் பாட்டு, எட்டுத் தொகை ஆகிய பதினெட்டு நூல் களையும் சேர்த்துப் 'பதினெண் மேற் கணக்கு' என வழங்குவ தாக முன்பு கூறினோம். அவ்வாறே, வேறு பதினெட்டு நூல் களைச் சேர்த்துப் 'பதினெண் கீழ்க் கணக்கு' என்று சொல்லும்

மரபு பெருவாரியாக உள்ளது. 'பதினெண் கிழ்க் கணக்கு' என்பது, பதினெட்டு நூல்களையும் சேர்த்துத் தொகுத்துக் கூறும் ஒருவகைத் தொகைப் பெயராகும். எனவேதான் இது பற்றி இந்நூலில் ஆராயவேண்டியுள்ளது. இத் தொகைப் பெயரைப் 'பன் மலர் மாலைத் திரள்' எனக் கூறலாம்.

கீழ்க் கணக்கு-இலக்கணம்

மேல் கணக்கு, கிழ்க்கணக்கு ஆகியவற்றிற்குப் பன்னிரு பாட்டியலில் இலக்கணம் கூறப்பட்டுள்ளது. அடியளவால் நிமிர்ந்த-நீண்ட-பெரிய பாடல்களாகிய ஆசிரியப்பா, கலிப்பா, பரிபாடல் ஆகியவற்றால் ஆன தொகுப்பு நூல்கள் மேற்கணக் காகும்; அடியளவால் நிமிராத - நீளாத-குறுகிய வெண்பா வகைப் பாடலால் அறம், பொருள், இன்பம் ஆகியவை பற்றித் திறம்படக் கூறும் நூல்கள் கிழ்க்கணக்காகும் - எனப் பன்னிரு பாட்டியல் கூறுகிறது.

''அகவலும் கலிப்பா வும்பரி பாடலும்
பதிற்றைந் தாதி பதிற்றைம்ப தீறா
மிகுத்துடன் தொகுப்பன மேற்கணக்கு கெனவும்
வெள்ளைத் தொகையும் அவ்வகை எண்பெறின்
எள்ளறு கீழ்க்கணக்கு எனவும் கொளலே.'' (346)

''அடிநிமிர் பில்லாச் செய்யுள் தொகுதி
அறம்பொருள் இன்பம் அடுக்கி அவ்வத்
திறம்பட வருவது கீழ்க்கணக் காகும்.'' (348)

என்பன, பன்னிரு பாட்டியல் நூற்பாக்களாம்; இவை இலக்கி யம் கண்டதற்கு இலக்கணம் கூறியுள்ளன.

அம்மை

தொல்காப்பியர் செய்யுளுக்கு உரியனவாகக் கூறியுள்ள எட்டு வனப்புக்களுள் 'அம்மை' என்பதும் ஒன்று. அந்த 'அம்மை' என்னும் வனப்புக்கு எடுத்துக்காட்டாகப் பதினெண் கிழ்க் கணக்கு நூல்களைக் குறிப்பிட்டுள்ளனர் உரையாசிரியர்கள். இனி அம்மை பற்றிய தொல்காப்பிய நூற்பாவையும் அதன் உரைப் பகுதிகளையும் காண்போம்:

"வனப்பியல் தானே வகுக்குங் காலைச்
சின்மென் மொழியால் தாய பனுவலோடு
அம்மை தானே அடிநிமிர் பின்றே"

என்பது தொல்காப்பியம் - செய்யுளியல் (235-ஆம்) நூற்பா. இதற்குப் பேராசிரியர் வரைந்துள்ள உரையிலிருந்து ஒரு குறிப்பிட்ட பகுதி வருமாறு:—

"...சிலவாய மெல்லியவாய சொல்லோடும் இடையிட்டு வந்த பனுவல் இலக்கணத்தோடும் அடி நிமிர்வில்லது அம்மையாம்..." அடிநிமிரா தென்றது, ஐந்தடியின் ஏறா தென்றவாறு.

"தாய பனுவலோ டென்றது, அறம் பொருள் இன்பம் என்னும் மூன்றற்கும் இலக்கணஞ் சொல்லுப (போன்று) வேறிடையிடை அவையன்றியுந் தாய்ச்செல்வ தென்றவாறு; அஃதாவது, பதிவெண் கீழ்க்கணக்கென வுணர்க. அதனுள், இரண்டடியானும் ஐந்தடியானும் ஒரே செய்யுள் வந்தவாறும், அவை சிலவாய மெல்லிய சொற்களான் வந்தவாறும், அறம் பொருள் இன்பம் என அவற்றுக்கு இலக்கணம் கூறிய பாட்டுப் பயின்று வருமாறும், கார்நாற்பது களவழி நாற்பது முதலாயின வந்தவாறுங் கண்டு கொள்க.

'பொருள்கருவி காலம் வினையிடனோ டைந்தும்
இருள்தீர எண்ணிச் செயல்' (குறள்-675)

என்பது இலக்கணம் கூறியதாகலின் பனுவலோ டென்றான்.

'மலர்காணின் மையாத்தி நெஞ்சே யிவள்கண்
பலர்காணும் பூவொக்கு மென்று'. (குறள்-1112)

என இஃது இலக்கிய மாகலான் 'தாய பனுவல்' எனப்பட்டது... அம்மை என்பது குணப் பெயர். அமைதிப்பட்டு நிற்றலின் அம்மை யென்றாயிற்று..."

இது பேராசிரியரின் உரைப்பகுதி. இனி நச்சினார்க்கினியரின் உரைப்பகுதி வருமாறு:—

"...இது முறையே அம்மை கூறுகின்றது. அம்மை குணப்பெயர். அமைதிப்பட்டு நிற்றலின் அம்மையாயிற்று.

சின்மையாய் மெல்லியவாய் சொல்லானும் இடையிட்டு

வந்த பனுவல் இலக்கணத்தானும் அடிநிமிர்வின்றாய் வருவது தான் அம்மை எனப்படும்.

அடிநிமிரா தென்றது ஆறடியின் ஏறாமையை சிலவாதல் சொல் லெண்ணுச் சுருங்குதல்.

மெல்லிய வாதல் சிலவாகிய சொற்களும் எழுத்தினான் அகன்று காட்டாது சிலவெழுத்தான் வருதல்.

தாய பனுவலின் என்பது, அறம் பொருள் இன்பம் என்னும் மூன்றற்கும் இலக்கணம் கூறுவன போன்றும் இடையிடையே அன்றாயும் தாவிச்செல்வ தென்றவாறு. அங்ஙனம் வந்தது பதினெண் கீழ்க் கணக்கு. அதனுள் இரண்டடியானும் ஐந்தடியா னும் சிறுபான்மை ஆறடியானும் ஒரோ செய்யுள் வந்தவாறும் அவை சின்மென் மொழியாய் வந்தவாறும், அறம் பொருள் இன்பத் திலக்கணம் கூறிய பாட்டுக்களும் பயின்று வந்தவாறும், இடையிடையே கார்நாற்பதும் களவழி நாற்பதும் முதலியன வந்தவாறுங் காண்க. உள்ளுறுப்பாய்ப் பதினெட்டையும் (பதி னெண் கீழ்க்கணக்கு நூல்களையும்) வனப்பு எனப்படும் என்றுங் கொள்க.

'பொருள்கருவி காலம் வினையிடனோ டைந்தும்
இருள்தீர எண்ணிச் செயல்.' (குறள்-675)

இஃது இலக்கணம் கூறலின் 'பனுவலின்' என்றார்.

'மலர்காணின் மையாத்தி நெஞ்சே யிவள்கண்
பலர்காணும் பூவொக்கு மென்று' (குறள்-1112)

இஃது இலக்கிய மாதலின் 'தாய' என்றார்... ஆசாரக் கோவை யுள் 'ஆரெயின் மூன்றும்' ஆறடியாற் சிறுபான்மை வந்தது.

இது நச்சினார்க்கினியர் உரைப்பகுதி. இனி இளம் பூரணரின் உரை வருமாறு:—

''சிலவாய் மெல்லியவாகிய மொழியினானே தொகுக்கப் பட்ட அடிநிமிர்வில்லாத செய்யுள் அம்மையாம் என்றவாறு உதாரணம்:

'அறிவினான் ஆகுவ துண்டோ பிறிதினோய்
தன்னோய்போல் போற்றாக் கடை' (குறள்-315)

என வரும்''.—

மேற்காட்டியுள்ள உரைப் பகுதிகளால், அம்மை என்பதன் இலக்கணமும் அதற்குப் பதினெண்கீழ்க் கணக்கு நூல்கள் பொருந்துமாறும் புலனாகும். உரையாசிரியர்கள் கீழ்க்கணக்கு நூல்கள் பதினெட்டையுமே பொதுவாகக் குறிப்பிட்டிருப்பதல்லாமல், திருக்குறள், கார் நாற்பது, களவழி நாற்பது, ஆசாரக் கோவை ஆகிய கீழ்க்கணக்கு நூல்கள் சிலவற்றைச் சிறப்பாக விதந்து குறிப்பிட்டிருப்பது ஈண்டு எண்ணத்தக்கது.

பெயர்க் காரணம்

கணக்கு என்பதற்கு நூல் என்பது பொருளாம். மக்கள் தொடக்கக் காலத்தில் மொழி பேசுதல் மட்டும் செய்தனர்; எழுதவில்லை; எழுதவும் தெரியாது. கொடுத்தல் வாங்குதல் ஆகிய கணக்குவிவரம் குறிப்பிடவே முதல்முதல் ஏதோ குறியீடு செய்து வரிவடிவத்திற்கு அடிகோலினர். கணக்குக் குறித்து வைத்த சுவடி கணக்குச் சுவடி எனப்பட்டது. நாளடைவில் எது எழுதப்பட்ட சுவடிக்கும் கணக்கு என்னும் பெயர் ஏற்பட்டது; அஃதாவது, எழுதி வைக்கப்பட்ட குறிப்பு கணக்கு எனப்பட்டது. இப்படியாக, கருத்துக்கள் எழுதப்பட்ட நூல்களும் கணக்கு எனப்பட்டன. நூல் கற்பிக்கும் ஆசிரியர் கணக்காயர் எனப்பட்டார். கணக்கு நூலாக மாறிய வரலாறு இது.

இந்த அடிப்படையுடன் மேற்கணக்கு - கீழ்க்கணக்குக்கு வருவோம். மிக்க அடிகள் கொண்ட நீண்ட பாக்களால் ஆன நூல்கள் மேற்கணக்கு எனவும், குறைந்த அடிகள் கொண்ட குறுகிய பாக்களால் ஆன நூல்கள் கீழ்க்கணக்கு எனவும் வழங்கப்பட்டன. ஆனால், பன்னிரு பாட்டியலில் தவிர வேறு எந்த நூலிலும் யாராலும் மேற்கணக்கு என்னும் பெயர் வழங்கப்படவே யில்லை. அதற்கு மாறாகக் கீழ்க்கணக்கு என்னும் பெயர் பல நூல்களிலும் பலராலும் நிரம்ப வழங்கப்பட்டுள்ளது. இதைக் கொண்டு,—'மேற்கணக்கு என்னும் வழக்காறு அன்று இல்லை; கீழ்கணக்கு என ஒன்று இருப்பதால், அதற்கு நேர்எதிராக மேற்கணக்கு என ஒன்றைப் புதிதாகப் படைத்துக் கொண்டு, பதினென் கீழ்க்கணக்கு நூல்கள் போலவே பதினென் மேற்கணக்கு நூல்களும் உள என எண்ணிக்கை

உருவாக்கி விட்டனர், - என்று சிலர் கூறுகின்றனர். இந்தக் கருத்தை ஏற்றுக் கொள்வதற்கு இல்லை. ஏன்?

'மேல்' இல்லாமல் 'கீழ்' இருக்கமுடியாது; 'கீழ்' இல்லாமல் 'மேல்' இருக்கமுடியாது. எனவே கீழ்க்கணக்கு என்னும் வழக்காறு இருப்பதனால், கீழ்க்கணக்கு அல்லாத இன்னும் பெரிய-நீண்ட வேறு கணக்கு ஏதோ இருக்க வேண்டும் என்பது புலனாகும். மேற்கணக்கு என்னும் பெயரில் இல்லாவிடினும், வேறு பெயரிலாயினும் இருந்திருக்க வேண்டும். மேற்கணக்கு என்னும் வழக்காறு உள்ள நூற்பகுதி நமக்குக் கிடைக்காமல் போயிருக்கலாம்.

உரையாசிரியர்கள் பலரும் பதினெண் கீழ்க்கணக்கைக் குறிப்பிட்டுள்ளனரே தவிரப் பதினெண் மேற்கணக்கு என எங்கும் குறிப்பிடவில்லையே என்று வினவலாம். பதினெண் கீழ்க்கணக்கு நூல்கள் சிறுசிறு நூல்களாக இருந்தமையின் அவற்றை இணைத்து அவ்வாறு குறிப்பிட்டனர். ஆனால் பதினெண் மேற்கணக்கு நூல்கள், பத்துப்பாட்டு, எட்டுத்தொகை என்னும் இருபெரும் பிரிவினவாய் உள்ளமையின், உரையாசிரியர்கள் பாட்டுக்கள் எனவும், தனித்தனியே குறிப்பிட்டனர்; அதனால் பதினெண் மேற்கணக்கு எனக் குறிப்பிட வேண்டிய சூழ்நிலை அவர்கட்கு இல்லாது போயிற்று.

மற்றும், பழந்தமிழ்க் கணக்கில், மேல்வாய் இலக்கம், கீழ்வாய் இலக்கம், மேல்வாய்க் கணக்கு - கீழ்வாய்க் கணக்கு, மேல்வாய்-கீழ்வாய் என்றெல்லாம் பெயர்கள் வழங்கப்பட்டமை ஈண்டு எண்ணத்தக்கது. மேலும், தமிழ் எழுத்துக்கள் அனைத்தும் கொண்ட நீண்ட பட்டியலுக்கு, 'நெடுங்கணக்கு' என்னும் பெயர் வழக்காறு உள்ளமையும் ஈண்டு ஒப்பு நோக்கற் பாலது. எண்ணுக்கு ஏற்பட்ட கணக்கு என்னும் பெயர், பின்னர் எழுத்துக்கும் வழங்கப்பட்டது. கணக்கு நூலுக்கு ஏற்பட்ட கணக்கு என்னும் பெயர், பின்னர்ப் பிற நூல்கட்கும் உரியதாயிற்று.

இப்போது உலகியலில், ஓர் ஏட்டின் அடியில் எழுதப்படும் சிறு குறிப்பு. கீழ்க்குறிப்பு அல்லது அடிக்குறிப்பு (Foot Notes) என வழங்கப்படுவதைக் காணலாம். மேலே, விரிவான குறிப்பு

இருப்பதனால்தான், கீழே குறிப்பதைக் கீழ்க்குறிப்பு என்கிறோம். மற்றும், சிறுகுறிப்பு, பெருங்குறிப்பு என்னும் பொருளமைந்த வழக்காறுகளைப் பெரியோர் பாடல்களிலும் காணலாம். திருநாவுக்கரசர் தேவாரத்தில் உள்ள.

'தொழுது தூமலர் தூவித் துதித்து நின்று
அழுது காமுற் றரற்றுகின் றாரையும்
பொழுது போக்கிப் புறக்கணிப் பாரையும்
எழுதும் கீழ்க் கணக்கு இன்னம்பர் ஈசனே.'

என்னும் பாடலில், ஒவ்வொருவரையும் பற்றி எழுதிவைக்கப் படும் சிறு குறிப்பு கீழ்க்கணக்கெனக் குறிப்பிடப்பட்டிருப்பது காண்க. இதற்கு நேர் எதிராக, பட்டினத்தாரின் 'கோயில் நான்மணி மாலை' என்னும் நூலில் நெடுங்குறிப்பு ஒன்று குறிப்பிடப்பட்டுள்ளது. அதனை.

''ஒருபதி னாயிரம் திருநெடு நாமமும்
உரிமையிற் பாடித் திருமணப் பந்தருள்
அமரர் முன்புகுந்து அறுகு சாத்திநின்
தமர்பெயர் எழுதிய வரிநெடும் புத்தகத்து
என்னையும் எழுத வேண்டுவன்''

என்னும் (4-ஆம்) பாடல் பகுதியால் அறியலாம். இப் பாடல் பகுதியில் உள்ள 'வரிநெடும் புத்தகம்' என்னும் வழக்காற்றினைக் காண்க.

இதுகாறும் கூறியவற்றால், கீழ்கணக்கு என்பதில் கணக்கு என்பது நூல் எனப் பொருள்படும் எனவும், 'கீழ்' என்னும் அடைமொழி தகுதிபற்றியதன்று-அளவுபற்றியதாகும் எனவும் நன்கு தெளியலாம்.

### தொகைப் பெயர் வழக்காறு:

அம்மை என்னும் வனப்பு பற்றிய தொல்காப்பிய நூற்பாவின் உரைகளில், பதினெண் கீழ்கணக்கு சுட்டப்பட்டிருப்பது முன்பு காட்டப்பட்டது. இன்னும், தொல்காப்பிய உரைகளிலும், நம்பியகப் பொருள், நன்னூல், யாப்பருங்கலக் காரிகை முதலியவற்றின் உரைகளிலும் இன்ன பிறவற்றிலும், கீழ்க்கணக்கு-பதினெண் கீழ்க்கணக்கு என்னும் பெயர்

வழக்காறு உள்ளமையைக் காணலாம். அவற்றுள் சில வருமாறு;— தொல்காப்பியம் செய்யுளியலில் உள்ள,

'நெடுவெண் பாட்டே முந்நா லடித்தே
குறுவெண் பாட்டிற்கு அளவெழு சீரே'

என்னும் (158 – ஆம்) நூற்பாவின்கீழ்ப் பேராசிரியர் வரைந்துள்ள.

"...இங்ஙனம் அளவியல் வெண்பாச் சிறப்புடைத்தாதல் நோக்கிப் பதினெண் கீழ்க்கணக்கினுள்ளும் முத்தொள்ளாயிரத்துள்ளும் ஆறடியின் ஏறாமற் செய்யுள் செய்தார் பிற சான்றோரும் எனக் கொள்க"—

என்னும் உரைப்பகுதியிலும், அதே நூற்பாவின் கீழ் நச்சிலார்க்கினியர் வரைந்துள்ள,

"...இக் கருத்தானே கீழ்க்கணக்கில் நான்கடியும் ஈரடியுமே மிக வந்தவாறுங் காண்க"—

என்னும் உரைப்பகுதியிலும் இவ்வழக்காறு வந்துள்ளமை காணலாம். மற்றும், தொல்காப்பியம் – அகத்திணையியலில் மாயோன் மேய' என்னும் (5-ஆம்) நூற்பாவின்கீழ், "அது தொகைகளினும் கீழ்க்கணக்குகளினும் இம்முறை மயங்கிவரக் கோத்தவாறு காண்க" எனவும், 'நாடக வழக்கினும்' என்னும் (53-ஆம்) நூற்பாவின்கீழ், "ஆசிரியமும் வெண்பாவும் வஞ்சியும் அகம் புறம் என்னும் இரண்டிற்கும் பொதுவாய் வருமாறு நெடுந்தொகையும் புறமும் கீழ்க்கணக்கும் மதுரைக்காஞ்சியும் பட்டினப்பாலையும் என்பனவற்றுட் காண்க" – எனவும், புறத்திணையலில் 'அமரர்கண் முடியும்' என்னும் (26-ஆம்) நூற்பாவின்கீழ், "தொகைகளிலும் கீழ்க்கணக்கிலும் உள்ள கடவுள் வாழ்த்தெல்லாம் இதன்கண் அடக்குக"–எனவும், செய்யுளியலில் 'தரவின்றாகி' என்னும் (149- ஆம்) நூற்பாவின் கீழ், "...ஆசிரியமும் வெண்பாவும் ஒரு பொருள்மேல் பல......வருதலும் பிறவாறாய் வருதலும் வரையறை யிலவாயின. அவை ஐங்குறுநூறு, முத்தொள்ளாயிரம், கீழ்க்கணக்கு முதலியவற்றுள்ளும் பிறவற்றுள்ளும் காண்க – எனவும், நச்சினார்க்கினியர் வரைந்துள்ள உரைப் பகுதிகளில் பதினெட்டு நூல்கட்கும் பொதுத்

தொகைப் பெயராகக் 'கீழ்க்கணக்கு' என்னும் பெயர் வழக்காறு ஆளப்பட்டுள்ளமை காண்க.

இன்னும், நம்பியகப்பொருள்-அகத்திணையியலில் 'குறிஞ்சி பாலை, என்னும் (6-ஆம்) நூற்பாவின் கீழ்-"...பத்துப் பாட்டும், கலித்தொகையும், ஐங்குறு நூறும், கீழ்க்கணக்கும், சிற்றட்டகமும் முதலாய சான்றோர் செய்யுட்கள் எல்லாம் வேண்டிய முறையானே வைத்தலானும் இவ்வாற்றான் எண்ணப்பட்டது எனக் கொள்க"- என வரையப்பட்டுள்ள பழைய உரைப்பகுதியிலும், நன்னூல்-பொதுவியல் 'எப்பொருள் எச்சொலின்' என்னும் (37-ஆம்) நூற்பாவின்கீழ் மயிலைநாதர் வரைந்துள்ள 'ஐம்பெருங் காப்பியம்' எண் பெருந்தொகை, பத்துப் பாட்டு, பதினெண் கீழ்க்கணக்கு என்னும் இவ்விலக்கியங்களுள்ளும் விரிந்த உரிச்சொல் பனுவல்களுள்ளும் உரைத்தவாறு அறிந்து வழங்குக"-என்னும் உரைப் பகுதியிலும், யாப்பருங்கலக் காரிகை-ஒழிபியலில் மாஞ்சீர் கலியுட் புகா' என்னும் (40-ஆம்) நாற்பாவின்கீழ்க் குணசாகரர் வரைந்துள்ள "...திருவள்ளுவப் பயன், நாலடி நானூறு முதலாகிய கீழ்க்கணக்குள்ளும் முத்தொள்ளாயிரம் முதலாகிய சான்றோர் செய்யுளுள்ளும்வஞ்சியுரிச் சீர் வந்திலாமையானும்..." என்னும் உரைப்பகுதியிலும், இன்னபிறவற்றிலும், பதினெட்டு நூல்கட்கும் பொதுவாகிய கீழ்க்கணக்கு என்னும் பெயர் வழக்காற்றைக் காணலாம்.

கீழ்க் கணக்கு எனப்படும் பதினெட்டு நூல்களும் எந்தெந்தக் கோணத்திலெல்லாம் ஒரு தொகைப்படுத்திக் காட்டப்பட்டுள்ளன என்பதை அறிவிப்பதற்காகவே ஈண்டு இவ்வளவு சான்றுகள் தரப்பட்டன.

**பதினெட்டு நூல்கள்:**

பதிணென் கீழ்க் கணக்கு என்னும் தொகுப்பைச் சேர்ந்த பதினெட்டு நூல்களும் இன்னின்னவை எனத் தெளிவுபடுத்துவதில் அறிஞர்க்கிடையே கருத்து வேறுபாடு உள்ளது. அஃதாவது,-பதினேழு நூல்களைப் பற்றிப் பெரும்பாலும் அறிஞர்களிடையே கருத்துதொற்றுமை உள்ளது; பதினெட்டாவது

நூல் 'இன்னிலை' என்பதா? 'கைந்நிலை' என்பதா? என்பது பற்றியே கருத்து வேறுபாடு நிலவுகிறது. பதினெட்டு நூல்களும் வருமாறு:—

1. நாலடியார்
2. நான்மணிக்கடிகை
3. இனியவை நாற்பது
4. இன்னா நாற்பது
5. கார் நாற்பது
6. களவழி நாற்பது
7. ஐந்திணை ஐம்பது
8. ஐந்திணை எழுபது
9. திணைமொழி ஐம்பது
10. திணைமாலை நூற்றைம்பது
11. திருக்குறள்
12. திரிகடுகம்
13. ஆசாரக்கோவை
14. பழமொழி
15. சிறுபஞ்சமூலம்
16. முதுமொழிக்கோவை
17. ஏலாதி
18. இன்னிலை அல்லது கைந்நிலை.

இந்தப் பதினெட்டு நூல்களும், இந்த வரிசையில். பின் வரும் பழம் பாடலொன்றின் துணைகொண்டு தரப் பட்டுள்ளன.

''நாலடி நான்மணி நானற்ப தைந்திணைமுப்
பால் கடுகம் கோவை பழமொழி மாமூலம்
இன்னிலைய காஞ்சியோ டேலாதி யென்பவே
கைந்நிலைய வாங் கீழ்க் கணக்கு.''

என்பது அந்தப் பாடல். இதிலுள்ள நூல் விளக்கம் வருமாறு:— நாலடி = நாலடியார். நான் மணி=நான் மணிக் கடிகை. நானாற்ப தைந்திணை என்பதை நால் நாற்பது ஐந் திணை எனப் பிரித்து, நால் என்பதை நாற்பது என்பதுடனும் ஐந்திணை என்பதுடனும் தனித்தனியே கூட்டி. நாற்பது பாடல்கள் வீதம் கொண்ட நூல்கள் நான்கு எனவும், ஐந்தி ணைகளைப் பற்றிச் கூறும் நூல்கள் நான்கு எனவும், கொள்ள வேண்டும். முதல் நான்கு நூல்கள்: இனியவை நாற்பது, இன்னா நாற்பது, கார் நாற்பது, களவழி நாற்பது என்பன. அடுத்த நான்கு: ஐந்திணை ஐம்பது.ஐந்திணை எழுபது, திணை மொழி எழுபது, திணைமாலை நூற்றைம்பது ஆகும். அடுத்து, முப்பால் என்பது திருக்குறள். கடுகம்=திரிகடுகம். கோவை= ஆசாரக் கோவை. பழமொழி=பழமொழி என்னும் நூல். மா மூலம்=சிறுபஞ்ச மூலம். காஞ்சி=முதுமொழிக் காஞ்சி. ஏலாதி

=ஏலாதி என்னும் நூல். ஆக இதுவரை பதினேழு கணக்காகியுள்ளன. பதினெட்டாவதாக இன்னிலையை யாவது கைந்நிலையையாவது கொள்ள வேண்டும்.

இன்னிலையைக் கழித்துக் கட்டுபவர்கள், 'இன்னிலைய காஞ்சி, என்பதற்கு, இனிய இயல்பையுடைய முதுமொழிக் காஞ்சி, எனப் பொருள் கூறுகின்றனர்; சிலர் 'மெய்ந்நிலைய காஞ்சி எனப் பாடம் கொண்டு, இன்னிலையை ஒழித்துக் கட்டுகின்றனர். இன்னிலையையும் ஒரு நூலாகக் கொள்பவர்கள் 'இன்னிலை சொல் காஞ்சி' எனப் பாடங் கொண்டுள்ளவர். கைந்நிலையை விலக்குபவர்கள், 'என்பவே கைந்நிலைய வாங் கீழ்க் கணக்கு' எனப் பாடங்கொண்டு, 'சிறிய அளவான கீழ்க்கணக்கு நூல்கள் நாலடியார் முதல் ஏலாதி வரையும் என்று கூறுவர்' எனப் பொருள் கூறுகின்றனர். 'கைந்நிலைய' என்றால் 'சிறிய அளவான' என்று பொருளாம். இவர்கள் இன்னிலையை ஒரு நூலாகக் கொண்டு விட்டதால் பாடலின் மூன்றாம் அடியின் இறுதியில் 'என்பவே' என்று இருப்பதைத் தமக்குச் சான்றாகக் கொண்டு, முதல் மூன்று அடிகளிலுமே பதினெட்டு நூல்களும் சொல்லி முடிக்கப்பட்டு விட்டதாக நம்புகின்றனர். இறுதியடியை, 'நன்னிலையதாகும் கணக்கு' எனப் பாடம் ஓதுவாரும் உளர்.

உயர்திரு. ரா. இராகவையங்கார், நூல் நாற்பதைந் திணை' என்பதில் நூல் என்பதை ஐந்திணை என்பதோடு கூட்டாமல், ஐந்திணை என்றால் ஐந்து நூல்கள் – அஃதாவது திணை பற்றிக்கூறும் ஐந்துநூல்களே ஐந்திணை எனப்பட்டன- என்று கொண்டு, முன்பு கூறிய திணைநூல்கள் நான்குடன் கைந்நிலை என்பதையும் சேர்த்து, 'ஐந்திணை' அஃதாவது ஐந்திணை நூல்கள் எனப் பொருள் கூறியுள்ளார். இவர் இறுதியடியை "நன்னிலைய தாகுங் கணக்கு" எனப் பாடங் கொண்டுள்ளார். இது வலிந்து கொள்ளும் பொருளாகும்.

இன்னிலையை விலக்கிக் கைந்நிலையைக் கொள்ளும் உயர்திரு வை. அனந்தராமையர்.

'இன்னிலைய காஞ்சியொ டேலாதி யென்பதூஉம்
கைந்நிலையும் ஆகும் கணக்கு'

எனப் பாடங்கொண்டுள்ளனர். இதே கொள்கையுடைய உயர்திரு. வையாபுரிப்பிள்ளை,

'இன்னிலைய காஞ்சியுடன் ஏலாதி யென்பவும்
கைந்நிலையு மாம்கீழ்க் கணக்கு'

எனப் பாடம் கொள்ளலாம் எனக் கருத்துத் தெரிவித்துள்ளார். இதே கருத்துடைய வேம்பத்தூர் முத்து வேங்கட சுப்ப பாரதியார் என்பவர். கி.பி. 1849 – இல் தாம் இயற்றிய 'பிரபந்த தீபிகை' என்னும் நூலின் பாடல் ஒன்றில், பதினெண் கீழ்க்கணக்கு நூல்களைப் பின்வருமாறு தெரிவித்துள்ளார்:

''ஈரொன் பதின்கீழ்க் கணக்கினுட் படும்வகை
இயம்பு நாலடி நானூறும்
இன்னாமை நாற்பது நான்மணிக் கடிகை சதம்
இனிய நூற்பான் காரதே
ஆருகள வழிநாற்ப தைந்திணையு மைம்பதும்
ஐம்பதுட னிருபானு மாம்
அலகிலா சாரக் கோவை சதம் திரிகடுகம்
ஐயிருப தாகு மென்பர்
சீருறும் பழமொழிகள் நானூறு நூறதாம்
சிறுபஞ்ச மூலம் நூறு
சேர்முது மொழிக்காஞ்சி ஏலாதி எண்பதாம்
சிறு கைந் நிலை அறுபதாகும்
வாரிதிணை மாலைநூற் றைம்பதாம் திணைமொழி
வழுத்தைம்ப தாம் வள்ளுவ
மாலையீ ரொன்பதாய்ச் சாற்று பிரபந்தம்
வழுத்துவர்கள் புலவோர்க ளே.''

இப் பாடலில், பதினெண் கீழ்க்கணக்கு நூல் ஒவ்வொன்றிலுமுள்ள மொத்தப் பாடல்கள் பெரும்பாலும் தரப்பட்டுள்ளன. கைந்நிலையில் அறுபது பாடல்கள் இருப்பதாக இப் பாடல் அறிவிக்கிறது.

இன்னிலை, கைந்நிலை என்னும் நூல்களுள் எது பதினெண் கீழ்க்கணக்கைச் சேர்ந்தது என நாம் தீர்மானிக்க

வேண்டும். 'நால்டி நான்மணி' என்னும் பழைய வெண்பா, ஓலைச் சுவடிக்கு ஓலைச்சுவடி வேறுபட்டிருப்பதால், அறிஞர் களிடையே குழப்பத்தை உண்டு பண்ணியுள்ளது. இன்னிலை கொள்கையைச் சேர்ந்தவர்கள் சிலர் வருமாறு: தி.சு. பாலசுந்தரம்பிள்ளை (இளவழகனார்), ந.மு.வேங்கடசாமி நாட்டார், வா.மகாதேவமுதலியார், த.மு. சொர்ணம்பிள்ளை, வ.உ.சிதம்பரம்பிள்ளை, செல்வக் கேசவராய முதலியார் முதலியோர் ஆவர். இனிக் கைந்நிலை கொள்கையைச் சேர்ந்தவர்கள் சிலர் வருமாறு:-பு.சி. புன்னைவனநாத முதலியார், அ.நடராச பிள்ளை, களத்தூர் வேதகிரி முதலியார், த.கனகசுந்தரம் பிள்ளை, சி.வை. தாமோதரம் பிள்ளை, ரா.இராகவையங்கார், உ.வே. சாமிநாதையர், வை.அனந்தராமையர், எஸ்.வையாபுரிப் பிள்ளை, வேம்பத்தூர் முத்து வேங்கடசுப்பபாரதி முதலியோர் ஆவர். மேற்கூறிய அனைவரும் உரையாசிரியர்கள் அல்லது பதிப்பாசிரியர்கள், அல்லது நூலாசிரியர்கள், அல்லது எல்லா ஆசிரியர்களுமாவர். இந்நிலையில் நாம் எந்தக் கொள்கையை ஏற்றுக் கொள்வது?

இன்னிலையா யிருந்தா லென்ன? கைந்நிலையாயிருந்தா லென்ன? பதினெண் கீழ்க்கணக்கு நூல்களும், "நாலடி நான் மணி" என்னும் பழைய வெண்பாவினை அடிப்படையாகக் கொண்டே பெயர் கூறப்பட்டுள்ளன. அந்த வெண்பாவின்படி நோக்கின் இன்னிலை என்ற கொள்கைகையே ஏற்றுக்கொள்ள வேண்டியுள்ளது. சிலர் இன்னிலையை நீக்கிவிட்டு, 'மெய்ந் நிலைய காஞ்சியோ டேலாதி யென்பவே' என்று பாடம் கூறு கின்றனர்; இதில் மோனையில்லை யாதலின் இது சரியன்று. சிலர் 'நன்னிலையதாகும் கணக்கு' எனக் கூறுகின்றனர்; இதி லும் மோனையில்லை யாதலின் இஃதும் சரியன்று. நடுநிலை யுடன் நோக்கின், மூன்றாம் அடியின் இறுதியில் 'என்பவே (என்று சொல்லுவர்) என்றிருப்பதால், மூன்றாம் அடிக்குள் ளேயே பதினெட்டு நூல்களையும் சொல்லி விட்டதாகக் கொள் வதே பொருந்தும். எனவே, நாலாவது அடியிலுள்ள 'கைந் நிலையவாம்' என்பதை, கீழ்க்கணக்கு என்பதன் அடைமொழி யாகவே கொள்ளவேண்டும். அஃதாவது, -'சிறிய அளவின வாகிய-சிறிய அளவுப்பாடல்களை உடையனவாகிய' என்னும்

பொருளில் 'கைந் நிலையவாம்' என்னும் அடைமொழி உள்ளது கைந்நிலை சிறுநிலை; எனவே, பதினெண் கீழ்க்கணக்கை அறி முகப்படுத்தும் பாடல் பின்வருமாறு இருக்கவேண்டும்:

''நாலடி நான்மணி நானாற்ப தைந்திணை முப்
பால்கடுகம் கோவை பழமொழி மாமூலம்
இன்னிலை காஞ்சியோ டேலாதிய யென்பவே
கைந்நிலைய வாங்கீழ்க் கணக்கு.'

ஏறக்குறைய இது சரியானபாடமாயிருக்கலாம். 'இன்னிலை' என்பதோடு நிறுத்திக் கொள்ளவேண்டும். இன்னிலைய, என்று பாடங் கொள்ளின், அது காஞ்சிக்கு அடைமொழியாகி இனிய இயல்புடைய காஞ்சி எனப் பொருளாகி கூடும்; எனவே அங்ஙனம் கொள்ளலாகாது. எதற்கும் அடைமொழி யில்லாத போது காஞ்சிக்கு மட்டும் அடைமொழி ஏன்? பதினெட்டு நூல்களையும் அடக்குவதற்கு இடம் நெருக்கடியாயிருக்கும் போது, தேவையில்லாமல் 'இன்னிலைய' என்ற அடை மொழியைப் போடவேண்டிய தில்லை. ஆனால், நான்காம் அடியில், கீழ்க்கணக்கு என்றால் என்ன என்று உணர்த்துவதற் காக, 'கைந்நிலையவாம்' என்னும் அடைமொழியிருக்கலாம் எனவே, இந்தப் பழைய வெண்பாவின்படி நோக்கின், பதி னெண் கீழ்க்கணக்கில் இன்னிலை என்னும் நூல் இடம் பெறவே இயற்கையான வாய்ப்பு உள்ளது. கைந்நிலை என்ற பெயரிலும் ஒருநல்ல நூல் உண்டு. அது பற்றி நமக்குக் கவலை யில்லை. இந்தப் பாடலின்படி பதினெண் கீழ்க்கணக்கைச் சேர்ந்தது இன்னிலையே யாகும். அறிஞர்கள் இதனை மேலும் ஆய்ந்து உண்மை முடிபு காண்பார்களாக!

வரிசை முறை:

பழைய வெண்பாவில் நாலடியார் முதலிடத்தையும் ஏலாதி இறுதியிடத்தையும் பெற்றுள்ளது. திருக்குறள் இடை யில் உள்ளது. இந்த வரிசை முறையே சரியானது என்று கூற முடியாது. வெண்பாவை எதுகை மோனையுடன் தளை தவறா மல் யாப்பதற்காகவே இந்த முறை பின்பற்றப்பட்டுள்ளது. எனவே, உண்மையான வரிசை முறை இன்னதுதான் என்று கூறுவதற்கில்லை. ஆயினும், தகுதி, தரம், பொருள், அளவு

முதலியவற்றை அடிப்படையாகக் கொண்டு ஒருவாறு பின்வருமாறு வரிசைப் படுத்தலாம்:

| | |
|---|---|
| 1. திருக்குறள் | 10. ஐந்திணை ஐம்பது |
| 2. நாலடியார் | 11. ஐந்திணை எழுபது |
| 3. பழமொழி | 12. திணைமொழி ஐம்பது |
| 4. திரிகடுகம் | 15. திணைமாலை நூற்றைம்பது |
| 5. நான்மாணிக்கடிகை | 14. கார் நாற்பது |
| 6. சிறுபஞ்ச மூலம் | 15. களவழி நாற்பது |
| 7. ஏலாதி | 16. இன்னா நாற்பது |
| 8. முதுமொழிக் காஞ்சி | 17. இனியவை நாற்பது |
| 9. ஆசாரக் கோவை | 18. இன்னிலை (அல்லது -கைந்நிலை) |

இந்த வரிசைமுறை முற்றமுடிந்த முடிபன்று. ஓரளவேனும் பொருத்தமாயிருக்க வேண்டும் என்று கருதி அமைக்கப்பட்ட ஒருசார் வரிசையமைப்பே இது. மற்றும், இன்னிலையும் கைந்நிலையும் ஒன்று என்று கூறுவாரும் உளர் என்னும் வியத்தகு செய்தியும் ஈண்டு அறியத்தக்கது.

காலம்:

பதினெண் கீழ்க்கணக்கு நூல்களின் காலத்தைத் திட்ட வட்டமாய் வரையறுத்துக் கூறவியலாது. இவையனைத்தும் ஒரேகாலத்தில் இயற்றப்பட்டவையல்ல. சில சங்ககாலத்திலும், சில சங்கத்தை யொட்டிய பிற்காலத்திலும் இயற்றப்பட்டன. சங்க காலத்திற்குப் பின், இந்தப்பதினெட்டையும் இணைத்துப் 'பதினெண் கீழ்க்கணக்கு' என்னும் தொகைப் பெயர் தந்துள்ளனர். இம்மட்டோடு கீழ்க்கணக்கின் காலக்கணக்கை நிறுத்திக் கொள்ளலாம்.

நூல் விவரம்:

இனி, ஒவ்வொரு நூல் பற்றிய விவரமும் முறையே சுருக்கமாக வருமாறு:—

1. திருக்குறள்: ஆசிரியர் திருவள்ளுவர்; 1330 குறள் வெண்பாக்களைக் கொண்டது; அறத்துப்பால், பொருட்

பால், காமத்துப்பால் என்னும் முப்பெரும் பிரிவு உடையது; உலகப் பொதுமறை யெனப் புகழப்படுவது; ஏறக்குறைய இருநூறு மொழிகளில் மொழிபெயர்க்கப் பெற்றிருப்பது.

2. நாலடியார்: நானூறு வெண்பாக்கள் கொண்டது; நாலடி நானூறு என்றும் வழங்கப்படுவது; திருக்குறள் போலவே அறம், பொருள், காமம் என்னும் மூன்று பிரிவு உடையது; சமண முனிவர்கள் பலர் பாடிய பாடல்களின் தொகுப்பு எனப்படுகிறது. இதனை நக்கீரர் பாடியதாக இப்போது ஒரு கருத்துச் சொல்லப்படுகிறது.

3. பழமொழி: நானூறு வெண்பாக்கள் கொண்டது; முன்றுறை யாரையனாரால் இயற்றப்பட்டது. ஒவ்வொரு பாடலின் இறுதியிலும் ஒரு பழமொழி அமைந்திருப்பது.

4. திரிகடுகம்: ஆசிரியர் நல்லாதனார். உடலுக்கு நன்மை பயக்கும் சுக்கு, மிளகு, திப்பிலி என்னும் மூன்று காரச் சரக்குகளால் ஆன திரிகடுகம் என்னும் மருந்தே போன்று, உயிர்க்கு நன்மை பயக்கும் மும்மூன்று நற்கருத்துக் களைக் கொண்ட நூறு வெண்பாக்களை உடையது. கடவுள் வாழ்த்து தனியே உள்ளது.

5. நான்மணிக்கடிகை; ஆசிரியர் விளம்பிநாகனார். நான்கு மணிகள் கொண்ட அணிகலன் போன்று, நந்நான்கு நல்ல கருத்துக்களைக் கொண்ட (கடவுள் வாழ்த்து உட்பட) நூற்றாறு வெண்பாக்களை உடையது.

6. சிறுபஞ்ச மூலம்: ஆசிரியர் காரியாசான். பஞ்ச மூலம் என்றால் ஐந்து வேர்கள் என்பது பொருள். உடலுக்கு நன்மை செய்யும் கண்டங்கத்தரிவேர், சிறு வழுதுணைவேர், சிறுமல்லி வேர், நெருஞ்சி வேர், பெருமல்லி வேர் ஆகிய ஐந்தாலான மருந்தைப் போல, உயிருக்கு நன்மை தரும் அவ்வைந்து நல்ல கருத்துக்களைக் கூறும் (கடவுள் வாழ்த்து உட்பட) தொண்ணூற்றேழு வெண்பாக்களைக் கொண்டது இந்நூல்.

7. ஏலாதி: ஆசிரியர் கணிமேதையார். ஏலம், இலவங்கம், சிறு நாவல் பூ, மிளகு, திப்பிலி, சுக்கு என்னும் ஆறு சரக்கு

கள் கொண்ட மருந்து போன்று, ஆறுஆறு நற்கருத்துகள் கூறும் நூறுபாக்கள் கொண்டது. பாயிரப்பாக்கள் தனியே இரண்டு உள்ளன.

8. முதுமொழிக் காஞ்சி: மதுரைக் கூடலூர் கிழார் இயற்றியது. காஞ்சி யென்பது உயர்ந்த மெய்யுணர்வுக் கருத்தைக் கூறுவது. ஒவ்வொன்றும் முதுமொழியாயிருத் தலின் முதுமொழிக் காஞ்சி எனப்பட்டது. இந்நூல் பத்துப் பத்துக்களை உடையது. ஒவ்வொரு பத்திலும் பத்து முதுமொழிகள் உள்ளன.

9. ஆசாரக் கோவை: ஆசிரியர் பெருவாயின் முள்ளியார். நீதி நல்லொழுக்கத்தின் தொகுப்பாதலின் ஆசாரக்கோவை எனப்பட்டது. நூறு வெண்பாக்கள் கொண்டது. இந்நூலில் பல வகை வெண்பாக்கள் உள்ளன. ஐந்தடிப் பாடல்களும் இதில் உள.

10. ஐந்திணை ஐம்பது: ஆசிரியர் மாறன் பொறையனார் முல்லை, குறிஞ்சி, மருதம், பாலை, நெய்தல் என்னும்ஐந்திணை, பற்றிப் பத்துப்பத்துப் பாடல்கள் வீதம் ஐம்பது பாடல்கள் கொண்ட அகப்பொருள் நூல் இது.

11. ஐந்திணை எழுபது: மூவாதியார் இயற்றியது. திணைக்குப் பதினான்கு பாடல்கள் வீதம் ஐந்திணைக்கும் எழு பது பாடல்கள் கொண்டது. இறுதியில் நெய்தல் திணைக்கு உரிய இரு பாடல்கள் காணப்படவில்லை.

12. திணைமொழி ஐம்பது: ஆசிரியர் கண்ணன் சேந்தனார். திணைக்குப் பத்துப் பாடல்கள் வீதம் ஐந்திணைகளுக்கும் ஐம்பது பாடல்கள் கொண்ட நூல் இது.

13. திணைமாலை நூற்றைம்பது: கணி மேதாவியார் இயற்றியது. திணைக்கு முப்பது பாடல்கள் வீதம் ஐந்திணைக் கும் நூற்றைம்பது பாடல்கள் இருப்பதோடு, குறிஞ்சி நெய்தல், முல்லை ஆகிய மூன்றிலும் ஒவ்வொரு பாடல் கூடுத லாக இருப்பதால், இந் நூலில் மொத்தம் நூற்றைம்பத்து மூன்று பாடல்கள் உள்ளன.

14. கார் நாற்பது: ஆசிரியர் மதுரைக் கண்ணங் கூத்தனார். பிரிந்து சென்ற தலைவனின் கார்காலத்து

வருகையைப் பற்றிக் கூறும் நாற்பது பாடல்கள் கொண்டது இந்நூல்.

15. களவழி நாற்பது: ஆசிரியர் பொய்கையார். சேரமான் கணைக்கால் இரும்பொறையைச் சோழன் செங்கணான் பொருது வென்ற போர்க்களச் சிறப்பைப் பற்றிய நாற்பது பாடல்கள் கொண்ட நூல் இது. பொய்கையார் களம்பாடிச் சிறைவைக்கப்பட்ட சேரனை வீடு கொண்டாராம்.

16. இன்னா நாற்பது: கபிலர் இயற்றியது. இன்னா= துன்பம்; இனிமையில்லாதவை. இனியில்லாத -துன்பம் தரத்தக்க செய்திகளைச் சுட்டிக்காட்டித் திருத்தும் நாற்பது பாடல்கள் உடையது இது, இந் நூற் பாடல்களில் 'இன்னா என்னும் சொல் நிரம்ப இடம் பெற்றிருக்கும்.

17. இனியவை நாற்பது: பூதஞ் சேந்தனார் இயற்றியது. நன்மை பயக்கும் இனிய செய்திகளைக் கூறும் நாற்பது பாடல்கள் கொண்டது இந்நூல், பாடல்களில் 'இனிது' என்னும் சொல்லை நிரம்பக் காணலாம்.

18. இன்னிலை: இந்நூலை 1915 - இல் பதிப்பித்த திரு. வ. உ. சிதம்பரம் பிள்ளையவர்கள் இந்நூற் பாடல்களைப் பொய்கையார் பாடியதாகவும், கடவுள் வாழ்த்தைப் பாரதம் பாடிய பெருந்தேவனார் இயற்றியதாகவும், மதுரையாசிரியர் என்பவர் இந்நூலைத் தொகுத்ததாகவும் தெரிவித்துள்ளார். இந்நூல் நாற்பத்தைந்து வெண்பாக்கள் கொண்டது. அறம் பொருள் இன்பம் வீடு என்னும் நாற்பொருள் பற்றியது.

மேலே பதினெட்டு நூல்கள் பற்றிய விவரங்கள் சுருக்கமாகத் தரப்பட்டுள்ளன. 'கைந்நிலை' என்னும் நூலையே ஏற்றுக் கொள்பவர்கட்காக, அதுபற்றிய விவரமும் ஒரு சிறிது வருமாறு:—

கைந்நிலை: ஐந்திணைகளைப் பற்றிய அறுபது வெண் பாக்கள் கொண்ட அகப்பொருள் நூல் இது. ஆசிரியர்: மாறோக்கத்து முள்ளி நாட்டு நல்லூர்க் காவிதியார் மகனார் புல்லங் காடனார் என்பவர்.

இதுகாறும், 'பதினெண் கீழ்க் கணக்கு' என்னும் தொகைப் பெயரை அடிப்படையாக் கொண்டு உரிய

விளக்கம் தரப்பட்டது. இனி, இந்தப் பதினெண் கீழ்க் கணக்கில் உள்ள தொகை நூல்களைத் தனித்தனியே காண்பாம்.

## 26. நாலடியார்

**பெயர்க் காரணம்:**

நான்கு அடி கொண்ட வெண்பாக்களால் ஆனநூல் ஆதலின் இது நாலடியார் எனப்பட்டது. இதில் நானூறு பாக்கள் உள்ளதால் இதனை 'நாலடி நானூறு' என்றும் வழங்குவர். தமிழரின் மறைநூல் என்ற பொருளில் இது 'வேளாண் வேதம்' என்றும் வழங்கப்படுகிறது. பதினெண் கீழ்க் கணக்கு நூல் களுள் பெரும்பாலானவை நாலடிவெண்பாக்களால் ஆனவையா யிருப்பினும், இந்நூல் மட்டும் நாலடியார் என வழங்கப்படுவதி லிருந்து இதன் தொன்மை புலப்படுகிறது. இந் நூலுக்கு முதலில் நாலடியார் என்னும் பெயர் வைத்துவிட்டதால், பின் வந்த நாலடிப் பாடல் நூல்களுக்கு இப் பெயர் வைக்க முடி யாது போயிற்று.

**நூற் பெருமை:**

இரண்டடி கொண்ட குறள் வெண்பாக்களாலான திருக் குறளோடு ஒத்த பெருமை யுடையது நாலடியார் என்னும் செய்தியை,

> ''நாலும் இரண்டும் சொல்லுக்கு உறுதி.''
> ''பழகுதமிழ்ச் சொல்லருமை நாலிரண்டில்.''
> ''நாலடி இரண்டடி கற்றவ னிடத்து
> வாயடி கையடி அடிக்காதே''.

முதலிய வழக்காறுகளால் நன்கு அறியலாம்.

**நூல் அமைப்பு**

நாலடியாரின் நானூறு பாடல்களும், திருக்குறளைப் போலவே 'வகை தொகை' செய்யப் பெற்றுள்ளன. அஃதா வது,— அறத்துப்பால், பொருட்பால், காமத்துப்பால் என

மூன்று பால்களும், ஒவ்வொரு பாலிலும் பல தலைப்புக்களும் (அதிகாரங்களும்), ஒவ்வொரு தலைப்பிலும் பத்துப் பத்துப் பாடல்களுமாக நாலடியார் வடிவமைக்கப் பெற்றுள்ளது. எனவே நாலடியாரில், பத்துப் பத்துப் பாடல்கள் கொண்ட நாற்பது தலைப்புக்கள் உள்ளன என உணரலாம்.

நூல் தொகுப்பு வரலாறு:

மதுரையில் எண்ணாயிரம் சமண முனிவர்கள் ஆளுக்கு ஒரு பாடலாக எழுதிவைத்துவிட்டுப் போன எண்ணாயிரம் பனையோலைச் சுவடிகளை, என்னவோ குப்பை என எண்ணிப் பாண்டிய மன்னன் வையையாற்றில் எறியச் செய்ய. அவற்றுள் நானூறு பாடல்கள் மட்டும் எதிர்த்து நீந்திக் கரையேறி வந்ததாகவும், அவற்றின் அருமை யுணர்ந்து அவற்றைத் தொகுத்து 'நாலடியார்' என்னும் பெயருடைய நூலாக்கியதாகவும் கதை கூறப்படுகிறது. ஆமாம்-கதையேதான் இது!

இந்தக் கதையிலிருந்து நாம் அறியக் கூடிய கருத்தாவது:— 'திருக்குறள் திருவள்ளுவர் என்னும் ஒருவராலேயே இயற்றப் பட்டதுபோல நாலடியார் ஒருவராலேயே இயற்றப்படவில்லை; பலர் இயற்றிய பாடல்களின் தொகுப்பே 'நாலடியார்'-என்பதாகும். நாலடியார், பதுமனார் என்னும் புலவரால் தொகுக்கப் பெற்றதாகச் சொல்லப் படுகிறது. எனவே, நாலடியார் ஒரு 'தொகைநூல்' என்பது போதரும்.

புதுக் கொள்கை:

'பலர் பாடல்களின் தொகுப்பு நூல் நாலடியார்' என்னும் கருத்து இதுகாறுங் கூறப்பட்டு வந்தது. இப்போது ஒரு புதுக் கருத்துப் புகலப் படுகிறது. அஃதாவது,— 'நாலடியார் பலர் பாடல்களின் தொகுப்பு அன்று; நக்கீரர் என்னும் ஒரே புலவரால் இயற்றப்பெற்ற நூலே நாலடியார்; இந்த உண்மை யாப்பருங்கல விருத்தியுரையிலிருந்து அறியப்பட்டுள்ளது'-என்பதே அந்தப் புதுக் கருத்தாகும்.

யாப்பருங்கல விருத்தியுரையால் கிடைக்கும் குறிப்புத் தவறாகவும் இருக்கலாம். பொதுவாக நாலடியாரின் அமைப்பினை நோக்குங்கால், நானூறு பாடல்களும் ஒருவராலேயே

பாடப்பட்டனவாகத்தோன்றவில்லை.சிலகருத்துக்கள் திரும்பத் திரும்பச் சொல்லப்பட்டுள்ளன. சில கருத்துக்கள் முரணா யுள்ளன. திருக்குறளில் ஒவ்வொரு தலைப்பையும் சேர்ந்த பத்துப் பத்துப் பாடல்களும் அந்தந்தத் தலைப்போடு பொருந்தி யுள்ளன. ஆனால், நாலடியார் முழுவதையும் கூர்ந்து நோக்கின் சில பாடல்கள் தலைப்போடு பொருந்தாதிருப்பதை அறியலாம். இதிலிருந்து தெரிவதாவது:— 'நானூறு உதிரிப் பாடல்களையும் பத்துப் பத்துப் பாடல்கள் வீதம் எப்படியாவது நாற்பது தலைப்புக்களின் அடக்கிவிட வேண்டும் என ஒருவர் திட்டமிட்டுச் செய்து தொடுத்தமைத்துள்ளார்' - என்பதுதான். அறிஞர்கள் மிகவும் ஆராய வேண்டிய செய்தி இது.

ஏன், யாப்பருங்கல விருத்தியுரைப் பகுதியையே சிறிது ஆராய்ந்து பார்ப்போமே! யாப்பருங்கல விருத்தியுரையின் பவானந்தம் பிள்ளை பதிப்பில், செய்யுளியலிலுள்ள 'செப்பல் இசையன வெண்பா' என்னும் (4 – ஆம்) நூற்பாவின் உரையிடையே, சில வெண்பாக்கள் எடுத்துக்காட்டுக்களாகத் தரப்பட்டுள்ளன. இறுதி வெண்பா, 'அரக்காம்பல் நாறும் வாய்' என்னும் நாலடியார்ப் (396) பாடலாகும். இதன் கீழ்ப் பின் வருமாறு எழுதப்பட்டுள்ளது:

"இன்னவை பிறவும் நக்கீரர் நாலடி நானூற்றில் வண்ணத்தால் வருவனவும் எல்லாம் தூங்கிசைச் செப்பலோசை, பிறவும் அன்ன."

இந்தப் பகுதியில், 'நக்கீரர் நாலடி நானூறு' என்றிருப்பதைக் கொண்டு, நானூறு பாடல் கொண்ட நாலடியாரை நக்கீரர் இயற்றினார் என்று ஒரு சாரார் கூறுகின்றனர். இந்த உரைப் பகுதியை ஊன்றி நோக்க வேண்டும். 'இன்னவை பிறவும்; என்னும் தொடர், மேலே உள்ள நாலடியார்ப் பாடல் முதலியவற்றைக் குறிக்கிறதெனவும், 'நக்கீரர் நாலடி நானூற்றில் வண்ணத்தால் வருவனவும்; என்னும் தொடர் மேலேயுள்ள நாலடியார்ப் பாடல் முதலிய வற்றைக் குறிக்காமல் வேறு ஏதோ ஒரு நூற்பாடலைக் குறிக்கிறதெனவும் உய்த்துணரலாம்

இந்த உரைப் பகுதியேகூட, தமிழக அரசின் கீழைக்கலை

ஓலைச் சுவடி நூலக நிறுவனத்தால் (Government Oriental Manuscritps Library, Madras)1960 - இல் வெளியிடப்பட்டுள்ள பதிப்பில், 'நக்கீரர்' என்னும் பெயரின்றி,

"இன்னவை பிறவும் நாலடி நானூற்றில் வண்ணத்தால் வருவனவும் எல்லாம் தூங்கிசைச் செப்பலோசை; பிறவும் அன்ன.

என்றே உள்ளது. எனவே, சுவடிக்குச் சுவடி பாட வேறு பாடு உள்ளமை புலப்படலாம். யாப்பிலக்கணம் பற்றி வெண் பாவால் இயற்றப் பெற்ற நக்கீரர் நாலடி நாற்பது என்னும் நூல் ஒன்று யாப்பருங்கல விருத்தியுரையால் நன்கு அறியப் பட்டுள்ளது. அந்த நினைவை வைத்துக்கொண்டு, சுவடி பெயர்த்து எழுதியவர், நாலடி நானூறு என்பதையும் 'நக்கீரர் நாலடி நானூறு, என எழுதி விட்டிருப்பாரா? ஒருவேளை சமண முனிவர் எழுதிய நாலடியாரினும் வேறானதாய், நக்கீர ரால் 'நாலடி நானூறு' என்னும் பெயரில் வேறொரு நூல் எழுதப்பட்டிருக்கக் கூடுமா? சிலர் இவ்வாறு கூறியுமுள்ளனர். அஃதாவது,—நானூறு வெண்பாக்களால் நக்கீரர் யாப்பிலக்கண நூலொன்று இயற்றியுள்ளார்-என்று கூறுகின்றனர். இஃது உண்மையாயிருக்க முடியுமா? 'நாலடி நாற்பது; என்னும் பெய ரில் நாற்பது வெண்பாக்களால் நக்கீரர் இயற்றியுள்ள யாப்பிலக்கண நூலை, 'நாலடி நானூறு' எனத் திரிபாக உணர்ந்துகொண்டு இவ்வாறு கூறுகின்றனரா?மேலும், 'நக்கீரர் அடிநூல்' என்னும் பெயரில் யாப்பிலக்கண நூல் ஒன்று இருப்ப தாகத் தொல்காப்பிய உரைகளிலிருந்து அறியப்படுகிறது; இந் நூலைச் சேர்ந்த 'ஐஞ்சீரடுக்கலும்' என்னும் நூற்பா தொல் காப்பிய உரைகளில் எடுத்தாளப் பட்டுள்ளது-என்னும் செய்தி யும் ஈண்டு ஒப்புநோக்கற்பாலது.

மற்றும், நக்கீரர் ஒருவரா பலரா என்ற சிக்கலும் ஈண்டு எழுகிறது. எட்டுத் தொகை, பத்துப் பாட்டில் பாடல்கள் இயற்றியுள்ள நக்கீரரும், நாலடியார் இயற்றியதாகக் கூறப் படும் நக்கீரரும், நாலடி நாற்பது என்னும் யாப்பிலக்கண நூல் எழுதியதாகக் கூறப்படும் நக்கீரரும், நாலடி நானூறு என்னும் யாப்பிலக்கண நூல் எழுதியதாகச் சொல்லப்படும்

நக்கீரரும், 'நக்கீரர் அடி நூல்' என்னும் யாப்பிலக்கணம் எழுதிய நக்கீரரும் ஒருவரா, அல்லது வெவ்வேறானவரா?

மற்றும், நாலடியாரை நக்கீரர் இயற்றியதாகக் கூறுபவர்கள். "இந்த நக்கீரர், பத்துப் பாட்டுள் ஒன்றாகிய திருமுருகாற்றுப் படையை இயற்றிய நக்கீரர் அல்லர்; இவர் ஒரு சமண முனிவர்" என்று கூறுகின்றனர். நாலடியார் இயற்றிய நக்கீரர் ஒரு சமண முனிவர் ஆதலின், நாலடியாரைச் சமண முனிவர் இயற்றியதாகக் கூறி வந்தனர்; பின்னர்ச் சமண முனிவர்கள் இயற்றியதாகக் கூறத் தொடங்கிவிட்டனர். என்று இக்கொள்கையினர் கருதுகின்றனர்.

எது சரி? எது தவறு? ஒரே குழப்பமாயுள்ளது. இங்கே இன்னொரு கருத்தும் கூறுதற்கு இடமுண்டு. யாப்பருங்கலம்-உறுப்பியலில் உள்ள, 'இரண்டாம் எழுத்தொன்றியைவதே எதுகை' என்னும் (4-ஆம்) நூற்பாவின் விருத்தியுரையிடையே

(இன்னிசை வெண்பா)

"ஊசி யறுகை யுறுமுத்தம் கோப்பனபோல்
மாசி யுகுபனிநீர் வந்துறைப்ப-மூசும்
முலைக்கோடு புல்லுதற்கொன் றில்லாதான் காண்மோ
விறக்கோடு கொண்டெ றிக்கின் றேன்.'

இந் நக்கீரர் வாக்கினுள் கடையிரண்டையும் மூன்றாம் எழுத்து ஒன்றி வந்தவாறு கண்டு கொள்க."—

என்னும் உரைப்பகுதி உள்ளது. மேலே உள்ள பாட்டு 'நக்கீரர் வாக்கு' எனக் கூறப்பட்டுள்ளது. இந்த வெண்பா அகப்பொருள் பற்றியதாகும். இவ்வாறு நக்கீரர் நானூறு வெண்பாக்கள் பாடி, 'நாலடி நானூறு, என்னும் பெயரில் ஒரு நூல் படைத்திருக்கலாம். இந்த நக்கீரர் நாலடி நானூறு என்னும் நூலை யாப்பருங்கல விருத்தியுரை சுட்டி யிருக்கலாம் அங்ஙனமாயின், இந்த நாலடி நானூறு வேறு என்பதும் உய்த்துணரப்படலாம்.

நடுநிலையுடன் பல கோணங்களிலும் நின்று ஆராய்ந்து நோக்குங்கால், நாலடியார் பலர் பாடிய பாடல்களின் தொகுப்பு நூல் என்றே தோன்றுகிறது.

# 27. பழமொழி

பதினெண் கீழ்க்கணக்கு நூல்களுள் நாலடியார்; ஒன்று மட்டுமே உதிரிப்பாடல்களின் தொகுப்பு நூலாகும்; மற்றப் பதினேழும் ஒவ்வொருவரால் இயற்றப்பெற்ற தனித்தனி முழு நூல்களாகும். நாலடியாரும் இப்போது நக்கீரர் தலையில் கட்டப்பட்டு வருகிறது. இந் நிலையில், பதினெண் கீழ்க்கணக்கில் தொகை நூல்களாகக் குறிப்பிடத்தக்கவை வேறு இல்லையெனினும், ஏதேனும் ஒவ்வொரு கோணத்தில் சிலநூல்களைத் தொகைநூல்களாகக் குறிப்பிடலாம்.

இந்த அடிப்படையில், பழமொழி என்னும் நூலை ஒரு கோணத்தில் தொகைநூலாகக் கூறலாம். அஃதாவது, பல உதிரிப் பாடல்களின் தொகுப்பு அன்று; பல பழமொழிகளின் தொகுப்பு இந்நூல். இந்நூலில் நானூறு பாடல்கள் உள்ளனவாதலின் இது 'பழமொழி நானூறு' எனவும் வழங்கப்படும். ஒரு பாடலுக்கு ஒரு பழமொழி வீதம், நானூறு பாடல்களிலும் நானூறு பழமொழிகள் அமைத்து விளக்கப்பட்டுள்ளன. எனவே, இந்தக் கோணத்தில், நானூறு பழமொழிகளின் தொகுப்பாகிய இந்நூலை ஒரு தொகை நூல் எனலாம். இலத்தீன், பிரெஞ்சு, ஆங்கிலம் ஆகிய மொழிகளில் உள்ள பழமொழிகளின் தொகுப்பு நூல்கள், தொகைநூல்களின் வரிசையில் இடம் பெற்றிருப்பதுபற்றி முன்போரிடத்தில் விளக்கப்பட்டிருப்பது ஈண்டு ஒப்புநோக்கற்பாலது.

நானூறு வெண்பாக்கள் கொண்ட இந்நூலின் ஆசிரியர் முன்றுறை யரையனார் என்பவர். சங்க காலத்திலேயே நானூறு பழமொழிகளை நானூறு பாடல்களால் விளக்கியிருப்பதைக் கொண்டு, பண்டைக் காலத்தில் தமிழ் மொழியில் இருந்த பழமொழிச் செல்வவளத்தின் செழிப்பினை அறியலாம்.

## 28. இன்னிலை

இன்னிலை என்னும் நூல் பொய்கையார் இயற்றிய நாற்பத்தைந்து வெண்பாக்களைக் கொண்டது. இதற்குப் பாரதம் பாடிய பெருந்தேவனார் இயற்றிய கடவுள் வாழ்த்துப் பாடல் ஒன்றும் உண்டு. 1915-இல் இந்த நூலைப் பதிப்பித்த வ.உ.சிதம்பரம் பிள்ளையவர்கள், இந்த நூலை 'மதுரையாசிரியர்' என்பவர் தொகுத்ததாகக் குறிப்பிட்டுள்ளார்கள். இதைக் கொண்டு இந்நூலை 'ஒரு தொகைநூல்' எனலாம். ஆனால், இந்நூற் பாடல்கள் பலரால் பாடப் பட்டவை யல்ல; பொய்கையார் என்னும் ஒருவராலேயே இயற்றப் பட்டவை-என்பதாக அறிவிக்கப்பட்டுள்ளது. இந்த நிலையில், இந்நூலை ஒருதொகை நூல் என்பது எவ்வாறு?

ஒருவேளை,— பொய்கையார் இயற்றிய பல உதிரிப் பாடல்களிலிருந்து சிறந்த நாற்பத்தைந்து நல்ல பாடல்களை மதுரையாசிரியர் தேர்ந்தெடுத்துத் தொகுத்திருக்கலாம். மற்றும், பொய்கையார் பாடல்களுடன், பாரதம் பாடிய பெருந்தேவனாரின் கடவுள் வாழ்த்துப் பாடலையும் மதுரை யாசிரியர் சேர்த்துத் தொகுத்ததால், அவர் இந்நூலின் தொகுப்பாசிரியர் எனப்பட்டார் போலும்? எப்படியோ, இந்நூலுக்குத் தொகுப்பாசிரியர் என ஒருவர் சுட்டப்பட்டிருப்பதால், ஒரு வகையில் இந்நூலையும் ஒரு தொகை நூல் எனலாம். இந் நூல் அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்கினைப் பற்றிக் கூறுவதாகும்.

## 29. ஆசாரக் கோவை

பெருவாயின் முள்ளியார் இயற்றிய நூறு பாடல்களைக் கொண்ட ஆசாரக் கோவை ஒரு தொகை நூல் அன்று; ஆயினும், நூலின் பெயரில் உள்ள 'கோவை' என்னும் சொல் சிறிது எண்ணத்தைக் கிளறுகிறது. தொகை நூலைக் கோவை

யென்னும் சொல்லால் குறிக்கும் மரபுண்டு. எட்டுத் தொகை நூல்கள் 'எண் கோவை' என வழங்கப்பட்டிருப்பதும், அக நானூற்றில் 'நித்திலக்கோவை' என ஒரு பிரிவு இருப்பதும், பிற்காலத் தொகை நூல்கள் சில 'கோவை' என்னும் பெயரால் வழங்கப்படுவதும் ஈண்டு நினைவுகூரத் தக்கன. ஆனால், அக் கோவை நூல்களைப்போல ஆசாரக் கோவை பலர் பாடிய பாடல்களின் கோவையாகிய தொகுப்பன்று. நல்லொழுக்கங் களைத் (ஆசாரங்களைத்) தொகுத்துக் கூறுவதால் இஃது ஆசாரக் கோவை எனப்பட்டது. எனவே, இந்த நூலைப் பலர் பாடிய பல உதிரிப் பாடல்களின் தொகுப்பாகக் கொள்ளாமல், பல நல்லொழுக்கங்களின் தொகுப்பு நூலாகக் கொள்ள வேண்டும்.

பிற நூல்கள்

''தொகைநிலைச் செய்யுள் தோன்றக் கூறின்
ஒருவர் உரைத்தவும் பல்லோர் பகர்ந்தவும்
பொருளிடம் காலம் தொழிலென நான்கினும்
பாட்டினும் அளவினும் கூட்டிய வாகும்.''

என்னும் தண்டியலங்காரப் பொதுவணியியல் (5-ஆம்) நூற் பாவின் கீழ்ச் சுப்பிரமணிய தேசிகர் எழுதிய உரையிடையே உள்ள,

''அவற்றுள், ஒருவரால் உரைக்கப்பட்டது திருவள்ளுவப் பயன் (திருக்குறள்); பலரால் உரைக்கப்பட்டது நெடுந்தொகை: இஃது எல்லாத் தொகைக்கும் பொதுவிலக்கணம். பொருளால் தொகுத்தது புறநானூறு இடத்தால் தொகுத்தது களவழி நாற்பது. காலத்தால் தொகுத்தது கார் நாற்பது. தொழிலால் தொகுத்தது ஐந்திணை. பாட்டால் தொகுத்தது கலித் தொகை. அளவால் தொகுத்தது குறுந்தொகை. இவை சிறப் பிலக்கணம்''—

என்னும் உரைப்பகுதியைக் காணுங்கால், திறக்குறள், களவழி நாற்பது, கார் நாற்பது, நான்கு ஐந்திணை நூல்கள் முதலிய கீழ்க்கணக்கு நூல்களையும் ஒவ்வொரு கோணத்தில் தொகை நூலாகச் சொல்லத் தோன்றும். இவ்வாறு பார்த் தால், எல்லாமே தொகை நூல்களாகி, எல்லையற்றுப் போகு மாதலின் இம் மட்டில் விடுப்போம்.

# 30. திருவள்ளுவ மாலை

### தனி நூற்பெருமை

திருக்குறளை இயற்றிய திருவள்ளுவரின் சிறப்புக்களைக் கூறும் உதிரிப் பாடல்களின் தொகுப்பே திருவள்ளுவ மாலை யாகும். இந் நூலில், புலவர்கள் ஐம்பத்தைவர் இயற்றிய ஐம்பத்தைந்து பாடல்கள் தொகுக்கப் பெற்றுள்ளன.

ஒரு நூலின் சிறப்புக்களைப் பாராட்டி கூறும் பாடல் களைச் சிறப்புப் பாயிரம் என வழங்குதல் மரபு. அவ்வாறு பார்த்தால், திருவள்ளுவ மாலையைத் திருக்குறளின் சிறப்புப் பாயிரம் எனக் கூறவேண்டும். ஆனால், அங்ஙனம் கூறப்பெறா மல், திருவள்ளுவ மாலை என்னும் தனி நூற் பெயராக வழங்கப்படும் அளவிற்கு இத் தொகுப்பு உயர்ந்துள்ளது.

திருவள்ளுவ மாலையில் உள்ள ஐம்பத்தைந்து பாடல்களுள் முதல் பாடல் அசரீரி என்ற பெயரிலும், இரண்டாம் பாடல் நாமகள் என்ற பெயரிலும் உள்ளன. மற்ற ஐம்பத்து மூன்று பாடல்களும் இறையனார் முதல் ஔவையார் ஈறாக உள்ள ஐம்பத்து மூன்று சங்கப் புலவர்களால் பாடப்பெற்றவை யாகும். 'முதல் இரு பாடல்களும் முறையே அசரீரியாகவும் நாம களுடையதாகவும் இருக்க முடியாது; யாரோ ஒருவரால் கற் பனையாக எழுதிச் சேர்க்கப்பட்டவையே இவை'--என்பது சிலர் கருத்து. இந்தக் கருத்து உண்மையாகவும் இருக்கலாம். இருந்து போகட்டுமே! சங்கப் புலவர்கள் - பலருடைய பாராட்டுப் பாடல்களைக் கண்ட யாரோ ஒருவர் அசரீரி பெயராலும் நாமகள் பெயராலும் புகழ்ச்சிப் பாடல்கள் புனைந்துவிட் டார் போலும்!

### தொகுப்பு நூலே

இவ்விரு பாடல்கள் தவிர, மற்றப் பாடல்களையும் பிற் காலத்தார் யாரோ ஒருவர் இயற்றிப் பெருமைக்காகச் சங்கப் புலவர்கள் பெயர்களைப் பொய்யாகச் சூட்டிவிட்டார் எனச் சிலர் கூறுகின்றனர். இந்தக் கருத்தை ஏற்றுக் கொள்வதற் கில்லை. கபிலர், பரணர், நக்கீரர், மாமூலனார், சீத்தலைச்

சாத்தனார், மருத்துவன் தாமோதரனார், பொன்முடியார், ஔவையார் முதலிய சங்கப் புலவர்கள் இயற்றிய பாராட்டுப் பாடல்களின் தொகுப்பே திருவள்ளுவ மாலையாகும். இப் பாடல்களுக்குள் சிற்சில வகையான கருத்து வேறுபாடுகள் இருப்பதால், இவை அனைத்தையும் ஒருவரே இயற்றியிருக்க முடியவே முடியாது. பல்வேறு புலவர்கள் இயற்றியிருப்பதால் தான் கருத்து வேறுபாடுகள் காணப்படுகின்றன. கருத்து வேறு பாடு என்றால், திருவள்ளுவரின் பெருமையைச் சொல்வதில் கருத்து வேறுபாடு இல்லை; திருக்குறளின் அமைப்புப் பற்றி வெளியிடுவதிலேயே கருத்து வேறுபாடுகள் காணப்படுகின்றன

திருக்குறளின் அமைப்பினைப் பற்றிக் கூறியிருப்பதில் சங்கப் புலவர்கள் 'சனி யீசுவரன் கோயில் சாமிகள்' போல் காட்சி யளிக்கின்றனர். அக் கோயிலில் ஒன்று கிழக்கே பார்க்கும்; மற்றொன்று மேற்கே பார்க்கும்; இன்னொன்று தெற்கே பார்க்கும்; மற்றொன்று வடக்கே பார்க்கும். இவ் வாறே, இப் புலவர்களும் பல்வேறு வகையான கருத்துக்களை வெளியிட்டுள்ளனர். அவை புலவர் பெயர்களுடனும் பாடல் எண்களுடனும் முறையே வருமாறு;—

(1) திருக்குறள் அறம், பொருள், இன்பம் என்னும் முப்பிரிவுகளுடையது. (கல்லாடர்-9; சீத்தலைச் சாத்தனார்-10; மருத்துவன் தாமோதரனார்-11; நாகன் தேவனார் - 12; கோதமனார்-15; முகையலூர்ச் சிறுகருத் தும்பியார் - 19; பாரதம் பாடிய பெருந்தேவனார்-30; உருத்திர சன்ம கண்ணர் -31; உறையூர் முது கூற்றனார்-39; அக்காரக் கனி நச்சுமனார் -46; தேனீக் குடிக் கீரனார்-49; ஆலங்குடி வங்கனார்-53.)

(2) திருக்குறள் அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்கு பிரிவுகளுடையது. (நக்கீரனார் - 7: மாமூலனார் - 8 சிறு மேதாவியார்-20; நரி வெரூஉத் தலையார் - 33; இழிகட் பெருங்கண்ணனார் - 40)

(3) திருவள்ளுவர் மூன்றிலேயே நான்கையும் அடக்கியிருக் கிறார். (தொடித்தலை விழுத்தண்டினார்-22; களத்தூர்க் கிழார்-44).

(4) திருவள்ளுவர் வேதக் கருத்தைத் தமிழில் எழுதினார். (உக்கிரப் பெருவழுதியார் - 4; காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக் கண்ணனார்-28; மதுரைப் பெரு மருதனார் - 37; செயலூர்க் கொடுஞ் செங்கண்ணனார்-42).

(5) திருவள்ளுவர் திருக்குறளைத் தாமாகவே, தம்சொந்த அறிவு-பட்டறிவுத் திறமையின் துணைகொண்டே செய்தார். (நக்கீரனார்-7.)

(6) திருக்குறளின் முதலிலுள்ள பாயிரம் என்னும் பகுதியே வீட்டுப்பால் ஆகும். (சிறு மேதாவியார்-20.)

(7) நான்கையும் இன்பம் (காமம்), பொருள், அறம், வீடு என்னும் முறையில் வரிசைப் படுத்தி யமைத்தல். (நரிவெரூஉத் தலையார் - 33.)

(8) பொருட்பால் ஏழு பிரிவுகளையுடையது. (தொடித் தலை விழுத்தண்டினார்-22; போக்கியார் - 26). ஆனால், உரையாசிரியர்களுள் மணக்குடவர் ஆறு பிரிவாகவும் பரிமேலழகர் மூன்று பிரிவாகவும் பிரித்துக் கொண்டுள்ளனர்.

(9) காமத்துப்பால் மூன்று பிரிவுகளுடையது. (தொடித் தலை விழுத்தண்டினார் - 22; மோசிகீரனார்-27). ஆனால், உரையாசிரியர்கள் இருவரும் இரண்டாகப் பிரித்துள்ளனர்.

(10) ஒரு கடுகைத் துளைத்து அதனுள் ஏழு கடலைப் புகட்டினாற் போன்றது திருக்குறளின் கருத்துச் செறிவு என இடைக்காடனார் கூறியுள்ளார் (பாடல் - 54). ஆனால், ஓர் அணுவைத் துளைத்து அதனுள் ஏழுகடலைப் புகட்டினாற் போன்றது குறளின் கருத்துச் செறிவு என ஒளவையார் கூறியுள்ளார் (பாடல் - 55).

புலவர்க்குப் புலவர் மாறுபட்டுக் கூறியுள்ள பத்துக் கருத்துக்கள் மேலே எடுத்துக் காட்டப்பட்டுள்ளன. எல்லாப் பாடல்களையும் ஒருவரே இயற்றியிருப்பின், இவ்வளவு மாறுபாடுகட்கு இடம் இருக்க முடியுமா? இதனை நன்கு எண்ணிப் பார்க்கவேண்டும். எனவே, திருவள்ளுவ மாலை ஒருவர் இயற்றியதன்று; பலர் இயற்றிய பாடல்களின் தொகுப்பு நூலே- என்பது நன்கு தெளிவாகும்.

திருவள்ளுவரின் காலத்தைக் கடைச்சங்க காலத்திற்குப் பின்னுக்குத் தள்ளுபவர் சிலர், 'கடைச் சங்கப் புலவர்கள் தமக்குப் பிற்பட்ட திருவள்ளுவரைப் புகழ்ந்து பாடியிருக்க முடியாது; பிற்காலத்தில் எவரோ பாடிய பாடல்களைச் சங்கப் புலவர்களின் பெயரால் தொகுத்துவிட்டனர்'— எனக் கூறுகின்றனர். இவர்களை நாம் திருத்த முடியாது; திருக்குறள் சங்க காலத்தைச் சேர்ந்த நூல் என்னும் உண்மையான கொள்கையில் நாம் உறுதியாக நிற்போமாயின், இவர் தம் கருத்து அடிபட்டுப் போகும்.

அகச் சான்று:

திருவள்ளுவ மாலைப் பாடல்கள் சங்க காலத்திலேயே-சங்கப் புலவர்களாலேயே இயற்றப்பெற்றவை என்பதற்குத் திருவள்ளுவ மாலையிலிருந்தே அகச்சான்றுகள் தர முடியும். திருவள்ளுவர் வேதத்தின் கருத்தைத் தமிழில் எழுதினார் என்னும் பொருளில், 'நான்மறையின் மெய்ப்பொருளை முப்பொருளா' (4) என உக்கிரப் பெருவழுதியாரும், 'மெய்யாய வேதப் பொருள் விளங்க' (28) எனக் காரிக் கண்ணனாரும். வேத விழுப்பொருளை வெண்குறளால்' (37) என மதுரைப் பெரு மருதனாரும், 'வேதப் பொருளை விரகால் விரித்து' (42) எனச் செயலூர்க் கொடுஞ் செங்கண்ணனாரும் கூறியுள்ளனர். ஆனால் நக்கீரரோ, 'தானே முழுதுணர்ந்து தண் தமிழின் வெண் குறளால்' (7) என, திருவள்ளுவர் தாமாகவே தண் தமிழில் திருக்குறள் இயற்றினார் எனக் கூறியுள்ளார். தமிழைத் தாழ்த்திப் பேசிய ஒருவன் சாகுமாறு பாடிய நக்கீரரின் தமிழ்ப் பற்று இந்தப் பாடலில் பளிச்சிட்டுள்ளது. எனவே, இந்தப் பாடலை நக்கீரரேதான் பாடியிருக்க வேண்டும். மற்றுமொரு சான்று: திருவள்ளுவ மாலையில் மருத்துவன் தாமோதரனார்,

''சிந்திநீர்க் கண்டம் தெறிசுக்குத் தேனளாய்
மோந்தபின் யார்க்கும் தலைக்குத்தில்—காந்தி
மலைக்குத்து மால்யானை வள்ளுவர் முப் பாலால்
தலைக்குத்துத் தீர்வுசாத் தற்கு''

எனப் பாடியுள்ளார். இவர் மருத்துவன் தாமோதரனார் என மருத்துவராதலின் வழங்கப்படுகிறார். தமது பெயருக்கும் தொழி

லுக்கும் ஏற்பவே, இவர் இப்பாடலில் தலைநோய் மருந்தைப் பற்றிக்கூறியுள்ளார். எனவே இப்பாடல் இவர் இயற்றியதே யாகும் என்பது தெளிவு. மேலும், சங்கப்புலவராகிய சாத்த னார்க்குத் திருக்குறளைக் கேட்டதும் தலைநோய் தீர்ந்து விட்டதாக இப் பாடல் அறிவிக்கிறது. எனவே, சங்க காலத்தி லேயே திருக்குறள் இயற்றப்பட்ட உண்மை தெற்றென விளங் கும்.சாத்தனாரது பாடலும் திருவள்ளுவ மாலையில் உள்ளது. எனவே,இன்னபிற அகச் சான்றுகளால், திருவள்ளுவ மாலைப் பாடல்கள் சங்க ாலத்திலேயே – சங்கப் புலவர்களாலேயே இயற்றப் பெற்றன எனத் தெளிவாக நம்பலாம்.

**தொகுப்பாசிரியர்:**

திருவள்ளுவரின் பெருமையைக்கூறும் உதிரிப்பாடல்களைத் 'திருவள்ளுவ மாலை' என்னும் பெயரில் தொகுத்தவர் இன் னார் எனத் தெரியவில்லை. இந்தத் தொகுப்பு முயற்சி குறிப் பிட்ட ஒருவருடையதாக இல்லாமல், மொத்தத்தில் சங்கத் தாருடையதாகவும் இருந்திருக்கலாம், திருக்குறளின் பெரு மையை ஏற்றுக்கொண்ட சங்கப் புலவர்கள் பலர் அதனைப் பாராட்டிப் பாடல் இயற்றினர். அவற்றைச் சங்கத்தார் தொகுத்துத் 'திருவள்ளுவ மாலை' என்னும் பெயரில் திருக்குறளின் சிறப்புப் பாயிரமாக ஆக்கியிருக்கலாம். ஒரு வேளை, இந்த முயற்சியை ஒருவரே மேற்கொண்டிருப்பினும், அதற்குச் சங்கப் புலவர்களின் ஒத்துழைப்பு இருந்திருக்கக் கூடும். மற்றும், திருவள்ளுவர் காலத்திலேயே இந்தப் பாடல் கள் சங்கப் புல்வர்களால் இயற்றப்பட்டிருப்பினும், பிற்காலத் திலேதான் இவை திருவள்ளுவமாலை என்னும் பெயரில் ஒரு நூலாகத் தொகுக்கப் பெற்றன – என்று கூறுவாரும் உளர். எது எப்படி யிருந்த போதிலும், பலர் பாடிய பாடல்களின் தொகுப்பே திருவள்ளுவ மாலை என்பதில் ஐயமில்லை.

**மாலையின் மாண்பு**

திருவள்ளுவ மாலைப் பாடல்களுள் இறுதியிலுள்ள இடைக் காடர் பாடலும் ஔவையார் பாடலும் குறள் வெண்பாக்க ளால் ஆனவை; மற்றவை நேரிசை வெண்பாக்களால் ஆனவை. இடைக்காடரும் ஔவையாரும் திருக்குறளின் கருத்துச் செறி

வைப் போட்டிபோட்டுச் சிறப்பித்துள்ளனர். திருக்குறளுக்கு எவ்வளவு பெருமை உண்டோ அவ்வளவு பெருமையினையும் சங்கப் புலவர்கள் கூறத் தவறவில்லை. திருக்குறள் இப் பொழுது என்னென்ன சிறப்புக்கள் பெற்றுள்ளதோ-எவ்வெவ் வகையில் உலகத்தாரால் பாராட்டிப் பயன்படுத்தப் படுகின் றதோ-அவை யனைத்தையும் சங்கப் புலவர்கள் அப்போதே முன்கூட்டி பறிந்து வைத்துத் திருவள்ளுவ மாலையில் அறிவித் துள்ள அரும் பெருந்திறனைத் திருவள்ளுவ மாலையைக் கற்பவர்கள் நன்கறிவர்.

''என்றும் புலராது யாணர்நாட் செல்லுகினும்
நின்றலர்ந்து தேன்பிலிற்று நீர்மைய தாய்''
(இறையனார்—3);

''வள்ளுவரும் தங்குறள்வெண் பாவடியால் வையத்தார்
உள்ளுவவெல் லாம் அளந்தார் ஓர்ந்து''—(பரணர்:6);

''தந்தான் உலகிற்குத் தான் வள்ளுவனாகிய''-
(காரிக் கண்ணனார்—28);

''வள்ளுவர் உலகம் கொள்ள மொழிந்தார் குறள்''-
(நரி வெரூஉத் தலையார்—33);

''...உலகடைய உண்ணுமால்
வண்டமிழின் முப்பால் மகிழ்ந்து''-
(ஆலங்குடி வங்கனார்—53).

இந்தப் பாடற் பகுதிகளால், திருக்குறள் என்றும் அழி யாத புத்தம்புதிய உலகப் பொதுநூல் என்பது புலப்படும். இத்தகைய சரியான கணிப்பின் வாயிலாகத் திருவள்ளுவ மாலையின் மாண்பு மிகவும் உயர்ந்து காணப்பெறுகிறது.

# 31. ஆசிரிய மாலை

நூல் அறிமுகம்:

கடைச் சங்க காலத்தை யடுத்த நூல்களுள் ஒன்றாக ஆசிரிய மாலையைக் குறிப்பிடலாம். இது பல ஆசிரியப்பாக்

களின் தொகுப்பு நூல் என்பது பெயரிலிருந்தே தெரிகிறது. பலர் பாக்களின் தொகை நூலாகக் கருதப்படும் இந்நூல் இப்பொழுது முழுவதும் கிடைக்கவில்லை, பதினைந்தாம் நூற்றாண்டிலோ அல்லது அதற்கு முன்போ தொகுக்கப்பட்டதாகக் கருதப்படும் புறத்திரட்டு என்னும் நூலில், ஆசிரிய மாலை எனப் பெயர் குறிப்பிடப்பட்டுப் பதினாறு பாடல்கள் இடம் பெற்றுள்ளன. இந்தப் புறத்திரட்டு என்னும் தொகை நூல் இல்லையேல் ஆசிரிய மாலை என்னும் நூற் பெயரை அறிந்து கொண்டிருக்க முடியாது.

புறத்திரட்டில் உள்ள ஆசிரிமாலைப் பாடல்கள் அறன் வலியுறுத்தல், தவம், நிலையாமை, கொடுங்கோன்மை, நிரை கோடல், இராமகாதை முதலிய பல்வேறு பொருள்களைப் பற்றியனவாயிருத்தலின், பல்வேறு காலத்தில் பல்வேறு இடங்களில் வாழ்ந்த புலவர்கள் பலரால் இயற்றப்பெற்ற பல உதிரி ஆசிரியப் பாக்களின்தொகுப்பு நூல் இது - என்னும் செய்தி உறுதியாகிறது. வெண்பாவால் ஆன புறப் பொருள் வெண்பாமாலை என்னும் நூல் 'வெண்பா மாலை' என வழங்கப்படுவது போல, ஆசிரியப் பாவாலான இந்நூல் 'ஆசிரிய மாலை' என வழங்கப்பட்டுள்ளது.

**மேற்கோள் ஆட்சி:**

ஆசிரிய மாலைப் பாடல்களைத் தொல்காப்பிய உரைகளில் மேற்கோளாக எடுத்தாண்டுள்ள உரையாசிரியர்கள் நூற் பெயரைக் குறிப்பிடவில்லை. தொல்காப்பியம் - புறத்திணையியலில், 'கூதிர்வேனில்' என்னும் நூற்பாவின் இடையேயுள்ள 'எட்டு வகை நுதலிய அவையகத்தானும்' என்னும் பகுதிக்கு விளக்கம் கூறியுள்ள இளம்பூரணர், 'குடிப்பிறப் புடுத்து' என்னும் ஆசிரிய மாலைப் பாடலை மேற்கோளாக எடுத்துக்காட்டியுள்ளார். அந்த உரை விளக்கமும் பாடலும் வருமாறு:-

எட்டு வகை நுதலிய அவையகமும்=எட்டுப் பாகுபாட்டைக் குறித்த அவையகமும்.

எட்டுவகை குறித்த அவையகம் என்றமையான், ஏனைய அவையின் இவ்வவை மிகுதி உடைத் தென்றவாறு. அவையா

வன:—குடிப்பிறப்பு, கல்வி, ஒழுக்கம், வாய்மை, தூய்மை, நடுவுநிலைமை, அழுக்காறாமை, அவாவின்மை என்பன. அவை எட்டினானும் அவை வருமாறு:—

'குடிப்பிறப் புடுத்துப் பனுவல் சூடி
விழுப்பேர் ஒழுக்கம் பூண்டு காமுற
வாய்மைவாய் மடுத்து மாந்தித் தூய்மையின்
காதல் இன்பத்துள் தங்கித் தீதறு
நடுவுநிலை நெடுநகர் வைகி வைகலும்
அழுக்கா றின்மை அவாஅ இன்மையென
இருபெரு நிதியமும் ஒருதாம் ஈட்டும்
தோலா நாவின் மேலோர் பேரவை
உடனமர் இருக்கை ஒருநாள் பெறுமெனின்
பெறுகதில் அம்ம யாமே வரன் முறைத்
தோன்றுவழித் தோன்றுவழிப் புலவுப் பொதிந்து
நின்றுழி நின்றுழி ஞாங்கர் நில்லாது
நிலையழி யாக்கை வாய்ப்பஇம்
மலர்தலை உலகத்துக் கொட்கும் பிறப்பே.''—

இளம்பூரணர் உரைப் பகுதி இது. பாடல் முழுவதையும் தந்தவர் நூற்பெயரைக் குறிப்பிடவில்லை. பெரும்பாலும் நூற்பெயர்களுடன் பாடல்களைத் தரும் நச்சினார்க்கினியரும் நூற்பெயரின்றி இப்பாடலைத் தந்துள்ளார். இதே தொல் காப்பியப் பகுதிக்கு அவர் வரைந்துள்ள உரைப்பகுதி வருமாறு:—

''எட்டுவகை நுதலிய அவையத்தானும்=எண் வகைக்குணத் திணைக் கருதிய அவையத்தாரது நிலைமையானும்.

அவை குடிப்பிறப்புக் கல்வி ஒழுக்கம் வாய்மை தூய்மை நடுவுநிலைமை அழுக்காறின்மை அவாவின்மை எனவிவையுடை யராய் அவைக்கண் முந்தியிருப்போர் வெற்றியைக் கூறுதல்:

'குடிப்பிறப் புடுத்துப் பனுவல் சூடி
... ... ... ... ... ... ... ... ... ... ... ...
மலர்தலை யுலகத்துக் கொட்கும் பிறப்பே'

என இதனுள் எட்டும் வந்தன'—

இது நச்சினார்க்கினியர் உரைப் பகுதி. இவரும் இளம் பூரணர் போலவே முழுப் பாடலையும் சிறுசிறு பாடவேறு பாடுகளுடன் (பிரதி பேதம்) தந்துள்ளார். இந்தப் பாடல் ஆசிரிய மாலை என்னும் நூலைச் சேர்ந்தது என்பது, நூற் பெயருடன் இப்பாடல் புறத்திரட்டில் தொகுக்கப்பட்டுள்ள தால் தெரிகிறது.

'எட்டுவகை நுதலிய அவை' தொல்காப்பியப் பகுதிக்கும் இந்தப் பாடலுக்கும் சொல்லிவைத்துச் செய்தால் போன்ற பொருத்தம் காணப்படுகிறது. இந்தப் பாடலைப் பார்த்துத் தொல்காப்பியர் நூற்பா இயற்றினாரா? இந்தநூற்பவைப் பார்த்து இப் பாடல் இயற்றினாரா? - என்று ஐயுறக்கூடிய வகையில் பொருத்தப்பாடு உள்ளது. அதனால், இந்தப் பாடல் மிகவும் பழமையானது என்பது தெளிவாகிறது. எனவே, ஆசிரியமாலை, சங்ககாலத்தையொட்டிய பழம் பாடல்களை யும் தன்னகத்தே தொகுக்கப்பெற்று வைத்துள்ளது என உணரலாம்.

தொல்காப்பியம் புறத்திணையியலில், 'கொள்ளார் தேஎங் குறித்த கொற்றமும்' என்னும் (12-ஆம்) நூற்பாவின் இடையே யுள்ள 'தோலின் பெருக்கமும்' என்னும் பகுதிக்கு உரிய உரை விளக்கத்திலும் நச்சினார்க்கினியர் ஆசிரிய மாலைப் பாட லொன்றை எடுத்தாண்டுள்ளார். அந்த உரைப்பகுதி வரு மாறு:—

'தோலின் பெருக்கமும் = அங்ஙனம் மதின்மேற் சென்றுழி மதிலகத்தோர் அப்புமாரி விலக்குதற்குக் கிடுகுங் கேடகமும் மிடையக் கொண்டு சேறலும்:

'இருசுடர் இயங்காப் பெருமு திலங்கை
நெடுந்தோள் இராமன் கடந்த ஞான்றை
யெண்கிடை மிடைந்த பைங்கட் சேனையிற்
பச்சை போர்த்த பல்புறத் தண்டை
எச்சார் மருங்கினும் எயிற்புறத் திறுத்தலிற்

கடற்சூழ் அரணம் போன்ற
துடல்சின வேந்தன் முற்றிய வூரே.''

என வரும்''.—

ஈண்டு உரையாசிரியர் பாடலுக்குரிய நூற்பெயரைத் தரவில்லை. இப் பாடல் ஆசிரியமாலையைச் சேர்ந்தது என்பது புறத்திரட்டின் வாயிலாகத் தெரிய வந்தது. இவ்வாறு இன்னும் பல ஆசிரியமாலைப்பாடல்கள் பல்வேறுஉரைகளிலும் வந்திருக்கலாம்; நூற்பெயர் குறிப்பிடப்படாமையால் அவை அறியப்படாமல் இருக்கலாம். புறத்திரட்டில் பதினாறு பாடல்கள் மட்டுந்தாமே தொகுக்கப் பெற்றுள்ளன! அதில் வராத பாடல்கள் வேறு உரை நூல்களில் வந்திருந்தால் கண்டுபிடிக்க முடியாதல்லவா?

தொல்காப்பிய உரையாசிரியர்கள் நூற்பெயர் குறிப்பிடாமல் ஆசிரிய மாலைப் பாடல்களை எடுத்துக்காட்டியிருப்பினும், சிலப்பதிகாரத்தின் பழைய அரும்பத உரையாசிரியர் நூற்பெயருடன் ஆசிரிய மாலைப் பாடல் பகுதியொன்றினை எடுத்துக் காட்டியுள்ளார். சிலப்பதிகாரம்-வேனிற் காதையில் உள்ள,

'ஒன்பான் விருத்தியுட் டலைக்கண் விருத்தி
நன்பா லமைந்த விருக்கைய ளாகி'—

என்னும் (அடி:2526) பகுதிக்கு அரும்பதவுரையாசிரியர் வரைந்துள்ள உரைப்பகுதி வருமாறு:—

''ஒன்பான் விருத்தியுட் டலைக்கண் விருத்தியாவது, இருபத்தொரு கோவை முதலாக நானூறு கோவை யீறாகக் கிடந்த கோவைகளுள் ஒன்பான் கோவையில் மேற்செம்பாலை தாரமுத லென்பது, 'தலையின தாரஞ் செய்யுந் தாரம்'' என்பதனாற் பெற்றாம். ஒன்பான் கோவை; 'தொண்டு படுதிவவின் முண்டக நல்யாழ்' என ஆசிரிய மாலை யுள்ளுங் கண்டு கொள்க''—

மேற்காட்டிய உரைப் பகுதியிலிருந்து, 'தொண்டு படுதிவவின் முண்டக நல்யாழ்' என்பது, ஆசிரிய மாலைப் பாடலொன்றின் பகுதி என்பது புலனாகிறது. தொண்டு என்றால்

ஈண்டு ஒன்பது என்று பொருளாம். அதனால்தான், ஒன்பான் கோவைக்கு எடுத்துக் காட்டாக, 'தொண்டுபடு திவவின் முண்டக நல் யாழ்' என்பதை உரையாசிரியர் குறிப்பிட்டுள்ளார். இப்படியொரு வழக்காறு,

'நொடித் திரிவன்ன தொண்டுபடு திவவின்' எனச் சங்க நூலாகிய மலைபடு கடாத்திலும் (வரி:21) வந்துள்ளது. இத் தகைய ஒப்புமை யமைப்பினைக் காணுங்கால், ஆசிரியமாலைப் பாடல்கள் சங்கத் தொகை நூற்பாடல்களைப் போலவே தொன்மையுடையவ என்பது புலனாகலாம்.

**தமிழிசை நூலா?**

ஆசிரிய மாலை ஒரு தமிழிசைப் பாடல் நூல் என ஒரு சாரார் கூறுகின்றனர். 'தொண்டு படு திவவின் முண்டக நல்யாழ்' என யாழைப் பற்றிக் கூறப்பட்டிருத்தலின் அவர்கள் அங்ஙனம் கருதுவதாகத் தெரிகிறது. யாழ் பற்றிய செய்திகள் பல நூல்களிலும் வருவதாலும், ஆசிரிய மாலையின் மற்றப் பாடல்களைக் காணுங்கால் இசை நூலாகத் தெரியவில்லையாதலாலும், இங்ஙனம் பார்த்தால் எல்லாப் பாடல் நூல்களுமே இசை நூல்களாகும் எனச் சொல்ல வேண்டுமாதலானும், இவர்தம் கருத்துப் பொருந்துமாறில்லை. ஒரு வேளை இந்நூற் பாடல்கள் இசையமைத்துப் பாடப்பட்டிருக்கலாமோ என்னவோ!

பழம் பாடல்களின் தொகுப்பு நூலாகத் தோன்றுகின்ற ஆசிரிய மாலைப் பாடல்களின் ஆசிரியர்கள் பற்றியோ, காலம் பற்றியோ, தொகுப்பாசிரியர் பற்றியோ, தொகுத்த முறை பற்றியோ ஒன்றும் புலப்படவில்லை. இந்நூலைப் பற்றி ஓரளவாயினும் அறிமுகஞ் செய்து வைத்த புறத்திரட்டு வாழ்க!

## 32. பன்னிரு பாட்டியல்

பாட்டியல் என்பது யாப்பிலக்கணம் ஆகும். தொல்காப்பியர் தமது தொல்காப்பிய நூலில் தாம் இயற்றியுள்ள யாப்பிலக்கணப் பகுதிக்குச் 'செய்யுள் இயல்' எனப் பெயர் இட்டுள்

ளார். தொல்காப்பியத்துக்கு முன்னும் பின்னும் யாப்பிலக்கண நூல்கள் பல தோன்றியுள்ளன. 'பாட்டியல்' என்னும் பெயரில் உள்ள யாப்பிலக்கண நூல்கள் பலவாகும். அவற்றுள் 'பன்னிரு பாட்டியல்' என்பதும் ஒன்று.

பாட்டியல் என்னும் நூற்பெயர் வழக்காறு மிகவும் பிற்காலத்த தாகும். சங்க காலத்தில் 'பாட்டியல்' என்னும் பெயரில் யாப்பிலக்கண நூல் இருந்ததாகத் தெரியவில்லை. பன்னிரு பாட்டியல் என்னும் நூலின் ஆசிரியர் பெயரோ காலமோ வேறு வரலாறோ ஒன்றும் தெரியவில்லை.

இந்த நூலில் எழுத்தியல், சொல்லியல், இனவியல் என மூன்று இயல்கள் உள்ளன. எழுத்தியல், சொல்லியல் ஆகிய இரண்டிலும் சிறப்பாக பன்னிரண்டு பொருள்கள் கூறப்பட்டுள்ளன. அதனால் இந்நூலுக்குப் பன்னிரு பாட்டியல் என்னும் பெயர் வழங்கப்பட்டதாகச் சொல்லப்படுகிறது. அப் பன்னிரண்டும் வருமாறு:—

எழுத்தியல்: 1. எழுத்துக்களின் பிறப்பு; 2. வருணப் பொருத்தம்; 3. கதிப் பொருத்தம்; 4. உண்டிப் பொருத்தம்; 5. பால் பொருத்தம்; 6. தானப் பொருத்தம்; 7. கன்னல் பொருத்தம்; 8. புள் பொருத்தம்; 9. நாள் பொருத்தம்; சொல்லியலில்: 10 சீர்க்கணப் பொருத்தம்; 11. மங்கலப் பொருத்தம்; 12. பெயர்ப் பொருத்தம்.

இந்தப் பன்னிரு செய்திகள் கூறப்பட்டிருப்பதால் பன்னிரு பாட்டியல் எனப் பெயர் வழங்கப்பட்டதாம். மூன்றாவதான இனவியலில் பல்வேறு இன நூல்களுக்கு உரிய இலக்கணங்கள் கூறப்பட்டுள்ளன. இப்பகுதியில் ஐம்பத்தொன்பது வகை நூல்கட்கு இலக்கணம் கூறியுள்ளனர்.

இஃது ஒருபுறம் இருக்க,-பன்னிருவர் இயற்றிய தொகுப்பு நூலாகிய பன்னிரு படலம் என்பதைப் போலவே, பன்னிரு பாட்டியலிலும் பன்னிருவர் இயற்றிய நூற்பாக்களின் தொகுப்பு நூலாகும் என்று ஒருசாரார் கூறுகின்றனர். இதனை மற்றொரு சாரார் மறுக்கின்றனர்.

பன்னிரு பாட்டியலுக்கு உரையெழுதியுள்ள திரு.கா.ர. கோவிந்தராச முதலியார் பன்னிரு பாட்டியலுக்கு உரியனவாக

232 நூற்பாக்களைத் தந்துள்ளார். இந்நூற்பாக்களை இயற்றிய நூலாசிரியர் பெயர் அறிவிக்கப்படவில்லை. மேலும் அவர் இந்த 232 நூற்பாக்களுக்கு உரிய மேற்கோள் நூற்பாக்களாக 137 நூற்பாக்களைத் தந்துள்ளார். இந்த 137 நூற்பாக்களுள் 103 நூற்பாக்களுக்கு ஆசிரியர் பெயர்கள் அறிவிக்கப்பட்டுள்ளன; மற்ற 34 நூற்பாக்களுக்கு உரிய ஆசிரியர் பெயர்கள் தெரியவில்லை. கோவிந்தராச முதலியாரின் பதிப்பில், 103 மேற்கோள் நூற்பாக்களுக்கு உரிய ஆசிரியர்களாகப் பதின் மூவர் அறிவிக்கப்பட்டுள்ளனர். அவர்தம் பெயர்களும் அவர்கள் இயற்றியுள்ள நூற்பாக்களின் எண்ணிக்கையும் முறையே வருமாறு:—

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1. | பொய்கையார் | — 14 | 8. | சேந்தம் பூதனார் | — 5 |
| 2. | பரணர் | — 12 | 9. | கோவூர் கிழார் | — 4 |
| 3. | இந்திரகாளியார் | — 34 | 10. | மாபூதனார் | — 3 |
| 4. | அவிநயனார் | — 9 | 11. | சீத்தலையார் | — 2 |
| 5. | அகத்தியர் (பாட்டியல்) | — 1 | 12. | பல்காயனார் | — 1 |
| 6. | கல்லாடனார் | — 13 | 13. | பெருங்குன்றூர் கிழார் | 2 |
| 7. | கபிலர் | — 3 | | | |

நூலுக்கு உரியனவாகச் சொல்லப்படும் 232 நூற்பாக்களின் இடையிடையே மேற்கோள் நூற்பாக்கள் இடம் பெற்றுள்ளன. நூலாசிரியர் ஒருவர், பெயர் தெரிந்த மேற்கோள் நூற்பாக்களின் ஆசிரியர்கள் பதின்மூவர், பெயர் தெரியாத 34 மேற்கோள் நூற்பாக்களின் ஆசிரியர்கள் ஆகிய அனைவரையும் கூட்டிக் கணக்கிடின், பன்னிரு பாட்டியலில் உள்ள மொத்த நூற்பாக்களின் ஆசிரியர்களின் எண்ணிக்கை பன்னிரண்டுக்கு மேல் போகிறது. எனவே, 'பன்னிருவர் இயற்றிய நூற்பாக்களின் தொகுப்பு ஆதலின் இந்நூல் பன்னிரு பாட்டியல் என்னும் பெயர் பெற்றது' என்று கூறும் பெயர்க் காரணம் பொருந்தாது என்பது சிலர் கொள்கை.

பன்னிருவர் இயற்றிய நூல்தான் பன்னிரு பாட்டியல் என்று வலியுறுத்திக் கூறுபவர்கள், மேலே காட்டிய ஆசிரியர்

களுள் சிலர் பெயர்கள் இடையிலே புகுத்தப்பட்டன என்று கூறுவர்.

கோவிந்தராச முதலியாரின் பதிப்பில் நூலுக்கு உரியன வாகக் கருதப்படும் 232 நூற்பாக்களுக்கும் தனி எண்வரிசை யும், மேற்கோள்களாகக் கருதப்படும் 137 நூற்பாக்களுக்கும் தனிஎண் வரிசையும் வெவ்வேறாகக் கொடுக்கப்பட்டுள்ளன. ஆனால், திரு.ரா. இராகவையங்காரால் செந்தமிழின் பன்னி ரண்டாம் வெளியீடாக 1904-ஆம் ஆண்டில் வெளியிடப்பட்ட பன்னிரு பாட்டியல் பதிப்பில், நூலுக்கு உரிய நூற்பாக்களுக் கும் மேற்கோள் நூற்பாக்களுக்கும் தனித்தனியாக எண்வரிசை கொடுக்கப்படாமல், எல்லாவற்றிற்கும் சேர்த்து 'ஒரே எண் வரிசை கொடுக்கப்பட்டுள்ளது. இந்தப் பதிப்பில் பாயிரம் ஒன்று உட்பட மொத்தம் 360 நூற்பாக்கள் எண் வரிசை தரப் பட்டுள்ளன. கோவிந்தராச முதலியார் பதிப்பில் பதின்மூவர் பெயர்கள் தரப்பட்டுள்ளன. இராகவையங்கார் பதிப்பில், இப் பதின் மூவருடன் செயிற்றியனார், நற்றத்தனார் என்னும் இருவர் கூடுதலாகச் சேர்க்கப்பட்டுள்ளனர். நற்றத்தனார் நூற்பா ஒன்றும், செயிற்றியனார் நூற்பா மூன்றும் இதில் உள்ளன. ஆக இப்பதிப்பில் பதினைவர் பெயர்கள் இடம் பெற் றுள்ளன. இந்தப் பதிப்பின்படி நோக்கினும், பன்னிருவர் நூற் பாக்களின் தொகுப்பு பன்னிரு பாட்டியலாகும் என்னும் கொள்கை பொருந்தாது போகிறது.

பன்னிரு பாட்டியலிலுள்ள நூற்பாக்களின் ஆசிரியர் பெயர்களைப் பார்க்குங்கால், பெரும்பாலானவை சங்கப் புலவர்களின் பெயர்களாக உள்ளன; எனவே, சங்கப் புலவர்கள் பலர் யாப்பிலக்கண நூல்களும் இயற்றியிருந்தனர்; அவற்றினின்று சிற்சில நூற்பாக்களை எடுத்துத் தொகுத்துப் பன்னிரு பாட்டியலைப் பின்வந்த ஒருவர் உருவாக்கினார்– எனச் சிலர் கருதுகின்றனர். இதற்குச் சான்று பகர்வதுபோல் இலக்கண விளக்கப் பாட்டியலுரை அமைந்துள்ளது. இலக்கண விளக்கப் பாட்டியல் உரையில் மாமூலரின் சில நூற்பாக்கள் எடுத்துக் காட்டப்பட்டுள்ளன. ஆனால், இவருடைய நூற் பாக்கள் பன்னிரு பாட்டியலில் இல்லை. மற்றும், பன்னிரு

பாட்டியலில் இடம் பெற்றுள்ள இந்திர காளியார் என்பவரின் நூற்பாக்கள் சிலவும் இலக்கண விளக்கப் பாட்டியல் உரையில் காட்டப் பெற்றுள்ளன; இந்நூற்பாக்கள் பன்னிரு பாட்டியலில் இல்லை. “எனவே, பாட்டியல் என்னும் பெயரில் இல்லாமல், வெவ்வேறு பெயர்களில் பண்டைப் புலவர்கள் யாப்பிலக்கண நூல்களும் இயற்றியிருந்தனர்; அவற்றுள், சிலர் நூல்களிலிருந்து சிலநூற்பாக்களை எடுத்துத் தொகுத்துப் பன்னிரு பாட்டியல் என்னும் ஒரு தொகைநூலைப் பிற்காலத்தில் உருவாக்கினர்” என்பது சிலர் கருத்து.

இந்தக் கருத்தை மறுப்பவர் கூற்று வருமாறு:- “பன்னிரு பாட்டியலில் சொல்லப்பட்டுள்ள பல செய்திகள் வடநூற் சார்பானவை; பிற்காலத்தில் தமிழுக்கு வந்தவை; எனவே, இந்தச் செய்திகளைச் சங்கப் புலவர்கள் எழுதித் தெரிவிக்கமாட்டார்கள்; பிற்காலத்தார் எவரோ இந் நூற்பாக்களை இயற்றி, இவற்றிற்குப் பெருமை யுண்டாவ தற்காக, இவற்றைச் சங்கப் புலவர்கள் தலையில் கட்டி விட்டனர். மற்றும், பாட்டியல் என்னும் பெயரில் யாப்பிலக் கண நூல்கள் சங்க காலத்தில் இயற்றப்படவில்லை—” இவ் வாறாகப் பல பல கூறி மறுக்கின்றனர்.

மேலுள்ள கருத்தை மறுப்பவர் கூற்றாவது:— “வட நூற் சார்பான கருத்துக்கள் சங்க காதத்திலேயே தமிழ் நூல்களில் புகுந்து விட்டன. எனவே, எல்லா நூற்பாப் களையும் பிற்காலத்தன எனத் தள்ளுவதற்கில்லை. சங்க காலத்தில் பாட்டியல் என்னும் பெயரால் இந்நூல் தொகுக் கப்பட்டிருக்கவில்லையாயினும், பிற்காலத்தில் இந்தத் தொகுப்பு நூலுக்குப் பாட்டியல் என்னும் பெயர் கொடுக்கப் பட்டிருக்கலாம். எனவே, சங்கப்புலவர்கள் சிலர் யாப்பிலக்கண நூல்கள் இயற்றிய உண்மையை மறைப்பதற்கில்லை” - என் பது இவர்தம் கருத்து.

பொதுவாக நோக்குமிடத்து, - பன்னிரு பாட்டியலி லுள்ள நூற்பாக்கள் ஒரேகாலத்தில் இயற்றப்பட்டனவல்ல; பல காலத்தில் வாழ்ந்த பலர் இயற்றிய நூற்பாக்களின் தொகுப்பேயாகும் - என்பது போதரும். இந்நூலில், கீழ்க்

கணக்கு, மேற்கணக்கு, பத்துப்பாட்டு ஆகியவற்றிக்கும் ஆசிரியர் பெயர் தெரியாத சில நூற்பாக்கள் இலக்கணம் கூறுவதால், இன்னவை, 'இலக்கியம் கண்டதற்கு இலக்கணம் கூறல்' என்ற முறையில், சங்க இலக்கியங்கட்குப் பிற்காலத்தில் இயற்றப்பட்டவை என்பது புலனாகும்.

கோவிந்தராச முதலியார், நூலுக்கு உரிய நூற்பாக்கள் சில- மேற்கோள் நூற்பாக்கள் சில என்று கூறியிருப்பினும், ஆசிரியர்கள் பலருடைய நூற்பாக்கள் இதில் ஒருங்கு தொகுத்துத் தரப்பட்டிருப்பதால் இந்நூல் ஒரு தொகை நூலாகும். இது பன்னிரு படலம் போல இலக்கணத் தொகை நூலானாலும், தொகைநூல் என்னும் இனம்பற்றி, 'தொகுப்புக் கலை, என்னும் இவ்வெளியீட்டில் இடம் பெற்றுள்ளது. சங்கப் புலவர்கள் பலர் பெயரால் உள்ள நூற்பாக்களின் தொகுப்பு நூலாயிருத்தலின், சங்கச் சார்புடைய -சங்க காலத்தையடுத்த - நூல்களின் வரிசையில் இந்நூலும் சேர்க்கப் பெற்றது.

அடுத்த அறிமுகம்:

இதுகாறும் இந்நூலின் இந்த முதல் தொகுதியில் பாடல் கலையின் சிறப்பு, உலக மொழிகளின் நூல் தொகுப்புக்கலை வரலாறு, தமிழ்மொழி நூல் தொகுப்புக்கலை வரலாறு ஆகியவை பற்றியும், தலைச்சங்கம் - இடைச்சங்கம் - கடைச் சங்கம் ஆகிய முச்சங்க காலத் தொகை நூல்கள் பற்றியும் சங்க காலத்தைச் சார்ந்த தொகை நூல்கள் பற்றியும் ஆய்வு செய்யப்பட்டது.

இனி, இதையடுத்த இரண்டாம் தொகுதியில், இடைக் காலத் தொகை நூல்கள், பிற்காலத் தொகை நூல்கள், இருபதாம் நூற்றாண்டுத் தொகை நூல்கள் ஆகியவை ஆராயப்படும். தொகை நூல்கள் என்று வழங்கப்படும் தகுதியுடையனவாய்த் தமிழில் இதுவரை ஏறக்குறைய இரண்டாயிரம் வெளியீடுகள் வந்துள்ளன எனலாம். இந்த எண்ணிக்கை சிலருக்கு ஐயமாகவும் வியப்பாகவும் இருக்கலாம். ஆனால் இஃது உண்மை. ஏறத்தாழ இவையனைத்தும் இயன்றவரை இரண்டாம் தொகுதியில் இடம்பெறக்கூடும்.

---

# 1. இடைக்காலம்

## மூவர் தமிழ்

'மூவர் தமிழ்' என்பது சில நூல்களில் அறிமுகப்படுத்தப் பட்டுள்ளது. ஔவையார் தமது 'நல்வழி' என்னும் நூலின் நாற்பதாம் பாடலில் இதனைக் குறிப்பிட்டுள்ளார்:

''தேவர் குறளும் திருநான் மறைமுடிவும்
மூவர் தமிழும் முனிமொழியும்—கோவை
திருவா சகமும் திருமூலர் சொல்லும்
ஒருவா சகம்என் றுணர்'' (நல்வழி - 40)

மூவர் தமிழ் என்பதில் மூவர் என்பவர் யார் - யார்? மூவர் தமிழ் என்பது எது? இதற்கு விடை, உமாபதி சிவா சாரியரால் (உமாபதி சிவத்தால்) இயற்றப்பட்டதாகக் கூறப் படும் 'திருமுறை கண்ட புராணம்' என்னும் நூலில் உள்ளது.

இந்த நூலில் திருஞான சம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர் என்னும் மூவர் தொடர்பான செய்திகளும், இவர்கள் பாடிய தமிழ்ப் பாடல்கள் தொடர்பான செய்திகளும் பேசப் பட்டுள்ளன. இவர்கள் அருளிய தமிழ்ப் பாடல்கள் 'மூவர் தமிழ்' (9), 'மூவர் செந்தமிழ்கள்' (10), 'மூவர் பாடல், (13,22) எனக் குறிப்பிடப்பட்டுள்ளன. இம்மூவரும் 'தமிழ் மூவர்' (19) என்று ஒரு பாடலில் குறிப்பிடப்பட்டுள்ளனர். இதனால், மூவர் யார் - யார்? என்பதும், மூவர் தமிழ் என்பது இம் மூவரும் பாடிய தமிழ்ப் பாடல்களைக் குறிக்கும் என்பதும் பெறப்படும். இனி, இந்த மூவர் தமிழ் பற்றிய வரலாற்றை, திருமுறை கண்ட புராணத்தில் உள்ளவாறு காண்பாம்:

இராச ராச சோழனிடம், அவ்வப்போது சிலர் வந்து, இந்த மூவரால் அருளப்பட்ட சிற்சில பாடல்களைப் பாடிக் காட்டினர். பாடலைக் கேட்டுச் சுவைத்து மகிழ்ச்சி வெள்ளத் தில் ஆழ்ந்த மன்னன், இம்மூவரின் பாடல்கள் அனைத்தையும் அறியவேண்டும்; அவை எங்கு உள்ளன? எனத் தேடச் செய்

தான். எங்கும் கிடைக்கவில்லை. பின்னர், நம்பியாண்டார் நம்பி யிருந்த திருநாரையூருக்கு வந்து, மூவர் பாடல்களைத் தேடிக் கண்டுபிடித்துத் தரல் வேண்டும் என நம்பியிடம் வேண்டுகோள் விடுத்தான். சிதம்பரத்து நடராசர் கோயிலில் ஓர் அறைக்குள் காப்பிட்டுக் கிடக்கின்றன என்றுஅவர் தெரிவித் தார்.

இராசராசன் சிதம்பரம் சென்று, கை இலச்சினை (முத்திரை) இட்டு மேற்குச் சுற்றில் உள்ள அறையினைத் திறக்கும்படி கோயில் பூசனை புரியும் அந்தணர்களை வேண்டினான். அந்தணர்கள், "தமிழ் வைத்த மூவர் வந்தால் அறை திறக்கும்" (19) என்றனர். அதாவது, சம்பந்தர், நாவுக்கரசர், சுந்தரர் என்னும் மூவரும் வந்தாலேயே அறை திறக்கப்படும் என்று கூறிவிட்டனர்.

வீட்டுலகில் (மோட்சத்தில்) இருக்கும் அம்மூவரையும் மன்னன் எந்தப் போக்கு வரவு ஊர்தியின் வாயிலாக எவ்வாறு அழைத்துவர இயலும்? பார்த்தான் மன்னன். உடனே, கோயிலில் திருவிழா நடத்தச் சொன்னான். மூவர் சிலைகளை யும் அணி செய்து ஊர்வலமாக அந்த அறைக்கு எதிரில் கொண்டுவரச் செய்தான்; இதோ மூவரும் வந்து விட்டனர் கதவைத் திறக்கலாம்- என்றான்.

அந்த மூன்று சிலைகளையும் மூவர் இல்லை எனக்கூறின், எந்தக் கோயிலில் உள்ள எந்தச் சிலைக்கும் வேலை கிடையா தன்றோ? எனவே, கை காப்பு நீக்கி அறை திறக்கப்பட்டது.

செல்லுப் புற்று மண்ணால் சுவடிகள் மூடப்பட்டிருந்தன. புற்று மண்ணைத் தட்டிக் கொட்டிச் சீர்செய்து, நல்ல உருப் படிகளாகக் கிடைத்தவரையும் எடுத்துப் போற்றினர். மன்னன் வேண்டுகோளின்படி, நம்பியாண்டார் நம்பி, மூவர் பாடல் களையும் ஏழு திருமுறைகளாக வகுத்துத் தொகுத்தார்.

பன்னிரு திருமுறைகள்:

சைவப் பெருநூல்கள் பன்னிரண்டு திருமுறைகளாகத் தொகுக்கப்பட்டுப் போற்றப்படுகின்றன. அவற்றுள் முதல் ஏழு திருமுறைகள் மூவர் பாடல்களேயாகும். சம்பந்தரின்

பாடல்கள் முதல் மூன்று திருமுறைகளாகவும், நாவுக்கரசரின் பாடல்கள் அடுத்த மூன்று திருமுறைகளாகவும் - அதாவது, நான்காவது ஐந்தாவது ஆறாவது திருமுறைகளாகவும், சுந்தரர் பாடல்கள் ஏழாவது திருமுறையாகவும் தொகுக்கப்பெற்றன.

பின்னர், மாணிக்க வாசகரின் திருவாசகமும் திருக் கோவையாரும் எட்டாம் திருமுறையாகவும், திருவிசைப்பா-திருப்பல்லாண்டுப் பாடல்கள் ஒன்பதாம் திருமுறையாகவும், திருமூலரின் திருமந்திரம் பத்தாம் திருமுறையாகவும், திரு முகப் பாசுரம் முதலானவை பதினோராம் திருமுறையாகவும் தொகுக்கப் பெற்றன. சேக்கிழாரின் திருத்தொண்டர் புராணம் என்னும் பெரிய புராணம் பன்னிரண்டாம் திரு முறையாகப் பின்னர்க் கொள்ளப்பட்டது.

திருமுறைகள் வெளிவரச் செய்ததால், இராசராசன் 'திருமுறை கண்ட சோழன்' என்னும் சிறப்புப் பெயரால் வழங்கப்படுகிறான்.

இந்தப் பன்னிரண்டு நூல்களையும் இணைத்துப் 'பன்னிரு திருமுறைகள்' எனத் தொகைப் பெயர் தந்திருப்பது, 'பன் மாலைத் திரள்' வகையாகும்.

முதல் ஏழு:

இங்கே, இறுதி ஐந்து திருமுறைகளை விடுத்து, முதல் ஏழு திருமுறைகளை மட்டும் முதலில் 'எடுத்துக் கொள்ளலாம். மூவர் பாடல்களும் மூன்று நூல்களாக ஆக்கப்பட்டன. இவையே 'மூவர் தமிழ்' என்னும் தொகைப் பெயர் பெற்றன. 'மூவர்தமிழ்' என்னும் தொகையையும் 'பன் மாலைத் திரள் வகையில் சேர்க்கலாம்.

மூவர் தமிழ் ஏழு திருமுறைகளாகத் தொகுக்கப்பட்டதைப் பற்றிக் கூறும் பாடல்கள் இதற்கு அகச்சான்றுகளாம். மந்திரங்கள் ஏழு கோடியானதால் இப்பாடல்கள் ஏழு திரு முறைகளாகத் தொகுக்கப்பட்டனவாம் பாடல்கள் வருமாறு:-

''மன்னுதமிழ் விரகர்எங்கள் காழி வேந்தர்
வகுத்தருளால் அமைத்த திரு முறையோர் மூன்றும்,

அன்னவகை வாகீசர் முறையோர் மூன்றும்,
ஆரூரர் உரைத்திதிரு முறைய தொன்றும்,
துன்னவகை ஏழாகத் தொகுத்துச் செய்தான்
தூயமனு எழுகோடி என்ப துன்னித்
தன்னிகரில் திருவருளால் மன்னன் தானும்
தாரணியோர் வீடுபெறும் தன்மை சூழ்ந்தே" (24)

'மந்திரங்கள் ஏழுகோடி யாதலினால் மன்னுமவர் இந்தவகை திருமுறைகள் ஏழாக எடுத்தமைத்து..." (28) என்பன பாடல்கள். திருமுறை கண்ட புராணத்தில், மூவர் தமிழின் தெய்வ ஆற்றல்களும் கூறப்பட்டுள்ளன. சம்பந்தர் தமிழ், எரியிலே வேகவில்லை - வைகையாற்றில் எதிரேறி வந்தது - அதாவது- மதுரையில் அனல் வாதத்திலும் புனல் வாதத்திலும் வென்றது; திருமயிலாப்பூரில் எலும்பைப் பெண்ணாக்கியது; திருமருகலில் பாம்பு நஞ்சை நீக்கியது. நாவுக்கரசரின் தமிழ் திங்களூரில் நஞ்சை நீக்கியது; கொல்ல வந்த யானையை வணங்கச் செய்தது; கருங்கல்லை மிதக்கச் செய்தது; சுந்தரரின் செந்தமிழ், அவிநாசியில் முதலையுண்ட சிறுவனை வரவழைத்தது- இவ்வாறு மூவர் தமிழின் ஆற்றல்கள் போற்றப் பெற்றன:

"எரியினிடை வேவாது; ஆற்றெதிரே ஓடும்;
என்புக்கும் உயிர்கொடுக்கும்; இடு நஞ் சாற்றும்;
கரியை வளைவிக்கும் கல் மிதக்கப் பண்ணும்
கராமதலை கரையிலுறக் காற்றுங்காணே" (17)

மூவர் தமிழின் ஆற்றலைப் பரஞ்சோதி முனிவரும் தமது திருவிளையாடல் புராணத்தில் கூறியுள்ளார்:

சிவனைப் பரவையாரிடம் தூது விடுத்ததும், முதலை உண்ட சிறுவனை வரவழைத்ததும், எலும்பைப் பெண்ணாக்கியதும், மறைக்காட்டில் திறக்கப்படாதிருந்த கதவினைத் திறந்ததும் கன்னித் தண்தமிழ் மொழிச் சொற்களா? அல்லது - வேற்று மொழிச் சொற்களா? என்று வினவுவதுபோல் மூவர் தமிழின் முதன்மை ஆற்றலை அறிவித்துள்ளார். பாடல்:-

"தொண்டர் நாதனைத் தூதிடை விடுத்ததும் முதலை
உண்ட பாலனை அழைத்ததும், எலும்பு பெண்ணுருவாக்

கண்டதும், மறைக் கதவினைத் திறந்ததும் கன்னித்
தண்டமிழ்ச் சொல்லோ மறுபுலச் சொற்களோ சாற்றீர்''

என்பது பாடல். இவ்வளவு பெருமைக்கு உரிய மூவர் தமிழைத் திட்டமிட்டு அறைக்குள் போட்டுச் செல் அரிக்கச் செய்ததும், மூவர் வந்தால்தான் கதவைத் திறக்க முடியும் என அடம் பிடித்ததும் கொடுமை என ஒரு சாராரைச் சிலர் தூற்றலாம். ஆனால், மூவர் தமிழை அடியோடு எரித்து விடாமல், அறைக் குள் வைத்துக் காத்து வந்தார்களே-என அன்னாரைப் போற் றுதலே ஒரு வகையில் பொருந்தும்.

## தேவாரம்

மூவர் தமிழாகிய முதல் ஏழு திருமுறைப் பாடல்களும் 'தேவாரம்' என்று பெயர் வழங்கப்படுகின்றன. இப்பெயர் பாடல் ஆசிரியர்களால் தரப்பட்ட தன்று; பிற்காலத்தாரா லேயே தரப்பட்டதாகும். இதன் பொருள் என்ன? தே+ஆரம் எனப் பிரித்து, தெய்வமாலை - அதாவது - தெய்வத்திற்குச் சாத்தும் பாமாலை என்று இதற்குப் பொருள் செய்வர் சிலர். தே+வாரம் எனப் பிரித்து, தெய்வஅன்பு-அதாவது-தெய்வத் தின்பால் செலுத்தும் அன்பு எனவும் சிலர் கூறுவர்.

தேவாரம், திருஞான சம்பந்தர் தேவாரம், அப்பர் என் னும் திருநாவுக்கரசர் தேவாரம், சுந்தரர் தேவாரம் என மூவகையாக ஆசிரியர் பெயரால் குறிப்பிடப்படுகிறது. ஒவ் வொருவர் பாடிய தேவாரப்பாக்கள் அவரவர் பெயரால் தனித்தனியாகக் குறிப்பிடப்படும்போது, அவ்வத் தொகை யைத் 'தனி மலர் மாலை' என்னும் வகைக்குள் அடக்கலாம்.

### தேவாரப் பெயர் ஆட்சி

தேவாரம் என்னும் பெயர் முதலில் பரக்களைக் குறிக்க வில்லை. கடவுள் தொடர்புடையது - கடவுள் வழிபாட்டுத் தொடர்புடையது - கடவுள் திருமேனி (விக்கிரகம்) தொடர் பானது - வழிபாட்டு இடத் தொடர்புடையது - என்னும் பொரு ளில் சில நூல்களிலும் சில கல்வெட்டுகளிலும் தேவாரம் என்னும் பெயர் ஆட்சி காணப்படுகின்றது. உமாபதி சிவம்

என்பவர் இயற்றிய கோயில் புராணம் - திருவிழாச் சருக்கம் என்னும் பகுதியில்,

''உயர்தர மூவாயிரவர் கடாவா மறையொடு
தேவாரக் கைப்பற்றிய பணிமுற்ற ...'' (27)

என்றும், ஈடு முப்பத் தாறாயிரப்படி என்னும் வைணவ விரிவுரை நூலில், 'உம்முடைய தேவாரமோ' (6—8—10) என்றும் இப் பெயராட்சி உள்ளது.

மற்றும், தென்னிந்தியக் கல்வெட்டு ஒன்றில் (7 - 269), ''பெரியவுடையார் தேவாரத்தில் கேட்டருளி'' என்றும், மற்றொரு கல்வெட்டில் (2—155) ''பெரிய பெருமாளுக்குத் தேவார தேவராக எழுந்தருளிவித்த தேவர்'' என்றும், முனியூர்க் கல்வெட்டில் (8-205) ''திரு முறைத் தேவாரச் செல்வன்'' என்றும், திருக்களார் கல்வெட்டில் (8-260) ''நம் தேவாரத்திற்குத் திருப்பதிகம் பாடும் பெரியான்'' என்றும் தேவாரப் பெயர் ஆட்சி காணப்படுகிறது.

பண்டு அரசர், அருளாளர் முதலியோர் வெளியூர்க்குச் செல்லும் போது, உடன்எடுத்துச் செல்லும் சிறுசிறு கடவுள் உருவம் வைக்கப்பட்ட பெட்டி 'தேவாரப் பெட்டி' எனப்பட்டது. மற்றும், கடவுள் வழிபாடாகிய தேவாரத்தின்போது (தேவாரம்-கடவுள் வழிபாடு), ஓதப்பட்ட பாடல்கள் நாளடைவில் தேவாரப் பாடல்கள் என்னும் திருப்பெயர் வழங்கப் பட்டன. இந்த அடிப்படையில், பின்னர், மூவர் தமிழ்ப்பாடல்கள் தேவாரம் என்று குறிப்பிடப்பட்டன. பின்பு தேவாரம், சம்பந்தர் தேவாரம், திருநாவுக்கரசர் தேவாரம், சுந்தரர் தேவாரம் என மூவகையாக ஆசிரியர் பெயரால் குறிப்பிடப் படுகிறது. ஒவ்வொருவர் பாடிய தேவாரப் பாக்களை அவரவர்பெயரால் தனித்தனியாகக் குறிப்பிடும் போது, அத் தொகையைத் 'தனி மலர் மாலை' என்னும் வகைக்குள் அடக்கலாம்.

### தேவாரத்தின் வேறு பெயர்கள்

தேவாரம் என்ற பெயர் பதினைந்தாம் நூற்றாண்டிற்குப் பின்னரே மூவர்தமிழுக்கு வழங்கப்படத் தொடங்கியது. சேக்கிழார், திருப்பதிகம், தமிழ்த் தொடை, உரைமாலை முதலிய

பெயர்களாலேயே மூவர் தமிழைக் குறிப்பிட்டுள்ளார். தொடக்கத்தில், சம்பந்தர் திருமுறை-நாவுக்கரசர் திருமுறை-சுந்தரர் திருமுறை எனவும், சம்பந்தர் பதிகம்—நாவுக்கரசர் பதிகம் - சுந்தரர் பதிகம் எனவும் மூவர் பாடல்கள் பெயர் வழங்கப் பெற்றன. மற்றும், சம்பந்தர் தேவாரம் 'திருக் கடைக் காப்பு' எனவும், சுந்தரர் தேவாரம் திருப்பாட்டு எனவும் பெயர் வழங் கப்பட்டதுண்டு. திருநாவுக்கரசர் பாடல்களே - பதிகங்களே முதல் முதலில் 'தேவாரம்' என்னும் திருப்பெயர் பெற்றன.

**போற்றிப் பேணாமை:**

தேவார ஆசிரியர்கள் மூவரும், ஊர்தோறும் சென்று பதிகங்கள் பாடினர். அவை ஓலைச்சுவடிகளில் எழுதப்பட்டன. அவரவர் காலத்திலேயே அவரவர் பெயரால் நூல்தொகுக்கப் பட்டதாகத் தெரியவில்லை. இந்தக் காலத்தில், முப்பது தலைப்புகளில், தலைப்புக்கு இரு பாடல்கள் வீதம் எழுதினாலும், அப்பாடல்களுக்கு, இன்னார் கவிதைகள் என்ற மகுடம் இட்டு வெளியீட்டு விழாவும் நடத்துகின்றனர்.

இவ்வாறு தேவாரப் பாடல்கள் உரிய காலத்திலேயே போற்றிப் பேணப்பட வில்லை. அவை அழிவதற்கும் அழிக்கப் படுவதற்கும் தக்க காரணம் இருந்தது. சமணர்களையும் பௌத்தர்களையும் எதிர்த்துப் போராடவேண்டியிருந்ததால் போற்றிக் காப்பாற்ற முடியவில்லை. அவர்கள் ஓலைச் சுவடி களைத் திட்டமிட்டு அழித்திருக்கலாம்.

**தமிழ் – தமிழ் – தமிழ்:**

தேவாரப் பாடல்கள் மூவர் தமிழ் என்று பொதுவாகக் குறிப்பிடப்பட்டன. தேவாரப் பதிகங்கள் தமிழ்மாலை என ஆசிரியர்களாலேயே அறிவிக்கப்பட்டன. நாளும் இன்னிசை யால் தமிழ் பரப்பும் ஞான சம்பந்தன் எனத் தமிழ் பரப்பு வதாகச் சொல்லப்பட்டதும் உண்டு. இவ்வாறு தமிழ்-தமிழ்-தமிழ் என்று ஓலமிட்டதற்கு உரிய காரணம் யாது?

சமசுகிருதத்தின் திரிபு மொழிகளாகிய பிராகிருதம், பாலி என்னும் இரு மொழிகளில், சமணர்கள் பிராகிருத மொழி யைக் கையாண்டும், பௌத்தர்கள் பாலிமொழியைப் பயன்

படுத்தியும் தத்தம் சமயம் வளர்த்தனர். தேவார ஆசிரியர்களோ, அந்த மொழிகளில் மதம் மாறிய மக்கட்கு இருந்த 'மாயையை' அகற்றந் தெய்வத் தமிழைக் கையாண்டனர். தமிழ் மணம் எங்கும் வீசச் செய்தனர். தேவர ஆசிரியர்களும் ஆழ்வார்களும் தமிழ் - தமிழ் - தமிழ் என்று மூச்சைப் பிடித்துக் கொண்டு அடித்துக் கொண்டதில் உள்ள மறைபொருள் (இரகசியம்) இதுவே. சமசுகிருதம் - ஆங்கிலம் முதலிய மொழிகளின் மேலாட்சி ஏற்பட்ட போதெல்லாம் தமிழ்ப் புலவர்கள் தம் முன்னோரின் முறையையே பின்பற்றித் தமிழ் வளர்த்தனர். இதற்கு வழிகாட்டிகளாய் இருந்தவர்கள் தேவார-திவ்வியப் பிரபந்த ஆசிரியர்களேயாவர்.இந்த அடிப்படை நோக்கத்தில்தான், தேவாரப் பாடல்கள் 'மூவர் தமிழ்' என்னும் தொகைப் பெயர் பெற்றன.

இந்தப் பாடல்களை வெளிவரச் செய்து 'திருமுறைகண்ட சோழன்' என்னும் பட்டப் பெயரை இராசராச சோழன் தட்டிக் கொண்டான். பிற்கால மன்னர்கட்கு இத்தகைய தமிழ் உணர்வு இல்லாமற் போனது வருந்தத்தக்கது. இனி மூவர் தேவாரங்களையும் அவரவர் பெயரால் தனித்தனியாக நோக்குவாம்.

## திருஞான சம்பந்தர் தேவாரம்

திரு ஞான சம்பந்தர் பதினாறாயிரம் பதிகங்கள் பாடியதாகத் திருமுறை கண்ட புராணம் சொல்கிறது. ஒரு பதிகம் என்பது பத்துப்பாடல் கொண்டது. ஆனால், சம்பந்தர் தேவாரத்தில் ஒவ்வொரு பதிகத்திலும் பதினொருபாடல்கள் உள்ளன

முதல் பதிகம் 'தோடுடைய செவியன்''என்று தொடங்கும் பதிகம் என்றும், இறுதிப் பதிகம் 'கல்லூர்ப் பெருமணம்' என்று தொடங்கும் பதிகம் என்றும் அப்புராணம் கூறுகிறது.

''தோடுடைய செவியன்' முதல் 'கல்லூர்' என்னும்
தொடை முடிவாப் பரசமயத் தொகைகள் மாளப்
பாடினார் பதிகங்கள் பாவில் ஒன்றாம் பதினா
றாயிரம் உளதாப் பகரு மன்றே'' (14)

16,000 என்னும் தொகையை 11 என்னும் எண்ணால் பெருக்கினால் 1,76,000 பாடல்கள் என்னும் தொகை கிடைக்கிறது. இது நம்பத்தக்கதா? ஆனால், செல்லரித்தது போக, அறையிலிருந்து தூய்மை செய்து எடுத்தபோது, 384 பதிகங்களே தேறியதாக அதே புராணம் கூறுகிறது.

"பண்புற்ற திருஞான சம்பந்தர் பதிகம் முந்நூற்று
எண்பத்து நான்கினால் இலங்குதிறம் முறைமூன்று" (25)

என்பது பாடல் பகுதி. தேவாரப் பாடல்கள், பாடிய கால வாரியாகவோ, சென்ற இடவாரியாகவோ தொகுக்கப்படாமல், பண்கள் வாரியாகத் தொகுக்கப்பட்டுள்ளன. இதனைத் திருமுறை கண்ட புராணமே கூறியுள்ளது.

சம்பந்தரின் பாடல்கள் முதல் மூன்று திருமுறைகளாகத் தொகுக்கப்பட்டுள்ளன அல்லவா? அவற்றுள், முதல்திருமுறை 1469 பாடல்கள் அடங்கிய 136 பதிகங்களையும், இரண்டாம் திருமுறை 1331 பாடல்கள் அடங்கிய 122 பதிகங்களையும், மூன்றாம் திருமுறை 1358 பாடல்கள் அடங்கிய 126 பதிகங்களையும் முறையே கொண்டுள்ளன. மூன்றாம் திருமுறையின் இறுதியில் உள்ளதான 126 ஆவது பதிகம் 'திரு விடை வாய்' என்னும் திருப்பதியைப் பற்றியது. இந்தப் பதிகம் தில்லையில் இராசராச சோழன் முயற்சியால் வெளியானவற்றைச் சேர்ந்ததன்று. கல்வெட்டில் இப்பதிகம் பொறித்திருப்பது கண்டு பிடிக்கப்பட்டு இத்தொகுதியில் சேர்க்கப்பட்டதாகும்.

முதல் திருமுறை, நட்ட பாடை - தக்கராகம் - பழந்தக்க ராகம், தக்கேசி - குறிஞ்சி - வியாழக் குறிஞ்சி - மேகராகக் குறிஞ்சி - யாழ்முரி - என்னும் எட்டுப் பண்கள் வாரியாகத் தொகுக்கப்பட்டுள்ளது. இரண்டாம் திருமுறை. இந்தளம் - சீகாமரம்-காந்தாரம் - பியந்தைக் காந்தாரம் - நட்ட ராகம்- செவ்வழி - என்னும் ஆறு பண்கள் வாரியாகத் தொகுக்கப் பட்டுள்ளது. மூன்றாம் திருமுறை, காந்தார பஞ்சமம் கொல்லி, கொல்லிக் கௌவாணம்-கௌசிகம் - பஞ்சமம் - சாதாரி - பழம் பஞ்சுரம் - புற நீர்மை - அந்தாளிக் குறிஞ்சி- என்னும் பண்கள் வாரியாகத் தொகுக்கப்பட்டுள்ளது. இந்த அமைப்பு பண்முறைத் தொகுப்பாகும்.

சம்பந்தர், தெரிந்த வரையும், 214 திருப்பதிகட்குச் சென்று வழிபட்டதாகத் தோன்றுகிறது. சீர்காழி பற்றியும் திரு வீழி மிழலை பற்றியும் மிகுதியான பதிகங்கள் பாடியிருப்பதால், 'காழி பாதி - வீழி பாதி' என்று சொல்வதுண்டு.

சம்பந்தரின் பதிகங்களில் பதினொரு பாடல்கள் இருக்கும். சில பதிகங்களில் பன்னிரண்டும் இருக்கும். இறுதிப்பாடல் 'திருக்கடைக் காப்பு' எனப்படும். ஒவ்வொரு பதிகத்திலும், எட்டாம் பாடலில் இராவணன் கயிலை மலையை எடுத்துச் சிவனால் நசுக்கப்பட்டதும், ஒன்பதாம் பாடலில் திருமாலும் நான்முகனும் சிவனை வழிபடுவதும், பத்தாம் பாடலில் சமண -புத்த மதங்களைத் தாக்குதலும், பதினோராம் பாடலில் சம்பந்தர் தம்பெயரைப் புகழுடன் கூறுவதோடு பாடலைப் படிப்பதன் பயனையும் கூறுதலும் அமைந்திருக்கும். பதினோராம் பாடல்களில் தம்மைப்பற்றிக் கூறுவதால், 'சம்பந்தன் தன்னைப் பாடுவான்' என்னும் மொழி எழுந்துள்ளது. இதனைத் தற்புகழ்ச்சி என்று கொள்ளாமல், தன்வரலாறு (Autobiography) கூறுதல் என்று கொள்ளலாம்.

சம்பந்தர் தம்மைத் 'தமிழ் விரகர்' என்று கூறிக்கொள்வதால் அவரது தமிழ்ப் பற்று விளங்கும். ஆதி சங்கரர் சம்பந்தரைத் 'திராவிட சிசு' என்று கூறியிருப்பது ஈண்டு ஒப்பு நோக்கத்தக்கது. எனவே, சம்பந்தரை வைதிகப் பார்ப்பனர் என்று கொள்ளாமல், பண்டைத் தமிழ்ப் பார்ப்பன மரபைச் சார்ந்தவர் என்று கூற வாய்ப்பு உண்டு என்னும் கருத்து எண்ணத் தக்கது.

சம்பந்தர், தந்தையும் மைந்தனும் போன்ற (சற்புத்திர மார்க்கம்) முறையில் இறைவனோடு ஈடுபாடு கொண்டவர் என்று சொல்லப்படுகின்றார். அதற்கேற்ப அவருடைய பாடல்கள் சில அமைந்துள்ளன.

சம்பந்தர் தேவாரத்தில், யமகம், மாலை மாற்று முதலிய சுவைப்பாடல் வகை பல உள்ளன. அவற்றை விரிப்பின் பெருகும். ஒன்றே ஒன்று மட்டும் காண்போம்:

பிரமபுரம் பற்றிய 127 ஆம் பதிகத்தில் பன்னிரண்டு பாடல்கள் உள்ளன. ஒவ்வொரு பாடலிலும், முதல் அடியே, இரண்

டாவது அடியாகவும்-மூன்றாவது அடியாகவும் - நான்காவது அடியாகவும் உள்ளன. வந்ததே திரும்பத் திரும்ப வருவதற்கு யமகம் என்பது பெயராம். மாதிரிக்காக முதல் பாடலை மட்டும் காண்பாம்: -

''பிரம புரத்துறை பெம்மா னெம்மான்
பிரம புரத்துறை பெம்மா னெம்மான்;
பிரம புரத்துறை பெம்மா னெம்மான்
பிரம புரத்துறை பெம்மா னெம்மான்''

இது தொகுப்பு பற்றிய நூலாதலின் மேலும் விரிப்பு வேண்டியதில்லை.

இவர் மகேந்திரவர்ம பல்லவன் காலத்தவராதலின், இவரது காலம் ஏழாம் நூற்றாண்டின் முற்பகுதியாகும்.

இவர் மூன்றாம் அகவையிலேயே பாடினார் என்பதும், தாம் வாழ்ந்த பதினாறாண்டு காலத்தில் இவ்வளவு பாடல்கள் பாடினார் என்பதும் வியப்பிற்கு உரிய செய்திகளாகும்.

இவர் நல்லூர்ப் பெருமணக் கோயிலில், திருமணக் குழுவோடு சோதியில் கலந்தார் என்பது சிலருடைய ஐயத்திற்கு இடமான செய்தியாகும். மதுரையில் சம்பந்தர் தங்கியிருந்த மடம் சமணரால் கொளுத்தப்பட்டது. இவர் மதுரையில் எண்ணாயிரம் சமணர்களைக் கழுவிலேற்றச் செய்து வந்தார். இந்த நிலையில், சமணர்கள், நல்லூர்ப் பெருமணக் கோயிலில் தீக்கொளுத்தி, அனைவரையும் கூண்டோடு கயிலாயம் போகச் செய்தார்கள் என்பது சிலரது கருத்து. இந்தக் கால அரசியல் கட்சிகளைப் போல் அந்தக் காலத்தில் மதவாதிகள் செயல் பட்டனர் என்பதாகச் சொல்லப்படுகிறது. இந்தக் கருத்து அறிஞர்களின் ஆய்வுக்கு உரியது.

உலகியலில் ஒரு செய்தியை எழுதி, இறுதியில் முத்திரையுடன் எழுதியவரின் பெயர் கையொப்பமாக இடப்படுவது போல, சம்பந்தர் தம் பதிகங்களின் இறுதியில் தம்மைப் பற்றிக் கூறுவதால், இவரை 'முத்திரைக் கவிஞர்' என்று குறிப்பிடுவதுண்டு.

## திருநாவுக்கரசர் தேவாரம்

திருநாவுக்கரசர் 'கூற்றாயினவாறு' என்று தொடங்கும் பதிகம் முதல் 'ஒரு மானைத் தரிக்கும்' என்பது ஈறாக நாற்பத் தொன்பதாயிரம் பதிகங்கள் பாடியிருப்பதாகத் திருமுறை கண்ட புராணம் கூறுகிறது. பாடல்:

''குருநாமப் பரஞ்சுடரைப் பரவிச் சூலைகொடும்
'கூற்றாயின' என எடுத்துக் கோதில்
ஒரு மானைத் தரிக்கும் ஒருவரையுங் கூறும்
ஒரு நாற்பத் தொன்பதி னாயிரம தாக...'' (15)

என்பது பாடல் பகுதி. காப்பிட்டிருந்த அறையிலிருந்து எடுத்துத் தூய்மை செய்து கிடைத்த பதிகங்கள் 321 பதிகங்கள் என அதே புராணம் கூறுகிறது:

''நண்புற்ற நாவரசர் முந்நூற் றேழ்மூன்றினால்'' (25)

என்பது பாடல் பகுதி.

சம்பந்தர் பதினாறு யாண்டுகள் இருந்ததாகவும், நாவுக்கரசர் 81 யாண்டுகள் வாழ்ந்ததாகவும் சொல்லப்படுகின்றனர். எனவே, சம்பந்தர் பாடிய பதினாறாயிரம் பதிகங்களைவிட மிகுதியாக, நாவுக்கரசர் நாற்பத்தொன்பதாயிரம் பதிகங்கள் பாடியிருப்பதில் வியப்பில்லை. சம்பந்தர் இளமையிலேயே பாடத் தொடங்கிவிட்டார். நாவுக்கரசரோ ஓரளவு அகவை வளர்ந்தபின் பாடினார் என்பதும் நினைவுகூரத் தக்கது.

நாவுக்கரசர் தேவாரப் பாடல்கள், நான்காவது – ஐந்தாவது – ஆறாவது திருமுறைகளாகத் தொகுக்கப்பட்டுள்ளன. நான்காம் திருமுறையில் 113 பதிகங்களும் 1070 பாடல்களும், ஐந்தாம் திருமுறையில் 100 பதிகங்களும் 1015 பாடல்களும், ஆறாம் திருமுறையில் 99 பதிகங்களும் 1981 பாடல்களுமே உள்ளனவாக இப்போது கிடைத்துள்ளன. ஆக மொத்தம் 312 பதிகங்களும் 3066 பாடல்களுமே இப்போது உள்ளன. திருமுறை கண்ட புராணத்தில், 321 பதிகங்கள் எனக் கூறப்பட்டுள்ளது. அவற்றுள்ளும் ஒன்பது குறைந்து இப்போது 312 பதிகங்களே இருப்பது நமது தீப்பேறாகும்.

ஆனால் வேறு நூலில் நாவுக்கரசரின் பாடல் எண்ணிக்கை வேறு விதமாகக் கூறப்பட்டுள்ளது; சுந்தரர் தம் பாடல் ஒன்றில், ''ஏழெழு நூறு இரும்பனுவல் ஈந்தவன் திருநாவினுக்கு அரையன்'' (தென் திருநின்றியூர்ப் பதிகம் - 2) என்று கூறியுள்ளார். நம்பியாண்டார் நம்பி, தமது 'திருவேகாதசமாலை' என்னும் நூலில் ''பதிகம் ஏழெழுநூறு பகரும் மாகவியோகி பரசு நாவரசரான பரம காரண வீசன் (7) என்று பாடியுள்ளார். நாவரையர் பாடியவை 4900 பாடல்கள் என்பதாகச் சுந்தரர் பாடலாலும், 49,000 பாடல்கள் என்பதாக நம்பியாண்டார் நம்பி பாடலாலும் அறியப்படுகின்றன. போனவை போக, நின்றன வரையும் ஆக்கமே.

நான்காம் திருமுறையில் முதல் 21 பதிகங்கள், கொல்லி - காந்தாரம் - பியந்தைக் காந்தாரம் - சாதாரி - காந்தார பஞ்சமம் - பழந்தக்க ராகம் - பழம் பஞ்சுரம் - இந்தளம் - சீகாமரம் - குறிஞ்சி என்னும் பண்களைக் கொண்டுள்ளன. 22 முதல் 79 வரையுள்ள பதிகங்கள் 'திரு நேரிசை' என்ற யாப்பு தொடர்பான பெயருடன் கொல்லி என்னும் பண்ணைக் கொண்டுள்ளன. இவை அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தப் பாக்களால் ஆனவை. 80 முதல் 119 வரையுள்ள பதிகங்கள், 'திருவிருத்தம்' என்னும் யாப்பு தொடர்பான பெயருடன், கட்டளைக் கலித்துறைப் பாக்களால் ஆனவை. பண் முறையும் யாப்பு முறையும் பின்பற்றப்பட்டுள்ளன.

ஐந்தாம் திருமுறை 'திருக் குறுந்தொகை' என்னும் பெயருடன் தொகுக்கப்பட்டுள்ளது; பண் குறிப்பிடப்படவில்லை; கலி விருத்தப் பாக்களால் ஆனது இத்திருமுறை.

ஆறாம் திருமுறை, திருத் தாண்டகம் என்னும் யாப்பு வகைப் பெயருடன், எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தத்தால் ஆனது. இத் திருமுறை 'திருத் தாண்டகம்' என்னும் பெயர் கொண்டுள்ளதால், 'தாண்டக வேந்தன்' என்னும் பெயர் திருநாவுக்கரசருக்கு வழங்கப் பெறுகிறது.

இவர் நூற்றிருபத்தாறு திருப்பதிகள்மேல் பதிகம் பாடியிருக்கிறார். பல திருப்பதிகட்குத் தனித் தனிப் பதிகம்

பாடாமல், சில பாடல்களுக்குள்ளேயே, அத்திருப்பதிகளைத் தொகுத்துக் குறிப்பிட்டுள்ளார். இத்தகையவற்றை 'அடைவுப் பதிகள்' என்றும் 'வைப்புப் பதிகள்' என்றும் கூறுவர்.

சுவையான அமைப்புகள்:

நாவுக்கரசர் நான்காம் திருமுறையில் - ஐந்தாம் பதிகத்தில் ஒவ்வொரு பாவின் இறுதியிலும் ஒவ்வொரு பழமொழியை அமைத்துப் பாடியுள்ளார். முறையே அப்பழமொழிகள் வருமாறு:-

1. 'கனியிருக்கக் காய் கவர்ந்த கள்வனேனே' –
2. 'முயல்விட்டுக் காக்கைப்பின் போன வாறே'.
3. 'அறம் இருக்க மறம் விலைக்குக் கொண்டவாறே'.
4. 'பனி நீரால் பரவை செயப் பாவித்தேனே'.
5. 'ஏதன்போர்க்கு ஆதனாய் அகப்பட்டேனே'.
6. 'இருட்டறையில் மலடு கறந்து எய்த்த வாறே'.
7. 'விளக்கிருக்க மின்மினித் தீக்காய்ந்த வாறே'.
8. 'பாழூரில் பயிக்கம் புக்கு எய்த்த வாறே'.
9. 'தவம் இருக்க அவம் செய்து தருக்கினேனே'.
10. 'கரும்பிருக்க இரும்புகடித்து எய்த்த வாறே'.

இந்த அமைப்பு மிகவும் சுவையாயுள்ளதன்றோ? ஏழாம் பதிகத்தில் ஒவ்வொரு பாட்டின் இறுதியிலும் 'என் மனத்தே வைத்தேனே' என்னும் தொடரை அமைத்துள்ளார். இது திரு அங்க மாலை எனப்படும். பதினொன்றாம் திருமுறையில் பாடல்களின் இறுதியில் 'நவச்சிவாயவே' என்பதை அமைத்துள்ளார். இது நமச்சிவாயப் பதிகம் எனப்படும்.

எண் விளையாட்டு:

நான்காம் திருமுறை - பதினெட்டாம் பதிகத்திலும், ஐந்தாம் திருமுறை எண்பத்தொன்பதாம் பதிகத்திலும், ஒன்று முதல் பத்து எண்களை அமைத்து விளையாடியுள்ளார் - அதாவது முதல் பாட்டின் நான்கு அடிகளிலும் தொடக்கத்தில் 'ஒன்று கொலாம்' என்பது இருக்கும். இப்படியே ஒவ்வோர் எண் கொண்ட பாடலின் நான்கு அடிகளிலும் தொடக்கத்தில் அவ்வப் பாடலின் எண் குறிப்பிடப்பட்டிருக்கும். முறையே,

பத்தாவது பாடலின் நான்கு அடிகளிலும் தொடக்கத்தில் 'பத்துக் கொலாம்' என்றிருக்கும். இது, நான்காம் திருமுறை-பதினெட்டாம் பதிகத்தின் அமைப்பாகும். ஐந்தாம் திருமுறை-எண்பத்தொன்பதாம் பதிகத்தில், ஒன்று - ஒன்று - ஒன்று - ஒன்று எனவும், பத்து - பத்து - பத்து - பத்து எனவும் அமைக்கப்பட்டிருக்கும். எடுத்துக் காட்டாக, நான்காம் திருமுறை - பதினெட்டாம் பதிகத்தின் மூன்றாம் பாடலைக்காண்பாம்.

''மூன்று கொலாம் அவர் கண்ணுத லாவன
மூன்று கொலாம் அவர் சூலத்தின் மொய்யிலை
மூன்று கொலாம் கணை கையது வில் நாண்
மூன்று கொலாம் புரம் எய்தன தாமே''.

பொருள்: – முதலடி: சிவனுக்கு நெற்றிக்கண் உட்பட மூன்று கண்கள் உள. அடி2. சிவனது சூலப் படையின் நுனியில் மூன்று இலைகள் – மூன்று கூர்கள் இருக்கும் (திரி சூலம்). அடி 3: சிவன் முப்புரங்களை எரிக்கச் சென்ற போது, கையில், மேரு மலையாகிய வில் வாசுகிப் பாம்பாகிய நாண் - திருமாலாகிய அம்பு என்னும் மூன்றும் வைத்திருந்தார். அடி 4: சிவன் எரித்தவை மூன்று புரங்கள்.

அகர வரிசை அமைப்பு:

நாவுக்கரசர், ஐந்தாம் திருமுறை - தொண்ணூற்றேழாம் பதிகத்தில், ஔவையாரின் ஆத்திசூடி – கொன்றை வேந்தன் போல், பாடல்களை அ,ஆ – என்னும் அகர வரிசையில் தொடங்கியுள்ளார். இந்தப் பதிகத்தில் மட்டும் முப்பது பாடல்கள் உள்ளன. ஔவையாரின் ஆத்திசூடி, கொன்றை வேந்தன் ஆகிய நூல்களுக்கும், இன்னும் பிற்காலத்தில் தோன்றிய பாரதியார் ஆத்திசூடி முதலிய பலர் எழுதிய ஆத்திசூடிகட்கும் இந்தப் பதிகம் ஒரு முன்னோடியாக (Pioneer) உள்ளது. இனி முப்பது பாடல்களின் முதல் சொற்கள் முறையே வருமாறு: –

அண்டம், ஆதி, இட்ட, ஈறில், உச்சி, ஊரிலா, எந்தை, ஏன, ஐயன், ஒருவனாகி, ஓத, ஔவதன், அக்கும் (ஃ), கங்கை(க), ஙகர(ங), சரண(ச), ஞமனென்(ஞ), இடப (ட), இணர்ந்து(ண), தருமம்(த), நம(ந), பற்பல்(ப), மணி(ம), இயக்கர் (ய), அரவ(ர), இலங்கை(ல), அழல்(ழ), இளமை (ள),

தன்னில்(ன) - என்பனவாம். வ,ற என்னும் இரண்டெழுத்து கட்கு மட்டும் பாடல் இல்லை.

யான் படித்துப் பார்த்த இரண்டு பதிப்புகளில், 'ல' என்னும் எழுத்துக்காக உள்ள 'இலங்கை மன்னனை' என்று தொடங்கும் பாடல், முப்பதாம் பாடலாகத் தரப்பட்டுள்ளது. இதனை, 'ர' என்னும் எழுத்துகாக்க உள்ள 'அரவ' என்று தொடங்கும் பாடலுக்கு அடுத்தாற்போல் அமைக்கவேண்டும்– அதாவது - இருபத்தேழாவது பாடலாக அமைத்திருக்க வேண்டும்.

ஆனால், நாவுக்கரசர் ஒவ்வொரு பதிகத்தின் இறுதிப்பாட்டிலும், கயிலையை எடுத்த இராவணனைச் சிவன் அடக்கி ஆட்கொண்டதைக் கூறியுள்ளார் ஆதலாலும், 'இலங்கை மன்னன்' என்று தொடங்கும் பாடலிலும் இச் செய்தி கூறப்பட்டிருத்தலாலும், இந்தப் பாடல் முப்பதாம் பாடலாக – அதாவது – இறுதிப் பாடலாக அமைக்கப்பட்டுள்ளது. 'ல' எழுத்துக்கு உரிய பாடல் இறுதியில் இருப்பதாக எண்ணி அமைதி கொள்வதைத் தவிர வேறு வழியில்லை.

நாவுக்கரசர் ஒவ்வொரு படலத்தின் இறுதியிலும் இராவணனைச் சிவன் ஆட்கொண்டதைக் குறிப்பிட்டிருப்பதற்குச் சேக்கிழார் தமது பெரிய புராண நூலில் ஒரு பொருத்தம் கூறியுள்ளார். அதாவது:–

இராவணன் முதலில் சிவனுக்கு எதிராக நடந்து கொண்டு கயிலையைத் தூக்கினான். பின் சிவன் அவனைக் காலால் அமுக்கியதும், அவன் அஞ்சிச் சிவன்மேல் பாடினான்; உடனே சிவன் அவனுக்கு இரங்கி அருள் செய்தார். அதுபோல, நாவுக்கரசர் முதலில் சமணமதம் புக்குச் சைவத்திற்கு எதிராகச்செயல் பட்டார். பின்னர் மீண்டும் சைவத்திற்கு வந்து சிவனைப் பாடி அருள் பெற்றார். இதனைக் குறிப்பிடுவதுபோல், ஒவ்வொரு பதிகத்தின் இறுதியிலும் இராவணன் வரலாற்றைக் கூறலானார் – என்பதாகச் சேக்கிழார் கற்பனை செய்துள்ளார்: பாடல்:

''இத்தன்மை நிகழ்ந்துழி நாவின் மொழிக்கு இறையாகிய
அன்பரும் இங்நெடுநாள்
சித்தம் திகழ் தீவினையேன் அடையும் திருவோ இது
என்று தெருண்டறியா
அத்தன்மைய னாய இராவணனுக்கு அருளும்
கருணைத் திறமான அதன்
மெய்த்தன்மை அறிந்து துதிப்பது மேல் கொண்டு
வணங்கினர் மெய்யுறவே'' (1345)

என்பது பாடல். நாவுக்கரசர் இறைவனுக்குத் தொண்டன் என்ற முறையில் (தாசமார்க்கம்) இயங்கி அதற்கேற்பப் பாடியுள்ளார் – என்று சொல்லப்படுகிறார். மகேந்திரவர்மப் பல்லவனைச் சமணத்திலிருந்து சைவத்திற்கு இவர் மாற்றியவராதலின், அவன் காலமாகிய ஏழாம் நூற்றாண்டே நாவுக்கரசின் காலமுமாகும்.

## சுந்தர மூர்த்தி தேவாரம்

சுந்தர மூர்த்தி என்னும் சுந்தரர், 'பித்தா பிறை' என்னும் பதிகம் முதல் 'ஊழி தோறும்' என்பது வரை முப்பத்தெட்டாயிரம் பதிகங்கள் பாடியிருப்பதாகத் திருமுறை கண்ட புராணம் கூறுகிறது.

''பித்தா' என்னும், இன்ப முதல் திருப்பதிகம் 'ஊழி
தோறும்' ஈறாய் முப்பத் தெண்ணாயிரமதாக
முன்பு புகன்றவர் நொடித்தான் மலையிற் சேர்ந்தார்''
(16)

என்பது பாடல் பகுதி. 'ஊழி தோறும்' என்பது, ஒரு பதிகத்தைக் குறிக்கின்றதா - அல்லது - ஒரு பதிகத்தின் இறுதிப் பாடலைக் குறிக்கின்றதா? குழப்பமாயிருக்கின்றது. சென்னை - சைவ சித்தாந்த மகா சமாசத்தினர் வெளியிட்டுள்ள சுந்தரர் தேவாரப் பதிப்பில், 'ஊழிதோறூழி' என்று தொடங்கும் பாடல் எல்லாவற்றிற்கும் இறுதிப் பாடலாய் உள்ளது.

தில்லைக் கோயில் அறைக்குள் செல்லரித்தவை போக எஞ்சிய பதிகங்கள் நூறு எனத் திருமுறை கண்ட புராணம் கூறுகின்றது:

"வண்பெற்ற முறையொன்று நூற்றினால் வன்தொண்டர்" (25) என்பது பாடல் பகுதி. வன்தொண்டர் என்பது சுந்தரரின் மற்றொரு பெயர்.

சுந்தரர் தேவாரம் ஏழாம் திருமுறையாகத்தொகுக்கப்பட்டுள்ளது. சுந்தரர் பதிகங்கள் பண் முறையில் நிரல் செய்யப்பட்டுள்ளன. இவர் சென்று வழிப்பட்ட திருப்பதிகளின் வரிசை முறைப்படி தொகுக்கப்பட்ட பதிப்பும் உண்டு. இந்தத் திருப்பதி வரிசைமுறை, பெரிய புராணத்தில் சேக்கிழாரால் கூறப்பட்டுள்ள வரிசை முறையாகும்.

சுந்தரரின் நூறு பதிகங்களுள், பன்னிரண்டு பதிகங்கள் இந்தளம் என்னும் பண்கொண்டவை; நான்கு - தக்கராகம் என்னும் பண்கொண்டவை; பதினான்கு - நட்ட ராகம்; ஏழு கொல்லி; ஒன்பது-கொல்லிக் கௌவாணம்; ஏழு - பழம் பஞ்சுரம்; பதினேழு - தக்கேசி; ஐந்து காந்தாரம்: ஒன்று - பியந்தைக் காந்தாரம்; ஒன்று - காந்தார பஞ்சமம்; நான்கு - நட்ட பாடை; நான்கு-நட்ட ராகம்; நான்கு -சீகாமரம், நான்கு - குறிஞ்சி; ஒன்று-கவுசிகம்; ஒன்று-செந்துருத்தி; ஐந்து-பஞ்சமம். ஆக, நூறு பதிகங்கட்கும் உரிய பண்கள் இவை. இது பண் வாரியாகத் தொகுக்கப்பட்ட முறையாகும்.

சில பதிகங்களில் பதினொரு பாடல்கள் இருக்கும். எனவே சுந்தரர் தேவார நூல், ஆயிரத்து முப்பத்தாறு பாடல்கள் கொண்ட நூறு பதிகங்கள் உடைய தாகும்.

சுந்தரர் சிவனோடு தோழமை முறையில் (சக மார்க்கம்) பழகியவராகச் சொல்லப்படுகிறார். அதற்கு ஏற்றாற் போன்ற பாடல்கள் சிலவும் உள.

ஞான சம்பந்தர் போலவே, சுந்தரரும், பதிகங்களின் இறுதிப் பாடல்களில், தாம் தமிழ் பாடியது பற்றியும் படிப்பவர் பயன் உறுவது பற்றியும் கூறியுள்ளார். எனவே, இவரையும் தம் 'முத்திரை' பொறித்த 'முத்திரைக் கவிஞர்' என்று கூறலாம். இவரது காலம் எட்டாம் நூற்றாண்டாகும்.

தமிழ்வெறி

இந்தக் காலத்தில் தமிழைப் பற்றிப் பேசினால் 'தமிழ் வெறி' என்று கூறுவர். தேவார ஆசிரியர்கள் தமிழ் வெறியர் களாகவே - தமிழ்ப் பித்தர்களாகவே இயங்கியுள்ளனர். தம் பாடல்களைத் தமிழ்-தமிழ் என்கின்றனர். சுந்தரர் தன்னைப் பற்றிக் கூறிக்கொள்வ தல்லாமல், "நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பும் ஞானசம்பந்தன்" எனவும், "நல்லிசை ஞான சம்பந்தனும் நாவினுக்கரசரும் பாடிய நற்றமிழ் மாலை" என மற்ற இருவரையும் தமிழ்ப் பைத்தியங்களாகக் கூறியுள்ளார். இந்த அமைப்பை நோக்குங்கால், மூவரும், கடவுளுக்காகத் தமிழ் பாடினர் என்று கூறுவதனினும், தமிழுக்காகக் கடவுளைப் பாடினர் என்று கூறலாம் போல் தோன்றுகின்றது என்று மதிப்புமிகு முருகபூபதி என்னும் நீதிபதி யவர்கள் கூறியது நினைவுக்கு வருகிறது. எனவே, மூவர் பாடல்கட்கு, 'மூவர் தமிழ்' என நம் முன்னோர்கள் பெயர் கொடுத்திருப்பது மிகவும் பொருந்து மல்லவா? இதற்கு, மேலும் அகச் சான்றுகளாக, ஞானசம்பந்தர் தேவாரப் பாடல்களிலிருந்து சில பாடல் துணுக்குகளைப் பாடல் எண்ணுடன் பார்க்கலாம்:

சிவ நெறிய தமிழ்-11, அருள் மாலைத் தமிழ்-33, நிகரில் லன தமிழ் மாலைகள்-!29, நலங்கொள் தமிழ்-151, குன்றாத் தமிழ்-194, இயல்வல இசை மலி தமிழ்-238, சொல் ஆர் தமிழ் மாலை-337, பாமரு செந் தமிழ் மாலை - 469, தகை மலி தண் தமிழ்-480, ஞால மிக்க தண் தமிழால்...கோல மிக்க மாலை - 558, சீர் மிகுந்த தமிழ்-655, மறையிலங்கு தமிழ் - 666, வண் தமிழ்-677, உரை ஆர் தமிழ் மாலை - 914, ஆரா அருந் தமிழ் மாலை - 968, முடிவு இல் இன் தமிழ்-1024, பரவிய செந்தமிழ் -1184, பல மிகு தமிழ் - 1195, தவமல்கு தமிழ் - 1217, குற்ற மில் செந்தமிழ-1227, சந்தம் இன் தமிழ்கள் - 1237, ஞானத் தமிழ் - 1270, கலிமலி தமிழ் - 1303, இசை செய்த படமலி தமிழ்-1314, எழில் மறை தன்னியல் கலைவல தமிழ்-1336, உருவாரும் ஒண் தமிழ் மாலை - 1622, குலமார் தமிழ்-1654, வடமார் தமிழ் - 1709, பலந்தரு தமிழ்க் கிளவி - 1807, செந் தண் தமிழ்-1861, பண்பொலி செந்தமிழ் மாலை-1992, செப்

பரிய தன் தமிழால் தெரிந்த பாடல், – 2058, ஒளிர் பூந் தமிழ் மாலை – 2101, தாழு மனத்தால் உரைத்த தமிழ் கள்-2112, செறிவண் தமிழ் செய்மாலை-2156, மறை வளரும் தமிழ்மாலை – 2199, இசையால் உரைத்த தமிழ் மாலை-2420, ஒள் தமிழ்களின் அணி கொண்ட பத்து-2431, சந்தம் ஆர்ந்து அழகாய தண் தமிழ் மாலை-2441, சந்த மாயின பாடல் தண் தமிழ்-2485, சந்துலாந் தமிழ் மாலை – 2658, ஆய்ந்து சொன்ன அருந்தமிழ்கள் – 2713, வல்லவாறே புனைந்தேத்தும்...வண்தமிழ்-2735, செல்வராக நினையும்படி சேர்த்திய செந்தமிழ்-2779, விலையுடை அருந்தமிழ் மாலை-2844, ஆய்ந்து ஓதிய ஒண்தமிழ்-2899, சொல் தமிழ் இன்னிசை மாலை-2975, ஏரினார் தமிழ்-3128, ஒண் தமிழ் நூல் இவை பத்து – 3513, பழுதில் இறை எழுது மொழி தமிழ் விரகன்-3525, எந்தை அடி வந்தணுகு சந்தமொடு செந்தமிழ், மயிலாடு துறையைப் புணர்ந்த தமிழ்–3558, சங்க மலி செந்தமிழ்கள்–3602, சிந்தையுளிடை பெற உரை செய் தமிழ் – 3755, பண் உலாம் அருந்தமிழ் – 3777, உறும் பொருளால் சொன்ன ஒண் தமிழ்-4147 – முதலியனவாம்.

சம்பந்தர் தம்மை, தமிழ் ஞான சம்பந்தன், தமிழ் விரகன் என்றெல்லாம் பல பாடல்களில் கூறிக்கொண்டுள்ளார். மற்றவர் பாடல்களில் உள்ள தமிழ் முழக்கத்தையும் கூறவேண்டு மாயின் மிகவும் விரியு மாதலின் இவ்வளவோடு அமையலாம்.

### பதி வாரித் தொகுப்பு

மூவர் தேவாரங்களும் தனித் தனியாக - அவரவர் பெய ரால், பண் வாரியாகவும் பதி(தலம்) வாரியாக்வும் தொகுக்கப் பெற்ற பதிப்புகள் சில–பல உள்ளன. திருப்பனந்தாள் காசி மடத்து அடிகளாரால் முழு அடங்கல் முறையாக–மூவர் தேவராங்களும் பதிவாரியாகத் தொகுப்பிக்கப்பட்டுள்ளன. இதன் பதிப்பாசிரியர் டி.எம். குமர குருபரன் பிள்ளை.

இந்தப் பதிப்பில் உள்ள சிறப்புக் கூறாவது: ஓர் ஊரை எடுத்துக் கொள்ளின், அவ்வூரின்மேல் சம்பந்தர் பாடியுள்ள திகம் (பதிகங்கள்) முதலிலும், அடுத்து நாவுக் கரசரின் பதிக

மும் (பதிகங்களும்)' மூன்றாவதாகச் சுந்தரர் பதிகமும் அமைத்துத் தொகுக்கப்பட்டிருக்கும்.

இப்பதிப்பில், முதலில் சோழநாட்டுப் பதிகள் இடம் பெற்றுள்ளன; அவற்றுள்ளும், காவிரியாற்றிற்கு வடகரையில் உள்ள பதிகள் முதலிலும் தென்கரைப் பதிகள் பின்னரும் இடம்பெற்றுள்ளன. அடுத்தடுத்து, ஈழ நாட்டுப் பதிகள், பாண்டிய நாட்டுப் பதிகள், மலை நாட்டுப் பதிகள், கொங்கு நாட்டுப் பதிகள், நடு நாட்டுப் பதிகள், தொண்டை நாட்டுப் பதிகள், துளுவ நாட்டுப் பதிகள், வட நாட்டுப் பதிகள், ஆகியவை முறையே இடம்பெற்றுள்ளன. இவற்றிற்குப் பின்னர், ஊர்ப் பெயர் (பதிப்பெயர்) குறிப்பிடப்படாத பொதுப் பதிகங்கள் அமைக்கப்பட்டுள்ளன.

ஒவ்வொரு பதியைப் பற்றியும் ஆராய்ச்சி செய்பவர்க்கு இப்பதிப்பு மிகவும் உதவும். மூவர் பதிகங்களையும் ஒருசேரத் தொடர்ந்து தந்திருக்கும் இந்தப் பதிப்பு மிகவும் பாரட்டத் தக்கதாகும்.

வெளியீடு: குமர குருபரன் சங்கம், திருவைகுண்டம், பில வங்க, மார்கழித் திருவாதிரை-குமர குருபரன் அச்சகம், திருவைகுண்டம்-1968.

## தேவாரத் திரட்டுகள்

மூவர் தேவாரப் பாடல்களிலிருந்து சிலவற்றை எடுத்துத் தொகுத்து, 'தேவாரத் திரட்டு' என்னும் பெயர் தரப்பட்ட தொகுப்புகள் மூன்று உள்ளன. அவை; அகத்தியர் தேவாரத் திரட்டு, தேவார அருள் முறைத் திரட்டு, அற்புதத் தேவாரத் திரட்டு என்பனவாம். இனி ஒவ்வொன்றாகக் காண்பாம்:

### 1. அகத்தியர் தேவாரத் திரட்டு

இராச ராச சோழனின் வேண்டுகோளின்படி நம்பியாண்டார் தொகுத்த தேவாரத் திருமுறைகள் ஏழும் அடங்கல் முறை எனப்படும். அவை அனைத்தையும் நாள்தோறும் கற்பது அரிது. எனவே, அவற்றிலிருந்து சிறந்த சில பாக்களை

எடுத்துத் தொகுத்துத் தருமாறு சிவாலய முனிவர் பொதிய மலை போந்து தவங்கிடந்து வேண்டிக் கொள்ள, அகத்திய முனிவர் இருபத்தைந்து பதிகங்களைத் தேர்ந்தெடுத்துத் திரட்டித் தந்தாராம். இதற்கு 'அகத்தியர் தேவாரத் திரட்டு' என்னும் பெயர் ஈயப்பட்டுள்ளது. இந்த அகத்தியர் எந்த அகத்தியரோ? இதன் தொடர்பாகக் கட்டப்பட்டுள்ள கதை வியப்பிற்கு உரியது.

சம்பந்தர் தேவாரத்திலிருந்து பத்துப் பதிகங்களும், நாவுக்கரசர் தேவாரத்திலிருந்து எட்டுப் பதிகங்களும், சுந்தரர் தேவாரத்திலிருந்து ஏழு பதிகங்களும் ஆக இருபத்தைந்து பதிகங்கள் இதில் உள்ளன. இந்த இருபத்தைந்து பதிகங்களையும் நாடோறும் ஓதின், மூவர் தேவாரம் முழுமையும் ஓதிய பயன் கிட்டுமாம். இத்தொகுப்பின் காலம் தெரியவில்லை.

இந்தத் தொகுப்புக்குப் பல பதிப்புகள் உள்ளன. அவை ஆண்டு வாரியாக வருமாறு: ஒவ்வொரு பதிப்பிற்கும் பதிப்பாசிரியர் பெயர், அச்சகம், ஆண்டு ஆகியவை முறையே தரப்படும்:-

1. ஆறுமுக நாவலர் & சதாசிவப்பிள்ளை - வித்தியானுபாலன யந்திர சாலை, சென்னை - 1873.

2. சுந்தர சுவாமிகள், மனோன் மணி விலாச அச்சுக்கூடம் - 1874.

3. சுப்புராய ஞானியர் - திருமயிலை - சி. பாஸ்டர் அச்சியந்திர சாலை - சென்னை-1878.

4. ஆறுமுக நாவலர் - வித்தியானு பாலன யந்திர சாலை, சென்னை—மூன்றாம் பதிப்பு—1880.

5. முருகேச முதலியார்-கலா ரத்நாகர அச்சுக் கூடம்-1887.

6. அ. இராமசுவாமி — ஜுபிலி அச்சியந்திர சாலை. சென்னை—1888.

7. எம். இ. வீரபாகுபிள்ளை - பொழிப்புரையுடன் - கோல்டன் அச்சகம், சென்னை-1955. இவ்வாறு இன்னும் எத்தனை உள்ளனவோ?

## 2. தேவார அருள் மொழித் திரட்டு

உமாபதி சிவாசாரியார், சைவ சித்தாந்தக் கருத்துகட்கு அடிப்படையாக உள்ளவையும், தமது 'திருவருள் பயன்' என்னும் நூலுக்கு ஏற்றவையாக உள்ளவையும் ஆகிய தொண்ணூற்றொன்பது பாடல்களைத் 'தேவார அருள் மொழித் திரட்டு' என்னும் பெயரில் தொகுத்துத் தந்துள்ளார். இந்தத் தொகுப்பின் காலம், அவரது காலமாகிய பதினான்காம் நூற்றாண்டின் முற்பகுதியாகும்.

இதற்கு மா.வே. நெல்லையப்பப் பிள்ளை உரை எழுதியுள்ளார். வெளியீடு: சைவ சித்தாந்த மகாசமாசம், சென்னை – சாது அச்சுக் கூடம், சென்னை – பதிப்பு ஆண்டு:1933.

## 3. அற்புதத் தேவாரத் திரட்டு

மூவரும் செய்த அற்புதங்கள் தொடர்பான பதிகங்களின் தொகுப்பாகும் இது. ஞானசம்பந்தர் எலும்பைப் பெண்ணாக்கப் பாடிய பதிகம், மருகலில் பாம்பு கடித்தவனைப் பிழைக்க வைத்த பதிகம், அனல் வாதம் – புனல் வாதங்களை வென்ற பதிகங்கள், பண்டியனின் வெப்பு நோய் தீர்த்த திருநீற்றுப் பதிகம், நாவுக்கரசர் திங்களூரில் பாம்பு கடித்த இளைஞனைப் பிழைக்க வைத்த பதிகம், கல் மிதந்த பதிகம், மறைக்கதவினைத் திறந்த பதிகம், சுந்தரர் முதலையுண்ட சிறுவனை உயிருடன் வர வழைத்த பதிகம் - முதலியஅற்புதங்களைச் செய்வதற்காகப் பாடப்பட்ட பதிகங்கள், அற்புதத் தேவாரத் திரட்டு என்னும் பெயருடன் தொகுக்கப்பட்டுள்ளன.

பதிப்பு: பூவை, கலியாணசுந்தர முதலியார்-இந்து தியாலாஜிகல் யந்திர சாலை, சென்னை—1890. இன்னும் தேவாரப் பாக்களின் சிறு சிறு தொகுப்புகள் பலரால் செய்யப்பெற்றுள்ளன.

### திருவாலங் காட்டுத் தேவாரப் பதிகங்கள்

திருவாலங் காட்டுத் திருப்பதிமேல் சம்பந்தர், அப்பர், சுந்தரர் ஆகிய மூவரும் பாடிய 32 பதிகங்களின் தொகுப்பு இது. தொகுப்பு: சண்முகப் பிள்ளை – இலக்ஷ்மி விலாஸ் சாலை, சென்னை – 1874.

**பஞ்ச பூதத் தலத் தேவாரப் பதிகங்கள்**

தில்லை, திருக்காளத்தி, திருவண்ணாமலை, திருவானைக்கா, திருவாரூர் ஆகிய ஐம்பூதத் திருப்பதிகள் பற்றி மூவரும் பாடியுள்ள பதிகங்களின் தொகுப்பு. தொகுத்தவர் - பாலசுப்பிரமணிய முதலியார் - கலாநிதி அச்சுக் கூடம், சென்னை - 1875. (தில்லை=விண்; திருக்காளத்தி=காற்று; திருவண்ணாமலை=நெருப்பு, திருவானைக்கா=தண்ணீர்; திருவாரூர்=மண், இவை ஐம் பூதத் திருப்பதிகள்.)

**திருவேகம்பத் திருப்பதிகள்**

காஞ்சிபுரத்தின்மேல் மூவர்பாடிய பதிகங்களின் தொகுப்பு -பாலசுப்பிரமணிய முதலியார் - கலாநிதி அச்சுக்கூடம், சென்னை - 1875.

**தேவாரப் பதிகத் திருமுறைகள்**

பெரிய புராணத்தில் சேக்கிழார் அடியெடுத்துக் கொடுத்துக் குறிப்பிட்டுள்ள பதிகங்கள் மட்டும் பதி (தல) முறையில் தொகுக்கப்பட்டது இது. பாலசுந்தர முதலியார், தண்டலம் & வாசுதேவப்பிள்ளை - ஆதிகலாநிதி அச்சுக் கூடம்-அக்டோபர்-1881.

**தேவாரம்-தலமுறை**

மூவரும் பதி (தல) முறையில் பாடியுள்ள 795 பதிகங்களின் தொகுப்பு - ஞானசம்பந்தப் பிள்ளை, மதுரை - கலா ரத்நா அச்சுக் கூடம், சென்னை - 1882.

**தேவாரப் பதிகத் திருமுறை**

பண் வாரியாக வரிசைப்படுத்தப்பட்ட நூறு பதிகங்கள் உள்ளன. தொகுப்பு-பதிப்பு: கா. சடாட்சர ஆசிரியர், ஸி. பாஸ்டர் அச்சகம், சென்னை-1883.

**தேவாரப் பதிகத் திருமுறைகள்**

பல பதிகங்கள் பதிமுறையில் தொகுப்பு - பாலசுந்தர முதலியார், தண்டலம் - ஆதிகலாநிதி அச்சுக்கூடம் - 1884.

**தேவாரப் பதிகங்கள்**

திருவெழு கூற்றிருக்கை, திருவாலவாய்த் திருநீற்றுப் பதி

கம், கோளறு பதிகம், திரு நீல கண்டப் பதிகம் ஆகியவற்றின் தொகுப்பு - பாப்புலர் அச்சியந்திர சாலை, சென்னை - 1887.

**நெல்லை - குற்றாலப் பதிகங்கள்**

சம்பந்தரின் திருநெல்வேலிப் பதிகங்களும் திருக்குற்றாலப் பதிகங்களும் உள்ளன -சு.சுப்பிரமணியப்பிள்ளை - சிந்தாமணி யந்திரசாலை, பாளையங்கோட்டை - 1888.

**தேவாரத் திரட்டு**

மூவரின் தேர்ந்தெடுத்த பதிகங்கள் சில - வே. நாராயண சாமி வாத்தியார் - சுந்தர விலாச அச்சுக்கூடம், புரசை, சென்னை - 1897.

**தேவாரத் திரட்டு**

தேவாரப் பதிகங்கள், திருவாசகம் முதலிய ஒன்பது திருமுறைகளிலிருந்து பாடல்கள் தொகுக்கப்பட்ட நூல் இது. மார்கழித் திங்கள் வழிபாட்டுக்காகத் திருவாசகத்திலிருந்து திருவெம்பாவை, திருப்பள்ளியெழுச்சி முதலியன சேர்க்கப்பட்டுள்ளன - சபாபதி நாவலர் & சண்முக முதலியார் - சித்தாந்த வித்தியானுபாலன அச்சியந்திர சாலை - சிதம்பரம் - 1897.

**வேண்டுகோள் பதிகங்கள்**

துன்பங்கள் பல வடிவங்களில் நேரும்போது இறைவனை வேண்டிக் கொள்ளும் முறையில் அமைந்துள்ள மூவர் தேவாரப் பதிகங்கள் சில இத்தொகுப்பில் உள்ளன. தொகுத்தவர் - சித்தாந்த பண்டிதர் ப. இராமநாதபிள்ளை, கழக வெளியீடு- அப்பர் அச்சகம், சென்னை. இந்தத் தொகுதி நான்கு பகுதிகளாக (புத்தகங்களாக) உள்ளன. முறையே ஒவ்வொன்றாகக் காண்பாம்: -

முதல் பகுதி - ஆகஸ்ட் 1954. நோய்-துன்பம் போக வேண்டிக் கொள்ளும் பதிகங்கள்—வருமாறு.

1. அப்பர் அருளிய திரு அங்கமாலை ('தலையே நீ வணங்காய்')
2. சம்பந்தரின் திருநீற்றுப் பதிகம் ('மந்திர மாவது').

3. சம்பந்தரின் கோளறு திருப்பதிகம் ('வேயுறுதோளி')
4. சம்பந்தரின் திருநீலகண்டப் பதிகம் ('அவ்வினைக்கு இவ்வினை')

இரண்டாம் பகுதி - செப்டம்பர், 1954. பதிகங்கள்:-

1. அப்பரின் சூலை நோய் நீக்கிய பதிகம் ('கூற்றாயினவாறு')
2. சம்பந்தரின் முயலகன் நீக்கிய பதிகம்
3. சம்பந்தரரின் பொற் கிழி பெற்ற பதிகம்
4. சம்பந்தரின் இடர் நீக்கிய பதிகம்.

மூன்றாம் பகுதி - செப்டம்பர், 1954. பதிகங்கள்:

1. சம்பந்தரின் விடம் தீர்த்த பதிகம்
2. அப்பரின் நஞ்சு நீக்கிய திருப் பதிகம்
3. சுந்தரரின் இடக்கண் பெற்ற பதிகம்
4. சுந்தரரின் வலக்கண் பெற்ற பதிகம்

நான்காம் பகுதி - அக்டோபர், 1954. பதிகங்கள்:

1. சுந்தரரின் இழி நோய் நீங்கு பதிகம்
2. சம்பந்தரின் வினை நீங்கு பதிகம்
3. அப்பரின் பகை நீங்கு பதிகம்
4. சம்பந்தரின் மழைப் பதிகம்.

இந்தத் தொகுப்பு நூல், தேவாரப் பதிகங்களில் நம்பிக்கை உடையவர்கட்கு ஓர் அருட்கொடையாகு மன்றோ?

**தேவாரத் திருமுறை**

முதல் பாகம் - தி.பொ. பழநியப்பப் பிள்ளை. குறிப்புரையுடன் - 1944.

இரண்டாம் பாகம்-இதன் முதல் தொகுதி 1200 தேவாரப் பாடல்கள். இரண்டாம் தொகுதி 600 தேவாரப் பாடல்கள் பதிப்பு: க.வெள்ளை வாரணனார் - அண்ணாமலைப் பல்கலைக் கழகம் - திருப்பனந்தாள் காசிமடம் நிதிவெளியீடு - 1953.

**ஏழூர்த் தேவாரப் பதிகங்கள்**

திருவையாறு, திரு நெய்த்தானம், திருப்பழனம், திருவேதிகுடி, திருச் சோற்றுத் துறை, திருக்கண்டியூர், திருப்பூந்துருத்தி ஆகிய ஏழு ஊர்ச் (சப்தஸ்தானம்) சிவன் கோயில் திருமேனிகள் கோடையில் காவிரியில் கொணரப்பெற்றுத் திருவிழா

நடை பெறும். இந்த ஏழூர்கள் மேல் மூவர் பாடியுள்ள தேவாரப் பதிகங்களின் தொகுப்பு இது. தொகுப்பு: ந.மு.கோவிந்தராய நாட்டார் (ந.மு. வேங்கடசாமி நாட்டாரின் தம்பி)-மகாலிங்கம் பதிப்பகம், தஞ்சை - 1954.

இவ்வாறு இன்னும் பல தொகுப்புகள் உண்டு. தேவாரப் பாடல்கள் பல மாதிரிகளில் தொகுக்கப் பட்டுப் பயனளித்து வருகின்றன. இத்தனை தொகுப்புகள் உள்ளமை, தேவாரத்தின்பால் மக்களுக்கு உள்ள ஈடு பாட்டை அறிவிக்கிறது.

ஊர்களைப் பற்றியோ, பண்களைப் பற்றியோ ஆராய்ச்சி செய்வோர்க்கு இத்தகைய பதிப்புகள் பேருதவி புரியும்.

**தேவாரத்தின் பல கூறுகள்**

மூவர் தமிழாகிய தேவாரங்கள், அன்பு (பக்தி)நூல் - வழி பாட்டு நூல் – சமய நூல் – ஆன்மீக நூல் – இலக்கிய நூல்-நீதி நூல்-வரலாற்று நூல்-தரை (பூகோள) நூல்-மர இன (தாவர) நூல், உயிரின நூல், பயண நூல், இசை நூல் – மொழி நூல் முதலிய பன்முனைப் பயன்தரும் நூல்களாகச் சொல்லக்கூடிய பல கூறுகளும் (அம்சங்களும்) அமைந்தனவாகப் போற்றப்படும் சிறப்பு உடையனவாம்.

## திருவாசகம்

**எட்டாம் திருமுறை**

சைவத் திருமுறைகள் பன்னிரண்டனுள் திருவாசகம் எட்டாம் திருமுறையாக நிறுத்தப்பட்டுள்ளது. இதன் ஆசிரியர் வாதவூரர் என்னும் மாணிக்க வாசகர். சம்பந்தர், அப்பர் என்னும் நாவுக்கரசர், சுந்தரர், மாணிக்க வாசகர் என்னும் சைவ சமயக் குரவர் நால்வருள் மாணிக்க வாசகரும் ஒருவர். மற்ற மூவரினும் இவர் காலத்தால் பிற்பட்டவ ராதலின் நான்காமவராகக் குறிப்பிடப்படுகிறார்.

தென்னவன் பிரம ராயன் என்னும் பட்டப் பெயருடன் பாண்டிய மன்னனுக்கு அமைச்சராயிருந்த மாணிக்க வாசகர்' அமைச்சர் பதவியைத் துறந்தபின், எல்லாப் பற்றுகளையும் முற்றத் துறந்த முனிவராய், பல நாளும் பல திருப்பதிகட்குச்

சென்று இறைவன் மேல் பாடல்கள் பாடினார். இந்தப் பாடல்களின் தொகுப்பே திருவாசகம் என்பது.

### தொகுப்பாசிரியர்

திருவாசகப் பாடல்களை ஒரு நூலாகத் தொகுத்த தொகுப்பாசிரியர் யார் என்று தெளிவாகத் தெரியவில்லை. மாணிக்க வாசகரே தொகுப்பாசிரியராக இருக்கலாம் என்று தெரிகிறது. இந்தக் காலத்தில், பல நாட்களில் - பல தலைப்புகளின் கீழ் எழுதப்பட்ட பல உதிரிப் பாடல்களை, எழுதியவரே தொகுத்து இன்வார் கவிதைத் தொகுப்பு என்று பெயரிட்டு வெளியிடுவது ஈண்டு ஒப்புநோக்கத் தக்கது.

மாணிக்க வாசகர் தில்லையை அடைந்திருந்தபோது, சிவன் ஓர் அந்தண முனிவராய் வந்து, திருவாசகப் பாடல்கள் அனைத்தையும் மாணிக்க வாசகரைச் சொல்லச் செய்து தம் கையாலேயே அனைத்தையும் எழுதி, இறுதியில், ''மாணிக்க வாசகர் சொல்ல அழகிய திருச்சிற் றம்பல முடையான் எழுதியது'' எனத் தம் கைச்சாத்தும் இட்டுத் தில்லைப் பொன்னம்பலத்திலுள்ள பஞ்சாக்கரப் படிமீது வைத்தான் - என்று கதை சொல்லப்படுகிறது.

### பாடல் எண்ணிக்கை

திரு வாசகத்தில் 'சிவபுராணம்' என்பது முதல் 'அச்சோப் பதிகம்' என்பது ஈறாக ஐம்பத்தொரு தலைப்புகள் உள்ளன. பாடல்களின் மொத்த எண்ணிக்கை 658 ஆகும். சில தலைப்புகளில் பின்வருமாறு சில பாடல்கள் குறைந்துள்ளன:-

திருவுந்தியார், திருப்பூவல்லி என்னும் பகுதிகளில் 20 பாடல்கள் இல்லை; ஒன்று குறைவாக 19 பாடல்களே உள்ளன. திருப்புலம்பலில் 3 உள; 7 குறைவு. திரு வெண்ணப் பதிகத்தில் 6 உள; 4 குறைவு. திருப்படை எழுச்சியில் 2 உள; 8 குறைவு. திருப்படையாட்சியில் 8 உள; 2 குறைவு. பண்டாய நான் மறையில் 7 உள; 3 குறைவு. ஆனந்த மாலையில் 7 உள; 3 குறைவு. அச்சோப் பதிகத்தில் 9 உள; 1 குறைவு. இந்தக் குறைகளையும் சேர்த்தால் திருவாசகத்தில் மொத்தப் பாடல்கள் 688 இருக்கும். பிரார்த்தனைப் பத்திலும் திரு

வெண்பாவிலும் ஒன்று கூடுதலாக 11 பாக்கள் உள்ளன. இந்தக் கூடுதலையும் சேர்த்துத்தான் 658 என்னும் எண்ணிக்கை குறிப்பிடப்பட்டுள்ளது.

இதிலிருந்து தெரிவதாவது:- திரு வாசகத்தில் சில பகுதிகளில் சில பாடல்கள் அழிந்தது போலவே சில தலைப்புகளும் அழிந்து போய்க் கிடைக்காமல் இருக்கலாம் அல்லவா? தெ.பொ.மீனாட்சி சுந்தரனார் பின்வருமாறு ஒரு கருத்து தெரிவித்துள்ளார்:-

'சிவப்பிரகாசப் பெருந் திரட்டு' என்னும் தொகை நூலில் அனுபவப் பணை என்னும் தலைப்பில்,திருவாசகத்தைச் சேர்ந்த இரண்டு பாடல்கள் உள்ளன. அவை 'இன்ப வெள்ளம்' என்னும் தொடரால் முடிந்திருப்பதால், அப்பகுதிக்கு இன்பப் பத்து அல்லது இன்ப வெள்ளப்பத்து என்ற பெயர் இருந்திருக்க வேண்டும் - என்று கூறி, அந்த இரு பாடல்களையும் தந்துள்ளார். அப்பாடல்கள் வருமாறு:-

''அன்னையும் ஆயமும் கேண்மின்களோ எனது
ஆருயிர் ஆய சிவபெருமான்
என்னது யானெனும் இவ்விரண்டும்
என்னுளனாய் இருந்தே கவர்ந்தான்
முன்னை உறவும் பிறவும் காணேன்
மூவுலகும் பரந்து எங்கும் தானாய்
இன்ன தளவென்று இயம்ப ஒண்ணா
இன்ப வெள்ளத்து எனை இட்டனனே''

''வானும் நிலமும் அடையக் கேண்மோ
வள்ளல் பெருந்துறை மேய பெம்மான்
தானும் தன் தையலும் ஆகி என்தன்
சதுரை அழித்து மால் தந்தபோதே
ஊனும் உயிரும் உணர்வும் ஒன்றாய்
உரோமம் எல்லாம் சிலிர்ப்பித்து என்னை
யானும் என்னை அறியாத வண்ணம்
இன்ப வெள்ளத்துள் எனை இட்டனனே''.

என்பன அப்பாடல்கள். இது தெ.பொ.மீ. அவர்களின் கருத்து. இது பற்றி அறிஞர்கள் ஆய்க.

**இயற்பெயர் ஆய்வு**

திருவாசகத்தின் இயற்பெயர் பற்றி ஈண்டு ஓர் ஆய்வு செய்யவேண்டியுள்ளது. இயற்பெயர் என்பது முதலில் இட்ட பெயராகும். பெற்றோர் தம் பிள்ளைக்கு முதலில் இட்ட பெயர் இயற்பெயராகும்; பிறகு அப்பிள்ளைக்கே வேறு வேறு பெயர்கள் வழங்கப்படலாம். அதேபோல், ஒரு நூலுக்கு அதன் ஆசிரியர் முதலில் இட்ட பெயர் இயற்பெயர்; வேறு காரணம் பற்றிப் பிறர் பின்னர் இட்ட பெயரும் அந்நூலுக்கு இருப்பதுண்டு. நாளடைவில் ஆசிரியர் இட்ட இயற்பெயர் மறைய, பின்னர்ப் பிறர் இட்ட பெயரே நிலைத்து விடுவதும் உண்டு. திருவாசக நூற்பெயரும் இன்னதேயாம்.

**சிவ புராணம்:**

மாணிக்க வாசகர் தாம் பல்வேறு பொழுதுகளில் பல இடங்களில்-பல தலைப்புகளில் பாடப்பட்ட பாடல்களைப் பின்னர் அவரே தொகுத்துச் சிவனை எழுதச் செய்தார்-என்பது கதை. சிவன் வந்து எழுதியில்லா விடினும், யாரோ ஒரு பெரியார் எழுதியிருக்கிறார் என்றாவது கொள்ளலாம். உதிரிப் பாடல்களை ஒரு நூலாகத் தொகுத்துச் சொன்னபோது, அந்நூலுக்குச் 'சிவ புராணம்' என்னும் பெயரை மாணிக்க வாசகர் முதலில் இட்டிருக்க வேண்டும். இதற்கு உரிய விளக்கமாவது:

இந்நூலில், 'அண்டப்பகுதி' என்று தொடங்கும் பகுதிக்கு 'திருவண்டப் பகுதி' என்றும், 'போற்றி – போற்றி' என்பது திரும்பத் திரும்ப வந்துள்ள பகுதிக்குப் 'போற்றித் திரு வகவல்' என்றும், 'எம்பாவாய்' என்ற ஈற்றில் முடியும் பகுதிக்கு 'திருவெம்பாவை' என்றும், இவைபோலவே அமைந்திருக்கும் மற்ற பகுதிகட்கு ஏற்ற பெயர்களும் கொடுக்கப்பட்டிருக்கின்றன.

ஆனால், முதல் பகுதிக்குச் 'சிவ புராணம்' என்னும் பெயர் தரப்பட்டது ஏன்? இந்தப் பகுதியில்,

"சிந்தை மகிழச் சிவ புராணம் தன்னை
முந்தை வினை முழுது மோய உரைப்பன் யான்"

என்று உள்ள அடிகளைக் கொண்டு, 'சிவ புராணம்' என்னும்

பெயர் தரப்பட்டிருக்கலாம். இது பிற்காலத்தவர் இப்பகுதிக் குத் தந்த பெயராகும்.

ஆனால், இப்பகுதி முழுமையையும் அமைதியாகப் படித்துப் பார்க்கின், சிவ புராணம் என்பது இப்பகுதிக்குத் தரப்பட்ட தன்று; நூல் முழுவதற்கும் ஆசிரியரால் தரப்பட்ட பெயராகும் என்ற உண்மை புலனாகலாம்.

இந்தப் பகுதி நூலின் பாயிரப் பகுதியாகும். கடவுள்மேல் நூல் எழுதுபவர்கள், முதல் பாயிரப் பகுதியில், கடவுள் வணக்கம் - நூலின் பெயர் - இந்தநூல் எழுத எனக்குப் போதிய தகுதியில்லை என்ற அவையடக்கம் - நூலால் பெறப்படும் பயன் -ஆகியவற்றைக் கூறுவர். இத்தனையையும் தொடக்கப் பகுதி யில் மணிவாசகர் கூறியுள்ளார்: –

''சிவன் அவன் என் சிந்தையுள் நின்ற அதனால்
அவன் அருளாலே அவன் தாள் வணங்கிச்
சிந்தை மகிழச் சிவ புராணம் தன்னை
முந்தை வினைமுழுது மோய உரைப்பன் யான்
... ... ... ... ... ... பெருஞ்சீர்
பொல்லா வினையேன் புகழுமாறு ஒன்றறியேன்
... ... ... ... ... ...
சொல்லிய பாட்டின் பொருளுணர்ந்து சொல்லுவார்
செல்வர் சிவபுரத்தி னுள்ளார் சிவனடிக் கீழ்ப்
பல்லோரும் ஏத்தப் பணிந்து''

இந்தப் பாடல் பகுதியில் உள்ள அடிகளுள், 'அவன் அருளாலே அவன் தாள் வணங்கி' என்பது கடவுள் வணக்கம்- 'சிவ புராணம் தன்னை உரைப்பன்' என்பது நூல் பெயர்– 'பொல்லா வினையேன் புகழுமாறு ஒன்றறியேன்' என்பது அவை யடக்கம் – 'பாட்டின் பொருள் உணர்ந்து சொல்லுவார் சிவனடிக் கீழ்ச் செல்வர்' – என்பது பயன்-ஆகும்.

இந்த முறையைத் திரு மூலர், கம்பர், சேக்கிழார் முதலிய பெரியோர்களும் கையாண்டுள்ளனர். ஒப்பு இலக்கிய நோக்கா கத் திருமூலரின் திருமந்திர நூல் ஒன்றினை மட்டும் எடுத்துக் கொள்ளலாம்:

"ஆரறிவார் எங்கள் அண்ணல் பெருமையை
...வேரறியாமல் விளம்புகின் றேனே"- (95)

என்பது, 'பொல்லா வினையேன் புகழுமாறு ஒன்றறியேன்' என்னும் சிவ புராணப் பகுதிபோன்ற அவையடக்கப் பகுதியாகும். கடவுள் வணக்கப் பாடல்கள் முன்னமேயே கூறப்பட்டுள்ளன.

"மூலன் உரை செய்த மூவாயிரம் தமிழ்
ஞாலம் அறியவே நந்தி அருளது
காலை எழுந்து கருத்தறிந் தோதிடின்
ஞாலத் தலைவனை நண்ணுவ ரன்றே" (99)

இப்பாடலில் உள்ள 'மூவாயிரம் தமிழ்' என்பது நூலின் பெயர்; 'ஓதிடின் ஞாலத் தலைவனை நண்ணுவர்' என்பது நூல்பயன். 'மூவாயிரம் தமிழ்' என்னும் பெயர் சிலரால் 'தமிழ் மூவாயிரம்' என்றும் குறிப்பிடப்படுகிறது.

"...தமிழ் மூவாயிரம் சாத்தி, மன்னிய மூவாயிரத்
தாண்டு இப்புவிமேல் மகிழ்ந்திருந்து" (3595)

என்று சேக்கிழார் பெரிய புராணத்தில் 'தமிழ் மூவாயிரம்' என்று குறிப்பிட்டிருப்பது காணலாம்.

மூவாயிரம் தமிழ் என்னும் பெயர் பின்னர்த் திருமந்திரம் என மாறியது போல், சிவபுராணம் என்னும் பெயர் பின்னர்த் திருவாசகம் ஆயிற்று. இவ்வாறே, கம்பரால் இடப்பட்ட 'இராமாவதாரம்' என்னும் பெயர் பின்னர் இராமாயணம் ஆயிற்று. சேக்கிழாரால் இடப் பெற்ற 'திருத் தொண்டர் புராணம்' என்னும் பெயர் பின்னர்ப் பெரிய புராணம் ஆயிற்று. இவ்வாறே சிவ புராணம் பின்னர்த் திருவாசகம் ஆயிற்று.

திருவாசகம் சிறியநூல் ஆதலின் இதற்குச் 'சிவ புராணம்' என்னும் புராணப் பெயர் பொருந்துமா எனச் சிலர் வினவலாம். 'சிவ புராணம்' என்னும் மிகச் சிறிய முதல் பகுதிக்குச் சிவபுராணம் என்னும் பெயரை யாரோ சூட்டியிருக்கும்போது, நூல் முழுதும் சிவபுராணம் எனப்படல் கூடாதா?

எல்லாத் தலைப்புகளின் கீழும் விளக்கம் எழுதியிருப்பது போல் சிவபுராணம் என்னும் தலைப்பின்கீழும் 'சிவனது

அநாதி முறைமையான பழமை' என்ற விளக்கம் எழுதப்பட்டிருக்கிறதே. முதல் பகுதி பாயிரம் எனில் இந்த விளக்கம் எழுதப்பட்டிராதே – என்று சிலர் வினவலாம். இந்த விளக்கம் பிற்காலத்தில் எழுதப்பட்டது. எங்கள் பூட்டன் – பாட்டன் காலத்திலிருந்து எங்கள் வீட்டில் உள்ள ஓலைச் சுவடியில், முதல் பகுதிக்கு எந்த விளக்கமும் இல்லை. இது பாயிரம் ஆதலின் விளக்கம் எழுதவில்லை. பிறகு சுவடி பெயர்த்து எழுதியவர் யாரோ இதற்கும் விளக்கம் எழுதிவிட்டிருக்கிறார்.

மற்றும், சிவனது அநாதி முறைமையான பழமைப் பண்பு முதல் பகுதியில் அவ்வளவாகக் கூறப்படவில்லை; பின்னர் உள்ள பகுதிகளிலேயே கூறப்பட்டுள்ளது. மேலும், சில பதிப்புகளில் தொடக்கத்திலுள்ள

"தொல்லை இரும்பிறவிச் சூழும் தளைநீக்கி
அல்லலறுத் தானந்த மாக்கியதே - எல்லை
மருவா நெறியளிக்கும் வாதவூர் எங்கோன்
திருவா சகமென்னும் தேன்"

என்னும் பாடலில் 'திருவாசகம்' என்னும் பெயர் கொடுக்கப்பட்டிருக்கிறதே என்று வினவலாம். இது பிற்காலத்தார் ஒருவரால் இயற்றப்பட்ட பாடல். ஆசிரியர் எழுதியதில்லை. 'வாதவூர் எங்கோன்' என ஆசிரியர் படர்க்கையில் கூறப்பட்டிப்பது காண்க. எங்கள் வீட்டு ஓலைச் சுவடியில் இப்பாடலைத் தொடர்ந்து மேலும் இரு பாடல்கள் - அதாவது மொத்தம் மூன்று பாடல்கள் உள்ளன. சிவபுராணம் என்னும் பெயர் திருவாசகமாக மாறிய திருப்புமைய காலத்துப் பாடல்கள் இவை. வாதவூரர் மாணிக்கவாசகராக ஆனதுபோல், அவரது சிவபுராணமும் திருவாசகமாக ஆயிற்று. மாணிக்கவாசகர் என்னும் சிறப்புப் பெயர் ஆசிரியருக்கு ஏற்பட்டதனால், அவரது நூலுக்கும் (திரு) வாசகம் என்னும் சிறப்பு பெயர் சூட்டப்பட்டது.

இது காறும் கூறியவற்றால், பல காலத்தில் பல இடங்களில் பல தலைப்புகளில் பாடப்பட்ட பாடல்கள், ஆசிரியர் மாணிக்க வாசகரின் பார்வையிலேயே சிவபுராணம் என்னும் பெயரில் தொகுக்கப்பட்டுப் பின்னர்த் திருவாசகம் என்னும் சிறப்புப் பெயர் பெற்றது. திருமூலர் நூலின் திரு மந்திரம்

என்னும் பெயரும், சேக்கிழார் நூலின் பெரிய புராணம் என்னும் பெயரும் சிறப்புப் பெயர்களே - என்பது ஈண்டு ஒப்பு நோக்கத் தக்கது.

ஒருவர் பாடிய பல பாக்களின் தொகுப்பு ஆதலின், இந் நூலைத் 'தனி மலர் மாலை' என்னும் வகையில் அடக்கலாம்.

மாணிக்கவாசகரின் காலம் மூன்றாம் நூற்றாண்டு என்றும், ஐந்தாம் நூற்றாண்டு என்றும், தேவார ஆசிரியர் மூவருக்கு முற்பட்ட காலமாகப் பலரால் பலவாறு சொல்லப்பட்டுள்ளது. மாணிக்க வாசகர் பத்தாம் நூற்றாண்டின் முற்பகுதியினர் ஆவார். (இதனை யான் எனது 'கெடிலக்கரை நாகரிகம்' என்னும் பெரிய நூலில் விரிவாக விளக்கியுள்ளேன்). எனவே, திருவாசகம் என்னும் தொகை நூலின் காலம் பத்தாம் நூற்றாண்டின் முற்பகுதியாகும். எப்படியும், ஒன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதி என்று வேண்டுமானால் கூறலாமே தவிர, அதற்கும் முன்னால் திருவாசகத்தை நகர்த்த முடியாது.

**பத்துப் பெயர்கள்:**

திருவாசகத்தில் ஐம்பத்தொரு பகுதிகள் உள்ளன. இவற்றுள், திருவெம்பாவை, திருவம்மானை, திருப் பொற்சுண்ணம் திருக்கோத்தும்பி, திருத்தெள்ளேணம், திருச்சாழல், திருப்பூவல்லி, முதலிய பத்துகள் - பகுதிகள் ஒவ்வொரு பாட்டின் இறுதியில் உள்ள தொடர்களால் பெயர் பெற்றுள்ளன. இதன் முன்னோடியாய், கழக இலக்கியமாகிய ஐங்குறுநூற்றில் ஓர் அமைப்பு உள்ளது. இந்நூலின் முதல் பத்தின் பத்துப் பாடல்களின் இறுதிகளும் "வேட்டேமே" என்னும் சொல்லால் முடிகிறது. எனவே, இதற்கு 'வேட்கைப்பத்து' என்னும் பெயர் வைக்கப்பட்டுள்ளது. இதை அடியொற்றினாற் போல்; திருவாசகப் பகுதிகள பலவற்றின் பெயர்கள் அமைந்துள்ளன வன்றோ?

**திருவாசக அருள் முறைத் திரட்டு**

திருவாசகத்திலிருந்து சில பாடல்கள் தேர்ந்தெடுக்கப்பட்டுச் சிறு சிறு தொகுப்பாக வெளிவந்துள்ளன. அவற்றுள் ஒன்றே இந்தத்திரட்டு.

இத்தத் திரட்டில், திருவாசகத்தின் முதல்நான்கு தலைப்பு

களிலிருந்து சில பகுதிகளும், மேலும் தேர்ந்தெடுத்த 112 பாடல்களும் உரையுடன் உள்ளன. உரையாசிரியர்: சிந்து பூந் துறை மா.வே. நெல்லையப்பப் பிள்ளை. வெளியீடு: அவர் மகன் நெல்லை நெ. நடராசப் பிள்ளை.

இவ்வாறு சில தேர்ந்தெடுப்புப் பதிப்புகள் இருப்பதன்றி, திருவாசகம் முழுமைக்கும் பல பதிப்புகள் உள்ளன.

## ஒன்பதாம் திருமுறை

ஒன்பதாம் திருமுறை என்பது, சைவத் திருமுறைகள் பன்னிரண்டனுள் ஒன்பதாவதாகும். இதனாலேயே இது இப் பெயர் பெற்றது.

இந்தத் தொகுப்பில், ஒன்பதின்மர் பாடிய திருவிசைப்பாப் பாக்களும், சேந்தனார் என்பவர் பாடிய திருப்பல்லாண்டுப் பாடல்களும் அடங்கியுள்ளன. சுருக்கமாகத் திருவிசைப்பா, திருப்பல்லாண்டின் தொகுப்பு எனலாம். முதலில் திருவிசைப்பா பற்றிப் பார்க்கலாம்.

### திருவிசைப்பா

பாடியவர்களின் பெயர்களோடு திருவிசைப்பா என்பது இணைத்துக் கூறப்பட்டுள்ளது. வருமாறு:- 1.திருமாளிகைத் தேவர் திருவிசைப்பா, 2. சேந்தனார் திருவிசைப்பா, 3. கருவூர்த் தேவர் திருவிசைப்பா,4. பூந்துருத்தி நம்பி காடவ நம்பி திருவிசைப்பா, 5. கண்டராதித்தர் திருவிசைப்பா, 6. வேணாட்டடிகள் திருவிசைப்பா, 7. திருவாலி யமுதனார் திருவிசைப்பா,8. புருடோத்தம நம்பி திருவிசைப்பா, 9. சேதிராயர் திருவிசைப்பா - என்பனவாகும்.

திருவிசைப்பா என்பது, திருவிசைப் பாமாலை என்றும் வழங்கப்படும். திருமுறை கண்ட புராணத்தில் "மோகமெறி திருவிசைப்பா மாலை முறை யொன்று" (26) என்று கூறப்பட்டிருப்பதை அறியலாம்.

திருவிசைப்பா என்பதை, திரு+இசை+பா என்று பிரித்துப் பொருள் காண வேண்டும். இசை என்பதற்குப் புகழ் - பண் என்னும் பொருள்கள் உண்டு. எனவே, திருவிசைப்பா

என்பது, இறைவன் புகழைப் பாடிய பா என்றும், இறைவனை இசையோடு – பண்ணோடு பாடும் பா என்றும் பொருள்படும். பாடல்கட்குப் பண் அமைந்திருப்பதால் பண்ணோடு பாடும் பா என்பது மிகவும் பொருந்தும். இறைவன் புகழைப் பண்ணோடு பாடும் பா என இணைத்தும் பொருள் கொள்ளலாம்.

திருவிசைப் பாவில் மொத்தம் 301 பாடல்கள் உள்ளன. இவை 28 பதிகங்களாக அடக்கப்பட்டுள்ளன. பின் வரும் திருப்பதிகளைப் பற்றிப் பாடப் பட்ட பாக்கள் இவை.

கங்கை கொண்ட சோளேச்சுரம், தஞ்சை இராச ராசேச்சுரம், திருக் களந்தை ஆதித்தேச்சுரம், திருக் கீழ்க் கோட்டூர் மணியம்பலம், திருச் சாட்டியக் குடி, திருப்பூவணம் திருமுகத் தலை, திருவாரூர், திருவாவடுதுறை, திருவிடைக் கழி, திரு விடை மருதூர், திருவீழிமிழலை, திரை லோக்கிய சுந்தரம், சிதம்பரம் - என்பன பாடப் பெற்ற பதிகளாகும்.

**திருப் பல்லாண்டு**

சேந்தனார் பாடிய பதின் மூன்று திருப்பல்லாண்டுப் பாடல்கள், இத்தொகுப்பில் பத்தாவது பகுதியாகச் சேர்க்கப் பட்டுள்ள, இவை, பல்லாண்டு வாழ்த்து கூறும் பாடல்கள்.

ஒன்பதாம் திருமுறையைத் 'திருவிசைப்பா – திருப் பல்லாண்டு' என்னும் பெயரால் வழங்குவதுண்டு.

சைவக் கோயில்களில் 'ஐந்து இறைநூல்' பாடல்கள் பாடப்படுவதுண்டு. இதனை வடமொழியில் 'பஞ்ச புராணம்' என்பவர். ஐந்தாவன: தேவாரப்பாடல் ஒன்று – திரு வாசகப் பாடல் ஒன்று – திருவிசைப்பாப் பாடல் ஒன்று - திருப்பல்லாண்டுப் பாடல் ஒன்று – பெரிய புராணம் போன்ற ஏதாவது ஒரு புராணப் பாடல் ஒன்று (பெரும் பாலும் பெரிய புராணப் பாடல் இடம் பெறும்). இவையே பஞ்ச புராணம் எனப்படும். இந்த அமைப்பைக்கொண்டு, தேவாரம்-திருவாசகம் போலவே, திருவிசைப்பாவும் திருப்பல்லாண்டும் சைவக் கோயில்களில் சிறப்பிடம் பெற்றுள்ளன என அறியலாம்.

சமசு கிருத அர்ச்சனை - தோத்திரம் எல்லாம் முடிந்த பின், இந்த ஐந்து தமிழ்ப் பாடல்கள் பாடுவதைக் கண்டு, தமிழ்

நாட்டுக் கோயில்களில் தமிழுக்கு முதலிடம் இல்லையே - சமசு கிருதத்திற்குப் பின்இடம் தானே தந்துள்ளனர் - என்று சிலர் வருந்துவது உண்டு. தமிழ்ப் பாடல்களை அறவே ஒழித்துக் கட்டாமல், ஐந்து தமிழ்ப் பாடல்கட்காவது இடம் தந்துள் ளனரே என்று ஆறுதலும் தேறுதலும் அடைய வேண்டும்.

இதனைத் தொகுத்தவரும் நம்பியாண்டார் நம்பியே. எனவே, இத்தொகுப்பின் காலம், பத்து–பதினொன்றாம் நூற் றாண்டாகும். இது பலர் நூல்களின் தொகுப்பாதலின் பன் மணித் திரள் என்னும் வகையில் அடங்கும்.

அச்சுப்பதிப்பு

திருப்பனந்தாள்-காசிமடம் 1949-சூன் (விரோதி-வைகாசி) திங்களில், சென்னை-கபீர் அச்சுக் கூடத்தில் அச்சிட்ட பதிப்பு உள்ளது. இதன் மூன்றாம் பதிப்பு அதே அச்சுக் கூடத்தில் 1952 – சூன் (நந்தன – வைகாசி) திங்களில் அச்சிடப்பட்டு வெளி வந்தது.

## திரு மந்திர மாலை

திரு மூலர் இயற்றிய திருமந்திரம் என்னும் நூலுக்குத் தமிழ் மூவாயிரம் – மூவாயிரம் தமிழ் - திருமந்திரமாலை என் னும் பெயர்கள் உள்ளன. "மூலன் உரை செய்த மூவாயிரம் தமிழ்"எனத் தன்வரலாறு கூறும் பாயிரப் பகுதியில் திருமூலரே கூறியுள்ளமை கொண்டு 'மூவாயிரம் தமிழ்' என்னும் பெயர் உள்ளமை புலப்படும். இதனையே 'தமிழ் மூவாயிரம்' எனச் சேக்கிழார் கூறுகிறார்.

திருமந்திரப் பாயிரப் பகுதியிலே திருமூலரே கூறியுள்ள

"மறப்பிலீர் நெஞ்சினுள் மந்திர மாலை
உறைப் பொடுங் கூடிநின்று ஓதலும் ஆமே"

என்னும் பாடல் பகுதியைக் கொண்டு, இந்நூலுக்கு 'திரு மந்திர மாலை' என்னும் பெயரும் உண்டு எனச் சிலர் கூறி யுள்ளனர்.

சைவத் திரு முறைகள் பன்னிரண்டனுள், இந்நூல் பத் தாம் திருமுறையாக நிறுத்தப்பெற்றுள்ளது.

இந்நூலில், 112 பாடல்கள் கொண்ட பாயிரப் பகுதியும் ஒன்பது தந்திரங்களும் அடங்கியுள்ளன. மொத்தம் 3047 பாடல்கள் உள்ளன. பல நூல்களின் உரைகளில், 34 பாடல்கள், திருமந்திரப் பாடல்களாகக் குறிப்பிடப்பட்டுள்ளன. அவற்றையும் சேர்த்தால், 3081 பாடல்கள் கொண்டது இந்நூல் என்பது போதரும். நாலாயிரம் பாடல்கட்கும் ஓரளவு குறைந்த ஒரு தொகை நூலை 'நாலாயிரத் திவ்வியப் பிரபந்தம் என்று கூறுவது போல், மூவாயிரம் பாடல்கட்கு மேலும் சில பாடல்கள் மிகுதியாக உள்ள இந்நூல் மூவாயிரம் பாடல்கள் கொண்டதாக முழுப் பெரிய எண்படுத்திக் கூறப்பட்டுள்ளது. இந்தச் சொச்சம்-மிச்சமாக உள்ள எண்ணை 'Round' செய்தல் என்று கூறுகிறார்களே – இதுபோன்றதுதான் அது.

தண்டியலங்கார உரையாசிரியர், திருக்குறளை ஒரு தொகைநூல் என்று கூறுகிறார். இந்தக் கருத்தில் எனக்கு முழு உடன்பாடு இல்லை. திருக்குறளை யான் தொகுப்புக் கலை நூலில் சேர்த்துக் கொள்ளவில்லை. இது போலவே, திருமந்திரத்தையும் ஒரு தொகை நூலாக யான் முழு மனத்துடன் ஒத்துக் கொள்ள முடியவில்லை. ஆயினும், இந்நூலுக்குத் 'திருமந்திர மாலை' என்னும் பெயர் இருப்பதாக அறிஞர் சிலர் கூறுவதால், அரைமனத்துடன் தொகை நூல் வரிசையில் இதனையும் சேர்த்துக் கொண்டேன். மாலை என்பது, உதிரிகள் பலவற்றின் தொகுப்புதானே!

திருமூலர் கயிலையிலிருந்து புறப்பட்டுப் பொதிய மலைக்குச் சென்ற ஒரு யோகி. வழியில் திருவாவடுதுறைப் பக்கம் - காவிரிக் கரையில் உள்ள சாத்தனூர் என்னும் ஊரில் மூலன் என்னும் மாடு மேய்க்கும் இடையன் இறந்து கிடக்க, மாடுகள் கதறுவதைக் கண்டு பொறுக்க முடியாமல் அவன் உடலில்தன் உயிரைப் புகுத்தி (கூடுவிட்டுக் கூடு பாய்ந்து) தன் உடம்பை ஓரிடத்தில் மறைத்து வைத்து விட்டு மாடுகளை மகிழ்வித்து ஊருக்குள் ஓட்டிச் சென்று விட்டு வந்தார். பின், தன் சொந்த உடலைத் தேடியபோது அது இறைவன் அருளால் மறைக்கப் பட்டதால், இடை மூலனின் உடலுடனேயே திருமூலர் என்னும் பெயருடன் இருந்து, பல ஆண்டுகள் திருவாவடுதுறையில்

தவத்தில் இருந்தார்; ஆண்டுக்கு ஒரு பாட்டுப் பாடிப் பின் யோகத்தில் ஆழ்ந்து விடுவார். இவ்வாறு பல ஆண்டு காலம் இருந்து அவர்பாடிய மூவாயிரம் பாடல்களின் தொகுப்பே இந்த நூல் – என்பது சேக்கிழாரின் பெரிய புராண வரலாறு.

திருமூலர் பற்பல ஆண்டுகளில் பாடப்பட்ட உதிரிப்பாடல் கள் பின்னர் இந்த வடிவில் தொகுக்கப்பட்டதால் 'திரு மந்திர மாலை' என்னும் தொகை நூற்பெயர் பெற்றது போலும்!

பொறுத்தருள வேண்டும் – திருமூலர் பாயிரப் பகுதியில், குடிகாரன் கூறுவதைப் போல் கண்டவாறு-பலவாறு – பல செய்திகளைக் கூறியுள்ளார். அவை நம்பத் தக்கனவா?

''நந்தி அருளாலே மூலனை நாடி'' (68,92),

''ஒப்பில் எழுகோடி யுகம் இருந்தேனே'' (74),

''இருந்தேன் இக்காயத்தே எண்ணிலி கோடி''(80),

''சிந்தைசெய்து ஆகமம் செப்பலுற் றேனே'' (73),

''என்னை நன்றாக இறைவன் படைத்தனன்
தன்னை நன்றாகத் தமிழ் செய்யு மாறே'' (81),

''வான் வழியூடு வந்தேனே'' (83),

''நான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்'' (85)

முதலியன பாயிரப் பகுதியில் உள்ளனவாகும். இந் நூலில், திருமூலர் பாடாத பாடல்கள் சில இடைச் செருகலாகப் பிற ரால் பாடப்பட்டுச் சேர்க்கப்பட்டிருப்பதாகக் கூறப்படுகிறது. 'ஏழுகோடி யுகம் இருந்தேன்', 'வான் வழியூடு வந்தேன்' என் பன உண்மையா? இவை போன்ற பகுதிகளைக் கொண்டுதான் மேற்கூறிய பெரிய புராணக்கதை கட்டப்பட்டுள்ளது.

கயிலாயத்திலிருந்து வந்த யோகி மூலன் என்னும் இடை யன் உடம்பில் புகுந்து கொண்டு இந்நூலை இயற்றினார் என் பது – நூற்றுக்குநூறு முழுக்கற்பனையாகும். கயிலையையே அடைந்திருந்த முனிவர் கீழே வந்தது ஏன்? உண்மை யாதாக இருக்கலாம். இதோ:—

மூலன் என்னும் இடையன் மாடு மேய்த்து இருக்கலாம். நாளடைவில் அவன் கல்வி கேள்விகளில் சிறந்து மெய்யுணர்வு

பெற்று உயர்ந்த கருத்துகளைப் பொழியும் பேரறிவும் பேராற்றலும் பெற்றிருக்கலாம். அதனால், 'திருமந்திரம்' என்னும் உயரிய நூலை இயற்றியிருக்கலாம்.

ஆனால், ஓர் இடையன் செய்ததாக ஒத்துக்கொண்டு இடையனுக்குப் பெருமை கொடுப்பதா என்ற குல வேறுபாட்டுப் பொறாமையால், மூலன் என்னும் இடையன் செய்யவில்லை என மேற்குலத்தினர் கூறி, மூலன் உடம்பில் யோகி புகுந்ததாகப் போலி நாடகம் ஆடியுள்ளனர்.

இன்னோர் இடையனுக்குப் பெருமைதர எங்கே ஒத்துக்கொண்டார்கள்? 'அ உ அறியா அறிவு இல் இடை மகனே' (யாப்பருங்கலம்–7,37,95 நூற்பாக்களின் உரை மேற்கோள்) என்று பாடியவர்கள் தானே!

சுட்ட பழம் வேண்டுமா–சுடாத பழம் வேண்டுமா? என்று கேட்டு ஔவையாரை மடக்கிய உண்மையான இடைச் சிறுவனை முருகனாக ஆக்கிய வரலாறு தெரியாததா?

வடமொழியில் மாபெரும் புலவனும் இடைக்குலத்தவனும் ஆகிய காளிதாசன், தன் நாக்கில் காளி எழுதியதாலேயே பல சிறந்த நூல்கள் எழுதினான் என்று கூறப்படும் கட்டுக் கதையும் அறியாததா? (யான் ஆயர்பாடிக் கண்ணனிடம் போக மாட்டேன்; யான் இடைக்குலத்தானல்லேன்; நடுநிலைமையுடன் எழுதுகிறேன்).

இடைக்குலக் காளிதாசன் செவ்விய நூல்கள் பல எழுதியிருக்கும்போது, இடைக்குல மூலன் மட்டும் 'திரு மந்திரம் இயற்ற முடியாதா? ஆய்க அறிஞர்கள்!

திருமூலரால் பல காலங்களில் இயற்றப்பெற்ற பாடல்களின் தொகுப்பாதலின், திருமந்திர மாலை நூலைத் 'தனி மலர் மாலை' என்னும் வகைக்குள் அடக்கலாம்:

காலம்

ஏழு கோடி யுகம் இருந்ததாகக் கூறும் பாடலைக் கொண்டு திருமூலர் கி.மு. ஆறாயிரத்தில் இருந்தவர் என்று சிலரும், இன்னும் பல்வேறு காலத்தவர் என்று சிலரும் பகர்கின்றனர். நூல்

கருத்தையும், சொல் - சொற்றொடர் ஆட்சிகளையும் கூர்ந்து நோக்கின், எவரும் இவ்வாறு கூற முடியாது. திருமூலர் பல்லாண்டுகள் வாழ்ந்தவர்-பலரினும் பழமையானவர் என்று கூறலாம்.

எட்டாம் நூற்றாண்டினராகிய சுந்தரர், தமது திருத்தொண்டத் தொகை என்னும் தலைப்புடைய தேவாரப் பாடலில்,

''நம்பிரான் திரு முலன் அடியார்க்கும் அடியேன்''

என்று பாடியிருப்பதால், திருமூலர் எட்டாம் நூற்றாண்டிற்கு முற்பட்டவர் என்பது உறுதி. இன்னும் முற்பட்ட காலத்தில் திருமந்திரம் மாலையாக்கப்பட்டிருக்கலாம்.

## பதினோராம் திருமுறை

பதினோராம் திருமுறை என்னும் தொகுப்பு, சைவத் திருமுறைகள் பன்னிரண்டனுள் பதினோராவதாகும். இதனாலேயே இது பதினோராம் திருமுறை என்னும் தொகைப் பெயர் பெற்றது. இதனுள், பன்னிருவர் இயற்றிய நாற்பது சைவ நூல்கள் இடம்பெற்றுள்ளன. ஆசிரியர் பெயர்களும் நூற்பெயர்களும் முறையே வருமாறு:—

### 1. திருவாலவா யுடையார்

1. திருமுகப் பாசுரம்

### 2. காரைக்கால் அம்மையார்

2. திரு ஆலங்காட்டு மூத்த திருப்பதிகங்கள்
3. திரு இரட்டை மணிமாலை
4. அற்புதத் திருவந்தாதி

### 3. ஐயடிகள் காடவர்கோன் நாயனார்

5. க்ஷேத்திரத்திரு வெண்பா

### 4. சேரமான் பெருமாள் நாயனார்

6. பொன் வண்ணத் தந்தாதி
7. திருவாரூர் மும்மணிக் கோவை
8. திருக் கைலாய ஞான உலா(ஆதிஉலா)

### 5. நக்கீர தேவ நாயனார்

9. கைலை பாதி காளத்தி பாதி அந்தாதி
10. திருவீங்கோய் மலை எழுபது
11. திருவலஞ்சுழி மும்மணிக்கோவை
12. திருவெழு கூற்றிருக்கை
13. பெருந் தேவ பாணி
14. கோபப் பிரசாதம்
15. காரெட்டு
16. போற்றித் திருக்கலி வெண்பா
17. திருமுருகாற்றுப் படை
18. திருக் கண்ணப்ப தேவர் திருமறம்

### 6. கல்லாட தேவ நாயனார்

19. திருக் கண்ணப்ப தேவர் திருமறம்

### 7. கபில தேவ நாயனார்

20. மூத்த நாயனார் திருவிரட்டை மணி மாலை
21. சிவபெருமான் திருவிரட்டை மணி மாலை
22. சிவபெருமான் திருவந்தாதி

### 8. பரண தேவ நாயனார்

23. சிவபெருமான் திருவந்தாதி

### 9. இளம் பெருமா னடிகள்

24. சிவபெருமான் திரு மும்மணிக் கோவை

### 10. அதிரா அடிகள்

25. மூத்த பிள்ளையார் திருமும்மணிக் கோவை

### 11. பட்டணத்துப் பிள்ளையார்

26. கோயில் நான் மணி மாலை
27. திருக் கழுமல மும்மணிக் கோவை
28. திருவிடை மருதூர் மும்மணிக் கோவை
29. திரு வேகம்ப முடையார் திருவந்தாதி
30. திருவொற்றியூர் ஒருபா ஒரு பஃது

### 12. நம்பியாண்டார் நம்பி

31. விநாயகர் திரு விரட்டை மணி மாலை
32. கோயில் திருப் பண்ணியர் விருத்தம்
33. திருத் தொண்டர் திரு வந்தாதி
34. ஆளுடைய பிள்ளையார் திருவந்தாதி
35. ஆளுடைய பிள்ளையார் திருச்சண்பை விருத்தம்
36. ஆளுடைய பிள்ளையார் திரு மும்மணிக் கோவை
37. ஆளுடைய பிள்ளையார் திருவுலா மாலை
38. ஆளுடைய பிள்ளையார் திருக்கலம்பகம்
39. ஆளுடைய பிள்ளையார் திருத்தொகை
40. திருநாவுக்கரசு தேவர் திருவேகாதச மாலை

மேலே, ஆசிரியர்கள் பன்னிருவர் பெயர்களும் நூல்கள் நாற்பதின் பெயர்களும் முறையே தரப்பெற்றுள்ளன.

பதினோராம் திருமுறை என்னும் பெயரில் இந்நூலைத் தொகுத்தவர் நம்பியாண்டார் நம்பியாவார்.
இந்நூலின் மொத்தப் பாடல்கள் 1393 ஆகும்.

தொகுப்பாசிரியர் நம்பியாண்டார் நம்பி என்பதைத் திரு முறை கண்ட புராணத்தில் உள்ள பின்வரும் பாடலால் அறியலாம்.

> "வைத்ததற்பின் நம்பிகழல் மன்னர்பிரான் மகிழ்ந் திறைஞ்சிச்
> சித்திதரும் இறைமொழிந்த திருப்பாசுர முதலாம்
> உய்த்த பதிகங்களையும் ஒரு முறையாய்ச் செய்க எனப்
> பத்திதரும் திருமுறைகள் பதினொன்றாப் பண்ணினார்" (27)

பலர் இயற்றிய பல நூல்களின் தொகுப்பு ஆதலின், இந் நூலைப் 'பன்மாலைத் திரள்' என்னும் வகையில் அடக்கலாம்.

காலம்

பத்தாம் நூற்றாண்டின் பிற்பகுதியிலும் பதினோராம் நூற்றாண்டின் முற்பகுதியிலும் வாழ்ந்த நம்பியாண்டார் நம்பியாரால் தொகுக்கப் பெற்ற இந்நூலின் காலமும் அவர்

காலமே யாம். அதாவது-ஒவ்வொரு நூலும் இயற்றப்பெற்ற காலம் அன்று அது. நாற்பது நூல்களும் பல காலங்களில் பலரால் இயற்றப்பட்டவை யாகும். நாற்பதையும் தொகுத்துப் பதினோராம் திருமுறை எனப் பெயர்தந்த காலமே, பத்து - பதினொன்றாம் நூற்றாண்டுக் காலமாகும்.

இதைத் தொகுத்த நம்பியாண்டார் நம்பி பார்த்தார்: தம் காலத்தில் இருந்த சைவ நூல்களுள் சிறந்தவை சிதறிக் கிடப்பதை அறிந்தார் - சிந்தாமல் சிதறாமல் தண்ணீரை அணைக்குள் அடக்கி வைத்து வேண்டிய போது பயன்படுத்திக் கொள்வதுபோல், இந்த நாற்பது நூல்களையும் பதினோராம் திருமுறை என்னும் பெயராகிய அணைக்குள் திரட்டி வைத்தார். இல்லாவிடின், இந்நூல்களுள் சில அல்லது பலவற்றின் பெயர்கள் கூட அறியப்படாமலே அடித்துக்கொண்டு போயிருக்கும்.

இதில் உள்ள நூலாசிரியர்கள் சிலரின் பெயர்களை நோக்குங்கால் வியப்பு உண்டாகிறது. முதலாமவர், திருவாலவாயுடையார் என்னும் சிவனாம். இவர், பாணபத்திரன் என்பவனுக்காகச் சேரமான் பெருமாள் நாயனார் என்னும் சேர மன்னனுக்கு மடல் எழுதி அனுப்பியுள்ளாராம். இதற்குத் திருமுகப் பாசுரம் என்பது பெயர். திருமுகம் = கடிதம்; பாசுரம் = பா. கடிதத்திற்குத் 'திருமுகம்' எனப் பெயர் கொடுத்திருப்பது அழகு. அப்பாசுரத்தை மட்டும் பார்ப்போமே!:

"மதிமலி புரிசை மாடக் கூடல்
பதிமிசை நிலவு பால்நிற வரிச்சிறகு
அன்னம் பயில்பொழில் ஆல வாயின்
மன்னிய சிவன்யான் மொழிதரு மாற்றம்
பருவக் கொண்மூப் படியெனப் பாவலர்க்கு
ஒருமையின் உரிமையின் உதவி ஒளிதிகழ்
குருமா மதிபுரை குலவிய குடைக்கீழ்ச்
செருமா உகைக்கும் சேரலன் காண்க:
பாண்பா லியாழ்பயில் பாண பத்திரன்
தன்போல் என்பால் அன்பன் தன்பால்
காண்பது கருதிப் போந்தனன்
மாண்பொருள் கொடுத்து வரவிடுப் பதுவே"

என்பது பாடல். உங்களை என்பதற்குப் பதிலாகத் தங்களை

என்று குறிப்பிடுவது போல், உன்பால் என்பதற்குப் பதிலாகத் 'தன்பால்' என்று கூறியுள்ள வழக்கு சுவைபயக்கிறது.

**நாயனார்ப் புலவர்கள்**

இந்நூலுள், நக்கீரர், கல்லாடர், கபிலர், பரணர்-தேவ நாயனாராக ஆக்கப்பட்டுள்ளனர். நம்பியாண்டார் நம்பி நாயன்மார்களைப் பற்றித் 'திருத்தொண்டர் திருவந்தாதி' என்னும் நூல் பாடியவராதலின், இவர்களையும் நாயனார் களாக ஆக்கிவிட்டார் போலும்.

இங்கே கூறப்பட்டுள்ள நூல்களைப் பாடிய கபிலரும் பரணரும் சங்க காலக் கபிலராகவும் சங்க காலப் பரணராக வும் இருக்க முடியாது. சங்க காலத்தில் இத்தகைய நூல்கள் இல்லை- இத்தகைய சிவபெருமானும் இல்லை.

நக்கீர தேவ நாயனார் பாடியனவாகப் பத்து நூல்கள் குறிப்பிடப்பட்டுள்ளன. இவற்றுள், திருமுருகாற்றுப்படை பாடிய நக்கீரர் சங்க காலத்தவர். மற்ற நூல்களைப் பாடியவர், பிற்கால நக்கீரதேவநாயனாராக - அதாவது - வேறொரு வராக இருத்தல் வேண்டும். (இந்த நூலின் முதல் பாகத்தில்' பல நக்கீரர்கள் இருந்திருக்கிறார்கள் என்ற செய்தி, நாலடியார் என்னும் தலைப்பின் கீழ்த் தரப்பட்டுள்ளமை காண்க).

'திருக் கண்ணப்ப தேவர் திருமறம்' என்ற பெயரில் நக்கீர தேவ நாயனார் ஒரு நூலும் கல்லாட தேவ நாயனார் ஒரு நூலும் தனித் தனியே பாடியுள்ளனர். அது போலவே, 'சிவ பெருமான் திருவந்தாதி' என்னும் பெயரில், கபிலதேவ நாயனார் ஒரு நூலும் பரண தேவ நாயனார் ஒரு நூலும் தனித்தனியே பாடியுள்ளனர்.

**பெயர் மாற்றம்**

என்னிடத்தில் பதினோராந் திருமுறையின் மூன்று விதமான பதிப்புகள் உள்ளன. சில நூல்களின் பெயர்களும் சில ஆசிரியர் பெயர்களும் பதிப்புக்குப் பதிப்பு மாற்றமா யுள்ளன. என்னிடமுள்ள பதிப்புகளுள் இரண்டு பதிப்புகள்

1870 (விபவ - மாசி) ஆம் ஆண்டிலும், 1871 (சுக்கில - தை) ஆம் ஆண்டிலும் வெளியிடப் பெற்றவை. மூன்றாம் பதிப்பு 1933 (ஸ்ரீமுக-வைகாசி) ஆம் ஆண்டு வெளியிடப் பெற்றது. 1870 ஆம் ஆண்டுப் பதிப்பில் உள்ள விவரம் வருமாறு: "உ. திருச்சிற்றம்பலம்- பதினோராம் திருமுறைப் பிரபந்தங்கள்- இத் திருமுறையுள் அடங்கிய - திருமுகப் பாசுரம், திருவாலங் காட்டு மூத்த திருப்பதிகங்கள், திருவிரட்டை மணிமாலை, அற்புதத் திருவந்தாதி, க்ஷேத்திரத் திரு வெண்பா, பொன் வண்ணத் தந்தாதி, திருவாரூர் மும்மணிக் கோவை, திரு வாதியுலா, கயிலை பாதி காளத்தி பாதித் திருவந்தாதி யாகிய திருப்பிரபந்தங்கள் - திரிசிரபுரம் மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை யவர்கள் மாணாக்கருள் ஒருவராகிய சென்னைக் கவர்ன்மெண்டு நார்மல் பாடசாலைத் தமிழ்ப் புலவர் திரிசிரபுரம் சோடசாவதானம் சுப்பராய செட்டி யாரால் பல பிரதிகளைக் கொண்டு பரிசோதிக்கப்பட்டு- பூவிருந்தவல்லி சுப்பராய முதலியர் குமாரராகிய கன்னியப்ப முதலியாரால் - சென்னை சி.டிக்குரூஸது மலைச்சாலையில் அத்தி நீயம் அன்ட் டேவி நியூஸ் பிரான்ச் அச்சுக் கூடத்திற் பதிப்பிக்கப்பட்டது—விபவ வருடம்-மாசிமாதம்- Registered copyright - பதினோராந்திருமுறையுளடங்கிய மற்றைத் திருப் பிரபந்தங்கள் இப்போது அச்சிட்டு வருகின்றன. அவை விரைவில் வெளியிடப்படும்."

1870 ஆம் ஆண்டுப் பதிப்பின் முகப்புப் பக்கத்தில் உள்ளது இந்த விவரம்.

1871 ஆம் ஆண்டுப் பதிப்பில் உள்ள விவரமாவது:— "உ. திருச்சிற்றம்பலம் - பதினோராந் திருமுறை - இத்திரு முறையு ளடங்கிய திருப்பாசுர முதலிய நாற்பது திருப்பிர பந்தங்களும்...."

என்பது வரையும் 1871 ஆம் ஆண்டுப் பதிப்பில் புதிது; பின்னால் உள்ள விவரம் அனைத்தும் ஒரெழுத்துகூட மாறா மல் 1870 ஆம் ஆண்டுப் பதிப்பில் உள்ளவாறே உள்ளன. இறுதியில் மட்டும், சுக்கில வருடம்-தைமாதம் என்னும் ஆண்டும் நாளும் மட்டும் மாறியுள்ளன.

ஆக இந்த இரண்டு பதிப்புகளையும் பரிசோதித்தவர் ஒருவரே; அச்சில் பதிப்பித்தவரும் ஒருவரே. இரண்டிற்கும் உள்ள வேறுபாடு யாதெனில், முதல் பதிப்பில் ஒன்பது நூல்கள் மட்டுமே வெளியிடப்பட்டுள்ளன; மற்ற முப்பத்தொரு நூல்களும் அச்சில் உள்ளனவாகத் தெரிவிக்கப்பட்டன. அடுத்த ஆண்டு வந்த இரண்டாம் பதிப்பிலோ, நாற்பது நூல்களும் வெளியிடப்பட்டுள்ளன. என்னிடமுள்ள இப்பதிப்புகளின் தாள்கள் மக்கிப் போய் மஞ்சள்பழுப்பு நிறம் பெற்றுள்ளன.

என்னிடமுள்ள மூன்றாம் பதிப்பு, சென்னை - சைவ சித்தாந்த மகா சமாசத்தினரால், 1933(ஸ்ரீமுக வருடம்-வைகாசி மாதம்) ஆம் ஆண்டு, சென்னை இராயப்பேட்டை-சாது அச்சுக் கூடத்தில் அச்சிடப்பெற்றது. இந்தப் பதிப்பில் உள்ளவாறே, மேலே, ஆசிரியர் பெயர்களும் நூல்பெயர்களும் தரப் பெற்றுள்ளன. இதை ஓரளவு புதிய பதிப்பு எனலாம்; அவ்விரண்டையும் ஓரளவு பழைய பதிப்பு எனலாம்.

புதிய பதிப்புக்கும் பழைய பதிப்புக்கும் இடையே யுள்ள ஆசிரியர் பெயர் மாற்றம் முதலில் வருமாறு:-

| புதிய பதிப்பு | பழைய பதிப்பு |
|---|---|
| நக்கீர தேவ நாயனார் | நக்கீர தேவர் |
| கல்லாட தேவ நாயனார் | கல்லாடனார் |
| கபில தேவ நாயனார் | கபில தேவர் |
| பரண தேவ நாயனார் | பரண தேவர் |

இந்த நால்வரின் நாயனார் பட்டம் பழைய பதிப்பில் இல்லை. கபிலதேவர் என்பதை வட இந்தியர் 'கபில்தேவ்' என்கின்றனர்.

அடுத்து நூல்பெயர் மாற்றம் வருமாறு:

| புதிய பதிப்பு | பழைய பதிப்பு |
|---|---|
| கோயில் திருப்பண்ணியர் விருத்தம் | கோயில் திருப்பண்ணியர் திரு விருத்தம் |
| திருக் கயிலாய ஞானஉலா | திரு ஆதியுலா |

| | |
|---|---|
| விநாயகர் திரு விரட்டை மணிமாலை | திரு நாரையூர் விநாயகப் பிள்ளையார் திருவிரட்டை மணிமாலை |
| ஆளுடைய பிள்ளையார் திருவந்தாதி | திருஞானசம்பந்தர் திருவந்தாதி |
| ஆளுடைய பிள்ளையார் திருச் சண்பை விருத்தம் | திருஞானசம்பந்தர் திரு வந்தாதி |
| ஆளுடைய பிள்ளையார் திரு மும்மணிக்கோவை | திருஞான சம்பந்தர் திரு மும்மணிக்கோவை |
| ஆளுடைய பிள்ளையார் திருவுலா மாலை | திருஞானசம்பந்தர் திருவுலா மாலை |
| ஆளுடைய பிள்ளையார் திருக்கலம்பகம் | திருக்கலம்பகம் |
| ஆளுடைய பிள்ளையார் திருத்தொகை | திருஞான சம்பந்தர் திருத்தொகை |

சேரமான் பெருமாள் நாயனார் இயற்றிய திருக்கயிலாய ஞான உலாதான், உலா நூல்களுக்குள்ளேயே முற்பட்ட முதல் உலாவாம். அதனால் அதனை 'ஆதியுலா' என்றும் கூறுவர். திருநாரையூர் விநாயகர், விநாயகப் பிள்ளையார் எனப் பழம் பதிப்பில் குறிப்பிடப்பட்டுள்ளார். திருஞான சம்பந்தருக்கு ஆளுடைய பிள்ளையார் என்னும் பெயரும் உண்டு. புதிய பதிப்பில் ஆளுடைய பிள்ளையார் என்னும்பெயரே எடுத்தாளப் பட்டுள்ளது.

பதினோராந் திருமுறைக்கு வேறு சில பதிப்புகளும் இருக்கலாம்.

---

## தமிழ் மாலைகள்

'தமிழ் மாலைகள்' என்னும் தொகைப் பெயரால் குறிப்பிடப்பெறும் தொகை நூல் எது என்பதை, தேசிகர் இயற்றிய தேசிகப் பிரபந்தம் என்னும் நூலிலுள்ள பின்வரும் பாடலால் அறியலாம்.

''பொய்கைமுனி பூதத்தார் பேயாழ் வார்தண்
பொருநல்வரும் குருகேசன் விட்டு சித்தன்
துய்யகுல சேகரன் நல்பாண நாதன்
தொண்டரடிப் பொடிமழிசை வந்த சோதி
வையமெலாம் மறைவிளங்க வாள்வே லேந்தும்
மங்கையர் கோன் என்றிவர்கள் மகிழ்ந்து பாடும்
செய்யதமிழ் மாலைகள் நாம் தெளிய ஓதித்
தெளியாத மறைநிலங்கள் தெளிகின் றோமே''

(தேசிகப் பிரபந்தம் - அதிகார சங்கிரகம் - 1)

இந்தப் பாடலில், ஆழ்வார்களைக் குறிப்பிட்டு ''என்றிவர்கள் மகிழ்ந்து பாடும் செய்ய தமிழ் மாலைகள்'' என்று குறிப்பிட்டிருப்பது ஆழ்வார்களின் பாடல் தொகுப்பாகிய 'நாலாயிரத் திவ்வியப் பிரபந்தம்' என்னும் அரிய பெரிய தொகை நூலாகும். ஆழ்வார்கள் பன்னிருவர் எனக் குறிப்பிடப்பட்டிருப்பினும், இந்தப் பாடலில் மதுரகவியாழ்வார், ஆண்டாள் ஆகிய இருவரையும் சேர்க்காமல் பதின்மரை மட்டும் குறிப்பிட்டுள்ளார் பாடல் ஆசிரியர். இது பற்றிப் பிறகு பார்க்கலாம்.

காலவாரித் தொகுப்பு முறை:

ஆழ்வார்கள் பன்னிருவரின் பெயர்களையும், அவர்கள் இயற்றியுள்ள நூற்பெயர்களையும், ஒவ்வொரு நூற்பாடல்களின் எண்ணிக்கையையும் ஆழ்வார்களின் கால முறைப்படி கீழே காணலாம்: காலம் 5 - 6 என்று குறிப்பிட்டிருப்பின், ஐந்தாம் நூற்றாண்டின் பிற்பகுதியிலும் ஆறாம் நூற்றாண்டின் முற்பகுதியிலும் இருந்ததாகக் கொள்ளவேண்டும். மற்ற எண்கட்கும் இவ்வாறே கொள்க:-

1. பொய்கையாழ்வார் - முதல் திருவந்தாதி (நூல்) - பாடல் எண்ணிக்கை 100 - காலம் 5,6.
2. பூதத் தாழ்வார் - இரண்டாம் திருவந்தாதி - 100 - காலம்: 5,6.

3. பேயாழ்வார் - மூன்றாம் திருவந்தாதி – 100 – 5,6.
4. திரு மழிசை ஆழ்வார் –(1) நான்முகன் திருவந்தாதி –96– (2) திருச்சந்த விருத்தம் – 120 – 6,7.
5. நம்மாழ்வார்– (1)திரு விருத்தம் – 100; –(2)திருவாசிரியம் – 11. (3) பெரிய திருவந்தாதி – 87 (4) திருவாய்மொழி- 1102 – 8.
6. மதுரகவியாழ்வார்—கண்ணி நுண் சிறுத்தாம்பு – 11 – 7,8.
7. குலசேகர ஆழ்வார் - பெருமாள் திருமொழி – 105 – 8.
8. பெரியாழ்வார் - பெரியாழ்வார் திருமொழி – 473 – 8.
9. ஆண்டாள் –(1) திருப்பாவை—30; (2) நாச்சியார் திரு மொழி—143—8.
10. தொண்டரடிப்பொடி யாழ்வார் –(1) திருமாலை – 45; (2) திருப்பள்ளி யெழுச்சி – 10–8.
11. திருப்பாணாழ்வார்–அமலனாதி பிரான்–10-8.
12. திருமங்கையாழ்வார்– (1) பெரிய திருமொழி–1084; (2) திருக்குறுந் தாண்டகம்-20;(3) திருநெடுந்தாண்டகம் –30; (4) திருவெழு கூற்றிருக்கை – 1; (5) சிறிய திரு மடல்-1; (6) பெரிய திருமடல்-1.

இது, ஆழ்வார்கள் தோன்றிய கால வரிசை முறைப்படி யான தொகுப்பாகும். இந்தத் தொகுப்பில் மொத்தம் 3776 பாக்களே உள்ளன. நாலாயிரம் பாக்கள் இல்லை. எனவே, இவற்றோடு, திருவரங்கத் தமுதனார் என்பவர் இராமாநுசர் மேல் இயற்றிய 'இராமநுச நூற்றந்தாதி' என்னும் நூலின் 108 பாடல்களையும் சேர்த்துப் பதிப்பித்துள்ளனர் இதையும் சேர்க்கின் (3776 + 108 = 3884) பாடல்களே தேறுகின்றன. மேலும் 116 பாடல்கள் குறைகின்றன. குறையை நிறைவு செய்ய, திருமங்கை யாழ்வார் இயற்றிய 'சிறிய திருமடல்' என்னும் நீளக் கலிவெண்பாவை நாற்பது கண்ணிகளாகவும் 'பெரிய திருமடல்' என்னும் மிகவும் நீளமான கலிவெண் பாவை எழுபத்தெட்டு கண்ணிகளாகவும் பிரித்துக் கணக்கிடு கின்றனர். தேசிகப் பிரபந்தம் என்னும் நூலிலும் இது சொல்லப்பட்டுள்ளது.

"சிறியமடல் பாட்டு முப்பத்தெட் டிரண்டும்
சீர்பெரிய மடல் தனிப்பாட்டு எழுபத்தெட்டும்" (373)

என்பது பாடல் பகுதி. வேறு சிலர், இராமாநுச நூற்றந்தாதியை நீக்கி, சிறிய திருமடலை 77ஆகவும் பெரிய திருமடலை 148 ஆகவும் கொண்டு நாலாயிரத்தை நிரப்பிக் காட்டுகின்றனர்.

இந்தக் காலத்தில், கம்பரின் சடகோபர் அந்தாதியைச் சேர்த்து நாலாயிரத்தை நிரப்ப முயல்பவரும் உளர்.

இவ்வாறு பாடல்களை நிரப்புவதிலே கருத்து வேற்றுமை உள்ளதுபோலவே, நூல்களின் வரிசையமைப்பிலும் கருத்து வேறுபாடு உண்டு.

நாதமுனி என்னும் வைணவப் பெரியார் நம்மாழ்வாரிடமிருந்து இந்த ஓலைச் சுவடிகளையெல்லாம் பெற்று நாலாயிரப் பிரபந்தத்தைத் தொகுத்தார் என்று சொல்லப்படுகிறது. முதலில் நாலாயிரப் பிரபந்தம் என்று பெயர் வழங்கப்பட்டதாகவும், பின்னர், தெய்வத் தொடர்பு கருதித் 'திவ்விய' என்பது சேர்க்கப்பட்டு 'நாலாயிரத்திவ்வியப் பிரபந்தம்' என்று பெயர் வழங்கப்பட்டதாகவும் கூறப்படுகிறது. சிலர், நாலாயிரம் என்னும் எண்ணைக் குறிப்பிடாமல் 'திவ்வியப் பிரபந்தம்' எனச் சுருக்கமாகச் சொல்வதும் உண்டு. இன்னும் கேட்டால், 'பிரபந்தம்' என்ற ஒரு சொல்லாலேயே குழூஉக் குறியாக நாலாயிரத் திவ்வியப் பிரபந்தத்தைக் குறிப்பிடுபவரும் உளர்.

**வேறு தொகுப்பு முறை:**

கால வரிசை முறைப்படி தொகுக்காமல், பாக்களின் பொருளமைப்பு கருதியும் வேறு மரபு கருதியும் பின்வருமாறு நாதமுனியால் தொகுக்கப்பட்டதாகச் சொல்லப்படுகிறது. அம் முறை வருமாறு:-

1. பெரியாழ்வார் திருமொழி, 2. திருப்பாவை, 3. நாச்சியார் திருமொழி, 4. பெருமாள் திருமொழி, 5. திருச்சந்த விருத்தம், 6. திருமாலை, 7. திருப்பள்ளியெழுச்சி, 8. அமலனாதி பிரான், 9. கண்ணி நுண்சிறுத்தாம்பு, 10. பெரிய திருமொழி, 11. திருக்குறுந்தாண்டகம், 12. திரு நெடுந்தாண்டகம், 13. முதல் திருவந்தாதி, 14. இரண்டாம் திருவந்தாதி, 15. மூன்றாம் திருவந்தாதி, 16. நான்முகன் திருவந்தாதி,

17. திருவிருத்தம், 18. திருவாசிரியம், 19. பெரிய திருவந்தாதி, 20. திருவெழு கூற்றிருக்கை, 21. சிறிய திருமடல், 22. பெரிய திருமடல், 23. திருவாய்மொழி-

என்பது இந்தத் தொகுப்பு முறை. இந்த இருபத்து மூன்று நூல்களோடு, இராமாநுச நூற்றந்தாதியையும் சேர்த்து இருபத்து நான்கு நூல்களாகக் கொள்வது ஒருமுறை.

ஆனால், தேசிகப் பிரபந்தத்தில், இந்தக் கட்டுரையின் தொடக்கத்தில் கூறியுள்ளாங்குக் கால முறைப்படி ஆழ்வார்கள் வரிசைப் படுத்தப்பட்டுள்ளனர்.

"வையகமெண் பொய்கை, பூதம், பேயாழ்வார்,
மழிசையர் கோன், மகிழ்மாறன், மதுர கவிகள்,
பொய்யில் புகழ்க் கோழியர் கோன், விட்டுசித்தன்,
பூங்கோதை, தொண்டரடிப் பொடி, பாணாழ்வார்,
ஐயனருட் கலியன் எதிராசர் தம்மோடு
ஆறிருவர் ஒரொருவர் அவர்தாம் செய்த
துய்யதமிழ் இருபத்து நான்கிற் பாட்டின்
தொகை நாலாயிரமும் அடியோங்கள் வாழ்வே" (383)

என்பது பாடல். மாறன்=நம்மாழ்வார். கோழியர்கோன் =குலசேகர ஆழ்வார். விட்டு (விஷ்ணு) சித்தன்=பெரியாழ் வார். பூங்கோதை=ஆண்டாள். கலியன்=திருமங்கை யாழ் வார். எதிராசர்=இராமாநுசர்.

இந்தப் பாடலில், ஆழ்வார்கள் பன்னிருவரும் கால முறைப் படி தரப்பட்டுள்ளனர். அவர்கள் 'ஆறிருவர்' எனப்பட்டுள்ள னர். அடுத்து எதிராசர் என்பவர் 'ஒரொருவர்' எனப்பட் டுள்ளார். நூல்கள் 'இருபத்து நான்கு' என எண்ணிக்கை யிடப்பட்டுள்ளன. 'தொகை நாலாயிரம்' என மொத்த எண்ணிக்கை தரப்பட்டுள்ளது.

ஆழ்வார்கள் பன்னிருவர் எழுதிய நூல்கள் இருபத்து மூன்று; எதிராசர் என்னும் இராமாநுசர்மேல் திருவரங்கத் தமுதனார் பாடிய இராமாநுச நூற்றந்தாதி என்னும் நூல் ஒன்று=ஆக இருபத்து நான்கு.

முதல் ஐய வினா:

இங்கே இரண்டு ஐய வினாக்கட்கு இடம் உண்டு. ஒன்று:- ஆழ்வார்கள் திருமாலின்மேல் பாடிய பாக்களுடன், திருவரங்கத் தமுதனார் எதிராசர்மேல் பாடிய பாக்களைச் சேர்க்கலாமா என்பது முதல்வினா. இதற்கு உரிய விடையாவது:-

மதுரகவியாழ்வார் பாடிய 'கண்ணிநுண்சிறுத் தாம்பு' என்பது, பதினொரு பாடல்கள் கொண்ட ஒரு பதிகம். மதுர கவிபாடியது இவ்வளவே. 'கண்ணி நுண் சிறுத்தாம்பு' என்பது, முதல்பாட்டில் உள்ள முதல் தொடராகும். முதல் பாடலின் முதல் குறிப்பே பதிகத்தின் பெயராக வைக்கப்பட்டுள்ளது. இந்தப் பதிகம், மதுரகவி நம்மாழ்வார் மேல் பாடிய பதிக மாகும். எனவே, நம்மாழ்வார்மேல் மதுரகவி பாடிய பாடல் கள் சேர்க்கப்பட்டிருக்கும் போது, இராமாநுசர்மேல் திரு வரங்கத்தமுதனார் பாடிய பாடல்களை அதாவது இராமாநுச நூற்றந்தாதியைச் சேர்க்கலாம் அல்லவா? இதன் அடிப்படை யிலேயே, இக்காலத்தார் சிலர், நம்மாழ்வார் மீது கம்ப ரால் பாடப் பெற்ற சடகோபர் அந்தாதியைத் திவ்வியப் பிர பந்தத்தோடு சேர்க்கின்றனர் போலும்! சடகோபர் என்பது நம்மாழ்வாரின் மற்றொரு பெயராகும். திருமாலின் தொண்டர் களைப் பற்றிய பாடல்களும் திவ்வியம் உடையனவே என்பது இன்னோரின் கருத்தாயிருக்கலாம்.

சைவப் பாடல் ஒற்றுமை:

சைவத் திரு முறைகள் பன்னிரண்டனுள் சுந்தரர் தேவா ரம் ஏழாம்திருமுறையாக அமைக்கப் பெற்றுள்ளது; இது நூறு பதிகங்கள் கொண்டது. இந்த நூறில் 39 ஆம் பதிகம் 'திருத் தொண்டத் தொகை' எனப்படும். 'தில்லை வாழ் அந் தணர்' என்று தொடங்கும் இந்தப் பதிகத்தின் பதினொரு பாடல்களிலும், சிவனுடைய தொண்டர்களைக் குறிப்பிட்டு, அவர்கட் கெல்லாம் யான் அடியேன் என்று பாடியுள்ளார். இவ்வாறு சிவனைப் பாடியதோடு சிவனடியார்களைப் பற்றிப் பாடிய பாடல்களையும் சுந்தரர் தேவாரத்தில் சேர்த்துக் கொண்டிருப்பது போல், திருமாலின் தொண்டர்கள் மீது பாடிய

பாடல்களையும் நாலாயிரத் திவ்வியப் பிரபந்தத்தில் சேர்த்துக் கொள்வதில் குறையொன்றும் இலது.

**இரண்டாம் ஐயவினா:**

இனி இரண்டாவது ஐய வினா வருமாறு: - தேசிகப் பிர பந்தம் 383 ஆம் பாடலில்

"ஐயனருட் கலியன் எதிராசர் தம்மோடு
ஆறிருவர் ஓரொருவர் அவர்தாம் செய்த
துய்யதமிழ் இருபத்து நான்கிற் பாட்டின்
தொகை நாலாயிரமும் அடியோங்கள் வாழ்வே"

என, நாலாயிரம் பாடல்களும் ஆறிருவரும் (பன்னிருவரும்) ஓரொருவரும் (ஒருவர்-எதிராசர்) செய்தன எனக் கூறப்பட் டிருக்கிறதே - ஆனால், எதிராசர் செய்த நூல் ஒன்றும் நாலா யிரத்தில் குறிப்பிடப்பட வில்லையே-அவர்மேல் அமுதனார் பாடிய நூல்தானே நாலாயிரத்தில் சேர்க்கப்பட்டுள்ளது-இது பொருந்துமா? - என்பது இரண்டாவது ஐய வினா.

ஒரு வகையில் இது பொருந்தாதுதான். இராமானுசர் (எதிராசர்) செய்த தமிழ்நூல் ஏதாவது ஒன்றைக் குறிப்பிட வேண்டும். அவர் வடமொழியிலேயே பல நூல்கள் எழுதியுள் ளார்; தமிழில் எழுதவில்லையாம். ஒருவேளை அவர் எழுதிய தமிழ்நூல்கள் சில கிடைக்காமலும் இருக்கலாம். எனவே, எதிராசரே செய்த தமிழ் நூல் ஏதாவது ஒன்றைச் சேர்ப்ப தாயிருந்தாலே இது பொருந்தும். இல்லையேல், தேசிகப் பிர பந்தத்தில் கருத்து அறிவித்துள்ள முறை தவறானதா யிருக்க வேண்டும்.

இந்தச் செய்தியை அவ்வளவு எளிதாக விட்டு விடுவதற்கு இல்லை. ஏனெனில், மணவாளமாமுனிகள் இயற்றிய 'உபதேச ரத்தின மாலை' என்னும் நூலிலும் ஆழ்வார்கள் பன்னிருவ ரோடு எதிராசரும் கூறப்பட்டுள்ளார்:-

"பொய்கையார், பூதத்தார், பேயார், புகழ்மழிசை
ஐயன், அருள் மாறன், சேரலர்கோன்-துய்யபட்ட
நாதன், அன்பர்தாள் தூளி நற்பாணன், நன்கலியன்,
ஈதிவர் தோற்றத் தடைவாம் ஈங்கு"

"ஆழ்வார் திருமகளார் ஆண்டாள், மதுரகவி
யாழ்வார், எதிராச ராம்இவர்கள் – வாழ்வாக
வந்துதித்த மாதங்கள் நாள்கள்தம்மின் வாசியையும்
இந்தஉல கோர்க்குரைப்போம் யாம்"

என்பன பாடல்கள். மாறன்=நம்மாழ்வார். சேரலர் கோன்= குலசேகர ஆழ்வார். பட்டர் நாதன்=பெரியாழ்வார். அன்பர் தாள் தூளி=தொண்டர் அடிப் பொடியாழ்வார். கலியன்=திரு மங்கை யாழ்வார். இந்நூலிலும், ஆழ்வார் பன்னிருவருடன் எதிராசர் இணைத்துக் கூறப்பட்டிருப்பதைக் காணலாம். இது பற்றி அறிஞர்கள் ஆய்க.

பதின்மர் செந்தமிழ்:

ஆழ்வார்கள் பன்னிருவர் என்று கூறுவது ஒருபுறம் இருக்க, ஆழ்வார்கள் பதின்மர் (பத்துப் பேர்) என்று சொல்லும் ஒரு கொள்கையும் உள்ளது. இதற்குச் சான்றாகத் 'திருவேங்கடக் கலம்பகம்' என்னும் நூலிலுள்ள பின்வரும் பாடலைக் கூற லாம்:

"பதின்மர் செந்தமிழைப் படிக்கிலாய் கேளாய்
படித்தபேர் தாளையும் பணியாய்,
எதிபதி சரணே சரணமென் றொருகால்
இசைக்கிலாய், எமதுவேங் கடத்தைத்
துதி செயாய், இருந்த இடத் திருந்தேனும்
தொழுகிலாய், வாழி என் மனனே!
மதிநுதல் அலர்மேல் மங்கை நாயகனார்
மலர்ப்பதம் கிடைப்பது எவ்விதமே?

என்பது பாடல். நாலாயிரத் திவ்வியப் பிரபந்தத்திற்குப் பதின் மர் செந்தமிழ்' என்னும் பெயர் இப்பாடலில் தரப்பட்டுள்ள தாகத் தோன்றுகிறது.

பன்னிருவருள் எந்த இருவரை நீக்கிப் பதின்மர் என்று கூறப்பட்டிருக்கலாம் என நுணுகி நோக்குங்கால், ஆண்டாள், மதுரகவி யாழ்வார் என்னும் இருவரை நீக்கி யிருக்கலாம் என உய்த்துணரலாம். இதற்கு ஒருசார் அகச்சான்று வருமாறு:-

"பொய்கைமுனி பூதத்தார் பேயாழ் வார்தண்
பொருநல்வரும் குருகேசன் விட்டு சித்தன்
துய்ய குலசேகரன் நல்பாண நாதன்
தொண்டரடிப் பொடிமழிசை வந்த சோதி
வையமெலாம் மறை விளங்க வாள்வே லேந்தும்
மங்கையர் கோன் என்றிவர்கள் மகிழ்ந்து பாடும்
செய்யதமிழ் மாலைகள்நாம் தெளிய ஓதித்
தெளியாத மறைநிலங்கள் தெளிகின் றோமே"
(தேசிகப் பிரபந்தம் – அதிகார சங்கிரகம்—1.)

[குருகேசன்=நம்மாழ்வார்; விட்டு சித்தன்–பெரியாழ்வார்]

இப்பாடலில் ஆண்டாளும் மதுரகவியும் விடப்பட்டிருப்பதைக் காணலாம். தேசிகப் பிரபந்தத்தின் மற்றொரு (383) பாடலில், ஆழ்வார்கள் பன்னிருவருடன் எதிராசரும் கூறப்பட்டிருப்பினும், ஆண்டாளையும் மதுரகவியையும் நீக்கிச் சொல்லும் மரபு ஒன்று உண்டு என்பது இப்பாடலால் அறியக் கிடக்கின்றது. மற்றும், உபதேச ரத்தின மாலை என்னும் நூலிலுள்ள இரு பாடல்களை மீண்டும் காண்பாம்:-

"பொய்கையார், பூதத்தார், பேயார், புகழ்மழிசை
ஐயன், அருள்மாறன், சேரலர் கோன்-துய்யபட்ட
நாதன், அன்பர் தாள்தூளி, நற்பாணன், நன்கலியன்,
ஈதிவர் தோற்றத் தடைவாம் ஈங்கு",

"ஆழ்வார் திருமகளார் ஆண்டாள், மதுரகவி
யாழ்வார், எதிராச ராம் இவர்கள்—வாழ்வாக
வந்துதித்த மாதங்கள் நாள்கள் தம்மின் வாசியையும்
இந்தஉல கோர்க் குரைப்போம் யாம்"

என்பன பாடல்கள். இவற்றுள் முதல் பாடலில் பத்து ஆழ்வார்களும் அடுத்த பாடலில் ஆண்டாளும் மதுரகவியும் பிரித்துக் கூறப்பட்டிருப்பதைக் காணலாம்.

ஒரு வெண்பாவில் பன்னிருவரையும் அடக்க முடியாதாதலின், இருவரை இரண்டாம் பாடலில் அமைத்தார் என்று கூறலாம். அங்ஙனமெனில், இந்த இருவரையும் கால முறைப்படி முதல் பாட்டில் வைத்து, திருப்பாணாழ்வாரையும் திரு

மங்கை யாழ்வாரையும் இரண்டாம் பாட்டில் அமைத்திருக் கலாமன்றோ? ஆதலின் அன்னார் கூற்று பொருந்தாது. அவ் வளவு ஏன்? மனம் வைத்தால் - சிறிது முயன்றால் பன்னிரு வரையும் ஒரே வெண்பாவில் அடக்கமுடியும்:

“பொய்கை, பூதன், பேயார், பொன்மழிசைக் கோன், மாறன்,
செய்ய மதுரகவி, சேரர்பிரான், - வையகமெண்
பட்டர் பிரான், கோதை, தொண்ட ரடிப்பொடி, பாணன்,
கட்டவிழ்தார் வாட்கலியன் காப்பு” (நூற்-திருப்-1)

(மாறன் = நம்மாழ்வார். சேரர்பிரான் = குலசேகர ஆழ்வார். பட்டர்பிரான் = பெரியாழ்வார். கோதை = ஆண்டாள். கலியன் = திருமங்கை யாழ்வார்).

இந்த ஒரே வெண்பாவில், ஆழ்வார்கள் பன்னிருவரும் அடக்கப்பட்டிருப்பதைக் காணலாம்.

மதுரகவியையும் ஆண்டாளையும் விலக்கிப் பதின்மர் என்று சிலர் கூறுவதற்குக் காரணம் யாதாயிருக்கலாம்?

மதுரகவி, ‘கண்ணி நுண் சிறு தாம்பு’ என்று தொடங்கும் பாடல் முதலாகப் பதினொரு பாடல்களே பாடியுள்ளார். அப் பாடல்கள் அனைத்தும் திருமாலைப் பற்றியவல்ல; நம்மாழ் வார்மேல் பாடப்பட்டனவாகும். அதனால் மதுரகவியை விலக்கியிருக்கலாம். பெண்பாலார் என்பதால் ஆண்டாளை விலக்கியிருக்கலாமோ என்னவோ!

மதுரகவியும் திருப்பாணாழ்வாரும் ஒவ்வொரு பதிகமே (11,10) பாடியிருப்பதாக அறிவிக்கப்பட்டுள்ளது. இவர்கள் முறையே பதினொன்றும் பத்துந்தானா பாடியிருப்பார்கள்? இன்னும் மிகுதியாகவும் பாடியிருக்கலாம். அவை கிடைக் காமல் போயிருக்கலாமன்றோ? கிடைத்தவரைக்கும் தொகுக் கப்பட்டதே திவ்வியப் பிரபந்தம்.

### வேதமும் நாலாயிரமும்

சமசுகிருத வேதங்களை ஆழ்வார்கள் தமிழில் பாடினார் கள் என்பதாகப் பல நூல்களில் - பல பாடல்களில் ஒரு கருத்து

தெரிவிக்கப்பட்டுள்ளது. இது வேண்டாத கருத்து. வட மொழிக்கு இணையானது என்னும் பெருமை பெற இதனைத் தமிழ் வேதம் என்றும் கூறுகின்றனர். இது தாழ்வு மனப்பான் மையை-தாழ்வுச் சிக்கலைக் (Inferiority Complex) காட்டுகின் றது. வடமொழி வேதம் அதன் போக்கில் இருந்து போகட் டும்-நாலாயிரம் இதன் போக்கில் இருந்து போகட்டும். இரண் டிற்கும் தேவையின்றி முடிச்சு போடுவது ஏன்? வேதத்தைத் தான் தமிழில் சொன்னார்கள் என்று யாரேனும் சொன்னால் சொல்லிப் போகட்டும். இதற்கு மறுப்பு கூற வேண்டுமெனி னும் கூற முடியும்.

நம்மாழ்வாரின் திருவாய்மொழி ஆயிரம் பாடல்களும் ஆயிரம் வேதம் எனப்படுகிறது. இது பெருமையே யாகும். ஆனால், சமசுகிருத வேதத்தைப் படித்துத்தான் தமிழில் எழு தப்பட்டது என்று கூறின் அது பொருந்தாது. நம்மாழ்வார் வேளாளர்-திருப்பாணாழ்வார் பாணர்-திருமங்கை யாழ்வார் முக்குலத்தார் (கள்ளர்). இவர்கள், வருணாசிரம முறைப்படி சூத்திரர்கள் ஆவர். சூத்திரன் காதில் சமசுகிருத மறை மொழி கேட்குமாயின், அவன் காதில் நாராசத்தைக் காய்ச்சி ஊற்ற வேண்டும் என்பது மனுதரும சாத்திரத்தில் கூறப்பட் டுள்ள ஒரு செய்தியாகும். எனவே, இவர்கள் எவ்வாறு பண் டைக் காலத்தில் வேதம் படித்திருக்க முடியும்?—எவ்வாறு வேதத்தைத் தமிழில் கொண்டுவந்திருக்க முடியும்?

மேலும் ஒரு கொடுமைச் செய்தி உள்ளது. அரிதாசர் என் பவர், தமது இருசமய விளக்கம் என்னும் நூலில், வேதம் கற்றவர்களாலேயே ஆழ்வார்களின் பாடல்கட்குப் பொருள் விளங்கிக் கொள்ள முடியும் என்னும் கருத்தில்,

'பூதனே முதலோர் ஆழ்வார்
புகன்றவை சிலஉண்டு அந்நூல்
வேதநூல் உணர்ந்தோர்க் கன்றி
விரித்திடும் பொருள் விளங்கா'

என்று பாடியுள்ளார். என்ன கொடுமை இது. என் நண்பரும் வேளாளர் குலத்தைச் சேர்ந்தவரும் ஆகிய ஒரு பெரியார்

(பெயர் குறிப்பிடுவதற்கில்லை), நம்மாழ்வாரின் திருவாய் மொழிக்கு விளக்க உரை எழுதினார். அதைக் கண்ட வைணவ அந்தணர் (ஐயங்கார்) ஒருவர், வைணவ அந்தணர்களே திரு வாய் மொழிக்கு விளக்கம் எழுத வேண்டும் எனக் கூறினாராம். இதற்கு என் நட்புப் பெரியார் கூறிய பதிலாவது:- நம்மாழ் வாரும் வெள்ளாழன்-நானும் வெள்ளாழன்; நம்மாழ்வார் என் மாமன்-மச்சான்; எனவே, நம்மாழ்வாரின் திருவாய் மொழிக்கு நான் விளக்கம் எழுதாமல் வேறு யார்மட்டும் எழுதவேண்டுமாம்?- என்று பதில் இறுத்தாராம். இது, அந்த நண்பரே என்னிடம் நேரில் கூறிய செய்தி.

இதற்கு எதிர்மாறாக, புரிந்து கொள்ள முடியாத வேதக் கருத்துகளை ஆழ்வார்களின் பாடல்களைப் படிப்பவர்கள் புரிந்து கொள்வர் என்னும் கருத்துடைய

''செய்தமிழ் மாலைகள் நாம் தெளிய ஓதித்
தெளியாத மறை நிலங்கள் தெளிகின் றோமே'' -

என்னும் தேசிகப் பிரபந்தப் பாடல் பகுதி ஈண்டு கருதத் தக்கது.

மற்றும், இதற்கு ஒரு படிமேலாக, கம்பர் தமது சடகோபர் அந்தாதி என்னும் நூலில் நம்மாழ்வாரின் தமிழ்ப் பாடல்கள் செய்யும் அற்புதங்களை வேதம் செய்ய முடியாது என்னும் கருத்தில் ஒரு பாடல் பாடியுள்ளார்:

''சாதிக்குமே பரதத்துவத்தைச் சமயத் திருக்கைச்
சேதிக்குமே ஒன்று சிந்திக்குமே யதனைத் தெரியப்
போதிக்குமே எங்குமோங்கிப் பொது நிற்கு மெய்யைப் பொய்யைச்
சோதிக்குமே உங்கள் வேதம் எங்கோன் தமிழ்ச் சொல் எனவே''-(18)

என்பது பாடல். எனவே, எந்த மொழி நூலையும்-இதனினும் இது உயர்ந்தது - இதனினும் இது தாழ்ந்தது என்று கூறல் வேண்டா.

திருவாய் மொழியின் இடம்:

நாலாயிரத் தொகுப்பில் திருவாய் மொழியின் இடம் எது-

திருவாய் மொழி எத்தனையாவது ஆயிரம்?-என்று கூறுவது மிகவும் சிக்கலானது.

நாலாயிரத்தில், 1102 பாடல்கள் கொண்ட நம்மாழ்வாரின் திருவாய்மொழியை ஓராயிரமாகவும், திருமங்கை யாழ்வாரின் 1084 பாடல்கள் கொண்ட பெரிய திருமொழியை மற்றோர் ஆயிரமாகவும் சிறிது ஏறத்தாழக் கூறுவது மரபு.

முதல் திருவந்தாதி, இரண்டாம் திருவந்தாதி, மூன்றாம் திருவந்தாதி, நான்முகன் திருவந்தாதி, திருவிருத்தம், திருவாசிரியம், பெரிய திருவந்தாதி, திருவெழு கூற்றிருக்கை, சிறிய திருமடல், பெரிய திருமடல்-ஆகிய பத்து நூல்களையும் 'இயற்பா' என்னும் தொகைப் பெயரில் அடக்கி, இயற்பா ஓராயிரம் என்றும் கூறுவது மரபு.

இம் மூன்று ஆயிரங்களும் போக, மீதியுள்ள பதினொரு நூற் பாடல்களை 'முதல் ஆயிரம்' எனல் மரபு.

இந்த நான்கு ஆயிரங்களுள், 'முதல் ஆயிரம்' முதலாவது ஆயிரமாகவும், பெரிய திருமொழி இரண்டாவது ஆயிரமாகவும், திருவாய்மொழி மூன்றாவது ஆயிரமாகவும், இயற்பா நான்காவது ஆயிரமாகவும், முதல் முதல் 1856 ஆம் ஆண்டு வெளியான கூர்மாசாரியர் பதிப்பிலும், 1856 ஆம் ஆண்டு வெளியான காரப்பங்காடு கோபாலாசாரியார் பதிப்பிலும் அமைக்கப்பட்டுள்ளன. 1959 ஆம் ஆண்டில் வெளியான பி. இரத்தினநாயகர் சன்ஸ் பதிப்பில், 'இயற்பா' மூன்றாவது ஆயிரமாகப் பதிப்பிக்கப்பட்டுள்ளது.

**பல பதிப்புகள்:**

நாலாயிரத் திவ்வியப் பிரபந்தத்திற்கு மேற்கூறிய பதிப்புகளேயன்றி, மற்றும் சில பதிப்புகள் வெளிவந்துள்ளன. 1865 ஆம் ஆண்டு, அப்பாவு முதலியார் பதிப்பு-1905 ஆம் ஆண்டில் அரசாணி பாலை கிருஷ்ணமாசாரியார் பதிப்பு-பாபநாசம் சி. கல்யாணசுந்தர முதலியார் பதிப்பு, உரையுடன், விக்ருதி, வைகாசி, 17, அமிழ்த மனை வெளியீடு, சென்னை கிருஷ்ணா பிரின்டிங்வொர்க்ஸ் - 1956 ஆம் ஆண்டு, எஸ். ராஜம் பதிப்பு-1967 ஆம் ஆண்டு, பி.ப. அண்ணங்கராசாரியார் பதிப்பு-1973,

1981, வி. பூதூர் கி. வேங்கடசாமி ரெட்டியார் பதிப்பு-முதலிய பல பதிப்புகள் வெளிவந்துள்ளன.

சில பதிப்புகளில் நாலாயிரம் என்னும் எண்ணிக்கையை நிரப்ப, சிறிய திருமடல், பெரிய திருமடல் என்பன பல பாக்கள் போல் கண்டபடி பிரிக்கப்பட்டுள்ளன. நூறு என்பதைக் குறிப் பிடப் பட்டிக்காட்டார் ஒருவர், ''முப்பரு முப்பரா மூணு முப்பரு-அம்பறம் ஒரு ஒம்பரு - அம்பறம் ஒரு ஒத்தை'' என்றா ராம். இதன் பொருள்: முப்பது முப்பதாக மூன்று முப்பதாம் (30×3=90). அப்புறம் ஓர் ஒன்பதாம் (90+9=99). அப்புறம் ஓர் ஒற்றையாம் (99+1=100). இப்படியாக-ஏதோ கணக்கிட்டு இடர்ப்படுகின்றனர். சில பாடல்கள் ஏறினால் என்ன-குறைந் தால் என்ன? முழுமைப்படுத்திக் (Round பண்ணிக்) கொள்ள வேண்டியது தானே.

பத்துகள் அமைப்பு:

இனி, நாலாயிரப் பிரபந்தத்தில் பின்பற்றியுள்ள பத்து களின் அமைப்பு பற்றிக் காண்பாம்:

ஆழ்வார்களின் நூல்களுள், 'இயற்பா' என்னும் தொகுப் பில் அடக்கப்பட்டுள்ள பத்து நூல்கள் தவிர, மற்ற பதின் மூன்று நூல்களும் பல பத்துகளாகப் பிரிக்கப்பட்டுள்ளன. ஒரு 'பத்து' என்பது, பத்துப் பாடல்கள் கொண்டதாகும். சில பத்துகளில் பதினொரு பாடல்களும் இருக்கும். சைவத் தேவாரங்கள் பல பத்துகளாக உள்ளமை போன்றே-அவற்றுள் சில பத்துகளில் பதினொரு பாடல்கள் உள்ளமை போன்றே இங்கும் உள்ளன.

திவ்வியப் பிரபந்தத்தில் ஒவ்வொரு பத்துக்கும் பெயர் வைக்கப்பட்டுள்ளது. பத்துக்குப் பெயர் வைக்கும் முறை கழக (சங்க) இலக்கியங்களிலேயே உள்ளது. ஐந்து திணைகளைப் பற்றிய 'ஐங்குறு நூறு' என்னும் நூல் பப்பத்துப் பாடல்கள் கொண்ட ஐம்பது பத்துகளை உடையதாகும். அவ்வத் திணைக்கு உரிய பறவை-விலங்கு முதலிய கருப்பொருள்களா லும், இன்னார்க்கு இன்னார் சொன்னது என்னும் துறைப் பெயர்களாலும், பாடல்களில் உள்ள சிறப்புச் சொல் - சிறப்புச்

சொற்றொடர்களாலும், இன்ன பிறவற்றாலும், ஐங்குறு நூற்றுப் பத்துகளுக்குப் பெயர்கள் வைக்கப்பெற்றுள்ளன.

கழக இலக்கியங்களுள் ஒன்றாகிய பதிற்றுப்பத்து என்னும் நூலின் பெயரைக் கொண்டே, அது பத்துப் பத்துகளை உடையது என அறியலாம். இந்த நூலில் ஒரு பத்துக்குப் பொதுப் பெயர் இல்லாமல், ஒவ்வொரு பாட்டுக்கும் அதில் வந்துள்ள ஒரு சிறப்புத் தொடரால் பெயர் கொடுக்கப்பட்டுள்ளது. இவை யெல்லாம், இந்நூலின் முதல் பாகத்தில் விரிவாக விளக்கப்பட்டுள்ளன.

சைவ நூல்களாகிய தேவாரத்திலும் திருவாசகத்திலும் பத்துகள் உண்டு. தேவாரப் பத்துகள் (பதிகங்கள்) ஊர்ப் பெயரால் வழங்கப்படுகின்றன. திருவாசகப் பத்துகள், பாடலின் இறுதிச் சொல்லால் பெயர் பெற்றுள்ளன.

திவ்வியப் பிரபந்தத்தின் பத்துகளோ, ஒவ்வொரு பத்தின் முதல் பாட்டிலுள்ள முதல் தொடரால் பெயர் வழங்கப்பட்டுள்ளன. எடுத்துக்காட்டுகள் வருமாறு:—

பெரியாழ்வார் திருமொழி என்னும் நூலின் முதல் பத்தின் முதல் பாட்டு 'பல்லாண்டு பல்லாண்டு' என்று தொடங்குகிறது. எனவே, அந்தப் பத்துக்குத் 'திருப்பல்லாண்டு' என்னும் பெயர் தரப்பெற்றுள்ளது.

இரண்டாம் பத்தின் முதல்பாடல் 'வண்ண மாடங்கள்' என்று தொடங்குகிறது. எனவே, இப்பத்துக்கு 'வண்ண மாடங்கள்' என்னும் பெயர் வழங்கப்பட்டுள்ளது. இவ்வாறே மற்ற பத்துகளும் முதல் பாடலின் முதல் குறிப்பால் பெயர் பெற்றுள்ளன.

திருப்பாணாழ்வார் ஒரு பத்தே பாடியுள்ளார். அதன் முதல் பாடல் 'அமலனாதி பிரான்' எனத் தொடங்குகிறது. எனவே, அப்பத்து 'அமலனாதி பிரான்' எனப் பெயர் வழங்கப்பெற்று, ஒரு நூலாகக் கணக்கிடப்பட்டுள்ளது.

இவ்வாறே, மதுரகவி யாழ்வாரும் ஒரு பத்தே பாடியுள்ளார். (பத்து எனினும் இதில் பதினொரு பாடல்கள் உள்ளன.) இதன் முதல் பாடல் 'கண்ணி நுண் சிறுத் தாம்பு' எனத்

தொடங்குகிறது. எனவே, இந்தப் பத்து, 'கண்ணி நுண் சிறுத் தாம்பு' என்னும் பெயர் வழங்கப் பெற்று, ஒரு நூலாகக் கணக்கிடப்பட்டுள்ளது.

இவ்வாறு முதல் குறிப்பால் பெயர் பெற்ற வேறு சில நூல்களும் உண்டு. திருவாசகத்தின் மூன்றாம் பகுதி 'அண்டப் பகுதி' என்று தொடங்குகிறது. அந்தப் பகுதிக்குத் 'திருவண்டப் பகுதி' என்னும் பெயர் தரப்பெற்றுள்ளது. ஒளவையாரின் ஆத்திசூடி, கொன்றை வேந்தன், வாக்குண்டாம் - என்னும் நூல்கள், நூலின் தொடக்கத்தில் உள்ள காப்புச் செய்யுளின் முதல் தொடரால் பெயர் பெற்றவையாகும்.

பெரியாழ்வார் திருமொழி என்னும் நூலில் முதல் பத்தாகிய திருப்பல்லாண்டை ஒரு தனிநூலாகக் கணக்கிட்டு, இரண்டாம் பத்தாகிய 'வண்ண மாடங்கள்' என்பதை அந்த நூலின் முதல் பத்தாகக் கொள்பவரும் உளர். பலர் பல காலங்களில் பாடிய பாடல்களின் தொகுப்பாகிய திவ்வியப் பிரபந்தம் இவ்வாறு எடுப்பார் கைப்பிள்ளையாகப் பலராலும் பல விதமாக வரிசைப்படுத்தப்பட்டுள்ளது. அவ்வளவு ஏன்? திருக்குறளை எடுத்துக்கொள்வோமே. ஒவ்வொரு தலைப்பிலும் (அதிகாரத்திலும்) உள்ள பத்துக் குறள்களைப் பழைய உரையாசிரியர்கள் பல விதமாக வரிசைப் படுத்தியுள்ளன ரல்லவா? அதே போல் திவ்வியப் பிரபந்தத்தின் நிலையும் உள்ளது.

பத்துகளுக்குப் பெயர் வைத்திருப்பதும் பண்ணும் தாளமும் குறிப்பிட்டிருப்பதும் ஆழ்வார்களின் செயலன்று. பின் வந்தவர்களின் கைவண்ணமே இவை. இதில் தொகுப்பாசிரியர் நாதமுனிக்கும் பங்கு இருக்கும்.

சிறப்புப் பெருமை:

சிவன் கோயில்களில் தேவாரத் திருமுறைகட்குப் போதிய பெருமை அளிக்கப்படவில்லை. ஆனால், திருமால் (பெருமாள்) கோயில்களில் திவ்வியப் பிரபந்தத்திற்குச் சிறப்பான பெருமை அளிக்கப்பட்டுள்ளது. நம்மாழ்வாரின் திருவாய்மொழியும் திருமங்கை யாழ்வாரின் திரு நெடுந்தாண்டகமும், ஆண்டாளின் திருப்பாவையும் வைணவர்களால் பெரிதும் போற்றப்படுகின்றன.

ஆண்டாள் தம்மை நாயகியாகவும் கண்ணபிரானை நாயக னாகவும் கொண்டு பாடியுள்ளார். பெரியாழ்வார் தம்மை யசோதையாகக் கொண்டு பாடியுள்ளார். நம்மாழ்வாரின் திருவிருத்தம் முழுதும் அகப்பொருளமைந்தது. திருமங்கை யாழ்வாரும் அகப்பொருள் அமைத்துப் பாடியுள்ளார்.

**உரைகள்:**

திவ்வியப் பிரபந்தத்திற்குப் பலர் உரை யெழுதியுள்ளனர். பெரிய வாச்சான் பிள்ளை என்பார் முழுவதுக்கும் உரை யெழுதியுள்ளார். திருவாய் மொழிக்கு, ஆறாயிரப்படி-ஒன்பதா யிரப்படி - பன்னீராயிரப்படி- இருபத்து நாலாயிரப்படி - ஈடு முப்பத்தாறாயிரப்படி-எனப் பல உரைகள் உள்ளன. ஆனால் இவ்வுரைகள் சமசுகிருதமும் தமிழும் கலந்த மணிப்பிரவாள(இரு மொழி) நடையில் உள்ளன. தமிழில் சமசுகிருதம் கலந்துள்ளது என்று கூறுவதைவிட, சமசுகிருதத்தில் தமிழ் கலந்துள்ளது என்று கூறலாம் போல் தோன்றுகிறது. உரைகள் என்னவோ மிகவும் சிறப்பானவையே. ஒரு வகைத் திறனாய்வு என்றே கூறலாம். ஆனால், உரையாசிரியர்கள் அவர்களுக்காக எழுதி யுள்ளதாகத் தோன்றுகிறதே தவிர, பொதுமக்கள் படித்துப் புரிந்து கொண்டு பயனடையும்படியாக இல்லை. இந்த உரை களை, தமிழ் மொழிப் பாடல்கட்குச் செய்யப்பட்ட ஒரு சார் மொழி பெயர்ப்பு என்று கூறலாம் போல் தோன்றுகிறது.

தெளிவாகப் புரியும் தமிழ்ப் பாடல்களுக்குப் புரியாத நடையில் உரை தேவைதானா என்று கேட்டு வேதனைப் படு பவர் உளர். உரையாசிரியர்கள் அவர்கள் அறிந்த உரைநடை யில் எழுதியுள்ளனர். தனித்தமிழ் இயக்கத்தினரே சில நேரங் களில் பிற மொழி கலந்து பேசிவிடுகின்றனர். இந்த உரை யாசிரியர்கள் தமிழும் வடமொழியும் கலந்தே பேசிப் பழக்கப் பட்டவர்கள். தாங்கள் பேசுவது போலவே எழுதிவிட்டனர்.

"திருத்தமான எழுத்து நடை என்பது, ஒழுங்குபடுத்தப் பட்ட பேச்சு நடையின் விளைவே"-என்று 'கிரீனிங்' (Greening) என்ற அறிஞர் கூறியுள்ளார். 'செந்தமிழும் நாப் பழக்கம்' என் பது ஔவையின் தனிப் பாடல் பகுதி. நல்ல தமிழ் நடையில் பேசிப் பழகியிருந்தால் அல்லவா - நல்ல தமிழ் நடையில் எழுத

முடியும்? இவர்களைப் போன்றோர் 'ஹரி கதா காலக்ஷேபம்' என்னும் பெயரில் சொற்பொழிவாற்றும் போது, இந்த வேதனையான நிலையைக் காணலாம். எனவே, இவ்வுரையாசிரியர்களின் நடையைப் பொருட்படுத்தாமல், அரிதின் முயன்று கருத்தைமட்டும் எடுத்துக் கொண்டு சுவைக்க வேண்டும்.

காலம்:

திவ்வியப் பிரபந்த ஆழ்வார்கள் கி.பி.ஐந்தாம் நூற்றாண்டிலிருந்து எட்டாம் நூற்றாண்டு வரைக்கும் உள்ள கால கட்டத்தில் தோன்றியுள்ளனர். எனவே, பாடல்களின் காலமும் அன்னதே, நான்கு நூற்றாண்டு காலத்தில் எழுதப்பெற்ற பாடல்களை நாலாயிரத் திவ்வியப் பிரபந்தமாகத் தொகுத்த நாதமுனி ஒன்பதாம் நூற்றாண்டினர்; எனவே, இந்நூல் தொகுக்கப் பெற்ற காலமும் அன்னதே.

பல காலங்களில் பலர் பாடிய பாடல்களின் – நூல்களின் தொகுப்பு ஆதலின், நாலாயிரத் திவ்வியப் பிரபந்தத்தைப் 'பன்மலர் மாலைத்திரள்' என்னும் வகைக்குள் அடக்கலாம்.

## தமிழ் மாலைகள்

இந்தக் கட்டுரை நூலில், நாலாயிரத் திவ்வியப் பிரபந்தத்திற்குத் "தமிழ் மாலைகள்" என்னும் பெயர் தரப்பட்டுள்ளது. இப்பெயர் தேசிகப் பிரபந்தம் என்னும் நூலிலிருந்து எடுத்துக் கொடுக்கப்பட்டதாகும். இப்பெயர் திவ்வியப்பிரபந்தத்திற்குப் பொருந்து மாற்றை, ஆழ்வார்களின் பாடல்களிலிருந்து தரப்படும் சில அகச் சான்றுகளால் நிறுவலாம்.

ஆழ்வார்களுள் பலர் தம் பத்தின் இறுதியில் தம் பெயரைக் குறிப்பிட்டு, இன்னார் பாடிய 'தமிழ்'—இன்னார் பாடிய 'மாலை' என்றெல்லாம் கூறியுள்ளனர். இவர்களையும் 'முத்திரைக் கவிஞர்கள்' எனலாம். இனி அகச்சான்றுகள் வருமாறு:—

பெரியாழ்வார் இயற்றிய 'பெரியாழ்வார் திருமொழி' என்பதிலிருந்து:

"வித்தகன் விட்டு சித்தன் விரித்த தமிழ் இவை
எத்தனையும் சொல்ல வல்லார்க்கு இடர் இல்லையே"

(1-5-10)

"பட்டன் உரைத்த தமிழ் இன்னிசை மாலை" (1-6-11)

"ஈத்த தமிழிவை ஈரைந்தும் வல்லார்" (1-10-10)

"சீர்மலி செந்தமிழ் வல்லார்" (2-4-10)

"ஒக்க உரைத்த தமிழ் பத்தும் வல்லார்" (2-6-10)

"ஏரார் இன்னிசை மாலை" (3-1-10)

ஆண்டாளின் திருப்பாவையிலிருந்து:

"கோதை சொன்ன சங்கத் தமிழ் மாலை முப்பதும்" (30)

ஆண்டாளின் நாச்சியார் திருமொழியிலிருந்து: -

"கோதை விருப்புடைய இன்தமிழ் மாலை" (1-10)

"கோதை வாய்த் தமிழ் வல்லார்" (2-10)

குலசேகர ஆழ்வாரின் 'பெருமாள் திருமொழி' என்பதிலிருந்து—

"குலசேகரன் சொற்செய்த நடை விளங்கு தமிழ் மாலை" (1-11)

"குலசேகரன் சொல்லினின் தமிழ்மாலை" (2-10)

திருமங்கை யாழ்வாரின் பெரிய திருமொழியிலிருந்து:—

"கலியன் ஒலி செய் தமிழ்மாலை" (1-5-10)

"வண்டமிழ்ச் செஞ்சொல் மாலைகள்" (1-8- 10)

அவரது திருக் குறுந் தாண்டகத்திலிருந்து:—

"கலியன் சொன்ன வண்தமிழ் மாலை" (20)

அவரது திரு நெடுந்தாண்டகத்திலிருந்து:—

"மன்னிய நூல் தமிழ் மாலை வல்லார்" (30)

நம்மாழ்வாரின் திருவாய் மொழியிலிருந்து—

"சடகோபன் பண்ணிய தமிழ்மாலை" (2-7-10)

"பண் தலையில் சொன்ன தமிழ் ஆயிரத்து" (2-8-11)

இவ்வாறு இன்னும் எத்தனையோ எடுத்துக்காட்டலாம். ஆழ்வார்கள் இசையோடு பாடியதாகச் சொல்லப்பட்டுள்ளது. இந்த அகச் சான்றுகளால், இந்தத் தொகை நூலுக்குத் "தமிழ் மாலைகள்" என்னும் பெயரிட்டிருப்பது பொருந்து மன்றோ?

## சிறு சிறு தொகுப்புகள்

### பெரிய திருமொழி

நாலாயிரத் திவ்வியப் பிரபந்தம் முழுவதும் இன்றி, சிற்சில பகுதிகள் மட்டும் சிறு சிறு தொகுப்புகளாக வெளியிடப்பட்டுள் ளன. சில வருமாறு:-

திருமங்கையாழ்வாரின் 'பெரிய திருமொழி' என்னும் நூலில் 11 பத்துகள் (11 பெரும் பகுதிகள்) உள்ளன. இவை வியாக்கியான-விரிவுரையுடன் பதிக்கப்பெற்றுள்ளது. இந்தப் பதினொரு பத்துகளும் நான்கு சம்புடங்களாக (உட்பகுதி களாக) அச்சிடப்பட்டுள்ளன. முதல் பத்தும் இரண்டாம் பத்தும் முதல் சம்புடம்; 3,4,5 ஆம் பத்துகள் இரண்டாம் சம்புடம்; 6,7,8 ஆம் பத்துகள் மூன்றாம் சம்புடம்; 9,10,11 ஆம் பத்துகள் நான்காம் சம்புடம்.

இதற்கு உரை எழுதியவர், பெருமாள் கோயில் பிரதி வாதி பயங்கரம் அண்ணங்கராசார்ய சுவாமிகள். இவர் உரைக்குத் 'திவ்யார்த்த தீபிகை' என்பது பெயர். உரையுடன் வெளியிட்டவர், சென்னை, எம்.ஆர். கோவிந்தசாமி நாயுடு. அச்சகம் சென்னை மாடல் அச்சுக் கூடம்.

முதல் சம்புடம் 1927(பிரபவ) ஆம் ஆண்டிலும், இரண் டாவது சம்புடம் 1929 (விபவ) ஆம் ஆண்டிலும், மூன்றாம் சம்புடம் 1930 (சுக்ல) ஆம் ஆண்டிலும், நான்காம் சம்புடம் 1930 (பிமோதூத) ஆம் ஆண்டிலும் (கார்த்திகைத் திங்கள்) பகுதி பகுதியாக-சிறுசிறு தொகுப்பாக வெளியிடப் பெற்றன.

மற்றும், பெரியவாச்சான் பிள்ளையின் வியாக்கியான - விரிவுரையுடனும் அப்பு என்பவரின் அரும்பத உரையுடனும், பெரிய திருமொழியின் 1,2,3, ஆம் பத்துகள் 1908 ஆம் ஆண்டி லும், 4,5,6,7, ஆம் பத்துகள் 1909 ஆம் ஆண்டிலும், 8,9,10, 11 ஆம் பத்துகள் 1910 ஆம் ஆண்டிலும், காஞ்சி-சிதா சார்ய அச்சுக் கூடத்தில் அச்சிடப்பட்டு வெளியாயின. அச்சிட்டவர்: ஸ்ரீ வைஷ்ணவ க்ரந்த முத்ராபக சபையார்.

**திருவேங்கடப் பதிகங்கள்:**

திருவேங்கடத் திருப்பதியைப் பற்றி, பொய்கை யாழ்வார், பூதத் தாழ்வார், பேயாழ்வார், திருமழிசையாழ்வார், நம்மாழ் வார், பெரியாழ்வார், ஆண்டாள், குலசேகர ஆழ்வார், திருப்பாணாழ்வார், திருமங்கையாழ்வார்-ஆகிய பதின்மரும் பாடிய 195 பாடல்கள் உரையுடன் தனித் தொகுப்பார் அச்சிடப்பட்டுள்ளன.

இதன் உரையாசிரியர்: தி.கு.வேம்.ந. சுதர்சனா சார்ய சுவாமிகள். சார்பு: திருமலை-திருப்பதி தேவத்தான அற நிலையக் கழகம். ஒப்புதல்: செயல் துறைத் தலைவர் செ. அண்ணாராவ், பி.ஏ. அச்சகம்: திருமலை–திருப்பதி தேவத் தான அச்சகம். வெளியான ஆண்டு: 1953.

**நூற்றெட்டுத் திருப்பதிப் போற்றி அகவல்**

திருப்பத்தூர் கா.அ.சண்முக முதலியார் என்பவர் ஆழ்வார் களின் மங்களாசாசனம் (பாடல்) பெற்ற நூற்றெட்டுத் திருப்பதிகளின் பெயர்களையும் அடக்கி 108 அடிகள் கொண்ட ஓர் அகவல் பா இயற்றி முன்னால் சேர்த்துள்ளார். அதனை அடுத்து, நூற்றெட்டுத் திருப்பதிகளின்மேல் ஆழ்வார்கள் அருளியுள்ள சிற்சில பாடல்கள் அமைக்கப்பட்டுள்ளன. சில பதிகளைப் பற்றிச் செல்வைச் சூடுவார் இயற்றிய பாகவதப் பாடல்களும் இத்தொகுப்பில் இடம்பெற்றுள்ளன. திருப்பதி களைப் பற்றிய விளக்கமும் தரப்பெற்றுள்ளது.

பதிப்பு: திருப்பத்தூர் கா.அ. சண்முக முதலியார், குடியேற்றம் – அமிர்தா அச்சகம், சென்னை-1963.

இவ்வாறாக, நாலாயிரத் திவ்யப் பிரபந்தம் தொடர்பான சிற்சில சிறுசிறு தொகுப்புகள் உள்ளன.

## புறத் திரட்டு

(Bulletin of the Tamil Department NO.2)

இதற்கு நீதித் திரட்டு என்ற பெயரும் உண்டு. பதிப்பு: எஸ். வையாபுரிப்பிள்ளை; சென்னை சர்வகலா சாலை (சென்னைப் பல்கலைக் கழகம்), சென்னை. பதிப்பாண்டு 1938.

பல நூல்களிலிருந்து புறப்பொருள் பாடல்கள் தொகுக்கப் பெற்ற நூல் இது. தொகுத்தவர் பெயர் தெரியவில்லை. கி.பி. 15 ஆம் நூற்றாண்டிற்கு முன் தொகுக்கப்பட்டிருக்கலாம்.

திருக்குறள் அமைப்பைப் போல, அறத்துப்பால் – பொருட் பால் – காமத்துப் பால் என்னும் மூன்று பிரிவினதாக இத் தொகுப்பு உள்ளது. துறைகள் பன்னிரு படலத்தை ஒட்டி யுள்ளன.

1. அறத்துப் பால்: (1) கடவுள் வாழ்த்து முதலாக, (45) பழவினை ஈறாக உள்ள 45 தலைப்புகளில் 473 பாடல்கள் உள்ளன.

2. பொருட்பால்: (46) இறைமாட்சி முதலாக, (131) வாழ்த்து ஈறாக உள்ள 86 தலைப்புகளில் 1032 பாடல்கள் உள்ளன.

3. காமத்துப்பால்-(132) கைக்கிளை – ஒரேதலைப்பு 65 பாடல்கள்–ஆக மொத்தம் 1570 பாடல்களின் தொகுப்பாகும் இந்நூல்.

இந்நூலில் இடம்பெற்றுள்ள நூற்பெயர்களும் மொத்தப் பாடல்களின் எண்ணிக்கையும் வருமாறு:–

1. அறநெறிச் சாரம் 34
2. ஆசாரக் கோவை 27
3. ஆசிரிய மாலை 16
4. இராமாவதாரம் 27
5. இரும்பல் காஞ்சி 3
6. இன்னா நாற்பது 5
7. இனியவை நாற்பது 2
8. ஏலாதி 21
9. களவழி நாற்பது 10
10. குண்டல கேசி 19
11. சாந்தி புராணம் 9
12. சிந்தாமணி 142
13. சிறுபஞ்ச மூலம் 37
14. சூளாமணி 79
15. தகடூர் யாத்திரை 44
16. திரிகடுகம் 53
17. நளன் கதை 1
18. நாரத சரிதை 8
19. நாலடியார் 212
20. நான்மணிக்கடிகை 45

21. பதிற்றுப்பத்து 6
22. பரிபாடல் 6
23. பழமொழி 319
24. பாரதம் 33
25. புறநானூறு 105
26. பெரும்பொருள் விளக்கம் 41
27. முத்தொள்ளாயிரம் 109
28. மேருமந்தர புராணம் 1
29. யாப்பருங்கலம் 2
30. வளையாபதி 46
31. வெண்பாமாலை 75
நூல்பெயர் தெரியாதவை 13

ஆக மொத்தம் 1570 பாடல்கள்

1570ஆம் பாடலுக்குப் பின்பு, பின்வரும் திருக்குறள் தலைப்புகளும் இத்தனையாவது குறள் என்ற எண்களும் தரப் பட்டுள்ளன. அவை முறையே வருமாறு: –

தகையணங் குறுத்தல் – 10
குறிப்பறிதல் – 9
புணர்ச்சி மகிழ்தல் – 8
நலம் புனைந்துரைத்தல் – 10
காதல் சிறப்புரைத்தல் – 2
நாணுத்துறவுரைத்தல் – 1
அலர் அறிவுறுத்தல்-4
பிரிவாற்றாமை-4
படர்மெலிந்திரங்கல் – 2
கண்விதுப் பழிதல் – 6
பசப்புறு பருவரல் – 3
தனிப்படர்மிகுதி-6
நினைந்தவர் புலம்பல்–5
கனவு நிலை யுரைத்தல் – 8
பொழுது கண் டிரங்கல் – 7
உறுப்பு நலனழிதல் – 2
நெஞ்சொடு கிளத்தல்–7
நிறை யழிதல் – 8
அவர் வயின் விதும்பல் – 1
குறிப்பறி வுறுத்தல்-4
புணர்ச்சி விதும்பல்–2
நெஞ்சொடு புலத்தல் – 3
புலவி – 4
புலவி நுணுக்கம்-7
ஊடலுவகை-7

ஆக மொத்தம் 25.

பதிப்பாசிரியர் வையாபுரிப் பிள்ளை பெரிய அளவில் 48 பக்கங்கள் கொண்ட நூன்முகம் மிக விரிவாக எழுதியுள்ளார்.

புறத் திரட்டு, திருக்குறளின் பால்-அதிகார முறையைப் பெரும்பாலும் பின்பற்றியுள்ளது.

ஒரு சில கடிதப் பிரதிகளில் 'புறத்திரட்டு' என்பதற்குப் பதிலாக 'நீதித் திரட்டு' என்னும் தலைப்பு தரப்பெற்றுள்ளது. பெரும்பாலான பிரதிகளில் புறத் திரட்டு என்றே உள்ளது.

புறத்தில் நீதி அடங்கும்; ஆனால், நீதியில் புறம்-கைக்கிளை-பெருந்திணை ஆகியவை அடங்காவாதலின் புறத்திரட்டு என்னும் பெயரே பொருந்தும் என்று கூறப்படுகிறது.

பல புறத்திரட்டுப் படிகளுள் காமத்துப்பால் இல்லை. புறத்திரட்டுச் சுருக்கம் என்னும் தொகுப்புப் படிகளுள் காமத்துப் பால் இருக்கிறது. விரிவுத் தொகுப்பில், பொருட்பால் வாழ்த்து என்னும் தலைப்புடன் முடிவதால், அந்த மட்டில் நூல் முடிந்து விட்டதாகக் கருதி, பின் உள்ள காமத்துப் பாலை விலக்கி விட்டிருக்கலாமோ என்று சிலர் கருதுகின்றனர். பாடல்கள் வெண்பா - விருத்தம் - அகவல் என்ற முறையில் வரிசைப்படுத்தித் தரப்பட்டுள்ளன.

புறத் திரட்டுச் சுருக்கம்

புறத்திரட்டுச் சுருக்கம் என்னும் தொகுப்புப் படி உள்ளது. விரிவில் இல்லாத காமத்துப் பால் இதில் உண்டு. காமத்துப் பாலில் கொடுக்கப்பட்டுள்ள பாடல்கள் முத்தொள்ளாயிரம் என்னும் நூலின் பாடல்களாகும்.

தொல்காப்பியம்-செய்யுளியலில் உள்ள 'அங்கதப்பாட்டு என்று தொடங்கும் (118ஆம்) நூற்பாவின் உரையில் பேராசிரியர், "கைக்கிளை பரிபாட்டு அங்கதச் செய்யுள்" என்று ஓதப்பட்ட கைக்கிளைச் செய்யுள் முத்தொள்ளாயிரத்துப் போல பலவாயினும்..." என்று கூறியிருப்பதைக் கொண்டும், காமத்துப் பால் செய்யுள்கள் முத்தொள்ளாயிரத்துச் செய்யுள்கள் என்பதை அறியலாம். இப் பாடல்கள் புறத் திரட்டோடு இணைக்கப்பட்டன. இத் தொகுப்பில் உள்ள பால்களும் தலைப்புகளும் பற்றிய விவரம் வருமாறு:-

1. அறத்துப் பால்:—(1)கடவுள் வாழ்த்து முதல் (40) செல்வ நிலையாமை ஈறாக 40 தலைப்புகள்

2. பொருட்பால்:—(41) இறைமாட்சி முதல் (135) வாழ்த்து ஈறாக 95 தலைப்புகள்

3. காமத்துப்பால்:— (136) கைக்கிளை, (137) தகையணங்குறுத்தல் முதல் (161)ஊடலுவகை ஈறாக 26 தலைப்புகள்

இத் தொகுப்பில், 'திருமலைக் கொழுந்து வெண்பா' என்னும் நூலிலிருந்து 27 பாடல்கள் தரப்பட்டுள்ளன.

இன்னா நாற்பது ஒரு பாடலும், இராம காதை இரண்டு பாடல்களும் சாமிநாத ஐயர் கடிதப் படியில் கூடுதலாக உள்ளன.

இத் தொகுப்பின் ஏட்டுப் படிகளில், 'செல்வ நிலையாமை' என்னும் தலைப்பிற்குப் பின், சில வெள்ளேடுகள் (எழுதாத ஏடுகள்) உள்ளன. துறவு, மெய்யுணர்தல், அவாவறுத்தல், ஊழ் என்னும் அதிகாரப் பகுதிகள் இருக்கலாம் என வையாபுரிப் பிள்ளை கூறியுள்ளார். பாடல் இறுதியில் நூல் பெயர் தந்திருப்பது பயனளிக்கிறது.

புறத்திரட்டுச் சுருக்கப் படி யொன்று தமிழக அரசின் சுவடி நூல் நிலையத்தில் உள்ளது. இதில், அறத்துப் பாலில் 195 செய்யுட்களும் பொருட்பாலில் 418 செய்யுட்களும் உள்ளன. மொத்தம் 613 பாடல்கள் உள.

மற்றொரு புறத்திரட்டுச் சுருக்கப் படியில், மேலே குறிப்பிட்டுள்ள சுருக்கப் படியில் உள்ளவற்றோடு திருக்குறள்கள் சிலவும் திருமலை வெண்பாச் செய்யுட்களும் உள.

ஓர் ஏட்டுச் சுவடியில் இறுதியில், "அறத்துப் பால், பொருட்பால்,காமத்துப் பால் வகை ௩ (3)க்கு வெண்பா-விருத்தம்-பஃறொடை யாசிரியம் அகவற்பா எருயங (753) புறத்திரட்டுச் சுருக்கம் முற்றும் உ.சிவ கடாட்சம் உண்டாகுக. உகூசயஅஞு ஸ்ரீமுகஞு சித்திரை மீ (சித்திரை மாதம்)உக உ (21 ஆம் தேதி) திருநெல்வேலியில் எழுதி முடித்தது உ"- என்று காணப்படுகிறது. இது திருநெல்வேலிப் படி (பிரதி).

இத் தொகுப்பில் உள்ள திருமலை வெண்பா, 'திருமலைக் கொழுந்துப் பிள்ளை' என்பவர் மீது பாடப்பட்டது. இவர் திருநெல்வேலிச் சீமையை 1663 முதல் 1682 ஆம் ஆண்டு வரை மேலாட்சி செய்தவர்; வடமலை வெண்பா என்னும் நூலின் பாட்டுடைத் தலைவனாகிய காவை வடமலையப்பப் பிள்ளை என்பவரின் மகன் இவர்.

மேற்குறித்த சுவடிப் படிகளின் மேலே 'பிரசங்காபரணம்' என்னும் தலைப்பு உள்ளது. இது, இக்காலத்தார் எழுதிய தலைப்புப் பெயராகும். பிரசங்கத்திற்கு ஆபரணம் போல் உதவுவது என்னும் பொருளில் இப்பெயர் எழுதப்பட்டிருக்கலாம். சிலர், இப் பெயரையே தொகுப்பின் பெயராகக் கொண்டு மயங்குகின்றனர்.

### பெயர்ப் பொருத்தம்

புறத்திரட்டு விரிவுப் படிகள் பெரும்பாலானவற்றில் காமத்துப் பால் இல்லை. இது பொருத்தமான அமைப்பேயாகும். புறத்திரட்டு என்பது, அகமாகிய காதல் அல்லாத புறப் பொருள் பற்றிய தொகுப்பு ஆதலின், காமத்துப் பால் இல்லாமையே முறையாகும். புறத்திரட்டுச் சுருக்கத்தில் காமத்துப் பாலைச்சேர்த்தது பொருந்தாது. ஒரு வேளை, கைக்கிளையை அகமாகக் கொள்ளாமல் அகப்புறமாகக் கொண்டிருக்கலாம். அகப்பொருள் கருத்தாயிருப்பினும், பாண்டியன், சேரன், சோழன் போன்ற அடையாளப் பெயர் குறிப்பிட்டிருப்பின், அத்தகைய பாடல்கள் புறப்பொருளாகவே கருதப்படும்.

''மக்கள் நுதலிய அகன் ஐந்திணையில்
சுட்டி ஒருவர் பெயர் கொளப் பெறாஅர்''

என்பது தொல்காப்பியம் (அகத்திணையியல்—57).

எனவே, இப்படி ஏதாவது காரணங்கள் கொண்டு காமத்துப் பாலைப் புறத்திரட்டுச் சுருக்கத்தில் சேர்த்திருக்கலாம்.

### தொகுப்பின் காலம்

புறத்திரட்டு விரிவு, சுருக்கம் என்னும் இரண்டிலுமே தொகுக்கப்பட்ட காலம் தெரிவிக்கப் படவில்லை.

17 ஆம் நூற்றாண்டினரான திருமலைக் கொழுந்துப் பிள்ளையின் மீது பாடப்பட்ட திருமலை வெண்பாப் பாடல்கள் சுருக்கத்தில் இருப்பதால், சுருக்கம் தொகுக்கப்பட்ட காலம் 17 ஆம் நூற்றாண்டின் இறுதி என்று சொல்ல வேண்டும். சில படிகளில் இந்நூல் பாடல்கள் இல்லையாதலின், முதலில் தொகுக்கப்பட்ட சுருக்கத்தின் காலம் இன்னும் முற்பட்டதாக இருக்க வேண்டும்.

மதுரைத் தமிழ்ச் சங்கப் புறத்திரட்டுப் படியொன்றில், குருகை மான்மியச் செய்யுள் இரண்டு உள. இந்நூலின் காலம் கொல்லம் 723 (கி.பி.1548) என இந்நூலின் பதிகச் செய்யுளில் குறிப்பிடப்பட்டுள்ளது. இவ்விரு பாடல்களும் சேர்க்கப்பட்டிருக்கலாம்.

புறத்திரட்டு நூல்களுள் காலத்தால் பிற்பட்டது, இராமாவதாரம் என்னும் கம்பராமாயணமாகும். கம்பர் பன்னிரண்டாம் நூற்றாண்டினர். எனவே, புறத்திரட்டு முதலில் தொகுக்கப்பட்ட காலம், 13-ஆம் நூற்றாண்டிற்கும் 16 ஆம் நூற்றாண்டிற்கும் இடைப்பட்டதாய் இருக்கலாம் எனப் பதிப்பாசிரியர் கருதுவது பொருத்தமே.

**புறத் திரட்டு-அறத்துப்பால்-முதல் பகுதி**

புறத்திரட்டின் முதல் பகுதியாகிய அறத்துப்பால் மட்டும் உள்ள பதிப்பாகும் இது. பதிப்பு ஆய்வு: இலக்கண விளக்கப் பரம்பரை சோமசுந்தர தேசிகர். வெளியீடு: திருவாரூர்த் தமிழ்ப் பிரசுரம். அச்சு: விக்டோரியா அச்சகம், திருவாரூர். பதிப்பாண்டு 1918.

முதல் தலைப்பாகிய கடவுள் வாழ்த்து முதல், இருபத்திரண்டாம்தலைப்பாகிய தீவினையச்சம் முடிய இந்தப் பதிப்பு அமைந்துள்ளது. மொத்தப் பாடல்கள் 194. கடைசித் தாள்கள் காணவில்லை. 32 பக்கங்களே உள்ளன. முன்னுரை ஏதும் தெரியவில்லை. எட்டுப் பிரதிகளிலிருந்து முதல் முதல் அச்சிட்ட பதிப்பாகும் இது.

**புறத்திரட்டுச் சுருக்கம் (No. 2031)**

தமிழக அரசின் சுவடி நூல்நிலையத்தில் No. 2031 என்னும் எண்ணிட்ட படி இது. அச்சிட்ட நூலின் சுருக்கம் போல் காண்கிறது, தொகுத்தவர் பெயர் இல்லை. 753 செய்யுட்கள் உள்ளன.

**புறத் திரட்டின் பயன்**

பல நூல்களிலிருந்து எடுத்த பாடல்களின் தொகுப்பு புறத்திரட்டாகும். யாரோ ஓர் அறிஞர், மக்கள் முழு நூல்களையும் படிக்க முடியாது என்று கருதி, அருள் உள்ளத்தோடு,

சிற்சில பாடல்களையாவது படிக்கட்டும் என்று தொகுத்துள்ளார். அவர் பெரும் புகழுக்கு உரியவர். இது முதல் பயனாகும்.

இரண்டாவது பயன்: இத்தொகுப்பில் குறிப்பிடப்பட்டுள்ள சில நூல்கள் தனியே எங்கும் கிடைத்தில. அவை: ஆசிரிய மாலை, இரும்பல் காஞ்சி, தகடூர் யாத்திரை, பெரும் பொருள் விளக்கம், குண்டலகேசி, வளையாபதி, முத்தொள்ளாயிரம் ஆகியவையாகும்.

இவற்றுள் சில நூல்களின் பெயர்கள் உரையாசிரியர்களின் உரைகளில் குறிப்பிடப்பட்டிருப்பினும், புறத்திரட்டில் குறிப்பிடப்பட்டிருப்பது அவற்றின் உறுதிப்பாட்டை அறிவிக்கிறது. இது மிகப் பெரிய பயன் அல்லவா?

அடுத்த பயன்: கிடைக்காத சில நூல்களின் பெயர்களை அறிவிப்பதல்லாமல், கிடைத்திருக்கும் சில நூல்களில் இல்லாமல் மறைந்து போயிருக்கும் சில பாடல்களை இந்தத் திரட்டால் அறிந்து கொள்ள முடிகிறது. பதிற்றுப் பத்து என்னும் நூல் சங்க இலக்கியமாகும். இது ($10\times10=100$) நூறு பாடல்களைக் கொண்ட நூல். இதில், முதல் பத்துப்பாடல்களும் இறுதிப் பத்துப் பாடல்களும் கிடைக்கவில்லை. இவற்றுள் இரண்டு பாடல்கள், பதிற்றுப் பத்து என்னும் நூல் பெயரிட்டுப் புறத்திரட்டில் தரப்பட்டுள்ளன. புறத்திரட்டில் 1260,1275 என்னும் எண்ணுடைய பாடல்களே அவை.

அடுத்தது; 'எழுபது பரிபாடல்' என்னும் நூலும் சங்க இலக்கியமாகும். ஆனால், எழுபது பாடல்களுள் இருபத்திரண்டு பாடல்களே இப்போது கிடைத்து அச்சிடப்பட்டுள்ளன. புறத்திரட்டுத் தொகுப்பிலிருந்து ஆறு பரிபாடல் பாடல்களின் பகுதிகள் அறியப்பட்டுள்ளன. ஒவ்வொரு பாடல் பகுதியின் இறுதியிலும் பரிபாடல் என்னும் நூற்பெயர் தரப்பட்டுள்ளது. புறத்திரட்டில், 866, 874, 875, 876, 877, 878 என்னும் எண்கள் கொண்ட பாடல்களே இவை.

புறத் திரட்டு இல்லையேல் இவை அறியப்பட மாட்டா. மேற்கூறியவற்றைக் கொண்டு மற்றொரு செய்தியும் அறிய வரும். அதாவது:— தமிழில் இன்னும் எத்தனையோ நூல்கள்

இருந்து அழிந்து போய் விட்டிருக்கின்றன-மறைந்து விட்டிருக்கின்றன. புறத்திரட்டால் மறைந்து போன சில நூல்களை யாவது அறிய முடிகிறது என்னும் இரங்கத்தக்கசெய்தியாகும் அது. இவ்வளவு பயனுள்ள புறத் திரட்டைத் தொகுத்தவரின் பெயர் தெரியாதது மேலும் வருந்தத் தக்கதாகும்.

## அகத்தியர் நூல்கள்

அகத்தியர் பெயரால் பல தொகுப்புகள் உள்ளன. அகத்தியர் யார் – எந்த அகத்தியர்? – என்ற ஆய்வு தேவையில்லை. நூல்களை மட்டும் எடுத்துக் கொள்வோம்.

**அகத்தியர் பன்னீராயிரக் காண்டம்**

பல சிறு சிறு நூல்களின் தொகுப்பு இது. பத்து விரல் கிடை உயரமுள்ள பெரிய நூல். தனித்தனி நூலும் தனித் தனிப் பக்கமாகத் தொடங்கப் பெற்றுள்ளது. ஒவ்வொரு நூலும் ஒன்றிலிருந்து தொடங்கும் தனித் தனிப் பாடல் எண்ணிக்கை கொண்டுள்ளது. மருத்துவத் தொடர்பான நூல்.

**அகத்தியர் பரிபூரணம் நானூறு**

பல வகை மருத்துவம் தொடர்பான-மருந்துகள் தொடர்பான 400 பாடல்கள் கொண்டது. பார்வை: மயிலம் சுப்பிரமணிய சுவாமி. பத்ம நாப விலாச அச்சுக் கூடம், சென்னை —1912

**அகத்திய சுவாமி காவிய நிகண்டு**

மருத்துவம் தொடர்பான எட்டுக் காண்டங்களின் தொகுப்பு. உயர்ந்த நடைப்பாடல்கள். அச்சாகவில்லை.

**அகத்தீசர் வாகடம்**

வாகடம் என்றால் மருத்துவ நூல். பல பிணிகள் பற்றிய 1145 பாடல்களின் தொகுப்பு. நூல் முழுதும் இல்லை.

**அகத்தியர் மெய்ஞ்ஞானம் ஆயிரம்**

(R.152) பிள்ளையார், முருகன், சிவன் முதலியோரை வழிபடும் முறை, யோகத்தின் பிரிவுகள், பஞ்சாக்கரம் முதலியவற்றின் பெருமைகள்—முதலியன பற்றிய ஆயிரம் பாடல்களின்

தொகுப்பு. அகத்தியர் புலத்தியருக்குச் சொல்வதாக உள்ள நூல்.

அகத்தியர் சாலத் திரட்டு:

பல பிணிகள் - பல மருந்துகள் பற்றிய 1200 பாடல்களின் தொகுப்பு.

(R.182b) அகத்தியர் கலைஞர் சூத்திரம்:

யோகம், வாதம் பற்றிய 1200 பாடல்களின் தொகுப்பு.

அகத்தியர் வைத்திய சூத்திரம்

1500 பாடல்கள்

அகத்தியர் புதிய சாத்திரக் கோர்வை

ஆய்வு: மதுரை த. குப்புசாமி நாயுடு – பதிப்பு: ஜி. இராம சாமிக் கோன், புத்தக சாலை, புது மண்டபம், மதுரை. இராமச் சந்திர விலாசம் பிரஸ், மதுரை- 1951. (1) 'அகத்தியர் பரி பூரணம் 1200' முதல் (21) அகத்தியர் தத்துவம் 300' என்பது வரை 21 நூல்களின் மிகப் பெரிய தொகுப்பு. மருத்துவம், தத்துவம் பற்றியவை. 21 நூல்களின் பெயர்கள் பாடல் எண் ணிக்கையுடன் வருமாறு:—

1. அகத்தியர் பரிபூரணம் – 1200
2. அகத்தியர் மணக் கோலம் – 200
3. அகத்தியர் கனக மணி-100
4. அகத்தியர் வைத்தியக் கோவை – 125
5. அகத்தியர் வைத்தியத் திரட்டு-81
6. அகத்தியர் கிரிகை நூல் – 64
7. அகத்தியர் கௌமதி நூல் – 400
8. அகத்தியர் தர்க்க சாத்திரம் – 324
9. அகத்தியர் கற்ப முப்புக் குரு நூல் – 100
10. அகத்தியர் கற்ப தீட்சை-100
11. அகத்தியர் மனோன்மணியாள் நாற்பத்து முக்கோண பூஜாவிதி – 100
12. அகத்தியர் பூரண சூத்திரம் -215
13. அகத்தியர் சூத்திரச் சுருக்கம்-21
14. அகத்தியர் வைத்திய பூரணம்-205
15. அகத்தியர் பரிபாஷை-300

**பேரகத்தியத் திரட்டு**

உரை-வெளியீடு: ச.பவாநந்தம்பிள்ளை, சென்னை எஸ்.பி. ஸி.கே.அச்சுக்கூடம்-1912 ஆம் ஆண்டு.

நூல்கள்: 1. பேரகத்தியச் சூத்திரம், 2. பேரிசைச் சூத்திரம்-என்பன.

பவாநந்தம் பிள்ளையின் முகவுரைக் குறிப்பு வருமாறு:

அகத்தியச் சூத்திரங்கள் சிலவற்றை, 60 ஆண்டுக்கு முன், களத்தூர் வேதகிரி முதலியார் வெளியிட்டார். பல நூல்களின் உரைகளில் பல சூத்திரங்கள் காணப்படுகின்றன. வேதகிரியார் தம்மிடம் மூவாயிரம் பாக்கள் கிடைத்ததாகக் கூறி 165 பாக்கள் மட்டுமே வெளியிட்டார். எனக்கு மேலும் 16 பாக்கள் கிடைத்துள்ளன.

1. அகத்தியர் சூத்திரம் பன்னிரண்டாயிரம். இது பேரகத்தியம், சிற்றகத்தியம் என்னும் இரு பிரிவுகள் உடையது. அகத்தியரின் மாணாக்கர்கள் பன்னிருவர்.அவர்கள்:- தொல்காப்பியர், அதங்கோட்டாசான், பனம்பாரனார், அவிநயனார், காக்கைபாடினியார், நற்றத்தனார், துராலிங்கர், 'வையாபிகர்' வாய்ப்பியர், கழாரம்பர், செம்பூட் சேய், வாமனர்–ஆகியோர். (இந்த விவரமும் தரப்பெற்றுள்ளது)

2. பேரிசைச் சூத்திரம்-14. 'தமிழ் மொழி விளக்கம்' என்னும் தலைப்பில் உள்ளது. இது தமிழ்பற்றிக் கூறுவது.

யான் (சு.ச.) கண்ட நூலில் உள்ளதை மேலே எழுதியுள்ளேன். ஆராய்ச்சியாளர்கள் தம் தேவைக்கு ஏற்றவாறு பயன்படுத்திக் கொள்ளலாம்.

**அகத்தியர் வைத்திய சில்லறைக் கோவை**

அகத்திய முனிவர் அருளியது. ஆ.இரத்தினவேலு முதலியார் தூர தேசங்களிலிருந்து ஏட்டுப் பிரதிகள் வரவழைத்து அவரது அச்சுக்கூடத்தில் வெளியிட்டதாக எழுதப்பட்டுள்ளது. சென்னை.1888.724 பக்கங்கள் கொண்ட திரட்டு.

உ-ஞானம், வியாசம், வசாரம், நாடி, வைத்தியம், பஞ்சாட்சர சாக்கிரங்கள் முதலியன. பல நோய்கட்கு உரிய-பல மருந்து வகை பற்றிய சிறுசிறு பகுதித் தொகுப்பு. நான் பார்த்தபிரதி பழந்தாளாய் உள்ளது.

# 2. பிற்காலம்

## திருப்புகழ்

திருவண்ணாமலையில் பதினைந்தாம் நூற்றாண்டில் பிறந்து வாழ்ந்த அருணகிரிநாதர் என்பவர், முருகன் திருப் புகழைப் புகழ்ந்து பல்வேறு ஊர்களில் பல காலங்களில் பாடிய பாடல்களின் தொகுப்பே 'திருப்புகழ்' என்னும் இந் நூலாகும்.

ஆசிரியர் பதினாறாயிரம் பாடல்கள் பாடியதாகச் சொல லப்படுகிறது. தோற்றம் இருநூற்றைம்பது ஊர்களின் மேல் திருப்புகழ் பாடியுள்ளார் என்றும் கருதப்படுகிறது. ஆனால் இப்போது கிடைத்திருப்பவை 1324 பாடல்களேயாம்.

வடக்குப்பட்டு சுப்பிரமணியப் பிள்ளையும் அவர் மைந்தர் செங்கல்வராயப் பிள்ளையும் சேர்ந்து 1313 பாடல்களை மூன்று தொகுதிகளாகத் தொகுத்து வெளியிட்டனர். பின்னர், திருநெல்வேலி வீ.சங்கரன் பிள்ளை 1967 ஆம் ஆண்டு நூல் முழுமையும் அடக்க விலைப் பதிப்பாக வெளியிட்டார். மேலும் பலர் பதிப்பித்தனர். சென்னை-'திருப்புகழ் அமிர்தம்' இதழ் செயலகத்தாராலும் மதுரை ஜெ.மு. குருநமசிவாயன் என்பவ ராலும் (1974) பிறராலும் 1324 பாடல்கள் தொகுத்து வெளி யிடப்பெற்றன. அருணகிரிநாதரின் மற்றைய நூல்களும் குரு நமசிவாயன் பதிப்பில் இணைக்கப்பட்டுள்ளன.

**பெயர்க் காரணம்:**

முருகனது தெய்வப் புகழ் பாடப்பட்டிருத்தலால் திருப் புகழ் என்னும் பெயர் தரப்பட்டது. அருணகிரிநாதரே ஒரு பாடலில் நூல்பெயரைக் குறிப்பிட்டுள்ளார்.

"திருப்புகழ் விருப்பமொடு செப்பென
எனக் கருள்கை மறவேள்"

என்பது பாடல் பகுதி. இறைவன் பெருமையைத் 'திருப்புகழ்' என்னும் பெயரால் தமது தேவாரப் பாடல் ஒன்றில் சுந்தரரும் குறிப்பிட்டுள்ளார்.

"திருப்புகழ் விருப்பால் பாடிய அடியேன் படுதுயர்
களையாய் பாசுபதா பரஞ்சுடரே"

என்பது பாடல் பகுதி. திருப்புகழின் முதல் பாடல் "கைத் தல நிறைகனி" என்று தொடங்கும் பாடலாகும்; இறுதிப் பாடல் "நிருதரார்க் கொரு" என்று தொடங்கும் பாடலாகும்.

பெருமாள்:

அருணகிரிநாதர் முதல் ஐந்து பாடல்களால் பிள்ளை யாரைப் (விநாயகரைப்) பற்றிக் காப்புச் செய்யுளாகப் பாடி யுள்ளார். முருகனைப் பற்றிய திருப்புகழ்ப் பாடல்களின் இறுதி யில் 'பெருமாளே' என்று விளித்து முடித்துள்ளார் ஆசிரியர். அவ்வாறே பிள்ளையாரையும் 'பெருமாளே' என்னும் பெய ராலேயே விளித்துப் பாடலை முடித்துள்ளார்.

"அக்குற மகளுடன் அச்சிறு முருகனை
அக்கண மண மருள் பெருமாளே" (1)
"ஐந்து கரத்து ஆனைமுகப் பெருமாளே" (2)
"வித்தக மருப்புடைய பெருமாளே" (3)

என்னும் பாடல் ஈற்றடிகளில் பிள்ளையாரையும் 'பெருமாளே' என விளித்திருப்பதை அறியலாம்.

திருமாலைப் பெருமாள் என்பது பெரும்பாலான மரபு. அருணகிரியார் பிள்ளையாரையும் முருகனையும் பெருமாள் என் னும் பெயரால் குறிப்பிட்டிருப்பதால், பெருமாள் என்பது, தெய்வத்தைக் குறிக்கும் பொதுப் பெயர் எனக் கருதவேண்டி யுள்ளது.

திருப்புகழ் நூலில் அளவு மீறி வடசொற்கள் கலந்திருப் பது காலத்தின் கோலம் என விட்டொழிக்க வேண்டும். பெண் களை மிகவும் இழிவு படுத்தியுள்ளார் அருணகிரியார் என்னும் குற்றச் சாட்டுக்குப் பதில், தொடக்கத்தில் வேசியரால் மிகவும் கெட்டழிந்த தம் சொந்தப் பட்டறிவால் அவர் நொந்து அவ் வாறு பாடிவிட்டிருக்கிறார்-என்பதே.

சமயக் காழ்ப்பு இன்மை

முருகனைத் திருமாலின் மருகனாக அருணகிரிநாதர்

கொண்டதால், தாம் வழிபடுதெய்வமாகிய முருகனின் மாமனார்க்கும் அவர் அளவு கடந்த பெருமை கூறியுள்ளார். திருமாலின் திருவிளையாடல்கள் பல புகழுடன் கூறப்பட்டுள்ளன. இதனால் அவர் சமயக் காழ்ப்பு இல்லாதவர் என்பது புலனாகும். முருகன் திருப்புகழோடு திருமாலின் திருப்புகழும் கூறப்பட்டிருப்பது சிறப்பே.

சந்தப் பாக்கள்:

திருப்புகழை இனிய சந்தப் பாடல்களின் தொகுப்பு எனக் கூறலாம். அதனால்தான், 'வாக்கிற்கு அருணகிரி' என்னும் புகழை அருணகிரியார் தட்டிக்கொண்டுள்ளார். தம் சுவையான சந்தப் பாடல்களில் ஒலிக்குறிப்புகளை மிகுதியும் பயன்படுத்தியுள்ளார். திருவதிகையில் கெடில நதி பெருகும் போது, புது நீர் வரவு விழாவாக உழவர்கள் 'திமிதிம்' எனப் பறை கொட்டுகிறார்களாம்:

''திமிதிமி தெனப் பறையறையப் பெருகுபுனல் கெடிலநதித்
திருவதிகைப் பதி முருகப் பெருமாளே''

என்பது பாடல் பகுதி. மற்றொரு பாடலில், தவில் 'டிமிட டிமுடிமு டிட்டிம்' என முழங்குவதாகக் கூறியுள்ளார்.

''டிமிட டிமுடிமு டிட்டிம் எனத் தவில் எழும் ஓசை''
என்பது பாடல் பகுதி: தமிழின் சிறப்பெழுத்தாகிய ழகரத்தை வைத்து விளையாடவும் அருணகிரிநாதர் தவறவில்லை:

''வழவழென உமிழுமது கொழகொழென ஒழுகிவிழ''
என்பது ஒரு பாடல் பகுதி. வல்லெழுத்துக்களை வைத்து விளையாடிப் பாடியுள்ள ஒரு சந்தப் பாடலை முழுமையாகத்தான் காண்போமே. யாரும் கற்றுக் கொடுக்காமலேயே, இயற்கையாக எவர் பாடினும் சந்தம் தானே வந்து விழும். இப்பாடல் வருமாறு:-

''முத்தைத்தரு பத்தித் திருநகை
அத்திக்கிறை சத்திச் சரவண
முத்திக்கொரு வித்துக் குருபர-எனவோதும்

முக்கட்பர மற்குச் சுருதியின்
முற்பட்டது கற்பித் திருவரு
முப்பத்துமு வர்க்கத் தமரரும்-அடிபேணப்
பத்துத்தலை தத்தக் கணைதொடு
ஒற்றைக்கிரி மத்தைப் பொருதொரு
பட்டப்பகல் வட்டத் திகிரியில்-இரவாகப்
பத்தற்கிர தத்தைக் கடவிய
பச்சைப்புயல் மெச்சத் தகுபொருள்
பட்சத்தொடு ரட்சித் தருள்வதும்-ஒருநாளே
தித்தித்தெய வொத்தப் பரிபுர
நிர்த்தப்பதம் வைத்துப் பயிரவி
திக்கொட்க நடிக்கக் கழுகொடு-கழுதாடத்
திக்குப்பரி அட்டப் பயிரவர்
தொக்குத்தொகு தொக்குத் தொகுதொகு
சித்ரப்பவு ரிக்குத் திரிகடக-எனவோதக்
கொத்துப்பறை கொட்டக் களமிசை
குக்குக்குகு குக்குக் குகுகுகு
குத்திப்புதை புக்குப் பிடியென-முதுகூகை
கொட்புற்றெழு நட்பற் றவுணரை
வெட்டிப்பலி யிட்டுக் குலகிரி
குத்துப்பட வொத்துப் பொரவல-பெருமாளே''.

என்பது வல்லெழுத்து மிக்க ஒரு சந்தப்பாடல். இதிலும் ஒலிக் குறிப்புகள் நிரம்ப உள்ளன. இவ்வாறு ஓலைச் சுவடியில் ஆயிரக்கணக்கில் எழுதுவது என்பது கிள்ளு கீரையா என்ன?

ஒருவரே பாடிய பாடல்களின் தொகுப்பாகிய இந்நூலைத் 'தனி மலர் மாலை' என்னும் வகைக்குள் அடக்கலாம். இத் திருப்புகழ் நூல், 'பாமாலை' என்றே 'திருமலை முருகன் பிள்ளைத்தமிழ்' என்னும் நூலில் குறிப்பிடப்பட்டுள்ளது:

''உதிருங் கனியை நறும் பாகில் உடைத்துக்
கலந்து தேனை வடித்து
ஊற்றி அமுதின் உடன் கூட்டி ஒக்கக்
குழைத்த ருசி பிறந்து......
மதுரம் கனிந்த திருப்புகழ்ப் பாமாலை''

என்பது பாடல் பகுதி. திருப்புகழின் மிக்க இனிமைச்சுவை இப்பாடலில் சிறப்பிக்கப்பட்டுள்ளது.

இத்தொகை நூலின் காலம் பதினைந்தாம் நூற்றாண்டாகும்.

### திருப்புகழோடு பிற தொகுப்புகள்
### படை வீட்டுத் திருப்புகழ்

அருணகிரிநாதர், திருப்பரங்குன்றம், திருச்செந்தூர், பழநி, திருவேரகம், திருத்தணிகை, சோலை மலை, மதுரை, விராலிமலை, வயலூர், திருவானைக்கா, திருச்சிராப்பள்ளி - ஆகிய ஊர்கள் மேல் பாடிய திருப்புகழ்ப் பாடல்களுடன், ஆண்டவன் பிச்சை என்பவர் இவ்வூர்கள் மேல் பாடிய பதிகங்களும், ஆறு படை வீட்டுக் கீர்த்தனைப் பாடல்களும் தொகுக்கப்பட்டு "அருணகிரிநாதர் அருளிய படைவீட்டுத் திருப்புகழ் &ஆண்டவன் பிச்சைஇயற்றிய பதிகம் - பாட்டு" என்ற பெயருடன் ஒரு தொகுப்பு, சென்னை 5 - பி.டி. வாணி கம்பெனியாரால் வெளியிடப்பட்டுள்ளது. ஆண்டு தெரியவில்லை.

### அருணகிரிநாதர் திருப்புகழ்—பொதுப் பாடல்களும்
### மற்றைய நூல்களும்

இந்தத் தொகுப்பில், 1304 திருப்புகழ்ப் பாக்களும், அருணகிரியார் அருளிய திருவகுப்பு, கந்தர் அந்தாதி, கந்தர் அலங்காரம், கந்தர் அனுபூதி, வேல் விருத்தம், மயில் விருத்தம், திருவெழு கூற்றிருக்கை ஆகியவையும் அடங்கியுள்ளன. இத்தொகுப்பு, மூன்று பாகங்களாகப் பிரிக்கப்பட்டுள்ளது.

சேலம் சரவணப்பிள்ளை - சிவசிதம்பர முதலியார் பரிசோதித்து, வடக்குப்பட்டு த.சுப்பிரமணியப் பிள்ளை பதித்தார் -சென்னை - கார்டியன் அச்சுக்கூடம் - அட்சய, கார்த்திகை - நவம்பர் 1926 - என்று உள்ளது. திருப்புகழ்ப் பொதுப் பாடல்கள் மட்டும் இரண்டாம் பதிப்பு பெற்றுள்ளதாம். மற்றவை முதல் பதிப்போடு சரி - வெளியான காலம்: முதல்பாகம்-துன்மதி வைகாசி - ஜூன். இரண்டாம் பாகம்-மாசி-1923-மார்ச்சு. மூன்றாம் பாகம் - 1924 - ஜூன் - முதல்பதிப்பு - என்றுள்ளது. முகவுரை அளித்தவர்கள்: வ.சு.செங்கல்வ ராயர்-31-10-1926; வ.சு. சண்முகம்-4-11 - 1926 - என்றுள்ளது.

### அருணகிரிநாதர் திருமுறைத் திரட்டு

இந்தத் தொகுப்பில், 400 திருப்புகழ்ப் பாக்களும், திருவகுப்பு - கந்தர் அந்தாதி-கந்தர் அலங்காரம்-கந்தர் அநுபூதி ஆகியவையும் உள்ளன. காஞ்சி. நாகலிங்கமுனிவர் பதித்தது-ஸ்ரீமுக, ஆவணி, 1933-கேசரி அச்சுக் கூடம், சென்னை.

### திருப்புகழ்த் திரட்டு (1955)

இத் தொகுப்பில், 225 திருப்புகழ்ப் பாடல்கள் குறிப்புரையுடன் உள்ளன. வெளியீடு: சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், அப்பர் அச்சகம்-சென்னை – 1955.

### திருப்புகழ் மஞ்சரி

சில ஊர்த் திருப்புகழ்கள், ஆறு படைவீட்டுத்திருப்புகழ்கள், கந்தர் அநுபூதி, கந்தர் அலங்காரம், திருமுருகாற்றுப்படை வெண்பாக்களுடன், வேறு சில முருகன் வழிபாட்டுப் பாடல்கள் இத்தொகுப்பில் உள்ளன. பதிப்பு: தி லிட்டில் பிளவர் கம்பெனி – சென்னை – 17-1966.

### பாராயணத் திருப்புகழ்

120 திருப்புகழ்கள் – உரையுடன் – முதல் பாகம் – உரை. இராய வேலூர் கா.மு. சின்னப்பா பிள்ளை – பதிப்பு: பி.நா. சிதம்பரநாத முதலியார் பிரதஸ், சென்னை – 1937 – பெரல் பிரஸ், சென்னை.

### திருப்புகழ்த் திரட்டு (1966)

தேர்ந்தெடுத்த 197 திருப்புகழ்ப் பாடல்களும் அருணகிரி நாதரின் மற்ற நூல்களிலிருந்து சிற்சில பாடல்களும் இத் தொகுப்பில் உள்ளன. முருகன் திருவருட் சங்க வெளியீடு – சென்னை - 5 – 1966 – லட்சுமி விஜயம் பிரஸ் – சென்னை – 5.

இவ்வாறு திருப்புகழ் தொடர்பான பல வெளியீடுகள் இன்னும் உள்ளன.

## இறை வணக்கப் (தோத்திரப்)பாடல்கள் திரட்டு

இறை வணக்கப் பாடல்களின் திரட்டுகள் பல, தோத்திர மஞ்சரி, தோத்திரக் கொத்து, தோத்திரத் திரட்டு-மாலை

முதலிய பெயர்களுடன் தொகுக்கப் பெற்றுள்ளன. அவற்றுள் சில காண்பாம்:

### தோத்திரத் திரட்டு-முதல்பாகம்

வெளியீடு-நல்லூர் ஆறுமுக நாவலர். வர்த்தமான தரங் கணி அச்சுக் கூடம், சென்னை. 1870. விநாயகர் முதலிய கட வுள் வணக்கப் பாக்களின் தொகுப்பு.

### சித்தி விநாயகர் தோத்திரத் திரட்டு

ஆசிரியர்: சிவசம்புப் புலவர். மிமோரியல் அச்சுக் கூடம், சென்னை–1975. யாழ்ப்பாணம்-பருத்தித் துறை சித்தி விநாய கர் மீது இயற்றப் பெற்ற ஊஞ்சல், எச்சரிக்கை, பராக்கு, மங் களம் ஆகிய நான்கு சிறு நூல்களின் திரட்டு.

### தோத்திரப் பாமாலை

ஆசிரியர்: செங்கமல சுவாமிகள். கலாரத்நாகர அச்சுக் கூடம். 1879. 'சற்குருநாதன்' வாழ்த்து முதலிய பல பகுதிகள் உள்ளன. தெய்வப் பாடல்கள் மிகுதி. ஈற்றில், 101 பாடல்கள் கொண்ட 'இரத்தினகிரி மாலை' என்னும் நூல் உள்ளது.

### பழநி யாண்டவர் தோத்திரப் பாமாலை

ஆசிரியர்: கா. துரைசாமிக் கவிராயர். கலாரத்ந அச்சுக் கூடம், 1877. பழநியாண்டவர் மீது, வெண்பா, ஆசிரிய விருத் தம், கலி விருத்தம், கலித்துறை, தாலாட்டு, அடைக்கலம் -முதலியனவாகப் பாடப் பெற்ற பாடல்களின் தொகுப்பு.

### சடாரண்யத் தோத்திரப் பாமாலை

ஆசிரியர்: சி. சோமசுந்தரக் கவிஞர்-வெளியீடு-தி.க. சுப்பு ராயச் செட்டியார். சிவாநந்த நிலைய அச்சுக் கூடம், சென்னை 1881. ஆர்க்காட்டில் எழுந்தருளியுள்ள, விநாயகர் பதிகங் கள், விநாயகர் பஞ்ச ரத்தினம், முருகர் பஞ்ச ரத்தினம், நடராசர்-தட்சணாமூர்த்தி தோத்திரங்கள்.

### சுந்தர சுவாமிகள் தோத்திர மாலை

ஆசிரியர்: செ. தணிகைராயக் கவிஞர். கலாரத்நாகர அச்சுக் கூடம், சென்னை–1881. சுந்தர சுவாமிகளைத் துதிக்கும் பாடல்கள், பதிற்றுப்பத்தந்தாதி, சில தோத்திர நூல்கள்.

### தோத்திரத் திரட்டு-இரண்டாம் பாகம்

வெளியீடு—ஆறுமுக நாவலர். வித்தியாநுபாலன யந்திர சாலை, சென்னை. 1884. கடவுளர் தோத்திரம், நாயன்மார் தோத்திரம், தேவாரம்-திருவாசகம், புராணங்களிலிருந்து சில தோத்திரப் பாடல்கள்.

### சிவசுப்பிரமணியர் மணிப்பாக் கொத்து

சென்னை புரி முருகன் பற்றியவை. ஆசிரியர்-பிராயங் குப்பம் முத்துலிங்கக் கவிஞர். எக்செல்சியர் அச்சுக் கூடம், சென்னை. 1884. முருகன் மீது ஊசல், கொம்மி, லாலி, பஞ்ச கம் முதலியன.

### திருச்செந்தூர்த் தோத்திரப் பாமாலை

ஆசிரியர்: விருதுப் பட்டி கந்தசாமிக் கவிராயர். வெளியீடு -மு.ரா. அருணாசலக் கவிராயர். அல்பீனியன் அச்சியந்திர சாலை. 1889. முருகன் மீது பதிகங்கள்—தனிப் பாடல்கள், மொத்தப் பாக்கள்—444.

### விநாயகக் கடவுள் தோத்திரப் பிரபந்தத் திரட்டு

தொ-இராமலிங்க சுவாமிகள். கலாரத்நா அச்சுக் கூடம், சென்னை. 1888. உ—ஔவையார் அருளிச் செய்த விநாயகர் அகவல் முதலாக—விநாயகர் பற்றிய ஆறு நூல்கள் இதில் உள்ளன.

### திருமால் துதி

ஆ-வில்லி புத்தூர் ஆழ்வார். வெ-சேணியப்ப நாயகர். இந்தியன் அச்சுக்கூடம், 1895. வில்லி பாரதத்தில் உள்ள கடவுள் வாழ்த்துப் பாடல்களின் தொகுப்பு இது.

### தஞ்சை கற்பக விநாயகர் தோத்திரப் பாமாலை

ஆ-ந. வீரபத்திரப் பிள்ளை. வெ-வீ.கண்ணுசாமிப் பிள்ளை, நாஷனல் அச்சுக் கூடம், சென்னை. 1886. தஞ்சை வடக்கு வாசல் கற்பக விநாயகர் மீது மாலை, பதிகம், போற் றிப் பத்து, கண்ணிகள், எச்சரிக்கை, சந்த விருத்தம் முதலியன.

### தோத்திரத் திரட்டு

ஆ-பொற் களந்தை வீர ராகவ முதலியார். சுஜநரஞ்சநி முத்திரா சாலை, சென்னை. 1884. உ-கச்சிப் பெருந்தேவியார் பதிகம், வரத ராசப் பெருமாள் பஞ்சரத்தினம், திருவேங் கடத்தான் பதிகம், திருவேங்கடத்தான் பஞ்ச ரத்தினம் முதலிய நூல்கள் உள்ளன.

### கதிர்காம நாதர் திருவருட்பா

ஆ-கு. வெள்ளைப்பையர். வெ - மணலி பெரியதம்பி முதலியார். கலாநிதி அச்சுக் கூடம், சென்னை. 1867..உ - கதிர்காமநாதர் மீது, ஆசிரிய விருத்தம், ஊஞ்சல், லாலி, ஏலப் பாட்டு, கட்டியம், கும்மி, எச்சரிக்கை, பராக்கு, பதம், மங்களம் ஆகியவை.

### சிவ புராணாதி தோத்திர மஞ்சரி

தொகுப்பு: சிதம்பரம் ஈசானிய மடம் இராமலிங்க சுவாமி களின் மாணாக்கர் ச.வ. திருவேங்கட நாயுடு. வெளியீடு: சென்னை முத்தியால் பேட்டை பூர்வகலாப் பிரசங்க நிகேதன சபையார். அச்சு: சென்னை கலாரத்ந அச்சுக்கூடம். காலம்: விளம்பி-மாசி-1898. ஒரு தோற்றம் 167 நூல்களிலிருந்து பாடல் கள் தொகுக்கப்பெற்றுள்ளன. மொத்தப்பாடல்கள் 1521.

சிவ புராணம் முதலிய பல புராணங்களில் உள்ள கடவுள் வணக்கப் பாடல்கள் இதில் இடம்பெற்றுள்ளன. விநாயகர் முதல் சிவ சரணர் வரை பல கடவுள் பெயர்களும் அடியார் பெயர்களும் தலைப்பாயுள்ளன. அச்சில் இல்லாத சில புராணப் பாடல்களையும், தம் ஆசான் ஈம. இராமலிங்க சுவாமிகள் தந்த சில பாடல்களையும் தாம் திரட்டிய சிலபாடல்களையும் இந்தத் தொகுப்பில் சேர்த்துள்ளதாகத் தொகுப்பாசிரியர் தெரிவித்துள்ளார். இவர் இன்றியமையாக் குறிப்புகள் சிலவும் எழுதியுள்ளார்.

தமிழக அரசு ஓலைச்சுவடி நூலகத்தில், R.5748-I,5749-II, 5750-III என்னும் எண்கள் கொண்ட 3 பகுதிகள்-3 சுவடிகள் இந்நூல் பெயரில் உள்ளன.

### மற்றும் ஒரு சுவடி.

சிவ புராணாதி தோத்திர மஞ்சரி என்னும் பெயரில் ஓலைச் சுவடி நூலகத்தில் (G.O.M.L.) மற்றுமொரு சுவடி உள்ளது. தி.சந்திர சேகரர் சென்னையில் 1961 ஆம் ஆண்டு வெளியிட்டார்.

இதில் உள்ள மொத்தப் பாடல்கள் 1253. இந்தச் சுவடி, சென்னை பவாநந்தர் கழகத்திலிருந்து கிடைத்ததாக தி.சந்திர சேகர் கூறியுள்ளார்.

இந்நூலுக்கு வித்துவான் ப.குஞ்சிதபாதம் உரை எழுதியுள்ளார். இந்நூலைத் தொகுத்தவர் பெயரும் தொகுப்பித்தவர் பெயரும் தெரியவில்லை எனக்கூறியுள்ளார். அங்ஙனமெனில், க.வ. திருவேங்கட நாயுடு தொகுத்த சிவ புராணாதி தோத்திர மஞ்சரியும் இந்நூலும் வெவ்வேறானவையா? ஒருவேளை, அவர் தொகுத்த பதிப்பை இவர் அறியாரா? குழப்பமாயுள்ளது.

முன்னுரையில்,

"நல்லிசை ஞானசம்பந்தனும் நாவினுக் கரசும் பாடிய
நற்றமிழ்மாலை
சொல்லியவே சொல்லி ஏத்து"

என்னும் சுந்தரர் தேவாரப்பா உள்ளது. இத்தொகுப்பில், விநாயகக் கடவுள் வணக்கம் முதல் சுந்தர மூர்த்தி ஈறாக 31 தலைப்புகளில் பல்வேறு புராணங்களிலிருந்து பாடல்கள் இடம்பெற்றுள்ளன. கி.பி. 5 ஆம் நூற்றாண்டு இயற்றப்பட்டதாகக் கூறப்படும் கல்லாடம் என்னும் நூல் முதல், 19 ஆம் நூற்றாண்டில் தோன்றிய திரு மயிலைத் தல புராணம் ஈறாக உள்ள பல நூல்களிலிருந்து பாடல்கள் திரட்டப்பட்டுள்ளன.

### சைவ மஞ்சரி

தொகுப்பு: பொ. பாண்டித்துரைத்தேவர். குறிப்புரையும் உண்டு. மதுரைத் தமிழ்ச் சங்க வெளியீடு. மதுரைத் தமிழ்ச் சங்க முத்திராசாலை பதிப்பு. பாண்டித்துரைத்தேவர் தம் முகவுரையில் 25 – 4-1904 என்னும் நாள் குறித்துள்ளார். உ.வே.சாமிநாத ஐயர் முதலியோர் மதிப்புரை தந்துள்ளனர்.

உள்ளுறை: 67 சைவ நூல்களிலிருந்து திரட்டப்பட்டது. 'கடவுள் வாழ்த்து' முதலாக 'ஒழிவு' என்பது ஈறாக 19 அதிகாரமாகத் தொகுக்கப்பட்டுள்ளது. மொத்தப் பாடல்கள்-1316.

### தோத்திரத் திரட்டு

R.NO.156-A. 'மகா நவமி பூஜை' எனப் பெயர் தரப்பட்டுள்ளது. ஆனால், விநாயகர், முருகன் முதலிய கடவுளர் மீது உள்ள தோத்திரங்களே உள்ளன. முன்னால் இருந்த 'மகா நவமி பூஜை' பற்றிய ஏடுகள் போய்விட்டனபோலும்.

R.NO. 156-B. 'தோத்திரத்திரட்டு' என்பதில், முன் உள்ள வற்றோடு, 'மங்களங் கொன்றை மலர்' என்னும் செய்யுளும் 'மறையவர்கள் வழி' என்னும் செய்யுளும் கூடுதலாக உள்ளன.

### தோத்திரப் பாமஞ்சரி

ஆசிரியர்: வெ. அரவமூர்த்திக் கவிஞர். வெளியீடு-கோ. வைத்தியலிங்கம் பிள்ளை.மதராஸ் ரிப்பன் அச்சுக் கூடம். 1900. உள்ளுறை: கைலாசநாதர் அடைக்கலப்பத்து, கருணா கடாட்சியுமை பதிகம், எம்பிரான் பதிகம், சுருதி நாயகப் பஞ்சகம், தந்தை தாயார் பேரின்பப் புலம்பல், அருட் பேற்றகவல், நாமாவளி.

### தோத்திர மஞ்சரி

ஆசிரியர்: பெருநாழிக் கருணையாநந்தர். பதிப்பு: சு. விருத்தாசலம் பிள்ளை-எட்வர்டு பிரஸ், திருவாரூர். 1916. பல சிறு தோத்திர நூல்களின் தொகுப்பு.

### தோத்திரக் கொத்து

வெளியீடு-அனந்த லட்சுமி அம்மாள். பாரதி விஜயம் பிரஸ், சென்னை-1398. உள்ளுறை, சீவ நாடகம், லலிதாம்பாள் திருவனந்தல். மீனாட்சிசுந்தரேசர் திருப்பள்ளியெழுச்சி, அத்வைதக் கொட்டை முத்துக் கும்மி, வேதாந்தக் கப்பல், பஞ்சீகரண மகா வாக்கியம்.

### தோத்திரமாலை

ஆங்கில மூலம்-வில்லியம் பார்க்ளே, தமிழாக்கம்-முத்தையா

இரத்தினம். விற்பனை உரிமை - பாரி நிலையம், சென்னை. ராஜன் எலக்ட்ரிக் பிரஸ், சென்னை - 1. பதிப்பாண்டு 1966. உள்ளுறை: (1) நாற்பது நாள் பிரார்த்தனை (இது காலை மாலை இரு வேளைக்கும் உள்ளது. 31 நாட்களில் திருப்தி யில்லாவிடில் மேலும் செய்ய 40 நாட்கள் தரப்பட்டனவாம்). (2) விசேட சந்தர்ப்பங்கட்கு உரியசெபல்கள். (3) பல்வேறு தொழில் துறையினர்க்கு உரியசெபல்கள் (4) கிறிஸ்து மொழிக் குறள்- இவற்றின் தொகுப்பு.

### மாலைப் பாக்கள்

ஆசிரியர்: புலவர் யம்.பி.மாஸ்கரேனஸ், தூத்துக்குடி. கஸ்தூரி பதிப்பகம், உறையூர், திருச்சிராப்பள்ளி. உள்ளுறை: 'அஞ்சலி' என்னும் தலைப்பு முதல் 'பாதமலர்' என்னும் தலைப்பு ஈறாக 33 தலைப்புகள் உள்ளன. பல காலத்தில் பாடிய பல் வகைப் பாடல்களின் தொகுப்பு இது.

### தோத்திரப் பாமாலை

முன்பக்கங்கள் இல்லை. கொழும்பு நகர் - சைவ பரிபாலன சபையமைத்தவ ராகிய செல்லயவேள் என்னும் செல்லயா பிள்ளை இதன் ஆசிரியர் என்பது, ஸ்ரீவைகுண்டம் சுந்தர மூர்த்திப் பிள்ளை நூலுக்கு முன் பாடியமைத்துள்ள சிறப்புக் கவிகளால் தெரிகிறது. மூனிச்சுரம் - சிவன் மீது பாடிய சிறு நூல் தொகுப்பு இது.

### சப்த விடங்கத் தலங்களும் திருமுறைப் பாடல்களும்

தொ-கயப்பாக்கம் சோமசுந்தரம் செட்டியார். அன் பளிப்பு - கே. குப்புசாமி முதலியார், புதுச்சேரி. பாரி அச்சகம், சென்னை. 1968.

உள்ளுறை: 'டங்கம்' என்றால் உளி. 'விடங்கம்' என்றால் உளிபடாதது. சப்தம்=ஏழு. சிவன் கோயில்கட்குள் குறிப் பிட்ட ஏழு ஊர்க் கோயில்களில் உள்ள சிவலிங்கம் உளியால் செதுக்கிச் செய்யப்படாமல் தாமே அமைந்தனவாம். இவற்றைச் சுயம்புலிங்கங்கள் என்று சொல்வதும் உண்டு. இந்த

ஏழு ஊர்ச் சிவன் மேல் பாடப்பெற்ற மூவர் தேவாரங்கள் இந்த வெளியீட்டில் தொகுத்துத் தரப்பட்டுள்ள. ஏழு ஊர்கள் வருமாறு:- திருவாரூர், திருக்காறாயில், திருக்கோளிலி, திருநள்ளாறு, திருநாகைக் காரோணம், திருவாய்மூர், திருமறைக்காடு – என்பன.

திருவண்ணாமலைத் திருப்பனுவல்கள்

தொ – வெ – காசிமடம், திருப்பனந்தாள். பதிப்பாசிரியர்-தி.பட்டுச்சாமி ஓதுவார். கீதா பிரஸ், திருச்சிராப்பள்ளி. விளம்பி, கார்த்திகை. 1958. உ-திருவண்ணாமலை மீது பாடப்பெற்ற தேவாரங்கள், மாணிக்க வாசகரின் திருவெம்பாவை, திருவண்ணாமலைத் திரு அம்மானை, அருணகிரிநாதரின் திருப்புகழ்-முதலியன. மாணிக்க வாசகரின் திருவெம்பாவை இருபது பாடல்கட்கும், ஜியு.போப் செய்துள்ள ஆங்கில மொழி பெயர்ப்பும் உடன் கொடுக்கப்பட்டுள்ளது இத்தொகுப்பின் ஒரு சிறப்பாகும்.

## இருபெருந்துறவியரின் பாடல் திரட்டுகள்

### 1. பட்டினத்தார் பாடல்கள்

கி.பி. பத்தாம் நூற்றாண்டில் காவிரிப்பூம்பட்டினத்தில் பிறந்த திருவெண்காடர் என்னும் பட்டினத்தார் பெரிய செல்வராக இருந்து துறவறம் பூண்டு திருவொற்றியூரில் இயற்கை எய்தியவர். பட்டினத்துப் பிள்ளையார் எனவும் இவர் பெயர் வழங்கப்படுகின்றார். இவர் பாடல்கள் எண்ணங்களைக் கிளறிவிடும் நையாண்டித் தனமும் உடையவை. இனி வருமாறு:-

பட்டினத்துப் பிள்ளையார் திருப்பாடல்கள்

முதல்பதிப்பு: விக்கிரம – கார்த்திகை. இரண்டாம் பதிப்பு: சர்வ சித்து–தைத் திங்கள். வெளியீடு: வெ.பெரி.பழ.மு.காசி விசுவநாதன் செட்டியார். கபீர் அச்சகம், சென்னை.-1.கிடைக்குமிடம்: சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம். இத்தொகுப்பில் பல்வகைப் பாடல்கள் உள்ளன.

பட்டினத்தார் திருப்பாடல் திரட்டு

பத்துப் பதிப்புக்கள் இப்பெயரில் வந்துள்ளன. வெளி

யான பத்து ஆண்டுகளும் வருமாறு:- 1873, 1874, 1876, 1877, 1878, 1879, 1881, 1882, 1885, 1899-என்பனவாம்.

### பட்டினத்துப் பிள்ளையார் பாடல்

இந்தப் பெயரில் நான்கு பதிப்புகள் வெளிவந்துள்ளன. வெளியான ஆண்டுகள்: 1876, 1877, 1879, 1899.

### பட்டினத்துப் பிள்ளையார் திருப்பாடல் திரட்டு

இந்தப் பெயரில் பலரால் 15 பதிப்புகள் வெளியிடப் பெற்றுள்ளன. வெளியான 15 ஆண்டுகள் வருமாறு: -

1873, 1874, 1878, 1880, 1886, 1886, 1887, 1888, 1888, 1888' 1888, 1888, 1889, 1889, 1897 என்பன. 1888 ஆம் ஆண்டில் ஐந்து பதிப்புகள் வெளிவந்துள்ளமை இந்நூலின் சிறப்பை அறிவிக்கிறது. இத்தனைப் பதிப்புகளால் பட்டினத்தாரின் பெருஞ் சிறப்பு புலனாகும்.

### பட்டினத்துப் பிள்ளையார் பிரபந்தத்திரட்டு

கட்டளையிட்டவர்: சிவஞான பாலைய சுவாமிகள். வெளியிட்டவர்: வ. அண்ணாமலை பிள்ளை. அச்சு: வர்த்தமான தரங்கிணி சாகை அச்சுக்கூடம். காலம்: விபவ-சித்திரை. இது பல சிறு நூல்களின் திரட்டு.

உள்ளுறை: கோயில் நான்மணி மாலை, திரு மும்மணிக் கோவை, திருவொற்றியூர்க் குறுந்தொகை, திருவேகம்ப முடையார் திருவந்தாதி, திருவேகம்ப மாலை, பொது, அருட் புலம்பல், உடற் கூற்று வண்ணம் - முதலிய சிற்றிலக்கியங்களின் திரட்டு இது.

### பட்டினத்தடிகள் பிரபந்தத் திரட்டு

இது சிற்றிலக்கியங்கள் பலவற்றின் தொகுப்பு. ஆ.சிங்கார வேலு முதலியார் விரிவுரை எழுதியுள்ளார். வெளியீடு: B. இரத்தின நாயகர் & சன்ஸ், சென்னை. அச்சு: திருமகள் விலாச அச்சியந்திர சாலை. பதிப்பாண்டு 1934. விலை.ரூ.4-00.

இதில் அடங்கியுள்ள நூல்கள்: கோயில் நான்மணிமாலை, திருக்கழுமல மும்மணிக்கோவை, திருவிடை மருதூர் மும்மணிக்

கோவை, திருவேகம்பமுடையார் திருவந்தாதி, திருவொற்றி யூர் ஒருபா ஒருபஃது, திருப்பாடல் திரட்டுகள் – முதலாவது. கோயில் திருவகவல் – இரண்டாவது கோயில் திருவகவல் – மூன்றாவது கோயில் திருவகவல் – கச்சித் திருவகவல், திரு வேகம்ப மாலை, திருத்தில்லை திருப்பாடல் திரட்டுகள், பட்டினத்தார் அருட்புலம்பல் – ஆகிய நூல்களுடன், பத்திர கிரியார் மெய்ஞ்ஞானப் புலம்பலும் இதில் உள்ளது.

பட்டினத்துப் பிள்ளையார் திருப்பாடல் திரட்டு

இதில் பத்திரகிரியார் மெய்ஞ்ஞானப் புலம்பலும் உள்ளது வெளியீடு: கே.பி. சிங்காரவேலு முதலியார் அண்டு சன்ஸ், சென்னை அமெரிக்கன் டைமெண்ட் பிரஸ், 1917.

பட்டினத்தார் திருப்பாடல் திரட்டும் அருட் புலம்பலும் பத்திரகிரியார் மெய்ஞ்ஞானப் புலம்பலும்

பார்வை: அ.மகாதேவயோகி. மூன்றாம் பதிப்பு. பி. இரத் தின நாயகர் அண்டு சன்ஸ் வெளியீடு. திருமகள் விலாச அச்சி யந்திர சாலை, சென்னை. 1927. இந்தத் திரட்டுக்குத் தத்து வார்த்த விளக்க உரையும் உண்டு.

பட்டினத்துப் பிள்ளையார் திருப்பாடல் திரட்டு

தொ - நல்லூர்ப் பொன்னம்பலம் பிள்ளை. வித்தியானு பாலன அச்சியந்திர சாலை, சென்னை. பத்தாம் பதிப்பு. ஆண்டு தெரியவில்லை. நூல்கள்: ஆனந்த அகவல்கள், ஏகம்ப மாலை திருத்தில்லை, திருக்காளத்தி, பொது, வெண்பா ஆகியன.

பட்டினத்தார் இல்லறம் – துறவறம் இரண்டையும் வாழ்ந்து கண்டவர். பழுத்த பட்டறிவினால் எழுந்தவை அவரு டைய பாடல்கள்.

2. தாயுமானவர் பாடல்கள்

18 ஆம் நூற்றாண்டில் வேதாரண்யத்தில் பிறந்து, திரு சிராப்பள்ளி நாயக மன்னனுக்கு அமைச்சராயிருந்து, திருமண மும் செய்து கொண்டபின் துறவியாக மாறிய தாயுமானவரின் (தாயுமானாரின்) பாடல்களைக் காணலாம்.

### தாயுமானார் பாடல்கள்

பல் வேறானவர்களால் பதிப்பிக்கப் பெற்ற 18 பதிப்புகள் வெளிவந்துள்ளன. 18 ஆண்டுகள் முறையே வருமாறு:-

1884, 1869, 1871, 1872, பிப்ரவரி 1874, நவம்பர் 1874, மார்ச்சு 1875, சூலை 1876, பிப்ரவரி 1878, ஆகஸ்ட் 1878, அக்டோபர் 1879, 1881, நவம்பர் 1882, ஏப்ரல் 1885, 1886, அக்டோபர் 1888, 1891, மார்ச்சு 1897 – என்பனவாம். இத்தனைப் பதிப்புகளைக் கொண்டு, இந்நூலுக்கு இருந்த பெரிய வரவேற்பை அறியலாம்.

### தாயுமானார் திருப்பாடல் திரட்டு

பார்வை: திருத் தணிகைச் சரவணப் பெருமாளையர் முன் பதிப்பித்த பிரதிக்கிணங்க, தண்டலம் தமிழாசிரியர் சுப்புராய முதலியார் பார்வையிட்டது. வெளியீடு: தர்க்கோலம் நரசிம்முலு நாயுடு. அச்சு: விவேக சந்திரோதய அச்சுக்கூடம். காலம்; ஆங்கிரச-புரட்டாசி. மொத்தப் பாடல்கள்: சற சு ரு உ (1452).

### மாணிக்க வாசகர் – தாயுமானவர் பாடல்கள்

தொகுப்பு: போப் ஐயர், ஜி.யூ. & அருணாசல முதலியார். வெளியீடு: ஜெ.எம். நாகரத்தினம் பிள்ளை. சி.என். அச்சுக்கூடம், சென்னை. ஆண்டு 1898. தாயுமானவரின் சில பாடல்களுடன் மாணிக்க வாசகரின் சில பாடல்களும் இதில் உள்ளன. போப், இப்பாடல்கட்கு ஆங்கில மொழியாக்கமும் செய்து அமைத்துள்ளார்.

### தாயுமான சுவாமிகள் பாடல்

ஆய்வு: வித்துவான் ஆ.கமலநாத முதலியார். அச்சு: வெ.நா. ஜூபிலி பிரஸ், சென்னை. ஆண்டு 1899. உள்ளுறை: "திருவருள் விலாசப் பரசிவ வணக்கம்" என்பது முதல் 'அருள் வாக்கிய அகவல்' என்பது ஈறாக மொத்தம் 71 தலைப்புகளில் பற்பல பாடல்கள் அமைந்துள்ளன. இறுதியில் ஒரு பழைய பிரதியில் வண்ணத்தின் இடையிடையே காணப்படும் எட்டுக் 'கொச்சகங்கள்' தரப்பட்டுள்ளன.

எங்கள் வீட்டில் உள்ள இந்தப் படியின் (பிரதியின்) தாள்கள் பழுத்து விட்டன. ஒவ்வொரு தாளிலும் பல துளைகள் போடப்பட்டுள்ளன.

### தாயுமானவர் பாடல்

இது விரிவுரையுடன் கூடிய தொகுப்பு. முகவுரை எழுதியவர்: மணவழகனார். பூவைக் கிழார் தாயுமானவரின் வரலாறு எழுதியுள்ளார். பின்னர்ப் பல பாடல்கள் தரப்பட்டுள்ளன. நான் பார்த்த படியில் முதல் பக்கம் இல்லை யாதலால் ஆண்டு தெரியவில்லை.

### தாயுமான சுவாமிகள் பாடல்

பல பாடல்கள் கொண்ட இத் தொகுப்பு, திருப்பனந்தாள் காசிமட வெளியீடு. முதல் பதிப்பு: 1952. கர-பங்குனி. மார்ச்சு 1952.

### தாயுமானவர் திருப்பாடல் திரட்டு

வெளியீடு: புஷ்ப ரதச் செட்டியார். கலா ரத்நாகரம் பிரஸ், சென்னை. 1890.

### தாயுமான சுவாமிகள் திருப்பாடல் திரட்டு

ஆய்வு: திரு மயிலை சண்முகம் பிள்ளை. வெளியீடு: ப.மு. செல்வராச முதலியார், சென்னை அமெரிக்கன் அச்சுக்கூடம், 1891.

### தாயுமான சுவாமிகள் திருப்பாடல்கள்

பாலன் பதிப்புக் கழகம், இராயப்பேட்டை, சென்னை. பவ – ஆனி. 1934.

### தாயுமானவர் பாடல்கள்
#### (மெய் கண்டவிருத்தி உரையுடன்)

உரை: பூவை கலியாண சுந்தர முதலியார். பார்வை: அ. மகாதேவயோகி. B. இரத்தின நாயகர் சன்ஸ் வெளியீடு. திருமகள் விலாச அச்சியந்திரசாலை, சென்னை. மணவழகு என்பார் முகவுரை எழுதியுள்ளார். நூலின் முகப்பில் பூவைக் கிழார் தாயுமானவர் வரலாறு எழுதியுள்ளார். (மணவழகு, பூவைக்கிழார் என்பவர், பூவை கலியாண சுந்தர முதலியாரின் புனை பெயராக இருக்கலாமோ?)

### தாயுமான சுவாமிகள் திருப்பாடல் திரட்டு
### (மூலமும் நூதன உரையும்)

நூலின் முதல் பக்கம் சிதைந்து போனதால், தொகுப்பாசிரியர் முதலிய எந்த விவரமும் தெரியவில்லை. நூல், பெரிய பக்க அளவில் 600 பக்கங்கள் கொண்டது. நூதன உரை எழுதியவர் யாரோ?

தாயுமானவர் அமைச்சர் பதவியையும் இல்லறத்தையும் விட்டுத் துறவு பூண்டதால், பல மெய்யுணர்வுப் பாடல்கள் மக்கட்குக் கிடைத்துள்ளன.

## நீதி நூல் திரட்டுகள்

அற நெறி - நீதி கூறும் ஆத்தி சூடி, கொன்றை வேந்தன், மூதுரை, நல்வழி, வெற்றி வேற்கை, உலக நீதி, நன்னெறி, நீதி வெண்பா, நீதி நெறி விளக்கம் முதலிய நீதி நூல்களைப் பலர் தொகுத்து வெளியிட்டுள்ளனர். ஒரே நேரத்தில் பல நீதி நூல்களையும் படித்துப் பயன் பெற வாய்ப்பளிக்கும் இம் முயற்சி பாராட்டத்தக்கது. சில தொகுப்புகளைக் காண்பாம்.

### பால நீதிச் செய்யுள் திரட்டு

வெளியீடு - மாக் மில்லன் கம்பெனி, சென்னை. உள்ளுறை: உலக நீதி, ஆத்தி சூடி, கொன்றை வேந்தன், வெற்றி வேற்கை, மூதுரை, நல்வழி, நீதி வெண்பா, நன்னெறி, முதுமொழிக் காஞ்சி, நீதி நெறி விளக்கம், திரிகடுகம், நான்மணிக்கடிகை- ஆகிய நூல்களின் தொகுப்பு.

### நீதி நூல் திரட்டு

நூல்கள்: வாக்குண்டாம் (மூதுரை), நல்வழி, நன்னெறி, திருத்தணிகைச் சரவணப் பெருமாள் ஐயர் உரையுடன். மூன்றாம் பதிப்பு: மன்மத-பங்குனி. பழைய தாள் - பழம் படி.

### நீதி நூல் கொத்து

தொகுப்பு—உரை: திருவாரூர் டி.பி. நாராயணசாமி பிள்ளை. வெளியீடு: மனோன்மணி விலாசப் புத்தக சாலை, கோலாலம்பூர், மலேயா. அச்சு - பாரதி பிரஸ், சூளை, சென்னை. ஆண்டு இல்லை.

உள்ளுறை: ஆத்தி சூடி, கொன்றை வேந்தன், வாக்குண்டாம், உலக நீதி, நல்வழி, நன்னெறி - ஆகியவை உரையுடன் உள்ளன.

நீதி நூல் (உரையுடன்)

ஆ—(மாயூரம்) வேத நாயகம்பிள்ளை. விக்டர் பிரஸ், சென்னை. 1892. தெய்வம் உண்டெனல் முதலாக விலங்கினத்திற்கு இடர் செய்யாமை ஈறாக 44 அதிகாரங்களில் 600 பாடல்கள் உள்ளன. சிறந்த நீதி கூறுபவை.

நீதி நூல்

மற்றுமொரு பதிப்பு: மயிலாடுதுறை வேதநாயகம் பிள்ளை இயற்றிய நீதித் திரட்டு நூல். ப.இராமநாதம்பிள்ளையின் உரையுடன் உள்ளது. வெளியீடு – சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை. முதல் பதிப்பு 1950.

உள்ளுறை: 'தெய்வம் உண்டெனல்' என்பது முதலாகப் 'பன்னெறி' ஈறாக 45 அதிகாரங்களில் பாடல்கள் உள்ளன.

நீதி நூல் திரட்டு

வெளியீடு – பெ. கிருஷ்ணசாமி நாவலர். அச்சு – பரப்பிரம்ம முத்திர சாலை, சென்னை. 1879. உள்ளுறை: ஆத்திசூடி, கொன்றை வேந்தன், வெற்றி வேற்கை, மூதுரை, நல்வழி, நீதி வெண்பா, நீதி நெறி விளக்கம் – ஆக ஏழு நூல்கள்.

நீதி மஞ்சரி – முதல் பாகம்

ஸி.கே.எஸ்.பிரஸ், சென்னை. 1877. உள்ளுறை: உலக நீதி, ஆத்தி சூடி, கொன்றை வேந்தன், நறுந்தொகை (வெற்றி வேற்கை), முது மொழிக் காஞ்சி, மூதுரை, நல்வழி, நீதி வெண்பா.

நீதி மஞ்சரி- இரண்டாம் பாகம்

உரை – சிந்தாதிரிப் பேட்டை பு.தெய்வ சிகாமணி முதலியார். இரண்டாம் பதிப்பு. மிமோரியல் அச்சுக் கூடம், சென்னை. 1877. உள்ளுறை: இனியவை நாற்பது, இன்னா நாற்பது, நன்னெறி, நீதி நெறி விளக்கம், அறநெறிச் சாரம், பழமொழி, திரிகடுகம், நான்மணிக் கடிகை, சிறு பஞ்ச மூலம், தாயுமானார் பாடல், நள வெண்பா-இந்த நூல்களிலிருந்து தேர்ந்தெடுத்த 220 பாடல்களின் தொகுப்பு இது.

**நீதி நூற்கொத்து**

உரை - இளவழகனார். வெளியீடு சை.சி.நூ.ப.கழகம், சென்னை. நான்காம் பதிப்பு. பிப்ரவரி, 1947. முத்துக்குமரன் பிரஸ், சென்னை. உள்ளுறை: நீதி வெண்பா, அறநெறிச் சாரம், நீதி நெறி விளக்கம்.

**பன்மணிக் கொத்து**

முதல் பாகம்: தொ - டி.எ. இராசரத்தினப் பிள்ளை வெ - கிறிஸ்டியன் லிட்டரேச்சர் சொசைட்டி. எஸ்.பி.சி.கே. பிரஸ், சென்னை, 1908. உ-உலக நீதி, ஆத்தி சூடி, கொன்றை வேந்தன், வெற்றி வேற்கை, மூதுரை, நல்வழி, நீதி வெண்பா, நன்னெறி-ஆகியவற்றின் திரட்டு.

இரண்டாம் பாகம்: - மேலுள்ளவற்றோடு, இனியவை நாற்பது முதல் திருக்குறள் ஈறாக உள்ள 12 நீதி நூல்களின் தொகுப்பு.

**நீதி நூல்கள்**

விளக்கம்-மு.சு. அருள்சாமி, சென்னை. இரண்டாம் பதிப்பு-சூலை, 1959. பாரி அச்சகம், சென்னை. உள்ளுறை: ஆத்தி சூடி, கொன்றை வேந்தன், உலக நீதி, வெற்றி வேற்கை மூதுரை, நல்வழி, நன்னெறி - ஆகியவை.

**Ten Tamil Etbics**

**(நீதி நூல்கள் பத்து)**

ஆங்கில மொழி பெயர்ப்பு. மொழி பெயர்ப்பு ஆசிரியர்: T.B. Krishnasamy, M.A.B.L. வெளியீடு: சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை. முதல்பதிப்பு: மார்ச்சு-1937.

**Contents**

ஆத்திசூடி, கொன்றை வேந்தன், உலகநீதி, வெற்றி வேற்கை, மூதுரை, நல்வழி, நன்னெறி, நீதி நெறி விளக்கம், நீதி வெண்பா, அறநெறிச் சாரம் ஆகியவை.

இந்தப் பதிப்பில் ஆங்கிலத்தில் உள்ள சொற்கள் அப்படியே இங்கே தரப்பெற்றுள்ளன.

**நீதி நூல்திரட்டு**

தொ - ஆறுமுகநாவலர். வித்தியாநு பாலன அச்சகம், சென்னை. பத்தாம் பதிப்பு—1955. ஆத்திசூடி, கொன்றை வேந்தன், உலகநீதி, நறுந்தொகை, வாக்குண்டாம், நல்வழி, நன்னெறி, நீதிநெறி விளக்கம்-உரையுடன்.

**நீதிக் களஞ்சியம்**

தொகுப்பும் உரையும்—புலவர் குழந்தை, இளங்கோ புத்தக சாலை, ஈரோடு. ராசன் எலெக்டிரிக் பிரஸ், சென்னை, 1962. நாலடியார் முதல் உலக நீதி ஈறாக 21 நூல்களிலிருந்து பாடல்களை எடுத்து, கல்வி முதல் நிலையாமை ஈறாக உள்ள 71 தலைப்புகளில் ஏற்ப அமைத்துத்தொகுக்கப்பட்ட நூல் இது.

**நீதி நூல்கள்**

தொ - புலவர் க.சச்சிதானந்தம். வெ-சாரதா பதிப்பகம், புதுச்சேரி. அச்சு - கதிர்மணி அச்சகம், புதுச்சேரி. 30 - 4 - 1985. உ-ஆத்தி சூடி, கொன்றை வேந்தன், உலக நீதி, வெற்றி வேற்கை, மூதுரை, நல்வழி - ஆகியவை. குறிப்புரை உண்டு. இவ்வாறு பல தொகுப்புகள் பலரால் செய்யப்பெற்றுள்ளன.

## திருவருட்பா

வடலூர் இராமலிங்க வள்ளலார் அருளிய திருவருட் பாக்கள் முழுமையாகவும் தனித்தனி உட்பிரிவுகளாகவும் பல ஆண்டுகளில் பலரால் பதிக்கப் பெற்றுள்ளன. இந்நூலின் முழுப் பதிப்பு மிகவும் பெரிய அளவில் இருப்பதால், கற்போர் கையாள்வதற்கும் கற்று நிறுத்திக் கொள்வதற்கும் வசதியாகப் பற்பல உட் பிரிவுகளாக வெளியிடப்பட்டிருப்பது பெரும் பயன் அளிக்கும். இனி அருட்பா வெளியீடுகள் பற்றிக் காணலாம்:—

**திருவருட்பா நூல்கள்**

திருவருட்பா மாலை (12), திருவருட்பா திருப்பாடல்கள் (21), திருவருட்பா ஆறாம் திருமுறை, திருவருட்பா நான்கு திருமுறைகள் (3505), திருவருட்பா திருப்பாடல் திரட்டு (90), திருவருட்பா மகாதேவ மாலை (101), திருவருட்பா திருமுறைத்

திரட்டு (952) - முதலிய பல பெயர்களில், பலரால் தனித்தனியாகப் பல பகுதிகள் தொகுக்கப்பட்டுள்ளன.

திருவருட்பாத் திரட்டு

திருவருட்பாத் திரட்டு என்னும் பெயரில், பி.வேதகிரிப் பிள்ளை, பி.சுப்பிரமணியப் பிள்ளை ஆகியோரால் பல பாடல்கள் தெர்குத்து 1898ஆம் ஆண்டு வெளியிடப்பட்டன. ஸ்ரீ நிகேதன் அச்சுக் கூடம், சென்னை.

கீர்த்தனைப் பகுதி

திருவருட்பா கீர்த்தனைப் பகுதி, சென்னை ஆ.பால கிருஷ்ணப் பிள்ளை எழுதிய குறிப்புடன், சென்னை ஆசிரியர் நூற்பதிப்புக் கழகத்தாரால் கலியுகாதி ருoகூரு-ஸ்ரீமுக - கார்த்திகை-26 ஆம் நாள் (11-12-1933) இரண்டாம் பதிப்பாக வெளியிடப்பட்டுள்ளது. இதன் முதல் பதிப்பின் காலம்: 1-2 - 1931 ஆகும்.

திருவருட்பாத் திருமுறை

ஆறு திருமுறைகளுடன், இது காறும் அச்சிடப்படாத பற் பல பதிகங்களும், நித்திய விதி என்னும் உலகியலும், நாமாவளி களும், இத்தொகுப்பில் உள்ளன. வெளியீடு: பிருங்கி மாநகரம் பி.வே.நமச்சிவாய முதலியார். நிரஞ்சன விலாச அச்சியந்திர சாலை, சூளை, சென்னை. 1908. கலியாப்தம்: ருசஞகூ - பிலவங்க ஆண்டு.

திருவருட்பா (மூலமும் உரையும்)

உரையாசிரியர்: அரன் வாயல் வேங்கட சுப்புப் பிள்ளை. வெளியீடு: சமரச சுத்த சன்மார்க்க சங்கம்,சென்னை. ஆங்கிரச ஆண்டு - வைகாசி-முதல்நாள். 1932. உள்ளுறை: சிவ காருண்ய ஒழுக்கம், திருவடிப் புகழ்ச்சி, விண்ணப்பக் கலி வெண்பா, நெஞ்சறிவுறுத்தல், சிவ நேச வெண்பா, மகாதேவமாலை - ஆகியன.

திருவருட்பா - ஐந்து திருமுறைகள்

ஐந்து திரு முறைகள் - சென்னை சமரச சுத்த சன் மார்க்க சங்க வெளியீடு. உமாபதி அச்சுநிலையம், சென்னை.

ஆங்கிரச – புரட்டாசி – 16 ஆம் நாள். 1-10 – 1932. வள்ளலாரின் 110 ஆம் ஆண்டு வெளியீடு.

திருவருட்பா – ஆறாம் திருமுறை

ஆறாம் திருமுறை, மேற்குறித்த சங்கத்தால் மேற்குறித்த நாளில் வெளியிடப் பட்டது. அச்சு: குமரன் அச்சக நிலையம், காஞ்சிபுரம்.

திருவருட்பா திரு - ஆயிரம்

'பரசிவ வணக்கம்' முதல் 'சோதிக் கொடி' ஈறாக உள்ள பல தலைப்புகளில் ஆயிரம் பாடல்கள் இந்தத் தொகுப்பில் உள்ளன. வெளியீடு: சென்னை சமரச சுத்த சன்மார்க்க சங்கம், சென்னை. பதினாறாம் பதிப்பு – 1949. மற்றும், திருவருட்பா வின் உள் தலைப்புகள் கொண்ட பல பகுதிகள், தனித் தனி யாகப் பல முறை வெளியிடப்பட் டுள்ளன.

திரு அருட்பா-(ஐந்து வெளியீடுகள்)

சென்னை அருட்பா வளாகம் சார்பில், பாலகிருஷ்ணப் பிள்ளை, பின்வருமாறு பதிப்பித்துள்ளார்.

முதல் புத்தகம் - கீர்த்தனைப் பகுதி - ஆண்டு 1961.
ஏழாம் புத்தகம் – முதல்திருமுறை அல்லதுபெருநூல் பகுதி-1956
எட்டாம் புத்தகம் – இரண்டாம் திருமுறையும் மூன்றாம் திருமுறையும் (அல்லது திரு வொற்றியூர்ப் பகுதி. – 1956)
ஒன்பதாம் புத்தகம்-ஐந்தாம் திருமுறை அல்லது திருத்தணிகைப் பகுதி – 1957.
பத்தாம் புத்தகம் – நான்கு – ஆறாம் திருமுறை அல்லது பூர்வஞான சிதம்பரப் பகுதி—1958.

திருவருட்பா

வரலாற்றுமுறைப் பதிப்பு. முதல் பதிப்பு-24-5-1972. பரிதாபி-வைகாசி-11 ஆம் நாள். சத்திய ஞான சபை நூற்றாண்டு நிறைவு (1872-1972) நினைவு வெளியீடு. தொகுத்து வெளியிட்டவர் ஊரன் அடிகள். ஜோதி பிரின்டர்ஸ், திருச்சிராப்பள்ளி.

வெளியீட்டுக் குழு – புரவலர்: நா. மகாலிங்கம்; தலைவர்: ஊரன் அடிகள்; உறுப்பினர்கள் சிலர். ஊரன் அடிகள் மிகவும் நீண்ட ஆய்வு முன்னுரை எழுதியுள்ளார். நா. மகாலிங்கம் அணிந்துரைஅளித்துள்ளார்.இது ஆறு திருமுறைகளாகப்பகுத்து வெளியிடப் பெற்றுள்ளது. முறையே ஆறும் வருமாறு:—

முதல் திருமுறை: தெய்வ மணி மாலை முதல் தனித்திருத் தொண்டர் வரை 52 தலைப்புகள் கொண்டது.

இரண்டாம் திருமுறை: கருணை விண்ணப்பம் முதல் இரேணுகை தோத்திரம் வரை 103 தலைப்புகள்.

மூன்றாம் திருமுறை: திருவடிப் புகழ்ச்சி முதல் மங்களம் வரை 27 தலைப்புகள்.

நான்காம் திருமுறை: குஞ்சிதபாதப் பதிகம் முதல் அருள் நிலை விளக்கம் ஈறாக 41 தலைப்புகள்.

ஐந்தாம் திருமுறை: அன்பு மாலை முதல் ஆளுடைய அடிகள் அருள் மாலை இறுதியாக 12 தலைப்புகள்.

ஆறாம் திருமுறை: பரசிவ வணக்கம் முதல் சத்திய அறிவிப்பு ஈறாக 144 தலைப்புகள்.

மேலுள்ளனவே யன்றி,இறுதியில் சன்மார்க்க விண்ணப்பங்கள், பலவகைத் தனிப் பாடல்கள் என்னும் இரண்டு தலைப்புகளில் பல பாடல்கள் தரப்பட்டுள்ளன. இது மிகவும் பயனுள்ள பதிப்பாகும்.

திருவருட்பாப் பதிப்புகள் மேலும் பல உள்ளன. அவற்றுள் சில வருமாறு:—

திருவருட்பா-முதல் புத்தகம்-இரத்தின முதலியாரின் வேண்டுகோளின்படி தொழுவூர் வேலாயுத முதலியார் பதிப்பித்தது. அட்சய-மகாரவி, பிப்ரவரி 1867. ஏஷியாடிக் பிரஸ், சென்னை.

திருவருட்பா-இரண்டாம் புத்தகம் - மயிலை சி. சோமசுந்தரஞ் செட்டியாரின் வேண்டுகோளின்படி தொழுவூர் வேலாயுத முதலியார் பதிப்பித்தது. மிமோரியல் பிரஸ், சென்னை-மார்ச்சு 1880.

திருவருட்பா - ஆறாம் திருமுறை - வேலூர் பத்மநாப முதலியார்–பெங்களூர் இராகவலு நாயகர் ஆகியோரின் வேண்டு கோளின்படி, தி.க.சுப்பு ராயச் செட்டியார் பார்வை யிட்டபின், திரிசிரபுரம் ம. லோகநாதச் செட்டியார் வெளியிட் டார். மார்ச்சு 1885.

திருவருட்பா–இரண்டாம் பதிப்பு–மயிலை சிக்கிட்டி சோம சுந்தரஞ் செட்டியாரின் வேண்டுகோளின்படி, தொழுவூர் வேலாயுத முதலியார் பதிப்பித்தது. மிமோரியல் அச்சுக்கூடம், சென்னை. 1887.

திருவருட்பா – குடும்ப கோஷம்—ஆ. சபாபதி சிவாசாரிய சுவாமிகள் பதிப்பித்தார். மிமோரியல் அச்சுக்கூடம், சென்னை. முதல் பதிப்பு 1000. விகுர்தி – தை. 1891. குடும்ப கோஷம் என்பது வள்ளலார் அருளிய ஒரு பகுதி.

திருவருட்பா திருமுறைத் திரட்டு–விருப்பம்: கா. திருவேங் கட முதலியார். திரட்டு: பொ. சுந்தரம்பிள்ளை. பார்வை: பூவை கலியாண சுந்தர முதலியார் பதிப்பு. இராமசாமி முதலியார். நந்தன 1892.

திருவருட்பா – பதிப்பு: பிருங்கி மாநகரம் இராமசாமி முதலியார். இந்து யூனியன் அச்சியந்திர சாலை, சென்னை. துர்முகி 1896.

திருவருட்பா – பார்வை: ச.மு. கந்தசாமி பிள்ளை, புதுக் கோட்டை – இராமச்சந்திரபுரம். வெளியீடு: தி.நா. முத்தையச் செட்டியார். சன் ஆப் இந்தியா பிரஸ், சென்னை. ருத்ரோத் காரி – 1924. இன்னும் பல.

அருட்பா வெளியீடுகள் பல இருப்பதும், சில வெளியீடுகள் பல பதிப்புகள் பெற்றிருப்பதும், அருட் பாவிற்கு நாட்டில் உள்ள செல்வாக்கை அறிவிக்கிறது.

வள்ளலார் சங்கம் அமைத்துத் தம் கொள்கையைப் பரப்ப ஊர் ஊராகச் செல்லவில்லை. தாம் செல்லாவிடினும் பிறரை ஏவி அவ்வாறு செய்யவும் தூண்டவில்லை. தமிழக ஊர்களில் வள்ளலாரின் பெயரால் இருக்கும் அமைப்புகள், வள்ளலாரிடம்

உள்ள ஈடுபாட்டால் மக்களே அமைத்துக் கொண்டனவாம். இஃதும் வள்ளலாரின் அருட்பாப் பெருமைக்குத் தக்க சான்றாகும்.

தமிழகத்தில், ஆழ்வார்கள்-நாயன்மார்கள் முதலியோரின் பெயரால் இவ்வளவு அமைப்புகள் ஏற்படாததற்குக் காரணம், அவர்கள் ஆண்டவனோடு தொடர்பு கொள்வதிலேயே பெரும்பாலான காலத்தைச் செலவழித்து விட்டனர்.

ஆனால், வள்ளலாரோ, இறைவனிடமிருந்து இறங்கிக் கீழே வந்து மக்களோடு தொடர்பு கொண்டதில் பெரும் பகுதியான காலத்தைச் செலவிட்டார். மக்கட்கு வேண்டிய நலன்களைக் காணுவதிலேயே மிக்க ஆர்வம் காட்டினார். அதனால், பல அமைப்புகளின் பேரால் வள்ளலார் நின்று நிலைத்துப் போற்றப் பெறுகிறார். அவர்தம் பெருமைக்கு அருட்பா அரும் பெருஞ் சான்றாகும்.

## கொத்துகள்-திரட்டுகள்

## அந்தாதிக் கொத்துகள்

அந்தம்+ஆதி=அந்தாதி. ஒரு செய்யுளின் இறுதிச் சொற்றொடரோ - இறுதிச் சொல்லோ - இறுதி எழுத்தோ அடுத்த செய்யுளின் முதலில் வருமாறு பாடல்களை அமைத்துப் பாடப் படும் நூல் அந்தாதி எனப்படும். அந்தம்=இறுதி; ஆதி=முதல். இவ்வாறு தமிழில் எண்ணற்ற அந்தாதி நூல்கள் உள்ளன. அவற்றுள் சிற்சிலவற்றைச் சிலர் தொகுத்து அந்தாதிக் கொத்து என்னும் பெயரில் அமைத்துள்ளனர். அவற்றுள் சில கொத்துகளைக் காணலாம்:

அந்தாதிக் கொத்து (கழகம்)

முதல் பாகம்-சென்னை - சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழக வெளியீடு. நவம்பர் 1928. 12 அந்தாதிகள் இந்தக் கொத்தில் உள்ளன. அவையாவன:—

அதி வீரராம பாண்டியர் இயற்றிய

1. திருக்கருவைக் கலித்துறை அந்தாதி

2. திருக்கருவை வெண்பா அந்தாதி

3. திருக்கருவைப் பதிற்றுப்பத் தந்தாதி.

சிவப்பிரகாச சுவாமிகள் இயற்றிய

4. பழமலை அந்தாதி

5. செந்தில் நிரோட்டக யமக அந்தாதி

சிவஞான சுவாமிகள் இயற்றிய

6. இளசைப் பதிற்றுப் பத்து அந்தாதி

7. குளத்தூர்ப் பதிற்றுப் பத்து அந்தாதி

8. கலைசைப் பதிற்றுப் பத்து அந்தாதி

கம்பர் இயற்றிய-9. சரசுவதி அந்தாதி - குகை நமசிவாயர் இயற்றிய - 10. அருணகிரி அந்தாதி - பரஞ்சோதி முனிவரியற்றிய-11. மதுரைப் பதிற்றுப் பத்து அந்தாதி - அபிராமி பட்டரியற்றிய -12. அபிராமி அந்தாதி - என்பனவாம்.

அந்தாதிக் கொத்து

அரசு ஓலைச் சுவடி நூல் நிலையம் - 51. முதல் பாகம் முகவுரை - தி. சந்திரசேகரன், 15-2-1956.

12 அந்தாதிகளின் திரட்டு. அவை வருமாறு:—

1. கணபதி அந்தாதி.
2. திருவரங்கப் பதிற்றுப்பத் தந்தாதி - வேங்கடாசல தாசன்.
3. சேடமலைப் பதிற்றுப்பத் தந்தாதி.
4. திருவாவினன் குடி பதிற்றுப்பத் தந்தாதி - சுப்பிரமணிய முனிவர்.
5. திருமங்கைக் கரும்பேசர் பதிற்றுப்பத் தந்தாதி
6. திருவெவ்வுளூர் அந்தாதி-நாராயண தாசர்
7. மதுரை யமக அந்தாதி - பல பட்டடைச் சொக்கநாதக் கவிராயர்
8. சடக்கர அந்தாதி
9. சுப்பிரமணியர் அந்தாதி
10. சௌந்தரி அந்தாதி

11. சித்தர் அந்தாதி (உரையுடன்)
12. சிஷ்டர் அந்தாதி

இந்த 12 நூலுக்கும் உரிய ஓலைச் சுவடி விவரம் வருமாறு:—

1. D. 242. ஓலை.
2. D. 2302 பனையோலை. 1515 எண்ணில் பெயர்த்து எழுதிய பிரதியும் உள்ளது.
3. D. 233-பனையோலை. 135 (b) காகிதம்—மூவருடக் காட்லாக்.
4. D. 257-பனையோலை/R. 135 (d) பெயர்த்த பிரதி
5. 5019-பனையோலை-1954–55 – இல் மிதிலைப்பட்டு சிங்கார வேலுக் கவிராயரிடமிருந்து விலைக்குப்பெற்றது. பிரதி செய்த பிரதி-எண். R.5341.
6. D. 258 பனையோலை/பெயர்ப்பு R.1704-காகிதம்
7. D. 262 பனையோலை – இதில் 14 பாடல்களே உள்ளன. உ.வே.சா. நூலகத்துப் பனையோலைப் பிரதியிலிருந்து மீதிப் பாடல்கள் கிடைத்தன. மொத்தப் பாடல் 101. (உ.வே.சா. நூலகத்திலிருந்து 87 பாடல்கள்)
8. D. 250 /R. 1228, 1890 / பனையோலைகள்
9. மு.வ.கா. 351-பனையோலை / 1916 – 17–இல், மயிலை சி.வி. ஜம்புலிங்கம் பிள்ளையிடம் விலைக்குப் பெற்றது. பெயர்த்த காகிதப் பிரதி – R. 3771.
10. D. 254 - பனையோலை / பெயர்த்த பிரதி R. 1703.
11. 252-பனையோலை - பெயர்த்த வேறு பிரதி R. 135 (a).
12. 251-பனையோலை.

அந்தாதிக் கொத்து

M.G.O.M.S.59. தமிழக அரசுச் சுவடி நூல் நிலையப் பிரதி. முகவுரை - தி. சந்திரசேகரன், 13-10-1958. இரண்டாம் பாகம்—பதினோர் அந்தாதிகளின் தொகுப்பு.அவை வருமாறு:-

1. பழநிப் பதிற்றுப் பத்து அந்தாதி
2. மயிலாசலத் தந்தாதி - ஆசிரியர் சின்னைய தேசிகர்
3. தில்லையமக அந்தாதி
4. திருத்தணிகை வெண்பா அந்தாதி
5. திருச் செந்தில் நிரோட்டக யமக அந்தாதி—சிவப் பிரகாசர்
6. திருவரங்கத் தந்தாதி-பிள்ளைப் பெருமாள் ஐயங்கார் அல்லது அழகிய மணவாளதாசர்
7. திருக்கடல் மல்லை பதிற்றுப்பத்தந்தாதி-பையனூர் விருத்தாசலப் பிள்ளை.
8. திருமழிசை பதிற்றுப்பத் தந்தாதி - பையனூர் வரதராசப் பிள்ளை.
9. திரு எவ்வுள் பதிற்றுப்பத் தந்தாதி - கையெழுத்துப்படி.
10. பாலைய சுவாமிகள் பதிற்றுப்பத் தந்தாதி-கையெழுத்துப் படி.
11. சித்திர வெண்பா அந்தாதி-ஆகியவை.

இந்தப் பதினொரு நூலுக்கும் உரிய ஓலைச் சுவடி விவரம் வருமாறு:—

1. மூ.வ.கா. 572 காகிதம்/1923-24 - இல், பழநிவேலு குமாரப் பிள்ளையின் பிரதியைப் பார்த்துப் பிரதி செய்தது.
2. ... ... ... ...?
3. மூ.வ.கா. R.348 (a) 2704 ஓலைகள்-R.348 (a) இதிலிருந்து முதல் 25 செய்யுட்களும், 45 ஆம் செய்யுளிலிருந்து 76 ஆம் செய்யுள் வரையும் உள்ளன. R.2704-இதிலிருந்து-முதல் செய்யுளிலிருந்து 77 ஆம் செய்யுள் வரை உள்ளன. மேற்கொண்டு 23 செய்யுட்கள் கிடைக்கவில்லை (தில்லை யமக அந்தாதியின் நிலை இது).
4. டி. 255 - ஓலை / மூ.ப. 422 (c) ஓலை.
5. டி. 1644, 1645, 1646, 1647
6. டி. 256 ஓலை /மூ.ப. (422) (c) ஓலை. பின்னது, ஆழ்வார் திருநகரி அலர்மேல் மங்கம் மங்கார் நன்கொடை.

7. 7-8-9-10. இந்த நான்கு நூல்கள் - மூ.வ.கா. R.2 (A) (B) (C) (D) கையெழுத்துப் பிரதிகள். இவை. பையனூர் வரத ராசப் பிள்ளையின் காகிதப் பிரதியிலிருந்து 1910-11-இல் எழுதியது.

11. டி.கா. 1797-ஓலை.

## கோவைக் கொத்துகள்

கோவை என்பது அகப்பொருள் துறைகள் பற்றிய நானூறு பாடல்கள் கொண்ட ஒருவகை இலக்கியமாகும். தமிழில் பல கோவை நூல்கள் உள்ளன. சில கோவை நூல்களிலிருந்து சிற்சில துறைப் பாடல்களை எடுத்துக் கோவைக் கொத்து என்னும் பெயரில் சில கொத்துகள் தொகுக்கப்பட்டுள்ளன. தமிழ்த் தாத்தா உ.வே. சாமிநாத ஐயர் நூலகத்தில் சில கோவைக் கொத்துகள் உள்ளன. அவற்றைக் காண்பாம்.

எண். 914. கோவைக் கொத்து (மூலம்)

தஞ்சை வாணன் கோவை, அம்பிகாபதி கோவை முதலிய கோவை நூல்கள் சிலவற்றிலிருந்து ஒவ்வொரு துறைக்கும் ஒவ்வொரு பாடலாக எடுத்து அமைக்கப்பட்டுள்ளது. எல்லாத் துறைகட்கும்-எல்லாக் கோவைகளிலிருந்தும் பாடல்கள் எடுக்கப்படவில்லை. சில துறைகட்குச் சிற்சில கோவைகளிலிருந்து மட்டில் எடுத்துக்கொள்ளப் பெற்றுள்ளன. மற்றை விவரங்கள் யாவும் அறியக்கூடவில்லை. இந்தப் படியில் (பிரதியில்), ‘தலைவன் போக்கு உடன்படுதல்’ என்ற துறை வரையில் பாடல்கள் உள்ளன.

எண். 915 கோவைக் கொத்து

ஏறக்குறைய முன் படி போன்றதே இது. இதில், ‘நற்றாய் கேட்டவன் உளங்கொள வேலனை வினாதல்’ என்ற துறை வரை யுள்ளன.

எண். 916 - கோவைக் கொத்து

தஞ்சை வாணன் கோவை, திருவாரூர்க் கோவை, அம்பிகாபதி கோவை, குமார குலோத்துங்கன் கோவை முதலிய கோவை நூல்களிலிருந்து திரட்டிய 770 செய்யுட்கள் இந்தத்

தொகுப்பில் உள்ளன; 'காட்சி' முதல் 'தூதில் பிரிவு' வரையான துறைகளின் பேரில் உள்ளன. தொகுத்தவர் முதலிய விவரம் தெரிய வில்லை.

எண்.957. பல கோவைத் துறை (மூலம்)

பல கோவை நூல்களிலிருந்து படியெடுக்கப்பட்ட சில பாடல்களின் தொகுப்பு இது. சிதைந்த நிலையில் உள்ள இந்தப் படியில் செய்யுட்கள் தெளிவாயில்லை.

## கலம்பகக் கொத்துகள்

கலம்பகம் என்பது, பல பொருள்கள் பற்றி - பல அகத் துறைகள் பற்றி-பல வகையான நூறு பாடல்களால் இயற்றப் படும் ஒரு வகைச் சிற்றிலக்கியமாகும். கலம்பகம் என்பதற்கே பலவற்றின் தொகுப்பு என்பதான ஒரு வகைப் பொருள் கூறுவர். இத்தகைய கலம்பக நூல்கள் சிலவற்றின் தொகுப்பு 'கலம்பகக் கொத்து' எனப்படுகிறது.

தமிழக அரசின் ஓலைச் சுவடி நூல் நிலையத்திலுள்ள (M.G.O.M.S.NO.68) இதன் விவரம் வருமாறு:- மேற் பார்வை - வெளியீடு: தி.சந்திரசேகரன். Rathinam Press (Branch) Madras - 1. 1960.

நூல்கள்:

1. பேரைக் கலம்பகம் - திருப்பேரைத் திருமால் மீது பாடியது. ஆசிரியர் பெயர் இல்லை.
2. திரு மயிலாசலக் கலம்பகம் - ஆசிரியர்: திருப்புகழ்ச் சுவாமிகள் எனப்படும் தண்டபாணி சுவாமிகள்.
3. ஞான விநோதன் கலம்பகம் - சொருபானந்த சுவாமிகள் மீது, அவர் மாணாக்கர் தத்துவ ராயர் இயற்றியது.

தி. சந்திரசேகரன், 1-3-60 நாளிட்டு ஆங்கிலத்திலும், 2-3-60 நாளிட்டுத் தமிழிலும் முகவுரை எழுதியுள்ளார். ஓலைச்சுவடி விவரமாவது:—

1. திருப்பேரைக் கலம்பகம்-3419 எண்-காகிதக் கையெழுத்துப் பிரதி. ஆதாரம்: 195-152 ஆம் ஆண்டளவில், மதுரைத்

தமிழ்ச் சங்கத்திலிருந்து வரவழைக்கப்பட்ட ஓலைச் சுவடியிலிருந்து பிரதிசெய்தது.

2. திரு மயிலாசலக் கலம்பகம் – 2812 எண் கொண்ட பனையோலை. 1951 – 52 ஆம் ஆண்டளவில், குமாரக் குப்பம் R. சண்முகத்தால் நன்கொடையாக அளிக்கப் பெற்றது.

3. ஞான விநோதக் கலம்பகம் ... ... ...

## பிள்ளைத் தமிழ்க் கொத்துகள்

கடவுள் மீதோ, பெரியார்கள் மீதோ, அவர்களைச் சிறு பிள்ளையாகக் கற்பனை செய்து, பத்துப் பருவங்கள் அமைத்து, பருவத்துக்குப் பத்துப் பாடல்கள் வீதம் மொத்தம் நூறு பாடல்கள் பாடியது பிள்ளைத்தமிழ் நூலாகும். சில பிள்ளைத்தமிழ் நூல்களின் தொகுப்பு (கொத்து) நூல் இது. அரசுச் சுவடி நூல் நிலையத்தில் உள்ளது. M.G.O.M.S 50. குறிப்புரை உண்டு. வெளியிட்டவர் தி. சந்திர சேகரன். 12 – 12 – 1956 – சென்னை.

பிள்ளைத் தமிழ்நூல்கள்

1. அரும் பாத்தை வேத விநாயகர் பிள்ளைத்தமிழ் – ஆசிரியர் பெயர் இல்லை.
2. வைகுந்த நாதன் பிள்ளைத்தமிழ் – ஆசிரியர் பெயர் இல்லை.
3. இராவகர் பிள்ளைத்தமிழ் – ஆசிரியர் – குற்றாலம் குழந்தை முதலியார்.
4. தில்லைச் சிவகாமியம்மைபிள்ளைத்தமிழ் – ஆசிரியர் இல்லை.
5. புதுவைத் திரிபுரசுந்தரி பிள்ளைத் தமிழ் - ஆசிரியர் - முத்துக்குமரர்.
6. தூத்துக்குடி பாகம் பிரியா அம்மை பிள்ளைத் தமிழ் – ஆசிரியர் பெயர் இல்லை.
7. சிவானந்தன் பிள்ளைத் தமிழ் – ஆசிரியர் பெயர் இல்லை.

இந்தக் கொத்தால், ஏழு பிள்ளைத் தமிழ் நூல்களின் அறிமுகம் கிடைக்கிறது.

ஓலைச் சுவடி விவரம்

1. மூவரு.கா. 2677 – K.சண்முகம் பிள்ளை நன்கொடை.

2. மூவ.கா. 441-1920-21 இல், ஸ்ரீ வில்லி புத்தூர் அப்பு ஐயங்கார் நன்கொடை.
3. டி.கா. 323 – ஓலை.
4. டி.கா. 324 ஓலை-மூவ.கா. 2860-2619 – ஓலை.
5. டி.கா. 326 ஓலை.
6. மூ.வ.கா. 590 (b) காகிதப் பிரதி. எட்டையபுரம் மகாராசா சமஸ்தானம் ஓலைச் சுவடியிலிருந்து 1924 - 25 இல் பெயர்த்து எழுதியது.
7. மூ.வ.கா. 2676 ஓலை. 1951 – 52 இல் K.சண்முகம் பிள்ளை நன்கொடை.

ஏழு பிள்ளைத் தமிழ்க் கொத்தின் ஓலைச் சுவடி விவரம் இது.

பிள்ளைத் தமிழ்த் திரட்டு

தஞ்சை சரசுவதி மகால் வெளியீடு – 10. தஞ்சை வெற்றி வேல் அச்சகம் – 1950. பதிப்பாசிரியர் – எஸ்.முத்துரத்தின முதலியார். நூல்களாவன: –

1. திருப்பெருந்துறை சிவயோக நாயகி பிள்ளைத் தமிழ். மூன்று பிரதிகள் உள்ளன.
2. தரங்கம் வீரவேலாயுதம் பிள்ளைத் தமிழ்
3. திருவாரூர் சத்தியஞான பண்டாரம் பிள்ளைத் தமிழ். மூன்றுக்குமே ஆசிரியர் பெயர் இல்லை.

## கட்டளைப் பிரபந்தம்

14 கட்டளைகள். மதராஸ் ரிப்பன் அச்சியந்திர சாலை. ஆண்டு 1913–14 நூல்களாவன:-

1. நாநா சிவ வாதக் கட்டளை, 2. ஞானக் கட்டளை, 3. தத்துவாமிர்தக் கட்டளை, 4.வேதாந்தத்தத்துவக் கட்டளை, 5. வேதாந்த தசாவைத்தைக் கட்டளை, 6. சிவப்பிரகாசக் கட்டளை, 7. திருவாலவாய்க் கட்டளை, 8. வேத சிரோமணி சிதம்பர சுவாமிகள் அருளிய உபதேச உண்மைக் கட்டளை, 9. பிரமோத்திரக் கட்டளை, 10 பதினாறு பேறு, 11. தத்துவ

தீபிகை, 12. சித்தாந்தக் கட்டளை, 13 சித்தாந்தத் தத்துவக் கட்டளை, 14. வேதாந்த தச காரியக் கட்டளை-என்பன.

இந்த 14 நூல்களும் வரிசை மாறிக் 'கட்டளைக் கொத்து' என்னும் பெயரிலும் பதிப்பிக்கப்பட்டுள்ளது. இந்தப் பதிப்பை அடுத்தாற்போல் காணலாம்.

கட்டளைக் கொத்து

கட்டளை என்னும் வகையைச் சேர்ந்த நூல்களின் கொத்து (தொகுப்பு) இது. பதிப்பு: டி.எஸ்.துரைசாமி முதலியார், 20, பாளையப்பன் தெரு, சென்னை, 1920. பொருளடக்கம் வருக:-

சிவப்பிரகாசக் கட்டளை, திருவாலவாய்க் கட்டளை, பதினாறு பேறு (திரு நந்திதேவர் சிவன் சந்நிதியில் விண்ணப் பித்ததாம்), வேதாந்த தத்துவக் கட்டளை, ஆராதார ஜீவோற் பத்தி சிந்தாமணி (திருநந்தி தேவர் திரு மூல தேவருக்கு உப தேசித்தது), தத்துவ தீபிகை, ஞானக் கட்டளை, தத்துவாமிர் தக் கட்டளை, நாநா சீவவாதக் கட்டளை, உபதேச உண்மைக் கட்டளை (ஆசிரியர்-சிதம்பர சுவாமிகள்), வேதாந்த தசா வத்தைக் கட்டளை, வேதாந்த தச காரியக் கட்டளை, சித் தாந்தக் கட்டளை,சிந்தாந்த தத்துவ லட்சணம் - ஆகியவை.

வேத சமயம், சைவ சித்தாந்த சரித்திரம் முதலியன பற்றி யன இந்நூல்கள்.

கட்டளைத் திரட்டு

இது 32 கட்டளை நூல்களின் தொகுப்பு. வெளியீடு - அ. முத்து வடிவேல் முதலியார். பூமகள் அச்சுக் கூடம். சென்னை, 1931. சிவப்பிரகாசக் கட்டளை முதல், தத்துவ விசேஷார்த்த சங்கிரகம் முடிய மொத்தம் 32 நூல்கள் இத் தொகுப்பில் உள்ளன.

## பாட்டியல் கொத்து

இந்தக் கொத்தில், வச்சணந்திமாலை, சிதம்பரப் பாட்டி யலின் பொருத்தவியல்-மரபியல், நவநீதப் பாட்டியல், சம்பந்தப் பாட்டியல் என்னும் பாட்டியல் நூல்கள் அடக்கப்பெற்றுள்ளன.

உரையுண்டு. ஆய்வு-ஆரணி சென்னை கேசுவுலு நாயடு, சச்சிதானந்த அச்சியந்திர சாலை, சென்னை. 1908.

## தூது நூல்கள்

சிற்றிலக்கியங்களில் 'தூது' என்னும் ஒரு வகை நூல் உண்டு. ஒருவர் இன்னொருவர்பால் ஏதாவது ஒன்றைத் தூது அனுப்பியதாகப் பாடுவது தூது நூலாகும். சில தூது நூல்களைப் பார்க்கலாம்:

தூதுத் திரட்டு

தமிழக அரசு ஓலைச் சுவடி நூல் நிலையம். M.G.O.M.S., N. 58. முகவுரை – தி. சந்திரசேகரன். ஆங்கில முகவுரை 22-6-1957. தமிழ் முகவுரை 17-8.1957 நூல்கள் ஆசிரியர் பெயருடன் வருமாறு:

1. பெரிய தம்பி பிள்ளை பேரில் மான் விடுதூது (பெரிய பூபதி என்பவர், வேம்பனூர் சசிவர்ண பூபதி மகன்-கூடல் நகரையாண்ட வள்ளல்). நூலாசிரியர்- மங்கை பாகக் கவிராயர் (19. -ஆம் நூற்றாண்டு)

2. முத்து வீரப்பப் பிள்ளை பேரில் மான் விடுதூது- (ஆசிரியர் மங்கை பாகக் கவிராயரா யிருக்கலாம்.)

3. வெள்ளைய ராசேந்திரன் துகில் விடுதூது-(ஆசிரியர்: மங்கை பாகக் கவிராயரா யிருக்கலாம்)

4. செங்குந்தர் துகில் விடுதூது-ஆசிரியர்: சேலம்-வெண்ணந்தூர் பரமானந்த நாவலர்

5. சங்கரமூர்த்தி பேரில் விறலி விடுதூது-ஆசிரியர்-திருவிடைமருதூர் சுப்பையர்.

6. மணவை-திருவேங்கட முடையான் மேக விடு தூது-ஆசிரியர் பெயர் குறிப்பிடப்பட வில்லை.

இந்த நூல் தொடர்பாக, அரசு ஓலைச் சுவடி நூல்நிலையத்திலுள்ள விவரம் வருமாறு:-

1. எண் R.4977. மிதிலைப் பட்டி-சிங்கார வேலுக் கவிராயரிட மிருந்து 1954-இல் விலைக்குப் பெற்றது.

2. சேக்கிப் பட்டி மு.வீ.மான் விடுதூது. வீரப்ப பூபதி மகன் முத்துவீரப்பன், வீரன்-வள்ளல், R.4978. இதுவும் சிங்கார வேலுக் கவிராயரிடம் விலைக்குப் பெற்றது.
(ஆசிரியர் பெயர் தெரியவில்லை)

3. வெ.ரா.து.வி,தூது. ஆசிரியர் மங்கை பாகக் கவிராயரா யிருக்கலாம் வெ.ராசேந்திரன் கல்லக நாட்டில்—செண்பக நல்லூரில் பிறந்தவர் –வள்ளல்-வீரன். R,1750. சென்னை-திருவல்லிக்கேணி எஸ்.வி.துரைராசனிடம் 1948-இல் விலைக்கு வாங்கியது.

4. செ.து. வி.தூது. ஆசிரியர்–சேலம் வெண்ணந்தூர் பரமானந்த நாவலர் (செங்குந்தர்). R.1756. எஸ்.வி. துரை ராசனிட மிருந்து 1948-இல் விலைக்கு வாங்கியது.

5. ச.மூ.வி.வி.தூது. சங்கரமூர்த்தி சோழநாட்டு ஸ்ரீகிருஷ்ணனை என்னும் ஊரினர்-வள்ளல். நூலாசிரியர்-திரு விடை மருதூர் சுப்பையர். D.316. நூலகத்திலேயே உள்ள சுவடி.

6. ம.தி.வே.மே.வி.தூது. ஆசிரியர் பெயர் இல்லை. பெண் இறைவனிடம் தூது விடுவது. R.570- நூலகச்சுவடி, இந்தச் சுவடி,நாங்குனேரி–வானமாமலை மடம்-ஸ்ரீ இராமானுஜ ஜீயர் சுவாமியிடம் உள்ள பிரதி பார்த்து எழுதி வைத்தது.

அரும் பாடு பட்டுப் பெற்ற ஆறு தூது நூல்களின் திரட்டு இது.

தூது நூற் கோவை

உரை–தி.சங்குப் புலவர், சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழக வெளியீடு-1967. நூல்கள் ஆசிரியர் பெயருடன் வரு மாறு:—

1. அழகர் கிள்ளை விடு தூது-பல பட்டடைச் சொக்கநாதர்

2. மதுரைச் சொக்கநாதர் தமிழ் விடு தூது-பெயரில்லை.
3. கச்சி ஆனந்த ருத்திரேசர் வண்டுவிடு தூது-கவிராசர் கச்சியப்ப முனிவர்.

## சதகத் திரட்டுகள்

சதகம் என்பது நீதி - நேர்மைபற்றி அறிவுரை கூறும் நூறு பாடல்கள் கொண்ட நூலாகும்-பல சதக நூல்களைத் திரட்டி ஒரு நூலாகச் சிலர் பதிப்பித்துள்ளனர். சில வருமாறு:

### ஏழு சதகத் திரட்டு

முதல் பாகம்-மதராஸ் ரிப்பன் அச்சியந்திரசாலை. இரண்டாம் பதிப்பு. 1916-இத் தொகுப்பில் ஏழு சதகங்கள் அடங்கியுள்ளன. அவை:—

அறப்பளீச்சுர சதகம், குமரேச சதகம், திருவேங்கட சதகம், தண்டலையார் சதகம், கோயில் சதகம், எம்பிரான் சதகம், சிவ சங்கர சதகம் - என்பன.

### பத்துச் சதகத் திரட்டு

மதராஸ் ரிப்பன் அச்சியந்திர சாலை. முதல் பதிப்பு 1914-இதில் உள்ள பத்துச் சதகங்கள் வருமாறு:—

கைலாசநாதர் சதகம், செயங் கொண்டார் சதகம், குருநாத சதகம், அவையாம்பிகை சதகம், அருணாசல சதகம், அண்ணாமலை சதகம், வட வேங்கட நாராயண சதகம், தொண்டை மண்டலச் சதகம், கோகுல சதகம், திருத் தொண்டர் சதகம்-என்பன. இது இரண்டாம் பாகம்.

### பன்னிரு சதகத் திரட்டு

வெளியீடு- பி.இரத்தினநாயகர் சன்ஸ், சென்னை. திருமகள் விலாச அச்சு நிலையம், சென்னை. முதல் பதிப்பு 1940. இரண்டாம் பதிப்பு 1948. ஆசிரியர்கள் பெயர்களுடன் சதகங்கள் வருமாறு:—

1. குமரேச சதகம்-திருப்புல் வயல் குருபாத தாசர்
2. அறப்பளீச்சுர சதகம்-அம்பலக் கவிவாணர்

3. கயிலாச நாதர் சதகம்–சிதம்பரம் பிள்ளை.
4. அண்ணாமலை சதகம் – திருச்சிற்றம்பல நாவலர்.
5. அவையாம்பிகை சதகம் – நல்லதுக்குடி கிருஷ்ணையர்
6. திருவேங்கட சதகம் என்னும் மணவாளநாராயண சதகம் -வெண்மணி நாராயண பாரதி
7. தண்டலையார் சதகம் என்னும் பழமொழி விளக்கம்-படிக் காசுப் புலவர்
8. அருணாசல சதகம் – காஞ்சிபுரம் வித்துவான் சபாபதி முதலியார்
9. எம்பிரான் சதகம் – பூதூர் கோபாலகிருஷ்ண தாசர்
10. கோவிந்த சதகம் – நாராயண பாரதியார்
11. தொண்டை மண்டல சதகம்-படிக்காசுப் புலவர்
12. திருத் தொண்டர் சதகம்–திருப்பாண்டிக் கொடு முடி மலைக் கொழுந்து நாவலர் – என்பன.

திருத் தொண்டர் சதகம்

இஃதும் ஒருதொகை நூல் தான். சுந்தரரின் திருத்தொண்டத் தொகை– நம்பியாண்டார் நம்பியின் திருத்தொண்டர் திருவந்தாதி – சேக்கிழாரின் பெரிய புராணம் என்னும் திருத் தொண்டர் புராணம் –ஆகிய நூல்களை அடியொற்றி எழுதப் பட்டது இது.

இந்நூலாசிரியர் மலைக் கொழுந்து நாவலர், அறுபத்து மூன்று சைவ நாயன்மார்களை, குலவாரியாகவும் – திரு மரபு வாரியாகவும் – குருவருளால் முத்தி பெற்றவர் வாரியாகவும் – இலிங்கத்தால் முத்தி பெற்றவர் வாயிலாகவும் - வேடத்தால் முத்தி பெற்றவர் வாயிலாகவும்– இயலிசைத் தமிழ்த் தொடர் பானவர் வாரியாகவும் பிரித்து வகுத்துத் தொகுத்து இந் நூலை உருவாக்கியுள்ளார்.

மேற் குறித்துள்ள மூன்று நூல்களும் நாயன்மார்களைத் திருத்தொண்டர் என்று குறிப்பிட்டிருப்பதால், அந்நாயன்மார் களைப் பற்றிய பாடல்களின் தொகுப்புக்குத் திருத்தொண்டர் சதகம் என்னும் பெயர் வழங்கப் பெற்றது.

தொண்டை மண்டல சதகம்

''வேழ முடைத்து மலைநாடு மேதக்க
சோழ வளநாடு சோறுடைத்து - பூழியர்கோன்
தென்னாடு முத்துடைத்து தெண்ணீர் வயல்தொண்டை
நன்னாடு சான்றோர் உடைத்து''

இது ஔவையாரின் தனிப்பாடல். சான்றோர் உடைத்து என்று சிறப்பிக்கப் பெற்ற தொண்டை நாட்டைச் சேர்ந்த புலவர்கள், வள்ளல்கள் முதலானோர் தொடர்பான பாடல்களின் தொகுப்பு இது. நூலாசிரியர் : படிக்காசுப் புலவர். சான்றோர்கள் பெயர்கள் வருமாறு:—

திருவள்ளுவர், கச்சியப்ப சிவாசாரியார், கம்பர், பரிமேலழகர், ஒட்டக் கூத்தர், இராமாநுசர், சேக்கிழார், இரட்டையர், அருணகிரிநாதர், பவணந்தி, அப்பைய தீட்சதர் முதலிய புலவர்கள். மற்றும், அதிகமான், கறுப்பன், சடையப்பன், மாரி கண்டன், பல பிரபுக்கள், பல அரசர்கள் முதலானோர்.

தொண்டை மண்டல சதகம்

ஆதொண்டன் ஆண்ட தொண்டை மண்டலப் பகுதி பற்றியது. வள்ளலார் தொண்ட மண்டல சதகம் என்றும் சொல்லப்படும். மதராஸ் ரிப்பன் அச்சியந்திர சாலை - 1913.

கொங்கு மண்டல சதகம்

ஆசிரியர் : கார்மேகக் கவிஞர்; சமணர்; இயற்பெயர் சினேந்திரர்; இளமையிலேயே கவி பாடியதால் கார்மேகம் என்னும் சிறப்புப் பெயர் பெற்றார். கொங்கு மண்டலத்தில் உள்ள விசயமங்கலம் என்னும் ஊரில் பிறந்த இவர் கொங்கு மண்டல சதகம் எழுதியது பொருத்தமே. படிக்காசுப் புலவரையும் தளவாய் இராமப்பையரையும் இவர் குறிப்பிட்டிருப்பதால், இவர் 17 ஆம் நூற்றாண்டிற்குப் பிற்பட்டவர் என அறியலாம்.

இந்நூல் நூறு கட்டளைக் கலித்துறைப் பாடல்கள் கொண்டது. இதில், பண்டைய நிலப்பரப்பு, தெய்விக விளக்கம், சித்தர் - சமயாசாரியர் - முடியுடை வேந்தர் - குறுநில மன்னர் - வள்ளல்கள் - புலவர்கள் முதலியோர் பற்றிய

விவரங்கள், மக்களின் நீதி, வீரம், கொடை, கல்வி, நட்பு, நன்றி மறவாமை, அடக்க முடைமை, புலவர்களை ஆதரித்த அருமை, புலவர்களின் பெருமை, பழக்க வழக்கம் முதலியவை கூறப்பட்டுள்ளன.

இத்திரட்டில் கொங்கு மண்டலத்தின் எல்லைகள் அறிவிக்கப்பட்டுள்ளன. கிழக்கு எல்லை மதிற்கரை – தெற்கு எல்லை பழநி மலை– மேற்கு எல்லை வெள்ளியங்கிரி – வடக்கு எல்லை பெரும்பாலை - ஆகும்.

எறிபத்த நாயனார், செங்குன்றூர் கிழார், கோசர், குமணன், அதிகமான், ஓரி, அசதி, சியகங்கன், பவணந்தி முனிவர், அடியார்க்கு நல்லார் முதலியோரும் கொல்லிப் பாவையும் கொங்கு நாட்டவர்கள் என்னும் செய்தி இதில் தரப்பெற்றுள்ளது.

கார் மண்டல சதகம்

ஆ - அவிநாசி ஆறைகிழார். ப.அ.முத்துத்தாண்டவர் உரை எழுதியுள்ளார். இம்பீரியல் பிரஸ், சென்னை.1930. காவிரி தோன்றும் இடம் (தலைக்காவிரி) முதல் சோழ நாட்டின் உய்யக் கொண்டான் வளநாடு வரை உள்ள செழிப்பான பகுதியை அதாவது கார் (மேகம்) பொழியும் நீர்வளப் பகுதியைக் 'கார்மண்டலம்' என இந்நூல் குறிப்பிடுகிறது. இப் பகுதியின் சிறப்பு, இப்பகுதியைச் சேர்ந்த பெரியோர் வரலாறு முதலியன கூறும் சதகநூல் இது.

சோழ மண்டல சதகம்

ஆசிரியர் - ஆத்மநாத தேசிகர். திருவாரூர் இலக்கண விளக்கப் பரம்பரை சோமசுந்தர தேசிகர் என்பவர், நூலில் பாடப்பட்டுள்ள பெரியோர்களின் வரலாற்றை எழுதியுள்ளார். சோமசுந்தர தேசிகரின் முகவுரை: 9 - 3–1916. மாயூரம் கமலா பிரஸ்,1916.

சோழ நாட்டைப் பற்றிய இந்த நூலுள் கடவுள் வாழ்த்து உட்பட 103 ஆசிரிய விருத்தங்கள் உள்ளன. இந்நூலுள் கூறப் பட்டுள்ளவை வருமாறு:—

சிதம்பரம், திருவாரூர், திருவரங்கம் முதலிய திருப்பதிகளின் சிறப்பு, திருஞான சம்பந்தர், திருநாவுக்கரசர், திரு நீலநக்கர், மானக்கஞ்சாறர் முதலிய சிவனடியாரின் பெருமை:-

திருவாரூர் ஞானப்பிரகாசர், சீர்காழி கண்ணுடைய வள்ளலார், திருவாவடுதுறை அம்பலவாண தேசிகர், சடையப்ப வள்ளல், கஞ்சனூர் கரைக்குடையான், சேந்தனார், ஔவையார், ஆனைப்பாக்க முடையான், திருக்கண்ணபுரம் முனையதரையன், காளமேகப் புலவர், தேவூர் வேள், பொய்யாமொழியார், அனதாரி, அம்பற் கிழான், இரட்டையர்கள், வேளூர்க் கிழான், திருவெண்காடர், சத்தி முற்றப் புலவர், ஒட்டக் கூத்தர், புங்கனூர்க் கிழவன், சேக்கிழார், குடிதாங்கி, திருவேங்கடநாதர், வைத்தியநாத தேசிகர், புத்தூர்வேள், பெருமங்கல முடையான், புத்தமித்திரன் -- முதலிய பல துறைப் பெரியோர்களின் சிறப்புப் பெருமை - முதலிய செய்திகள் இந்நூலுள் கூறப்பட்டுள்ளன -- அதாவது, சோழநாடு தொடர்பான செய்திகள் தொகுத்துத் தரப்பெற்றுள்ளன. ஆசிரியர் காலம்:1650 - 1728.

பாண்டி மண்டல சதகம்

ஆ - ஐயம் பெருமாள். பாண்டிய நாடு தொடர்பான சிறப்புச் செய்திகளின் தொகுப்பாகும் இந்நூல். இந்நூலிலுள்ள செய்திகள் வருக: -

சோமசுந்தரர் மதுரையில் நிகழ்த்திய 64 திருவிளையாடல்களுள் சில திருவிளையாடல்கள் - பாண்டியநாட்டுச்சிவனடியார்கள்,புலவர்கள், பெரியோர்கள் ஆகியோரின் சிறப்புகள் - தஞ்சைவாணன் கோவை கொண்ட செய்தி, கருமாணிக்கன் கப்பல் கோவை கொண்ட செய்தி— திருமாலிருஞ்சோலை முதலிய வைணவத் திருப்பதிகளின் சிறப்பு - மதுரை, கழுகுமலை, திருக்குற்றாலம் முதலிய சைவத் திருப்பதிகளின் பெருமை - முதலியன இந்நூலுள் கூறப்பட்டுள்ளன.

பாண்டிய நாட்டு எல்லை பின்வருமாறு அறிவிக்கப்பட்டுள்ளது - தென்குமரிக்கு வடக்கு-வெள்ளாற்றுக்குத் தெற்கு-திண்டுக்கல்லுக்கும் காரைக்காட்டுக்கும் கிழக்கு - சேதுவின் மேற்கு - என்னும் செய்தி 98 - ஆம் பாடலில் தரப்பட்டுள்ளது.

மற்றும் ஒரு செய்தி: பாண்டிய மன்னன் ஒருவன் கேட்டுக் கொண்டதனால், தொண்டை நாட்டு மன்னன் தொண்டைமான், தொண்டை நாட்டிலிருந்து நாற்பத்தெண்ணாயிரம் குடிகளைப் பாண்டிய நாட்டிற்கு அனுப்பி வைத்தானாம். இவர்களே பாண்டிய மண்டலத்திலுள்ள தொண்டை மண்டல வேளாளர்களாம் - இச்செய்தி 9ஆம் பாடலில் அறிவிக்கப்பட்டுள்ளது. உத்தர கோசம் என்னும் பகுதியில் மங்கல வேளாளர் குடி மிகுதி என்னும் செய்தி 12 ஆம் பாடலில் தெரிவிக்கப்பட்டுள்ளது.

இவ்வளவு செய்திகளின் தொகுப்பே பாண்டி மண்டல சதகம் ஆகும்.

## தமிழ் நாட்டுப் பாடல்கள்
## நாடோடிப் பாடல்கள்

எல்லா மொழிகளிலும் நாட்டுப் பாடல்கள் உண்டு. இவற்றை வட்டாரப்பாடல்கள் என்றும் கூறலாம். ஒவ்வொரு வட்டாரத்திலும் அவ்வவ்விடச் சூழ் நிலைக்கு ஏற்ற பாடல்கள் இருக்கும். ஒரு வட்டாரப் பாடல்கள் இன்னொரு வட்டாரத்தார்க்குத் தெரியாமல் இருக்கலாம்.

தமிழ்ப் பெரு நாட்டுக்குள்ளேயே பல சிறு சிறு நாடுகள் உள. நாடுகள் தோறும் செல்லுவோர் பொதுவாகப் பாடும் பாடல்களை நாடோடிப் பாடல்கள் எனலாம்.

நாட்டுப் பாடல்களுள் - நாடோடிப் பாடல்களுள் பல எழுதப்படாமல், வாய் வழியாகச் சொல்லச் செவி வழியாகக் கேட்டு வருபவையாகும் - எழுத்தறிவில்லாத - படிப்பறிவு இல்லாத எளிய மக்களும் இவற்றைப் பாடுவது உண்டு. ஆண்கள் பாடாத - பெண்கள் பாடுகின்ற - பாட்டிமார்கள் பாடுகின்ற நாட்டுப்பாடல்கள் பல உண்டு. யான் 'கெடிலக் கரை நாகரிகம்' என்னும் நூலில், தென்னார்க்காடு மாவட்ட நாட்டுப் பாடல்கள் பலவற்றைத் தந்துள்ளேன். அவற்றுள் பெரும்பாலானவை, என் அன்னை-மனைவி-மாமியார் முதலியோர் வாய்க் கேட்டறிந்தவையாகும்.

விளையாட்டுப் பாடல்கள், தொழில் பாடல்கள், தாலாட்டுப் பாடல்கள், ஒப்பாரிப் பாடல்கள், கதைப்பாடல்கள், உழவுப் பாடல்கள், ஏற்றப் பாடல்கள், கடவுட் பாடல்கள், நீதிப் பாடல்கள், வாழ்க்கைப் பாடல்கள் முதலிய பாடல்களை இவ்வகைக்குள் அடக்கலாம்.

எழுத்து அறியாதவர்களுள்ளும் கற்றவர்கள் உளர். எழுத்து கண்டு பிடிக்காத காலத்தில், மக்சள் வாய் வழி – செவி வழியாகவே பாடல்கள் கூறியும் கேட்டும் கல்வி கற்று வந்தனர். இன்றும், ஆப்பிரிக்கக் கண்டத்தின் சில பகுதிகளில், எழுத்தறிவு பெறாத மக்கள், எழுத்து கண்டு பிடிக்காத மொழி பேசும் மக்கள், வாய்வழி – செவி வழியாகவே கல்விபெற்று வருகின்றனராம். எழுத்துகளைப் பார்த்துப் படிக்கும் கல்வி, காதால் கேட்டுத் தெரிந்துகொள்ளும் கேள்விக் கல்வி என்னும் இரண்டனுள், கேள்விக் கல்வியே முந்தியது; எழுத்துக் கல்வி பிந்தியதே.

‘கற்றல் கேட்டல் உடையார் பெரியார்’ – ஞான சம்பந்தரின் தேவாரப் பாடல் பகுதி. ‘கேள்வியும் கல்வியாகும்’ – திவாகர நிகண்டு நூற்பா, திருக்குறளில் கேள்வி என்னும் தலைப்பில் பத்துப் பாடல்கள் உள. ‘கற்றிலனாயினும் கேட்க’ என்கிறார் வள்ளுவர்.

நாட்டுப் பாடல்கட்கும் நாடோடிப் பாடல்கட்கும் கேள்விப் பெருமை உண்டு. கிரேக்க அறிஞர் ஃஹோமர் (Homer) என்பவரின் ‘இலியத்’ (Iliad), ஒடிசி (Odyssey) என்னும் காவியங்கள், பண்டைக்கால நாட்டுப் பாடல்களின் ஓரளவு தொகுப்பு என்று கூறுவதுண்டு.

இந்தக் காலத்தில் எழுத்து கண்டு பிடித்து எழுதுவதால், இதுவரையும் ஏட்டில் எழுதாதிருந்த கவிதைகளும் இப்போது ஏட்டில் எழுதப்படுகின்றன – அச்சிடப்படுகின்றன. அங்ஙனம் உள்ள சில நூல்தொகுப்புகளை இனிக் காண்பாம்.

நாடோடி இலக்கியம் (1944)

கட்டுரை விளக்கத்துடன் பாடல்கள் தரப்பெற்றுள்ளன. தொகுப்பு: கி.வா.சகந்நாதன். வெளியீடு; கலைமகள் காரி

யாலயம், சென்னை, முதல் பதிப்பு: 1944. இரண்டாம் பதிப்பு: 1955.

பொருளடக்கம்

முகப்பு:1.இயற்கைப்பாட்டு, 2.பாட்டி கதையும் பாட்டும். ஏற்றப் பாட்டு:3.ஏற்றக்காரன் காதல், 4.கிராம பாணம், 5.சமரசப் பாட்டு, 6.கதம்பம், 7.'எப்போ மழை பெய்யும்', 8.மலர் பறிக்கும் பெண், 9.புத்திர பாக்கியம்.

மலர் மாலை: 10. பொங்கல் பாட்டு, 11.வீரமுள்ள வீராயி, 12.தவளையின் புலம்பல், 13.முள்ளுமுனை, 14.அரிசிக்காரன், 15.மாட்டேன், 16.சிரிப்பு மூட்டும் பாடல்கள். 17.இங்கிலீஷ் கலந்த பாடல்கள், 18.முத்து வீராயி காதல், 19.பரதேசியின் உபதேசம், 20.படகுக்காரன் பாட்டு, 21.சங்கடங்கள், 22. சாலையிலே காதல், 23.குருவியின் கல்யாணம், 24. வாடிய உள்ளம், 25,கோமாளிப் பாட்டு, 26.மலரும் உள்ளமும், 27.அடி பட்ட நாய், 28.கள்ளக் காதல், 29.மாரியம்மன் பாட்டு.

இந்தத் தலைப்புகளைப் பார்க்கும்போதே சுவையா யுள்ளது. பாடல்களை இசையுடன் படித்தால் எவ்வளவோ சுவையாயிருக்கு மல்லவா?

மலை யருவி (1959)

(நாடோடிப் பாடல்கள்)

'தெம்மாங்கு' முதல் 'பல கதம்பம்' வரை பல தலைப்பு களில் பாடல்கள் உள்ளன.16-4-58என்னும் நாளிட்ட கி.வா. சகந்நாதனின் விரிவான முகவுரை உள்ளது.117 பக்கம் கொண்ட ஆராய்ச்சி உரையும் உள்ளது. தமிழக அரசின் ஓலைச்சுவடி நூல்நிலைய (M.G.O.S.) வெளியீடு இது. ஆண்டு 1959.இந்நூற் பாடல்கள் தெம்மாங்கு வகையைச் சேர்ந்தவை.

சென்னை மாவட்ட ஆட்சியாளராய் (கலெக்டராய்) இருந்த பர்சி மக்வீன் என்பவர், வரிக்கு இத்தனை அணா எனத்தந்து மலைப் பக்கத் தோட்டத் தொழிலாளரிடமிருந்து பாடல்களைத் திரட்டினார். சில பாடல்களை ஆங்கிலத்தில் பெயர்த்தார். இயற்கைப் பாடல்கள் கட்டுக்கு அடங்காதவை

யாதலின், மலையருவிக்கு ஒப்பிடப்பட்டு, மலையருவி என்னும் பெயர் தரப்பட்டன. மலையருவியைப் பார்த்தால் போதாது; அதில் குளித்துத் திளைக்க வேண்டும் - பாடல்களைப் படித்துச் சுவைக்க வேண்டும்.

இப்பாடலுள் சில, சென்னைப் பல்கலைக் கழகத்திற்கு நன்கொடையாகத் தரப்பட்டன; எனவே, இத் தொகுப்பு, தஞ்சை-சரசுவதி மகாலைச் சேர்ந்த தன்று-என்னும் குறிப்பு நூலின் முன்னுரையில் தரப்பட்டுள்ளது.

நாடோடிப் பாடல்கள் (1959)

தொகுப்பு: ஆர். அய்யாசாமி. வெளியீடு: அருணோதயம், சென்னை - 14. ஆதரவு: தென்மொழிகளின் புத்தக டிரஸ்ட். மாருதி பிரஸ், சென்னை - 14. செப்டம்பர் 1959.

இத்தொகுப்பில் 'காப்பு' முதல் 'பாம்புப் பாடல்' வரை 26 தொகுப்புகள் உள்ளன. முறையே அவை வருமாறு: -

| | |
|---|---|
| 1. காப்பு | 14. பொழுது போக்கு |
| 2. தாலாட்டு | 15. வில்லுப் பாட்டு |
| 3. விளையாட்டு | 16. கும்மிப் பாட்டு |
| 4. காதலும் கல்யாணமும் | 17. சின்னி பொம்மை கதை |
| 5. செம்பிடி கரும்பிடி | 18. வழிபாடு |
| 6. உழவும் தொழிலும் | 19. காவடிப் பாடல் |
| 7. வண்டிக்காரர் பாடல் | 20. கன்னிமார் பூசை |
| 8. துணி வெளுப்போர்பாடல் | 21. விளக்குக் கேள்விப்பாடல் |
| 9. சாலை அமைப்போர்பாடல் | 22. மழைக் காஞ்சிப் பாடல் |
| 10. சாந்து இடிப்போர்பாடல் | 23. பூ நோன்புப் பாடல் |
| 11. மீனவர் பாடல் | 24. கோலாட்ட ஜவந்தரை |
| 12. துறைமுகத்தொழிலாளர் பாடல் | 25. விளக்குப் பாடல் |
| 13. நகைச் சுவைப்பாடல் | 26. பாம்புப் பாடல் |

தலைப்புகளைப் பார்க்கும்போதே, பாடல்களைப் படிக்க

வேண்டும் என்ற அவா தோன்றுகின்ற தல்லவா-சில தலைப்பு கட்கு உள் தலைப்புகளும் உள்ளன.

ஏட்டில் எழுதாக் கவிதைகள்(1959)

நூலின் தலைப்பிலிருந்தே, இப்பாடல்கள் நீண்ட காலம் எழுதாமலேயே வாய் வழியாகப் பாடப்பட்டும் செவி வழியாகக் கேட்கப்பட்டும் வந்தன - இப்போதே எழுத்துருவம் பெற்று அச்சிட்டு வெளியிடப்பட்டுள்ளன - என்பது விளங்கும்.

தொகுப்பு - உரை விளக்கம் செ. அன்ன காமு, காந்தி கிராமம் (சர்வோதயப் பிரசுராலயம், தஞ்சாவூர்). முதல் பதிப்பு: சூலை,1959.

பாடல்கள்-நாட்டுப் பாடல்கள்-நாடோடிப் பாடல்கள் - சிறப்பாக மதுரைப் பக்கப் பாடல்கள். நூலுள் 'தலைவாசல்' முதல் 'மங்களம்' ஈறாக 17 தலைப்புகள் உள்ளன. முறையே அவை வருமாறு:—

1. தலைவாசல்
2. பாடிப் பரவசம் அடைவோம்
3. கடவுள் துதி
4. மழை
5. நாட்டுச் சிறப்பு
6. பிறப்பு வளர்ப்பு
7. குழந்தைகளின் விளையாட்டு
8. திருமணம்
9. தொழில் பாட்டுகள்
10. நவீனம்
11. களியாட்டங்கள்
12. கதைப் பாட்டுகள்
13. வாழ்க்கையில் சோதனைகள்
14. அழகு விழாக்கள்
15. வேதாந்தப் பாடல்கள்
16. ஆதிவாசிப் பாடல்கள்
17. முடிவுரை: மங்களம்.

இந்த அமைப்பு பொருத்தமாயுள்ளது. முதல் தலைப்பு 'தலைவாசல்' என்பது; தலைவாசலால் தானே உள்ளே போக வேண்டும். இறுதித் தலைப்பு 'மங்களம்' என்பது. முடிவில் 'மங்களம்' பாடுவார்களே. ஒரு செயல் முடிந்ததற்கும் 'மங்களம் பாடியாயிற்று' என்றுபெயர் வழங்குவார்களே!

இந்நூல் பாடல்கள், எளிய நடையில்-மக்கள் நடையில் - கிராமிய நடையில் சுவையாய் அமைந்துள்ளன. தொகுப்பாசிரியரே உரை விளக்கமும் தந்துள்ளார்.

தமிழர்-நாட்டுப் பாடல்கள் (1964)

தொகுப்பு: நா. வானமாமலை. வெளியீடு: நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட்லிமிடெட், சென்னை-2. ஜீவா அச்சகம், சென்னை-14. பதிப்பாண்டு 1964.

தெய்வங்கள், தாலாட்டு, விளையாட்டுகள், காதல், திருமணம், குடும்பம், சமூகம், உழைப்பும் தொழிலும், ஒப்பாரி -என்னும் தலைப்புகளில் நாட்டுப் பாடல்கள் உள்ளன.

இந்தப் பாடல்களைத் திரட்டித்தந்தவர்கள்: எஸ்.எஸ். போத்தையா, எஸ்.எம். கார்க்கி, கவிஞர் சடையப்பன், கு. சின்னப்ப பாரதி, வாழப்பாடி சந்திரன், எம்.பி.எம். ராஜவேலு, குமாரி பி. சொரணம்.

இவற்றைத் தொகுத்த வானமாமலை, 28 பக்கங்கள் கொண்ட நீளமான முன்னுரை எழுதியுள்ளார்.

நாடோடிப் பாடல்கள்

கி.வா.ஜ. தொகுத்தது. தமிழ் நாட்டின் இயற்கை எழிலையும் இயற்கை உணர்ச்சியையும் எடுத்துக்காட்டுவன. காதல், வீரம், கோபம், சிரிப்பு, குழந்தையுள்ளம் - முதலியவை பற்றியன-மானேஜர், கலைமகள், மயிலாப்பூர்—

என ஒரு புத்தக விளம்பரத்தில் அறிவிக்கப்பட்டுள்ளது. கி.வா.ஜ. தொகுத்ததாக முன் ஒரு நூல் கூறப்பட்டுள்ளதே- அதே நூல் தானோ இது - அல்லது - இது வேறு தனித் தொகுப்போ-தெரியவில்லை.

நாடோடிப் பாடல்கள்

இது, தமிழக அரசு ஓலைச் சுவடி நூலகத்தில் உள்ளது. இதன் சுவடி எண்: R.3401.

இத்தொகுப்பில், 'தில்லே லேலோ' என்று தொடங்கும் பாடல் தொடர்ச்சியும், 'முத்து வீராயி' என்று முடியும் பாடல்

தொடர்ச்சியுமாக இரண்டு தொடர் நாடோடிப் பாடல்கள் உள்ளன.

கல்லாத சிற்றூர் மக்கள், மாடுமேய்த்தல் போன்ற தொழில் செய்தபோது துன்பம் மறந்து பாடிய பாடல்களாகத் தோன்று கின்றன. இப்பாடல்களைப் படிக்கப் படிக்க, உள்ளத்தில் எழுச்சியும், ஊக்கமும் இனிமையுணர்வும் உண்டாகும். இப் பாடல்களால் அந்தக்கால மக்களின் நிலையைப் புரிந்து கொள்ளலாம். இந்த நூலின் மாதிரிக்காக முதல் பாட்டு பின் வருமாறு:—

''தில்லாலே லேலோ தன்னனே யேசிமிக்கி
தில்லாலே லேலோ
ஆனைமுகக்(ற்)கினிய ஆறுமுகனே ஐயாவுனைச் சரணம்
ஆண்டவனே சரண மென்றேன்-தில்லே லேலோ (1)
நானு நடந்திருப்பேன் நடப்பாரைப் பார்த்திருப்பேன்
சாமி நடையைப் போல செய்கையிலே
நான் காணேன் தன்னானே தானே தன்ன (2)
காடை கூடு கக்கத்திலே கருத்த சாமி பக்கத்திலே
மாடப்புறாஞ் செடுக்கரையுண்டோ வுன்னிடத்தில்
(தன்னானே)-(3)

இவ்வாறாக இன்னும் பல நாடோடிப் பாடல்கள் இருக்க லாம். அவற்றைத் தேடிக்கொணர்ந்து, பல நூல்களாகப் பெயரிட்டுத் தொகுத்து மக்கட்கு வழங்கிச் சுவைத்துப் பயன் பெறச் செய்யவேண்டியது அறிஞர்களின் கடமையாகும்.

## தனிப் பாடல் திரட்டுகள்

அகநானூறு, நற்றிணை, குறுந்தொகை, புறநானூறு முதலிய கழக இலக்கியங்கள், இரண்டாயிரம் - மூவாயிரம் ஆண்டுகட்கு முன் பலரால் இயற்றப்பெற்ற உதிரித் தனிப் பாடல்களின் திரட்டுகள் ஆகும். வெள்ள நீர் வீணாகாமல் அணைகளில் தேக்கி வைப்பதைப்போல், உதிரிப் பூக்கள் வீணாகாமல் மாலையாகத் தொடுத்துப் பயன்படுத்துவது போல், உதிரித் தனிப் பாடல்கள் சிதைந்து காணாமல் போகாதபடி, கிடைத்த பாக்களையாவது காத்து வைப்போம்

என்று எண்ணித் திரட்டு என்னும் அணைக்குள் தேக்கி வைத்த வர்-மாலை என்னும் தொடைக்குள் தொடுத்து வைத்தனர் நம்முன்னோர்கள்.

கழக காலத்தைத் தொடர்ந்தாற் போன்ற அடுத்த காலத்தில் தோன்றிய தனிப் பாடல்களும் இடைக்காலத்தில் தோன்றிய பாடல்களும் பிற்காலத்தில் தோன்றிய பாடல்களும் தொடுக்காத மணிகளாய் இறைந்து உருண்டு கிடந்தன. அவற்றுள் மறைந்தனபோக, கிடைத்த பாடல்களை அறிஞர்கள் சிலர் 'தனிப் பாடல் திரட்டு' என்னும் பெயரில் தொகுத்து வைத்தனர்.

சிலர் சில பாடல்களைத் தொகுத்தனர். அவைபோக மேலும் பல உதிரிப் பாடல்கள் கிடைத்தன. பின் வந்தவர்கள் அவற்றைத் தொகுத்தனர். இவ்வாறு காலத்துக்குக் காலம் கிடைத்துக்கொண்டிருந்த உதிரித் தனிப் பாடல்கள் பற்பல திரட்டுகளாகத் தொகுக்கப்பட்டன. இவ்வறாகத் 'தனிப் பாடல் திரட்டு' என்னும் பெயரில் பல தொகை நூல்கள் உள்ளன. அவற்றைக்காணலாம்:

தனிப் பாடல்திரட்டு – 1873

அச்சிட்ட ஆண்டு – 1873. இது, தில்லையம் பூதூர் சந்திர சேகர கவிராச பண்டிதர் & காஞ்சி கச்சபாலய அய்யர் ஆய்ந்து வெளியிட்ட பதிப்புக்கு இணங்க, பொன்னுசாமித் தேவர் ஒப்புதலின்படி, வா.வரதராசுலு நாயுடு அவர்களால் காஞ்சிபுரம் இயற்றமிழ் விளக்க அச்சுக் கூடத்தில் அச்சிடப் பட்டது. பக்கம்-1291. மொத்தப் பாடல்கள்-1172.

இதில், காளமேகப் புலவரின் 187 பாடல்கள், ஔவையார் பாடல்கள் 69, வள்ளுவர் முதல் பலர் பாடிய பாடல்கள் சில, வள்ளுவர் 17, கம்பர் 76, ஒட்டக் கூத்தர், 38 அந்தகக் கவி வீர ராகவ முதலியார் இருபதிற்குமேல், பல பட்டடைச் சொக்க நாதர் 66 – இவ்வாறு பலர் பாடிய 1172 பாடல்கள் உள்ளன.

மற்றும் ஒரு பதிப்பு

மேற்கூறிய திரட்டு 1877 ஆம் ஆண்டில் மற்றும் ஒரு

பதிப்பு பெற்றுள்ளது. ஆய்வு: தில்லையம் பூர்ச் சந்திர சேகர கவிராச பண்டிதர். அச்சு: சென்னை கலா ரத்நாகர அச்சகம். ஈசுவர–கார்த்திகை – 1877.

மருதப்ப தேவர் தனிப் பாடல் திரட்டு

தொ – முத்து வீரக் கவிராயர், புளியங்குடி. சிந்தாமணி அச்சியந்திர சாலை. 1884 ஆம் ஆண்டு. ஊற்றுமலை சமீன்தார் இருதாலய மருதப்ப தேவர் மீது பலர் பாடிய தனிப்பாடல்களின் தொகுப்பு இது.

தனிப்பாடல் திரட்டு – 1873

சி. திரு வேங்கடமுதலியார் வெளியீடு –சூளை, சென்னை– 1873, – மே திங்கள்.

தனிப்பாடல் திரட்டு – 1884

ஆறுமுக சுவாமி வெளியீடு – அச்சு: திருவெண்காடு பரப்பிரம்ம முத்திராட்சர சாலை – 1884 – மொத்தப் பாடல்கள் – பலர் பாடியவை – 1291.

தனிப்பாடல் திரட்டு – 1884

வெளியீடு: டி.இ. பரசுராம முதலியார் - அச்சு: பரப்பிரம்ம அச்சியந்தர சாலை, சென்னை – அக்டோபர், 1884.

தனிப்பாடல் திரட்டு – 1887

வெளியீடு: மயிலம் சுப்பிர மணிய சுவாமி & சு.முனிசாமி முதலியார். அச்சு: மாதவ நிவாச அச்சுக்கூடம். ஆண்டு: 1887. மொத்தப் பாடல்கள் – 1291.

தனிப்பாடல் திரட்டு – 1892

சேற்றூர் சமத்தானம் சுந்தரதாச பாண்டிய மகா ராசா இயற்றிய பாடல்கட்குப் பலர் பாடியளித்த சாத்துக் கவிகளின் தொகுப்பு. வெளியீடு: இராமநாதபுரம் சமத்தானம் பாஸ்கர சேதுபதி மகாராசா விருப்பப்படி, சிங்கம்பட்டி சமத்தானம் சிவ சுப்பிரமணிய பாண்டிய மகாராசாவால், மதுரை–பாண்டியன் பிரசில் அச்சிட்டு வெளியிடப் பட்டது. ஆண்டு -1892. இது ஒரு சிறு நூல்.

தனிப்பாடல் திரட்டு

பல ஊர்கள் மேலும் பல பொருள்கள் பற்றியும் பலர் பாடிய பல்வகைப் பாக்களின் தொகுப்பு. இந்நூலின் முதல் பக்கம் இல்லாமையால், வெளியீடு-அச்சகம்-ஆண்டு முதலியன அறியப்பட வில்லை.

திருத்தணிகை வண்ண மஞ்சரி – 1894

ஆ-காஞ்சி நாகலிங்க முனிவர். சென்னை நிகேதன அச்சி யந்திர சாலை. ஜய-ஆவணி. 1894. தணிகை இறைவன் மீது பாடப்பெற்ற 30 வண்ணப் பாக்களின் தொகுப்பு. பலர் சாத்து கவிகள் அளித்துள்ளனர்.

தனிப் பாடல்கள் – 1894

ஆசிரியர் ஆ. வள்ளிநாயகம் பிள்ளை-ஆசிரியர் வழிபாடாகப் பல காலம் பாடிய பல பாடல்கள். கலா ரத்நாகர அச்சுக் கூடம், சென்னை-1894-சிறு நூல்.

விகடப் பலபாடல் திரட்டு – 1900

இதில், சென்னை 'மகா விகட தூதன்' என்னும் இதழில் அவ்வப்போது வெளிவந்த விகடப் பாடல்கள் தொகுக்கப்பட் டுள்ளன. உலகியல் சீர்கேடு பற்றிய நையாண்டிப் பாடல்கள், விகட வெற்றி வேற்கை, விகட உலக நீதி, செகசால சித்தர் பாடல், விகட விவேக சிந்தாமணி முதலிய பல வகைப் பாடல்கள் இத்தொகுப்பில் இடம் பெற்றுள்ளன. தொகுப்பு ஏ.எப். சைமன், சென்னை. விக்டர் பிரஸ் – ஆண்டு 1900.

தனிப் பாடல் திரட்டு 1905 – 1907
முதல் பாகம்

காளமேகப் புலவர் முதல், வள்ளுவர்-ஔவையார்-கம்பர் முதலியோர் உட்பட – பல பட்டடைச் சொக்கநாதப் புலவர் ஈறாக உள்ள 29 புலவர்களின் பாடல்களின் தொகுப்பு இது. மொத்தச் செய்யுள் 743. இதற்கு மகாவித்துவான் கா. இராம சாமிநாயுடு உரை எழுதியுள்ளார். பத்மநாப விலாசம் பிரஸ், சென்னை-1905 ஆம் ஆண்டு.

இரண்டாம் பாகம்: மகாவித்துவான் கா. இராமசாமி நாயுடுவே, பிற்காலப் புலவர்கள் பலர் பாடிய 850 பாடல் களைத் தொகுத்து உரை எழுதி வெளியிட்டுள்ளார். வைத்திய ரத்நாகரம் பிரஸ், சென்னை - ஆண்டு 1907. இரண்டாம் பதிப்பு-1913.

தனிப்பாடல் திரட்டு - 1905

மயிலம் சுப்பிரமணியசுவாமி பார்வை - பொன்னுசாமித் தேவர் ஒப்புதல் - காளமேகம் முதலிய பலர் பாடல்கள் - மொத்தச் செய்யுள் 1291. பத்மநாப விலாச அச்சுக் கூடம், சென்னை. ஆண்டு 1905.

தனிச் செய்யுள் சிந்தாமணி - 1(1908)

இதில், 182 புலவர்கள் பாடிய 3815 பாடல்கள் தொகுக்கப் பட்டுள்ளன. ஆசிரியரின் வரலாற்றுக் குறிப்பு தரப்பெற் றுள்ளது. பழ.சி.சண்முகம் செட்டியாரின் வேண்டுகோளின் படி, மு.ரா. கந்தசாமி கவிராயர் தொகுத்தது இது. ஆண்டு 1908.

தனிச் செய்யுள் சிந்தாமணி-2

இதில், 154 புலவர்கள் பாடிய 2850 பாடல்கள் உள்ளன கலா ரத்நாகரம் அச்சுக் கூடம், சென்னை.

தனிச் செய்யுள் சிந்தாமணி - 3

கொட்டாம்பட்டி கருப்பையா பாவலர், முத்து ராமலிங்கத் தேவர் முதலிய பலர் பாடல்களின் திரட்டு. புஷ்பரதச் செட்டி யார் பிரஸ், சென்னை - 1.

தனிச் செய்யுள் சிந்தாமணி-4

மு.ரா. கந்தசாமி கவிராயர், உ.வே. சாமிநாத ஐயர், ரா. இராகவையங்கார் முதலியோரின் பாடல்களின் தொகுப்பு. விவேக பானு யந்திர சாலை - மதுரை.

தனிப் பாடல் திரட்டு (?)

காளமேகம் முதலியோர் பாடல்கள் - மொத்தச் செய்யுள் 1248. முதல் புத்தகம். முதல் பக்கம் இல்லாமையால், பதிப்பா ளர் - அச்சுக்கூடம் - ஆண்டு முதலியன அறியப்படவில்லை.

வ.உ.சி. பாடல் திரட்டு (1915)

வ.உ. சிதம்பரனார் இயற்றிய தனிப்பாடல்களின் திரட்டு இது. அச்சு: இந்தியா பிரிண்டிங் வொர்க்ஸ், சென்னை, 1915. இது இரண்டு பாகமாக உள்ளது. முதல் பாகம், இவர் சிறை செல்வதற்கு முன் இயற்றிய 97 பாடல்களின் திரட்டாகும். இரண்டாம் பாகம், சிறையில் இருந்த போது இயற்றிய 284 பாக்களின் திரட்டாகும். ஆகமொத்தம் 381 பாடல்கள். இவற்றுள், நூறு (100) பாடல்கள் கடவுள் பற்றியவை. வேறு நூறு (100) பாடல்கள் ஒழுக்கம் பற்றியவை. 181 பாடல்கள் சுற்றத்தார்க்கும் நண்பர்கட்கும் எழுதியவை.

ஆசிரியர் தம் முன்னுரையில், தாம் இருந்த சிறை நிலைமை பற்றியும், தம் சிறை வாழ்க்கை நிலைமை பற்றியும் எழுதியுள் ளார்.

தனிப் பாடல் திரட்டு(1921 – 1)

முதல் பாகம். காளமேகம் முதல் பல பட்டடைச் சொக்க நாதப் புலவர் ஈறாக உள்ள முப்பது புலவர்கள் பாடிய 839 பாடல்களின் தொகுப்பு இது. உரை: காஞ்சி இராமசாமி நாயுடு. ஆண்டு 1921. பின்வரும் மூன்று அச்சுக்கூடங்களில் அச்சிடப் பெற்றது:- (1) பெரியநாயகியம்மன் அச்சுக் கூடம், (2) சன் ஆப் இந்தியா அச்சுக்கூடம், (3) மதராஸ் என்.சி. கோல்டன் எலெக்டிரிக் அச்சியந்திர சாலை – சென்னை.

தனிப் பாடல் திரட்டு( 1921–2)

இரண்டாம் பாகம். பல புலவர்கள் பாடியவை. உரை: கா. இராமசாமி நாயுடு. சென்னை வித்தியா ரத்நாகர அச்சுக் கூடம் – ஆண்டு – 1921. இதன் முதல் பாகம் கா. இராமசாமி நாயுடு உரையுடன் சென்னை பத்மநாப விலாசம் பிரசில் 1905 ஆம் ஆண்டு அச்சிடப்பட்டது. இந்த இரண்டாம் பாகம் சென்னை வைத்திய ரத்நாகரம் பிரசில் 1907 ஆம் ஆண்டு முன் ஒரு முறை அச்சாகி வெளிவந்துள்ளது.

தனிப் பாடல் திரட்டு

கம்பர், காளமேகம் முதலியோரின் தனிப் பாடல்களை இராமநாதபுரம் சமத்தானம் பொன்னுசாமித் தேவர் தொகுத்து வெளியிட்டது. மற்ற விவரம் தெரியவில்லை.

தனிப் பாடல் திரட்டு (1939)

தொகுப்பு – கா. சுப்பிரமணியப்பிள்ளை. இரண்டு பகுதிகளாக 1939-இல் வெளியிடப்பட்டது. முதல் பகுதியில் 35 முற்காலப் புலவர்கள் இயற்றிய 850 பாடல்கள் உள்ளன. இரண்டாம் பகுதியில் 57 பிற்காலப் புலவர்கள் இயற்றிய 433 பாடல்கள் இடம்பெற்றுள்ளன. கா. சுப்பிரமணியப் பிள்ளை விரிவாக உரை எழுதியுள்ளார்.

தனிக் கவித் திரட்டு (1939)

வெள்ளக் கால் சுப்பிரமணிய முதலியார் பல நேரங்களில் எழுதிய 343 பாடல்களின் திரட்டு இது. இதற்கு அவரது குறிப்புரையும் உண்டு. இதன் உரிமை, உ.வே. சாமிநாதஐயர். முகவுரை: பண்டிதமணி மு. கதிரேசச் செட்டியார். பதிப்பாசிரியர் கு. அருணாசலக் கவுண்டர், நெல்லை, வெளியீடு: சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை. ஹிலால் பிரஸ், திருநெல்வேலி. ஆண்டு 1939.

தனிப் பாடல் திரட்டு (1950)

இதில், சீர்காழி அருணாசலக் கவிராயர் முதல் கயத்தாற்றரசன் வரையுள்ள 57 புலவர்களின் பாடல்களும், மேலும் பெயர் அறிவிக்கப்படாத புலவர் பலர் பாடிய 433 பாடல்களும் ஆக, மொத்தம் 865 பாடல்கள் உள்ளன. கா. சுப்பிரமணியப் பிள்ளையின் உரை உடையது. சென்னை B. இரத்தினநாயகர் சன்ஸ் அச்சுக் கூடம். ஆண்டு 1950. இது இரண்டாம் பாகம் என அறிவிக்கப்பட்டுள்ளது.

தனிப் பாடல் திரட்டு (1953)

ஔவையார் முதல் எல்லீசு துரை வரையான 35 புலவர்களின் பாடல்களின் தொகுப்பு இது. கா.சுப்பிரமணியப் பிள்ளை உரை எழுதியுள்ளார், மொத்தப் பாடல்கள் 850. B.இரத்தின நாயகர் சன்ஸ் அச்சுக் கூடம், சென்னை. ஆண்டு 1953.

தனிப்பாடல் திரட்டு (1960)

சங்கர மூர்த்திப் புலவர் பாடல் தொடங்கிப் பல புலவர்கள் பாடிய 1057 பாடல்களின் திரட்டு இது. இதுவரை வெளிவராத பாடல்கள் பல உள. தனித்தனிப் புலவர்கள், தனித்தனி மாந்தரைப் பற்றியும் வெவ்வேறு பொருள்கள் பற்றியும் வெவ்வேறு காலங்களில் பாடியவை இவை.

பாடல்கள், தொழில் - அளவு - பாட்டு வகை - பொருள் முதலிய வற்றால் வேறு பட்டவை. இதில் இடம் பெற்றுள்ள ஊர்கட்கும் காலங்கட்கும் இடையீடு மிகுதி.

பக்தி, அறம், புறம், இடைக் காலத்தும் பிற்காலத்தும் இருந்த அரசர்கள், அமைச்சர்கள், வள்ளல்கள், புலவர்கள், பண்டைப் பழக்க வழக்கங்கள், ஒழுக்கம், ஒன்பது சுவைகள்முதலிய பொருள்கள் பற்றிப் பாடப் பட்டுள்ளன. பாடியோரும் பாடப் பட்டோரும் காலம் - இடம் - குலம் - முதலியவற்றால் வேறு பட்டவர்கள்.

பதிப்பு: தி. சந்திரசேகரன் முன்னுரை எழுதிப் பதிப்பித்துள்ளார். இது அரசு வெளியீடு. தமிழ்நாடு அரசின் ஓலைச்சுவடி-கையெழுத்துச் சுவடி நூலகத்தைச் (M.G.O.M.S – 55) சேர்ந்தது இது. பாரதி விஜயம் பிரஸ், திருவல்லிக் கேணி, சென்னை – ஆண்டு 1960. சந்திர சேகரன் முன்னுரை நாள்: 2. 3. 60.

தமிழ்நாடு ஓலைச் சுவடி-கையெழுத்துச் சுவடி நூல் நிலையத்திலிருந்து குறிப்பெடுத்த நூல்கள் சில பின்வருமாறு:-

தனிப் பாடல் திரட்டு

பலர் பாடிய தனிக் கவிதை, துதி, சிலேடை, அச்சிடாத பல பாடல்கள், கீர்த்தனைகள் உள.

த.பா.தி.

பல தலைப்புகளில் பல பாடல்கள், தலைப்பில்லாத பல பாடல்கள், 'கனக நற்சபை வாசனே' என்று முடியும் 9 பாடல்கள், மீனாட்சி சுந்தர நாவலர் பற்றிய பாடல், அட்ட நாக பந்தம், கமல பந்தம், இரத பந்தம், இடமணித்து என்றல்,

நிலவு வெளிப்பட வருந்தல், தலைவன் கருத்தைத் தலைவிக்கு உரைத்தல், வினாவுத்தரம், திரு விடைக்கழி முருகன் நோட்டு, திருவாவடுதுறை சுப்பிரமணிய அடிகளார் பேரில் மீனாட்சி சுந்தரம் பாடிய நோட்டு முதலிய நோட்டுகள்-இத் தொகுப்பில் உள்ளன.

த.பா. திரட்டுகள் ஆறு

(1) சில தனிப்பாடல்கள், (2) கோவை போன்ற சில பாடல்கள், (3) பல தனிப்பாடல்கள், (4) சிறுவர் படிக்கும் சில்லறைப் பாட்டுகள் சில, (5)சில தனிப் பாடல்களும் கீர்த்தனங்களும், (6) பிரபுக்கள் மீது பாடிய பல கவிதைகள் – முதலிய ஆறு நூல்கள்.

த.பா. திரட்டு

பல பாடல்கள் நிரம்பிய தொகுதி. தொடக்கத்தில் பெரிய புராணத்திற்கும் திருக்குறளுக்கும் ஒற்றுமை நயங் காட்டும் சில பாடல்கள், சிவ நாயன்மார்கட்குக் குறள் பொருத்தம் கூறும் பாடல்கள், வள்ளுவருடன் பிறந்தவர்கள் பாடிய பாக்கள், அம்பிகை-மதுரைச் சொக்க நாதர் மீது பாடிய பாக்கள், இறுதியாக – முத்து ரகுநாத சேதுபதி மீது பாடிய பாடல்கள் – ஆகியவை இத்திரட்டில் உள்ளன.

த.பா.தி.

தொண்டைமான், திருமலை ராசன், ஆகியோர் மீது பலர் பாடிய தனிக் கவிகள் – துதிக் கவிகள்.

தனிக் கவிகள்

தனித் தனிப் புலவர் பாடல்கள், பல் பொருள் பாடல்கள் அரங்கநாதப் புலவர் பாடிய வினாவுத்தரம், சீட்டுக்கவி முதலிய பாடல்கள், கம்பர் – ஒட்டக் கூத்தர் – திரு மங்கை மன்னன் முதலியோர் பாடல்கள்.

த.பா. திரட்டுகள் எட்டு

1) பல புலவர்பாடல்கள், சம்பந்தரின் திருவெழு கூற்றிருக்கை,
2) பல நூல்களிலிருந்து எடுத்த பாடல்கள் - பலதனிப்பாக்கள்,

3) தொடக்கத்தில் சுரங்கள் - பின்னர்ச் சில பாடல்கள்,
4) பல புலவர்களின் தனிப்பாடல்கள் - (அச்சுண்டு),
5) வள்ளுவரின் உடன் பிறந்தார் பாடிய பாடல்கள்,
6) சிவன் பாடிய 'கொங்கு தேர் வாழ்க்கை' முதல் பலர் பாடிய 40 செய்யுட்கள்.
7) தேர்தெடுத்து எழுதிய 22 சில்லறைப் பாடல்கள்,
8) அச்சிட்டனவும் இடாதனவு மான 13 நூல்களிலிருந்து தேர்ந்தெடுத்த 169 பாடல்கள் - ஆகிய எட்டு நூல்கள்.

திருவள்ளுவர் தனிப் பாடல்கள்

வள்ளுவர் பாடியனவாகக் கூறப்படும் தனிப்பாக்கள் - அச்சிடப்பட்டது. (மற்ற விவரங்கள் அறிய முடியவில்லை.)

த.பா.தி.

முதலிலும் இடையிலும் பிள்ளைப் பெருமாள் ஐயங்கார் கவிகள், இடையில் கரி காலனைப் பற்றிய பாடல்கள், மதுரைத் தியாகேசர் மீது 50 தாழிசைகள், ஆசிரிய விருத்தம், அருணகிரி நாதர் மீது வண்ணம், அரங்கநாதர் வண்ணம் - முதலியன.

பல வகைப் பாடல்கள்

பல வகைப் பாக்களால் பல தோத்திரங்கள், பல்வகைக் கருத்துகள், வாழ்க்கை நடை முறைகள், நீதிகள், பலதனிப் பாடல் திரட்டுகளில் உள்ள பலபாடல்கள்-அச்சிட்ட பாடல்கள்.

தனிப் பாடல் திரட்டு

பலர் பாடல்கள்: ஒழுக்க விளக்கச் செய்யுள்கள், மகளிர் வர்ணனைகள், அறிவுரைகள் உள்ளன. தொடர்ச்சியாக 239 பாடல்கள் உள்ளன. அதற்கு மேல் தொடர்பு விட்டு விட்டுப் பல பாடல்கள் உள.

தனிப் பாடல்கள்

காள மேகம் முதலியோர் பாடிய ஒன்பது பாடல்கள் உள்ளன.

பலவகைப் பாடல் திரட்டுகள் மூன்று

(1) வினாவுத்தரம்-நடுவெழுத் தலங்காரம் முதலிய தனிப்பாடல்கள், வேங்கடேசுர ரெட்டேந்திரன் மீது பாடிய பாடல்கள்,

திருமால் மீது யமகப் பாடல்கள்- (2) பல்வகைப் பாடல்கள்: சக்தி-முருக தோத்திரங்கள், திருவிளையாடல் புராணத் தோற்றம். குரு தோத்திரம்- (3)புகழேந்தி, ஒட்டக் கூத்தர், கம்பன், ஔவையார் முதலியோர் பாடல்கள். -ஆகிய மூன்று திரட்டுகள்.

பின் வருவன தனித்தனி நூல்கள்

1. பலகவித்திரட்டு, 2. பல பாடல் திரட்டு, 3. பலர் பேரில் பாடிய வண்ணம், 4. பலர்மீது பாடிய கவிகள், 5. தனிப் பாடல், 6. தனிப்பாடல் திரட்டு, 7. தனிப்பாடல், 8. பலர் மீது பாடிய வண்ணம் 9. பல திரட்டு, 10. தனிப்பாடல், 11. திரு நாள் வாகனக் கவிகள், 12. வைத்த மாநிதிப் பெருமாள் (கோவலூர்) விடுகவிதைகள், 13. வைத்த மாநிதிப் பெருமாள் வாகனக் கவிதைகள், 14. சித்திரகவிகள்,15. நானாப் பாடல்கள், 16. ஞானப் பாடல்கள்-இவை தனித்தனி நூல்கள்.

தனிப் பாடல்

பாய்ச்சனூர் என்னும் ஊரிலுள்ள அந்தணர்களை நோக்கிப் பிறப்பினாலன்றி அறிவினாலேயே சிறப்பு எனக் கூறும் பாடல்கள், விநாயகர் பாடல்கள், வேறுபாடல்கள்.

சமயோசித செய்யுட்கள்

பட்டினத்தார் முதலியோரின் வேடிக்கையான பாடல் களின் தொகுப்பு.

த.பா.திரட்டு – 1050

காளமேகம் முதலியோரின் 1050 பாடல்கள். சில அச்சிட்டவை; சில அச்சிடாதவை.

தனிப் பாடல்கள்

சரசுவதி, பழநியாண்டார், பழநிவிநாயகர் – இவர்கள்மீது பாடல்கள். மற்றும் பல மாந்தர் மீது பாடிய பாடல்கள்.

தனிப் பாடல்கள்

கடிகை முத்துப் புலவரின் காமரச மஞ்சரிப் பாடல்கள்–மேலும் சில தனிப் பாடல்கள்.

தனிப் பாடல்

அழகிய சிற்றம்பலக் கவிராயர், அவர் குமாரர் குழந்தைக்

கவிராயர் ஆகியோர் பாடல்கள், வள்ளலார் பற்றிய பாடல் கள், சிட்டுக் கவிதைகள்.

தனிப் பாடல்கள்—சிட்டுக் கவிகள்

அழகிய சிற்றம்பலக் கவிராயர், சரவணப் பெருமாள் கவிராயர், அந்தகக்கவி வீரராகவ முதலியார் –முதலியோர் பாடிய சீட்டுக் கவிதைகள்.

தனிப் பாடல்கள்

சிட்ட நாதன் பற்றி மங்கைபாகக் கவிராயர் பாடியவை- வேறு பல தனிப் பாடல்கள்.

பலர் மீது வண்ணங்கள்

பலர்மீதுபாடிய வண்ணங்கள் – திருக் கோலநாதர் வண் ணம் முதலியன.

உதாரணப் பாத் திரட்டு

யாப்பருங் கலச் காரிகை உரையில் உள்ள உதாரணப் பாடல்களின் திரட்டு.

த.பா.தி – 1000

(ஓலைச்சுவடி. நூலகஎண். 362)அரிய 1000 பாடல்களின் திரட்டு.

த.பா.தி. – 225

(எண்.363) எந் நூலிலும் இல்லாத –பலர் பாடிய 225 பாடல்கள்

பலகவித் திரட்டு

(364) கடவுள் துதிகள், சைதக் சாதி என்னும் முகமதியப் பிரபு பற்றிய பாடல்கள் – மற்றும் வேடிக்கை விநோதயான பாடல்கள் சில.

பல பாடல் திரட்டு

(367) தெய்வத் துதிகள், நரத் துதிகள், நீதி விநோதப் பாடல் கள், சிட்டுக் கவிகள், சிங்கார ரசப் பதங்கள்.

பல பாடல் திரட்டு - 300

(368) பல பிரபுக்கள் மீது பாடப்பட்ட 300 பாடல்கள்.

பலர் பேரில் பாடிய கவிகள்

(369) நயினாக் குருக்கள், நாகப்பையர் முதலிய ஐம்பதின்மர் மேல் பாடிய கும்மி - விருத்தம் முதலிய பாடல் வகைகள்.

ப.பே.பா. வண்ணம்

(370) முருகன், அம்பலவாணன், தாயுமானவர், சேதுபதி, சிவ கிரித் துரை, சடையப்பன்-மீது வண்ணப்பாடல்கள்.

ப.பே.பா. வண்ணம்

(372) இராமநாதக் கடவுள், சொக்கநாதர், சிதம்பரேசர் ஆகிய கடவுளர் மீதும், அனந்தப்பய்யர்-இராமு உடையார், நல்லண்ண உடையார் ஆகிய பிரபுக்கள் மீதும் பொய்யா மொழிக் கவிஞர் பாடிய பல சந்தக் கவிகள்.

ப.பே.பா.வண்ணம்

(371) சொக்கநாதர், காமீசர், ஆராவமுதர், வேதபுரீசர், சிதம்பரேசர், செண்டலங்காரப் பெருமாள், இராமநாதர், சுப்பிரமணியர், வேதகிரிநாதர், திருமாகறல் வீற்றிருந்த பெருமாள் - முதலிய கடவுளர் மீதும், பாண்டியன் பரராச சிங்கன், சடையப்பன் முதலியோர் மீதும் பாடிய வண்ணங்கள்.

ப.பே.பா.வண்ணம்

(373) இராமநாதர் செண்டலங்காரப் பெருமாள், சிதம்பரேசர், காமீசர், பாண்டவர் மீது பாடிய வண்ணப் பாக்கள் (பாண்டவர் வண்ணம் வேறு பிரதிகளில் இல்லாதது).

கவிச் சுவடி

(353) பிள்ளைப் பெருமாள் ஐயங்கார், ஔவையார், புகழேந்தி, கடிகை முத்துப் புலவர் - முதலியோர் பாடல்கள்.

சித்திர கவிகள்

(354) உரையுடன் சில அரிய சித்திர கவிகள்.

(356), (357) - இரண்டிலும் 20 - தனிப்பாடல்கள்.

தனிப் பாடல்

(359) வள்ளுவர், கபிலர் முதலியோர் பாடல்கள் - இடையே, 'திருவள்ளுவ நாயனார் பாவை யகவல்' என ஒன்று உள்ளது. ஆனால் அது அகவலா யில்லை - ஆனந்தக் களிப்பு போன்ற சந்தம் உடையது. இவர் எந்த வள்ளுவரோ?

தனிப்பாடல்கள்-2

(360) கபிலர் அகவல், சாதிபேதம் இல்லை என்பது, இரண்டு வெண்பாக்கள்.

தனிப்பாடல்கள் - காஞ்சி

(361) காஞ்சி கடவுளர்கள் துதிகள், ஆசாரியர் துதி பத்துப் பாடல்கள்.

பலதிறப் பாடல் திரட்டு

(2697) பலர் பாடிய அன்புச் சுவை (பக்தி ரசம்) ததும்பும் இசைப் பாடல்கள்.

பஜனைக் கீர்த்தனங்கள்

விநாயகர், அம்பிகை, மீனாம்பிகை, குருமூர்த்தி, மேலும் பலர்மீது பாடிய அன்பு ததும்பும் கீர்த்தனைகள். சில கீர்த்தனை கள் நாராயணதாசர் பெயரால் உள்ளன.

பல பாடல் திரட்டு

பல பொருள் பற்றிய பாடல்கள் - ஞான விருத்தம் என்ற தலைப்பில் சில - சில தோத்திரங்கள் - கீர்த்தனங்கள் - பதங்கள்.

ப.மே.பா.வண்ணம்

மாணிக்க அம்பலவர் முதலியோர் மீது பாடிய வண்ணப் பாடல்கள். இறுதியில் விநாயகர் துதிகளும் கலைமகள் துதி களும் உள்ளன.

பல தேவர் திரட்டு

(D.1802) தட்சணாமூர்த்தி, திரு மூல தேவர், சண்முகன் ஆகிய மூவர் மீது பாடல்கள் - பத்துப் பாடல்களே உள்ளன.

இன்னும் பல இருந்திருக்கலாம். ஓலைகள் போய் விட்டன போலும்.

J. தனிப்பாடல்

சிற்றின்பம் பற்றி ஐந்து பாடல்கள் - மீதி இல்லை.

தனிப்பாடல்

(R.428) கடவுள் தோத்திரம் 1, நம்மாழ்வார் துதி 3, திருமால் திருத்தல வெண்பா-ஆக ஐந்து பாடல்கள்.

N. தனிப்பாடல்

சிற்றின்பம் 3, சீவகன் மனைவியர் ஒன்பதின்மர் பற்றிய ஒரு பாடல், கோனேரியப்பன் என்னும் பிரபு பற்றி ஒரு பாடல் - ஆக ஐந்து பாடல்கள்.

தனிப்பாடல்

(R.523.C.) இலிங்க வாடி நகர் சொக்கலிங்கம் என்பவர் பற்றிய 3 பாடல்கள், - பின்னர் 32 என்னும் எண் இட்ட ஏடு உள்ளது; ஆனால் அதில் ஒன்றும் எழுதப்படவில்லை. அதற்கும் முன் எழுதப்பட்ட பல ஏடுகள் இருந்திருக்கலாமோ?

தனிப்பாடல்

(R.459) பல்வேறு பொருள்கள் பற்றிய பல இனப் பாடல்கள்.

த.பா.

(R.323) திருச்செந்தூர், திருத்தணிகை, திருப்போரூர் - முருகன் பாடல்கள் சில.

த.பா - 8

(R.590 )முருகன் தோத்திர வெண்பா5, கட்டளைக் கலித்துறை 1, நேரிசை வெண்பா 1, ஆசிரிய விருத்தம் 1 ஆக8 பாடல்கள் - மீதி இல்லை.

த.பா - 7

(R.462) வைகுந்தநாதன் தோத்திரமான கட்டளைக் கலித்துறைப்பா 1) திருக்குருகூர் ஆதி நாதன் தோத்திரக்

கட்டளைக் கலித்துறை, சிற்றின்பம் பற்றி 2, இராவண சங்காரம் பற்றி 1, நம்மாழ்வார் பற்றி 1, சோமன் என்னும் பிரபு பற்றி 1- ஆக ஏழு பாடல்கள் - மீதி இல்லை.

த.பா.

(R.1206) கிருஷ்ணன்பற்றி 1, இராமன் பற்றி 2, பாடல்கள் உள்ளன. அடுத்து, 62 என்னும் எண் உள்ள ஏட்டில் அபிராமி துதிப் பாடல் ஒன்று உள்ளது. அங்ஙனமெனில், இடையிலும் இறுதியிலும் பல ஏடுகள் கிடைக்காமல் போய் விட்டன என்பது புலனாகும்.

த.பா-6

(D.2281) சில உலக நீதிகள் தொடர்பான ஆறு பாடல்கள் - மற்றவை இல்லை.

பலதிறப் பாடல் திரட்டு

(D. 2697) பலராலும் அன்புச் சுவை (பக்திரசம்) ததும்பப் பாடப்பெற்ற பலவகையான இசைப்பாடல்கள், ஏடுகள் சிதறுண்டு கிடப்பதால் பாடல்கள் உருப்படியாகத்தேறவில்லை.

ப.பா. திரட்டு

(D.2632) பல பொருள்கள் பற்றிய பாடல் திரட்டு. 'ஞான விருத்தம்' என்னும் தலைப் பேருடன் ஞானப் பொருள் பற்றிய பாடல் சில, சதுஷ்கோண மலை பத்து, சில தோத்திரங்கள்-கீர்த்தனங்கள் - பதங்கள்.

தோத்திரத் திரட்டு

(R.153) நவக் கிரகம், விநாயகர், முருகன், பார்வதி, கபாலீசுவரர், கற்பக வல்லி, பார்த்த சாரதி, அனுமன் - இவர்கள் மீது தோத்திரங்கள். பின்னர்ப் பொதுப் பாடல்கள் சில. இறுதியில் வாழிச் செய்யுள் 1-மங்கலச் செய்யுள் - 1.

தோத்திரத் திரட்டு

(R.NO.156 - A) 'மகா நவமி பூஜை' என்னும் பெயர் உள்ளே உள்ளது. ஆனால், விநாயகர்-முருகன் முதலியோர்

தோத்திரங்களே உள்ளன. 'மகா நவமி பூஜை' பற்றிய ஏடுகள் போய்விட்டன போலும்.

தோ.தி.

(R.NO. 156 - B) முன் (A) நூலில் உள்ளவற்றோடு, 'மங்களம் கொன்றை மலர்' என்னும் செய்யுளும் 'மறையவர்கள் வாழி' என்னும் செய்யுளும் இதில் கூடுதலாக உள்ளன.

R.428.C. இரண்டு தனிப் பாடல்கள் - மற்றவை இல்லை.

R.428.b. தனிப்பாடல்-யோகாப்பியாசப் பெருமை உணர்த்தும் பாடல்.

D.16-5-13 சிவ ஜாலத்திரட்டு.

D.16.14-3. சீட்டுக் கவிகளும் சிங்காரப் பாடல்களும்.

தனிப் பாடல் திரட்டு (1932)

1291 பாடல்கள் உள. பென்னுசாமித்தேவரின் ஒப்புதல் -திருமயிலை சண்முகம் பிள்ளை பார்வை - வெளியீடு: அ.அரங்கசாமி முதலியார் சன்ஸ். சென்னை - பூமகள் விலாச அச்சுக்கூடம், சென்னை - 1932.

த.பா.தி. (1960)

பலர் பாடல்கள் - சென்னை ஓரியண்டல் சுவடி வெளியீடு. பதிப்பாண்டு—1960. நூலின் மொத்தப் பக்கம் 311. மொத்தப் பாடல்கள் 1057:

தனிப் பாடல்கள் (1962)

இது இரண்டாம் பாகம் என உள்ளது. 344 ஆம் பாடலிலிருந்து 784 பாடல் வரை எண்ணிடப்பட்டுள்ளன. வ.உ.சி. அச்சகம், சென்னை - 5. ஆண்டு 1962.

தனிப் பாடல் திரட்டு (1963) - குறிப்புரையுடன்

பதிப்பாசிரியர் சு.அ. இராமசாமிப் புலவர்—வெளியீடு — சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை. ஆண்டு 1963. இது முதல் பகுதி, முற்காலப் புலவர்களும் பிற்கால —

தற்காலப் புலவர்களுமாக 566 புலவர்கள் பாடிய 3977 பாடல்கள்—குறிப்புரை உண்டு. இது நான்கு பகுதிகளாக அச்சிடப் பட்டுள்ளது.

முதல் பகுதி — திருவாலவாய்க் கடவுள் முதலாக வசை கவி யாண்டான் புலவர் ஈறாக உள்ள 110 புலவர்கள் பாடிய 1113 பாடல்களும் 446 பக்கமும் கொண்டது. பதிப்பாண்டு1963.

பகுதி 2: பாடல்கள் 998—பக்கம் 446—ஆண்டு 1964.

பகுதி 3: பாடல்கள் 915 பக்கம் 456 - ஆண்டு 1964.

பகுதி 4: பாடல்கள் 951 — பக்கம் 464 — ஆண்டு1964.

த.பா.தி. (1964)

கடவுள் வாழ்த்து முதலாகப் பல்சுவைப் பகுதி ஈறாக 33 தலைப்புகளில் பாடல்கள் உள்ளன. நூலின் மொத்தப் பக்கம் 220. தொகுப்பு - கலைச் செல்வி. மீனாட்சி பதிப்பகம், புதுக்கோட்டை வெளியீடு.

M.G,O.S.NO.CXL VII

தின கவிதை—பாகம் 1

முதல் பாகம் - 1956, (குறிப்புரையுடன்)

T. Chandra Sekar, Curator - Jeneral Editor.
Critically Edited with Introduction

And Notes by

Vidwan J. Raju Mudaliar,
G.O.M.L. Madras - 1956 ரூ. 8-4-0
ரத்னம் பிரஸ், சென்னை

முதல் பாகம் மொத்தச் செய்யுள்-2622.
தி. சந்திர சேகர்-ஆங்கில முகவுரை: 16-12-1956.
ராஜு முதலியார் தமிழ் முகவுரை: 16-12-1956

(இந்தப் பகுதி நூலில் உள்ளவாறு தரப்பட்டுள்ளது).

ஆசிரியர் - குழந்தைக்கவிராசர். இவர் குன்றக்குடி முருகன் மீது நாடோறும் (தினம்) பாடிய பாக்களின் தொகுப்புஇது. ஆசிரியர், நாள்காட்டி (டைரி) போல ஒவ்வொரு பாடலின் இறுதியிலும் எழுதிய, நாள் (தேதி) கிழமை, நட்சத்திரம் முதலியவற்றைக் குறிப்பிட்டுள்ளார் நூலில் அருணகிரிநாதரையும் பகழிக் கூத்தரையும் குறிப்பிட்டிருப்பதால் அவர்கட்குப் பிற்காலத்தவர் இவர் என்பது விளங்கும்.

நடை சந்தப்பா நடை. பாண்டிய நாட்டில் உள்ள ஓர் ஊரிலிருந்து சந்திரசேகர் இதைக் கண்டு பிடித்துக் கொண்டு வந்தாராம். ஆசிரியர் வரலாறு என்னும் தலைப்பில், 'தின கவிதைப் புஸ்தகம்—மல்லையூர் அழகிய சிற்றம்பலக் கவிராசன் குமாரன் குழந்தைக் கவி ராசன் குன்றக் குடிக் குமரன் பேரில் பாடின கவிதைப் புஸ்தகம்...'' என நூலின் தொடக்கத்தில் எழுதப்பட்டுள்ளது.

தின கவிதை-பாகம் 2

M.G.O.S.NO.CLVI. General Editor T. Chandra Sekar. Critically Edited With Introduction And Notes by M. Rajakkannu.

தி. சந்திரசேகர் ஆங்கில முன்னுரை: 16 - 2-56. சென்னை அரசினர் கலைக்கல்லூரி மு. இராசாக்கண்ணு தமிழ் முகவுரை: 9 - 7 - 1956. பாடல் மொத்தத் தொகை - 2623 முதல் 5117 வரை. இராசாக்கண்ணு 76 பக்கம் கொண்ட நீளமான முன்னுரை எழுதியிருக்கிறார்.

ஆசிரியர் வரலாறு: "தின கவிதைப் புஸ்தகம் - அழகு மல்லையூர் அழகிய சிற்றம்பலக் கவிராசர் குமாரன் குழந்தைக் கவிராசன் குன்றக்குடிக் குமரன் பேரில் பாடின கவிதைப் புஸ்தகம்...'' என நூலின் தொடக்கத்தில் உள்ளது.

இந்தத் தொகுப்பின் இரண்டு பாகங்களிலும் சேர்த்து மொத்தம் 5117 பாடல்கள் உள்ளன. ஆசிரியர் தினம் ஒரு கவிதை வீதம் எழுதியிருப்பார் என்பது 'தினகவிதை' என்னும் பெயரால் தெரியவருகிறது. இது உண்மையாயின், 5117

பாடல்களையும் ஒரு நாளைக்கு ஒன்று வீதம் எழுத ஆசிரியருக்கு ஒரு தோற்றம் (சுமார்) 14 ஆண்டுகள் பிடித்திருக்க வேண்டும்.

அருந் தமிழ்த் திரட்டு

தஞ்சை சரசுவதி மகால் நூலகப் புத்தகப் பட்டிகை முதல் தொகுதி 272 ஆம் பக்கத்தில் இத்திரட்டு பற்றி அறிவிக்கப் பட்டுள்ளது. இதில், காளமேகம், ஒட்டக்கூத்தர் முதலியோரின் பாடல்கள் உள்ளன. இது தனிப்பாடல் திரட்டு வகையைச் சேர்ந்த திரட்டாகும். இதுவரை அச்சிடப்படாத பாக்களும் இதில் உள்ளன.

தஞ்சை சரசுவதி மகால் நிலையத்தில், 'தனிப்பாடல் திரட்டு' என்னும் பெயரில் எட்டு வெவ்வேறு நூல்கள் உள்ளன இவ்வெட்டும் அருந்தமிழ்த் திரட்டு போன்றவையே; அதாவது தனிப்பாடல் திரட்டு வகையைச் சேர்ந்தவை - இவற்றின் காலம் அறியப்படவில்லை.

தண்டபாணி சுவாமிகள்

தனிப்பாடல் திரட்டு

ஆ-தண்டபாணி சுவாமிகள். தொ - வெ - கௌமார மடாலயம், திருவாமாத்தூர். அனுமான் அச்சியந்திர சாலை, விழுப்புரம். 1968. உ-விநாயகர் முதல் துதிப்பாடல் வரை 36 தலைப்புகளில் பாடல்கள் உள்ளன. ஒவ்வொரு தலைப்பிலும் பற்பல பாடல்கள் உள்ளன. ஒவ்வொரு தலைப்பையும் ஒரு சிறுநூல் என எண்ணக் கூடிய அளவில் பாடல்கள் நிரம்ப உள்ளன.

தனிப் பாடல் திரட்டு

முதலிலும் இறுதியிலும் பிள்ளைப் பெருமாள் ஐயங்காரின் சில பாடல்கள் உள்ளன. இடையில், கரிகாலனைப் பற்றிய பாடல்கள்-மதுரைத் தியாகேசர் மீது 50 தாழிசை-ஆசிரிய விருத்தம் - அருணகிரிநாதர் மீது வண்ணம், அரங்கநாதர் வண்ணம்-திருவரங்கக் கலம்பகப் பாடல்கள் சில - ஆகியவை உள்ளன.

தனிப் பாடல் திரட்டு (1967)

முதல் பாகம்-பொழிப் புரையுடன்-தஞ்சை சரசுவதிமகால் வெளியீடு. ஆண்டு: சகம் 1888; கி.பி. 1967. பதிப்பாசிரியர்: ச.பாலசுந்தரம், கரந்தைக் கல்லூரி, தஞ்சை. சிறப்புச் செயலாளர்: A.நாராயணசாமி அச்சு: உக்கடை ஸ்ரீஅம்பாள் பிரஸ், தஞ்சாவூர்.

பலரைக் குறித்தும் பல பொருள்கள் குறித்தும் பலர் பாடிய 216 பாடல்களின் தொகுப்பு. முதல்பாட்டு வஞ்சித் துறை: (பிள்ளையார் வணக்கம்)

"வெள்ளை வாரணப்
பிளை யார்பதம்
உள்ள மேறநால்
கள்ள மாறுமே"

இவ்விதமான 216 பாடல்கள் உள்ளன.

தனிப் பாடல் திரட்டு (1969)

இரண்டாம் பாகம் - பொழிப்புரையுடன். தஞ்சை சரசுவதி மகால் வெளியீடு. ஆண்டு: சகம் 1891. கி.பி. 1969. பதிப்பாசிரியர் ச. பாலசுந்தரம், கரந்தைக் கல்லூரி. சிறப்புச் செயலாளர்: நீ.கந்தசாமிப்பிள்ளை, மொத்தப்பாடல்கள் 256. பல பொருள் குறித்துப் பலர் பாடியவை. கண்ணி, சிந்து, பா, பாவினம் - முதலிய பலவகைப்பாடல்கள் - முதல் பாடல் முருக வணக்கம்.

தனிப் பாடல்கள்

(R.4302) சரசுவதி, பழநியாண்டவர், பழநிக்குடத்து விநாயகர், ஒதி மலையாண்டவர், மாரியம்மன், கருப்பராயர், பொன்காளியம்மன், மாதேசிலிங்கன், கன்னிமார், கரிய காளியம்மன், முத்துக் கவுண்டன், தாண்டவக் கவுண்டன், சின்னதம்பிக் கவுண்டன், சிலம்பக் கவுண்டன், பெருமாக் கவுண்டன், முத்துவேலப்பக்கவுண்டன், கணுவக்காரைஆவிடையாக்கவுண்டன், வெங்கிட்டநாயக்கன், பாப்ப நாயக்கன், மயேசுவரி, குப்பக்கொசவன், முதலியோர் மீது பலர் பாடிய

பாடல்களின் திரட்டு. இறுதியில் 'விபீடணன் புத்தி' என்னும் தலைப்பில் சில ஏடுகள் உள்ளன. நூல் முழுதும் இல்லை. இறுதி சிதைவு.

இவ்வாறு இன்னும் எத்தனையோ தனிப்பாடல் நூல்கள் இருக்கலாம்.

செய்ய வேண்டிய கடமை

இது காறும் தோற்றம் (சுமார்) 125 தனிப் பாடல் திரட்டுகள் பற்றிய அறிமுகம் தரப்பட்டது. அரிதின் முயன்று தேடி இவைபற்றிய விவரங்கள் தரப்பட்டுள்ளன. சிலவற்றிற்குக் கிடைத்த வரைக்கும் சிறிதளவு விவரமே தரமுடிந்தது. ஒவ்வொரு நூலுக்குள்ளும் புகுந்து அரிய ஆராய்ச்சி யொன்றும் இவண் செய்யவில்லை. தொகை பற்றிய படைப்பு இந்நூலாத லின், நூலுக்குள் நுழைய வில்லை.

தனிப் பாடல் திரட்டு நூல்கள் தொடர்பாகச் செய்ய வேண்டிய கடமையொன்று தமிழ் அறிஞர்க்கு உண்டு. அகநானூறு (நெடுந்தொகை), நற்றிணை, குறுந்தொகை, புறநானூறு முதலிய நூல்கள் சில, உதிரித் தனிப் பாடல்களின் திரட்டே என்பது, தொடக்கத்தில் அறிவிக்கப்பட்டது. இவற்றைப் போலவே, தனிப்பாடல் திரட்டு நூற்பாடல்களையும், காலம் – இடம்-பொருள்-அளவு-பாடியோர் – பாடப்பட்டோர்-முதலிய தலைப்பு வாரியாகப் பிரித்துத் தொகுத்துத் தனித் தனிப் பெயர் இட்டு மக்கட்கு வழங்க வேண்டியது முதற் கடமை யாகும்.

இவ்வாறு செய்து தொகைப் பெயர் தரப்படின், ஆராய்ச்சி யாளர்கட்குப் பெரிதும் பயன் தரும். பொது மக்கள்–அரசர்கள்-தலைவர்கள்-கடவுளர்கள்–அன்பு (பக்தி), வழிபாடு–அகம்-புறம்-ஒழுக்கம்–பண்பாடு–வரலாறு–நீதி – அரசியல் – மன்பதை (சமுதாயம்) முதலிய பல்வேறு தலைப்புகளின் கீழ் ஆராய்ச்சி செய்வதற்கு இம் முயற்சி பெரிதும் துணைபுரியும். பொதுவாகத் தமிழ் அறிஞர்கட்கும் சிறப்பாக அரசுக்கும் இம் முயற்சி தனிப் பெருங்கடமையாகும். கிடைக்காமல் எங்கெங்கோ ஒளிந்து கிடக்கும் பாடல்களையும் தேடிப்பிடித்துக்கொணர்ந்து மேலும் மிகு பயன் அளிக்கவேண்டும்.

## இலக்கணத் தொகுப்புகள்

1. இலக்கணத் தொகை-எழுத்து

தொ-வெ- டாக்டர் ச.வே. சுப்பிரமணியன். வி.உ-பாரி நிலையம், சென்னை. கூட்டுறவு அச்சகம், திருநெல்வேலி. 1967. இந்தத்தொகுப்பில் இடம்பெற்றுள்ள இலக்கண நூல்களாவன:

தொல்காப்பியம், வீரசோழியம், நேமி நாதம், நன்னூல், இலக்கண விளக்கம், தொன்னூல் விளக்கம், முத்து வீரியம், சுவாமிநாதம் – ஆகியவை. தொகுப்பாசிரியர் இலக்கணத் தலைப்புகளை எடுத்துக் கொண்டு, அவற்றிற்கு உரிய நூற்பாக்களை (சூத்திரங்களை) இந்த நூல்களிலிருந்து வரிசையாகத் தந்துள்ளார். மாதிரிக்காக ஒரு காட்டு:- 'உயிர் எழுத்து' என்னும் தலைப்பு இட்டு, உயிர் எழுத்தைப் பற்றி இந்நூல்கள் கூறும் நூற்பாக்களை ஒன்றன்பின் ஒன்றாக நூற்பெயருடன் தந்துள்ளார். மற்றும், இலக்கிய எடுத்துக்காட்டுகளும் ஈந்துள்ளார். இலக்கண ஆராய்ச்சியாளருக்கு மிகவும் பயன்படும் இத் தொகுப்பைச் செய்த ஆசிரியரை எவ்வளவு பாராட்டினும் தகும். இந்தத் தொகுப்பில் எழுத்திலக்கணம் மட்டும் இடம் பெற்றுள்ளது.

2. இலக்கணத் தொகை – சொல்

தொ-வெ-டாக்டர் ச.வே. சுப்பிரமணியன். வி.உ – ஜெய குமாரி ஸ்டோர்ஸ், நாகர் கோயில். கேரளப் பல்கலைக்கழகக் கூட்டுறவுப் பண்டகசாலை அச்சகம், திருவனந்தபுரம். 1971. இது சொல் இலக்கணம் பற்றியது. இந்தத் தொகுப்பில் இடம் பெற்றுள்ள இலக்கண நூல்களாவன:-

தொல்காப்பியம், வீர சோழியம், நேமி நாதம், நன்னூல் பிரயோக விவேகம், இலக்கண விளக்கம், இலக்கணக் கொத்து தொன்னூல் விளக்கம், முத்து வீரியம்-ஆகியவை. மேலே கூறியுள்ளாங்கு-அதாவது-எழுத்திலக்கணத் தொகுப்பில் செய்திருப்பது போலவே, இந்தச் சொல்லிலக்கணத் தொகுப்பிலும் தொகுப்பாசிரியர் செய்துள்ளார். மிக்க பயனுள்ள பணி.

3. சிற்றிலக்கண நூல் திரட்டு

தொ-வெ-சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை. பார்வை-கொ. இராமலிங்கத்தம்பிரான். அப்பர் அச்சகம், சென்னை. 1967. இந்தத் திரட்டில் அடங்கியுள்ள சிறு சிறு இலக்கண நூல்களாவன:-

1. திருத் தணிகை விசாகப் பெருமாள் ஐயர் இயற்றிய யாப்பிலக்கணம்.
2. குமரகுருபரர் அருளிய சிதம்பரச் செய்யுட்கோவை.
3. குணவீர பண்டிதர் இயற்றிய நேமிநாதம் - உரையுடன்.
4. வச்சணந்தி மாலை என்னும் வெண்பாப் பாட்டியலும் வரையறுத்த பாட்டியலும் - கொ. இராமலிங்கத் தம்பிரானின் விளக்க உரையுடன்.
5. பன்னிருபாட்டியல் - கா.ர. கோவிந்தராசு முதலியாரின் விளக்க உரையுடன்.
6. திருத் தணிகை விசாகப் பெருமாள் ஐயர் இயற்றிய அணியிலக்கணம்.

சிற்றிலக்கண நூல்கள் பற்றி ஆராய்ச்சி செய்பவர்க்கு இத் திரட்டு ஒரே நேரத்தில் உதவி புரியும்.

ஒன்றினம் முடித்தல்-தன்னினம் முடித்தல் என்றபடி, இலக்கியம் கண்ட இலக்கணத் தொகுப்புகளும் இந்நூலில் சேர்க்கப் பட்டன.

இலக்கண நூல் திரட்டு

பஞ்ச லக்கண மூலமும் நேமி நாதமும் வீர சோழியமும்-தொ.அ.இராமசுவாமி.சிவரட்சாமிர்த அச்சுக் கூடம், சென்னை. விசய - ஆனி. உள்ளுறை:- நன்னூல், அகப்பொருள் விளக்கம், புறப்பொருள் வெண்பாமாலை, யாப்பருங்கலக் காரிகை, தண்டியலங்காரம், நேமி நாதம், வீர சோழியம்-இந்நூல்களின் நூற்பாக்களின் தொகுப்பு. தஞ்சை சரசுவதி மகாலில் உள்ளது.

---

# 3. இருபதாம் நூற்றாண்டு

## கீர்த்தனைப் பாடல்கள்

கடவுளர் மேலும் சில பொருள்கள் பற்றியும் பாடும் 'கீர்த் தனை' என்னும் ஒரு வகைப் பாடல் உண்டு. இது, இசையரங்கு களில் பாடப்பெறும் தகுதி உடையதாகும். பல்லவி (எடுப்பு)- அநு பல்லவி (உடன் எடுப்பு)-சரணங்கள் (அடிகள்) என்னும் மூன்று பிரிவுகள் உடையதாயிருக்கும் இவ்வகைப் பாடல். இத் தகைய பாடல்கள் பல கொண்ட தொகுப்புகள் சிலவற்றை இனிக் காண்பாம்:

அரி பஜனைக் கீர்த்தனை

ஆசிரியர் - பராங்குசதாசர். பார்வை-திருவாலங்காடு ஆறு முக சுவாமி. பூமகள் விலாச அச்சுக் கூடம், சென்னை-1. இராகம் தாளத்துடன் பல்வகைக் கீர்த்தனைப் பாடல்கள் இதில் உள்ளன. பதிப்பாண்டு - 1894.

நந்தனார் சரித்திரக் கீர்த்தனை

ஆசிரியர் - கோபாலகிருஷ்ண பாரதியார். வெளியீடு - பி.இரத்தினநாயகர் சன்ஸ். திருமகள் விலாச அச்சியந்திர சாலை, சென்னை - 1935. இராகம் - தாளத்துடன் பல கீர்த்த னைப் பாடல்கள் உள்ளன. இறுதியில், சிதம்பரக் கும்மி, நடராசப்பத்து, நடராசர் பஞ்சாட்சரப் பதிகம், சோதிமயம்— ஆகியவை தொகுக்கப்பட்டு உள்ளன.

பரமார்த்த நாம சங்கீர்த்தன பஜனாவளி

ஆசிரியர் - சுந்தரம். யோகா பப்ளிஷிங் ஹவுஸ், கிரிநாத் பவர் பிரஸ், பெங்களூர் - 1.1952, தஞ்சை சரசுவதி மகால் நூல் இது. உள்ளுறை: குரு, கணபதி, முருகன், அம்பாள், சிவன், மால் - இவர்கள் மீது பல இசைப் பாடல்கள் உள்ளன.

குன்றக்குடி குமரன் பேரில் கீர்த்தனைகள்

Edited by Sambamoorthy.B.A.,B.L.
and
Chitoor Subramania Pillai.
The India Printing Works, Mylapore,
Madras-4.

மேலே ஆங்கிலத்தில் உள்ளது தரப்பட்டது: சாம்பமூர்த்தி ஆங்கிலத்திலும், சுப்பிரமணியப் பிள்ளை தமிழிலும் முகவுரை எழுதியுள்ளார்கள். சந்திர சேகரன் 27, மார்ச்சு - 1961 என்னும் நாள் இட்டு ஆங்கிலத்தில் முகவுரை எழுதியுள்ளார்.

இத் தொகுப்பு இரண்டு பாகங்களாக உள்ளது. முதல் பாகப் பாடல்கள்-1433; இரண்டாம் பாகப் பாடல்கள்-1460; ஆக மொத்தக் கீர்த்தனைகள்-2893. முதல் பாகம் 572 பக்கம்-இரண்டாம் பாகம் 578 பக்கம்-மிகவும் நீள-அகலம் உள்ள நூல்.

இந்நூற் கீர்த்தனைகள் குன்றக்குடி முருகன் மீது இயற்றப்பட்டவை. ஆசிரியர் பெயர் தெரிவிக்கப்படவில்லை. சந்திர சேகரனது முகவுரையில் உள்ள செய்திகள் வருக:—

ஒரே ஒரு ஓலைச் சுவடித் தொகுப்பிலிருந்து பதித்தது, அதன் எண்: NO.R.5034. ஓலைச் சுவடி அளவு 14½'' × ½''. மொத்த ஓலைகள்-1248. பக்கத்திற்கு 3 அல்லது 4 வரிகள். இது, 1954-55இல் திருச்சி ஜில்லா -மிதிலைப்பட்டி-சிங்கார வேலுக் கவிராயரிடமிருந்து விலைக்கு வாங்கியது. எழுதப்பட்டது எப்போதோ தெரியவில்லை,

இவ்வாறு சந்திரசேகரன் தெரிவித்துள்ளார். 2893 கீர்த்தனைகள் எழுதியது அரிய பெரிய முயற்சியாகும். இவை இசையரங்குகளில் பாடப்பட வேண்டுமே.

சர்வ சமய சமரசக் கீர்த்தனைகள்

ஆசிரியர் ச. வேத நாயகம் பிள்ளை. வெளியீடு: ஆர்.ஜி. பதி கம்பெனி, சென்னை. ப. குப்புசாமி முதலியார் பதிப்பித்த பிரதிக்கிணங்க, சென்னை வாகீஸ்வரி அச்சகத்தில் 1967-இல் அச்சிடப்பட்டது. 192 கீர்த்தனைகள்.

உள்ளுறை

1. தேவ தோத்திரக் கீர்த்தனைகள் – ஒன்று முதல் 138 வரை
2. ஈசுவர ஆண்டுப் பஞ்சம் பற்றிய கீர்த்தனை–139
3. இதோபதேசக் கீர்த்தனைகள்-140 முதல் 161 வரை.
4. உத்தியோக சம்பந்தக் கீர்த்தனைகள்–162 முதல்175 வரை.
5. குடும்ப சம்பந்தக் கீர்த்தனைகள்-175 முதல் 192 வரை.

நீதிபதி வேதநாயகம்பிள்ளை, எந்த மதத்தையும்—சமயத்தையும் குறிப்பிட்டுப் பாடாமல், எல்லாச் சமயங்கட்கும் பொதுவாகப் பாடியதால், நூலுக்குச் சர்வ சமய சமரசக் கீர்த்தனைகள் என்னும் பெயர் கொடுக்கப்பட்டது. இசையரங்குகளில் சில பாடப்பெறுகின்றன.

கீர்த்தனைக் கொத்து

பார்வை திருவாலங்காடு ஆறுமுக முதலியார். பூமகள் விலாச அச்சுக் கூடம்–1899. நூல்களாவன:—

1. சிதம்பரம் சபாநாதர் மீது முத்துத்தாண்டவர் பாடிய கீர்த்தனம்-பதம். இவர் பல சமயங்களில் பல இடங்களில் பாடியவை. இந்தத் திரட்டில் இது தான் மிகவும் பெரியது.
2. தில்லை விடங்கன் மாரிமுத்தாப் பிள்ளை சபாநாதர் மீது பாடிய கீர்த்தனங்கள்.
3. வைத்தீசுவரன் கோயில் குமாரசாமிக் கவிராயர் சபா நாயகர் மீது பாடிய கீர்த்தனங்கள்.
4. சிதம்பரம் அமிர்தகவி குப்பையாப் பிள்ளை பாடிய கீர்த் தனங்கள்,

இந்த நால்வரின் கீர்த்தனங்கள் இந்தக் கொத்தில் தொகுக்கப் பெற்றுள்ளன.

திருக்குறள் இசையமுதம்

ஆ - தஞ்சை இராமையாதாஸ். விற்பனை உரிமை - இரவீந்திரா பதிப்பகம், சென்னை. ஜீவன் பிரஸ், சென்னை.1961 பாடல்கள் சுர தாளத்துடன் உள்ளன. உள்ளுறை-திருக்குறளின் ஒவ்வொரு தலைப்பிலிருந்தும் (அதிகாரத்திலிருந்தும்)

ஒவ்வொரு குறளை எடுத்துப் பல்லவியாகத்தொடங்கிக் கீர்த்தனையாக அமைக்கப் பெற்ற 133 பாடல்களின் தொகுப்பு இது. முதல்பாடல் 'அகரமுதல'—இறுதிப்பாடல் 'ஊடுதல் காமத்திற்கு இன்பம்'-ஆக 133 பாடல்கள். நூலின்தொடக்கத்தில் பெருமை கூறும் கீர்த்தனம் ஒன்றும், இறுதியில் 'வாழி' கூறும் கீர்த்தனம் ஒன்றும் உள்ளன.

சாதன கீதம்

50 உருப்படிகள்-கீர்த்தனங்கள்-ஆ-சுத்தானந்தபாரதியார். சுரதாளம் – கோமதி சங்கர ஐயர். பாரதி பிரஸ், புதுச்சேரி– 1950-க்கு முன் வெளிவந்தது.

நாமக்கல் கவிஞரின் கீர்த்தனங்கள்

ஆ-நாமக்கல் வே. இராமலிங்கம் பிள்ளை. இன்ப நிலையம், சென்னை. மெட்ரோ பாலிடன் பிரின்டிங்ஸ், சென்னை. 1954. "கண்டதுண்டோ சொல்லுவீர்" என்பது முதல் "தமிழ் நாடு வாழ்க" என்பது வரை பல கீர்த்தனங்கள்,

இசை அருவி

ஆ-திருச்சி ஜி. தியாகராசன். இசைப் பாடல்கள். இசைக் குடில் பதிப்பகம், சிவாஜி அச்சுக் கூடம், திருச்சி. 1950. 'இறை வணக்கம்' முதல் 'ஓங்குக ஓங்குகவே' வரை 76 தலைப்புகளில் கீர்த்தனங்கள் உள்ளன.

பொங்கல் புது வாழ்த்து

ஆ-சுந்தர சண்முகனார். வெ-புதுவைப் பைந்தமிழ்ப் பதிப்பகம், புதுச்சேரி. சந்தானம் பிரின்டிங் ஒர்க்ஸ், புதுச்சேரி.1948. உ-'பொங்குக பாலே' என்பது முதல் 'வாழ்க வாழ்கவே'என்பது வரை பத்துத் தலைப்புகளில் கீர்த்தனைப் பாடல்கள் உள்ளன.

அத்வைத கீர்த்தனாநந்த லகரி

ஆசிரியர்–அச்சுத தாசர். 120 கீர்த்தனப் பாடல்களின்தொகுப்பு இது.

(சில கீர்த்தனைத் தொகுப்புகள்)

1. கிருஷ்ணையர் முதலியோர் கீர்த்தனங்கள்

2. திருமால் முதலிய கடவுளர்மீது கீர்த்தனங்கள்
3. முத்துத்தாண்டவர் முதலியோர் கீர்த்தனங்கள்
4. விநாயகர் முதலிய கடவுளர்மேல் பலவகைக் கீர்த்தனங்கள்
5. D.H. 14-4. சின்ன குழந்தை கீர்த்தனம்

பலவிதக் கீர்த்தனங்கள்

R.466W. உள்ளுறை: பழநி முருகன் கீர்த்தனங்கள், திருக்கோட்டியூர் சௌமிய நாராயணப் பெருமாள் கீர்த்தனங்கள், சிருங்காரச் சுவை நிறைந்த சில்லறைக் கீர்த்தனங்கள், ஞான பரமான கீர்த்தனங்கள்.

சில்லறைக் கீர்த்தனை

R.126-b. சிதம்பர நடராசர், வைத்தீசுவரன் கோயில் முத்துக் குமாரசாமி-முதலியோர் மீது பாடிய தமிழ்க் கீர்த்தனங்கள். மற்றும், திருமால் மீது, வடமொழி, தெலுங்கு இந்துஸ்தானி ஆகிய மொழிகளில் பாடிய பல தனிக் கீர்த்தனைகளும் உள்ளன. முதல் கீர்த்தனை- 'ஏதுக்கு இத்தனை மோடி...'' என்னும் சுவையான பாடல்.

இராமாயணக் கீர்த்தனம்

R.543. இராம நாடகக் கீர்த்தனங்கள் சில-விடுதிப் பாடல்கள் சில-தெலுங்குக் கீர்த்தனங்கள் சில.

இராமாயணக் கீர்த்தனங்கள்

R. 1819-இராமகாதைக் கீர்த்தனை வடிவில் இரண்டு பகுதிகள் உள்ளன.

பஜனை கீர்த்தனங்கள்

தெய்வ அன்பு ததும்பும் பல விதக் கீர்த்தனங்கள். விநாயகர், அம்பிகை, மீனாம்பிகை, குருமூர்த்தி - இவர்கள்மீது பலவகைப் பஜனை கீர்த்தனங்கள் உள்ளன. சில கீர்த்தனங்கள் நாரயணதாசர் பெயரால் குறிப்பிடப்பட்டுள்ளன. (நான் பார்த்த படி (பிரதி) சிதைந்துள்ளது)

குன்றக்குடி குமரன் கீர்த்தனைகள்

R, 5034. குன்றக்குடி குமரன் மீது, நாள்தோறும் ஒவ்

வொரு பாடல் வீதம் பாடப்பட்ட பாடல்களின் தொகுப்பு. சில கீர்த்தனங்கட்கு இராகம் குறிக்கப்பட்டுள்ளது.

கீர்த்தன மாலை, (முதல் பாகம்)

ஆசிரியர்-பாப நாசம் சிவன். முதல்பதிப்பு-1934. ஐந்தாம் பதிப்பு-1957. வெளியீடு-கலா க்ஷேத்ர காரியாலயம், அடையாறு, சென்னை. வசந்தா பிரஸ், சென்னை-20. இசை சுரத்துடன் 101 கீர்த்தனைகள் உள்ளன.

கீர்த்தன மாலை-இரண்டாம் பாகம்

ஆசிரியர்-பாபநாசம் சிவன். சுரக் குறிப்புடன் 101 கீர்த்தனங்கள் உள்ளன. தமிழ் நாடு சங்கீத நாடக சங்கத்தின் நிதியுதவியுடன் வெளியிடப் பெற்றது. தி ஹூப்ளி பிரஸ், சென்னை-1. 1965.

சுத்தானந்த கீர்த்தனாஞ்சலி

வெளியீடு-சுத்தானந்த நூலகம், சென்னை-20. 1963. உள்ளுறை: 'சிதம்பர கீதம்' முதல் 'இராக மாலிகை' வரை 14 பெரிய தலைப்புகள் உள்ளன. 'பரம் பொருளே' முதல் 'தத்துவங்கள்' வரை 1015 உள் தலைப்புகள் உள்ளன. ஆசிரியர்: சுத்தானந்த பாரதியார்.

திரு அருட்பா - கீர்த்தனைப் பகுதி

வடலூர் இராமலிங்க வள்ளலாரின் திரு அருட்பா ஒரு பெரிய கடல். அதில் உள்ள ஒரு பகுதி கீர்த்தனைப் பகுதி. வெளியீடு-அருட்பா வளாகம், சென்னை-4. சாது அச்சுக்கூடம் சென்னை-மூன்றாம் பதிப்பு-1961

உள்ளுறை: 'நாமாவளிகள்' முதல், 'கீர்த்தனங்கள்' வரை பல தலைப்புகளில் பல பாடல்கள் உள்ளன. வள்ளலாரின் கீர்த்தனங்களுள், "தெண்டனிட்டேன் என்று சொல்லடி", "வருவார் அழைத்து வாடி" முதலிய பாடல்கள் மிகவும் புகழ் வாய்ந்தவை. இராக தாள சுரங்கள் அமைக்கப்பட்டுள்ளன.

தமிழ் இசைப் பாடல்கள்

அண்ணாமலைப் பல்கலைக் கழகம் வெளியிட்டுள்ள தமிழ் இசைப் பாடல்கள் கீர்த்தனங்களாகும். இந்த நூலில் உள்ள

'தமிழ் இசைப் பாடல்கள்' என்னும் தலைப்பில் இவை குறிப்பிடப்பட் டுள்ளமையைக் காணலாம்.

கீர்த்தனாஞ்சலி

ஆசிரியர் - சுத்தானந்த பாரதியார். வெளியீடு - புதுயுக நிலையம், புதுச்சேரி. அச்சு: அரவிந்த ஆசிரம அச்சகம், புதுச்சேரி. 'சிதம்பர கீதம்' என்பது முதல் 'அன்பு மாலை' என்பது வரையிலான 9 தலைப்புகளில் 556 இன்னிசைப் பாடல்கள் உள்ளன.

மெய்ஞ்ஞான ரத்தினாலங்காரக் கீர்த்தனம்

ஆசிரியர்: முகமது ஹம்சா லெப்பை அருளியது. சக்கரவர்த்தி அச்சுக் கூடம், சென்னை-1936. உள்ளுறை: இசுலாம் பற்றிப் பல தலைப்புகளில் கீர்த்தனங்கள் உள்ளன. இறுதியில் 'கப்பல் சிந்து' என்னும் பகுதி உள்ளது. மொத்தம் 65 கீர்த்தனங்கள்.

கீர்த்தனைக் கொத்து

ஆறுமுக உபாத்தியாயர், முத்துத்தாண்டவர், மாம்பழக் கவிச்சிங்க நாவலர், கோபால கிருஷ்ண பாரதி - முதலியோரின் கீர்த்தனத் திரட்டு. இந்தக்கொத்து, பல ஆண்டுகளில் பல அச்சுக் கூடங்களில் பதிப்பிக்கப்பெற் றுள்ளது.

இசை மாலை

ஆ-சு. சண்முகம், அண்ணாமலைப் பல்கலைக் கழகம். இசையமைப்பு - சீர்காழி கோவிந்தராசன். விற்பனை உரிமை - தொல்காப்பியர் நூலகம், சென்னை. முத்தையா அச்சகம், சென்னை. 1961. பல சமயம் பாடிய இசைப் பாடல்களின் தொகுப்பு. உ-இறைமை, சான்றோர், நாடு, மொழி, இசை, தாய்மை, மக்கட் செல்வம், இளைஞருக்கு - என்னும் எட்டுப் பெரிய தலைப்புகளின் கீழ், 'உவமை யில்லாப் பொருள்' முதல் 'வாழ்ந்த வாழ்வைப் பெற்றிடு' என்பது வரையிலான 41 உள் தலைப்புகளில் இசைப்பாடல்கள் உள்ளன.

கீர்த்தனைப் பாடல்கள் திரட்டு

ஆ-தண்டபாணி சுவாமிகள். வெ - கௌமார மடாலயம்

திருவாமாத்தூர். 1971. பாடல்கள் இயல், இசை, நாடகம் என்னும் மூவகைத் தமிழிலும் அமைந்துள்ளன. பாடல்கட்கு இராக தாள வரிசைகளையும் சுவாமிகளே அமைத்துள்ளார். பாடல்கள் இசையரங்கில் பாடுதற்கு உரியன.

R.6828 – கீர்த்தனங்கள்

கடவுளர் பலர்மீது உள்ள கீர்த்தனத் தொகுப்பு இது. கண்ணனின் குறும்பு பற்றிக் கோபியர்கள் யசோதையிடம் முறையிடுவதாக உள்ள பாடல்கள் மிகுதி. சிவன் முதலியோர் மீதுள்ள பக்திப்பாடல்கள்-உலக நீதிகள் – தத்துவக் கருத்துகள் உள்ள கீர்த்தனங்களும் உள. மயக்க நிலை நீங்கி முத்தி பெறு வதை விளக்கும் பாடல்களும் உள்ளன.

R.4868 யோகி சாத்தையர் பேரில் கீர்த்தனங்கள்

ஆசிரியர் பெயர் தெரிய வில்லை. யோகி இகபரப் பொருள் பெற்றவர் – யோக சித்து வல்லவர் – பேய் ஓட்டுவதிலும் திருட்டு முதலியன கண்டு பிடிப்பதிலும் வல்லவர் – இவை பற்றிய பாடல்கள் கீர்த்தனங்கள் உள்ளன.

R. 4871. யோகி சாத்தையர் பேரில் பாடல்கள்

இந்தத் தொகுப்பில் யோகி பற்றிப் பல இடங்களில் பாடப்பட்ட கீர்த்தனங்கள் உள்ளன. மற்றும் இதில், வெள்ளைச்சாமி, பெரிய நாயகி, வீரபத்திர சுவாமி ஆகியோர் மீது பாடிய பாடல்களும், இறுதி 5 ஏடுகளில் மருந்துவகை பற்றிய பாடல்களும் உள்ளன.

சரித்திரக் கீர்த்தனைகள்

ஆசிரியர்: காஞ்சி-குத்தனூர் சின்னசாமி சாத்திரி. விளக்கம் (வியாக்கியானம்) உண்டு. சென்னை மனோன்மணி விலாச அச்சுக் கூடம் – 1908. பல வைணவ அடியார்கள் மீது பாடியது. அடியார்கள் வருமாறு:-

உருக்மாங்கதர், அம்பரிஷர், ததிபாண்டர், குசேலமாமுனி, ஸ்ரீ பாஷ்யகாரர், பத்ராசல ராமதாசர் ஆகியோர் மீது பாடிய கீர்த்தனைகளின் தொகுப்பு, சுபத்ரா கல்யாணச் சரித்திரக் கீர்த்தனையும் இதில் இணைக்கப்பட் டுள்ளது.

லலிதா தாசர் கீர்த்தனைகள்

ஆ - லலிதா தாசர். தொ - செம்பை வைத்தியநாத பாகவதர். பலவகைக் கீர்த்தனைகள் உள்ளன.

வேதபுரிக் கீர்த்தனைகள்

ஆ - டி.ஆர். விசுவநாத சாத்திரி. வெளியீடு - சங்கீதசதன். 1937. வேதபுரி இறைவன் மீது பாடிய கீர்த்தனங்கள்.

தமிழிசை மணிமாலை

(கீர்த்தனைப் புத்தகம்)

ஆ - தி.செ. சிதம்பரேச்வர திட்சதர், சிதம்பரம். நிதி உதவி - சி.ஆர். முருகேச முதலியார், சிதம்பரம் - கிராஸ்வேடு பிரஸ். 1948. உ - விநாயகர் கீர்த்தனை முதல் மங்களம் வரை 105 கீர்த்தனங்கள் உள்ளன.

மாணிக்க வாசகர் சரித்திரக் கீர்த்தனை

ஆ:கரந்தை - கருணைப் பிரகாச சுவாமி. பதிப்பு - கரந்தை சிவகுப்புசாமி, கூட்டுறவுப் பதிப்பகம், தஞ்சை. இரண்டாம் பதிப்பு - 1932. உ - திருவிளையாடல் புராணம், திருவாதவூரர் புராணம், திருவாசகம் முதலிய நூல்களிலிருந்து சில பாக்கள் தந்து, அவற்றிற்கு ஏற்பக் கீழே கீர்த்தனங்கள் எழுதப்பட்டுள்ளன. மாணிக்க வாசகர் பற்றிய செய்திகள் இடம் பெற்றுள்ளன. இந்த அமைப்பு ஒரு புது முறை.

இசை மணி மாலை

[மூன்றாம் தொகுதி]

ஆசிரியர்: ம.ப. பெரியசாமித்தூரன். இசை: என். சிவராம கிருஷ்ணையர் & சித்தூர் சுப்பிரமணியப் பிள்ளை. அல்லயன்ஸ் கம்பெனி - சென்னை. மொத்தம் 45 உருப்படிகள் - கீர்த்தனங்கள்.150 பாடல்கள் கொண்ட முதல் இரண்டு தொகுதிகள் முன்பே வந்துள்ளன.

கீதத் தமிழ்

ஆ - கே. எம். பால சுப்பிரமணியன். சாது அச்சுக்கூடம், சென்னை-1-5-1947. பல ஊர்க் கடவுளர் பலர்மீது பாடிய நூறு கீர்த்தனப் பாக்களின் திரட்டு.

நூதன தமிழ்ப் பாடல்கள்

ஆ-எஸ். ஆர். குப்புசாமி, B.A.,M. MUS, கோவை. இப் பாடல்கள் சுர சாகித்தியத்துடன் உள்ளன. இது பற்றி வேறொன்றும் தெரியவில்லை.

அன்னையின் திருவடி மலர்கள்

ஆ-சுந்தரம். வெ—யோகா பப்ளிஷிங் ஹவுஸ், பெங்களூர், ஓரியன்ட் பவர் பிரஸ், பெங்களூர், 1947. தேவி மீது பல தலைப்பில் பல இசைப் பாடல்கள்,

கீர்த்தன மாலை

ஆ--பாபநாசம் சிவன். வெ-கலா க்ஷேத்திரக் காரியாலயம்—1945. இதில் 100(நூறு) கிர்த்தனப் பாடல்கள் உள்ளன

வேதாந்தக் கீர்த்தனங்கள்

ஆ--ஏ. எஸ். இலட்சுமி அம்மாள். வெ-ஜெயா & கம்பெனி, திருவல்லிக் கேணி, சென்னை - 1938. வேதாந்தக் கருத்துகள் நிறைந்த பல கீர்த்தனங்கள் இதில் உள்ளன.

## பாரதியார் பாடல்கள்

தேசிய மாகவி சி.சுப்பிரமணிய பாரதியாரை அறியாத தமிழர்கள் இருக்க முடியாது. அவரைப் பற்றிய அறிமுக உரை எதுவும் இங்கே தேவையில்லை. அவருடைய பாடல்கள் பலரால் பல ஆண்டுகளில் தொகுத்து வெளியிடப்பட்டுள்ளன. முழுமையும் உள்ள பதிப்புகள் சில இருக்கும். சிற்சில அல்லது பற்பல பகுதிகள் மட்டும் இருக்கும் பதிப்புகளும் உண்டு. இனி அவற்றை வெளியான ஆண்டு வாரியாகக் காண்பாம்:

பாரதி நூல்கள்

வெளியீடு: பாரதி பிரசுராலயம், சென்னை - 5. அச்சு: இந்தி பிரசார அச்சுக் கூடம், சென்னை - 5.ஐந்தாம் பதிப்பு - 1941.

உள்ளுறை: தேசிய கீதங்கள், தோத்திரப் பாடல்கள், விநாயகர் நான்மணி மாலை, கண்ணன் பாட்டு, புதிய ஆத்தி

குடி, முரசுப் பாட்டு, பாப்பா பாட்டு, பாரதி - 66, குயில் பாட்டு, பாஞ்சாலி சபதம், சுய சரிதை, பிறபாடல்கள் மேலும் சில.

(பாரதி) தோத்திரப் பாக்கள்

வெளியீடு: பாரதி பிரசுராலயம், திருவல்லிக்கேணி, சென்னை. இந்தி பிரசார பிரஸ், தி.நகர், சென்னை. ஆறாம் பதிப்பு - 1944.

உள்ளுறை: 'ஆறு துணை' என்னும் தலைப்பு முதலாக, 'பூலோக குமாரி' என்னும் தலைப்பு ஈறாக உள்ள 66 தலைப்புகளில் பாரதியார் பாடியுள்ள பாக்கள் பல தொகுத்துத் தரப் பட்டுள்ளன.

தேசிய தங்கள்

பகுதி - 1. பாரதி பிரசுராலயம், சென்னை - 12ஆம் பதிப்பு-1945. 'வந்தேமாதரம்' முதல் 'புது வருஷம்' வரை 57 தலைப்புகள் உள்ளன.

பாரதியார் பாடல்கள்

பாரதி பிரசுராலயம் வெளியீடு. அச்சு ஹிந்துஸ்தானி பிரச்சார் பிரஸ், சென்னை. 1948. உள்ளுறை: புதிய ஆத்தி சூடி, முரசுப் பாட்டு, பாப்பா பாட்டு, மூன்று நூல்களின் தொகுப்பு.

பாரதியார் பாடல்கள்

வேத ரிஷிகளின் கவிதை - 1948.
தராசு, சித்தக் கடல் & Story thoughts-1948.
பாரதி மணி மலர் (பக்திப் பாடல்கள்)-1948.
பதஞ்சலி யோக சூத்திரம்-1949.
சுய சரிதையும் பிற பாடல்களும் - 1949.
இவை ஐந்தும் பாரதி பிரசுராலய வெளியீடு.

பாரதி நூல்கள்

தமிழக அரசு வெளியீடு-1954, (1) தேசிய கீதங்கள், (2) தெய்வப் பாடல்கள், (3) பல்வகைப் பாடல்கள், (4) முப்பெரும் பாடல்கள் - என நான்கு பாகங்களாக உள்ளது இது.

உயிர் பெற்ற தமிழர் பாட்டு

ஆ - பாரதியார். வெ - திருலோக சீதாராம். எஸ்.என். பிரிண்டர்ஸ், திருச்சி. 5-12-1954. வெளியிட்டவரிடம் ஒரு பகுதியே கிடைத்திருந்ததாம். பின்னர்ச் செல்லம்மா பாரதியிடமிருந்த துண்டு வெளியீடுகளில் பல பாடல்கள் இருக்கக் கிடைத்தனவாம். பாடல்கள் பல பொருள்கள் பற்றியவை. பல்லவியாக - கீர்த்தனமாகப் பாடல்கள் உள்ளன.

பாரதி பாடல்கள்

தொகுப்பு: ஜீவா. ஜனசக்தி பிரசுராலய வெளியீடு சென்னை. ஜனசக்தி பிரஸ்-சென்னை. செப்டம்பர் 11,1955. உள்ளுறை: தமிழும் தமிழகமும், பாரத நாடு, தேசியக் கொடி, பாரத சமுதாயம், வாழ்த்து முதலிய 14 தலைப்புகள் உள்ளன. சில உள் தலைப்புகளும் உண்டு.

பாரதியார் கவிதைகள்- தேசிய கீதங்கள்

வெளியீடு: கன்னித் தமிழ்ப் பதிப்பகம், மதுரை. விற்பனை உரிமை: பாரதி புத்தக நிலையம், மதுரை. அச்சு: வி.சுப்புராயலு நாயுடு பிரஸ், மதுரை. முதல் பதிப்பு-1955.

உள்ளுறை: 1. பாரத நாடு, 2. தமிழ் நாடு, 3. சுதந்திரம் 4. தேசிய இயக்கப் பாடல்கள், 5. தேசியத் தலைவர்கள் 6. பிற நாடுகள்-இவை பெரிய தலைப்புகள், 'வந்தே மாதரம் முதல் 'கரும்புத் தோட்டத்திலே' என்பது வரை 53 உள் தலைப்புகள் உள்ளன.

பராதியார் கவிதைகள்

"குயில்"

மதுரைப் பாரதி புத்தக நிலைய வெளியீடு. தமிழ்நாடு பிரஸ், மதுரை. காலம்: 11-9-1955. 'குயில்' பற்றியது இது.

உள்ளுறை: 1. குயில், 2. குயிலின் பாட்டு, 3. குயிலின் காதல் கதை, 4. காதலோ காதல், 5, குயிலும் குரங்கும், 6. இருளும் ஒளியும், 7. குயிலும் மாடும், 8. நான்காம்நாள், 9. குயில் தனது பழம் பிறப்புக் கதையுரைத்தல், ஆகிய

தலைப்புள்ள பாடல்கள் - குயில் பற்றிப் பல சமயம் பாடிய பாடல்கள் - ஆகியவற்றின் தொகுப்பு இது.

பாரதியார் கவிதைகள் - கண்ணன் பாட்டு

வெளியீடு: கன்னித் தமிழ்ப் பதிப்பகம், மதுரை. விற்பனை உரிமை: பாரதி புத்தக நிலையம், மதுரை. அச்சு: கலைமகள் பிரஸ், காரைக்குடி. காலம்: அக்டோபர், 1955.

உள்ளுறை: 'கண்ணன் என் தோழன்' முதல் 'கண்ணம்மா எனது குல தெய்வம்' வரை 23 தலைப்புகளில் பாடல்கள் உள்ளன. பல பாடல்கட்கு இராகம் - தாளம் அமைத்துள்ளனர்.

பாரதியின் பாடல்கள்

பாரத சக்தி நிலையம் - லிபர்ட்டி பிரஸ், புதுவை - 1956. உள்ளுறை: (மணக்குள) விநாயகர் நான் மணி மாலை, முருகன் பாட்டு, உப்பளம் முத்து மாரியம்மன் பாட்டு, கண்ணன் என் சேவகன், கண்ணன் எனது சேடன், தமிழ், நடிப்பு சுதேசிகள்-ஆகியவை உள்ளன. இங்கே குறிப்பிடப்பட்டுள்ள உப்பளம் என்னும் ஊர், புதுச்சேரி நகருக்குத் தென்கிழக்கில் உள்ள பகுதியாகும்.

மகாகவி பாரதியார் கவிதைகள்

பாரதியாரின் கவிதைகள் முழுவதும் உள்ளதாகச் சொல்லப்படும் இது, சென்னை - சக்தி காரியாலய வெளியீடாகும். இரண்டாம் பதிப்பு அச்சு: சண்டே டைம்ஸ் பிரஸ், சென்னை, இரண்டாம் பதிப்பாண்டு 11-9-1957. முதல் பதிப்பு: ஹேவிளம்பி - புத்தாண்டுப் பிறப்பு -

உள்ளுறை: இத் தொகுப்பில், நான்கு பெரும் பாகங்களும், ஒவ்வொரு பாகத்திலும் பல பெருந்தலைப்புகளும், ஒவ்வொரு பெருந்தலைப்பிலும் பல சிறு தலைப்புகளும், ஒவ்வொரு சிறு தலைப்பிலும் பல பாடல்களும் உள்ளன. முதல் பாடல் 'வந்தே மாதரம்' என்பது. இறுதிப் பகுதி: புதிதாகக் கண்டு பிடிக்கப்பட்டுக் கிடைத்த 'இளசை ஒருபா ஒருபஃது' என்பது. இனித் தலைப்புகள் வருமாறு:

முதல்பாகம்-தேசியகீதங்கள்; 1. பாரதநாடு, 2. தமிழ்நாடு 3.சுதந்தரம், 4.தேசிய இயக்கப் பாடல்கள், 5.தேசியத் தலைவர்கள், 6.பிறநாடுகள்.

இரண்டாம் பாகம்-தெய்வப் பாடல்கள்: 1. தோத்திரப் பாடல்கள், 2.ஞானப் பாடல்கள்,

மூன்றாம் பாகம்-பல்வகைப் பாடல்கள்:1.நீதி, 2.சமூகம், 3.தனிப் பாடல்கள், 4.சான்றோர், 5.சுய சரிதை, 6.வசன கவிதை.

நான்காம் பாகம்-முப்பெரும் பாடல்கள்: 1.கண்ணன் பாட்டு, 2.பாஞ்சாலி சபதம், 3.குயில் பாட்டு.

புதிதாகச் சேர்க்கப் பெற்றவை: 1.உயிர் பெற்ற தமிழர் பாட்டு, 2.இளசை ஒருபா ஒருப∴து. இறுதியில் அநுபந்தங்கள்.

ஆக, இந்தத் தொகுப்பு பாரதியார் பாடல்களின் முழு உருவம் என்பதாகக் கருதப்படுகிறது.

சுதேச கீதங்கள்

பாரதி பிரசுராலய வெளியீடு, சென்னை. முதல் பாகம்: 'வந்தே மாதரம்' முதல் 'பொய்யோ மெய்யோ' என்னும் தலைப்பு வரை.

இரண்டாம் பாகம்: பல தலைப்புகளில் பாடல்கள் உள்ளன. எனக்குக் கிடைத்த நூலில் முதல் 128 பக்கங்கள் இல்லை.

பாரதியார் இன் கவித்திரட்டு

தொகுப்பு: சாகித்திய அகாடமிக்காக, ரா.பி.சேதுப் பிள்ளை தொகுத்தது. வெளியீடு: பழநியப்பா பிரதர்ஸ் சென்னை. அச்சு: ஏஷியன் பிரின்டர்ஸ், சென்னை - 5 காலம்: 1 - 3 - 1957.

உள்ளுறை: பாரத நாடு, தமிழ்நாடு, சுதந்திரம், தேசிய இயக்கம், தேசியத் தலைவர்கள் பிற நாடுகள், தோத்திரப் பாடல்கள், ஞானப் பாடல்கள், நீதி, சமூகம், தனிப் பாடல்கள், சான்றோர், சுய சரிதை, கண்ணன் பாட்டு, பாஞ்சாலி சபதம், குயில் பாட்டு - ஆகியவற்றின் தொகுப்பு.

பாரதியார். கவிதைகள்

வெளியீடு: பழநியப்பா பிரதர்ஸ், சென்னை. அச்சு: ஏஷியன் பிரிண்டர்ஸ், சென்னை-5. முதல்பதிப்பு, 11-12-1962. உள்ளுறை, தேசிய கீதங்கள், தெய்வப் பாடல்கள், பல்வகைப் பாடல்கள், முப்பெரும் பாடல்கள், புதிதாகச் சேர்க்கப் பெற்ற சில கவிதைகள்-ஆகியவற்றின் தொகுப்பு.

பாரதியார் கவிதைகள்

பதிப்பாசிரியர்கள்: டி.வி.எஸ்.மணி, சீனிவிசுவநாதன்; வெளியீடு, வானவில் பிரசுரம், சென்னை-35. அச்சு-நவ பாரத் பிரின்டர்சு, சென்னை-14. புதிய பதிப்பு, 24-1-1980; மறுபதிப்பு: 26-10-1981; அடுத்த பதிப்பு: 14-2-1982.

உள்ளுறை: பக்திப் பாடல்கள், தேச பக்திப் பாடல்கள், தன் வரலாறும் பிற பாடல்களும், காவியங்கள், தனிப்பாடல்கள்-என்னும் பெரிய தலைப்புகளின் கீழ்ப் பல உள் தலைப்புகளும், பாடல்களும் அமைந்துள்ளன. இறுதியில் புதிய பாடல்கள் சிலவும் இடம்பெற்றுள்ளன. இந்தத் தொகுப்பையும், ஏறத்தாழப் பாரதியார் பாடல்களின் முழுத் தொகுப்பாகக் கருதலாம்.

இவ்வாறு இன்னும் பல தொகுப்புகள் இருக்கலாம். தொகுப்பாசிரியர்கட்கும் பதிப்பாசிரியர்கட்கும் மிகவும் நன்றி செலுத்த வேண்டும். பெரிய செல்வத்தை அவர்கள் மக்கட்குத் தந்துள்ளனர் அல்லவா?

## பாரதிதாசன் நூல்கள்

உலகப் பெருங்கவிஞர்களுள் ஒருவராக மதிக்கத்தக்கவர் பாரதிதாசன். இவர் வளமான-நயம் மிக்க பாடல்களையும் புரட்சி மிக்க பாடல்களையும் இயற்றியதால் பாவேந்தர் என்றும் புரட்சிக் கவிஞர் என்றும் சிறப்புப் பெயர்கள் வழங்கப் பெற்றுள்ளார். இவர் பாடிய பாடல் திரட்டு நூல்களைப்பற்றி இவண் காண்பாம்.

பாரதிதாசன் கவிதைகள்

வெளியீடு: செந்தமிழ் நிலையம், இராமச்சந்திரபுரம், திருச்சி (புதுக்கோட்டை) மாவட்டம். விற்பனை உரிமை:

பாரி நிலையம், சென்னை அச்சு மதராஸ் ரிப்பன் பிரஸ், புதுக் கோட்டை. முதல் பதிப்பாண்டு 1936. பதினைந்தாம் பதிப்பு 1968.

இத் தொகுப்பில் உள்ள கவிதைகளாவன, சுப்பிரமணிய பாரதியாரின் விருப்பப்படி முதல்முதலாகப் பாடிய இரண்டு பாடல்கள் தொடக்கத்தில் உள்ளன. இவை பல இதழ்களில் பத்திரிகைகளில் வெளிவந்துள்ளன. பல மொழிகளிலும் பெயர்க்கப்பெற்றுள்ளன).

பின்னர், காவியம், இயற்கை, காதல், தமிழ், பெண்ணுலகு, புதிய உலகம், பன் மணித்திரள் என்னும் 75 தலைப்புகளில், பாடல்கள் உள்ளன. சில உள்தலைப்புகளும் உண்டு. சஞ்சீவி பர்வதத்தின் சாரல் முதல் பூசணிக்காய் மகத்துவம் ஈறாகப் பல பாடல்கள் உள்ளன. மொத்தப் பக்கங்கள் 188.

அழகின் சிரிப்பு

வெளியீடு: செந்தமிழ் நிலையம், ராயவரம், புதுக் கோட்டை. விற்பனை உரிமை: பாரி நிலையம்; மதராஸ் ரிப்பன் பிரஸ், இராமச் சந்திரபுரம். முதல் பதிப்பாண்டு 1944.

இயற்கைக் காட்சிகளின் கற்பனை வளம் நிறைந்த இந் நூலில், அழகு, கடல், தென்றல், காடு, குன்றம், ஆறு, செந் தாமரை, ஞாயிறு, வான், ஆல், புறாக்கள், கிளி, இருள், சிற் றூர், பட்டணம், தமிழ் ஆகிய பதினாறு தலைப்புகளில் 153 பாடல்கள் உள்ளன. முதல் தலைப்பில் மட்டும் மூன்று பாடல் களும் மற்ற தலைப்புகளில் பத்துப் பத்துப் பாடல்களுமாக 153 பாடல்கள் உள.

தமிழ் இயக்கம்

வெளியீடு: செந்தமிழ் நிலையம், இராமச்சந்திரபுரம், புதுக்கோட்டை. விற்பனை உரிமை: பாரி நிலையம், சென்னை அச்சு: மதராஸ் ரிப்பன்பிரஸ், புதுக்கோட்டை. முதல் பதிப் பாண்டு 1945. 'நெஞ்சு பதைக்கும் நிலை' முதலிய 24 தலைப்பு களில் மொத்தம் 120 பாடல்கள் உள்ளன.

தமிழியக்கம்

வெளியீடு: முல்லைப் பதிப்பகம், சென்னை-மதுரை. அச்சு கமர்சியல் பிரின்டிங் & பப்ளிஷிங் ஹவுஸ், சென்னை. 'நெஞ்சு பதைக்கும் நிலை' முதல் மற்றும் பலர் வரை 24 தலைப்புகள் உள.

இந்த நூல் இரண்டு வெளியீட்டாளர்களால் வெளியிடப் பட்டுள்ளதாகத் தெரிகிறது.

குடும்ப விளக்கு-முதல் பகுதி

முதல் பதிப்பு வெளியிட்டவர்: பாலசுப்பிரமணியம், பாரத சக்தி நிலையம், புதுச்சேரி.

14- ஆம் பதிப்பு: 1955. விநோதன் பிரஸ், சென்னை-1. விற்பனை உரிமை: பாரி நிலையம்.

இதில் குடும்பப் பண்பு விளக்கப்படுகிறது. நல்ல ஒரு குடும்பத்தின் ஒரு நாள் நிகழ்ச்சி கூறப்பட்டுள்ளது.

குடும்ப விளக்கு-இரண்டாம் பகுதி

வெளியீடு: செந்தமிழ் நிலையம், இராமச்சந்திரபுரம். விற்பனை உரிமை: பாரி நிலையம், சென்னை. அச்சு: மதராஸ் ரிப்பன் பிரஸ், புதுக்கோட்டை. முதல் பதிப்பு 1944; ஆறாம் பதிப்பு1953. இது 'விருந்தோம்பல்' பற்றியதாகும். விருந்தோம்பும் முறை, இல்லத் தலைவரின் இளமை நினைவுகள், எதிர்காலத் தலைவரின் காதல், மற்றும் வாழ்க்கை பற்றியவை கூறப்பட்டுள்ளன.

குடும்ப விளக்கு - மூன்றாம் பகுதி

வெளியீடு: பாரதிதாசன் பதிப்பகம், புதுச்சேரி. விற்பனை உரிமை- மலர் நிலையம், சென்னை-1. முதல் பதிப்பு நாள்: 1 - 12 - 1948. ஆறாம் பதிப்பு 1955.

இப்பகுதி திருமணம் பற்றியது. 'வேடப்பனுக்கு மீண்டும் வாய்ப்பு' என்னும் தலைப்பு முதல் 'இன்பத்துறை' என்னும் தலைப்பு ஈறாக 12 பிரிவுகளில் திருமணம் தொடர்பான செய்திகள் சுவையாகத் தரப்பட்டுள்ளன.

குடும்ப விளக்கு

— நான்காம் பகுதியும் ஐந்தாம் பகுதியும் – வெளியீடு:பாரதிதாசன் பதிப்பகம்,புதுச்சேரி.விற்பனைஉரிமை: மலர் நிலையம், சென்னை. நவபாரத் அச்சகம் – சென்னை 1.

நான்காம் பகுதி 'மக்கள் பேறு' பற்றியது. இதில் 'மக்கள் பேறு' முதல் 'திராவிட மக்கள் வாழிய' வரை பல தலைப்புகள் உள்ளன. சில உள் தலைப்புகளும் உண்டு.

ஐந்தாம் பகுதி 'முதியோர் காதல்' பற்றியது. 'மூத்த பிள்ளை முதியவரோடு' என்னும் தலைப்பு முதல் 'நெடிய தூக்கம் நீடிய இன்பம்' என்னும் தலைப்பு வரை பல பிரிவுகள் உள்ளன. சில உள் தலைப்புகளும் உண்டு.

இசை யமுது – (1)

இசை யரங்குகளில் பாடத்தக்க இசைப் பாடல்கள் கொண்டது இத்தொகுப்பு. வெளியீடு: பாரதிதாசன் பதிப்பகம், புதுச்சேரி – பழநியம்மா அச்சகம், புதுச்சேரி. பதிப்பாண்டு: பிப்ரவரி 1949.

இதில், காதல், சிறுவர், தமிழ், பெண்கள் என்னும் நான்கு பெரும் பகுதிகள் உள்ளன. 'வண்டிக்காரன்' என்னும் தலைப்பு முதல் 'அச்சம் தவிர் – மடமை நீக்கு' என்னும் தலைப்பு வரை பல தலைப்புகள் உள்ளன. சில உள் தலைப்புகளும் உண்டு.

இசை யமுது–(2)

இசையமுது நூலின் மற்றொரு பதிப்பு இது. வெளியீடு பாரி நிலையம், சென்னை. அச்சு: நவபாரத் அச்சுக்கூடம்: சென்னை.

பாரி நிலையத்தார் பதிப்புரையில், "புதுவைப் பாரதசக்தி நிலையத்தாரிடமிருந்து முழு உரிமை பெற்றுத் தற்பொழுது இசையமுது எங்கள் நிலையம் வாயிலாக வெளிவருகிறது..." என்று அறிவிக்கப்பட்டுள்ளது.

இந்தப் பதிப்பிலும், காதல் பகுதி, சிறுவர் பகுதி, தமிழ்ப் பகுதி, பெண்கள் பகுதி என்னும் நான்கு பெரும் பிரிவுகள்

உள்ளன. 'வண்டிக்காரன்' முதல் 'தாலாட்டு' வரை மொத்தம் 48 தலைப்புகள் உள்ளன. முதலில் கூறப்பட்டுள்ள பதிப்பில் 'வண்டிக்காரன்' முதல் 'அச்சம் தவிர் - மடமை நீக்கு' என்னும் தலைப்பு வரை பல தலைப்புகள் எனக் குறிப்பிடப்பட்டுள்ளது.

இசையமுது - முதற் பகுதி

வெளியீடு: பாரதிதாசன் பதிப்பகம், புதுச்சேரி-பழநியம்மா அச்சகம், புதுச்சேரி. 'திராவிட நாட்டுப் பண்' முதலாக 'வெற்றிலை வேண்டுமா?' என்பது ஈறாகப் பல தலைப்புகள் உள்ளன.

இசையமுது – இரண்டாம் பகுதி

காதல், தமிழ், பெண்கள், நாடு, சிறுவர், திராவிடர் ஆகிய தலைப்புகளில் பாடல்கள் உள்ளன. வெளியீடு: பாரதிதாசன் பதிப்பகம், புதுச்சேரி. அச்சு: விநோதன் அச்சகம், சென்னை. பதிப்பாண்டு 1952.

இசையமுது என்னும் நூலில், பதிப்புக்குப் பதிப்பு சில வேறுபாடுகள் இருப்பதாகத் தோன்றுகிறது.

திராவிடர் திருப்பாடல்

உள்ளுறை: முதல் பகுதி - இராப்பத்து
இரண்டாம் பகுதி – காலைப்பத்து
திராவிடர் ஒழுக்கம் என்னும் தலைப்பும் உள்ளது.

பாரதி தாசன் கவிதைகள்—இண்டாம் தொகுதி

வெளியீடு: பாரதிதாசன் பதிப்பகம். விநோதன் அச்சகம், சென்னை. முதல் பதிப்பாண்டு 1949. இரண்டாம் பதிப்பு 1952. இரண்டாம் பதிப்பில் சில புதிய பாடல்கள் சேர்க்கப் பட்டுள்ளன.

தலைப்புகள்: 1. சிறுவர் காப்பியம், 2.இயற்கை, 3.காதல், 4.பாரதி, 5. திராவிடநாடு, 6. திராவிடன், 7. பன்மணித்திரள். பல உள் தலைப்புகளும் உண்டு.

பாரதி தாசன் கவிதைகள்—மூன்றாம் தொகுதி

வெளியீடு: பாரதிதாசன் பதிப்பகம், புதுச்சேரி. அச்சு நவபாரத் பிரஸ், சென்னை. பதிப்பாண்டு: ஆகஸ்ட், 1955.

உள்ளுறை: 1.கடல் மேற் குமிழிகள், 2.அமிழ்து எது?, 3.அகத்தியன் விட்ட புதுக்கரடி, 4.நல்லமுத்துக் கதை, 5.ஏற்றப் பாட்டு, 6.திராவிடர் திருப்பாடல், 7.சமத்துவப் பாட்டு 8.புரட்சித் திருமணத் திட்டம்.

தேனருவி

இசைப் பாடல்களின் தொகுப்பு இது. வெளியீடு: பாரதி தாசன் பதிப்பகம், புதுச்சேரி. அச்சு: பாரதி பிரிண்டர் சென்னை. ஆண்டு: ஏப்ரல், 1956.

பொருள் அடக்கம்: 1.தமிழ், 2.தமிழர்க்கு, 3.காதல், 4. துயருற்ற மகளிர், 5.துறைப் பாடல்கள், 6. இயற்கை எழில், 7.உயர்ந்தோர், 8.பல்வகை – இவை பெரிய தலைப்புகள். பல உள்தலைப்புகளும் உண்டு. 'தன்னேரிலாத தமிழ்' முதல் 'அன்பு வாழ்வு கொண்ட நீவிர்' வரை மொத்தம் 77 பாடல் கள் உள்ளன.

இந்நூலில் – ஆசிரியர் முன்னுரையில், "……அவ்வப்போது தோன்றிய பாடல்களின் தொகுப்பே 'தேனருவி'……அகம் – புறம் பற்றிய பழந்தமிழ்ச் செய்யுட்களின் உரையாக அமைந்த பாட்டுக்கள் பல இதில் காணப்படும்…" என்று அறிவிக்கப்பட் டுள்ளது.

இளைஞர் இலக்கியம்

வெளியீடு: பாரி நிலையம், சென்னை. முதல் பதிப்பு 1958. மூன்றாம் பகுதி: பிப்ரவரி, 1964. மாருதி பிரஸ், சென்னை–14.

ஐந்து வயது இளைஞர் முதல் பல்கலைக் கழக மாணாக் கர் வரை உள்ள இளைஞர் பாடல்களின் தொகுப்பு இது. தலைப்புகள்; தமிழ், இயற்கை, அறிவு, ஊர்தி,தொழில், உயிர் கள், தாலாட்டும் துயிலெழுப்பும், சிரிப்பு, சிறுகதைப் பாட்டு ஆகிய ஒன்பது தலைப்புகள் உள்ளன. பல உள் தலைப்புகளும் உண்டு.

முல்லைக் காடு

வெளியீடு: கலை மன்றம், சென்னை – ஸ்ரீமகள் அச்சகம், சென்னை. மூன்றாம் பதிப்பு; 1955.

உள்ளுறை: இயற்கைப் பகுதி, தமிழகப் பகுதி, காதல் பகுதி: நகைச் சுவைப் பகுதி, சிறுவர் பகுதி என ஐந்து பகுதிகள் உள்ளன. 'அதிகாலை' என்பது முதல் 'வழி நடத்தல்' என்பது வரை மொத்தம் 30 தலைப்புகள் உள்ளன.

தமிழர்களைத் தட்டி எழுப்பித் தமிழ் உணர்வைப் புகட்டியவர்களுள் மிகவும் சிறந்தவர் பாரதி தாசனார், அதனால், மானமுள்ள தமிழர்கள் நெஞ்சில் என்றும் நீங்காது நிற்கின்றார் இவர். இந்த உணர்வு பெறாத தமிழர்கள் இப்போது மிகுதியாய் இருப்பதாகத் தெரிகிறது. மீண்டும் மீண்டும் பாரதி தாசனார்கள் தோன்ற வேண்டும்போல் நிலைமை இருக்கிறது.

## முப்பெருங் கவிஞர்களின் படைப்புகள்

### 1. தேசிய விநாயகம் பிள்ளை

கவிமணி தேசிக விநாயகம் பிள்ளையின் பாடல்கள் எளிமையும்இனிமையும் சுவையும் பொருந்தியவை. ஆற்றொழுக்காகச் செல்லும் அவர் பாடல்கள் சிறார் முதல் முதியோர் வரை சுவைத்துப் படிக்கத் தக்கவை. சில நூல்கள் வருமாறு:

மலரும் மாலையும் (1)

ஒருவரின் உதிரிப் பாடல்களின் தொகுப்பைத் 'தனி மலர் மாலை' எனலாம். ஒருவரின் சிறு நூல்களில் தொகுப்பைத் 'தனி மாலைத் திரள்' எனலாம். இந்த இரண்டும் கலந்ததே 'மலரும் மாலையும்' என்னும் இந்தத் தொகுப்பாகும். ஒவ்வொரு பொருளைப் பற்றிய தனித்தனிப் பாடல்களும் இந்நூலில் உள்ளன. சில சிறுசிறு நூல்களும் இத்தொகுப்பில் உள்ளன. அதனால் நூலுக்கு 'மலரும் மாலையும்' என்னும் பெயர் வழங்கப் பெற்றுள்ளது.

இதன் முதல் பதிப்பு 30 – நவம்பர் – 1938. அச்சு: சாந்தி பிரஸ், சென்னை. வெளியீடு: பாரி நிலையம், சென்னை. உள்ளுறை: 1. பக்தி மஞ்சரி, 2. இலக்கியம், 3. சரித்திர கவிதை, 4. காட்சி இன்பம், 5. இயற்கை இன்பம், 6. மழலை மொழி, 7. உள்ளமும் உணர்வும், 8. வையமும் வாழ்வும், 9. சமூகம் 10. தேசியம், 11. வாழ்த்து, 12. சரம கவி, 13. கதம்பம், 14. பிற்சேர்வு.

'சரசுவதி துதி' முதல் 'விண்ணப்பம்' வரை 134 உட்பிரிவு கள் உள்ளன. இறுதிப் பெரிய தலைப்பாகிய 'பிற்சேர்வு' என் பதில் 'பறவையின் சிந்தனை' முதல் 'அரியர் யார்?' என்பது வரை ஏழு உட்பிரிவுகள் உள்ளன. சுவைக்கச் சுவைக்கத் தேனொழுகும் பாடல்களின் தொப்பு இது.

மலரும் மாலையும் (2)

ஆறாம் பதிப்பு: 26 சனவரி 1956. பாரிநிலைய வெளியீடு: ராயல் பிரின்டிங் ஒர்க்ஸ், சென்னை. தலைப்புகளில், முதல் (1938 ஆம்) பதிப்பினின்றும் இப்பகுதி சிறிது மாறுபடுகிறது வருமாறு:

1. பக்தி மஞ்சரி, 2. இலக்கியம், 3. சரித்திர கவிதை, 4. மழலை மொழி, 5. இயற்கை இன்பம், 6. காட்சி இன்பம், 7. கதைப் பாட்டு, 8. உள்ளமும் உணர்வும், 9. வையமும் வாழ்வும், 10. சமூகம், 11. தேசியம், 12. வாழ்த்து, 13. சரம கவி, 14. கதம்பம், 15. முத்துக் குவியல்-இவை பெரிய தலைப்பு கள்.

'சரசுவதி துதி' முதல் 'குன்றக்குடி அடிகளார் வாழ்த்து' வரை 201 உள் தலைப்புகள் உள்ளன.

தேசிக விநாயகம் பிள்ளையின் கீர்த்தனங்கள்

சென்னை - பாரி நிலைய வெளியீடு: பொன்னி அச்சகம், சென்னை. பல காலங்களில் பல இதழ்களில் வந்த கீர்த்தனப் பாடல்களின் தொகுப்பு. 'நாமகள் துதி' முகல் 'விண்ணப்பம் வரை' 75 தலைப்புகளில் பாடல்கள் உள்ளன. பதிப்பாண்டு 1953.

குழந்தைச் செல்வம்

சென்னை - பாரி நிலைய வெளியீடு. சாந்தி பிரஸ் சென்னை. ஏப்ரல், 1954.

பெரிய தலைப்புகள்: 1. மழலை மொழி, 2. இயற்கை இன்பம், 3. காட்சி இன்பம், 4. கதைப் பாட்டு, 5. பஞ்சா மிர்தம். உள் தலைப்புகள்: 'முத்தம் தா' முதல் 'திருவடி தொழுகின்றோம்' வரை 58 தலைப்புகள்.

காதல் பிறந்த கதை

கவிமணியின் கவிதைத் தொகுதி. அருள் நிலையம், இராமச் சந்திரபுரம். மதுராஸ் ரிப்பன் பிரஸ், இராமச் சந்திரபுரம், 1-7-1947. காதல் பிறந்த கதை முதல் திருவள்ளுவர் வரை 39 தலைப்புகளில் பல பாடல்கள் படங்களுடன் உள்ளன. இறுதிப் பத்துப் பாடல்கள் கீர்த்தனங்கள். முதல் பாடலின் தலைப்புப் பெயர் நூற்பெயராகத் தரப்பட்டுள்ளது.

இளந்தென்றல்

சிறுவர்க்கான பாடல்கள் கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை. புதுமைப் பதிப்பகம், சென்னை. விஷு, சித்திரை. 1941. கவிமணியின் கவிதைத் தொகுப்பிலிருந்து திரட்டியது. சரசுவதி துதி முதல் வாழ்த்து ஈறாக 46 தலைப்புகளில் படங் களுடன் பலபாடல்கள் உள்ளன.

## 2. நாமக்கல் கவிஞர்

நாமக்கல் கவிஞர் வெ. இராமலிங்கம் பிள்ளை நாட்டு விடுதலையில் பங்கு கொண்டவர். அண்ணல் காந்தியடிகள்பால் மிக்க ஈடுபாடு கெண்டவர். அவருடைய சுவையான சில படைப்புகள் வருமாறு:—

தமிழன் இதயம் (1)

வெளியீடு; தமிழ்ப் பண்ணை, சென்னை - 17. முதல் பதிப்பாண்டு - 1922. 'கத்தியின்றி ரத்தமின்றி' என்னும் தலைப்பு முதல் 'வாழ்க வாழ்க' என்பதுவரை பல தலைப்பு களின் கீழ்ப் பாடல்கள் உள்ளன. இது தமிழ்ப் பண்ணையின் முதல் வெளியீடு.

தமிழன் இதயம் (2)

சென்னை - தமிழ்ப் பண்ணை வெளியீடு. 5 ஆம் பதிப்பு, மார்ச்சு, 1946. அச்சு: இந்தி பிரச்சார் பிரஸ், சென்னை - 17. 'தமிழன் இதயம்' 'முதல் வாழ்க வாழ்க' வரை 82 தலைப்பு களில் பாடல்கள் உள்ளன.

பிரார்த்தனை

தெய்வம், பெரியோர், தேசம், கொடி ஆகிய பொருள்

மேல் பல இனப்பாடல்கள் பாடிப்பிரார்த்தனை செய்துகொண் டுள்ளார் கவிஞர். முதல் பதிப்பு - தமிழ்ப் பண்ணை, சென்னை -1922. அடுத்த பதிப்பு - எஸ்.வி. இரத்தினவேலு முதலியார் & சன். வெளியீடு, திருச்செங்கோடு. 1938.

சங்கொலி

ஆ - நாமக்கல்லார். வி.உ. தமிழ்ப் பண்ணை, சென்னை. தியாகி அச்சகம், விழுப்புரம். முதல்பதிப்பு - 1944. இரண் டாம் பதிப்பு - 1 – 12 – 1945. உ. சங்கொலி முதல் தமிழ் நாடு வாழ்க வரை 52 தலைப்புகளில் பாக்கள் உள்ளன. முதல் தலைப்பு பெயராயிற்று. இவர் நூல்கள் சில, வேறு தலைப்பு களிலும் உள்ளன.

தமிழ்த் தேன்

வெளியீடு: இன்ப நிலையம், சென்னை-4 - முதல் பதிப்பு - 1953, இரண்டாம் பதிப்பு 1956. செங்குந்த மித்திரன் அச்சகம்: சென்னை – 1.

உள்ளுறை; 1. தமிழ் மொழி, 2. இலக்கியம், 3. பெரியோர் கள், 4. அரசியல் - ஆக 4 பெரிய தலைப்புகள் உள்ளன. 'தமிழ்' என்பது முதல் 'வாழ்க வாழ்க உலகெலாம்' என்பது வரை பல உள் தலைப்புகள் உள்ளன.

மலர்ந்த பூக்கள்

தொகுப்பு: நாமக்கல் கவிஞரின் குமாரர் அமிர்தலிங்கம். வெளியீடு: கவிஞர் பதிப்பகம், கோவை. அச்சு: மெட்ரோ பாலிடன் பிரின்டர்ஸ், சென்னை.

உள்ளுறை: அரசியல், சமூகம், மொழி முதலிய கவிகளுள் சிறந்த பல பாடல்களின் தொகுப்பு. 'சூரியன் வருவதுயாராலே, என்பது முதல் 'வாழி' என்பது வரை 71 தலைப்புகள் உள்ளன.

நாமக்கல் கவிஞரின் பாடல்கள்

தொகுப்பு: தணிகை உலகநாதன், சென்னை. வெளியீடு தி லிட்டில் பிளவர் கம்பெனி, சென்னை–17. அச்சு-மாருதிபிரஸ் சென்னை-14.

உள்ளுறை: 'தெய்வத்திருமலர்' என்பது முதல் 'பல் சுவை மலர்' என்பது வரை பதினொரு பெரிய தலைப்புகள்

உள்ளன. 'பரமன்' முதல் 'வாழ்க வாழ்க' என்பதுவரை 306 உள்தலைப்புகள் உள்ளன.

காந்தி அஞ்சலி

ஆ. நாமக்கல் கவிஞர், கவிஞர் பதிப்பகம், கோவை. நவ பாரத் பிரஸ், சென்னை. 3ஆம் பதிப்பு- மன்மத. காந்திபற்றிப் பல தலைப்புகளில் பாடல்கள்.

நாமக்கல் கவிஞரின் பாடல்களுள், "கத்தி யின்றி ரத்த மின்றி யுத்தமொன்று வருகுது", "தமிழர் என்றோர் இனம் உண்டு-தனியே அவர்க்கோர் குணமுண்டு", "தமிழன் என்று சொல்லுடா தலைநிமிர்ந்து நில்லுடா'- முதலிய சில பாடல்கள் மிகவும் புகழ் வாய்ந்தவை.

3. சுத்தானந்த பாரதியார்

சுத்தானந்தரின் கவியரங்கம்

சுத்தானத்த பாரதியாரின் கீர்த்தனைப் பாடல்கள் பற்றி வேறு தலைப்பில் எழுதப்பட்டுள்ளது. இது அவருடைய கவியரங்கப் பாடல்களின் தொகுப்பு. வெ-சுத்தானந்த நூலகம், சென்னை. 1963. உ – கலைமணித் தெய்வம் 'முதல் வாழி வாழி வரையிலானநூறுகவியரங்கப் பாடல்கள் உள்ளன. வானொலிக் கவியரங்கப் பாடல்களும் உண்டு.

உலகப் பாட்டு

ஆ – சுத்தானந்த பாரதி. வெ – சுத்தானந்த நூலகம், சென்னை. 1962. உ – சுத்த சத்தி தாண்டவம் முதல் ஜயக் கொடி வரையிலான 90 தலைப்புகள்.

முன்னேற்ற முழக்கம்

ஆ –சுத்தானந்த பாரதியார். வெ-சுத்தானந்தர் நூலகம், சென்னை, 1963. 'முன்னேறு மனிதா' முதல் 'தேனும் பாலும் வரை' 124 தலைப்புகளில் பாடல்கள் பல.

சங்க நாதம்

ஆ - சுத்தானந்த பாரதியார். சுத்தானந்த நூலகம், சென்னை. சுத்தானந்த அச்சகம். 1963. ஜய ஜய கீதம் முதல் 'வல்லரசு' வரை 86 தலைப்புகள் -பல இனப் பாடல்கள். நாடு வீறு பெறப் பாடிய ஆவேசப் பாடல்கள்.

கவியோகியின் பாடல்கள்

ஆ—சுத்தானந்த பாரதியார். சுத்தானந்த நூலகம், சென்னை. 1962 முதல் 1969 வரை அச்சான எட்டு நூல்கள் கொண்ட திரட்டு. அவை: உலகப் பாட்டு, கவியரங்கம், சிங்க நாதம், இந்திய சரித்திரக் கும்மி, நெஞ்ச மாலை, குழந்தை இன்பம், முன்னேற்ற முழக்கம், காந்தி காலட்சேபம் - ஆகியவை. இவர் நூல்கள் சில, வேறு சில தலைப்புகளிலும் உள்ளன.

கவிமணி, நாமக்கல்லார், சுத்தானந்தர் ஆகிய மூவரும் வயதாலும் தரத்தாலும் ஒத்த மதிப்புடையவராகப் போற்றப் படுகின்றனர்.

## தமிழ் இசைப் பாடல்கள்

தமிழ் நாட்டில் தமிழ் அல்லாத பிற மொழிகளில் இசை யரங்குகள் பல்லாண்டுகளாக நடைபெற்று வந்தன. இசை யரங்கின் இறுதியில் 'துக்கடா' என்னும் பெயரில் ஒரு தமிழ்ப் பாடல் இடம் பெறும். இதனினும் தமிழனுக்கு உயிரை விடு வதற்கு ஏற்ற மானக்கேடு வேறு யாது உளது? ஆனால், இந் நிலையைக் கண்டும், தமிழன் உண்டும் உடுத்தும் பிள்ளை பெற்றும் உயிரோடு (மானம் விட்டு) வாழ்ந்துகொண்டிருந் தான்.

பார்த்தார் அண்ணாமலைப் பல்கலைக் கழகம் நிறுவிய அண்ணாமலை செட்டியார். இந்த இழிநிலையைப் பொறுக்க முடியாதவராய், இசையரங்குகள் தமிழில் நடைபெற வேண்டும் என்னும் நோக்குடன் 'தமிழ் இசை இயக்கம்' தொடங்கினார். அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் 11 – 5 – 1929 ஆம்நாள் தமிழ் இசைக் கல்லூரிப் பிரிவு தொடங்கினார். தமிழ் நாடெங்கணும் இந்த இயக்கம் இடம்பெறவேண்டும்- தமிழில் இசைப் பாடல்கள் இயற்றல் வேண்டும் - உள்ள பாடல்களைத் திரட்டி நூலாக்க வேண்டும்- தமிழில் பாடவேண்டும் - முதலிய திட்டங்களைத் திட்டினார்.

அண்ணாமலை நகரிலும் பிற விடங்களிலும் தமிழிசை மாநாடுகள் நடத்தினர். இந்த இயக்கத்திற்குச் சிலர் எதிர்ப்பும்

தெரிவித்தனர். எதிர்ப்பு தெரிவித்தவர்களுள், அம்மா - அப்பா என்று தமிழ் பேசிய நன்றி கெட்ட நாய்களும் உண்டு. முதலில் பத்தாயிரம் உருபாவும் பின்னர்ப் பதினையாயிரம் உருபாவும் இதற்கென முதல் பொருளாக வைத்தார். இந்தக் தொகை அந்தக்காலத்தில் மிகப் பெரிய தொகையான மதிப்பு உடையது. தமிழ் இசை அறிஞர்கட்கு நன்கொடைகளும் பரிசுகளும் வழங்க ஏற்பாடு செய்தார்.

23—1—1942 ஆம் நாள் அண்ணாமலை நகரில் 'இசைத் தேர்ச்சியாளர் கழகம்' நிறுவப்பெற்றது. பலர் உறுப்பின ராயினர்; தம்மிடம் உள்ள பாடல்களை அனுப்பவும் சுரம் அமைத்துத் தரவும் உடன்பட்டனர். பல திட்டங்கள் திட்டப் பட்டன.

25—1—1942 ஆம் நாள் அண்ணாமலை நகரில் இசை மாநாடு நடைபெற்றது. பலரும் சேர்ந்து பாடல்கள் தொகுத் தனர். 28—1—1942 ஆம் நாள், இசைக்கல்லூரி ஆசிரியர்கள் 916 தமிழ் இசைப் பாடல்களைத் தொகுத்தனர். அவையாவன:

முத்துத் தாண்டவர் பாடல்கள் 84, மாரிமுத்துப் பிள்ளை 14, இராமலிங்க சாமிகள் 7, வேத நாயகம் பிள்ளை 192, அருணா சலக் கவிராயர் 193, இராமசாமி சிவன் 14, ஆனையா 8, அச்சுத தாசர் 240, பராங்குச தாசர் 50, திருவிளையாடல் புராணக் கிர்த்தனை 12, கவி குஞ்சர பாரதி 90, தசமஸ்கந்தக் கீர்த்தனை 12 - ஆக மொத்தம் 916 ஆகும். பின்னர், கோபால கிருஷ்ண பாரதியாரின் 200 கீர்த்தனங்கள் சேர்க்கப்பட்டன.

அண்ணாமலை நகரில் முதலில் நடைபெற்ற இசையிகலில் பின்வரும் ஐவர்க்குப் பரிசுகள் வழங்கப் பெற்றன:

20 பாடல்கள் தந்த இலக்குமணப் பிள்ளைக்கு முதல் பரிசு தரப்பட்டது. 8 பாடல் தந்த கீழ்வேளூர் மீனாட்சி சுந்தரம் பிள்ளைக்கும்- 6பாடல் தந்த மாயவரம் விசுவ நாத சாத்தி ரிக்கும் இரண்டாம் பரிசு சமனாகப் பகிர்ந்து தரப்பட்டது; 6 பாடல் தந்த வைணிககாயக வித்துவான் கிருஷ்ணமாச்சாரி யாருக்கும்- 6 பாடல்தந்த பாப நாசம் சிவத்திற்கும் மூன்றாம் பரிசு சமனாகப் பகிர்ந் தளிக்கப்பட்டது.

இந்த ஐவரின் மொத்தப் பாடல்கள் 46 ஆகும். இவற்றுடன், இலக்குமணப் பிள்ளை இயற்றிய அண்ணாமலைப் பல்கலைக் கழக வாழ்த்துப்பாடல் ஒன்றும், 'தமிழ்த் தாயைப் போற்றல்' (General) என்னும் பாடல் ஒன்றும் சேர்க்கப் பெற மொத்தம் 48 பாடல்களும் 'தமிழிசைப் பாடல்கள் - முதல் தொகுதி' என்னும் பெயருடன் வெளியிடப் பெற்றன. இதைப் பற்றிய விவரம் வருமாறு:

முதல் தொகுதி -பரிசுபெற்ற தமிழிசைப் பாடல்கள்

ஐவர் இயற்றிய 48 பாடல்களின் தொகுப்பு. சுரதாளக் குறிப்பு: அண்ணாமலைப்பல்கலைக்கழக இசைக் கல்லூரி வீணை ஆசிரியர் கோமதி சங்கர ஐயர். பாடல் திருத்தம்: மு. அருணாசலம் பிள்ளை - பார்வை: சி.வ. பிள்ளை. அச்சு: பாண்டியன் அச்சகம், சிதம்பரம். பதிப்பாண்டு: முதல் பதிப்பு 1943; இரண்டாம் பதிப்பு 1958.

இந்த முதல் தொகுதிக்கு, இசைக் கல்லூரி முதல்வர் கா. சுப்பிரமணியப் பிள்ளை 73 பக்கம் கொண்ட நீளமான முகவுரை எழுதியுள்ளார். இம் முகவுரையில் உள்ள சில குறிப்புகள் வருமாறு:—

பழந்தமிழ்ச் சங்க நூல்களில் முத்தமிழ் - இசைக் கருவிகள் -இசைகள் பற்றிய பேச்சு. இசை நுணுக்கம் முதலிய இசை நூல்கள் இருந்தமை. ஆரிய நாகரிகத்தால் தமிழிசை அழிந்தமை. தியாகராசய்யர் தமது தாய்மொழியாகிய தெலுங்கில் பாடியவற்றையே இசையரங்கில் மற்றவரும் பாடுவது. வட மொழியிலும் பாடுவது. இறுதியில் இரண்டொரு தமிழ்ப் பாடலை ஆரவார வரவேற்புடன் பாடுதல்.

அண்ணாமலை செட்டியார் முதலியோர் தமிழ் இசை இயக்கம் தொடங்கல் - பலர் வரவேற்பு - சிலர் எதிர்ப்பு - மீறி வளர்ச்சி.

முத்தமிழ் என்பது போன்ற பாகுபாடு வேறு எம்மொழியிலும் இல்லாமை. முதல் சங்கத்திலிருந்தே தமிழ் இசை இருந்தமை. பெருநாரை, பெருங்குருகு முதலிய இசை நூல்கள்

முதல் சங்ககாலத்தில் இருந்தமை. அகத்தியர் முத்தமிழ் இலக்கணம் இயற்றியமை.

இடைச் சங்கம் - தொல்காப்பியத்தில் 'நரம்பின் மறை' என்ற பெயரால் இசை நூல் குறிக்கப்பெற்றுள்ளமை.

கடைச் சங்க காலத்தில்-சிற்றிசை, பேரிசை முதலிய இசை நூல்கள் இருந்தமை. சிலப்பதிகார உரையாசிரியர் அடியார்க்கு நல்லார், பண்டைய இசை-நாடக நூல்கள் அழிந்தன என்று கூறியுள்ளமை.

"...ஆடல் பாடல் இசையே' என்ற சிலப்பதிகார அடியிலுள்ள இசை என்பதற்குப் பொருள் கூறுமிடத்து, இசை யென்றது, 'நரம்பு அடைவால் உரைக்கப்பட்ட பதினோராயிரத்துத் தொள்ளாயிரத்துத்தொண்ணூற்று ஒன்றாகிய ஆதியிசைகளும் என்றமையால் இசையின் விரிவனைத்தையும் நுட்பமாகப் பண்டைத் தமிழர் ஆய்ந்து கணக்கிட்டனர் என்பது தெளிவாம்...' (முகவுரை: பக்கம் 4,5)

ஏழாம் நூற்றாண்டின் தொடக்கத்தில், முதலாம் மகேந்திர வர்மப் பல்லவன் காலத்தில், சரிகமபதநி-முறை வந்தமை -அப்போது கீர்த்தனங்கள் இல்லாமை. 3 ஆம் நூற்றாண்டு முதல் 7 ஆம் நூற்றாண்டு வரை சமணர் கலப்பால் தமிழிசை தளர்வுற்றமை. தேவாரங்கள் தமிழ்ப்பண்களுடன் பாடப்பெற்றமை.8 ஆம் நூற்றாண்டளவில் திருவாய் மொழி- திருப்பாடல்களும் தமிழ்ப் பண்ணுடன் பாடப் பெற்றமை கி.பி. 12 ஆம் நூற்றாண்டிற்குப் பின்னரே, இப்போது சிறப்பாகப் பேசப்படுகின்ற வடமொழி இசை நூல்கள் தோன்றினமை ...

முதலிய செய்திகள் கா. சுப்பிரமணியப் பிள்ளையின் 73 பக்க முகவுரையில் உள்ளன.மேலே தரப்பெற்றுள்ள செய்திகள் 73 பக்க முகவுரையின் முதல் 14 பக்கங்களில் உள்ளவற்றின் சுருக்கக் குறிப்பேயாகும். அடுத்த 59 பக்கச் செய்திகள் விரிவஞ்சி விடுக்கப் பெற்றன.

இந்த முதல் தொகுதியின் மாதிரிக்காக, இந்தத் தொகுதியில் இரண்டாம் பாடலாக உள்ள "தமிழ்த் தாயைப் போற்றல்' என்னும் பாடல் பின்வருமாறு:—

தமிழ்த் தாயைப் போற்றல் (General)

இராகம்: நாத நாமக் கிரியை
தாளம் :ஆதி.

51 ஆவது மேளத்தில் பிறந்தது

ஆ: ச ரி கா ம ப த நீ
அ: த ப ம கா ரி ச நீ சா

பல்லவி

தாயைப் போற்றுங்கள் — பைந்தமிழ்த்
தாயைப் போற்றுங்கள் — நந்தமிழ்த் — தாயைப்

அனுபல்லவி

தூய தொன்மொழி, தொட்டிலில் நாம் கற்ற
நேய நன்மொழி நித்திய வான் மொழித்—தாயைப்

சரணம்

1. மண்ணில் தலைசிறந்த வான்கவி கம்பர்
மக்களறம் வகுத்த வள்ளுவத் தேவர்
ஒண்மணி வாசகர் கண்மணி வள்ளலார்
உத்தம ராகிய இத்தகையோர்க் குற்ற - தாயைப்

2, தேவர் விருப்புறும் மூவர். மெய்ஞ்ஞானத்
தேற்றருந் தாயு மானவர், தொண்டர்
யாவருக்கும் தலையாய கிழார், சங்கம்
ஏவிய கீரர், இப்பாவலரைத் தந்த - தாயைப்

3. பொய் கொண்ட பூமியில் மெய்கண்ட தேசிகர்,
புங்கவர் வான்திரு மந்திரந் தந்தவர்,
வைகுந்தங் காட்டிய வண்சட கோபர்
மன்குல சேகரர், இன்னவரைப் பெற்ற - தாயைப்

என்பது முதல் தொகுதியின் இரண்டாம் பாடல். 'தமிழிசைப் பாடல்கள் என்னும் தலைப்பில் 21 தொகுதிகளை அண்ணா மலைப்பல்கலைக்கழகம் வெளியிட்டுள்ளது. இனி முறையே அவற்றைக் காண்பாம்

இரண்டாம் தொகுதி

தமிழ்க் கீத வர்ணங்கள்

டைகர் வரதாச் சாரியார் முதலிய பதினொருவர் எழுதிய பாடல்களின் தொகுப்பு இது. முதல்பதிப்பு 1943. இரண்டாம் பதிப்பு 1953. அ.ம.ப.க.க. பாடல் திருத்தம்; மு. அருணாசலம் பிள்ளை. இசைக் கல்லூரிப் பேராசிரியர் க. பொன்னையா பிள்ளை 3-11-1943நாள் இட்டு முகவுரை எழுதியுள்ளார். சுர தாளக் குறிப்பு: கோமதி சங்கர ஐயர். பொன்னையா பிள்ளையின் முகவுரையிலிருந்து சிறிது வருமாறு;—

"இப்புத்தகத்தில், இசையின் ஆரம்பப் பாடலாகிய சுர வரிசை-இரட்டைச் சுர வரிசை அலங்காரம் என்பனவும், 50 சஞ்சாரி கீதங்களும், 32 ஆதிதாள வர்ணங்களும், 10 அடதாள வர்ணங்களும், ஒரளவாக இலக்கண கீதம் சுரகதி, சதிசுரம் பிரபந்தம் முதலியவையும் சேர்க்கப் பெற்றுள்ளன... இதுவரை வேற்று மொழிகளில் வெளிவந்த புத்தகங்களில் 50 கீதங்கள் அடங்கிய புத்தகம் ஒன்றுமே யில்லை யென்பது குறிப்பிடத் தக்கது... ...இங்ஙனம், க. பொன்னையா பிள்ளை, 3-11-1943".

மூன்றாம தொகுதி

இதன் முதல் பகுதி: 1943. இரண்டாம் பதிப்பு:1960. அச்சு: பாண்டியன் அச்சகம், சிதம்பரம். மொத்தப் பாடல்கள் – 75. சுரதாளக் குறிப்பு: கோமதி சங்கர ஐயர்.

ஆசிரியர்கள்: நீலகண்டசிவன், டி. இலக்குமணப் பிள்ளை. கோபால கிருஷ்ண பாரதி, அச்சுத தாசர், வே.நா. பிள்ளை, அருணாசலக் கவிராயர் ஆகிய அறுவரின் கீர்த்தனங்களும் பதங்களும் இத்தொகுப்பில் உள்ளன.

நான்காம் தொகுதி

இற்றைக்கு 350 ஆண்டுகட்கு முன் தோன்றிய முத்துத் தாண்டவரின் பாடல் தொகுப்பு இது. மொத்தப் பாடல்கள் 60 கீர்த்தனங்களும் 25 பதங்களும். இசை: திருப்பாம்புரம் குழல் வித்துவான் டி.என். சாமிநாதப்பிள்ளை. முதல் பதிப்பு,

1943; இரண்டாம் பதிப்பு 1955. அண்ணாமலைப் பல்கலைக் கழக வெளியீடு.

ஐந்தாம் தொகுதி

ஆசிரியர் பொன்னையாபிள்ளை. இரண்டு பாகம் கொண்டது. முதல் பாகம் இசையியல்: இரண்டாம் பாகம் – இசைக் கருவிகள். இதுபாடல் தொகுப்பன்று. இசையிலக்கண (Theory) நூலாகும்.

ஆறாம்தொகுதி

நரிமணம் கோபால கிருஷ்ண பாரதியாரின் 89 உருப்படிகள் இத்தொகுப்பில் உள்ளன. சுரதாளக் குறிப்பு கோமதி சங்கர ஐயர். முதல் பதிப்பு 1940; இரண்டாம் பதிப்பு 1955. அச்சு யுனைடெட் பிரிண்டர்சு, திருச்சி. அ.ப.க.க.வெளியீடு.

ஏழாம் தொகுதி

பெரியசாமித் தூரன் பாடல்கள். இசை: சிவராம கிருஷ்ண பாரதி.

எட்டாம் தொகுதி

இராம நாடக இசைப் பாடல்கள் சிலவற்றின் தொகுப்பு இது. ஆசிரியர்: சீர்காழி அருணாசலக் கவிராயர், செப்பம்: மு. அருணாசலம் பிள்ளை. சுரதாளக் குறிப்பு கோமதி சங்கர ஐயர். ஆண்டு 1945. அண்ணாமலைப்பல்கலைக் கழக வெளியீடு. ஆசிரியர் வரலாறு: பிறந்த ஊர் தில்லையாடி; பிறப்பு 1634-விசய ஆண்டு; 67 ஆம் அகவையில் இறுதி. இத் தொகுப்பின் மொத்தப் பாடல்கள் 50.

ஒன்பதாம் தொகுதி

மொத்தப் பாடல்கள் 54. பதிப்பாண்டு 1945. அ.ப.க.க வெளியீடு. பாடல் ஆசிரியர்கள்: (1) தில்லை விடங்கன் மா. முத்தாப் பிள்ளை, (2) சேவற்குளம் கந்தசாமிப் புலவர், (3) நகரம் முத்து வீரப்பக் கவிராயர்- ஆகிய மூவர். இசையமைத்தவர்கள்: திருப்பாம்புரம் டி.என். சாமிநாத பிள்ளை, டி.என். சிவசுப்பிரமணியப் பிள்ளை – ஆகிய இருவர்.

பத்தாம் தொகுதி

மொத்தப் பாடல்கள் 66. ஆசிரியர்: நகரம். முத்துசாமிக் கவிராயர். இசை: டி.என் – சாமிநாதப் பிள்ளை. பதிப்பாண்டு: 1946. அ.ப.க.க. வெளியீடு.

பதினோராம் தொகுதி

73 பாடல்கள். ஆசிரியர் சுந்தானந்த பாரதியார். ஆய்வும் சுரதாளக் குறிப்பும்: கோமதி சங்கர ஐயர். இசையமைப்பு: டைகர் வரதாச் சாரியார், க. பொன்னையா பிள்ளை, எம். எம். தண்டபாணி தேசிகர் முதலியோர். முதல் பதிப்பு 1945; இரண்டாம் பதிப்பு 1959. பாண்டியன் அச்சகம், சிதம்பரம்.

பன்னிரண்டாம் தொகுதி

இது பாடல்களின் தொகுதியன்று; மிருதங்கப் பாடமுறை பற்றியது. அமைப்பு: மயிலாட்டூர் ப. சாமி ஐயர், கோமதி சங்கர ஐயர். அ.ப.க.க. வெளியீடு.

பதின் மூன்றாம் தொகுதி

75 பாடல்கள். ஆசிரியர்: பாலகவி வயிநாகரம் வே. இராம நாதன் செட்டியார். இசை: டி.என். சாமிநாதப் பிள்ளை. அ.ப.க.க. வெளியீடு. ஆண்டு 1946.

பதினான்காம் தொகுதி

மாணிக்கப் பாட்டு. ஆசிரியர் சுத்தானந்த பாரதியார். சுரம்: கோமதி சங்கர ஐயர். பாடல்கள்: நூறு. 1945 – 46 அ.ப.க.க. வெளியீடு.

பதினைந்தாம் தொகுதி

ம.ப. பெரிய சாமித் தூரனின் 75 பாடல்கள். இசை: என்' சிவராமகிருஷ்ண பாகவதர். அ.ப.க.க. வெளியீடு-1947.

பதினாறாம் தொகுதி

வையைச் சேரி இராமசாமி ஐயரின் 65 பாடல்கள். இசை: காளிதாஸ் நீலகண்ட ஐயர். சுரம்: கோமதி சங்கர ஐயர். வரலாற்றுக் குறிப்பும் ஆய்வும்: க. வெள்ளை வாரணனார். அ.ப.க.க. வெளியீடு-1948.

பதினேழாம் தொகுதி

கவி குஞ்சர பாரதியார் முதல் பாரதிதாசன் உட்படப் பதினான்கு புலவர்களின் 50 பாடல்கள். இசை: எம்.எம். தண்டபாணி தேசிகர். சுரதாளம்: டி.என். சிவ சுப்பிரமணியப் பிள்ளை. அ.ப.ப.க.க. வெளியீடு - 1948.

பதினெட்டாம் தொகுதி

க. பொன்னையா பிள்ளையின் பல இசைப் பாடல்கள் - சுரத்துடன். சுரதாளக் குறிப்பு: க.பொ. சிவானந்தம் பிள்ளை. தொகுப்பு: லெ.ப.கரு. இராம நாதன் செட்டியார். அ.ப.க.க வெளியீடு. கிராஸ்வேடு அச்சுக் கூடம், சிதம்பரம்–1949.

பத்தொன்பதாம் தொகுதி

அருணகிரி நாதரின் 101 திருப்புகழ்ப் பாடல்கள். இசை: காஞ்சி நாயனாப் பிள்ளை, சித்தூர் சுப்பிரமணியப் பிள்ளை. சுரதாளம்: ப. வைத்தியலிங்கம் பிள்ளை. குறிப்புரை க.வெள்ளை வாரணனார். அ.ப.க.க. வெளியீடு–1952.

இருபதாம் தொகுதி

பரத சங்கிரகம் - ஆசிரியர்: அறம் வளர்த்தான். தொகுப்பும் பதிப்பும்: க. வெள்ளை வாரணனார். அ.ப.க.க. வெளியீடு The wednesday Review Press, திருவல்லிக்கேணி. 1954. பரத சங்கிரகம் என்னும் இந்நூல், நாட்டிய சாத்திரமாகிய பரதத்தின் இலக்கணத்தைத் தொகுத்துக் கூறுவது எனப் பதிப்பாசிரியர் வெள்ளை வாரணனார் முகவுரையில் கூறியுள்ளார்.

இருபத் தோராம் தொகுதி

சிதம்பரம் சி.எஸ். நடராச சுந்தரம். பிள்ளை இயற்றியவற்றின் தொகுப்பு இது. இதில் உள்ளவை: 28 கீதங்கள், 20 தான வர்ணங்கள், 33 கீர்த்தனங்கள், 5 பதங்கள் ஆகும். தொகுப்பு: குடந்தை ப. சுந்தரேசன். சிட்டி பிரஸ், திருச்சிராப்பள்ளி-1956.

குறிப்பு: இந்த இருபத் தொரு தொகுதிகளுள் சிலவற்றை புதுச்சேரி அரசு ஆசிரியர் பயிற்சி மைய நூலகத்தில் கண்டு குறிப்பு எடுத்துக் கொண்டேன். மற்ற தொகுதிகளை, 1971ஆம்

ஆண்டு அண்ணாமலைப் பல்கலைக் கழகம் சென்று உயர் திரு கோமதி சங்கர ஐயர் அவர்களைக் கண்டு கேட்டுப் பெற்றுக் குறிப்பு எடுத்துக் கொண்டேன். சங்கர ஐயருக்கு என் நன்றி மிகவும் உரியது.

இசை யரங்குகளில் தெலுங்கிலும் சமசுகிருதத்திலுமே பாடுபவர்கட்கு அப்பாடல்கள் தேய்ந்த பாட்டையாகிவிட்டன; அதனால் அதிலேயே நடக்கின்றனர் போலும். தமிழிசைப் பாடல்களின் பக்கமும் அவர்கள் திரும்பிப் பார்க்க வேண்டும். தமிழ் நாட்டு இசையரங்குகளில், முக்கால் பங்கு தமிழாக இருக்க வேண்டும் - தமிழ் முதலில் பாடப்பட வேண்டும். எஞ்சிய கால் பங்கே பிற மொழிப் பாடல்கட்கு உரிய தாக்க வேண்டும்.

புரியாத மொழிகளில் கரடியாய்க் கத்துவதால் தமிழ் நாட்டுப் பொது மக்கட்கு யாது பயன் உள்ளது? இந்தப் பாடல்களை ஆரம்பித்ததுமே, வானொலிப் பெட்டியினையும் தொலைக் காட்சிப் பெட்டியினையும் பெரும்பாலான பொது மக்கள் மூடி விடுகின்றனர். எனவே, தமிழைப் புறக்கணிக்கா தீர்கள்-தமிழில் பாடுங்கள் என்று, பிற மொழிப் பாடகர்களின் கால்களில் விழுந்து வணங்கிக் கெஞ்சிக் கேட்டுக் கொள்கிறேன். பிற மொழி 'மாயை' அகலல் வேண்டும்.

## இருபதாம் நூற்றாண்டுக் கவிஞர்களின் பாடல் திரட்டுகள்

இருபதாம் நூற்றாண்டின் எழுச்சி மிக்க கவிஞர்களின் கவிதைத் தொகுப்புகளை இப்பகுதியில் காணலாம். வேறு தனித் தனித் தலைப்புகளில் கூறியுள்ள இருபதாம் நூற்றாண்டினர் அல்லாத மற்றவர்களைப் பற்றியது இப்பகுதி. எனக்குத் தெரிந்தவரைக்கும் இங்கே கூறுகிறேன்:—

### கவியரங்கில் கலைஞர்

கலைஞர் மு. கருணாநிதி பல கவியரங்குகளில் கலந்து கொண்டு பாடிய பாடல்களின் தொகுப்பு இது. சென்னை-

கலைவாணர் அரங்கில் 25-11-1971 ஆம் நாள் நாவலர் நெடுஞ் செழியனால் வெளியிடப் பட்டது.

வெள்ளைப் பறவை

ஆசிரியர்: அ. சீநிவாச ராகவன் (நாணல்). விற்பனை உரிமை: மெர்க்குரி புத்தகக் கம்பெனி, கோவை. சௌந்தரா பிரின்டர்ஸ். சென்னை-17. முதல் பதிப்பு: மார்ச் 1967. உள்ளுறை! 'முக்குறுணிப் பிள்ளையார்' முதல் 'அது போதும்' வரையுள்ள 107 தலைப்புகளில் பல பாடல்கள் அமைந்துள்ளன. நூலில் உள்ள வெள்ளைப் பறவை என்பது தலைப்பாகத் தரப்பட்டுள்ளது. 1968 ஆம் ஆண்டு இது சாகித்ய அகாடமி பரிசு பெற்றது.

சுரதாவின் தேன்மழை

சுரதாவின் தேன்மழை போன்ற பாடல்களின் தொகுப்பு. தேன் துளிகள் என்னும் தலைப்பும் உள்ளது. சேகர் பதிப்பகம். சௌந்தரா பிரின்டர்ஸ், சென்னை. ஏப்ரல் 1965. உள்ளுறை: ஆராய்ச்சி, இயற்கை, வரலாற்று வாயில், சொல் விளக்கம், காரணப் பெயர்கள், மங்கையர் பூங்கா, குறுங் காவியம், அகத் துறை, நெய்தல் செய்திகள், காவியக் கடிதங்கள், விழாத விழாக்கள், எப்போதும் இருப்பவர்கள், துன்பத் துறைமுகம், இசை விருந்து, மொழிச் செல்வம், தேன் துளிகள்-என்னும் பதினாறு பெரிய தலைப்புகள் உள்ளன. பல உள் தலைப்புகளும் உள்ளன.

## வாணிதாசன் நூல்கள்

புதுச் சேரியில் ஆசிரியர் பணியாற்றிய என் நண்பர் அரங்கசாமி என்னும் வாணிதாசன் சிறந்த இயற்கைக் கவிஞர். அவர் நூல்கள் சில காண்பாம்:

வாணிதாசன் கவிதைகள்

வெளியீடு - மலர் நிலையம், சென்னை. முதல் பதிப்பு 1956. இயற்கை, இன்பம், மக்கள், புரட்சி, இசைக்குரியார், தமிழ், பூக்காடு என்னும் ஏழு தலைப்புகளில் பல பாடல்கள்.

பொங்கல் பரிசு

வெளியீடு: அன்பகம், உறையூர், திருச்சி. அச்சு: கஸ்தூரி

பிரஸ், உறையூர், திருச்சி. கவிஞர் வாணி தாசனால் அவ்வப் போது எழுதப்பட்டுப் பல இதழ்களில் வெளிவந்த பாடல்களின் தொகுப்பு. 1958.

உள்ளுறை: 'தைத்திங்கள் வாழ்க' என்பது முதல் 'எங்கும் மகிழ்ச்சி' என்பது வரையுள்ள 46 தலைப்புகளில் பல பாடல்கள் உள்ளன.

சிரித்த நுணா

வெளியிடு - ஐயை பதிப்பகம், சேலிய மேடு, புதுவை. விற்பனை உரிமை - மனோன்மணி புத்தக நிலையம், சென்னை. மாருதி பிரஸ், சென்னை - 14. 1963. 'அன்பு' முதல் 'பொங்கல் வாழ்த்து' வரை பல தலைப்புகளில் பாடல்கள் உள்ளன. ஏழாவது தலைப்பாகிய 'சிரித்த நுணா' என்பது நூற்பெயராக வைக்கப்பட்டுள்ளது.

வாணிதாசன், 'இரவு வரவில்லை', 'தொடுவானம்' என்னும் தொகுப்பு நூல்களும் இயற்றியுள்ளார்.

## கண்ணதாசன் பாடல்கள்

கண்ணதாசன் பல்பொருள் பற்றிய பாடல்களாகவும்' திரையோவியப் (சினிமாப்) பாடல்களாகவும் ஆயிரக்கணக்கான பாடல்கள் எழுதியுள்ள சுவைக்கவிஞராவார். அவர் பாடல் நூல்கள் சில காணலாம்:

கண்ணதாசன் கவிதைகள்

முதல் தொகுதி - முதல் பதிப்பு 1959. காவியக்கழகம், சென்னை - 2. உள்ளுறை: பழம் பாடல் புதுக்கவிதை, வாழ்க்கையும் வனப்பும், பிரிவும் பரிவும், குறியும் கொள்கையும், காவியம், இசையும் பாட்டும், பல் சுவை, முதல் பாட்டு - ஆகிய எட்டுப் பெரிய தலைப்புகளும் பல உள்தலைப்புகளும் உள்ளன.

இரண்டாம் பகுதி - இதில், இரண்டு காவியங்களும் நூற்றுக்கு மேற்பட்ட பாடல்களும் உள்ளன.

கண்ணதாசன் கவிதைகள்

முதல் இரண்டு கவிதைத் தொகுப்புகள். முதல் பதிப்பு - செப்டம்பர், 1968. வெளியீடு - வானதி பதிப்பகம், சென்னை

– 17.ஜீவன் பிரஸ், சென்னை – 5. பல பொருள்கள் பற்றிய பல கவிதைகளின் தொகுப்பு.

கண்ணதாசன் கவிதைகள்

மூன்றாம் தொகுதி. வானதி பதிப்பகம், சென்னை. ஜீவன் அச்சகம், சென்னை. 1968. உள்ளுறை: வாழ்த்தும் வரவேற்பும், ரோஜாவின் ராஜா, கவியரங்கம், அரசியல், சீன எதிர்ப்புக் கவிதைகள், தத்துவம், பல் சுவை–7 பெரிய தலைப்புகள் உள்ளன. 'வாழ்க்கை' என்பது முதல் 'மங்கலம் பேசுக' வரை 85 உள் தலைப்புகளில் பாடல்கள் பல உள்ளன.

திரை இசைப் பாடல்கள்

ஆசிரியர் – கவிஞர் கண்ணதாசன். வானதி பதிப்பகம். பிப்ரவரி 1970. ஜீவன் பிரஸ், சென்னை – 5. கண்ணதாசன் முகவுரை எழுதியுள்ளார். 95 திரைப்படங்களில் பாடப்பெற்ற 501 பாடல்களின் தொகுப்பு இது.

உள்ளுறை: வணக்கம் (46), காதல் (138), குழலும் யாழும் (122), இயற்கை (14), தாலாட்டு (15), தத்துவம் (72),நகைச் சுவை (23), பல வகை (71)-ஆகியவை. இறுதியில் பாடல்களின் திரைப்பட வரிசைகள் தரப்பட்டுள்ளன.

இதயப் பூங்கா

ஆ – தமிழ் நம்பி. விற்பனை உரிமை – பாரி நிலையம், சென்னை. காக்ஸ்டன் அச்சுக்கூடம், சென்னை. 1967. உ – மொழி, இயற்கை, காதல், தாலாட்டு, தத்துவம், பல் சுவை–இவை பெரிய தலைப்புகள். 'தமிழ் வணக்கம்' முதல் 'பிறந்தேன்' வரை 38 உள் தலைப்புகள் உள்ளன.

இராகவன் திருக்குறள் மாலை

ஆ-வித்துவான் சிரானி நந்தகோபாலன், வந்தவாசி. குகன் அச்சுச் கூடம், ஆரணி. உ-4 அடிப்பாடலில் முன் இரண்டடியில் இராம சரிதை வைத்துப்பின் இரண்டடியில் ஒரு திருக்குறளை அமைத்துப் பாடியது. இவ்வாறு நூறு வெண்பாக்கள் கொண்ட தொகுப்பு இது.

முதல் பதிப்புக்கு 1951-இல் பண்டிதமணி மு.கதிரேசச் செட்டியாரும், இரண்டாம் பதிப்புக்கு 1952 - இல் கி.வா. ஜகந்நாதனும் மதிப்புரை தந்துள்ளனர். அடுத்த பதிப்பு-1955.

சோமேசத் திரட்டு

ஆ-சோமப் பெருமாள் சாமி. பதிப்பு-சேலம் ஆத்தூர் அ.சி. இராமசாமி நாய்க்கர். குமரன் பிரஸ், மதுரை. மதுரை வீர சோமசுந்தர சுவாமிகள் மீது பாடிய மூன்று நூல்களின் திரட்டு. நூல்கள்: சோமேச நெஞ்சு விடுதூது, சோமேசநாதர் தசாங்கம், சோமேச நாதர் உலா.

கம்பதாசன் பாடல்கள்

கம்பதாசன் ஓர் இயற்கைக் கவிஞர்.அவர் கவிதை நூல்கள் சிலவற்றைக் காணலாம்.

கனவு முதலிய கவிதைகள்

ஆசிரியர் கம்பதாசன். வெளியீடு-ஹரீந்திரநாத் சுனிதா கலா மண்டலி, மைலாப்பூர், சென்னை. முன்னுரை-ஹரீந்திர நாத் சட்டோபாத்தியாயா - 9.6.1941. உள்ளுறை: கனவு, தேசம், இயற்கை, காதல்-இவை பெரிய தலைப்புகள்- பல உள் தலைப்புகள் உண்டு. கனவு என்னும் தலைப்பில் உள்ளவை இசைப் பாடல்கள்.

கம்பதாசன் கவிதைகள்

அருணா பப்ளிகேஷன்ஸ், சென்னை-17. 1960. உள்ளுறை: காவியங்கள், இயற்கையின் எழில், காதல் கவிதைகள், தொழிலாளர் உலகம், நாடும் மொழியும், பல் வகை இசைப் பாடல்கள் உள்ளன.

முடியரசன் கவிதைகள்

தொகுப்பு-தமிழண்ணல். பாரி நிலையம், சென்னை. இரண்டாம் பதிப்பு-1961. முடியரசன் கவிதைகள் 1955-இல் இரு தொகுதிகளாக வெளிவந்தன, பின்பு மேலும் சில சேர்த்து இரு தொகுதிகளையும் ஒன்றாக்கி இப்பதிப்பு வெளியிட்டுள்ளனர்.

தலைப்புகள்-காவிய உலகம், இயற்கை உலகம், காதல் உலகம், தொழில் உலகம், தமிழ் உலகம், சான்றோர் உலகம், பல்வகை உலகம்-என்பன-பல உள் தலைப்புகள் உண்டு.

கவியரங்கில் முடியரசன்

முத்து நிலையம். 1960. உ-ஆடவர் முதல் பாரதியார் வரை-பல தலைப்புகளில் பல பாடல்கள்.

இளந் தமிழா

ஆ - ம.ப. பெரிய சாமித் தூரன் - வெ - இன்ப நிலையம், சென்னை, செங்குந்தமித்திரன் அச்சகம், சென்னை. அக்டோபர் 1949. உ-இளந்தமிழா முதல் ஜய பாரதம் வரை 63 தலைப்பு கள் உள்ளன.

மின்னல்பூ

ஆ - தூரன், இன்பநிலையம், சென்னை. மாருதி பிரஸ் சென்னை.இரண்டாம் பதிப்பு - 1962; மூன்றாம் பதிப்பு - 1967. ஆசிரியர் முன்னுரை-" வெவ்வேறு நிலைகளிலே வெவ்வேறு வகைப்பட்ட உணர்ச்சிகளின் விளைவாக எழுந்தவை இக் கவிதைகள். வெவ்வேறு காலத்திலே பளிச்சிட்ட மின்னல்கள். அவற்றையெல்லாம் சேர்த்து ஒரு மாலையாகத் தொகுப்பதே ஒரு சிறந்த அனுபவம்" என ஆசிரியர் கூறியுள்ளார்.

உ- அழகு நடனம் முதல் வானவில் ஊஞ்சல் வரை 58 தலைப்புகளில் பல்வகைப் பாக்கள் உள்ளன.

காற்றில் வந்த கவிதை

ஆ- தூரன், இன்ப நிலையம், மாருதி பிரஸ், சென்னை. முதல் பதிப்பு-1958, இரண்டாம் பதிப்பு 1968. உ-நாடோடிப் பாடல்களைத் தூரன் தொகுத்துள்ளார். விளக்கமும் உண்டு. மாட்டுக்காரன் பாட்டு முதல் மதுரைச் சொக்கர் வரை 36 தலைப்புகளில் பல நாடோடிப் பாடல்கள் உள்ளன.

நிலாப் பிஞ்சு

ஆ-தூரன். சுதந்திர நிலைய வெளியீடு. சாந்திபிரஸ், சென்னை. ஆகஸ்ட் 1959. விற்பனை உரிமை-பாரி நிலையம், சென்னை. உ-நிலாப் பிஞ்சு முதல் ஜய ஹிந்த் வரை 41

தலைப்புகளில் பாடல்கள் உள. முதல் தலைப்பு நூலுக்குப் பெயராயிற்று.

தூரன் கவிதைகள்

ஆசிரியர்: ம. பெரியசாமித் தூரன். சுதந்திர நிலைய வெளியீடு. விற்பனை உரிமை: பாரிநிலையம், சென்னை. மாருதி பிரஸ், சென்னை, முதல் பதிப்பு: செப்டம்பர், 1962. உள்ளுறை: இளந் தமிழா' முதல் 'வாழிய உலகம்' வரையான 171 தலைப்பு 'களில் பல்வேறு பாடல்கள் உள்ளன.

இளந்திரையன் கவிதைகள்

சாலை இளந்திரையனின் பாடல்களின் தொகுப்பு இது. வெளியீடு: யூனிவர்சல்பப்ளிஷர்ஸ், சென்னை. அச்சு: யூனிவர்சல் பிரிண்டிங்ஸ் ஹவுஸ், சென்னை. 1962. பல இதழ்களில் ஏறக் குறைய 12 ஆண்டுகளாக வெளிவந்த பாடல்களின் தொகுப்பு இது.

உள்ளுறை: நிகழ்ச்சிக் கொடிகள், இயற்கை, அன்பு வாழ்க்கை, குமுறல், சிந்தனை, மலர்த்தோட்டம் என்னும் ஆறு பெரிய தலைப்புகளின் கீழ், 'ஓவியப் பிஞ்சுகள்' முதல் 'வாழ்க' என்பது வரை 128 உள்தலைப்புகள் உள்ளன.

கோவை இளஞ்சேரன் கவிதைகள்

இளஞ்சேரனின் கவிதைத் தொகுப்பு. வெளியீடு: கலைக் குடில், நாகப்பட்டினம். மறைமலை அச்சகம், நாகப்பட்டினம். 1963. உள்ளுறை: நூல், அக இயல், புற இயல், பொது இயல் என மூன்று இயல்களாகப் பகுக்கப்பட்டுள்ளது. இம் மூன்று இயல்களிலும், 'முத்துக்கள்' முதல் 'நன்றி' முடிய உள்ள 40 தலைப்புகளில் பாடல்கள் அமைந்துள்ளன.

தமிழழகன் கவிதைகள்

தமிழழகன் இயற்றிய பாடல்களின் தொகுப்பு. இது வெளியீடு: பழநியப்பா பிரதர்ஸ், சென்னை. முதல் பதிப்பு டிசம்பர் 1960. பல இதழ்களில் வந்த பாடல் தொகுப்பு இது. இதழ்களாவன:-

கலைமகள், அமுத சுரபி, நண்பன், உமா, காதல், வசந்தம் கலைக் கதிர், வாழ்க்கை, கலா வல்லி, குயில், பிரசண்ட விகடன், குமுதம், விகடன், கல்கி, தினமணிக் கதிர், சிவாஜி, மித்திரன் வாரப் பதிப்பு, மித்திரன் ஞாயிறு மலர், தமிழ்நாடு முதலிய இதழ்களிலும், இவற்றுள் சிலவற்றின் சித்திரை – தீபாவளி – பொங்கல் விழாமலர்களிலும் ஆண்டு மலர்களி, லும் வெளிவந்த பாடல்களின் தொகுப்பு. சென்னை வானொலி யின் பொங்கல் கவியரங்கப் பாடல்களும் இடம் பெற்றுள்ளன.

உள்ளுறை: கவியும் கற்பனையும், எழிலும் இயற்கையும், களிப்பும் காதலும், தவிப்பும் தாபமும், மழலையும் மகிழ்ச்சி யும், கதையும் கருத்தும், மணியும் மாலையும் – என்னும் பெரிய பகுதிகளின் கீழ் 55 உள்தலைப்புகளில் பாடல்கள் உள்ளன. முதல் – கலைச் செல்வி; 55 ஆவது புதியகதிர்.

புதுமைப் பித்தன் கவிதைகள்

தொகுப்பு – ரகுநாதன். ஸ்டார் பிரசுரம், சென்னை இரண்டு பதிப்புகள்–1951,1954. உள்ளுறை: ‘நிசந்தானோ சொப்பனமோ’ என்பது முதலாக ‘உதிரிக் கவிகள்’ ஈறாக 19 தலைப்புகள்.

மணி வண்ணன் கவிதைகள்

‘தீபம்’ ஆசிரியர் நா. பார்த்தசாரதியின் புனை பெயர். மணிவண்ணன் என்பது. நவபாரதி பிரசுரம், கோவை. தீபம் அச்சகம், சென்னை. ஆகஸ்ட் 1969. மணிவண்ணன் பல சமயங் களில் எழுதிய பாடல்களின் தொகுப்பு. உள்ளுறை: காதல், தத்துவம், இயற்கை, பல் சுவை, தேசம், தலைவர்கள் ஆகியவை பெரிய தலைப்புகள். இவற்றின் கீழ்ப் பல உள் தலைப்புகள் உள்ளன.

பாவலர் விருந்து

ஆ–வி.கோ. சூரிய நாராயண சாத்திரி – வெ – மதுரை வி.சு. சுவாமி நாதர். குறிப்புரை – ந.பலராமஐயர். 1-4-1933. பல இதழ்களில் வெளிவந்தவை - வெளிவராதவை – ஆகிய வற்றின் தொகுப்பு. உ–மணியசிவனார் கலிவெண்பா முதல்,

பண்டித நாட்டம் வரையிலாக 14 தலைப்புகளில் பல்வேறு பாடல்கள்

வானமுதம்

ஆ- எஸ்.டி. சுந்தரம். வெ-ஆண்டவர் நூலகம், சென்னை. சுதேச மித்திரன் அச்சகம், சென்னை. ஜூலை 1964. அஞ்சலி முதல் தாமதமேன் வரை 47 தலைப்புகளில் பாடல்கள் உள. வானமுதம் என்பது இடையிலுள்ள ஒரு தலைப்பாகும்.

மனப் பறவை

ஆ- சோமு. கலைஞன் பதிப்பகம், சென்னை. ஸ்ரீமதி பிரிண்டர்ஸ், சென்னை. உ-முருகப் பெருமான் முதல் வேலும் மயிலும் வரை 21 தலைப்புகள் உள்ளன. மனப் பறவை என்பது நடுவில் உள்ள ஒரு தலைப்பு. மார்ச்சு 1965.

சோம சுந்தரன் கவிதைகள்

ஆ-கவிஞர் அரு. சோமசுந்தரன். பொன்முடி பதிப்பகம், தேவ கோட்டை, விற்பனை உரிமை-மீனாட்சி புத்தக நிலையம், மதுரை. சௌத் இந்தியா பிரஸ், காரைக்குடி. உள்ளுறை - அரசியலும் பொருளாதாரமும், மொழியும் கல்வியும், இயற்கை, தலைவர்கள், பெரியோர்கள், சமூகமும் பிறவும், திருமண வாழ்த்துகள் - ஆகிய ஏழு பெரிய தலைப்புகள். 'அன்னை மீனாட்சி' முதல் 'புத்தூரான்-சஞ்சீவி, வரையிலான 134 உள்தலைப்புகள் உள்ளன.

இள வேனில்

ஆ-சோமு. பாரி நிலையம், சென்னை. முதல்பதிப்பு -28-5 - 1956. மூன்றாம் பதிப்பு - அக்டோபர், 1963 - மாருதி பிரஸ், சென்னை. 'லிரிக்' பாடல் வகை சேர்ந்த தொகுப்பு. இளவேனில் முதல் இசை வரை 63 தலைப்புகள் உள்ளன.

கவியரங்கில்

ஆ- கவிஞர். அரு.சோமசுந்தரன். அருணா பப்ளிகேஷன்ஸ், சென்னை. விநோதன் அச்சகம், சென்னை. நவம்பர் 1961. பல கவியரங்கில் பாடிய பாடல் தொகுப்பு. உ-அழகப்பருக்கு அஞ்சலி முதல் பொன்னாடை போர்த்து விழா வரை 12 தலைப்புகளில் பாடல்கள் உள்ளன.

திருமுறைகள் விட்டு நூல்

(கவியரங்கப் பாடல்கள்)

ஆ - கவிஞர் அரு. சோமசுந்தரன். பொன்முடி பதிப்பகம், தேவ கோட்டை. விற்பனை உரிமை - மீனாட்சி புத்தக நிலையம், மதுரை. உ-திருமுறைகள் விட்டுநூல் முதல் நன்றியுரை வரை 22 தலைப்பில் பாடல்கள் உள்ளன. முதல் தலைப்பின் பெயர் நூலுக்குத் தரப்பட்டுள்ளது.

மின்னிற்று

ஆ - கே - என். சுந்தரேசன். இரா பதிப்பகம். கோவை. காந்தி தாசன் அச்சகம், கோவை. சனவரி 1968. உ-தையல் நாயகி முதல் வீடு மாற்றம் வரை 16 தலைப்புகளில் பல பாடல்கள்.

மழலைக் கனவுகள்

ஆ - மின்னூர் சீநிவாசன், மின்னூர் வெளியீடு. காக்ஸ்டன் அச்சகம், சென்னை. 1965. விற்பனை உரிமை-பாரி நிலையம், சென்னை. உ - கலைமகள், கல்கி, விகடன், தமிழ்நாடு, தென்றல் முதலிய இதழ்களில் வந்தவை. வானொலியில் வந்தவையும் உண்டு. அன்புச் சுடர் என்ற தலைப்பு முதல் விதைத்தவர் என்ற தலைப்பு வரை 52 தலைப்புகளில் பாடல்கள் உள்ளன.

சிந்தனைச் செல்வம்

ஆ- திருச்சி தியாகராசன். ஸ்ரீதேவி அச்சகம், சென்னை. 1955. விற்பனை உரிமை - பாரி நிலையம், சென்னை. உ-சமுதாயம், பொருள், மொழி, ஆக்கம், என்பன பெரிய தலைப்புகள். 'இவனே மனிதன்' என்பது முதல் 'எது வேண்டும்' என்பது வரை-25 உள்தலைப்புகள் உள்ளன.

அமுதக் கலசம்

ஆ - கவி கா.மு. ஷெரிப். பழநியப்பா பிரதர்ஸ். ஏஷியன் பிரஸ், சென்னை. 1964. உ - இயற்கை, காதல், மொழியும் நாடும், சமுதாயம், பிரார்த்தனை, பன்மணித் திரள் என்னும் ஆறு பெரிய தலைப்புகளின் கீழ், வாழ்த்து முதல் கவியின் கனவுவரை பல உள் தலைப்புகளில் பாடல்கள் பல உள்ளன.

இருநூறு

ஆ - வித்துவான் பெ. கோவிந்தன். விற்பனை உரிமை - சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம். பாரி அச்சகம், சென்னை, 1959. உ - ஞாயிறு முதல் நன் மக்கள் வரை 20 தலைப்புகளில் இயற்கை பற்றிய 200 பாடல்களின் தொகுப்பு.

இதயப் பறவை

ஆ - கவிஞர் தமிழ் ஓவியன். தமிழருவி வெளியீடு. விற்பனை உரிமை - பாரிநிலையம். ஜீவன் பிரஸ், சென்னை. 1964. தலைப்புகள் - பிறப்பை நோக்கி, வாழ்வை நோக்கி, பாசத்தை நோக்கி, உயர்வை நோக்கி, முடிவை நோக்கி, பன் மணி நோக்கி, நெஞ்சை நோக்கி, தன்னை நோக்கி, கருத்தை நோக்கி - இவை பெரிய தலைப்புகள். பல உள் தலைப்புகள் உண்டு.

பா மாலை

தொ - நாகமுத்தையா - பாரி நிலையம். சாந்தி பிரஸ், சென்னை. மே, 1963. உ - நாமக்கல்லாரின் 'கூட்டுறவில் சேருங்கள்' முதல் அ ஜ்வாலா என்பவரின் 'குழந்தை முருகன்' வரை, பிற்கால - இக்காலப் புலவர்கள் பலர் இயற்றிய பல துறைக் கவிதைத் தொகுப்பு. இதில், புலவர் ஒவ்வொருவரின் 1. இயற்பெயர், 2. புனைபெயர், 3. பிறந்தநாள், 4. பிறந்த ஊர் ஆகியவை தரப்பட்டுள்ளன. மாதிரிக்கு ஒன்று:- 1. திரிலோக சீதாராம், 2. மந்தகாசன், 3.1-4-1917, 4. தொண்டைமான் துறை.

முத்தமிழ் அரங்கம்

இயல், இசை, நாடகப் பாடல் தொகுதி. ஆ - கவிஞர் திருச்சி வாசுதேவன். வெ - குமார் பப்ளிகேஷன், திருச்சி. 1966. சிவாஜி அச்சுக் கூடம், திருச்சி. பல இதழ்கள் - மலர்கள் - வானொலி - வாயிலாக வந்த பாடல் தொகுப்பு. உள்ளுறை:-

1. இயற் பகுதி-இதில், உதயமங்கை முதல் மதுரை வரை 21 தலைப்புகள் உள்ளன.

2. இசைப் பகுதி-இதில், ஓடை முதல் கனவே செல் வரை 20 தலைப்புகள் உள்ளன.

3. நாடகப் பகுதி - அரசியின் அன்பு, சிலையின் விலை என்னும் இரு நாடகங்கள் உள்ளன.

பூப் பந்தல்

ஆ—இளம் பாரதி. வெ—தொல்காப்பியர் நூலகம், சிதம் பரம். முத்தையா அச்சகம், சென்னை. 1962. உ - பூப்பந்தல் முதல் தாகூரின் பெருமை வரை 31 தலைப்புகள்.

அழகாடும் சோலை

ஆ - கவிஞர் சேதரசு. காந்திமதி பதிப்பகம், இராமநாத புரம். 1967. பல இதழ்களிலும் வானொலிக் கவியரங்கிலும் வந்த பாடல் தொகுப்பு. இறைவன் முதல் பண்புக்கோர் பாரதம் வரை பலதலைப்புகளில் பற்பல பாடல்கள் உள்ளன.

பள்ளிப் பாமாலை

தொ. செ. அன்ன காமு. சர்வோதயப் பிரசுரம், தஞ்சாவூர். ரெயின்போ பிரின்டர்ஸ், திருச்சி. 1964, உ—பள்ளித்துவக்கம், கொடி வணக்கம், வரவேற்பு, வழிநடை, பொதுக் கூட்டம், விழாக்கள் (இத்தலைப்பில் 12 விழாக்கள் உள), சர்வ சமயக் கிதங்கள், நாமாவளிகள், குழந்தைப் பாடல்கள் (இதில் 3 பிரிவுகள் உள)மங்களம் —என்னும் பத்துப் பெரிய தலைப்பு களின் கிழ்ப் பல உட் பிரிவுகள் உள்ளன.

உலகநாதன் கவிதைகள்

ஆ — கவிஞர் மு. உலகநாதன். வெ - முத்துச் சிதம்பர னார் பதிப்பகம், மதுரை. இளங்கோ அச்சகம், மதுரை. உ - நெடுங்கிள்ளி (நாடகம்), காதல், தத்துவம், தமிழ், தொழில் என்பன பெரிய தலைப்புகள். நீ சிரித்தால் முதல் மனிதனின் சேவை வரை 57 உள்தலைப்புகள்.

கதையும் பாட்டும்

ஆ - நாக முத்தையா. ஸ்டார் பிரசுரம். சென்னை. 1964. பாட்டிலே கதைகள். முகவுரைச் செய்தி: பெரியோர் வாழ்வில் நிகழ்ந்த நிகழ்ச்சிகளையும் பெரிதும் சுவையூட்டும் சம்பவங் களையும் தொகுத்துக் கதையாக்கிக் கவிதை வடிவிலே தரப்

பட்டுள்ளன. உ - அன்பே தெய்வம் முதல் வீரன் இராமு வரை 43 தலைப்புகள்.

உதயம்

ஆ - திருலோக சீதாராமன். புதுப் புனல் பதிப்பகம், திருச்சி. கண்ணன் பிரஸ், திருச்சி. ஏப்ரல் 1958. உ—தவம் முதல் பொன்னரங்கம்வரை 34 தலைப்புகளில் பாக்கள்.

தமிழ் முழக்கம்

ஆ - புலவர் மணித்தாமரையார். வெ -வித்துவான் சி.சங்கரன், பார்ப்பான் குளம். சந்திரா அச்சகம், முக்கூடல். 1968. பல சமயம் பல இதழ்களில் எழுதியவை. உ - குறிக்கோள் முதல் சான்றோர் வழியில் நாம்' என்பதுவரை 43 தலைப்புகள். பெரும்பாலும் தமிழின் பெருமை-எழுச்சி பற்றிய பாடல்கள் நிரம்ப உள்ளன.

கற்பனாஞ்சலி

ஆ—கோ - மணி சேகரன். கற்ப காம்பிகை பதிப்பகம், சென்னை. பல இதழ்களில் வந்தவை. உ - அறிவுக்கு ஒரு தெய்வம் முதல் இறையருள் வரை 36 தலைப்புகள் உள. அவற்றுள் கற்பனாஞ்சலி என்பது ஒரு தலைப்பு.

பாண்டியன் கவிதைகள்

ஆ - மதுரை க.பாண்டியன். வெ - தங்கம்மா பதிப்பகம், மதுரை. விவேகாநந்தா அச்சகம், மதுரை. பல இதழ்களில் வந்த கவிதைகள். வாழ்த்து, காதல், தொழிலாளர் வாழ்த்து புத்தாண்டு வாழ்த்து, போர்ப் பரணி, பொங்கல் கவிதைகள் மறைந்த மாமணிகள், தத்துவம் இவற்றின் கீழ்ப் பல உள் தலைப்புகள் உண்டு.

தமிழ் ஒவியன் கவிதைகள்

ஆ - கவிஞர் தமிழ் ஒவியன். வெ - சென்னை மணவழகர் மன்றம். விற்பனை உரிமை - பாரி நிலையம். 1963 உ - தமிழும் தமிழ் நாடும், இயற்கையும் இதயமும், இன்பமும் ஏக்கமும், உள்ளமும் உணர்வும், காவியம், பல் சுவை ஆகிய ஆறு பெரிய தலைப்புகளின் கீழ்ப் பல உள்தலைப்புகளில் பாடல்கள் உள்ளன.

பட்டுக் கோட்டை கல்யாண சுந்தரம் பாடல்கள்

ஆசிரியர் பட்டுக் கோட்டை கல்யாண சுந்தரம் திரைப் பட உலகிலும் பெரும் புகழ் பெற்றவர். தொ – பி.கி.பால கிருஷ்ணன். வெ – நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை. ஜன சக்தி பிரஸ். 1965.உ - 1. அரசியல் என்னும் பெரிய தலைப்பின் கீழ் 49 உள் தலைப்புகளும், 2. சமூகம் என்னும் பெரிய தலைப் பின்கீழ் 27 உள்தலைப்புகளும், 3. காதல் என்னும் பெரிய தலைப்பின் கீழ் 45 உள் தலைப்புகளும், பல் சுவை என்னும் பெரிய தலைப்பின்கீழ் 14 உள் தலைப்புகளும் உள்ளன. தொகுப் பில் பல இனப் பாடல்கள் உள்ளன.

கவியரங்கக் கவிதைகள்

ஆ - இரகுநாதன் என்னும் திருச்சிற்றம்பலக் கவிராயர். பல கவியரங்குகளில் பாடியவை. வெ – என் சி பி எச் பிரைவேட் லிமிடெட், சென்னை. ஜெனரல் பிரின்டர்ஸ், சென்னை. 1963. வானொலி கவியரங்கம், கம்பன் திருநாள் கவியரங்கம், பாரதி விழாக் கவியரங்கம், தாகூர் விழாக் கவியரங்கம் முதலிய கவி யரங்குகளில் பாடியவற்றின் தொகுப்பு.

இரகுநாதன் கவிதைகள்

ஆ-இரகு நாதன் என்னும் திருச்சிற்றம்பலக் கவிராயர். ஸ்டார் பிரசுரம், சென்னை. 1957. ‘நாம்’ என்னும் தலைப்பு முதல் பல தலைப்புகளில் பாடப்பட்டவற்றின் தொகுப்பு.

வாழ்க்கைப் பூங்கா

ஆசிரியர்–பொற்கோ என்னும் பொன். கோதண்டராமன். வெ – தமிழ்நூற் பதிப்புச் சங்கம், புதுவை. 1965.உ: அரும்பி யல், மொட்டியல், மலரியல், காஇயல், கனியியல், முத்தியல் என்னும் ஆறு பெரிய தலைப்புகளின்கீழ்ப் பல உள் தலைப்பு களில் பாடல்கள் அமைந்துள்ளன.

புத்துணர்ச்சிப் பனுவல்

ஆ–கவிஞர் சிறு மதுரை சி.சொ. அருணாசலம். பச்சையப் பன் அச்சகம், வேலூர். 1956.எழுமின் அன்னாய் என்பது முதல்

புத்தாண்டு என்பது வரையிலான 18 தலைப்புகளில் பல உணர்ச்சிப் பாடல்கள்.

பூத்தது மானுடம்

ஆ-சாலை இளந்திரையன். சாலை வெளியீடு, தில்லி-5. விற்பனை உரிமை-பாரிநிலையம், சென்னை. மூவேந்தர் அச்சகம், சென்னை. 1968. உ - நெஞ்சொடு நெஞ்சம், விட்ட குறை தொட்டகுறை, செயல் மணக்கும் தோள்கள், புதியதோர் நாகரிகம் என்னும் பெரிய தலைப்புகளின் கீழ்ப் பல உள் தலைப்புகளில் பாடல்கள் உள்ளன.

வ.உ.சி. பாடல் திரட்டு

ஆ - வ.உ. சிதம்பரம் பிள்ளை. முதல் பாகம், இந்தியா பிரின்டிங் வொர்க்ஸ் சென்னை. 1915. கணபதி துதி முதல் 57 தலைப்புகளில் பல பாடல்கள் உள்ளன. இவை சிறை செல்வதற்கு முன் பாடப் பட்டவை.

இரண்டாம் பாகம் - கடிதம், வாழ்த்து, உலகியல் முதலிய பல தலைப்புகளில் பல பாடல்கள் உள்ளன.

தனிக் கவித் திரட்டு

ஆ-வெள்ள கால் சுப்பிரமணிய முதலியார். உரிமை—உ. வே. சாமிநாத ஐயர். வெ-ப.கு. அருணாசலக்கவுண்டர். பல பொருள்கள் பற்றிப் பல தலைப்புகளில் பல இனப் பாடல்கள். மொத்தம் 343 பாடல்கள். 1939.

இராசேந்திரன் கவிதைகள்

ஆ - கவிஞர் இராசேந்திரன். தொ - சேந்தி உடைய நாத புரம் சீநிவாசன். வெ - தோழமை நிலையம், சிவ கங்கை. முத்தமிழ் அச்சகம், சிவகங்கை. 1965. உ - 'சிறு துளி பெரு வெள்ளம்' என்னும் பெரிய தலைப்பின் கீழ் ஆறு பகுதிகள் உள்ளன. அவை: அமுதத் துளி, தேன் துளி, கண்ணீர்த் துளி, பன்னீர்த் துளி, மழைத் துளி, குருத் துளி-என்பன. இவற்றின் கீழ்ப் பல உள் தலைப்புகளில் பாடல்கள் உள்ளன.

பாமர மக்களின் பரம்பரைப் பாடல்கள்

ஆ - அழ. வள்ளியப்பா. பதிப்பு-கி. சுவாமி நாதன். புதி தாய்க் கற்றவர்கட்காக யுனெஸ்கோ சார்பில் நேஷனல் புத்தக டிரஸ்ட் வெளியிட்ட தொகுப்பு இது. ஆசியன் பிரின் டர்ஸ், சென்னை. 1967. பரவசம் ஊட்டும் பக்திப் பாடல்கள் முதல் 8 தலைப்புகளில் படங்களுடன் பாடல்கள் உள்ளன.

ஜீவாவின் பாடல்கள்

ஆ-ப.ஜீவானந்தம். வெ-நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை. ஜன சக்தி அச்சுக் கூடம், சென்னை. 1962. இப் பாடல்கள் 1932-க்குமேல் 1945-க்குள் எழுதியவை. உ-'சமதர்ம உலகம்' முதல் 'இன்டர் நேஷனல்' வரை பல தலைப்புகளில் பாடல்கள் உள்ளன. இவற்றுள் சிறையில் இருந்தபோது எழுதிய பாடல்களும் உண்டு.

கவிதைச் செல்வம்

ஆ—கவிஞர் வலம்புரி அண்ணாமலை. அழகுப் பதிப்பகம் காரைக்குடி. சௌத் இந்தியா பிரஸ், காரைக்குடி. உ - இயற்கைச் செல்வம், காதல் செல்வம், நாட்டுச் செல்வம், அரங்கேறிய செல்வம் என்னும் நான்கு பெரிய தலைப்புகளின் கீழ்ப் பல உள்தலைப்புகள் உள்ளன. பல செல்வங்களைப் பற்றிக் கூறுவதால் இந்தத் தொகுப்புக்குக் கவிதைச் செல்வம் என்னும் பெயர் வழங்கப்பட்டுள்ளது.

தெய்வ மணம்

ஆ-மதுரை க. பாண்டியன். வெ-தங்கம்மா பதிப்பகம், மதுரை. விவேகானந்தா அச்சகம், மதுரை, 1965. இது, ஐந்து சிறு சிறு கதைக் காப்பியத் தொகுப்பு. அவை: தெய்வ மணம், மானும் மனிதனும், காதல் நிலவொளி, இரு விழிகள், நல்ல தீர்ப்பு என்பன. முதல் காப்பியத் தலைப்பு நூலின் பெயராக உள்ளது.

அன்பு வெள்ளம்

ஆ-மு. அண்ணாமலை. தொல்காப்பியர் நூலகம், சிதம் பரம். முத்தையா அச்சகம், சென்னை. வானொலிக் கவியரங்

கிலும் கல்லூரிக் கவியரங்கிலும் பல இதழ்களிலும் வந்த பாடல்கள். அன்பு வெள்ளம் முதல் என் ஞான குரு வரை 19 தலைப்புகளில் பல பாடல்கள் உள்ளன.

புது மலர்

ஆ-புலவர் திருவரசன். புது இலக்கியப் பதிப்பகம் சென்னை. பாரதி பிரின்டர்ஸ், சென்னை. 1969. புதுமலர் முதல் புறம் காட்டும் அறம் வரை 30 தலைப்பில் பல பாடல்கள்.

வாசுதேவன் கவிதைகள்

ஆ-கவிஞர் திருச்சி வாசு தேவன். வெ-திருமகள் நூலகம், சென்னை. திருமலைத் தெய்வம் ஆர்ட் பிரின்டர்ஸ், சென்னை. ஏப்ரல், 1982. உ-கதிரவன் முதல் எப்படிப் புகழ்வேன் என்பது வரை 43 தலைப்புகளில் பாடல்கள் பல உள்ளன. இறுதியில், மன்னிப்பு, அரசியின் அன்பு, சிலையின் விலை என்னும் மூன்று சிறு நாடகங்கள் உள்ளன.

வாசுதேவன், சிந்தனை அலைகள், கறுப்பு வைரம், பாலர் பாடல்கள், பாலர் கதைப் பாடல்கள், செந்தமிழ் இசைத் தென்றல்-என்னும் கவிதைத் தொகுப்பு நூல்களும் இயற்றியுள்ளார்.

புதுச்சேரி நூல்கள்

புதுச்சேரிப் பாவலர்களின் பாடல் தொகுப்பு நூல்களைப் பற்றி எனக்குத் தெரிந்த வரைக்கும் இந்தப் பகுதியில் தருகிறேன். என் பார்வைக்கு வராத - அறிமுகம் ஆகாத புதுவைத் தொகுப்புகள் இன்னும் பல உள்ளன. வேறு தலைப்புகளில் கூறப்பட்டுள்ளவர் அல்லாத மற்றையோரே இங்கே இடம் பெற்றுள்ளனர்.

தமிழ் இசைப் பாடல்கள்

ஆ-புதுவைச் சிவம் என்னும் ச. சிவப்பிரகாசம். வெ - ஞாயிறு நூற் பதிப்புக் கழகம், 1950. உ-நாட்டுப் பகுதி, தமிழ் மொழிப் பகுதி, சிந்தனைப் பகுதி, சாதி பேதப் பகுதி, காதல் மணப் பகுதி, திருக்குறள் பகுதி, கடமைப் பகுதி என்னும் ஏழு பகுதிகளின் கீழ்ப் பாடல்கள் தரப்பட்டுள்ளன.

தமிழ் ஒளியின் கவிதைகள்

ஆ – கவிஞர் தமிழ் ஒளி. இயற் பெயர். விசயரங்கம். இவர் பிறந்தது தென்னார்க்காடு மாவட்டம் குறிஞ்சிப்பாடியை அடுத்துள்ள ஆடூர். வளர்ந்தது – வாழ்ந்தது – முடிந்தது-புதுச்சேரி. தொ – செ.து. சஞ்சீவி. வெ-பாவாணர் பதிப்பகம், சென்னை. விற்பனை உரிமை – பாரி நிலையம். மாருதி பிரஸ், சென்னை. 1966. உ-அழகு மலர்கள், அறிவுக் கனிகள், இவர்களைப் பற்றி – என்னும் மூன்று பெரிய தலைப்புகளின் கீழ், ஞாயிறு வணக்கம் முதல் டாக்டர் கமில் சுவலெபில் வரையான பல உள் தலைப்புகளில் பாடல்கள் உள்ளன.

அழகும் அறமும்

ஆ-தெ. செயராமன். கலைமகள் பதிப்பகம், புதுச்சேரி. சந்தானம் பிரிண்டிங் வொர்க்ஸ், புதுச்சேரி. ஒருமைப்பாடு முதல் இசைத் தமிழ் வரை 16 தலைப்புகள் உள்ளன.

எழில் இசை

ஆ-தெ. செயராமன். கலைமகள் பதிப்பகம், புதுச்சேரி. சந்தானம் பிரின்டிங் வொர்க்ஸ். புதுச்சேரி. அக்டோபர் 1964. மாணவர்க்கு உரிய இனிய இசைப் பாடல்களும் அபிநயப் பாடல்களும் உள்ளன. எங்கள் நாடு முதல் சடுகுடுவரை 30 தலைப்புகளில் பாடல்கள் பல உள்ளன.

முருகன் தோத்திரத் திரட்டு.

பதிப்பு-புதுவை பி.டி. கிருஷ்ண மூர்த்தி பாகவதர். கந்தர் சஷ்டி வெளியீடு. வேல் அச்சகம், புதுச்சேரி. பிலவ--ஐப்பசி–29. (14–11–1961). உ-குமாரஸ்தவம், முதல்வன் புராண முடிப்பு வேற் குழவி வேட்கை, பகை கடிதல், அட்டாட்ட விக்கிரக லீலை, சண்முக கவசம்--ஆகியவற்றின் திரட்டு.

தமிழ்க் கனிகள்

ஆ–புலவர் புதுவை பொன் வேங்கடேசன். வெ – அருள் பதிப்பகம், நெல்லிக்குப்பம். இளங்கோ அச்சகம், நெல்லிக்

குப்பம். 1959. இயற்கை முதல் அன்புவரை 13 தலைப்புகளில் பாடல்கள் உள்ளன.

கலை நிலவு

ஆ-அன்பு நிலவன். வெ—கலைச் செல்வி பதிப்பகம், பாகூர் - புதுச்சேரி. வி-உ-பாரிநிலையம், சென்னை. இளங்கோ அச்சகம், புதுச்சேரி-1968. உ-தமிழ், இயற்கை, காதல், வாழ்வு -என்னும் பெரிய தலைப்பின் கீழ், 'தமிழே' என்பது முதல் 'பரத்தை மகள்' என்பது வரை 47 தலைப்புகளில் பாடல்கள் உள்ளன.

தேற்று மொழித் திரட்டு

ஆ--புலவர் முதுகண்ணன், புதுச்சேரி. வெற்றிச் செல்வி வெளியீடு, புதுச்சேரி. கண்ணம்மை அச்சகம், புதுச்சேரி. முதல் பதிப்பு - 22 – 2 – 1984. மூன்றாம்பதிப்பு, 26 – 8 – 1987. உ-மணி மொழிக் கோவை, வாய்மொழிக் கோவை, வேட்கைப் பத்து, வெல்க தமிழ் - என்னும் நான்கு தலைப்புகள் உள்ளன. வெல்க தமிழ் என்பதில், 'தமிழ்ச்சீர்' என்பது முதல் 'தமிழ் நிலம் தொழும்' என்பது வரை ஏழு உள்தலைப்புகள் உள்ளன.

எழுக தமிழினமே

ஆ - பாவலர் இலக்கியன், வெ—மீனா புத்தகப் பண்ணை, விழுப்புரம்-வெற்றி அச்சகம், சென்னை. 1987. உ - 'தமிழ்' என்பது முதல் 'வாணிதாசன்' என்பது வரை 28 தலைப்புக ளில் எழுச்சிப் பாடல்கள் இடம்பெற்றுள்ளன. இறுதியில் 'ஈழவேழம்' என்னும் குறுங்காப்பியம் உள்ளது. ஆசிரியர் 'தமிழ் மகள்', 'பாடுக குயிலே' என்னும் கவிதை நூல்களும் இயற்றியுள்ளார்.

பாரதியைப் பாடுவோம்

ஆ -ஜோதி தாசன், புதுச்சேரி. வெ - அன்ன பூரணி பிர சுரம், புதுச்சேரி. அச்சு-கோமதி அச்சகம், சென்னை 1982. கி.வா. ஜகந்நாதன், சுத்தானந்த பாரதியார் முதலியோர் வாழ்த்துரையும் அணிந்துரையும் அளித்துள்ளனர். உ - அன்புக்

கவிஞன் பாரதி என்பது முதல் மகாகவி மன்னன் பாரதி என்பதுவரை 25 தலைப்புகளில் பாடல்கள் உள்ளன.

தமிழே வாழி

ஆ–ஜோதி தாசன், புதுச்சேரி. வெ–அன்னபூரணி பதிப்பகம். புதுச்சேரி. வி.உ. அமுதநிலையம், சென்னை. சீநிவாச பவர் பிரஸ், சென்னை. 1986.உ—அன்னை தமிழ் என்பது முதல்தமிழ் மொழி என்பது வரை 25 தலைப்புகளில் பாடல்கள் உள்ளன.

தமிழ் மலர்கள்

ஆ–பாவல ரேறு தமிழவேள், புதுச்சேரி-இராமன் அச்சகம், புதுச்சேரி. 1985.உ .‘தமிழ்’, ‘மலர்கள்’ முதலிய பல தலைப்பு களின் கீழ், நயமும் சுவையும் மிக்க பாடல்கள் உள்ளன. இந் நூல், புதுச்சேரி அரசின் ஐயாயிரம் உரூபா பரிசு பெற்றது.

வறுமையை ஒழிப்போம்

வில்லிசை மலர்கள் – ஆ-இயலிசைக் கலைமாமணி இ. பட்டாபி ராமன், புதுச்சேரி. வெ – வள்ளலார் பதிப்பகம், புதுச்சேரி. அமுதன் அச்சகம், சென்னை. 1-1-1989.

ஆசிரியர் பட்டாபி ராமன் வில்லுப்பாட்டுக் கலைஞர்; வெற்றியுடன் வில்லுப்பாட்டு நிகழ்ச்சி நடத்துபவர். இவரது இந்தத் தொகுப்பில், ‘வறுமையை ஒழிப்போம்’ என்பது முதல் ‘கம்பன் கண்ட நாடு’ என்பதுவரை 9 வில்லுப்பாட்டுத் தொகுப்புகள் உள்ளன. முதல் தலைப்பே நூலுக்குப் பெயராக வழங்கப்பட்டுள்ளது. மாதிரிக்காக, முதல் பாட்டு வருமாறு:

“தந்தனத்தோம் என்று சொல்லியே
வில்லினில் பாட
வந்தருள்வாய் தமிழ் அன்னையே!
தான தந்தத் தோடு நல்ல
ஓசைகளும் தாளத் தோடு
ஆன பம்பை உடுக்கையொடு
நல்ல மேளத் தோடு
அத்தனையும் இசையோடே —
தந்தனத்தோம் என்று சொல்லியே”

என்பது பாடல். காலத்திற்கேற்ற கருத்துகளை எளிய இனிய வழியில் பரப்புதற்கு ஏற்றது இந்தத் தொகுப்பு.

பாடித்தான் பாருங்களேன்

ஆ-இ. பட்டாபிராமன், புதுச்சேரி. வெ--முத்துப்பதிப்பகம், விழுப்புரம். கோமதி அச்சகம், சென்னை, 1985. உ--தமிழா விழித்தெழு, சமுதாய ஒற்றுமை, வருமுன் காப்போம், அமரர் அன்னை இந்திராவுக்கு அஞ்சலி-ஆகிய பெரிய தலைப்புகளின் கீழ்ப் பாடல்கள் உள்ளன.

## குழந்தைப் பாடல்கள்

குழந்தைக் கவிஞர்கள் குழந்தைகட்காக எழுதியுள்ள பாடல் தொகுதிகள் சில காணலாம்.

மலரும் உள்ளம்

ஆசிரியர் அழ. வள்ளியப்பா. வெளியீடு – பாரி நிலையம், சென்னை - முதல் பதிப்பு1954. குழந்தைக் கவிஞர் அழ. வள்ளியப்பா 1944 இல் 23 பாடல்களுடன் 'மலரும் உள்ளம்' என்ற பெயரில் ஒரு தொகுப்பு வெளியிட்டார். பின்னர், பல இதழ்களில் வந்த பல பாடல்கள் - சிறு சிறு வெளியீடுகள் - ஆகியவையும் சேர்க்கப்பட, இந்தப் பெரிய தொகுப்பு உருவாயிற்று. இதன் வெளியீட்டு விழா, சென்னையில் 1954 – மே – 6 ஆம் நாள் நடைபெற்றது.

இதில் ஐந்து பெரும் பகுதிகளும் பல உட்பிரிவுகளும் உள்ளன. மலரும் உள்ளங்களாகிய குழந்தைச் சிறார்கட்கு ஏற்ற வேடிக்கைப் பாடல்கள், கதைப்பாடல்கள், சுதந்திரம் பிறந்த கதை முதலியன உள்ளன.

குழந்தைக் குரல்

இது பாப்பாமலர். ஆ - அழ. வள்ளியப்பா. வெ - இராம விலாஸ், இராயவரம், புதுக்கோட்டை ஸ்டேட். மதராஸ் ரிப்பன் பிரஸ், இராமச்சந்திர புரம். 1947. கலைமகள் முதல் ரேஷன் காலத்துச் சாமியார் வரை 38 தலைப்புகளில் படங்களுடன் பாடல்கள் உள்ளன.

சின்னஞ் சிறு பாடல்கள்

ஆசிரியர் – அழ. வள்ளியப்பா. வெளியீடு - குழந்தைப் புத்தக நிலையம். விற்பனை உரிமை - பாரி நிலையம், இரண்டாம் பதிப்பு - 1963. ஜீவன் பிரஸ், சென்னை – 5.

உள்ளுறை: 'தொந்திக்கணபதி' முதல் 'ஞாயிற்றுக் கிழமை பிறந்த பிள்ளை' வரை 24 தலைப்புகளில் பாடல்கள் உள்ளன.

கதைப் பாடல்கள்

ஆசிரியர்: அழ. வள்ளியப்பா. வெளியீடு - குழந்தைப்புத்தக நிலையம், சென்னை. விற்பனை உரிமை - பாரி நிலையம். ஜீவன் பிரஸ், சென்னை. முதல் தொகுதி - 1962. 'ஆமையாரின் அவசரம்' முதல் 'குழந்தைச் சண்டை' வரை பல தலைப்பு களில் பாடல்கள் உள்ளன. இதன் இரண்டாம் தொகுதியும் குழந்தைப் புத்தக நிலையத்தாரால் வெளியிடப்பெற்றுள்ளது.

குழந்தை விருந்து

ஆசிரியர்: இ.ராசா. வெளியீடு: தமிழ் நூலகம், புதுவை-3. கற்பகம் பிரிண்டர்ஸ். புதுவை. 1968. உள்ளுறை: சிட்டுக்குருவி, கிளியே வா, பூனை, நாய், பசு, யானை, பூனையும் யானை யும், இயற்கை, மழை, வெண்ணிலா, காற்று, எறும்பு, தேனீ, காக்கையும் தண்ணீர்க் குடமும், கை தட்டு, நடை வண்டி, பழங்கள், கண் வளராய், பொம்மை வாங்கலாம், நல்ல குடும்பம், வானவூர்தி, பாப்பா கேள், திருக்குறள், எங்கள் காந்தி, வாய்மை வெல்லும், உண்மைக்குப் பரிசு – ஆகிய 26 தலைப்புகளில் பல பாடல்கள் உள்ளன.

முத்துப் பாடல்கள்

ஆ – மயிலை சிவ முத்து. புக்ஸ் (இந்தியா) பிரைவேட் லிமிடெட், சென்னை. 1959. உ – எங்கள் அப்பா முதல் தமிழ் மொழி வாழ்த்து வரை - 45 தலைப்புகள் - படங்களும் உண்டு.

குழந்தைக் கவிதைகள்

ஆ–நாக முத்தையா. வெ-தமிழ்ப் புத்தகாலயம் சென்னை. சாந்தி பிரஸ், சென்னை. 1960 உ-வணக்கம், உயர்ந்தநெறிகள்,

உயிர்ப் பொருள்கள், பல் பொருள்கள், உயர்ந்தோர்கள்-இவை பெரிய தலைப்புகள். இவற்றின் கீழ்ப் பல உள் தலைப்புகள் உண்டு. உரிய படங்களும் உண்டு.

இளைஞர் பாடல்கள்

ஆ - கோவை கிழார் சி.எம். இராமச் சந்திரன் செட்டியார். செங்குந்தர் அச்சுக் கூடம், கோவை. 1932. உ - கடவுள், இயற்கைப் பொருள்கள், விளையாட்டு விழா, பொதுப் பண்புகள், சிறு கதைப் பாடல்கள் ஆகிய ஐந்து பெரிய தலைப்புகளின் கீழ், கடவுள் முதல் அபூர்வ பலி வரையிலான 42 உள் தலைப்புகளில் பாக்கள் உள்ளன.

மழலை அமுதம்

ஆ - கவிஞர் தமிழழகன். வெ-புக்ஸ் (இந்தியா) பிரைவேட் லிமிடெட், சென்னை. சாந்தி பிரஸ், சென்னை. 1961. ஆசிரியர் கூற்று -“அவ்வப்போது பாடிய சின்னஞ்சிறு இசை வரிப் பாடல்களின் தொகுப்பே இந்நூலாக வெளிவருகிறது”. உ - முதல் வணக்கம் முதல் வாழ்த்து ஈறாக 50 தலைப்புகளில் சிறார்க்கு ஏற்ற மழலை அமுதப் பாடல்கள் உள்ளன.

தேன் மலர்

குழந்தைப் பாடல்கள். ஆ - தி ‘குமாரராசு. எழில் வெளியீடு. எழில் பதிப்பகம், சென்னை. 1963. சாந்தி பிரஸ், சென்னை. வி.உரிமை - என் சி பி எச் பிரைவேட் லிமிடெட், சென்னை. பல சமயம் பல இதழ்களில் எழுதி வெளிவந்தவை. தேன் மலர் முதல் வாழ்க தமிழ் வரை 22 தலைப்புகளில் பாடல்கள் உள்ளன.

மழலைச் செல்வம்

ஆ - நாக முத்தையா. ஸ்டார் பிரசுரம், சென்னை. தி ஐடியல் பிரின்டர்சு, சென்னை. குழந்தை தின வெளியீடு, 14 - 11-1961: கணபதி முதல் பூனைவரை 12 தலைப்புகளில் பாடல்கள். ஒவ்வொரு பக்கத்திலும், இடக்கைப் பக்கம் பாட்டும் - அதற்கு நேராய் வலக்கைப்பக்கம் படமும் உள்ளன. நாக முத்தையாவின் மழலை இன்பம் என்னும் நூலும் உள்ளது.

மழலைப் பூங்கா

இதே ஸ்டார் பிரசுரம் வெளியிட்ட-நாரா-நாச்சியப்பனின் மழலைப் பூங்கா, என்னும் குழந்தை நூலும் உண்டு. அதே அச்சகம். 1961. கதைப் பாட்டு முதல் காசுவரை 12 தலைப்பு கள். ஒரு பக்கம் பாட்டு-மறு பக்கம் படம்-அமைத்துள்ளனர்.

காந்தியின் நன்கொடை

ஆ-நாகமுத்தையா. ஸ்டார்பிரசுரம். ஜீவன்பிரஸ், சென்னை. முதல் பதிப்பு-நவம்பர், 1962. இரண்டாம் பதிப்பு - சனவரி, 1964. காந்தியின் நன்கொடை முதல் காட்டூர்க் கிழவி வரை 13 கதைப் பாடல்கள் படங்களுடன் உள்ளன. 8 முதல் 14 அகவை உடைய சிறார்கட்கு ஏற்ற நூல். முதல் தலைப்பு நூலின் பெய ராகத் தரப்பட்டுள்ளது.

பாலர் அபிநயப் பாடல்கள்

இளைஞர்க்கு ஏற்ற ஒரு வகை நடிப்பு போன்றஆட்டப் பாடல்களின் தொகுப்பு இது. ஆ - ஞா.பா. வேத நாயகம். யூனியன் பிரஸ், கொழும்பு. 1940. உ-கடவுள் வணக்கம் முதல் பெண்கள் கோலாட்டக்கும்மி வரையான 13 தலைப்புகளில் அபிநயப் பாக்கள் உள்ளன.

தேன் மலர்க் கவிதைகள்

ஆ-இரத்தினம் பாரதி. வெ-அருள் பண்ணை, வேங்கடேசு வர பவனம், சென்னை. அல்லயன்ஸ் பிரஸ், சென்னை. 1966. அன்புதான் கொள்வீரோ என்பது முதல் மோட்டார் சைகிள் என்பது வரையிலான 65 தலைப்புகளில் பலதுறைக் குழந்தைக் கவிதைகள் உள்ளன.

குழந்தைப் பாட்டு

தொ-ஜி.ஆர்.சாமுவேல். வெ.C.L.S. (கிறிஸ்தியன் லிட்டரரி சொசைட்டி), சென்னை. 1937. அம்புலி முதல் கமலா வும் விமலாவும் வரை 22 தலைப்புகளில் படங்களுடன் பாடல் கள் உள்ளன.

குழந்தைப் பாக்கள்

ஆ - பு.ஆ.முத்துக் கிருஷ்ணன், கழக வெளியீடு-அப்பார் அச்

சகம், சென்னை. படங்களுடன் கூடியது. முதல் பாகம்-ஏப்ரல் 1962. 'காலை அழகு' முதல் 'நல்லவழி'வரை 17 தலைப்புகள். இரண்டாம் பாகம்-நவம்பர் 1962. 'பிராணிகள் குரல்' முதல் 'பட்டம்' வரை 29 தலைப்புகள்.

குழந்தைப் பாடல்கள்

ஆ-ஆ.நாகமுத்தையா. செல்வி பதிப்பகம், காரைக்குடி. ஐடியல் பிரிண்டர்ஸ், சென்னை, ஜுன் 1960. உ-வாழ்த்து, பெரியோர்கள், மிருகங்கள், பறவைகள், நீதிவழிகள், பல்சுவை என 6 பெரிய தலைப்புகளின் கீழ், பிள்ளையார் முதல் கைவீசு வரை 40 தலைப்புகள். சிறு படங்களுடன்.

சிறுவர்க்கு விஞ்ஞானம்

ஆ-கவிஞர் அரு. சோமசுந்தரம். மீனாட்சி புத்தக நிலையம், மதுரை. ஜெனரல் பிரிண்டர்ஸ், சென்னை. 14-11-1962. உ-அறிவுரை, விஞ்ஞான மூர்திகள், விஞ்ஞானப் புதுமைகள், விஞ்ஞான வசதிகள், முடிவுரை என்பன. ஐந்து பெரியதலைப்புகள். 'பாப்பா பாடு விஞ்ஞானம்' முதல் 'விஞ்ஞானக் கல்வி வரை 40 உள் தலைப்புகளில் பாடல்கள் உள.

பாலர் பூங்கா

ஆ-பாரதன். தமிழ் நிலையம், புதுக்கோட்டை. சிவகாமி அச்சகம், புதுக்கோட்டை. 'தாயே வணக்கம்' முதல் 'காந்தி தாத்தா' வரை உள்ள பலதலைப்புகளில் படங்களுடன் பாடல்கள் உள்ளன.

மழலைச் சோலை

ஆ-நாரா. நாச்சியப்பன். ஸ்டார் பிரசுரம்-ஐடியல் பிரிண்டர்ஸ், சென்னை. ஒரு பக்கம் பாட்டு-மறுபக்கம் படம். 'குருவி குருவி' முதல் 'குட்டிக் குரங்கு' வரை 12 தலைப்புகளில் பாடல்கள் உள.

பல்சுவைப் பண்ணத்திப் பாடல்கள்

ஆ-முது பெரும் புலவர் திரு. அடிகளாசிரியர். தொ-அ.சிவபெருமான், குகையூர்.பதிப்பு-முகவை மு.ரெங்கசாமி, கரந்தை 20-10-1983.உ - கடவுள் வாழ்த்து முதல் மாப்பிள்ளை விட்ட

எலி வரை 20 தலைப்புகளில் சிறார்கட்கு ஏற்ற பாடல்கள் உள்ளன. இந்நூல், ஓர் இனிய குழந்தை இலக்கியப் பூங் கொத்து என்று ஆசிரியரால் குறிப்பிடப்பட்டுள்ளது.

குழந்தைப் பாட்டு

ஆ-சுந்தர சண்முகனார், வெ - புதுவைப் பைந்தமிழ்ப் பதிப்பகம், புதுச்சேரி, ஆசிரம அச்சகம், புதுச்சேரி. முதல் பதிப்பு-1448. இரண்டாம் பதிப்பு - 1949. உ - கடவுள் முதல் தொண்டு என்பது வரை பத்துத் தலைப்புகளில் பாடல்கள் மெட்டுடன் தரப்பெற்றுள்ளன.

குழந்தை உலகம்

ஆ-கி.வா. ஜகந்நாதன். அமுத நிலையம், சென்னை. நாஷ னல் ஆர்ட் பிரஸ், சென்னை. மார்ச்சு 1952. தாலாட்டுமுதல் சுண்டெலி ராசன் கல்யாணம் வரை 20 தலைப்புகளில் படங் களுடனும் விளக்கத்துடனும் பாடல்கள் உள்ளன.

கறுப்பு வைரம்

சிறுவர் கவிதைத் தொகுப்பு - ஆ-கவிஞர் திருச்சி வாசு தேவன். வெ-யுனைடெட் பப்ளிஷர்ஸ், திருச்சி ஜோதி பிரிண் டர்ஸ், திருச்சி. உ-கதிரவன் முதல் சுதந்திரத்தாய் வரை 45 தலைப்புகளில் பல பாடல்கள் பல்வேறு இதழ்களில் வந்தவை. கறுப்பு வைரம் என்பது ஒரு தலைப்பு. இது நூலுக்குப் பெய ராய் வழங்கப்பட்டுள்ளது. கறுப்பு வைரம் என்பது நிலக்கரி. 1963.

ஈசாப் கதைப் பாடல்கள்

ஆ - அழ.வள்ளியப்பா. வெ - குழந்தைப் புத்தக நிலையம், சென்னை. வி.உ-பாரி நிலையம், சென்னை. மூன்றாம் பதிப்பு 1963. கிரேக்க அறிஞர் ஈசாப் கதைகளைப் பாடலாகத் தந் துள்ளார் ஆசிரியர். இரண்டு தொகுதிகள் வந்துள்ளன. இது இரண்டாவது தொகுதி. உ-பெண் கேட்ட சிங்கம் முதல் சோதிடர் ஓடினார் வரை 21 கதைப்பாடல்கள் உள்ளன.

வேடிக்கைப் பாடல்கள்

ஆ-அழ.வள்ளியப்பா. வெ-குழந்தைப் புத்தக நிலையம்

சென்னை. வி.உ - பாரி நிலையம். 1962. வள்ளியப்பாவின் 'மலரும் உள்ளம்' என்னும் நூலில் உள்ள வேடிக்கைப் பாடல் களைத் தனியாக எடுத்துத் தொகுத்தது இந்நூல். 'இதுபாட்டு' என்பது முதல் 'மொத்தம் எத்தனை' என்பது வரை 30தலைப்பு களில் படங்களுடன் பாடல்கள் உள்ளன. அச்சகம் - ஜீவன், பிரஸ், சென்னை.

பாட்டும் கதையும்

ஆ - குழந்தையன்பன். வேலா பதிப்பகம், ஈரோடு. தி மதராஸ் சிட்டி பிரஸ், சென்னை. 1965. உ-வணக்கம் முதல் நாயும் கழுதையும் வரை பத்துத் தலைப்புகளில், பத்துக்கதை கள் பாடல்களாகத் தரப்பட்டுள்ளன. படங்களும் உடன் கொடுக்கப்பட்டுள்ளன.

மழலைத் தேன்

ஆ - புலவர் ச. பாலசுந்தரம். தாமரை வெளியீட்டகம், தஞ்சை. மகாலிங்கம் பதிப்பகம், தஞ்சை. இளைஞர் இலக் கியம் இது. மழலை அமிழ்தம், குதலைக்கனி, கிள்ளை மொழி, மக்கள் செல்வம் என்னும் நான்கு பெரிய தலைப்புகளின் கீழ், கடவுள் வாழ்த்து முதல் தேசவாழ்த்து வரை 73 உள் தலைப்பு களில் பாடல்கள் உள்ளன. 1965.

பாலர் இசைக் கொத்து

ஆ - கே.எஸ். அலமேலு அம்மாள், சென்னை. சாந்தி பிரஸ், சென்னை. 1967. கிடைக்குமிடம்-இந்தியன் மியூசிக் பப்ளிஷிங் ஹவுஸ், சென்னை. 42 பாடல்கள் சுரத்துடன் தரப் பட்டுள்ளன. சிறார்கள் பாடலாம்.

மழலை விருந்து

ஆ-நாக முத்தையா. ஸ்டார் பிரசுரம். 1961. தி ஐடியல் பிரஸ், சென்னை. 'நாய்க்குட்டி' முதல் 'கொலுவில் கண்டேன்' வரை 12 தலைப்புகள். நல்லொழுக்கப் பாடல். ஒரு பக்கம் பாடல்-ஒரு பக்கம் படம்.

பொம்மை வீடு

ஆ - இன்ப வண்ணன். வி.உ. மெர்க்குரி புத்தகக் கம்பெனி, கோவை. புரோகிரசிவ் பிரின்டர்ஸ், சென்னை. 1962.

பொம்மை வீடு முதல் சிரித்த முகம் வரை 23 தலைப்புகள். படங்களுடன் பாடல்கள் உள்ளன.

இளைஞர் பாட்டு

பல புலவர்கள் பாடியவை. ஜீபிடர் பிரஸ். 1941. பெ.கோவிந்தன், சி.து. கன்னிசாமி, ல.கு. கிருஷ்ணன், சி.எம். இராமச்சந்திரன் செட்டியார், நடராசப் பிள்ளை, இளவழக னார், சுத்தானந்த பாரதி, வ. சுப்பையா – முதலியோரின் பாடல்கள். உ. வெண்ணிலா முதல் கடவுள் வாழ்த்து வரை பல தலைப்புகள்.

பாப்பாவுக்குப் பாட்டு

ஆ-அழ வள்ளியப்பா. வி, உ – பாரி நிலையம், சென்னை. ஜீவன் பிரஸ், சென்னை. இரண்டாம் பதிப்பு-1965. கண்ணன் முதல் திருவிழா வரை பல தலைப்புகளில் படங்களுடன் பாடல்கள் உள.

மழலைப் பொழில்

ஆ-நாரா. நாச்சியப்பன். ஸ்டார் பிரசுரம் – தி ஐடியல் பிரஸ், சென்னை. குழந்தைகள் தின வெளியீடு. 14 நவம்பர் 1961. ஒரு பக்கம் பாட்டு-மறு பக்கம் படம். புத்தகம் முதல் காகிதப்பூ வரை-12 தலைப்புகளில் பாடல்கள் உள்ளன.

வெள்ளை முயல்

ஆ-அரி மழம் இராம கணபதி. வெ-பழநியப்பா பிரதர்ஸ். ஏஷியன் பிரஸ், சென்னை. 1960. ‘வெள்ளை முயல்’ முதல் ‘சின்ன சிருடை’ வரை உள்ள பல தலைப்புகளில், பெரிய எழுத்தில், வண்ணப் படங்களுடன் பாடல்கள் உள்ளன. நூல் அகல நீளத்தில் பெரியது.

பூ மத்தாப்பு

ஆ – கவிஞர் தமிழழகன். பழநியப்பா பிரதர்ஸ், ஏஷியன் பிரஸ், சென்னை. 14 நவம்பர் 1962. உ – பூ ‘மத்தாப்பு’முதல் ‘பட்டாம் பூச்சி’ முதல் பல தலைப்பு. பெரிய எழுத்து-வண் ணப் படங்களுடன்-அளவில் நூல் பெரியது.

சொல்லு பாப்பா

ஆ - நாகமுத்தையா. தமிழ்ப் புத்தகாலயம். வ.உ.சி. பிரஸ், சென்னை. 14-11-1961. சேவல் முதல் சுண்டெலி வரை பல தலைப்புகள். பெரிய எழுத்து. வண்ணப் படங்கள்-வண்ண எழுத்துகள் - கொண்டது. அகல - நீளத்திலும் பெரியது.

சிங்காரக் கவிதைகள்

ஆ - நாரா. நாச்சியப்பன். தொல்காப்பியர் நூலகம். முத்தையா அச்சகம், சென்னை. 1962. திருக்குறள் முதல் சின்ன மாமா வரை. படங்களுடன்.

குழந்தைக் கவி யமுது

ஆ - நாகமுத்தையா. ஸ்டார் பிரசுரம், சென்னை. தி ஐடியல் பிரஸ், சென்னை. 1962. சிறுவர்க்கான பாக்கள். 7 பெரும் பகுதிகள் உள்ளன. தமிழணங்கு முதல் சுவைகள் வரை பல உள் தலைப்புகள் உள.

காந்தி கொடுத்த இடம்

ஆ-நாகமுத்தையா. 'காந்தி கொடுத்த இடம்' முதல் 'வீரன் இராமு' வரை 12 தலைப்பில் கதைப் பாடல்கள் உள் ளன. படங்களும் உண்டு. மற்றவை மேல் உள்ளனவே. 1964. முதல் தலைப்புப் பெயர் நூலின் பெயராயிற்று.

நாக முத்தையா கவிதை நூல்கள்

குழந்தைப் பாடல்கள், சிறுவர் இலக்கியம், குழந்தைக் கவிதைகள், சொல்லு பாப்பா, மழலை இன்பம், மழலை விருந்து, மழலைச் செல்வம், சின்ன சின்ன கவிதைகள் - ஆகிய எட்டு நூல்களின் திரட்டு. ஆ-நாகமுத்தையா.

குழந்தைப் பாட்டுகள்

முதல் பதிப்பு - சக்தி பிரஸ், சென்னை. 1939. இரண்டாம் பதிப்பு - கழகம் - 1941. 'நிலாப் பாடல்' முதல் 'தமிழ் நாடு' வரை 32 தலைப்புகளில் பெரிய எழுத்தில் படங்களுடன் பாக் கள் உள்ளன. உ-நாட்டில் உலவும் குழந்தைப் பாடல்கள் சில, பழமொழி விளக்கப் பாடல்கள் சில, நல்வழி கூறும் பாடல் கள் சில, மு. வரதராசனாரின் பாடல்கள் சில,

கழகச் சிறுவர் பாட்டு

தொ-வெ-கழகம். ஜுபிடர் பிரஸ், சென்னை. 1941. உ-பெ. கோவிந்தன், சி.து. கன்னி சாமி, இளவழகனார், வ. சுப்பையா, ல.கு. கிருஷ்ணன்-முதலிய புலவர் பலரின் பாடல் தொகுப்பு. பாப்பா பாட்டு முதல் கலைமகள் சிந்தனை வரை 35 தலைப்புகளில் படங்களுடன் பாடல்கள் உள்ளன.

பாப்பாவின் பாட்டு

ஆ - நாகமுத்தையா. ஸ்டார் பிரசுரம். பொன் விளக்குப் பதிப்பகம். பஜ்வாஸ் பிரின்டர்ஸ்,சென்னை. "வாழவேண்டும்" முதல் 'நிலாவைத் தின்ற நாய்' வரை 26 தலைப்புகளில் படங்களுடன் பாடல்கள் உள்ளன.

சிறுவர் செய்யுட் சோலை

தொ-சுந்தர சண்முகனார். வெ-புதுவைப் பைந்தமிழ்ப் பதிப்பகம், புதுச்சேரி. அரவிந்த ஆசிரம அச்சகம், புதுச்சேரி -முதல் பதிப்பு 1948. இரண்டாம் பதிப்பு- 1949.உ-கொன்றை வேந்தன், வெற்றி வேற்கை, மூதுரை, நல்வழி, பாரதிதாசனாரின் சிறார்க்கு ஏற்ற ஒரு பாடல், சுந்தர சண்முகனாரின் கதைப்பாட்டு-ஆகியன.

மாணவர் பாட்டு

ஆ-வ. பொன்னம்பலம். முத்தமிழ்ப் பதிப்பகம், புதுச்சேரி, இம்பீரியல் பிரஸ், புதுச்சேரி. உ-'தாய் நாட்டின் வணக்கம்' முதல் 'கும்மி விளையாட்டு' வரை 20 தலைப்புகளில் இசைப் பாடல்கள் உள்ளன. இராகம்-தாளம் குறிப்பிடப்பட்டுள்ளன.

சிறுவர் செல்வம்

ஆ-கவிஞர் வை. மாணிக்கசாமி. வெ-சிவப்பிரகாசர் பதிப்பகம், புதுச்சேரி. இளங்கோ அச்சகம், புதுச்சேரி-மே, 1964. அம்மா முதல் உழவர் வரை 15 தலைப்புகளில் பல பாடல்கள் உள்ளன.

மழலை அமுதம்

ஆ-புலவர் மு.காந்திமதி-வெ.முத்துப்பதிப்பகம், விழுப்புரம். வெற்றி அச்சகம், சென்னை,1985. உ - வேடிக்கைப் பாடல்கள்

-இப்பெரிய தலைப்பின் கீழ், ஆனை முதல் வானவில் வரை 9 தலைப்புகளில் பாடல்கள் உள. 'விளையாட்டுப் பாடல்கள்' என்னும் பெரிய தலைப்பின் கீழ், துப்பாக்கி முதல் கூட்டாஞ் சோறுவரை 9 தலைப்புகள். 'அறிவுரைப் பாடல்கள்' என்னும் பெரியதலைப்பின் கீழ் சிரி பாப்பா முதல் பறவை வரை 11 தலைப்புகள். 'கதைப்பாடல்கள்' என்னும் பெரிய தலைப்பின் கீழ்எலிகள் கொண்டாட்டம் முதல் தந்தைக்குப் பாடம் வரை 11 தலைப்புகள். பாடல்கள் பொருத்தமான படங்களுடன் பெரிய எழுத்தில் உள்ளன.

சின்ன பாப்பா

ஆ - வெ-பாவலரேறு தமிழவேள், புதுச்சேரி. தமிழ்ச் செல்வி அச்சகம், புதுச்சேரி. 1964. உ 'சின்ன பாப்பா' முதல் 'மதிப்புவரை' வரை 20 தலைப்புகளில் சிறார்க்கு ஏற்ற கவிதை கள் உள்ளன.

இசைத் தேன்

சிறுவர் பாடல். ஆ-வை: கூத்தன், புதுச்சேரி. சரசுவதி பதிப்பகம், புதுச்சேரி - சந்தானம் பிரின்டிங் ஒர்க்ஸ், புதுச்சேரி. 1968. உ - இயற்கை, பறவை, விலங்கு, பெரியார், அறவுரை என்னும் பெரிய தலைப்பின் கீழ், நிலா முதல் கும்மி விளை யாட்டு ஈறாக 25 தலைப்புகளில் பாடல்கள் உள்ளன.

அறிவியல் இலக்கியம்

ஆ-கவிஞர் தமிழ் இயக்கன். வி.உ-நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை. கோமதி அச்சகம், சென்னை. திசம்பர்-1985. வெ-குறிஞ்சிப் பதிப்பகம், புதுச்சேரி. உ-உலகம் என்பது முதல் நாள் பிறந்த கதை என்பது வரை 25 தலைப்புகளில் சிறார்க்கு ஏற்ற பாடல்கள் உள்ளன. பாடல்கள் அனைத்தும், சிறார்க்கு அறிவியலை எளிய முறையில் அறிவிப்பன வாகும். படங் களும் உள்ளன.

குழந்தைப் பாடல்கள் என்னும் தலைப்பைத் தொடர்ந்து குழந்தைகள் தொடர்பான தாலாட்டுப் பாடல்களைக் காண் பாம்.

## தாலாட்டுப் பாடல்கள்

வாழ்க்கையில்-குழந்தைப் பருவத்தில் முதலில் கேட்கும் பாடல், தாயின்வழி வரும் தாலாட்டுப் பாடல் ஆகும், தால் என்றால் நாக்கு. நாக்கை ஒரு விதமாக ஆட்டிப் பாடும் பாடல் தாலாட்டுப் பாடல். அப்பாடல்களைச் சிலர் தொகுத்தனர். சில காண்பாம்:

தாலாட்டுப் பிரபந்தம்

புலவர்கள் பலர் பாடிய தாலாட்டுப் பாடல் நூல்களின் தொகுப்பு இது. சென்னை ரிப்பன் அச்சியந்திர சாலை. 1908 உள்ளுறை: நூல் பெயரும் ஆசிரியர் பெயரும் மொத்தப் பாடல் எண்ணிக்கையுடன் வருமாறு,-மொத்தத் தாலாட்டு நூல்கள்-12.

1. சீதா சாரத் தாலாட்டு - திரு வேங்கடநாதர்—108.
2. திருத் தாலாட்டு-தத்துவ ராய சுவாமிகள் - 51.
3. சிவ ஞான பாலைய சுவாமிகள் தாலாட்டு - சிவப்பிரகாச சுவாமிகள் - 100
4. சிதம்பர சுவாமிகள் தாலாட்டு -சிதம்பர சுவாமிகள் - 41.
5. பெருமாள் தாலாட்டு அல்லது ஸ்ரீ ராமர் தாலாட்டு - 31.
6. திருப் பரங்கிரிக் குமரவேள் தாலாட்டு—
திரு எவ்வுளூர் இராமசாமி செட்டியார் - 151.
7. ஆண்பிள்ளைத் தாலாட்டு - மேல் ஆசிரியரே - 59.
8. பெண்பிள்ளைத் தாலாட்டு - மேல் ஆசிரியரே - 34.
9. மத்தியார்ச்சுனம் ஏகநாயகர் தாலாட்டு -
உ.வே. சாமிநாத ஐயர் - 30.
10. சங்கர பகவத் பாத சுவாமிகள் திருத்தாலாட்டு—
அச்சுதானந்த சுவாமிகள் - 21.
11. சீர்காழிச் சிற்றம்பல நாடிகள் தாலாட்டு - 63.
12. திருஞானசம்பந்தர் திருத்தாலாட்டு- காஞ்சி சபாபதி முதலியார் 41 - என்பன வாகும்.

தாலாட்டு

தொகுப்பு - தமிழண்ணல் - செல்வி பதிப்பகம், காரைக்குடி - சௌத் இந்தியா பிரஸ், காரைக்குடி - 1956.

பொருளடக்கம் - 1. தாய்மை இலக்கியம் - திறனாய்வுக் கட்டுரை - தமிழண்ணல். 2 பாண்டிய நாடு - தாலாட்டுப் பாடல்கள், 3. ஈழநாடு, 4. சோழநாடு, 5. நாஞ்சில் நாடு, 6.தென் பாண்டிநாடு, 7. கொங்கு நாடு - இந்தப் பகுதிகளில் வழங்கும் தாலாட்டுப் பாடல்கள், 8.நபிகள் நாயகம் தாலாட்டு, 9. ஏசு பெருமான் தாலாட்டு - புலவர் எம்.பி. மாஸ்கரனேஸ் இயற்றியது. 10. முற்காலக் கவிஞர் தாலாட்டு-குலசேகர ஆழ்வார், குமர குருபரர் ஆகியோர் இயற்றியவை. 11. இக்காலக் கவிஞர் தாலாட்டு-பாரதி தாசன், கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை, ராய. சொக்கலிங்கம், நாமக்கல் வெ. இராமலிங்கம் பிள்ளை, வாணிதாசன், முடியரசன், தில்லை. த. அழகு வேலன், வே. அண்ணாமலை, கதி. சுந்தரம், தமிழண்ணல் ஆகியோர், இயற்றியவை.12. பிறமொழித் தாலாட்டுகள் - (1) மலையாளப் பாடல்களும் (2) கன்னடப் பாடல்களும் தமிழ் ஒலியில் உள்ளவை. (3) ஆங்கிலம் - வில்லியம் பார்னெஸ் (William Barness) என்பவரின் LULLABY என்னும் ஆங்கிலப் பாடலின் தமிழாக்கம். LULL என்பது ‘ரா ரா’ என்பது போன்றது. (4) A Cradle Song-Tennyson - டென்னிசனின் தொட்டில் பாட்டு - தமிழாக்கம் - என்பனவாம்.

தாலாட்டுப் பாடல்கள் .

தொகுப்பு: ஆறு. அழகப்பன். விற்பனை உரிமை - பாரி நிலையம், சென்னை. 1966. உள்ளுறை: ‘கலி தீர்த்தாரோ’ என்பது முதல் ‘பல்சுவை’ என்பது வரை 19 தலைப்புகளில் பல ஊர்களிலிருந்து திரட்டிய பாடல்களின் தொகுப்பு இது.

மேலுள்ள தாலாட்டு நூல்களில் உள்ள பாடல்களைப்பாடியும் பாடக்கேட்டும் சுவைத்து மகிழ வேண்டும். குழந்தைகளை மயக்கித் தூங்கவைக்கும் பாடல்கள் இவை.

---

# 4. நான்கு காலம்–1

## பல்வேறு வகைப் பாடல் திரட்டுகள்

தனிப் பாடல் திரட்டுகள், இறைவணக்கப் (தோத்திரப்) பாடல்கள் திரட்டு, சிற்றிலக்கியத் திரட்டுகள் என்னும் தலைப்புகளில் இந்த நூலில் கொடுக்கப்பட்டுள்ள நூல்கள் போல் இன்றி, வேறு வகையான திரட்டு நூல்கள் இத்தலைப் பில் இடம் பெற்றுள்ளன.

இந்தத் தலைப்பில் உள்ளவை:- பல பெரிய நூல்களி லிருந்து திரட்டப்பட்ட பாடல்களின் தொகுப்பு நூல்கள், புலவர்கள் மன்னர்கள் ஆகியோரின் வரலாற்றுத் திரட்டுநூல் கள், கடவுள் நூல்கள் – தத்துவ நூல்கள் – சோதிட நூல்கள் – மருத்துவ நூல்கள்–மந்திர நூல்கள்– வசிய நூல்கள்,–முதலிய வற்றிலிருந்து திரட்டிய பாடல்களின் தொகுப்பு நூல்கள், கதைப் பாட்டு நூல்கள், சுகாதாரம் – சீர்திருத்தம் – நீதி – கூட் டுறவு – முதலியவை பற்றிய நூல்கள், மொழிபெயர்ப்பு நூல் கள், செய்கைப் பாடல் நூல்கள், பரிசுப்பா நூல்கள், அறிவுப் பாடல் நூல்கள்,சாசனப்பா நூல்கள் – முதலியன தொடர்பான திரட்டு நூல்கள், தனியார் பல பொருள்கள் பற்றிப் பாடியுள்ள பாடல்களின் தொகுப்பு நூல்கள் – முதலியன இந்தப் பெரிய தலைப்பில் இடம்பெற்றுள்ளன.

மற்றும், முற்காலம், இடைக்காலம், பிற்காலம், இருபதாம் நூற்றாண்டு ஆகிய நான்கு காலத்து நூல்களிலிருந்தும் பாடல் கள் எடுக்கப்பட்ட திரட்டு நூல்கள் இந்தத் தலைப்பில் இடம் பெற்றுள்ளன என்பதும் நினைவில் கொள்ளத் தக்கது. இனி நூல்கள் வருமாறு:-

பன்னூல் திரட்டு

தொகுப்பு: பாண்டித்துரைத் தேவர். எஸ்.பி.ஜி. இண்டஸ் டிரியல் அச்சுக் கூடம், இராமநாதபுரம். முதல் பதிப்பு – 1898. இது அறத்துப்பால், பொருட்பால் என்னும் இருபாகங்கள் உடையது; ‘கடவுள் வாழ்த்து’ முதலாகக் ‘கற்பனை’ ஈறாக 54 அதிகாரங்கள் கொண்டது. மொத்தப் பாடல்கள் 1647.

இரண்டாம் பதிப்பு: 27-8-1906. மொத்தப் பாடல்கள் 2132. முதலிரண்டு பதிப்புகட்குப் பாண்டித்துரைத் தேவரே பதிப்புரை எழுதியுள்ளார். மூன்றாம் பதிப்புக்கு நாராயணையங் கார் பொறுப்பேற்றார். மொத்தச் செய்யுள்-2073. நாராய ணையங்கார், மூன்றாம் பதிப்பில், இரண்டாம் பதிப்பில் மறித்து வந்த சில பாடல்களையும் இன்பச் சிறப்பு என்னும் அதி காரத்தையும் நீக்கினாராம். இவரே பதிப்புரை எழுதினார்.

பன்னூல் திரட்டின் நான்காம் பதிப்பு, மதுரைத் தமிழ்ச் சங்கத்தின் 5 ஆம் வெளியீடாக வந்தது. ம்துரை முத்திரா சாலை அச்சகத்தில் அச்சிடப்பட்டது. சு.அரிகர ஐயர் பதிப்புப் பொறுப்பேற்றார். பதிப்புரை நாள்: 28-12-1930. மொத்தச் செய்யுள்-2073. இதில் அறம் பொருளோடு காமத்துப் பாலும் இடம் பெற்றுள்ளது. பாடல்கள் தந்த நூல்க ளாவன:

புறத்திரட்டுத் தொகுப்பால் அறியப்பட்ட வளையாபதி, குண்டல கேசி, நாரத சரிதை, மேரு மந்தர புராணம், பெருந் தேவனார் பாரதம், சாந்தி புராணம், பெரும் பொருள் விளக்கம் முதலிய நூல்களிலிருந்து சிற்சில பாடல்கள்: சிவப் பிரகாசப் பெருந்திரட்டு-குறுந்திரட்டு நூல்களிலிருந்து சிற்சில பாடல்கள். மேலும் முற்கால-இடைக்கால-பிற்கால நூல்களி லிருந்து சிற்சில பாடல்கள்-ஆகியவை திரட்டப்பட்டுள்ளன.

உ.வே. சாமிநாத ஐயரும், வீர.லெ. சிந்நயச்செட்டியாரும் சாற்று கவிகள் அளித்துள்ளனர்.

பாண்டித்துரைத் தேவர், மேற்கூறிய பெரிய திரட்டே யன்றி, 69 பாடல்கள் கொண்ட 'பன்னூல் திரட்டு' என்னும் நூல் ஒன்றும் தொகுத்துள்ளார். இது, மதுரைத் தமிழச் சங்கத் தால், தமிழ்ச்சங்கம் பவர் பிரசில் 1908 ஆம் ஆண்டு அச்சிடப் பட்டது.

பன்னூல் பாடல் திரட்டு

தொகுப்பு, அ.அ.இ.சா. புலவர் கழகம். குறிப்புரை: தி. சங்குப்புலவர். 1968. மொத்தப் பாடல்கள் 2925. பல நூல் களிலிருந்து எடுத்த பாடல்களின் திரட்டு.

பெருந்தொகை

தொ-மு. இராகவையங்கார், இராமநாதபுரம். மதுரைத் தமிழ்ச் சங்கச் செந்தமிழ் வெளியீடு 62 ஆவது. மதுரைத் தமிழ்ச் சங்க முத்திரா சாலையில் அச்சிடப்பட்டது. யுவ ஆண்டு. 1935-36.

194 நூல்களிலிருந்து எடுக்கப்பட்ட பாக்களின் தொகுப்பு. கடவுள் வாழ்த்தியல், அறவியல், பொருளியல், இன்ப இயல், ஒழிபியல் என்னும் ஐந்தியல்கள் கொண்டது. முதல் மூன்று இயல்களே அச்சிடப்பட்டுள்ளன.

கடவுள் வாழ்த்தியல் முதல் 220 பாடல்கள்-அறவியல் 221 முதல் 346 வரை—பொருளியல் 347 முதல் 2214 வரை. இது முதல் தொகுதி. இரண்டாம் தொகுதியில் 1500 பாடல்கள். ஆக மொத்தம் 3700 பாடல்கட்கு மேல் உள்ளன. பாடல்களுக்குச் சிறப்புக் குறிப்புரைகளும் உள்ளன. மு. இராகவையங்கார் முகவுரை-14-12 - 1935. முகவுரையில் உள்ள சில கருத்துகள் வருமாறு:—

இதில், தொல்காப்பியம், யாப்பருங்கலம், யாப்பருங்கலக் காரிகை, வீரசோழியம் ஆகிய நூல்களின் உரைகளிலும், மற்றும் முற்கால-பிற்கால இலக்கியங்களின் உரைகளிலும் உள்ள மேற்கோள் பாடல்களுள் முன்வந்தவை போக வராத பாடல்கள் உள்ளன. இன்ன நூலைச் சேர்ந்தவை என்று அறிய முடியாத எடுத்துக் காட்டுச் செய்யுட்களும் உள்ளன. உரையாசிரியர்களால் பெயர் கூறி ஆளப்பட்டு இப்போது கிடைத்தற் கரியவாயுள்ள பாரதம்—தகடூர் யாத்திரை—முத் தொள்ளாயிரம் - ஆசிரிய மாலை முதலிய நூல்களில் உள்ள பாடல்களும் உள்ளன. மற்றும் பற்பல புத்தக சாலைகளிலும் பிறர்பாலும் உள்ள ஏட்டுப் பிரதிகளிலும் பத்திரிகைகளிலும் தெரியவந்த பழம் பாடல்கள் உள்ளன. மேலும், பரம்பரைப் புலவர்கள் மூலமாகவும் தமிழ் மக்கள் சிலர் மூலமாகவும் வாய் மொழியாகக் கிடைத்த தனிக்கவிகளும் உள. மற்றும், தாமிரச் சாசனங்களில் அரசர்—பெரியோர் முதலியோர் பற்றியும், அறச்செயல்கள் பற்றியும் முன்னோர் அருமையாய்ப் பாடிப்

பொறித்த பாடல்களும் கிடைத்தவரையும் திரட்டிச் சேர்த்துள்ளதாக முகவுரை ஆசிரியர் கூறியுள்ளார்.

விவேக சிந்தாமணி

தொகை-தொகுப்பு என்பதைக் குறிக்கும் பெயர்களுள் தொடை, கொத்து, கோவை, மாலை, மஞ்சரி முதலியன போலச் சிந்தாமணி என்பதும் ஒன்றாகும். எனவே, இந்த நூல் விவேகமான - அறிவு சார்ந்த பல பாடல்களின் தொகுப்பு என்பதை நூற்பெயரால் அறியலாம்.

பல நூல்களிலிருந்து எடுக்கப்பெற்ற பாடல்களும் சில தனிப் பாடல்களும் இந்நூலில் இடம் பெற்றுள்ளன. நகை, பெருமிதம், காதல், நீதி முதலிய பல பொருள்கள் பற்றிய பாடல்கள் அமைந்து இந்நூலைச் சுவையுடைய தாக்கியுள்ளன. நூலுக்கு உரையும் உண்டு. ஆனால் தொகுத்தவர் பெயரும் உரையாசிரியர் பெயரும் அறியப்படவில்லை. இந்நூலைப் பலர் பதிப்பித்துள்ளனர்.

விவேக சிந்தாமணித் திரட்டு

வெளியீடு - குப்புசாமி நாயுடு, மருதண்ணராவுத்தர். திருச் சிற்றம்பல விலாசம் பிரஸ், சென்னை. 1900. பல நூல்களிலிருந்து திரட்டிய பாடல்களின் தொகுப்பு.

விவேக சிந்தாமணி

வெளியீடு – தாராபுரம் முத்துசாமி நாயுடு. சாமுண்டீசுவரி அச்சுக் கூடம், தாராபுரம். 1909. உலகியல் ஒழுக்கங்களை எடுத்துக் கூறும் பல நீதிப் பாடல்களின் தொகுப்பு. உரை உண்டு. உரையாசிரியர் பெயர் தெரியவில்லை. இவ்வெளியீடு முதல் பாகம்.

பெரிய விவேக சிந்தாமணி

முதல் தொகுதி. 367 பாடல்கள் கொண்டது.

வெளியீடு - தொ. நமசிவாயம் பிள்ளை, மாயூரம். மட்டுவார் குழலாம்பாள் அச்சுக் கூடம், சென்னை. 1899. மற்றவர் பதிப்பித்துள்ள விவேக சிந்தாமணிப் பாடல்களுடன் மேலும் பல பாடல்களை நமசிவாயம் பிள்ளை இணைத்துள்ளார்.

விவேக சிந்தாமணி

இப்படி யொரு பதிப்பு பார்வைக்குக் கிடைத்தது. 101 பாடல்கள் உள்ளன. முன் பகுதி யின்மையால், வெளியீட்டாளர், ஆண்டு முதலிய விவரங்கள் தெரியவில்லை.

விவேக சிந்தாமணி

வெளியீடு – சென்னை பூமகள் பிரசுரம். பூமகள் விலாச அச்சுக் கூடம், சென்னை – 1930. பல பொருள் பற்றியது – பல இனப் பாக்கள் கொண்டது. மொத்தப் பாடல்கள் – 137.

விவேக சிந்தாமணி (– மூலமும் உரையும் –)

வெளியீடு – ஸ்ரீமகள் கம்பெனி, 122, வரதா முத்தியப்பன் தெரு, சென்னை-1. ஸ்ரீமகள் அச்சகம், சென்னை-1. திருந்திய சுத்தப் பதிப்பு-ஏப், '57. பதிப்பாளர்களின் குறிப்பு வருமாறு:—

குறிப்பு

விவேக சிந்தாமணி மூலமும் உரையும்-என்னும் இந்நூல் முழுவதையும் ஒருங்கே சரிபார்த்து, திருத்தங்களோடு சுத்தப் பதிப்பாக வெளியிட்டிருக்கின்றோம். இதனைப் பிழை நீக்கம் செய்து கொடுத்த வித்துவான் ஈக்காடு சபாபதி முதலியாருக்கு எங்கள் உள்ளங் கனிந்த நன்றி-பதிப்பாளர்கள். என்னிடம் உள்ள இந்தப் பதிப்பின் இறுதிப் பக்கங்கள் இல்லை. 126 பாடல்கள் உள்ளன. மேலும் சில பாடல்கள் இருக்கலாம்.

விவேக சிந்தாமணி

வெளியீடு–சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை –1. இரண்டு பாகங்களாக வெளியிட்டுள்ளனர். முதல் பாகத்தில் 135 பாடல்களும் இரண்டாம் பாகத்தில் 100 பாடல்களும் உள்ளன.

இந்தத் தொகுப்பின் அருமைக்கு அகச் சான்றாக, என்னிடமுள்ள பதிப்பின் முதல் செய்யுள் வருமாறு: –

அறுசீரடி யாசிரிய விருத்தம்
"ஆபத்துக் குதவாப் பிள்ளை,
அரும்பசிக் குதவா அன்னம்,
தாபத்தைத் தீராத் தண்ணீர்,
தரித்திரம் அறியாப் பெண்டிர்,
கோபத்தை அடக்கா வேந்தன்,
குருமொழி கொள்ளாச் சீடன்
பாபத்தைத் தீராத் தீர்த்தம்
பயனில்லை ஏழும் தாமே"

என்பது முதல் பாட்டு. உரையும் உண்டு.
நீதி சிந்தாமணி - வெள்ளைச் சிந்தாமணி என்னும் விவேக சிந்தாமணி

ஆய்வு-அப்பன் செட்டியார். பாலாம்பிகை முத்திராசாலை. பவ-மாசி. 135 பாடல்கள்.

நூற்றெட்டுத் திருப்பதித் திருப்புகழ்

ஆசிரியர்: குரவை இராமாநுச தாசர். அச்சு: மதராஸ் ரிப்பன் அச்சியந்திரசாலை, சென்னை. 1917. நூற்றெட்டுத் திருமால் திருப்பதிகள் மேலும் பாடப்பெற்ற பாடல்களின் தொகுப்பு இது. நாடு வாரியாகக் காண்பாம்: சோழநாடு 40. பாண்டிய நாடு 18. மலைநாடு 13. நடு நாடு 2. தொண்டை நாடு 24. வடநாடு 11-ஆக 108 ஆகும். சைவத்தில் அருணகிரி நாதரின் திருப்புகழ் போல, வைணவத்தில் இந்தத் திருப்புகழ்த் திரட்டு உள்ளது.

இந்நூலின் தொடக்கத்தில் தனியன் ஆக ஒரு நேரிசை வெண்பாவும், அடுத்து, காப்பு என்னும் பெயரில் நம்மாழ்வார் துதியும் உள்ளன.

ஒவ்வொரு திருப்புகழ்ப் பாடலின் தொடக்கத்திலும் அதன தன் சந்தக் குறிப்பு தரப்பட்டுள்ளது. ஒவ்வொரு பாடலின் இறுதி யிலும், அவ்வப் பதியின் பெருமாள் பெயரும் பிராட்டியார் பெயரும், அப்பதியைப் பாடிய ஆழ்வார்களின் பெயர்களும், அண்மையிலுள்ள புகைவண்டி நிலையப் பெயரும் தொலைவும்

கொடுக்கப்பட்டிருக்கின்றன. இந்த அமைப்பின் மாதிரிக்காக, முதலாவதாகிய திருவரங்கம் பெரிய கோயில் திருப்புகழ் தொடர்பானவற்றைக் காணலாம்.

சந்தக் குறிப்பு

“தனதனந் தந்ததன தான தானன
தனதனந் தந்ததன தான தானன
தனதனந் தந்ததன தான தானன-தனதானா.”

இறுதிப் பகுதி: சுவாமி திருநாமம், ஸ்ரீரங்க நாதர். தாயார் திருநாமம் ஸ்ரீரங்க நாச்சியார்.பத்து ஆழ்வார்களும் ஆண்டாளும் மங்களா சாசனம். இது காவிரியின் வடகரையில் உள்ளது. திருச்சிக் கோட்டை ஸ்டேஷனிலிருந்து வடமேற்கு 3 மைல்.

மேலுள்ளவற்றை நோக்குங்கால், இந்தப் பதிப்பு பயனுள்ள ஒன்று என்பது விளங்கலாம்.

சாசனத் தமிழ்க் கவி சரிதம்

தொகுப்பாசிரியர்: மு. இராகவையங்கார்: பதிப்பாசிரியர் மு.ரா. நாராயணையங்கார். முதல்பதிப்பு 1937. மூன்றாம் பதிப்பு 1961.

சாசனம் என்பது கல்வெட்டு. சாசனப் பகுதி, சாசன மெய்க் கீர்த்தி, சாசனப் பாடல்கள் ஆகியவற்றின் துணை கொண்டு உருவாக்கப்பட்டது இது.முதல் கழகக் காலம்முதல் 18 ஆம் நூற்றாண்டுவரையிலான புலவர்கள் இடம் பெற்றுள் ளனர். அதாவது, அகத்தியர் முதல் முத்துக் குமாரசாமிப் புலவர் (18.நூ.இறுதி) வரையிலான 74புலவர்களின் வரலாறு அறிய இது உதவுகிறது. இவர்கள் காலம்அறியப்பட்ட புலவர் களாம்.

ஆதி நாதர் முதல் வரகவிஇராமலிங்கையர் ஈறாக உள்ள புலவர்கள் ஒன்பதின்மர் காலம் தெரியாப் புலவர்கள் என்னும் தலைப்பில் சேர்க்கப்பட்டுள்ளனர். ஏனைப் புலவர்கள் என்னும் தலைப்பில் சிலர் அடக்கப்பட்டுள்ளவர். மெய்க்கீர்த்தி பாடி

யோர், வீரம் பாடியோர், அறம் பாடியோர் முதலிய புலவர்கள் பலரின் பெயர்கள் தெரியவில்லை. செம்பிலும் தாமிரத்திலும் பொறிக்கப்பட்டவையும் சாசனம் எனப்படும்.

ஆதிக் குமரகுருபர அடிகள்

நினைவுத் தமிழ்ப் பரிசுத் தொகுதி

பதிப்பாசிரியர்: வித்துவான் மு. அருணாசலம்பிள்ளை; தமிழாசிரியர், அண்ணாமலைப் பல்கலைக் கழகம். அண்ணாமலைப் பல்கலைத் தமிழ் வெளியீட்டு வரிசை எண் – 7. திருப்பனந்தாள் மடம் காசிவாசி அருணந்தித்தம்பிரான் சுவாமிகள் அறக் கட்டளை வெளியீடு – IV. பல நூல்களிலிருந்து பாடல்கள் தொகுக்கப்பட்டுள்ளன. ஆண்டு 1945.

தமிழ் நாவலர் சரிதை

இது பலர் பாடிய பாடல்களின் தொகுப்பு என்பது மட்டுமன்று, பல நூல்களிலிருந்து எடுக்கப்பட்ட பாடல்களும் கொண்டுள்ளது. இதனால் தமிழ் நாவலர்களின் – தமிழ் அறிஞர்களின் வரலாறும் தமிழ்ப் பண்பாட்டு வரலாறும் இன்னபிறவும் அறியப்படும்.

வரலாற்றுப் பயன் உள்ள இந்நூலைத் தொகுத்தவரின் பெயர் தெரியவில்லை. தொடக்கத்தில் இறையனார்,முருகவேள் பாடல்கள் இருப்பதால் இவர் சைவர் என்பது புலனாகும். சங்ககால இறையனார் முதல் 16 ஆம் நூற்றாண்டினராகிய அந்தகக்கவி வீரராகவ முதலியார்வரையான புலவர்களின் பாடல்களைத் தொகுத்திருப்பதால், இவர் பதினேழாம் நூற்றாண்டினராகவோ அல்லது அதற்கும் பிற்காலத்தவராகவோ இருக்கலாம். இந்நூலின் சில பதிப்புகள் பற்றிய விவரம் வருமாறு:—

தமிழ் நாவலர் சரிதம்

இது, அரசு ஓலைச்சுவடி நூல் நிலையத்தில் உள்ள 355 என்னும் எண் கொண்ட பிரதி. மற்ற பிரதிகளில் சரிதை என்றிருக்க, இதில் சரிதம் என்றுள்ளது. நக்கீரர், ஔவையார், பொய்யா மொழிப் புலவர், கம்பர், இரட்டையர், காள

மேகம் முதலியோரின் பாடல்கள் உள்ளன. இன்னின்ன சூழ் நிலையில் (சந்தர்ப்பத்தில்) இன்னின்னார் பாடினர் என்ற குறிப்பு உள்ளது. மொத்தப் பாடல்கள் 269 ஆகும்.

தமிழ் நாவலர் சரிதை

ஆய்வு - சாமி. தில்லை நடேச செட்டியார். வெளியீடு -கோவை சி.கு. நாராயணசாமி முதலியார். கமர்சியல் அச்சுக் கூடம், சென்னை-1916. வெளியீட்டாளரின் முகவுரை நாள்: 1-1-1966. பல புலவர்களின் பாடல்களின்தொகுப்பு

தமிழ் நாவலர் சரிதை

ஆய்வு: ஔவை சு. துரைசாமிப் பிள்ளை. வெளியீடு: சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை. ராயல் பிரின்டிங் வொர்க்ஸ். சென்னை. 1949. இதில் இறையனார் முதல் அந்தகக்கவி வீரராகவ முதலியார் வரையிலான 51 புலவர்களின் பாடல்கள் உள்ளன. இப்புலவர்களின் பெயர்களைத் தெரிந்து கொள்ளின், இவர்களின் பாடல்கள் எல்லாமா இருக்கின்றன என்று வியக்கத் தோன்றும். பெயர்கள் வருமாறு:-

1. இறையனார்
2. முருகவேள்
3. நாமகள்
4. நக்கீரர்
5. கபிலர்
6. பெருந்தலைச்சாத்தனார்
7. கோவூர் கிழார்
8. சாத்தந்தையார்
9. சங்கத்தார்
10. திருவள்ளுவர்
11. ஔவையார்
12. பொய்யாமொழிப் புலவர்
13. கம்பர்
14. தொல்காப்பியத்தேவர்
15. இரட்டையர்கள்
16. சயங்கொண்டார்
17. ஒட்டக் கூத்தர்
18. புகழேந்தி
19. மூவேந்தர்
20. சேரமான் கணைக்கால் இரும் பொறை
21. பாண்டியன் தலையாலங் கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன்
22. பாண்டியன்
23. பாண்டியன் தேவி
24. சத்தி முற்றப் புலவன்
25. சோழன் புலவன்
26. பாண்டியன் புலவன்
27. ஒரு தாதி
28. சோழனும் தேவியும்
29. குரு நமச்சிவாயர்
30. ஏகம்பவாணன்

31. முனைய தரையன்
32. கோடைச் சிவந்தான் புலவன்
33. உத்தரநல்லூர் நங்கை
34. திருவாரூர் நாகரச நம்பி
35. புங்கனூர்க் கிழவன்
36. குடிதாங்கி
37. கச்சிராயன்
38. கண்டியதேவன்
39. விண்ணன்
40. வாயற் பதி வடுகன்
41. கச்சியப்பன்
42. ஒரு புலவன்
43. பிராமணப் பிள்ளையன்
44. அம்மைச்சி
45. காளமேகப் புலவர்
46. குமார சரசுவதி
47. தத்துவப் பிரகாசர்
48. கவிராசப் பிள்ளை
49. பரமேசுரப் புலவர்
50. உண்ணாமுலை எல்லப்ப நயினார்
51. அந்தகக்கவி வீரராகவ முதலியார் ஆகியோர்.

சங்க காலந் தொட்டுப் பிற்காலம் வரை வாழ்ந்த புலவர்கள் சிலரின் பாடல்கள் இந்தத் தொகுப்பில் இடம்பெற்றுள்ளன. சங்கத்தார், பாண்டியன், பாண்டியன் தேவி, சோழன் புலவன், பாண்டியன் புலவன், ஒரு தாதி, சோழனும் தேவியும் ஒரு புலவன் - முதலிய பெயர்கள் சில, எண்ணத்திற்கு - சிந்தனைக்கு வேலை கொடுக்கின்றன. இந்நூலைத் தொகுத்தவர் தமக்குக் கிடைத்த பாடல்களை யெல்லாம் மனம் போன போக்கில் தொகுத்துள்ளது போல் தோன்றுகிறது.

மற்றுமொரு பதிப்பு

இப்பதிப்புகளே யன்றி, தி.த. கனகசுந்தரம் பிள்ளையும் ஒரு பதிப்பு வெளியிட்டுள்ளார். புதிய புலவர் சிலரின் பெயர்களையும் புதிய பாடல்கள் சிலவற்றையும் அறிமுகப்படுத்திய தொகுப்பாசிரியர்க்கு நன்றி செலுத்த வேண்டும்.

புலவர் புராணம்

ஆசிரியர்: திருப் புகழ்ச் சுவாமிகள் என்றும் முருகதாச சுவாமிகள் என்றும் வழங்கப்பெறும் தண்டபாணி சுவாமிகள் வெளியீடு: தி.மு. செந்தில்நாயகம் பிள்ளை. சென்னை கேசரி அச்சுக் கூடம். 3 ஆம் பதிப்பு - பிரசோற்பத்தி - இடபரவி- 1931. மொத்தப் பாடல்கள் – 3003. குல -மத வேறுபாடின்றிப் புலவர்களின் வரலாறுகள் தரப்பெற்றுள்ளன. அகத்திய மகா

முனிவர் சருக்கம் முதல் கண்கண்ட புலவர் சருக்கம் ஈறாக உள்ள 72 சருக்கங்களின் கீழ்ப் பாடல்கள் தரப்பெற்றுள்ளன. இனிப் புலவர்களின் பெயர்கள் வருமாறு:—

அகத்தியர், சடகோபர், திருவாதவூரர், விட்டுணு சித்தர், அப்பர், சம்பந்தர், திருமங்கை யாழ்வார், சுந்தரர், சேரமான் பெருமாள், ஔவையார், காரைக்கால் அம்மையார், சிவவாக்கியர், திருமூலர், இடைக்காடர், திருவள்ளுவர், பட்டினத்தார், சேந்த நாயனார், பத்திர கிரியார், திருப்பாணாழ்வார், கல்லாடர், நற்கீரர், பொய்யா மொழிப் புலவர், அருணகிரி நாதர், வில்லி புத்தூரார், தொண்டரடிப் பொடி யாழ்வார், பேயாழ்வார் - பொய்கை யாழ்வார் - பூதத் தாழ்வார் (மூன்றாழ்வார்), இரட்டைப் புலவர், குகை நமசிவாயர், குரு நமசிவாயர், தத்துவராயர், திருச் சிற்றம்பல நாடிகள், சிவப்பிரகாசர், சாந்தலிங்கசுவாமிகள், குமார தேவ சுவாமிகள்,சிதம்பர சுவாமிகள், சோலைய சுவாமிகள், தாயுமானவர், குமர குருபரர், ஆறுமுக சுவாமிகள், முத்துத் தாண்டவர், நம்பியாண்டார் நம்பி, சேக்கிழார், மெய்கண்ட தேசிகர், உமாபதி சிவாசாரியார், கச்சியப்பக் குருக்கள், இரட்டைக் குரவர், பகழிக் கூத்தர், இரு வயிணவர், வரதுங்க பாண்டியர், கவிராச பண்டிதர், அபிராமப் பட்டர், புகழேந்தி, ஒட்டக் கூத்தர், கம்பர்,காளமேகர், வசைகவியாண்டான், வீரபாண்டிப் புலவர், கந்தசாமிப் புலவர், ஆறுமுகப் புலவர், சீநிவாசப் புலவர், நமசிவாயப் புலவர், முதுகுளத்தூரார், மன்றவாணர், தலைமலை கண்ட தேவர், பிள்ளைப் பெருமாள் ஐயங்கார், வயிரவப் புலவர், பாணப் புலவர், சத்தி முற்றப் புலவர், பலதெய்வப் புலவர், அறிவுப் புலவர், கண்கண்ட புலவர்- முதலானோர்.

இவ்வளவு புலவர்களின் பெயர்களையும் வரலாறுகளையும் அறிவிக்கும் இப்புலவர் புராணம் மிகவும் பயனுள்ள தன்றோ?

நூலின் இறுதியில், புலவர் புராண அநுபந்தம் என்னும் தலைப்பில் 'குல சேகர ஆழ்வார் சருக்கம்' என்னும் பகுதியைச் செந்தில் நாயகம் பிள்ளை இயற்றிச் சேர்த்துள்ளார். இதிலுள்ள பாடல்கள் 29.

D. 2343. பூசா விதித் திரட்டு

இது, அகத்தியர், திருமூலர், கொங்கணர் முதலான சித்தர்கள், அஷ்ட கர்மம் முதலிய பலவிதமான சித்திகள் பெறத் தேவியை வழிபட உறுகருவியாயிருந்த நாற்பத்து முக்கோண சக்கிரம், சிதம்பர சக்கிரம் முதலாவ சக்கிரங்கள் பலவும், இன்னின்னவாறு பொறிக்கப்பெற்றுத் தேவியை இன்ன விதமாக வழிபட வேண்டும் என உணர்த்துவது. இது, பூசை விதி, தீட்சாவிதி முதலிய நூல்களிலிருந்து எடுக்கப் பெற்ற சிற்சில பாடல் பகுதிகளின் திரட்டாகும்.

இதில், நாற்பத்து முக்கோண சக்கிர விதி, அகத்தியர் பூசைவிதி, பஞ்ச தசாக்கிரி திருமந்திரம், வாலைத் தியான விதி திருமந்திரம், சிதம்பரவித்தை திருமந்திரம், அஷ்ட கர்மங்கட்கு உரிய மந்திரங்கள், கொங்கணர் தேவி பூசை விதி ஆகியவை பற்றிய பாடல்கள் திரட்டப்பட்டுள்ளன. கொங்கணர் பூசை விதி என்பது மட்டும் 32 பாக்கள் கொண்ட ஒரு தனி நூல் போல் தெரிகிறது. பெரும்பாலன தமிழில் உள்ளன. கிரந்தப் பகுதிகள் சிலவும் உண்டு. நாற்பத்து முக்கோண சக்கிர விதிப்படி .பூசை விதி கூறும் பாடல் வருமாறு:-

“ஆமப்பா பூசைவிதி சக்கிரத்தைச் சொல்வேன்
யாருத்தான் சொல்வார்கள் அப்பா கேளு
ஓமப்பா தேவிக்கு ஆதி பீடம்
உத்தமனே நாற்பத்து மூன்றே கோணம்

காமப்பா வித்தையர்க் காதி வித்தை
காசினியில் பூசை செய்வர் திசதீட்சை பெற்றோர்
நாமப்பா விவளை முந்திப் பூசை பண்ணி
நலமாகச் சிவயோகத் திருந்திட்டேனே” (க).

‘க’ என்றால் ஒன்று என்று பொருளாம். எனவே, இது முதல் பாட்டாகும். இந்தத் திரட்டை நோக்கும்போது, நம் முன்னோர்கள் எந்தெந்தத் துறைகளிலெல்லாம் என்னென்ன செய்திருக்கிறார்கள் என வியக்கத் தோன்றுகிறது.

தமிழ்க் கவிதைக் களஞ்சியம்

தொகுப்பு: ரா.பி. சேதுப்பிள்ளை. வெளியீடு: சாகித்ய

அகாதெமி, புது டில்லி. விற்பனை உரிமை: பழநியப்பா பிரதர்ஸ், சென்னை. அச்சு: ஏஷியன் பிரிண்டர்ஸ், சென்னை. முதல் பதிப்பு 1960.

இதில் தொகுக்கப்பட்டுள்ள நூல்கள்-தலைப்புகள் – பாடல்கள் பற்றி 16 பக்கம் கொண்ட விரிவான முன்னுரை சேதுப் பிள்ளையால் எழுதப்பட்டுள்ளது. முற்காலப்-பிற்காலப் புலவர்களான 122 புலவர்களின் பாடல் தொகுப்பு இது. நூலின் இறுதியில், புலவர்கள் பற்றியும் நூல்கள் பற்றியும் குறிப்புரை எழுதிச் சேர்க்கப்பட்டுள்ளது. உள்ளுறை வருமாறு:

சங்க இலக்கியம்: புறப் பாட்டு, அகப்பாட்டு, பத்துப்பாட்டு. நீதிப்பாட்டு: திருக்குறள், திருவள்ளுவமாலை, நாலடியார் பழமொழி.

காவியக் கவிதை: சிலப்பதிகாரம், மணிமேகலை, சிவக சிந்தாமணி, திருநெறித் தமிழ் மாலை; தேவாரம், திருமந்திரம், நாலாயிரத் திவ்வியப் பிரபந்தம்.

பல்சுவைத் தமிழ்க் கவிதை: தூதுப் பாட்டு, பாவைப் பாட்டு, பரணிப் பாட்டு, திருத்தொண்டர் புராணம், கம்ப ராமாயணம், வில்லி பாரதம், நளவெண்பா, ஆன்றோர் கவிதைகள், சித்தர் பாட்டுகள், திருவருட்பா, பிள்ளைத் தமிழ்,குறத்திப்பாட்டு, பள்ளுப் பாட்டு, சிட்டுக் கவிதை, சிலேடைப்பாட்டு,சாசனக் கவிதை, சிந்து, கிறிஸ்தவ இலக்கியம், கையறு நிலை, நாடோடிப் பாடல்கள், தெய்வம் மணக்கும் பாமாலை, தனிப் பாடல், அம்மானைப் பழமொழி விளக்கம், சோமேசர் முது மொழி வெண்பா, குசேலோ பாக்கியானம், பந்தாட்டப் பாட்டு, செந்தமிழ் மாலை, பாரதியார் பாடல், இசைத் தமிழ் மாலை, நாடகத் தமிழ் மாலை, குழந்தைக் கவிதை, தற்காலக் கவிதை ஆகிய இந்தத் தலைப்புகளை ஒட்டிப் பல நூல்களிலிருந்து பாடல்கள் திரட்டித் தரப்பெற்றுள்ளன.

ரேர வேந்தர் செய்யுட் கோவை

(முதல் தொகுதி)

கருத்துரை. குறிப்புரை முதலியவற்றுடன், மு. இராகவை

யங்கார் தொகுத்தது. திருவாங்கூர்ப் பல்கலைக் கழகத் தமிழ்ப் பதிப்புத் தொடர் - 1. திருவனந்தபுரம் பாஸ்கர அச்சுக் கூடத்தில் நா. பத்மநாப ஐயங்காரால் அச்சிடப்பட்டது. முகவுரை நாள் 1-10-1947. கொல்லம் ஆண்டு 15-2-1123.

தொகுப்பாசிரியர் முகவுரையில் தந்துள்ள செய்திகளாவன· — சங்க காலப் பகுதி, இடைக்காலப் பகுதி, பிற்காலப்பகுதி என மூன்று தொகுதிகளாகத் தொகுக்க வேண்டும் என்பது முயற்சி. இப்போது முதல் தொகுதி மட்டும் வெளிவந்துள்ளது

முதல் தொகுதியில், பாடல் பெற்ற சேரர் பத்தொன் பதின்மர் (19), பாடிய சேர வேந்தர் எண்மர் (8), சேரர் கிளையினர் எழுவர் (7), சேர நாட்டின் பகுதிகளை ஆண்ட வேற்றரசர் மூவர் (3) ஆகியோர் பற்றிய பாடல்கள் இடம் பெற்றுள்ளன. மற்றும், சேரவேந்தரின் நாடு–நகர்–மலை, புகழ் முதலியன பற்றிய பாடல்களும் இடம் பெற்றுள்ளன.

இத்தொகை நூலுக்குப் பாடல் தந்த நூல்களாவன:— அகநானூறு, ஐங்குறு நூறு, குறுந்தொகை, சிலப்பதிகாரம் சிறுபாணாற்றுப்படை, தொல்காப்பியம், நற்றிணை,பதிற்றுப் பத்து, புறத்திரட்டு, புறநானூறு, மணிமேகலை, மதுரைக் காஞ்சி, கலித்தொகை-என்பன. இவற்றிலிருந்து திரட்டப் பட்ட பாடல்கள்—341.

இரண்டாம் தொகுதி 1951-இல் வெளியாயிற்று. இந்தத் தொகுப்பால் சேரநாட்டு வரலாற்றை அறிந்துகொள்ளலாம்.
சிவப்பிரகாசர் பெருந்திரட்டு

தொகுத்தவர்: சிவப்பிரகாச அடிகளாரின் மாணாக்கர் சொரூபாநந்த சுவாமிகள். ஆய்வு:கோ. வடிவேல் செட்டியார், மங்கலம் சண்முக முதலியார் ஆகியோர்.சென்னை-கோமளேசுவரன் பேட்டை-சச்சிதாநந்த அச்சியந்திர சாலை- ஆண்டு 1912. இற்றைக்கு (1990) 670 ஆண்டுகட்குமுன் தொகுத்தது. 146 நூல்களிலிருந்து 2821 செய்யுட்கள் எடுத்துத் தொகுக்கள் பெற்றுள்ளன. சொரூபாநந்தர் தம் ஆசிரியர் சிவப்பிரகாசப் பெயரால் நூலை வழங்கவைத்துள்ளார்.இந்த146 நூல்களுள்

மாண்டன பல—இருப்பன சிலவே. பல நூல்களைப் பற்றி, அறிந்து கொள்ள நல்ல வாய்ப்பளிக்கிறது இந்தத்தொகுப்பு.

உள்ளுறை: இத்தொகுப்பு கலைக் கட்டளை, அநுபவக் கட்டளை என இரு பிரிவாக உள்ளது. முதல் பிரிவாகிய கலைக் கட்டளையில் உள்ள பெருந் தலைப்புகள் வருமாறு:—பாயிரப் பணை, இதப்பணை, பரமர் திறப்பணை, பரனுலகப்பணை, பகவான் மாப்பணை, சமயப்பணை, யோகப்பணை, தத்துவப் பணை, அவத்தைப் பணை, வாக்கியப்பணை, ஈசன் சிவன் பணை, மாயாப்பணை, ஞானப் பணை, ஏதுசாதனப்பணை, குருவியற் பணை, பக்குவர் இயற்பணை-என்பன.

இரண்டாம் பிரிவாகிய அநுபவக் கட்டளையில் உள்ள பெருந் தலைப்புகள் வருமாறு: - உபதேசப்பணை, அநுபூதிப் பணை, அருள் திறப்பணை, இறை இயற்பணை, ஏவல்பணை, அன்பியல் பணை, அன்புப் பணை, நெஞ்சுப்பணை, தோத்திரப்பணை, மங்கலப்பணை - என்பன.

சிவப்பிரகாசக் குறுந்திரட்டு

சொரூபாநந்தரின் மாணாக்கரும் சிவப்பிரகாசரின் மாணாக்கரும் ஆகிய தத்துவராயர், பெருந்திரட்டிலிருந்து பல செய்யுட்களும் வேறு 424 செய்யுட்களும் சேர்த்து 1390 செய்யுட்களாகக் குறுந்திரட்டு என்பதைத் தொகுத்தளித்தார். பெருந்திரட்டில் இல்லாத குறுந்திரட்டுப் பாடல்கள், பெருந்திரட்டில் ஏற்ற அவ்வவ்வதிகாரத்தின் கீழே தரப்பட்டுள்ளன.

செஞ் சொற் கவிக் கோவை

தொகுப்பாசிரியர்: ரா.பி. சேதுப்பிள்ளை. 'தென்மொழிகளின் புத்தக டிரஸ்ட்டு' என்னும் அமைப்பின் ஆதரவில் பதிப்பிக்கப் பெற்றது. விற்பனை: பழநியப்பா பிரதர்ஸ், சென்னை. முதல் பதிப்பு: 2 - 9 - 1957.

உள்ளுறை

1. புறப் பொருள் - புற நானூறு. 2. அகப்பொருள்-குறுந்தொகை, கம்பராமாயணம், தனிப் பாடல்கள். 3. பத்துப் பாட்டு-திரு முருகாற்றுப்படை. 4. நீதிப் பாட்டு-மணிமேகலை,

சிலப்பதிகாரம், பட்டினத்தார் பாடல், குண்டலகேசி, நான் மணிக் கடிகை, திரி கடுகம், வளையாபதி, நன்னெறி, சீவக சிந்தாமணி. 5. திருக்குறள். 6. சிலப்பதிகாரம், 7. மணிமேகலை. 8. சம்பந்தர் தேவாரம். 9. அப்பர் தேவாரம், 10. சுந்தரர் தேவாரம். 11. திருவாசகம். 12. ஆழ்வார்கள் அருந்தமிழ்-திருப் பாணாழ்வார், குலசேகர ஆழ்வார் தவிர மற்ற பத்து ஆழ்வார் களின் பாடல்கள். 13. பரணிப்பாட்டு-கலிங்கத்துப் பரணி. 14. பள்ளி யெழுச்சி-திருவாசகம், தொண்டரடிப் பொடி யாழ் வார், திருவருட்பா. 15. ஆற்றுப் பாட்டு- சிலப்பதிகாரத்தில் காவிரி, மணிமேகலையில் காவிரி, சிலப்பதிகாரத்தில் வைகை, கம்பராமாயணத்தில் கோதாவரி.

16. அம்மானைப் பாட்டு-சிலப்பதிகாரம், திருவாசகம். 17. திருத்தொண்டர் புராணம். 18. கம்பராமாயணம். 19. நள வெண்பா. 20. வில்லி பாரதம். 21. அரிச் சந்திர புராணம். 22. பிள்ளைத் தமிழ்ப் பாட்டு—மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழ், திருச்செந்தூர்ப் பிள்ளைத் தமிழ், நம்மாழ்வார் பிள்ளைத் தமிழ், சேக்கிழார் பிள்ளைத் தமிழ். 23. தாயுமானவர் பாடல். 24. திருவருட்பா. 25. குறத்திப்பாட்டு-மீனாட்சியம்மை குறம், குற்றாலக் குறவஞ்சி, சரபேந்திரக் குறவஞ்சி. 26. தெய்வத் தமிழ் மாலை-சிலப்பதிகாரம், கந்தர் அலங்காரம், கந்தர் அநுபூதி, திருப்புகழ், தேம்பாவணி, சீறாப் புராணம், இரட்ச ணிய யாத்திரிகம். 27. தமிழகப் புகழ் மாலை-தமிழ் நாடு (தனிப் பாடல் திரட்டு), தொண்டை நாடு, காஞ்சி, மதுரை, பூம்புகார் (சிலப்பதிகாரம், பெரிய புராணம்), ஆழ்வார் நகரி, ஸ்ரீ வில்லி புத்தூர். 28. புரவலர் புகழ் மாலை (தனிப் பாடல் கள்). 29. பாரதி பாடல். 30. தமிழ்த் தாய் வாழ்த்து-பரஞ் சோதியார் திரு விளையாடல் புராணம், தமிழ்ப் புலவர் சரித் திரம், திரு.வி.க. பாடல்கள், ரா. இராகவையங்கார் பாடல் கள், மனோன்மணீயம்—என்பன.

இந்தக் கோவைத் திரட்டில் 30 தலைப்புகளின்கீழ்ப் பாடல் கள் தரப்பட்டுள்ளன. ஒவ்வொரு தலைப்பிற்கும் எந்த எந்த நூல்களிலிருந்து பாடல்கள் எடுத்து அமைக்கப்பட்டன என நூல் பெயர்களும் தரப்பெற்றுள்ளன. இந்தக் கோவை ஓர் அரிய முயற்சியேயாகும்.

சங்க இலக்கிய இன்கவித் திரட்டு

. தொகுப்பும் விளக்க உரையும்: இளவழகனார். சைவ சித்தாந்த நூற் பதிப்புக் கழக வெளியீடு. இந்தத் திரட்டு மூன்று பாகங்களாக வெளியிடப்பட்டுள்ளது. முறையே அவை வருமாறு:

முதல் பாகம்-(101 பாடல்கள்)

முதல் பதிப்பு: ஆகஸ்ட் 1940. பொருளடக்கமாவது:

1. இயற்கை நிலை, 2. ஆடவர் இயல்பு, 3. மகளிர் இயல்பு, 4. இல்லறம், 5. அரசியல்பு, 6. சான்றாண்மை, 7. வீரம், 8. காதல், 9. வாழ்க்கை முறை, 10. அறிவின்பம்.

. பாடல்கள் எடுக்கப்பட்ட நூல்களாவன:

1. பத்துப்பாட்டு: திருமுருகாற்றுப்படை, முல்லைப் பாட்டு, பட்டினப்பாலை.
2. எட்டுத் தொகை: எட்டு நூல்களிலிருந்தும்.
3. பதினெண் கீழ்க் கணக்கு: ஐந்திணை ஐம்பது, ஐந்திணை எழுபது, திணை மொழி ஐம்பது, திணை மாலை நூற்றைம்பது.

இரண்டாம் பாகம் – (100 பாடல்கள்)

முதல் பதிப்பு: சனவரி 1945. பொருளடக்கமாவது:

1. இயற்கை, 2. புலன், 3. மனம், 4. உள்ளம், 5. அறிவு, 6. உணர்வு, 7. தெளிவு, 8. சமயம், 9. ஒழுக்கம், 10. உரிமை'

பாடல்கள் எடுக்கப்பட்ட நூல்களாவன:

1. தொல் காப்பியம்-(கற்பும் காமமும்)
2. பத்துப் பாட்டு-திருமுருகாற்றுப்படை,' பெரும்பாணாற்றுப் படை, மதுரைக் காஞ்சி, பட்டினப்பாலை.
3. எட்டுத்தொகை-எட்டு நூல்களும்.
4. பதினெண் கீழ்க் கணக்கு – கார் நாற்பது, களவழி நாற்பது, ஐந்திணை எழுபது, திணை மொழி ஐம்பது.

மூன்றாம் பாகம் – (101 பாடல்கள்)

முதல் பதிப்பு – மே, 1945 – பொருளடக்கமாவது:

1. கருத்து, 2. இலக்கியம், 3. கலை, 4. வாழ்க்கை, 5. கடமை, 6. திருத்தம், 7. நாகரிகம், 8. வரலாறு, 9. மதம், 10. இன்பம்.

பாடல்கள் எடுக்கப்பட்ட நூல்களாவன:

1. தொல்காப்பியம்
2. பத்துப் பாட்டு-பெரும்பாணாற்றுப்படை, பட்டினப்பாலை.
3. எட்டுத் தொகை-எட்டு நூல்களும்.
4. பதினெண் கீழ்க்கணக்கு—களவழி நாற்பது, ஐந்திணை எழுபது, திணைமொழி ஐம்பது, திணைமாலை நூற்றைம்பது.

காரைக்கால் அம்மையார் புராண மூலமும்
அரும் பொருள் உவமைச் செய்யுள் திரட்டும்

இது, காரைக்கால் அம்மையார் புராணம் என்னும் பெயரில் சேக்கிழாரின் பெரிய புராணத்தில் உள்ள பகுதியும், அதன் விளக்க உரையில் மேற்கோள்களாகப் பல நூல்களிலிருந்து கொடுக்கப்பட்டுள்ள பாடல்களின் திரட்டும் கொண்ட ஒரு தொகுப்பாகும். இந்நூலின் முதல் பக்கத்தில் உள்ள (Title page) செய்தி அதிலுள்ளவாறு அப்படியே வருமாறு:

"இவை
காரைக்கால்
குவெர்னமா பாடசாலை திரெக்தேரும்,
ஒபிசியெ தக்கா தெமியுமாகிய,
தம்பி-புருஷோத்தமப் பிள்ளையவர்களால்
தொகுக்கப்பட்டு
சென்னை
ஆனந்தா அச்சுக் கூடத்திற் பதிப்பிக்கப்பட்டன.
1960"

இதுவரையிலும் உள்ளதற்கு உரிய விளக்கமாவது:

குவெர்னமா என்னும் பிரெஞ்சுச் சொல்லுக்குக் கவர்மென்ட் (Government) - அரசாங்கம் என்பது பொருள். திரேக்தேர் (Directeur) என்னும் பிரெஞ்சுச் சொல்லுக்கு (Director) இயக்குநர் என்பது பொருள். எனவே, இதைத் தொகுத்தவர், காரைக்காலில் உள்ள ஓர் அரசுப் பள்ளியில்

இயக்குநராக இருந்தார் என அறியலாம். இந்த இயக்குநர், குறிப்பிட்ட ஒரு வட்டாரத்தில் உள்ள சில பள்ளிகளுக்குத் தலைவரும் ஆவார்.

அடுத்து, 'ஒபிசியே தக்காதெமி' என்பது, பிரெஞ்சு மொழியில் ஓர் உயர் பட்டப் பெயராகும். இது பிரெஞ்சு மொழியில் '(Officer d' academie' எனப்படும். இதன் ஆங்கில மொழி வடிவம் 'Officer of Academy' என்பதாகும். Officier என்னும் பிரெஞ்சுச் சொல்லின் இறுதி எழுத்தாகிய R என்பது ஊமை (Silent) எழுத்தாகும். அதற்கு ஒலி கிடையாது. எனவே, 'ஒபிசியே' எனப்படுகிறது. அடுத்து de academie என்னும் இருசொற்களில், நிலைமொழியின் இறுதி எழுத்து 'e' என்னும் உயிர் எழுத்தாகும். வருமொழியின் முதலெழுத்து 'a' என்னும் உயிர் எழுத்தாகும். இரண்டு உயிர் எழுத்துக்கள் தமிழ் இலக்கணத்தில் உள்ளவாறே இங்கும் இணையாமல், de என்பதில் உள்ள 'e' என்னும் உயிர் எழுத்து கெட்டு விட்டது. அது கெட்டதன் அடையாளமாக ' என்னும் (Apostrophe) குறியிடவேண்டும். academie என்பதில் இறுதி 'e' என்பதும் ஊமை (Silent)எழுத்தாகும், ஒலி இல்லை. எனவே, அது 'அகாதெமி' என ஒலிக்கப்படுகிறது. பிரெஞ்சு மொழியில் 'd' என்பது 'தகர' ஒலி உடையது. d+academie என்பதில் உள்ள d என்னும் மெய்யெழுத்தின்மேல் 'a' என்னும் உயிர் எழுத்து இணைய, 'உடல்மேல் உயிர் வந்து ஒன்றுவது இயல்பே' (தோள்+அழகு=தோளழகு) என்னும் தமிழ் இலக்கண விதிபோலவே, d+academie='தக்காதெமி' என்றாயிற்று. இந்த 'Officer d' academie' என்னும் பட்டம், சிறந்த பணி புரிந்தவர்க்குப் பிரான்சு அரசாங்கம் அளிப்பதாகும். இந்தப் பட்டம் பெற்ற தம்பி-புருஷோத்தமப் பிள்ளை என்பவர் இந்நூலை உருவாக்கிச் சென்னையில் அச்சிடச் செய்துள்ளார். ஆண்டு 1906.

இந்த முகப்புப் பகுதியை அடுத்து, 'இதில் மேற்கோளாகக் கொண்டுள்ள நூற்கள்' என்னும் தலைப்பு இட்டு, திருக்குறள் முதலாக – சிறாப்புராணம் ஈறாக மொத்தம் 70 நூல்களின் பெயர்கள் தரப்பட்டுள்ளன. நூலில் இறுதியாக, "நல்லூர் ஆறுமுக நாவலரால் சத்திய ரூபமாகச் செய்த காரைக்காலம்மை

யார் புராணம் (வசனம்)'' என்ற தலைப்பில் உரைநடை வரலாறு தரப்பெற்றுள்ளது.

இந்நூலுக்குத் தம்பி—புருஷோத்தமப் பிள்ளை பொருத்த மான முகவுரை எழுதியுள்ளார். முகவுரையின் இறுதியில், "நெடுநாளாகத் தமிழ் நூற்கட் பலவற்றிலுஞ் சொன்னயம் பொருணயம் முதலிய வழக்கு நிரம்பி மலிந்துகிடக்கும் அருஞ் செய்யுட்களிற் சிலவற்றை யெடுத்து, இயன்ற வரையிற் புராணிகர் கருத்தொடு பொருத்தி, ஒரு நூலாகத் தொகுக்க லாயினேன்'' என்று கூறப்பட்டுள்ளது. இந்த நூலுக்கு, புதுவை மகாவித்துவான் பு.அ. பெரியசாமிப் பிள்ளையும், தமிழ் வல்லுநர் சி. பங்காரு பத்தரும் செய்யுள் வடிவில் சிறந்த மதிப்புரைகள் அளித்துள்ளனர்.

கடை திறப்பு

ஆ—கவிஞர் முருகு சுந்தரம். சேலம் பதிப்பகம், சேலம். 1964. பாரதம் பிரஸ், சென்னை. "இந்நூல் உலகப் புகழ் பெற்ற சொற்பொழிவுகள், கடிதங்கள், கட்டுரைகள் ஆகிய வற்றின் கவிதை வடிவங்கள். இம்முறையில் ஒரு கவிதைத் தொகுப்பு தமிழில் இதுவரை வெளிவந்ததில்லை'' – என ஆசிரியர் முன்னுரையின் முதல் பத்தியில் கூறியுள்ளார்.

உள்ளுறை:- இதில் மூன்று பகுதிகள் உள்ளன. முதல் பகுதி 'நாக்கு நாடகங்கள்' என்பது. இதன் உள்தலைப்பு எட்டு. சாக்ரடீசு, சகுந்தலை, ஒதெல்லோ, இங்கர் சால், கென்னடி, பெரியார், அண்ணா, கருணாநிதி ஆகிய எண்மரின் சொற் பொழிவுகள் கவிதை வடிவில் உள்ளன. நாக்கால் பேசும் சொற்பொழிவுகள் பற்றிய தாதலின் 'நாக்கு நாடகங்கள்' என்னும் பெயர் தரப்பட்டது போலும்.

இரண்டாம் பகுதி 'எண்ணத் தேர்கள்' என்பது. இதன் உள்தலைப்பு ஐந்து. மாதவி, பிரெஞ்சுக்காரி ஹெலாய், கவிஞன் பைரன், நெப்போலியன் ஆகியோரின் ஒவ்வொரு கடிதமும், முல்லை என்பாளின் மூன்று கடிதங்களும் கவிதை வடிவம் பெற்றுள்ளன. ஆக ஐந்து தலைப்புகளில் ஏழு கடிதங் கள் இடம் பெற்றுள்ளன.

மூன்றாம் பகுதி – 'உள்ளத்துடிப்புகள்' என்பது. இதன் உள்தலைப்பு இரண்டு. இதில், லெனின் கட்டுரையும் நேரு கட்டுரையும் கவிதை உருவம் பெற்றுள்ளன.

மக்களின் அறிவுக்கடை வாயிலை இப்பகுதிகள் திறப்ப தால், இத்தொகுப்புக்குக் கடை திறப்பு என்னும் பெயர் தரப்பட்டதோ – என்னவோ – தெரியவில்லை.

புலிப் பாணி முனிவர் பலதிரட்டு நூறு

ஆ - புலிப்பாணி முனிவர். தமிழக அரசு ஓலைச்சுவடி நூலகத்தின் 942 என்னும் எண் உள்ள சுவடி இது. உ-வசியம், மரணம், வித்து வேடணம், திருடர்களைப் பிடித்தல், சொக்குப் பொடி, புருட வசியம், பெண்கள் வசியம் – முதலியன இதில் கூறப்பட்டுள்ளன. இவர் இயற்றியுள்ள நூல்களின் கோவை யுணர்த்தும் சில செய்யுட்கள் இறுதியில் உள்ளன.

தமிழ் இலக்கியத் திரட்டு

எஸ். பவாநந்தம் பிள்ளை பல நூல்களிலிருந்து திரட்டி யது. மாக்மில்லன் & கோ, சென்னை. முதல் பதிப்பு-1918. இரண்டாம் பதிப்பு-1920. மூன்றாம் பதிப்பு-1925. குறிப்புரை உண்டு.

பாகவதத் திரட்டு

ஆ – அ. இராமசுவாமிகள். ஜீவ ரட்சா அச்சுக்கூடம், சென்னை. 1886. உ - பரமாத்ம லட்சணம், ஞான லட்சணம் முதலிய 22 தலைப்புகளில் 188 பாடல்கள் உள்ளன.

இன்ப ரசக் கோர்வை

ஆ - சிறு மணவூர் முனிசாமிக் கவிஞர். சிவகாமி விலாச அச்சுக்கூடம், சென்னை, 1909. மருத்துவம், கடவுள் முதலிய பல தலைப்புகளில் பல்வேறு இனப் பாடல்கள் – சந்தப் பாடல் கள் உள்ளன. பெரிய தொகுப்பு – பெரிய நூல். கோவை என்பதற்குப் பதில் 'கோர்வை' என்னும் சொல்லாட்சி உள்ளது. மிகவும் பழைய தாளில் நூல் உள்ளது.

செய்யுட் கோவை

ஆ – தி. இலட்சுமணக் கவிஞர். திருவனந்த புரம்

பாஸ்கர பிரஸ், 1915. ஞானானந்த னடிமாலை, நினைவாட்சி முதலிய தலைப்புகள் உள்ளன. திருவடி வாழ்த்து முதல் ஓர் மாது வரங்கேட்டல் ஈறாக 52 உள்தலைப்புகளில் பாடல்கள் உள்ளன.

சுகாதார வசனப் பாடல் – பாகம். 1

ஆ – இராமநாதபுரம் எஸ்.எம். மணி செட்டியார். வெ - இ.மா. கோபாலக் கிருஷ்ணக்கோன், மதுரை, 1933. The EXSELSOR POWER PRESS, Madras. உ - தெய்வ வணக்கம் முதல் வாழ்த்துப் பாடல் முடிய 21 தலைப்புகளில் சுகாதாரம் தொடர்பான உடற்கூறு, மருத்துவம் ஆகியவை பற்றி, கருத்தை முதலில் உரை நடையாக (வசனமாக) எழுதி அதைத் தொடர்ந்து பாடலை அமைத்துள்ள நூல் இது.

வேதாந்தப் பாவினம்

ஆ - சின்மய சொரூபன். அச்சு - சுப்பிரமணியன். வேதாந்தம் பற்றிய பல்வேறு நூல்களிலிருந்து திரட்டியவை. மொத்தம் பாடல்கள் 1661. முதல் பக்கம் இல்லை.

காவடிச் சிந்து

ஆ - சென்னி குளம் அண்ணாமலை ரெட்டியார். பதிப்பு – கு. அழகிரிசாமி. சக்தி வெளியீடு – சக்தி காரியாலயம், சென்னை. முத்தமிழ் அரச அச்சகம், சென்னை. விநாயகர் துதி முதல் தலைவனிடம் செவிலித்தாய் கூறுவது வரை 24 தலைப்புகள். பலர்மீது பாடிய 40 பாடல்களின் தொகுப்பு.

இரவிந்திரர் கவிதைத் திரட்டு

தமிழாக்கம் – த.நா. குமாரசாமி. வெ – சாகித்ய அகாதெமி, புது டில்லி. வி.உ. கலைமகள் காரியாலயம். எம்.எல்.ஜே. பிரஸ், சென்னை. 1961. உ – 'அருவியின் கனவு கலைந்தது' என்பது முதல் 'உனது படைப்பின் வழியினிலே' என்பது வரை 101 தலைப்புகளில் 101 பாடல்கள்.

இன்னிசை இருநூறு

ஆ - சோழ வந்தானூர் அ. சண்முகம் பிள்ளை. பதிப்பு – மு.ரா. கந்தசாமிக் கவிராயர். விவேக பாநு அச்சியந்திர

சாலை, மதுரை. 1913. பல சமயம் பாடிய நீதிப் பாடல்களின் தொகுப்பு என ஆசிரியர் முன்னுரையில் கூறியுள்ளார். நூல் 20 அதிகாரங்களாக அமைக்கப்பட்டுள்ளது.

பன்னூற்றிரட்டு

இது தஞ்சை சரசுவதி மகால் நூலகத்தில் உள்ளது. பல நூல்களிலிருந்து எடுத்த பாக்களின் திரட்டு இது. ''இதில் கம்ப ராமாயணம், வில்லி பாரதம், புறநானூறு, சிலப்பதிகாரம், சிவக சிந்தாமணி, திருக்குறள், பழமொழி, நாலடியார், பட்டினத்தார் பாடல், நைடதம் முதலிய - பல நூல்களினின் றும் தேர்ந்தெடுத்துத் திரட்டப்பட்ட செய்யுட்கள் இருக் கின்றன. சிதலமாயிருக்கிறது'' - என்று இந்நூலகத் தமிழ்ப் பட்டிகை முதல் தொகுதி 278 ஆம் பக்கத்தில் விவரிக்கப்பட் டுள்ளது. நேரில் கண்டபோது, பல நூல்கட் குரிய ஒற்றை யேடுகளை யொன்றாகச் சேர்த்துப் 'பன்னூற் றிரட்டு' எனப் பெயர் வைக்கப்பட்டுள்ள தெனத் தெரிந்தேன் - S. வையாபுரி. இவ்விதமாக S. வையாபுரிப் பிள்ளை எழுதியுள்ளார்.

தமிழ்ச் செய்யுட் கலம்பகம்

மேனாட்டார் தமிழ் கற்பதற்காக ஜி.யு.போப் பல நூல் களிலிருந்து திரட்டிய பாக்கள். பாடல்கள் - 612, இரண்டாம் பதிப்பு - 1859. கல்வி, புல்லறி வாண்மை போன்ற பல தலைப்புகளின் கீழ்ப் பாடல்கள் உள்ளன.

சைவ மஞ்சரி

தொ - பாண்டித் துரைத் தேவர். சிவதருமோத்தரம், அருணகிரி புராணம் முதலியவற்றிலிருந்து எடுக்கப்பட்ட 1316 பாடல்கள் தொகுப்பு இது. கடவுள் வாழ்த்து முதல் ஒழிபு ஈறாக 19 அதிகாரங்களாக இந்நூல் பகுப்புசெய்து தொகுக்கப் பட்டுள்ளது.

சிதம்பரனார் சீர்திருத்தப் பாடல்
முதல் பாகம்

பதிப்பாசிரியர் - எஸ்.சி. சிவ காமு, குடந்தை. அறிவுக் கொடி வெளியீடு, அறிவுக் கொடி பதிப்பகம், குடந்தை. 1938. வ.உ. சிதரம்பரனார் பழமையைச் சாடிப் பாடிய சீர்த்திருத்தப்

பாடல்களின் தொகுப்பு இது. உ - அறிவுப் பகுதி, ஒற்றுமைப் பகுதி, புரோகிதப் பகுதி, பாட்டாளர் பகுதி, மாதர் பகுதி, மதப் பகுதி என்னும் ஆறு பெரிய தலைப்புகளின் கீழ்ப் பல உள் தலைப்புகள் உள்ளன.

நவ ராத்திரிப் பாடல்கள்

சேது சமஸ்தானத்தில் நடைபெற்ற நவராத்திரி விழாவின் போது பலர் பாடிய பாடல்களின் தொகுப்பு. விவேக பாநு அச்சியந்திர சாலை, மதுரை. 1913. பாடியோர் - நா. இராக வையங்கார் முதல் சிதம்பரப் புன்னை வன நாத முதலியார் வரையிலான 34 புலவர்கள்.

செய்யுள் கதைகள்

கதைகள் செய்யுள்களால் பாடப்பெற்ற தொகுப்பு. தொகுத்தவர் - எம். சண்முக சுந்தரம், சென்னை. தனியாம் பாள் விலாசம் பிரஸ், சென்னை. 1920. உ - பேராசை கொண்ட நரி முதல் விசுவாமித்திரன் வேள்விக்குக் காவல் செய்ய இராமனைக் கொண்டு செல்லல் வரையிலான 50 கதைப் பாடல்கள்.

கொய்த மலர்

வெ - ஆரணி கவிஞர் கழகம், ஆரணி. 20 கவிஞர்களின் பாடல் தொகுப்பு. ஆரணி கவிஞர் கழகத்தின் பல்வேறு அரங்குகளில் நிறைவேறிய கவிதைகளின் திரட்டு. நூல் பெயர் சுவையாயுள்ளது.

சிவ சங்கர திட்சதர் பாடல்கள்

ஆ - சிவ சங்கர திட்சதர். வெ-சி.ஆர். சீநிவாச சாத்திரி பிரம்ம வித்தியா அச்சுக் கூடம், சிதம்பரம். 1892. சிதம்பரம் இறைவன்மேல் பாடிய பாடல்களின் தொகுப்பு.

பல பாடல் திரட்டு

ஆ - பெரியண்ண செட்டியார். வெ- எஸ். சுப்பிரமணிய ஐயர். வித்தியா வர்த்தினி பிரஸ், சென்னை, 1879. தற்காலத் தமிழ்ப் பாடல்கள் பலவும் இசைப் பாடல்களும் இதில் உள்ளன.

பல பாடல் திரட்டு

தொ-மக்தூம் முகமதுப் புலவர். சித்தாந்தசைவப் பிரகாச பிரஸ், சென்னை. 1873. இசுலாமியப் புலவர் பலர் பாடிய பக்திப் பாடல்களின் தொகுப்பு.

சப்த தலத் தேவாரத் திரட்டு

சப்த தலம் என்றால் ஏழு ஊர்கள் என்பதாம். திருவையாறு, திருப்பழனம், திருவேதிகுடி, திருச்சோற்றுத்துறை, திருக் கண்டியூர், திருப்பூந் துருத்தி, திருநெய்த்தானம் என்னும் ஏழு ஊர்கள், காவிரி ஆற்றையும் அதன் கிளையாகிய குடமுருட்டி ஆற்றையும் சார்ந்துள்ளன. அடுத்தடுத்துப் பக்கத்தில் உள்ள இந்த ஏழு ஊர்ச் சிவன் திருமேனிகளையும் திருவையாற்றுக் காவிரிக்கரைக்குக் கொண்டு வந்து திருவிழா நடத்துவர். இது மிகப் பெரிய விழாவாகும். இந்த ஊர்கள், தமிழில் ஏழூர் என்றும், வட மொழியில் சப்தஸ்தலம் - சப்த ஸ்தானம் என்றும் வழங்கப் பெறும்.

இவ்வூர்களின் மீது பாடப்பெற்ற தேவாரப் பாக்களும்வேறு பல பாக்களும் இத் திரட்டில் உள்ளன. இறுதியில் வீரபத்திரப் பிள்ளை நாமாவளிக் கீர்த்தனைகள் உள்ளன. தொ. தஞ்சை பள்ளி அக்கிரகாரம் பி.ஏ. நீலமேகம் பிள்ளை. தராசு அச்சுக் கூடம், தஞ்சை. 1915.

குறுந் திரட்டு

ஆசிரியர்: தத்துவராய சுவாமிகள். தொகுப்பு: அ. இராம சாமிச் சுவாமிகள். மிமொரியல் அச்சு இயந்திர சாலை, சென்னை - 1888 ஆம் ஆண்டு. உள்ளுறை: பொழிப்பு முதல் வாழ்த்து ஈறாக உள்ள 229 தலைப்புகளில் பாடல்கள் உள்ளன.

குன்றக்குடி குமரன் கீர்த்தனை

R50.34. எண் ஓலைச் சுவடி. குன்றக் குடி குமரன் மீது நாடோறும் ஒவ்வொரு பாடல் வீதம் பாடிய பாக்களின் தொகுப்பு இது. சில பாடல்களில் இராகங்கள் குறிக்கப்பட்டுள் ளன. தினகவிதை நூல் பாடிய ஆசிரியரே இந்நூலையும் பாடி யிருக்கலாம் என எண்ணத் தோன்றுகிறது.

கூட்டுறவு அரங்கக் கவிகள்

தொகுப்பு – கிருஷ்ண தாசன். 204 பக்கங்கள். விலை ஒரு டாலர். ஆண்டு 1971. கிடைக்கு மிடம் – தேசிய நில நிதிக் கூட்டுறவு சங்கம், குவாலாலம்பூர். மலேசியா. 46 மலேசியக் கவிஞர்கள் பாடல்களின் தொகுப்பு.

கூட்டுறவுத் தந்தை என அழைக்கப்படுபவர் 'துன் முத்து' என்பவர். இவர், வீடு-இலக்கியம்-கலை முதலிய பல துறைகளிலும் கூட்டுறவு இயக்கம் காண்பவர். இவர் கவிஞர் கிருஷ்ண தாசரின் தலைமையில் மலேசியா நாடு முழுதும் பல கவியரங்கங்கள் நடத்தினார். அக் கவிதைகளின் தொகுப்பே இது.

1960-இல் சுத்தானந்தக் கவிக் குயில் வாழ்த்திப் பாடிய கவிதையுடன் தொடங்குகிறது. பரிசு பெற்ற கவிதைகள்–அரங்கில் பாடப்பெற்ற கவிதைகள் முதலியன அடங்கியுள்ளன. பரிசு பெற்ற ஒரு வெண்பாக் கவிதை வருமாறு:

"நாட்டுறவில் கூட்டுறவு நாட்டின் பொருளியலில்
கூட்டுறவு வீட்டுறவில் கூட்டுயர்வு - கூட்டுறவு
கூறும் வளவியலில் கோதில் இலக்கியத்தில்
சேரும் தொழிலியலில் சென்று"

பல சாத்திரத் திரட்டு

பல நூல்களின் திரட்டாகிய இது வீரசைவம் பற்றியது. ஆசிரியர்: புலிசை சிவ சண்முக மெய்ஞ்ஞான சிவா சாரிய சுவாமிகளின் மாணாக்கருள் ஒருவரின் தொகுப்பு – அவர் பெயர் தெரிவிக்கப்படவில்லை.

உள்ளுறை: பரமாசாரிய சுவாமிகள் வாக்கு முதல் அவிநாசி நாதர் தோத்திரத் திரட்டுவரை 123 நூல்களிலிருந்து பாடல்கள் திரட்டப்பட்டுள்ளன. ஈசுவரனது தடத்தலக்கணம் முதல் சிவபோகம் வரையிலான 73 பொருள்களைப் பற்றிய பாடல்கள் உள்ளன.

மெய்யறிவு

வ.உ. சிதம்பரனாரின் பாடல் தொகுப்பு இது. இதற்கு

உரையும் உண்டு. வெளியீடு பாரி நிலையம், சென்னை. சாது அச்சுக்கூடம், சென்னை. முதல் பதிப்பு: இராட்சச-ஆவணி-3 ஆம் நாள். மூன்றாம் பதிப்பு 1956.

வ.உ. சிதம்பரனார் கண்ணனூர்ச் சிறையில் இருந்தகாலை மற்ற கைதிகளுக்கு மெய்யறிவு கொளுத்தப் பல பாடல்கள், அவ்வப்போது இயற்றித் தந்து மனப்பாடம் செய்ய வைத்தாராம். சிறுகச் சிறுகப் பாடல்களை இயற்றி நூறுவரை கொண்டுவந்துள்ளார். ‘தன்னையறிதல்’ முதல் ‘மெய்ந்நிலை அடைதல்’ ஈறாக உள்ள பத்துத் தலைப்புகளில், தலைப்புக்குப் பத்துப் பாடல் வீதம் மொத்தம் நூறு பாடல்கள் உள்ளன.

தனிப் பா மஞ்சரி

ஆசிரியர்: தென் திருப்பேரை - அபி நவ காள மேகம்- அநந்த கிருஷ்ணையங்கார். இவர் அவ்வப் போது இயற்றிய 225 தனிப்பாக்களின் தொகுப்பு இது. பல வகைப் பாக்கள் உள்ளன. அச்சு: திருவைகுண்டம் கான வித்யா பிரஸ்- 1736. இந்த நூலுக்கு வையாபுரிப் பிள்ளை, கு. அருணாசலக் கவுண்டர். டி.கே. சிதம்பரநாத முதலியார், திரு நாராயணையங்கார் முதலிய தலை சிறந்த தமிழ் அறிஞர்கள் நல்ல மதிப்புரை அளித்துள்ளார்கள்.

R. 43- ஞான வாசிட்டத் திரட்டு

காசுமீரப் பண்டிதர் வடமொழியில் ஆறாயிரம் பாடல் களால் இயற்றிய ஞான வாசிஷ்டம் என்னும் நூலை, வீரை ஆளவந்தார் என்னும் மாதவ பட்டர் தமிழில் பெயர்த்தார். அதிலிருந்து பல பாடல்கள் இப்பெயருடன் தொகுக்கப்பட்டன. தொகுத்தவர் பெயர் தெரிய வில்லை. நந்திகேசுரர் பரம சிவனைக் கேட்டுக் கொண்ட ‘பதினாறு பேறு’ என்னும் தலைப் பெயருடன், பஞ்சநத மான்மியச் செய்யுளாகிய ‘மறை கள் நிந்தனை’ என்பது காணப்படுகிறது.

சோவியத் நாட்டுக் கவிதைகள்

தொகுப்பு & தமிழாக்கம் - இரகுநாதன். வெ-ஸ்டார் பிர சுரம், ஐடியல் பிரின்டர்ஸ், சென்னை. 1965-உ-அஞ்சலி, நாடும்

மக்களும், பல்சுவை, வசந்த காலம், வான் வெளிப் பயணம், குழந்தை உலகம், இந்திய நட்புறவு, சோவியத் நட்புறவு என்னும் பெரிய தலைப்புகளின் கீழ்ப் பல உள்தலைப்புகள். லெனின் பிறந்தார் முதல் அக்டோபர் புரட்சி வாழ்த்து ஈறாக 85 உள்தலைப்புகள். இறுதித்தலைப்பில், வள்ளத்தோல், சௌத்ரி, பிரேம்தவன், இரகுநாதன் ஆகியோரின் வாழ்த்துக் கவிதைகள் உள்ளன.

வழி வழி வள்ளுவம்

தொ.ரா.பி. சேதுப் பிள்ளை. வெ-பழநியப்பா பிரதர்ஸ். ஆசியன் பிரிண்டர்ஸ், சென்னை. முதல் பதிப்பு–1953. மூன்றாம் பதிப்பு – 1957. சிலப்பதிகாரம், மணி மேகலை, சீவக சிந்தா மணி, கம்பராமாயணம், பாரதியார் கவிதை ஆகிய நூல் களில் திருக்குறள் கருத்து வந்துள்ள பாடல்கள் எடுத்துத் தொகுக்கப்பட்டுள்ளன. உரை விளக்கமும் உண்டு.

மனிதனைப் பாடுவேன்

ஆ – வால்ட் விட்மன் என்னும் ஆங்கிலக் கவிஞர். இவர் கவிதைகள், பால பாரதி ச.து. சுப்பிரமணிய யோகியால் தமிழாக்கம் செய்யப்பட்டுள்ளன. வெ-சோதி நிலையம், சென்னை. மாருதி பிரஸ், சென்னை. 1958. உ–உடலும் உயிரும், என்பது முதல் 'கடைசி வந்தனம்' வரை பல தலைப்புகளில் பாடல்கள் உள்ளன. அமெரிக்காவில், லாங் ஐலண்டு (Long Island)என்னும் பகுதியில் உள்ள வெஸ்ட் ஹில்ஸ் (West Hills) என்னும் இடத்தில் விட்மன் பிறந்தார். இவர் கவிதை கள் மிகவும் துடிப்புள்ளவை.

உமார் கயாம் பாடல்கள்

பாரசிகக் கவிஞர் உமார் கயாம் பாடிய பாடல்களைச் சாமி சிதம்பரனார் தமிழாக்கம் செய்துள்ளார். வெ–இலக்கிய நிலையம், சென்னை. தாஸ் பிரஸ், சென்னை. முதல் பதிப்பு–1946. இரண்டாவது – 1963. மொத்தப் பாடல்கள் 101.

கவி மணி தேசிக விநாயகம் பிள்ளையும் இப்படி ஒரு மொழி பெயர்ப்பு செய்துள்ளார்கள்.

ஆங்கிலக் கவிதை மலர்கள்

மொழி பெயர்ப்பு ஆசிரியர் - பொ. திருகூட சுந்தரம் பிள்ளை. வெ-காந்தி நிலையம், சென்னை. ராஜன் எலக்டிரிக் பிரஸ், சென்னை. 17 படங்களுடன் கூடிய இரண்டாம் பதிப்பு-1951. உ - இதில் ஐந்து பாகங்கள் உள்ளன. 'அன்னை' முதல் 'நீயார்' வரை 47 உள்தலைப்புகள் உள்ளன. இந்தியர் சிலர் உட்பட 45 புலவர்கள் ஆங்கிலத்தில் இயற்றிய கவிதைகளின் மொழிபெயர்ப்புத் தொகுப்பு இது.

தமிழ்த் தொகை

தொகுப்பும் உரையும் - ரெ. முத்துக் கணேசன். வெ-அழகுப் பதிப்பகம், காரைக்குடி. சௌத் இந்தியா பிரஸ், காரைக்குடி. உ-இது அகம், புறம் என்னும் இரு பெரும் பிரிவின் கீழ், 'விடிவது எப்போது' முதல் 'தமிழ் வைப்பு' என்பது வரை 80 உள்தலைப்புகளைக் கொண்டுள்ளது. தொல்காப்பியம்-யாப்பருங் கலம், யாப்பருங் கலக் காரிகை - தண்டியலங்காரம்-வீரசோழியம்-ஆகிய இலக்கண நூல்களின் உரைகளிலிருந்தும், பெருந்தொகை - தமிழ் நாவலர் சரிதை-தனிச் செய்யுள்-சிந்தாமணி ஆகிய நூல்களிலிருந்தும் எடுக்கப்பட்ட பல பாடல்களின் தொகுப்பு இது.

அருட்பா மாலை

இந்நூலுக்குத் தரப்பட்டுள்ள முழுப் பெயர், ஒன்பது துறவிகள் பாடிய திருவெம்பாவை - திருப்பள்ளி எழுச்சி என்னும் அருட்பாமாலை - என்பதாம். வெளியீடு - காசிகானந்த சுவாமிகள், திருப்பூவணம். ஒன்பது துறவியரின் பெயர்கள் - காசிகானந்த ஞானாசாரிய சுவாமிகள், நடேச சுவாமிகள், திருநீலகண்ட சுவாமிகள், சபாபதி சுவாமிகள் கோவிந்த சுவாமிகள், நாராயண சுவாமிகள், அத்வைதானந்த சுவாமிகள், அருணகிரிநாத சுவாமிகள், சண்முகானந்த சுவாமிகள் - ஆகியவை பெயர்கள்.

தேரையர் திரட்டு

வெ. வி. ஆர். சுந்தரம், சச்சிதானந்த அச்சியந்திர சாலை,

தஞ்சை - 1915. உ - தேரையர் கரிசலை - 300 பாடல்களும் கல் நண்டு சூத்திரமும்.

யூகி முனி திரட்டு

வெ - வி. ஆர்.சுந்தரம். சச்சிதானந்த அச்சியந்திரசாலை, தஞ்சை. 1915. உ - யூகி முனி வரதாங்க தீட்சை / விதி - 300, யூகி முனி வாத வைத்திய விளக்கம் - 200, யூகி முனி மதி வெண்பா - 100, ஆகியவை.

குண வாகடத் திரட்டு

வெ - சிதம்பர முதலியார். 1922. உ - திருமூலர் அகத்தியர் - தேரையர் ஆகிய மூவரின் மருத்துவ நூல்களிலிருந்து திரட்டியவை. வாகடம் = மருத்துவநூல்.

தமிழகத்தின் கலை மணிகள்

ஆ - க.அ. ஆறுமுகனார். இராமன் பதிப்பகம், சென்னை. 1959. உ - பாண்டித் துரைத் தேவர் முதல் சங்கீதம் கே.வி. மகாதேவன் வரையிலான. பல துறை அறிஞர்கள்மீது பாடப் பட்டவற்றின் தொகுப்பு.

நடிப்பு நாட்டுப் பாடல்கள்—பாகம் - 1.

ஆ - பல்கலை மகாகவி வேத நாயக சாத்திரியார் - தஞ்சை சரசுவதி மகால் வெளியீடு. 1800.

தொகுப்பு - by Tamiz Nadu

THEO - PHILU S.V.

தெய்வ நேசன்

செய்கை நாட்டுப் பாடல்கள் - Action Folk Songs.

நூலில் உள்ளவாறு மேலே தரப்பட்டது. இனி நூலின் உள்ளுறை வருமாறு:-கும்மி, கோலாட்டம், டான்சு (நடனம்), டிராமா (நாடகம்), செய்கைப் பாட்டுகள் முதலியவற்றிற்கு ஏற்ற பாடல்களின் தொகுப்பு. பாடல்களுக்கு மெட்டும் தரப் பட்டுள்ளது; செய்கைப் பாட்டு என்பது, வேலை செய்து கொண்டே பாடும் பாட்டு.

D. 181. நீதி சாரானுபவத் திரட்டு

இது, மனிதர் இயல்பு, நீதி இயல்பு என்னும் இரு பிரிவுகள் உடையது. முதல் பிரிவில் 46 பாக்களும் இரண்டாவதில் 74 பாக்களும் உள்ளன. பல நீதிகள் சொல்லப்பட்டுள்ளன. இதன் ஆசிரியர் நாகைச் சத்திய ஞானி என்பதும், சகாப்தம் 1710-இல் இயற்றப்பட்ட தென்பதும் இறுதிச் செய்யுளால் தெரிகின்றன.

R.468-C. பிரங்கி ஞானத் திரட்டு

பிரங்கி ஞானி என்பவர், நட்சத்திர பலன்-சந்திரலக்கின பலன்-முதலிய பல செய்திகள் பற்றி எழுதிய பாடல்களின் தொகுப்பு.

R.199-C. புலிப்பாணி பல திரட்டு

இரச பற்பம், செய நீர், வீரம், செந்தூர வேதை, சாரக் கட்டு, நாகக் கட்டு, இலிங்கக் கட்டு முதலியன செய்யும் வழி பற்றிக் கூறும் பாக்களின் தொகுப்பு.

D.1809. மாணிக்க வாசகப் பதம்

நூல் தலைப்பில் 'மாணிக்கவாசகர் பாடின பதம்' என இருப்பினும், இவர் திருவாசகம் பாடின மாணிக்க வாசகர் இல்லை. இந்த நூல் இசைப்பாட்டாகிய கீர்த்தனை வகைப் பாடல்களின் தொகுப்பு; வேதாந்தம் பற்றியது.

மருத்துவ நாடித் திரட்டு

வெ-கருப்பண்ண பிள்ளை-1902. உள்ளுறை: அகத்தியர் சரக்கு சுத்தி (அல்லது) கன்ம சூத்திரம்-150, சூதமுனி நாடி-30, இராசாங்க நாடி-25 ஆகியவற்றின் திரட்டு.

பால வாகடத் திரட்டு

18 சித்தர்கள் அருளிய வாகடத் (மருத்துவநூல்) திரட்டு. மருத்துவம் பற்றி 1200 பாடல்கள் உள.வெ-சுந்தர முதலியார். 1890.

Seyyul Kovai

A Tamil Poetical Anthology தொகுப்பு - எம்.எஸ். பூர்ண லிங்கம்பிள்ளை. தாம்சன் & கோ. 1895. உள்ளுறை: 'கடவுள் வாழ்த்து' முதல் 'பன்னெறி' என்பது முடிய உள்ள 44 தலைப் புகளில் பாடல்கள் உள்ளன. மொத்தப் பாடல்கள் 1055. இவற்றுள் 5 பாடல்களை நீக்கி 1050 பாடல்களைக் கொள்க என்கிறார் தொகுப்பாசிரியர். பல நூல்களின் திரட்டு இது.

இராமாயணத் திருப்புகழ் என்னும் இராம செயத் திருப்புகழ்

ஆசிரியர்-பால பாரதி. வெளியீடு-திருப்பதி தேவத் தானம்-1954. பொழிப்புரை உண்டு. இது இரண்டு பகுதிகளாக உள்ளது.

இரச வாதத் திரட்டு

இரச வாதம் பற்றிய பல நூல்களிலிருந்து திரட்டிய பாடல்களின் தொகுப்பு. கொங்கணர் மூவாயிரம், திரு மூலர் திருமந்திரம், சட்டை முனி நூல், கொங்கணர் நூல்-ஆகிய நூல்களிலிருந்து திரட்டிய பாக்களின் தொகுப்பு.

சின்னூல் திரட்டு

சில புராணங்கள், தேவாரம், திருவாசகம் முதலிய சில நூல்களிலிருந்து திரட்டிய பாக்களின் தொகுப்பு. மதுரைப் புராணத்தில் தல விசேடம் முதல் இலக்கின பலன் என்பது வரை 26 நூல்களிலிருந்து திரட்டியவை.

பல திரட்டு

R. 416. கம்பராமாயணம் முதல் இராமாயண வெண்பா வரையிலான 36 நூல்களிலிருந்து திரட்டிய பாடல்கள். மற்றும், புராணங்கள், சிற்றிலக்கியங்கள், கணக்கதிகாரம், சோதிடப் பாடல்கள், நீதி நூல்கள் முதலிய பல துறைப் பாடல் திரட்டு.

ஞான வாசிட்டத் திரட்டு

காஷ்மீரப் பண்டிதர் வட மொழியில் ஆறாயிரம் சுலோ கத்தால் இயற்றிய ஞான வாசிஷ்டம் என்னும் நூலை, வீர ஆளவந்தாராகிய மாதவ பட்டர் தமிழில் மொழி பெயர்த்

தார். அந்தத் தமிழ்ப் பாடல்களுள் சிலவற்றின் தொகுப்பு இது. தொகுத்தவர் பெயர் தெரிய வில்லை. இடையிடையே உரைநடையும் உண்டு. இறுதியில், நந்திகேசுரர் பரமசிவனைக் கேட்டுக் ‘கொண்ட பதினாறு பேறு’ என்னும் தலைப் பெயருடன், பஞ்சநத மான்மியச் செய்யுளாகிய ‘மறைகள் நிந்தனை’ என்பது காணப்படுகிறது. (இது ஒரு சுவடி).

R. 890. செய்யுள் திரட்டு

கலைமகள், முருகன் முதலியோர் பற்றிய பாடல்கள், மணவாள நாராயண சதகம் முதலிய சதகப் பாடல்கள், வில்லி பாரதம்-கம்ப ராமாயணம்-முதலியவற்றிலிருந்து சில பாக்கள், சீரங்க நாயகி-மதுரை மீனாட்சி முதலியோர் பற்றிய சில கீர்த்தனங்கள் இந்தத் திரட்டில் உள்ளன.

R.310-b. அருட்பாமாலை

ஆ-மாகாளம் அழகிய சிற்றம்பலவ தேசிகர். பல ஊர்ச் சிவன் மீது பாடியவை. ஊர்கள்: கூந்தலூர், திருப்புகலூர் சிறு வேளூர், திருவிடை மருதூர், திரு மருகல், திரு மாகாணம் இலந் துறை, திருக் குண மங்கலம், அம்பர், கருவிலி முதலியன.

R.238-i இரு து நூல் முதலியன

பெண் வயதுக்கு வந்த காலப் பயன், பல்லி சொல் பலன், கோடியுடுக்கக் கூடிய கிழமை முதலியன பாடல்களால் தெரிவிக்கப்பட்டுள்ளன.

இறையனார் அகப்பொருள் உதாரணச் செய்யுட்கள்

இறையனார் அகப்பொருள் என்னும் நூலில் சொல்லப் பட்டுள்ள துறைகளுக்கு இலக்கியமாகக் காட்டப் பெற்றுள்ள-400-க்கும் மேற்பட்ட பழைய செய்யுட்களின் தொகுப்பு இது. பல கோவை நூல்கள், எட்டுத் தொகையுள் சில நூல்கள், வேறு சில பழைய நூல்கள் ஆகியவற்றிலிருந்து எடுக்கப்பட்ட பாடல் களும், சில தனிப்பாடல்களும் இதில் இடம்பெற்றுள்ளன.

R.434. கதம்பக் கோவை

திருவாரூர்க் கோவை, திருச்சிற்றம்பலக் கோவை,

தஞ்சை வாணன் கோவை, கப்பல் கோவை, கூடல் கோவை, அசதிக் கோவை, புலியூர்க் கோவை – முதலிய பல கோவை நூல்களிலிருந்து எடுத்த 252 பாடல்களின் தொகுப்பு இது. பெரும்பாலான கோவைகள் அச்சிடப்படாதவை. இறுதியில், சில செய்யுட்கள், கோவைச் செய்யுள் அல்லாத தனிப் பாடல் களாக உள்ளன.

No. 364. சிவானு போகத் திரட்டு

கடவுள் வாழ்த்து முதல் மங்கல வாழ்த்து ஈறாக உள்ள 63 பிரிவுகளில் 305 பாடல்கள் உள்ளன. ‘அசத் ஞான தரிசனம்’ என்பது முதல் ‘வீட்டு நெறிப் பால்’ என்பது வரை யிலான 73 நூல்களிலிருந்து இந்தப் பாடல்கள் திரட்டப் பட்டுள்ளன.

தமிழ்ப் புலவர் சரித்திரம்

ஆசிரியர்: சுன்னாகம் அ. குமாரசாமிப் புலவர். கொக்கு வில் – சோதிடப் பிரகாச யந்திர சாலைப் பதிப்பு. நள- கார்த் திகை, உள்ளுறை: அகத்தியனார் முதல் சிந்தாமணி நிகண்டு ஆசிரியர் வைத்தியலிங்கப் பிள்ளை வரையிலான புலவர்கள் பலரின் வரலாறுகள் பாடல்களால் எழுதப்பட்டுள்ளன. உரை யும் உண்டு. பல வரலாற்று நூல்களை ஆராய்ந்து ஆசிரியர் இதை எழுதினாராம். பலர் வரலாற்றுப் பாடல்களின் தொகுப்பு இது.

சீட்டுக் கவித் திரட்டு

No. 866. இந்தத் திரட்டில் இரண்டு சீட்டுக் கவிகளும் ஒரு கலித்துறையும் உள்ளன. முதல் சீட்டுக்கவி—இராமலிங் கேந்திரனுக்கு அழகம் பெருமாள் எழுதியது. இரண்டாவது— வடமலை நராதிபதிக்கு நமச்சிவாயக் கவி அனுப்பியது. கலித் துறை—பெரியசாமி என்பவர் மீது உள்ளது.

சோதிட நூல் திரட்டு

சில சோதிட (No. 677, Vol. II) நூல்களில் உள்ள பாடல் களின் திரட்டு இது. தமிழ்ப் பாடல்களின் இடையிடையே உரை நடைகளும் தெலுங்குப் பாடல் சிலவும் கலந்துள்ளன. உ—மாசப் பலன், ஆண்டு பலன், கிரகங்கள் இராசிகளில் இருக்

கும் நிலை, கிரகப் பார்வை, கால சக்கரம், பல்லி விழும் பலன், தும்மல் பலன், அலகு நூல் முதலியவை உள்ளன. நூலின் இறுதிப் பாடல் வருமாறு:

"ஒன்பது கோள் தனக்கு உறுபலன் உரைத்த காலை
அன்புடன் அருக்க னாகில் ஆறு......தாகும்.
சந்திரன் தானே யாகில் முப்பது நாள தாகும்
விந்தைசேர் வியாழன் தானும் வெள்ளியும் முப்பதாகும்"

இந்த அறு சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தத்தின் இரண்டாம் அடியின் ஐந்தாம் சீர் அழிந்துவிட்டுள்ளது.

தமிழா! இந்தா உன் சொத்து!

தொகுப்பு:எம்.ஆர். அடைக்கலசாமி, லொயோலா கல்லூரி, சென்னை. வெளியீடு: பால் நிலா பதிப்பகம், சென்னை. மாணிக்கம் பிரஸ், அமைந்தகரை, சென்னை. மதிப்புரைகள்: நாவலர் நெடுஞ்செழியன், மு.அ. முத்தையச் செட்டியார் முதலியோர். ஆண்டு 1958.

உள்ளுறை: நற்றிணை முதல் கண்ணதாசன் நூல்கள் வரையிலும் - அதாவது, சங்ககாலம் - இடைக்காலம் - பிற்காலம் வரையிலுமான நூல்களுள் 65 நூல்களிலிருந்து 1500 பாடல்கள் தேர்ந்தெடுக்கப்பெற்றுத் தொகுக்கப்பெற்றுள்ளன. இயற்கை அழகு, இதய அழகு, வாழ்க்கை அழகு என்னும் மூன்று பெரிய தலைப்புகளின் கீழ், 200 உள் தலைப்புகள் உள்ளன. மொத்தப் பக்கங்கள் - 821.

பலநூல் திரட்டு (No.2029)

உள்ளுறை: நான் மணிக் கடிகை, பரிபாடல் உறுப்பு, இரும்பல் காஞ்சி, நாரத சரிதை, அறநெறிச் சாரம், ஒட்டக் கூத்தர் விசாரணை, இன்னா நாற்பது, சிறுபஞ்ச மூலம், களவழி நாற்பது, இனியவை நாற்பது, ஐந்திணை ஐம்பது ஆகிய நூல்களிலிருந்து சிற்சில பாடல்கள் எடுத்துத் தொகுக்கப்பட்டுள்ளன.

பன்னூற்பா (No.374)

பிரமோத்திர காண்டம் முதலிய சில சைவப் புராணங்களிலிருந்தும் சில சோதிட நூல்களிலிருந்தும் எடுக்கப்பட்ட

சிற்சில பாடல்களின் தொகுப்பு. சோதிடப் பாடல் ஒன்று பார்வைக்கு (மாதிரிக்கு) வருமாறு:-

"ஆதிரை பரணி யரர லாயில்(யும்) முப்பூரம் கேட்டை
தீ துறு விசாகம் சோதி சித்திரை மகமீ ரா(றில்)
மாதனம் கொண்டார் தாரார் வழிநடைப் பட்டார் மீளார்;
பாய்தனில் படுத்தார் சாவர் பாம்பின்வாய்த் தேரைதிண்ணம்"

இப்பாடலின் முதலடி தெளிவாய் இல்லை. இந்தப் பாடலை நம்பி அஞ்சக் கூடாது. நடப்பது நடப்பதாகுக.

போப்பின் கவிதைத் தொகுப்பு

வெ - கே.சிங்காரவேலு முதலியார். ஸ்டார் ஆப்இந்தியா அச்சுக் கூடம், சென்னை. 1869. பல நூல்களிலிருந்து தொகுக்கப்பட்டுள்ளது.

பொங்கு புனல்

ஆ - சு. சண்முகம். வளர்மதி வெளியீடு. ஸ்ரீமதிபிரின்டர்ஸ் சென்னை. விற்பனை உரிமை - கலைஞன் பதிப்பகம். ஏப்ரல் 1964. உ - காணிக்கை, கவிதை, காதல், சமுதாயம், மெய்ப் பொருள் - என்னும் பொருள்கள் பற்றிய பல பாடல்களின் தொகுப்பு.

பிள்ளையார் சிலை

ஆ-கவிஞர் தமிழ் முடி. வானதி பதிப்பக வெளியீடு, சென்னை. நாவல் ஆர்ட் பிரின்டர்ஸ். சனவரி 1967. உ - பிள்ளையார் சிலை முதல் பாரதத்தின் பண்புவரையிலான 20 தலைப்புகளில் பல பாடல்கள் உள்ளன.

பரிசுத் தொகுதி

அண்ணாமலைப் பல்கலைக் கழகம் குறிப்பிட்ட ஒருவரைத் தேர்வு செய்து பரிசு கொடுப்பதற்காகத் திருப்பனந்தாள் ஆதீனம் அறக்கட்டளை வைத்துள்ளது. அதற்காகச் செய்யுள் தொகுதி வெளியிடுவது வழக்கம். யாராவது ஒரு புலவர் பெயரால் அப்பரிசுத் தொகுதி வெளியிடப்பெறும். நாம் இங்கே, சேக்கிழார், கம்பர், ஆதிகுமரகுருபர அடிகளார் ஆகிய மூவர் பெயரால் உள்ள தொகுதிகளைக் காணலாம் அவை வருக:-

சேக்கிழார் தமிழ்ப் பரிசுத் தொகுதி

பதிப்பு: டாக்டர் அ.சிதம்பரநாதச் செட்டியார்.வெளியீடு- அண்ணாமலைப் பல்கலைக் கழகம். 4-5-1942- மொத்தச் செய்யுள் 750. பெரிய புராணத்திலிருந்து 250 செய்யுள்களும் பிற நூல்களிலிருந்து 500 செய்யுள்களும் தொகுக்கப்பட்டுள்ளன.

கம்பர் நினைவுப் பரிசுத் தொகுதி

பதிப்பு-ஆ. பூவராகம் பிள்ளை. வெளியீடு - அ.ப.க. கழகம் 1944. மொத்தப் பாடல்கள் 750. சிவக சிந்தாமணி 100 பாடல். கம்பராமாயணம் 100. சிலப்பதிகாரம் 200 வரிகள் (அடிகள்). ஏனைய 32 நூல்களிலிருந்து 500 பாடல்கள் (2050 வரிகள்).

ஆதி குமரகுருபர அடிகளார்
நினைவுப் பரிசுத் தொகுதி

பதிப்பு-மு. அருணாசலம் பிள்ளை. வெளியீடு-அ.ப.க. கழகம். 750 செய்யுள். பரஞ்சோதியார் திருவிளையாடல் புராணம் - 200 பாக்கள். திருவிடைமருதூர்த் தலபுராணம் - 50 பாக்கள். ஏனைய 62 நூல்களிலிருந்து 500 பாக்கள்: ஆண்டு –1945.

இவ்வாறு மேலும் பல தொகுதிகள் உள்ளன.

தேச பக்திப் பாடல்கள்

வெ - பப்ளி கேஷன் டிவிஷன், செய்தி - ஒலி பரப்பு அமைச்சரகம்-இந்திய அரசு. அச்சு - Messers HOE & Co., Madras. ஜுலை 1964. திருச்சி - சென்னை வானொலி நிலையங் கள் ஒலி பரப்பிய பாடல்களின் தொகுப்பு. உ- 'எல்லாம் கொடுப்போம்' முதல் 'நேருக்கு நேராய்' வரை 39 தலைப்பு களில் பாடல்கள் உள்ளன. ஆசிரியர்கள்:- மு. அண்ணாமலை, கண்ணதாசன், கம்பதாசன், பாரதியார், ச.து. சுப்பிரமணிய யோகி,தூரன், தமிழழகன் முதலியோர் பாடல்களின் தொகுப்பு.

தமிழ்க் குமரி பாடல்கள்

ஆ - பால பாரதி ச.து. சுப்பிரமணிய யோகியார்-ஸ்டார்

பிரசுரம், திருச்சி. குமரன் பவர் பிரஸ், காரைக்குடி. 1945. தமிழ்க் குமரி முதல் காதல் தேன்வரை 29 தலைப்புகள், 'அகல்யா' என்னும் சிறு காவியமும் இதில் உள்ளது. 4 பாரசீகப் பாடல்களின் மொழி பெயர்ப்பும் இதில் உள்ளது இது முதல் பதிப்பு.

தமிழ்க் குமரி

ஆ - பாலபாரதி ச.து. சுப்பிரமணிய யோகி. யோகியார் பதிப்பகம், சென்னை. சுதேசமித்திரன் பிரஸ், சென்னை. தமிழ்க் குமரி முதல் காசில்லாக் கனகரத்தினம் வரை 36 தலைப்புகளில் பாக்கள் உள. மேலும் இதில், உமார்கயாம் என்னும் பாரசீகக் கவிஞரின் 101 பாடல்களின் தமிழ் மொழி பெயர்ப்புப் பாடல்களும் உள்ளன. முதல் தலைப்பின் பெயர் நூலுக்குத் தரப்பட்டுள்ளது. இது இரண்டாம் பதிப்பாகத் தெரிகிறது.

ரமண சந்நிதி முறை

ஆ - முகவைக் கண்ண முருகனார். முதல் பதிப்பு 1933-இல் ரமணாசிரமத்தாரால் வெளியிடப்பட்டது. இரண்டாம் பதிப்பு 1939. சென்னை. 'லா ஜர்னல்' அச்சுக் கூடம். உ- ரமண புராணம் முதல் பொறை யிரத்தல் வரை 121 தலைப்புகளில் பாடல்கள் பலவும், பல சிறு நூல்களும் தொகுக்கப்பட்டது இது.

ஈத்துவக்கும் இன்பம்

ஆ-ம. அரங்கநாதன். வெ-மு. துளசி, நீடாமங்கலம். முதல் பதிப்பு - சனவரி 1961. இரண்டாம் பதிப்பு - ஆகஸ்ட் 1961. சண்முகம் பிரஸ் (பி.லி.), சென்னை. நூல் நான்கு பாகங்களாக உள்ளது. அவையாவன:-

| | | |
|---|---|---|
| முதல் பாகம்-உண்டியளிப்பு | - 20 | உள்தலைப்பு. |
| இரண்டாம் பாகம்-பள்ளிச் சீரமைப்பு | - 20 | ,, |
| மூன்றாம் பாகம் - உடையளிப்பு | - 13 | ,, |
| நான்காம் பாகம்-பொது. | - 23 | ,, |

பள்ளி வளர்ச்சிப் பாடல்களின் தொகுப்பு இது. புது முயற்சி – அரிய முயற்சி.

அறிவுக் கேள்விகள்

ஆ–பிறை யணிவோன். மாணவர் பதிப்பகம், சென்னை. வி.உ. தமிழ்ப் புத்தகாலயம், சென்னை. வ.உ.சி. அச்சகம், சென்னை. உ - 177 அறிவுக் கேள்விகள் 177 பாடல்களாக உள்ளன. நூலின் இறுதியில் 177 விடைகளும் உள்ளன. பார்வைக்கு (மாதிரிக்கு) முதல் பாட்டு வருமாறு:—

"குரங்கிலிருந்து பிறந்த வன்தான்
குடும்பம் போற்றும் மனிதனெனப்
பரங்கி மனிதன் மொழிந் திட்டான்
பகர்ந்த பரங்கி யார் சொல்வீர்?" பாடல்-1.

விடை - 1. சார்லஸ் டார்வின்.

இந்தத் தொகுப்பு பொது அறிவை வளர்க்கும் ஓர் அரிய புதிய முயற்சி யாகும்.

நைவேத்தியம்

ஆ - இரவீந்திரநாத் தாகூர். மொழி பெயர்ப்பு - ஆ.கந்தசாமி. இது 100 பாடல்கள்கொண்டது.முதல் 50 பாடல் களை முதல் பாகம் எனவும்,அடுத்த 50பாடல்களை இரண்டாம் பாகம் எனவும் பகுத்துள்ளனர். முதல் பாகம் 'பக்தி' பற்றியது. இரண்டாம் பாகம் தேசியம் பற்றியது. வெ-ஸ்டார் பிரசுரம், சென்னை. சதானந்த அச்சகம், விருது நகர். 1957.

வரம் தரும் அன்னை

ஆ–ர. அய்யாசாமி. ஜ்வாலா கலை மன்றம், சென்னை, சாந்தி பிரஸ். 1966. வேளாங்கண்ணி அன்னை (மாதா)பற்றிய இசைப்பாடல்களின் தொகுப்பு. 'அஞ்சலி' முதல் 'நன்றி' வரை பல தலைப்புகளில் பாடல்கள் உள.

இராம கிருஷ்ண பரம ஹம்சர் இன் கதைக் கவிதை

தமிழ் ஆக்கம்–ரெ. இராமமூர்த்தி – கொப்பனாம்பட்டி, கமர்சியல் பிரிண்டிங் & பப்ளிஷிங் ஹவுஸ், சென்னை. 1963.

'பகவான் ஒரு சாயக்காரன்' என்பது முதல் 'சங்கொலிக்காரன்' 'என்பது வரையுள்ள 64 கதைகள் பாடல் வடிவத்தில் தரப்பட்டுள்ளன.

ஆழ்வார் அமுது

தொ-உரை-ராய. சொக்கலிங்கம். மதராஸ் ரிப்பன் பிரஸ், புதுக்கோட்டை. பன்னிரண்டு ஆழ்வார்களின் பாடல்களிலிருந்து 400 பாடல்கள் தொகுக்கப்பட்டு உரையுடன் வெளியிடப்பட்டுள்ளன. துன்முகி-வைகாசி.

குமரனும் கோசலை குமரனும் என்னும்
'திருப்புகழில் இராமாயணம்'

தொ-திரு முருக கிருபானந்த வாரியார். தி லிட்டில் பிளவர் கம்பெனி, சென்னை. மாருதி பிரஸ், சென்னை. இராமர் பற்றி -இராமர் வரலாறு பற்றிக் கூறப்பட்டுள்ள-அருணகிரி நாதரின் திருப்புகழ்ப் பாடல்களின் தொகுப்பு. நூலுக்குக் கொடுத்துள்ள தலைப்பு சுவையாக உள்ளது.

சாராமிர்தத் திரட்டு

தொ-இராமகிருஷ்ணப் பிள்ளை. பல நூல்களிலிருந்து நீதிப் பாடல்கள் திரட்டப்பட்டுள்ளன. வித்தியார்த்தன அச்சுக் கூடம், சென்னை. 1876. உ-அறத்துப்பால், பொருட்பால் என இரு பிரிவுகள் உள்ளன. அறத்துப்பால் 43 அதிகாரம். பொருட்பால் 53 அதிகாரம். திருக்குறள் முதலிய நீதி நூல்களிலிருந்து பல அதிகாரத் தலைப்புகள் எடுக்கப்பட்டுள்ளன.

வித்தியா விநோதினி

தொகுப்பு-இராமசாமி நாயுடு முதலியோர். பதிப்பு-டி. சம்பந்த முதலியார். அமெரிக்கன் அச்சுக் கூடம். 1893. இதில் தொடர் வரிசையாக 42 தொகுதிகள் உள்ளன ஒவ்வொரு தொகுதியாக அச்சிட்டனர். முதல் தொகுதி-ஜுலை 1889. 42 ஆம் தொகுதி-நவம்பர் 1893. தாயுமானவரின். தெய்வீகப் பாடல்கள் போன்ற வரிசையில் வெளிவந்த நூல் இது.

இசைக் கோவை

(தமிழ்ச் செய்யுள் திரட்டு)

முதல் பதிப்பு 1886. அடிசன் அன்ட் கம்பெனி, அடிசன் பிரஸ், சென்னை. கிறித்தவப் பிள்ளைகட்கான ஞானப் பாடல்களின் தொகுப்பு.

மொழியரசி

ஆ - கரந்தைக் கவியரசு ஆர். வேங்கடாசலம் பிள்ளை. கரந்தைத் தமிழ்ச் சங்க வெளியீடு. தமிழ் மொழி பற்றிய பாடல்களின் தொகுப்பு.

சாசனச் செய்யுள் மஞ்சரி

வெ-மயிலை சீனி வேங்கடசாமி. வி.உ-பாரி நிலையம், சென்னை. 1959. உ-எண்பதுக்கு மேற்பட்ட சாசனங்களிலிருந்து (கல்வெட்டுகளிலிருந்து) பாடல்கள் திரட்டப்பட்டு வெளியிடப் பட்டது இது. செம்பிலும் தாமிரத்திலும் வெட்டப்படுவதும் உண்டு.

வாசிட்டத் திரட்டு

ஆ-அ. இராம சுவாமிகள். ஜீவரட்சா அச்சுக் கூடம், சென்னை. 1886. உ - வாசிட்டம் 43 அத்தியாயங்களிலிருந்து 676 பாடல்கள் எடுக்கப்பட்டுள்ளன.

மெய்ஞ் ஞானத் திருப்பாடல் திரட்டு

ஆ-பீர் முகமது சாகிபு. இவர் தென்காசியில் பிறந்து தற்கலையில் வாழ்ந்தவர். கலா ரத்நாகர அச்சுக் கூடம், சென்னை 1898. மெய்ஞ்ஞானப் பாக்கள் 28 பகுதிகளாக அமைந்துள்ளன. மொத்தப் பாக்கள் 935.

தோத்திரப் பிரபந்தத் திரட்டு

பார்வை-கு. அப்பன் செட்டியார். பூமகள் விலாச அச்சுக் கூடம், சென்னை. 1936. இது, 93 சைவ நூல்களிலிருந்து எடுக்கப்பட்ட பாடல்களின் திரட்டு. சிறு - கட்டையான நூல். 968 பக்கம் கொண்டது.

செய்யுள் திரட்டு

தொ – ம.வி. இராமாநுசாசாரி. மூன்றாம் பதிப்பு – 1906. அடுத்த பதிப்பு – 1918. மொத்தம் 500 பாடல்கள். இரண்டு பாகங்கள். முதல் பாகம் 250 பாக்கள். இரண்டாம் பாகம் 250 பாக்கள்.

சிவ நெறிச் செய்யுள் திரட்டு

தொ – ப. இராமநாதப் பிள்ளை. வெ – கழகம், பிப்ரவரி, 1969. 27 பெரிய தலைப்புகளில் 2273 பாக்கள் உள்ளன. ஏறக் குறைய 150 நூல்களிலிருந்து திரட்டப்பவை இவை. பல்வேறு வகைச் சைவ நூற் பாடல்களின் தொகுப்பு.

தற்காலத் தமிழ்க் கவிதை (விமர்சனம்)

தொ – U.R.M. செட்டியார். வெ—ஸ்டார் பிரசுரம், இராமச் சந்திரபுரம். மதராஸ் ரிப்பன் பிரஸ். இராமச் சந்திர புரம். 1948. உ – சுப்பிர மணிய பாரதியார், பாரதி தாசன், தேவி, சுத்தானந்த பாரதியார், சுப்பிரமணிய யோகி, நாமக்கல் வே. இராமலிங்கம் பிள்ளை, சோமு, உமார்கயாம், ஷெல்லி, கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை, இரவீந்திர நாத் தாகூர் ஆகியோரின் சிற்சில பாடல்கள் மதிப்பீட்டுடன் தரப் பட்டுள்ளன.

ஔவையார் பாடல்கள்

தொ – உரை – புலியூர்க் கேசிகன். மல்லிகைப் பதிப்பகம், சென்னை. மெட்ரோ பாலிடன் பிரஸ், சென்னை. 1962. ஔவையாரின் தனிப் பாடல்களின் தொகுப்பு இது.

உ – முதல் பாடல் – 'பரமனுக்குப் பாரம்' என்ற தலைப்பில்,

'இட்டமுடன் என்தலையில் இன்னபடி என்றெழுதி
விட்ட சிவன் செத்தானோ... ...''

என்ற பாடல். 107 ஆம் தலைப்பாகிய 'உகுத்தேன்' என்ற தலைப்பில் 'எம்மிகழாதவர் தம்மிகழாரே' என்று தொடங்கும் பாடல் உளது. மொத்தம் 107 பாடல்கள்.

நியாயக் களஞ்சியம்

ஆ-கவியரசு கு. நடேசக் கவுண்டர். வெ—மீனாட்சி

புத்தக நிலையம், மதுரை. மங்கை அச்சகம், சென்னை. 1961. பலவகை நியாயங்களைக் கூறும் பாடல்களைத் தொகுத்துத் தந்து விளக்க விவரமும் எழுதியுள்ளார் ஆசிரியர்.

திருமால் பரிபாடல்

தொ-உரை-புலியூர்க் கேசிகன். கற்பகாம்பிகை பதிப்பகம், சென்னை. மெட்ரோ பாலிடன் பிரஸ், சென்னை. 1962. பரி பாடல் என்னும் சங்க நூலில் திருமால் பற்றி உள்ள ஏழு பாடல்கள் எடுத்து உரையுடன் தொகுத்துத் தரப்பட்டுள்ளன. அவை:-தாள்நிழல் பரவுதும், தலையுற வணங்கினேம், நின் நேமி நிழல், வேறுவேறு பெயரோய், நின்னடி தொழுதனெம், துன்பம் களைவோன், நல்லடி பரவுதும் - என்னும் ஏழு தலைப்பின் கீழ் உள்ளன.

ஞானச் செய்யுள் திரட்டு

R.4657. இதில் பிரமானுபோகம், கைவல்யம் முதலிய 35-க்கும் மேற்பட்ட நூல்களிலிருந்து திரட்டப் பட்ட பாடல் கள் உள்ளன. இது, திருப்பாதிரிப்புலியூர் ஞானியார் மடத்தி லிருந்து வரவழைத்து எழுதப்பட்டது.

R. 5.72. தலை சேர்வை வெண்பாக்கள்

ஆ-குழந்தைக் கவி ராசர். உள்ளுறை-திரிகடுகம், நான் மணிக்கடிகை, செய்யுளியல், ஒழிபியல், நன்னூல், கந்தர் அநுபூதி, ஆனந்த லகரி, சவுந்தரிய லகரி, குமர குருபர சுவாமிகள் பிள்ளைத் தமிழ், விபூதி உருத்திராட்சம்-முதலிய நூல்களில் உள்ள பாடல்களின் முதல் குறிப்பை (முதல் சொல் லையோ-சொற்றொடரையோ) விளக்கும் வெண்பாக்களும் விருத்தங்களும் கொண்டது இது.

பொன்னையா மணி மாலை

தொ-தஞ்சாவூர் கே.பி. கிட்டப்பா & கே.பி. சிவானந்தம். வெ-தர்பணா நாட்டியக் கல்லூரி. தர்பணா 'சிதம்பரம்' அகமதாபாத். ஜூலை 1961. இந் நூலுக்கு மிருணாளினி சாராபாய் நூன்முகம் எழுதியுள்ளார்.

சங்கீத வித்துவான் பொன்னையா பிள்ளை வைத்துப் போன சுவடிகளையும் சுரசாகித்தியக் குறிப்பேடுகளையும்

ஒன்று திரட்டிக் கிட்டப்பாவும் சிவானந்தமும் வெளியிட்டுள்ளனர். இந்நூல், பரத நாட்டியத்திற்கு இன்றியமையாத நடனப் பாடல்களின் முதலாவது நூலாகும். அலாரிப்பு, ஜதிஸ்வரம், சப்தம், ஸ்வரஜதி, சௌகவர்ணம், தானவர்ணம், (இராக) மாலிகை, பதம், ஜாவளி, தில்லானா, ஸ்வர சாகித்தியம் முதலியன அமைந்த நூலாகும்.

R. 5334 – ஏழு நகர் ஐந்நூற்று வணிகர் மீது பாடல்கள்

எழு நூறு வணிகர் குல மரபின் பெருமைகளும் அவர்கள் (தமிழர்கள்) பரவி வாழ்ந்த இடங்களும் அவர்களின் இயல்புகளும் பழைய மரபுகளும் அறிய உதவும் பாடல்களின் திரட்டு இது.

R. 2223. பலவகை மந்திரங்கள்

வராகி மாலை 30 பாட்டு, நவரத்தினமாலை 10, தேள்கடி வசியம் – பெண் வசியம் முதலிய மந்திரப்பாடல்கள், உச்சாடணங்கள், சக்கரங்கள்–முதலியன பற்றிய பாடல்கள்.

R. 1918. ஆண்டவர் பாடல்கள்

இதில், திரு நெல்லையம்மன் வணக்கம், கோப்புடையான் வணக்கம், விஷ்ணு வணக்கம், சொரூப வணக்கம், அருளிறை வணக்கம், குல குரு வணக்கம், முத்தி நிச்சயம், தெய்வ நிச்சயம், மனத்திற்கு அறிவுறுத்தல், பொதுவாகக் கூறியது, புத்திக்கு அறிவுறுத்தியது, நெஞ்சோடு இரங்கல், தெய்வத்தை விளித்தது, கிளிப்பத்து, சந்த விருத்தம் முதலியவை உள்ளன.

R. 2932. பல சந்தப் பாடல்கள்

பாரதம் – கன்ன பருவத்தில் சில, சிங்கை எல்லம்மை மீது பாடல்கள், பாரத நாடகத்தில் விதுரன்–அருச்சுனன் வாயிலாகக் கருத்துப்பாடல்கள், காளமேகத்தின் பாடல்கள் இரண்டு, சிரங்கப் பாடல்கள், நந்திக் கலம்பகப் பாடல்கள் சில– இதில் உள்ளன. தொகுப்பாசிரியர் யாரோ ஒருவர் தம் மனம் போன போக்கில் பலவற்றைத் தொகுத்துள்ளார்.

R. 2966. பல் வகை மந்திரப் பாடல்கள்

பிள்ளை பெறாதவர்க்கு எண்ணெய் ஓத மந்திரம், சுளுக்கு மந்திரம், சுப்பிரமணியர் அகவல், சுப்பிரமணியர் திரு நீற்று மந்திரம், வீர பத்திரன் மந்திரம், அனுமந்த ராயன் மந்திரம், பிள்ளையார் மந்திரம், காட்டேரி மந்திரம், காளி மந்திரம், சுப்பிரமணியர் தியானம், பத்திர காளி மந்திரம், தேங்காய் குண்ணி மந்திரம், சாமுண்டி மந்திரம்-முதலியவை பற்றிய பாடல்களின் தொகுப்பு இது.

பல வித்துவான்கள் பாடிய தனிச்செய்யுள் சிந்தாமணி

மதுரை - முறையூர் சண்முகம் செட்டியார் விருப்பப்படி மதுரை – மு. ரா. கந்தசாமிக் கவிராயர் தொகுத்தது இது. மதுரை விவேகபாநு அச்சியந்திர சாலை – 1908. மொத்தச் செய்யுள் – 3815. சங்ககால – இடைக்கால–பிற்காலப் புலவர் களுள் 180 புலவர்களின் பாடல்கள் தொகுக்கப்பட்டுள்ளன. முகவுரை--மு. இராகவையங்கார்...1 – 8-1908 – மதுரை.

இன் றொகை

இதனை இன் தொகை எனப் பிரிக்கவேண்டும். ஆசிரியர்– பண்டித இராம சுப்பிர மணிய நாவலர். செந்தமிழ் நிலையம், பதும நாதபுரம், தக்கலை, தென் திருவிதாங்கூர் – 1947.

உள்ளுறை: கடவுள் வணக்கப் பாடல். அறவியல் – 120 நீதி வாக்கியங்கள். பொருளியல்–250 நீதி வாக்கியங்கள். இன்ப வியல்–30 வாக்கியங்கள். வீட்டியல் - 30 வாக்கியங்கள். அற மொழி–175 வாக்கியங்கள். அறவுரை – 116 வாக்கியங்கள் – ஆகியவற்றின் தொகுப்பு. இறுதி இரண்டும், ஆத்தி சூடி – கொன்றை வேந்தன் போல் அகர வரிசையில் உள்ளன. எல்லாமே ஒவ்வொரு வரியாகும்.

வண்ண சமுத்திரம்

முகவுரை இல்லை. ஆசிரியர் பெயர் தெரியவில்லை. E. வேத போதகம் என்பவரின் முயற்சியால் அச்சிடப்பட்டதா கத் தெரிகிறது. அச்சு: PAYNE & CO., Madras. 1938. இது

வண்ணப் பாக்களின் தொகுப்பு. கிறித்துவ மதம் பற்றியது. 'வண்ணம் கடவுள் வாழ்த்து' முதல் 'வண்ணம் ஆபிரகாம் அடைந்த வாக்குத் தத்தம்' ஈறாக 22 வண்ணத் தலைப்புகள் உள்ளன. பல்வேறு பொருள் பற்றிப் பல பாடல்கள் இடம் பெற்றுள்ளன.

புகாரில் ஒரு நாள்

உலகத் தமிழ் மாநாடு-சென்னை-1968. மலர்க்குழு வெளியீடு. புகாரில் ஒரு நாள் என்னும் தலைப்பில் நடைபெற்ற கவிதைப் போட்டியில் பரிசு பெற்றோர்-பாராட்டு பெற்றோர் ஆகிய பத்துக் கவிஞர்களின் கவிதைகளின் தொகுப்பு. மேலும், 'தேன் துளிகள்' என்னும் தலைப்பில் வேறு சில கவிதைகளும் இறுதியில் சேர்க்கப்பட்டுள்ளன.

காவடிச் சிந்து

சுரதாளக் குறிப்பு-எஸ் இராமநாதன். வெ-கலைமகள் இசைக் கல்லூரி; சென்னை. அல்லயன்ஸ் பிரஸ், சென்னை. பொருள் உதவி-தமிழ்நாடு சங்கீத நாடக சங்கம். 1966. பலர் இயற்றிய காவடிச் சிந்து பாடல்களின் தொகுப்பு இது.

இன்னும் பல காவடிச் சிந்துகள்

காவடிச் சிந்து-கல் குளம் குப்புசாமி முதலியார்-1904.

காவடிச் சிந்து-சென்னை பத்மநாப விலாச அச்சயந்திர சாலையார் – 1907.

காவடிச் சிந்து – கா.வே.நாராயணசாமி முதலியார்-1914.

காவடிச்சிந்து-கா.சி.யாழ்ப்பாணம் பருத்தித்துறை ச.சுப்பிரமணிய சாத்திரி-1928.

கபிர் தாசரின் அருள் வாக்கு

மொழிபெயர்ப்பு-தி.வேங்கட கிருஷ்ணையங்கார். வெ-வானதி பதிப்பகம், சென்னை. சௌந்தரா பிரின்டர்ஸ், சென்னை. டிசம்பர் 1966. மொத்தப் பாடல்கள்-532. இறைவன் இயல்பு முதல் பிற செய்திகள் வரை 59 தலைப்புகளில் பாடல்கள் உள.

முதல் மலர்

ஆ–செல்வி அ.ஜ்வாலா. வெ–ஸ்டார் பிரசுரம், சென்னை. நண்பர்கள் அச்சகம், சென்னை. 1964. உ–காப்பு முதல் மக்கள் ஆட்சி வரை 19 தலைப்புகளில் பாக்கள்.

முதுமை நினைவு

ஆ–பொ.கந்தையா. பதவுரை விளக்கத்துடன் உள்ளது. சுதந்திரன் அச்சகம், கொழும்பு. பல்வேறு தலைப்புகளில் பல்வேறு அனுபவங்கள் பற்றி 125 பாடல்கள் உள்ளன.

குமரன் ஆசான் மூன்று கவிதைகள்

மலையாளத்திலிருந்து தமிழாக்கம் – இராம.கோபிநாதன். வெ – சாகித்திய அகாதெமி, புதுடில்லி. 1971. சிறந்த மலையாளக் கவிஞராகிய குமரன் ஆசான் என்பவரின் மூன்று கவிதைகளின் மொழிபெயர்ப்பு இது. முதல் கவிதையில், சீதையின் மனத்துயர், சீதை காட்டில் இரண்டு குழந்தைகள் பெறுதல், வால்மீகி ஆசிரமத்தில் தங்கியிருத்தல் முதலியவை அறிவிக்கப்பட்டுள்ளன. இரண்டாம் கவிதையும் மூன்றாம் கவிதையும், புத்த சாதகத்திலிருந்து எடுக்கப்பட்ட மூல சம்பவங்களை வைத்து உருவாக்கியவை. மூன்றாம் கவிதையின் பெயர் ‘கருணை’ எனத் தரப்பட்டுள்ளது. இந்நூலுக்கு ‘ரூகேம் ஜார்ஜ்’ என்பவர் முகவுரை எழுதியுள்ளார்.

R.2001. கதம்பச் சுவடி

இதில், நூல்கள் தொகுதியாய் இல்லாமல், தனித்தனிச் சில்லறைப் பாடல்களாக உள்ளன.

R.2002. கதம்பச் சுவடி

பல நூல்களிலிருந்து, பல கடவுளர் மீது பாடப்பட்ட பாடல்கள் எடுத்துத் தொகுக்கப்பட்டுள்ளன.

R.6855. வண்ணப் பாட்டுகள்

சந்த விருத்தம், கணக்கதிகார விருத்தம், பெண் கலை, கோலாட்டம், கும்பினி கோலப்பாட்டு முதலிய பல தலைப்புகளில் பல வண்ணப் பாடல்கள் உள.

R.5083. பலர்பேரில் வண்ணங்கள்

திருமலைத் தொண்டைமான் மீது கப்பல் பாட்டு, முருகன் வண்ணம், விநாயகர் வண்ணம், மருங்காபுரித் துரைமீது வண்ணம் முதலியவற்றின் தொகுப்பு.

R.5156. சிவகங்கை சமத்தானத் தலைமுறைக் கவிகள்

கவுரி வல்லவராசன்-போதகுரு மகாராசா முதலியோர் மீது பாடல்கள், வெண்பாப்புலி கவிராசர் மீது அரவக்குறிச்சி சொக்கலிங்கக் கவிராயர் பாடிய சீட்டுக் கவிகள், சபாபதிப் பிள்ளைமீது பாடல், முத்து விசைய ரகுநாதகவுரி வல்லவப் பெரியவுடையார் தேவர் மீது பாடல், மற்றும் சிலர்மீதுபாடல் -உள. இவற்றுள் சில அச்சிடப்பட்டுள்ளனவாம்; சில தனிப் பாடல் திரட்டாக உள்ளனவாம்.

கவிச் சுவை

ஆ-மு.சு.சங்கரன்.வெ-சிவகாமி பதிப்பகம், நெல்லை. அணிந்துரை-கிருபானந்தவாரியார். பாடல்கட்கு இராகமும் தாளமும் தரப்பட்டுள்ளன. ஆண்டு 1971.

உள்ளுறை: பணி மனமே, முத்தமிழ்த் தெய்வம், பேசிடு வாய் கிளியே, நான் வணங்கும் தெய்வம், அன்பார்ந்த மனத் தரசி, கலங் காண்ப தெந்நாளோ-முதலிய பல தலைப்புகளில் சுவையான பாடல்கள் உள்ளன.

கவிதையும் காவியமும்

ஆ-கிருஷ்ணராஜா என்னும் தமிழவேள். வெ-புலவர் பதிப் பகம், புதுச்சேரி-3. இளங்கோ அச்சகம், புதுச்சேரி.1967.

உள்ளுறை-முதல் பகுதி. 'மணமகன்' சிறு காப்பியம். இரண்டாம் பகுதி: தமிழ் முதல் சிறுவனிடம் சிக்கிய பறவை வரையிலான 13 தலைப்புகளில் பல பாடல்கள் உள்ளன. பல இதழ்களில் வந்தவை.

கவிஞர் கண்ட ம.பொ.சி.

தொ-கவி கா.மு.ஷெரிப். இன்ப நிலையம், சென்னை. சௌந்தரா பிரிண்டர்ஸ்.1966. ம.பொ. சிவஞானம் அவர்களின் மணிவிழா மலர், 51 புலவர்களின் பாடல்கள் இடம் பெற் றுள்ளன.

# 5. நான்கு காலம் – 2

## பல்வேறு வகைச் சிற்றிலக்கியத் திரட்டுகள்

தமிழில் 96 வகைச் சிற்றிலக்கியங்கள் இருப்பதாகச் சொல்வர். இன்னும் கூடுதலாகவும் இருக்கலாம். 96வகைச் சிற்றிலக்கியங்களை 96 வகைச் சிறு பிரபந்தங்கள் என்று வடமொழிப் பெயர் இட்டுக் குறிப்பது வழக்கமாகிவிட்டது. பல சிற்றிலக்கியங்களைத் தொகுத்து ஒரு வெளியீடாகப் படைக்கும் நூலுக்குப் 'பிரபந்தத் திரட்டு' என்னும் பெயர் கொடுக்கப்பட்டுள்ளது. இப்பிரபந்தத் திரட்டில், ஒருவர் எழுதிய பிரபந்தங்களும் இருக்கும். பலர் எழுதிய பிரபந்தங்களும் இருக்கும். சில பிரபந்தங்களுடன் தனிப் பாடல்கள் சிலவும் இருப்பதுண்டு. மற்றும், முற்காலம் – இடைக்காலம் – பிற்காலம் – இருபதாம் நூற்றாண்டு – ஆகிய நான்கு காலத்து நூல்களின் திரட்டும் இந்தத் தலைப்பில் இடம் பெற்றிருக்கும். இனி நூல் (பிரபந்தத்) திரட்டுகள் வருமாறு:—

### திருமயிலைப் பிரபந்தத் திரட்டு

சென்னை–மயிலாப்பூர் இறைவர்மீது பாடிய நூல்களின் திரட்டு இது. தமிழக அரசு ஓலைச் சுவடி நூல் நிலையத்தில் உள்ளது. M.G.O.M.S. 27. முகவுரை – தி. சந்திர சேகரன். 15–12 1952. அச்சு–சென்னை அரசு அச்சுக் கூடம் 1953. இதில் நான்கு நூல்கள் உள்ளன. இனி, நூல்களின் பெயர்களும் ஆசிரியர்பெயர்களும் நூல் நிலைய விவரக் குறிப்பும் முறையே வருமாறு:-

1. திருமயிலைச் சிங்கார வேலர் பிள்ளைத் தமிழ். ஆசிரியர்–தாண்டவராயர்; 18ஆம் நூற்றாண்டினர் இவர். தி.ம.பி. தமிழ்-R.861, 887 எண்கள் கொண்டது. இதன் காகிதப் பிரதி, 1925–26-இல் மயிலாப்பூர் சி.வி. ஜம்புலிங்கம் பிள்ளையிடம் விலைக்கு வாங்கியது.

2. திரு மயிலைச் சிங்கார வேலர் கோவை–ஆசிரியர் அம்பலவாணக்கவிராயர். R.884. இதன் காகிதப் பிரதியும் ஜம்புலிங்கம் பிள்ளையிடம் 1925-26 இல் விலைக்கு வாங்கியது. தி.ம.உ.

வெண்பா R.883, தி.ம. வெண்பா R.886 ஆகிய காகிதப் பிரதி களும் அவரிடமிருந்து வாங்கியவை.

3. திரு மயிலை உவமை வெண்பா. ஆசிரியர்: நெல்லை நடலிங்கக் கவிராசர். R.883. காகிதப் பிரதி 1925-26 இல் ஜம்புலிங்கம் பிள்ளையிடம் விலைக்கு வாங்கியது.

4. திரு மயிலை வெண்பா-ஆசிரியர் பெயர் தெரியவில்லை. R.886. காகிதப் பிரதி 1925-26இல் ஜம்புலிங்கம் பிள்ளையிடம் விலைக்கு வாங்கியது.

இந்த நான்கு நூல்களும் 1953 ஆம் ஆண்டு அச்சிடப் பெற்றது. இந்நூல் ஓர் ஊர் பற்றிய திரட்டு.

மீனாட்சி சுந்தரம் பிள்ளை பிரபந்தத் திரட்டு

திருவாவடுதுறை ஆதீனத்தின் உதவி கொண்டு, உ.வே.சா. அவர்களால், சென்னை கமர்சியல் அச்சுக் கூடத்தில் அட்சய-ஆனி-1926 ஆம் ஆண்டு இரண்டாம்.பதிப்பாக அச்சிட்டு வெளி யிடப் பெற்றது. உ.வே.சா. 21-6-1926 நாளிட்டு முகவுரை எழுதியுள்ளார்கள். 'திருத்துருத்திக் கச்சி விநாயகர் பதிகம்' முதல் 'பொன்னூசல்' வரையுள்ள 46 நூல்களின் திரட்டு இது. மொத்தப் பாடல்கள்-5201. இதன் ஆசிரியர்-திரிசிர புரம் மகா வித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்கள்.

மீனாட்சி சுந்தரம் பிள்ளையின் நூல்கள் சிலவற்றைத் தியாகராசச் செட்டியார் முதலியோர் முன்பு பதிப்பித்துள்ள னர். இந்தத் தொகுப்பின் முதல் பதிப்பை உ.வே.சா. 1910 ஆம் ஆண்டு பதிப்பித்தார். இந்த இரண்டாம் பதிப்பில் முதல் பதிப்பின்போது முழுதும் கிடைக்காத நூல்கள் சிலவற் றின் மற்ற பாடல்களும், முழு நூல்கள் சிலவும் சேர்க்கப்பெற் றுள்ளன. சீகாழிக் கோவை, வியாசைக் கோவை, திருவூறைப் பதிற்றுப்பத் தந்தாதி, பொன்னூசல் முதலிய நூல்கள் சில புதிதாகச் சேர்க்கப் பெற்றுள்ளன.

மீ.சு.பி.பி.திரட்டு

திருவாவடுதுறை ஆதினம் அம்பல வாண தேசிகரிடம் இருந்த படி. (பிரதி இது-உ.வே. சாமிநாதையர் பதிப்பு.

சென்னை வைஜயந்தி அச்சுக் கூடம். சாதாரண ஆண்டு. 1910. உள்ளுறை: திருத்துருத்தி கச்சி விநாயகர் பதிகம் முதல், பூவாளூர்ப் பதிற்றுப்பத்தந்தாதி வரையிலான 40 நூல்களின் தொகுப்பு இது. பிள்ளையவர்கள் மலை மலையாக எழுதிக் குவித்துவிட்டிருக்கிறார். இது ஓர் ஆசிரியரின் திரட்டு.

கந்தசாமி பிள்ளை பிரபந்தத் திரட்டு

வடலூர் வள்ளலாரின் அடியவர் காரணப்பட்டு ச.மு. கந்தசாமி பிள்ளை இயற்றிய நூல்களின் திரட்டு இது. 'சரித் திரக் கீர்த்தனை' முதல் 'கற்புடைப் பெண்டிர்' வரையிலான 24 நூல்களின் திரட்டு இது. ஆய்வு: சிதம்பரம் ஈசானிய மடம் இராமலிங்க சுவாமி, சென்னை. சூலை, சன் ஆப் இந்தியா அச்சுக் கூடம், 1923.

திருப் போரூர்ச் சந்நிதி முறை

திருப்போரூர் செங்கல்பட்டு மாவட்டத்திலுள்ள ஒரு முருகன் திருப்பதி. சென்னைக்கு ஓரளவு அண்மை என்று கூறலாம். அந்த வட்டாரத்தில் மிகவும் புகழ் பெற்ற திருப்பதி யாகும் இது. இப்பதி முருகன் மீது சிதம்பர சுவாமிகள் என்னும் அருளாளர் பாடியுள்ள சிறு சிறு நூல்களின் தொகுப்பாகும் இது. இதைப் பலர் பதிப்பித்துள்ளனர். சில காண்பாம்:

திருப் போரூர்ச் சந்நிதி முறை

இந்தப் பெயரிலுள்ள ஒரு பதிப்பின் விவரமாவது:- காஞ்சி சபாபதி முதலியார் முன் பரிசோதித்த பிரதிக்கு இணங்க, திரு வெண்காடு ஆறுமுக சுவாமிகள் பதிப்பித்தது. பிரமோதூத- மார்கழி. இது மிகவும் பழந்தாள். திருப்போரூர் முருகன் மீது சிதம்பர சுவாமிகள் பாடியுள்ள நூல்கள் வருமாறு:

பிள்ளைத் தமிழ், அலங்காரம், மாலை, தாலாட்டு, திருப்பள்ளி யெழுச்சி, பெரிய கட்டியம், சின்ன கட்டியம், எச்சரிக்கை, வண்ணத் தாழிசை, மட்டு விருத்தம், கலி விருத் தம், பெருங்கழி நெடில் விருத்தம், குயில் பத்து, கிளிப் பத்து, வண்டு விடு தூது, கட்டளைக் கலிப்பா, கொச்சகக் கலிப்பா, ஊசல், விருத்தக் கலித்துறை, அட்டகம், பெருங்கழி நெடில்

விருத்தம், குறுங்கழி நெடில் விருந்தம், சந்தக் கழி நெடில் விருத்தம், கட்டளைக் கலித்துறை, நேரிசை வெண்பா, அடைக் கலப் பத்து—ஆகியவை.

ஆக இருபத்தாறு சிறு நூல்கள் இத் தொகுப்பில் உள்ளன. என்னிடம் மக்கிப் போன பழுப்புத்தாளாக உள்ள ஒரு பதிப்பு உள்ளது. அதில் முன்தாள்கள் இல்லாமையால், பதிப் பித்தோர் முதலிய விவரங்கள் தெரிய வில்லை. என்னிடம் உள்ளது, மேற் சொன்ன பதிப்பாகத்தான் இருக்கக் கூடும், உரையும் உண்டு.

திருப் போரூர்ச் சந்நிதி முறை

மேற் சொன்ன பதிப்பை பின்பு ஒரு முறை காஞ்சி சபாபதி முதலியார் வெளியிட்டார். சரசுவதி அச்சுக் கூடம், சென்னை. சாலிவாக சகாப்தம்: 1761 – ஏவிளம்பி – மாசி. விலை ரூ.3-00.

திருப் போரூர்ச் சந்நிதி முறை

ஆய்வு—காஞ்சி சபாபதி முதலியார். வெளியிடு-சிந்தாதிரிப் பேட்டை கேசவ முதலியார். பிரபாகர அச்சுக் கூடம், சென்னை. நள-ஆனி. பழம் பதிப்பு,

திருப் போரூர்ச் சந்நிதி முறைத் திரட்டும்
அரும்பத வுரையும்

தொகுப்பு-வெளியிடு-மா. துரைசாமி முதலியார். சாது அச்சுக் கூடம் சென்னை. இது சுருக்கமான—சிறு நூல்களின் தொகுப்பு.

திருப் போரூர்ச் சந்நிதி முறை

நான் பார்த்த இப்பதிப்பில் முன்னும் பின்னும் சில தாள் கள் இல்லை. இருக்கும் வரையும் இறுதிப்பக்கம்-502. நீள-அகல-உயரத்தால் பெரிய நூல் இது.

மஸ்தான் சாகிபு திருப்பாடல் திரட்டு

மஸ்தான் சாகிபு இசுலாமியப் பேரறிஞர். அவர் பாடிய பாடல்களின் திரட்டு இந்த நூல். இது, கி.பி. 1870, 1873, 1877,

1887, 1889, 1893 ஆம் ஆண்டுகளில் பதிப்பிக்கப்பட்டுள்ளது. கி.பி.ஆண்டு போடாமல் துந்துபி எனத் தமிழ் ஆண்டு இட்ட பதிப்பும் உள்ளது. எந்த ஆண்டுமே போடாத பதிப்பும் உள்ளது.

வேலாயுத முதலியார் என்பவர் 1887 ஆம் ஆண்டிலும், தியாக ராசு சுவாமி என்பவர் 1893 ஆம் ஆண்டிலும், சுப்பிர மணிய சுவாமி என்பவர் 1893 ஆம் ஆண்டிலும், செய்கு அப்துல் காதிர் என்பவர் துந்துபி ஆண்டிலும் பதிப்பித்துள் ளனர்.

ஆண்டு எதுவும் போடாத ஒரு பதிப்பு என்னிடம் உள்ளது இதன் முதல் பக்கச் செய்தி அதில் உள்ளவாறு அப்படியே வருமாறு:

பிஸ்மில்லாஹி
குணங்குடி மஸ்தான் சாஹிபு அவர்கள்
திருவாய் மலர்ந்தருளிய
திருப்பாடல் திரட்டு

இஃது, கோட்டாறு-மகாவித்துவான் கா.ப. ஷெய்குத் தம்பிப் பாவலரவர்கள் முன்னிலையில் பிரதிக்கிணங்க B. இரத்தின நாயகர் ஸன்ஸ் வெளியிட்டது. சென்னை-இதன் விலை ரூ.3-50.

இவ்வளவு எழுதியவர்கள் ஆண்டு குறிப்பிடாதது வியப் பும் வேதனையும் அளிக்கிறது.

இந்தப் பதிப்பில் தொடக்கத்தில் குணங்குடி மஸ்தான் சாஹிபு மீது, திருத்தணிகை சரவணப் பெருமாள் ஐயர் பாடிய நான்மணி மாலை, ஐயா சுவாமி முதலியார் பாடிய தோத்திரப்பா, கீர்த்தனம், வேங்கடராயப் பிள்ளை பாடிய தோத்திரப்பா, சபாபதி முதலியார் பாடிய பஞ்ச ரத்தினம், செய்கப்துல் காதிர் நயினார் லெப்பை ஆலிம் புலவர் பாடிய ஒருபா ஒருபஃது, அவரே பாடிய தோத்திரப்பா, அவரே பாடிய வாயுறை வாழ்த்து-ஆகிய நூல்கள் உள்ளன. இவை யெல்லாம் மஸ்தான் சாகிபு மீது பிறர் பாடிய தொகுப்புகள்.

இவற்றைத் தொடர்ந்து, மஸ்தான் சாகிபு பாடிய நூல்கள் உள்ளன. அவையாவன:

குரு வணக்கம், ஆநந்தம், முகியித்தின் சதகம், அகத்திசர் சதகம், ஆனந்தக் களிப்பு, நிராமயக் கண்ணி, பராபரக் கண்ணி, றகுமான் கண்ணி, எக்காலக் கண்ணி, கண்மணி மாலைக் கண்ணி, மனோன்மணிக் கண்ணி, நந்திஸ்வரக் கண்ணி, கீர்த்தனைகள்,—முதலிய சிறு சிறுநூல்கள் தொகுக்கப்பெற்றுள்ளன. ஆக மொத்தப் பாடல்கள் 1011 ஆகும். நூலின் இறுதியில் வாழி விருத்தம் என்னும் தலைப்பில் உள்ள இறுதிப் பாடல் வியப்பு தருகிறது. அது வருக:

''வாழிமேல் வாழி வாழி மருள்வாழி வாழி வாழி
வாழிமேல் வாழி வாழி மருணேயம் வாழி வாழி
வாழிமேல் வாழி வாழும் சிவஞானம் வாழி வாழி
வாழிமேல் வாழி வாழும் குணங்குடி வாழி வாழி''

மற்றுமொரு பதிப்பு

கோட்டாறு கா.ப. ஷெய்குத் தம்பிப் பாவலர் அவர்கள் பரிசோதித்த பிரதிக்கு இணங்கியது. அ. அரங்கசாமி முதலியார் குமாரர் அமரம்பேடு இராசரத்தின முதலியார் வெளியீடு. மலர் மகள் விலாச அச்சுக்கூடம், சென்னை. 1948. சுத்தப் பதிப்பு–விலை ரூபா 3. 23, தாண்டவ ராயப்பிள்ளை வீதி. 30—9—48.

குணங்குடி மஸ்தான் சாகிபின் சில பாடல்களில், தாயுமானவர் பாடல்களின் சாயலைக் காணலாம்.

சுப்பிரமணியர் தோத்திரப் பாக்கள்

ஆசிரியர்: காஞ்சி சிங்காரவேலு தேசிகர். சென்னை பூமாது விளக்க அச்சுக் கூடம், 3 ஆம் பதிப்பு. தாரண– வைகாசி–1884. மக்கிய பழந்தாள் பிரதி.

நூல்கள்: தணிகை சந்தப் பாமாலை, தணிகாசல மாலை, திருப் போரூர்த் தோத்திரப் பாமாலை, காஞ்சி குமரகோட்டப் பஞ்ச ரத்திநம், குமர கோட்டம், நாகமாலை தோத்திரப்

பாமாலை, விராலி மலை தோத்திரப் பா மாலை, திருப்பரங் கிரித் தோத்திரப் பாக்கள், திருச் செந்தூர்த் தோத்திரப் பாக்கள், பழநி தோத்திரப் பாக்கள், வேல் பத்து, மயில் பத்து, அடைக்கலப் பத்து-ஆகியன.

பன்னிரு திருமுறைத் திரட்டும் சைவத் தோத்திர மஞ்சரியும்

உள்ளுறை: 12 திருமுறைகளிலிருந்து பாடல்கள், விநாயகர் அகவல், திருமுருகாற்றுப் படை, கந்தர் கலி வெண்பா, சில திருப்புகழ்கள், கந்த புராணம்—அபிராமி அந்தாதி முதலிய நூல்களிலிருந்து சிற்சில பாடல்கள் - ஆகியவற்றின் தொகுப்பு. 400 பக்கங்கட்கு மேற்பட்ட நூல். ஆயிரத்திற்கும் மேற்பட்ட பாடல்கள்.

இது, திருமலை ராயன் பட்டினம் கு.சா.சு. சுப்பிரமணிய முதலியார் மணிவிழாமலர். தொகுப்பு: க. சோமசுந்தரம் செட்டியார். வெளியீடு: சா.சு. நடேச முதலியார்.

கரையேற விட்ட நகர் நூல் திரட்டு

அப்பரடிகள் கடலிலிருந்து கரையேறிய ஊரான வண்டிப் பாளையம் என்னும் கரையேற விட்ட நகர் மீது பாடிய நூல் களின் திரட்டு. வெளியீடு-கற்பக விநாயகக் கடவுள் தரும கைங்கரியம்-சு.சொக்கலிங்கம் பிள்ளை. கலா ரத்ன அச்சியந் திர சாலை, சென்னை. சோபகிருது-புரட்டாசி.

நூல்கள்: சிதம்பரம் ஈசானிய மடம் இராமலிங்க சுவாமி கள் இயற்றிய கரையேற விட்ட நகர் கற்பக விநாயகர் இரட்டை மணி மாலை, திருநாவுக்கரசர் நவமணி மாலை, வா. இராசப்ப முதலியார் இயற்றிய கற்பக விநாயகக் கடவுள் பஞ்ச ரத்தினம்—முதலிய நூல்களின் திரட்டு இது.

சங்கரலிங்கம் பிள்ளை பிரபந்தத் திரட்டு

ஆசிரியர்-சங்கரலிங்கம் பிள்ளை, மேல வீர ராகவ புரம், நெல்லை. ஆரியப் பிரகாசினி அச்சுக் கூடம், நெல்லை. 1887. உள்ளுறை: அகத்தியர் தோத்திரம், சொர்ன வயிரவி மாலை, பஞ்ச ரத்தின வராகி—முதலியன.

திருச்செந்தூர் நிறை

ஆ-சபாபதித் தொண்டர். வெ—திரு காமு செட்டியார். பூமகள் விலாச அச்சுக் கூடம். 1876. செந்தில் ஆண்டவர் பற்றிய அகவல், விண்ணப்பம், குயில்பத்து, பதிகங்கள், பல் சுவைப் பாடல்கள்.

சாமிநாத தாசர் திருப்பாடல் திரட்டு

தொ - துரைசாமி யாசாரியார். மதராஸ் ரிப்பன் அச்சி யந்திர சாலை. 1899. உ-தணிகை முருகன்மீது கீர்த்தனங் கள், அகவல், மாங்கனிப் பதிகம், அருள் ஞானத் திருப்பதிகம், அருட்கண்ணி, நெஞ்சொடு முறையீட்டுக் கண்ணி.

சிதம்பர சுவாமிகள் தோத்திரப் பிரபந்தத் திரட்டு

ஆ-திருப்போரூர்ச் சிதம்பர சுவாமிகள். புஷ்பரதச் செட்டி யார் & சன்ஸ். கலாரத்நாகர அச்சுக் கூடம், சென்னை. 1897. உ-வேத கிரீசுவரர் பதிகம், குமார தேவர் நெஞ்சு விடு தூது, குமார தேவர் பதிகம்-முதலியன.

தோத்திர மாலை

ஆ - சிங்கார வேலுப் பிள்ளை. மனோன்மணி விலாச அச்சுக் கூடம், சென்னை, 1881. உ-சில பதிகப் பாமாலைகள், எந்நாட் கண்ணி, பூங்குயிற் கண்ணி, என்னேயோ என் கண்ணி, ஆனந்தக் களிப்பு.

சிவஞான பாலைய தேசிகர்மீது பிரபந்தங்கள்

வெ - இராமலிங்க சுவாமிகள். மிமோரியல் அச்சுக் கூடம், சென்னை-1881. உ-தாலாட்டு, நெஞ்சுவிடுதூது, திருப்பள்ளி எழுச்சி, பிள்ளைத் தமிழ், கலம்பகம்-ஆகிய ஐந்து நூல்கள்.

மழவை சுப்பிரமணிய ஐயர் பாடல் திரட்டு

ஆ - மழவை சுப்பிரமணிய ஐயர். வித்தியா வர்த்தனி அச்சுக் கூடம். 1881. முருகனைக் குறித்துப் பாடிய சரசக் கழி நெடில் விருத்தம், முருகன் — வள்ளி தர்க்கம் பற்றிய 'வல்லி

குமார சம்வாதம், முருகன்- தேவயானை வாதம் பற்றிய 'குமாரதேவ குஞ்சரி சம்வாதம் ஆகியன உள்ளன. இவை, பிராமணர் வீட்டுத் திருமணங்களில் சுமங்கலிகள் பாடுவனவாகும்.

நவநீத புஞ்சம்

ஆ - செய்யிது முகியித்தின் கவிராசர். தொ. கண்ணகுமது மகுதூ முகம்மதுப் புலவர். காட்டியன் அச்சுக்கூடம், சென்னை. 1887. உ - றகுமான் மீது முனாஜாத்து பதிகம், றசூலுல்லாமீது முனாஜாத்து, முகியித்தின் ஆண்டவர் பிள்ளைத் தமிழ், திருப்புகழ், நபி நாயக மாணிக்கமாலை- முதலிய நூல்கள்.

நவநீதம்—புதுமை; புஞ்சம்—குவியல், திரட்டு; அதாவது, நவநீத புஞ்சம் என்றால் புதிய திரட்டு என்பது பொருள்.

ஞானா வர்த்தக தோத்திராட்டகம்

அட்டகம்=எட்டு. இது எட்டு நூல்களின் திரட்டாகும். தொ-ரா. சிறிவாச முதலியார். சுஜந ரஞ்சனி முத்திராட்சர சாலை சென்னை. 1883. நூல்கள்: திரு மந்திரப் பத்து, வாசுதேவப் பத்து, ஆத்த கிரி யருளாளர் பத்து, பரமோத்திரப்பத்து, இராமாநுசப் பத்து, பார்த்த சாரதி ஊசல், உடையவர் பஞ்சரத்தினம், உடையவர் கீர்த்தனைகள் - ஆகிய எட்டு நூல்கள்.

துரோபதை யம்மை சந்நிதி முறை விளக்கம்

ஆ-சௌந்தர ராச உடையார். தொ-சந்திர சேகர உபாத்தியாயர். லார்டு ரிப்பன் அச்சுக் கூடம், கும்பகோணம், 1892. நூல்கள்: துபோபதையம்மன் திருமந்திரம், தியான சுலோகம் முதலிய சிறு சிறு நூல்களின் தொகுப்பு.

பாடு துறை

ஆ - தத்துவ ராயர். தொ-சீர்காழி நமச்சிவாய பிர்மம். வர்த்தமான தரங்கிணி அச்சுக்கூடம், சென்னை-1874. திருவடி மாலை முதல் பல நூல்கள் பல பொருள் பற்றியவை. பல வகைப் பாக்களால் ஆனவை. இந்நூல், முன்பே ஒரு முறை

கொன்றை மாநகரம் அருணாசல முதலியாரால் பதிக்கப்பட்டுள்ளது. ஆண்டு தெரியவில்லை.

பள்ளி கொண்டான் பிள்ளை பிரபந்தத் திரட்டு

ஆ - கோ. பள்ளி கொண்டான் பிள்ளை. தொ - இராமசாமி நாயுடு & செல்வக் கேசவராய முதலியார். செங்கல்வராயன் ஆர்பனேஜ் அச்சுக்கூடம், சென்னை. 1899. உ—மணவாள மாமுனிகள் நாமமாலை முதல் தொண்டை நாட்டுத் திருப்பதிப் பஞ்ச ரத்னங்கள் வரையிலான 22 நூல்களின் திரட்டு இது. திருமால், ஆழ்வார்கள், ஆச்சாரியார்கள் ஆகியோர் மீது பாடப்பெற்ற 'துதி கவிகள்' இதில் உள்ளன.

பல முறைத் திரட்டு

ஆ - பெருமாள் தொண்டர். தொ - தண்டு முத்தப்பச் செட்டியார் & முத்துவேல் முருகப்பச் செட்டியார். சின்னையா நாடார் அச்சியந்திரசாலை. 1888. உ - வாணிபுரி, வயலூர், திருத்தணிகை முதலிய திருப்பதிகளின் முருகன்மீது பாடிய 16 நூல்களின் திரட்டு. முதல் நூல் - வாணிபுரி பஞ்சரத்தினம். இறுதி நூல் - கீர்த்தனைகள்.

பகவத் தியானக் கிரண மாலிகை

ஆ - ஆ.மு. மாரிமுத்து தாசப் பண்டிதர். செயின்ட் ஜோசப் பிரஸ், சென்னை. மே, 1888. உ - திருமால் புகழ் போற்றும் சிறு நூல்களின் தொகுப்பு. இது இரண்டு பிரிவுகளாய் உள்ளது. முதல் பிரிவில், உயிர் வருக்கத் தேவாரப் பதிகம், வைகுந்தன் அட்டகம், நாராயணன் கண்ணிகள், மனத்தொடு கிளத்தல், எக்காலக் கண்ணிகள் ஆகியன உள்ளன. இரண்டாம் பிரிவில், பகவத் தியானக் கீர்த்தனைக் கவிதைகள் உள்ளன.

சென்னைபுரி சிவசுப்பிரமணியர் மணிப்பாக் கொத்து

ஆ-பிராயங் குப்பம் முத்துலிங்கப் பிள்ளை. எக்ஸெல் குலியர் அச்சுக் கூடம், சென்னை. 1884. உ—சென்னைபுரி

முருகன் தோத்திரங்கள்—ஊசல், கொம்மி, லாலி, பஞ்சகம் முதலியன.

சிங்கப்பூர்ப் பிரபந்தத் திரட்டு

ஆ-இராம கு.மெ. மெய்யப்பச் செட்டியார். வெ—முத்தையச் செட்டியார் மதராஸ் ரிப்பன் அச்சியந்திரசாலை, சென்னை. 1900. நூல்கள்- சிங்கப்பூர்ச் சித்திவிநாயகர் நவமணி மாலை, சுப்பிரமணிய சுவாமி பிள்ளைத் தமிழ், சண்முக மாலை, சுப்பிரமணியர் பதிகம், அங்கயற் கண்ணி மாலை, சுந்தரேசர் திருவிரட்டை மணிமாலை, அநுகூல விநாயகர் மாலை அநுகூல விநாயகர் பதிகம் - ஆகியவை உள்ளன.

பழநி சிவ சுப்பிரமணியக் கடவுள் கவித் திரட்டு

ஆசிரியர் பெயர் தெரியவில்லை. வித்தியாவினோத அச்சுக் கூடம். 1879. இதில், மாதப் பாட்டு (பன்னிருமாதங்கட்கும்) வாரப் பாட்டு (ஏழு நாளைக்கும்), ஆனந்தக் களிப்பு ஆகியவை உள்ளன.

சுப்பிரமணியர் பிரபந்தக் கொத்து

வெளியீடு—இராமசாமிச்சுவாமி. மிமோரியல் அச்சுக்கூடம். சென்னை - 1888. நூல்கள்: அருணகிரிநாதரின் கந்தர் அலங் காரம்—கந்தர் அனுபூதி—கந்தர் அந்தாதி, சிவப்பிரகாசரின் செந்தில் நிரோட்டக யமக அந்தாதி, சிற்றம்பல நாடிகளின் திருச் செந்தூர்ச் சுப்பிரமணியர் அகவல், குமர குருபரரின் கந்தர் கலி வெண்பா, நக்கீரரின் திருமுருகாற்றுப் படை, தேவ ராயரின் கந்தர் சஷ்டி கவசம்—ஆகியன. அனைத்தும் முருகன் மீது பாடப்பெற்றவை.

சோடசப் பிரபந்தம்

சோடசம் என்பது 16 என்னும் எண்ணைக் குறிக்கும். 16 நூல்களின் திரட்டு இது. இந்நூல்களின் ஆசிரியர்—முது குளத் தூர் பூ ஆறுமுகக் கவிராயர். கலா ரத்நாகரம் அச்சுக் கூடம், சென்னை. 1899. விநாயகர், முருகன், சிவன், உமாதேவி, அடி யார்கள் ஆகியோரைப் பற்றிய நூல்கள் இவை. பல்வேறு பாவகைகளால் ஆனவை.

விநாயகர் திரிவு வெண்பா அந்தாதி முதல் அரிச்சந்திர வண்ணம் முடிய 16 நூல்கள் உள்ளன.

அல்லி மரைக்காயர் பிரபந்தக் கொத்து

தொகுப்பு-வா. குலாம் காதிறு நாவலர். கலா ரத்ந அச்சுக் கூடம், சென்னை. ஹக்குப் பேரில் பஞ்ச ரத்தினம் முதல் நெஞ்சறிவுறுத்தல் வரை 10 நூல்களின் கொத்து இது.

ஐதுருசு நயினாப் புலவர் பாடல் திரட்டு

தொகுப்பு-மமுது முகமதுப் புலவர் & அல்லாப்பிச்சைப் புலவர். வித்தியாவர்த்தன அச்சுக் கூடம், சென்னை. 1880. நயினாப் புலவர் பாடிய பல பாடல்களும் பல சிறு நூல்களும் இந்தத் திரட்டில் உள்ளன.

கணபதி மாலை

ஆசிரியர்- இ.ரா. குப்பாண்டிப் புலவர். தொகுப்பு-சுப்பிர மணியப் பிள்ளை. சிந்தாமணி யந்திரசாலை-1886. கணபதி பற்றிய பல சிறு நூல்களின் தொகுப்பு இது.

மெய்ஞ் ஞானத் திருப்பாடல் திரட்டு

ஆசிரியர்: ஷெய்கு முகியித்தின் மலுக்கு முதலியார் மாணவர் ஞானியார் சாகிபொலியுல்லா. சென்னை—கலா ரத்நாகரம் அச்சுக் கூடம். ஆங்கில ஆண்டு-1898. ஹஜரி 1316-முஹர்ரம் மாதம்.

ஆசிரியர் வரலாறு: பிறப்பு - ஹஜரி 1167. இறப்பு - ஹஜரி 1209. ஊர்-திருக்கோடையம்பதி. இவரைப் பெற்றோர்கள் தவம் கிடந்து பெற்றனராம். இவர் பல அற்புதங்கள் செய்துள்ளாராம்.

ஆசிரியர் இயற்றிய பல தனிப் பாடல்கள்—பல நூல்கள் ஆகிய வற்றின் திரட்டு இது. இறுதியில் இவர்மேல் பாடப் பெற்ற மூன்று நூல்கள் உள்ளன. அவை ஆசிரியர் பெயருடன் வருமாறு:—

1. கருப்பையா பாவலர் இயற்றிய திருக் கோட்டாற்றுக் கலம்பகம்.
2. சாத்தன் குளம் சி.வெ. அரவ மூர்த்தி இயற்றிய தோத்திரப் பாக்கள்.
3. கமுதி—மீறானயினார் புலவர் இயற்றிய தியான மஞ்சரி - ஆகியவை.

இந் நூலாசிரியரின் ஆசிரியர் பெயர், ஷெய்கு முகியித்தீன் மலுக்கு முதலியார் என உள்ளது. தமிழ் நாட்டுக் கிறித்துவர்கள் சிலர், / தாம் மதம் மாறினும், சாதிப்பட்டத்தைப் பெயருக்குப் பின்னால் சேர்த்துக் கொள்வதுண்டு. காட்டு: வேதநாயகம் பிள்ளை, சவரி ராயலு நாயகர் முதலியன. இது போலவே, தமிழர் இசுலாம் மதத்திற்கு மாறினும் தம் சாதிப் பட்டத்தைப் பெயருக்குப் பின்னால் போட்டுக் கொள்வது உண்டு என்பதை, இந்த 'மலுக்கு முதலியார்' என்பதைக் கொண்டு தெரிந்து கொள்ளலாம். ஆனால் கிறித்தவர்கள் சாதிப் பட்டம் போட்டுக் கொள்ளும் அளவு, இசுலாமியர் போட்டுக்கொள்வதில்லை.

மாம்பழக் கவிச்சிங்க நாவலர் பிரபந்தத் திரட்டு

பழநி. மு. மாம்பழக் கவிச்சிங்க நாவலர் இயற்றிய நூல்களின் தொகுப்பு இது. தொகுப்பு: பெரியகுளம் எம்.பி பழநிசாமி யாசாரியார். மதுரை விவேக பாநு அச்சி யந்திர சாலை. முகவுரை- 3—6—1908. இது இரண்டு பாகம். கொண்டது.

முதல் பாகம்: விநாயகமூர்த்தி பதிகம் முதல் ஆனந்த சிந ரசம் முடிய 15 நூல்கள் உள்ளன. பிறகு, மாம்பழக் கவிச் சிங்க நாவலர் துதிப் பாசுரத் தொகை என்னும் தலைப்பில் தனித்தனித் தோத்திரப் பாக்களின் தொகுப்பு உள்ளது. இறுதியில் சிங்கார ரச மஞ்சரி உள்ளது.

இரண்டாம் பாகம்: சந்திரவிலாசம் என்னும் நூலும் தனிச் செய்யுட் கோவை என்னும் தொகுப்பும் உள்ளன. நாவலரின் பிறப்பு 1836; இறப்பு 1884.

சங்க இலக்கியம்
[எட்டுத் தொகையும் பத்துப் பாட்டும்]

வெளியீடு:சைவ சித்தாந்த மகா சமாசம், சென்னை. சாது அச்சுக் கூடம்-சென்னை. மொத்தப் பாடல்கள் – 2381. இரு பாகங்கள் எனக் குறிப்பிடப்பட்டு, ஒரே கட்டடம் (பைண்ட்) செய்யப்பட்டுள்ளது. முதல் பாகம்: ஒன்று (1) முதல் 1443 பாடல்கள் வரை; இரண்டாம் பாகம்: 1444 முதல் 2381 வரை. காலம்: ஏப்ரல் 1940.

முதலில் பல தொகை நூல்கட்கும் பாரதம் பாடிய பெருந் தேவனார் பாடிய கடவுள் வாழ்த்துப் பாடல்கள் உள்ளன. அடுத்து, புலவர் பெயர்களை அகர வரிசையில் அடுக்கி, அவர வர் பாடல்களை அவரவர் பெயர்கட்குக் கீழே தந்துள்ளனர்.

அகம்பன் மாலாதனார் முதல் வேம்பற்றூர்க் குமரனார் வரை உள்ள 473 புலவர்களின் பாடல்கள், அவரவர் பாடிய நூற் பெயர்களுடன் தரப்பெற்றுள்ளன. இறுதியில் ஆசிரியர் பெயர் காணாப் பாடல்கள் உள்ளன. எல்லாவற்றுக்கும் இறுதியில், பதிற்றுப் பத்து-பரிபாடல் ஆகிய நூல்களின் கிடைக் காத பாடல்கள் சில, புறத்திரட்டு என்னும் தொகுப்பு நூலி லிருந்தும் உரையாசிரியர்களின் உரைகளிலிருந்தும் கிடைத்தன வாக அமைக்கப்பட்டுள்ளன.

பாடல்கள் 1 முதல் 2381 வரை இத்தொகுப்பில் வரிசைப் படுத்தப்பட்டுள்ளன. ஒவ்வொரு பாடலிலும் தொடர் வரிசை எண்ணுக்கு நேராக அந்தந்த நூலின் தொடர் வரிசை எண்ணும் தரப்பட்டுள்ளது. இந்த அமைப்பின் மாதிரிக்கு ஒன்று காண்பாம்:—

70. உறையூர் முதுகண்ணன் சாத்தனார்

355. குறுந்தொகை—133. குறிஞ்சி

''புனவன் தொடவைப் பொன்போல் சிறுதினைக்
கிளிகுறைத்து உண்ட கூழை யிருவி
பெரும்பெயர் உண்மையின் இலையொலித் தா அங் கென்

உரஞ் செத்து முளேனே தோழியென்
நலம்புத் துண்ட புலம்பி னானே''

வரைவு நீடித்த விடத்துத் தலைமகள் சொல்லியது.

இந்த அமைப்பில், முதலில் உள்ள 70 என்னும் எண், 473 புலவர்களுள் 70ஆம்புலவர் உறையூர் முது கண்ணன் சாத்தனார் என்பதை அறிவிக்கின்றது. அடுத்துக் கீழே உள்ள 355 என்பது, 2381 பாடல்களில் இந்தப்பாடல் 355 ஆம் பாடல் என்பதைக் குறிக்கின்றது. குறுந்தொகை-133 என்னும் எண், குறுந்தொகை என்னும் நூலின் 133 ஆம் பாடல் என்பதைக் குறிக்கிறது. எண்ணையடுத்த 'குறிஞ்சி' என்பது, இந்தப் பாடல் குறிஞ்சித் திணையைச் சேர்ந்தது என்பதை அறிவிக்கிறது. பாடலின் இறுதியில் உள்ளது, இந்தப் பாடலின் துறையை அறிவிக்கிறது.

இந்தத் தொகுப்பு மிகவும் சிறப்பானது—பயனுள்ளது. தொகுப்பு ஒருகலை என்பதற்கு இது தக்கஎடுத்துக்காட்டாகும்.

சங்க இலக்கியம்
[பாட்டும் தொகையும்]

தொகுப்பும் பதிப்பும்: எஸ். வையாபுரிப்பிள்ளை. விற்பனை: பாரி நிலையம், சென்னை. இந்தத் தொகுப்பு இரண்டு பாகங்களாக அச்சிடப்பட்டுள்ளது. இரண்டாம் பதிப்பு: ஆகஸ்ட் 1967.

மொத்தப் பாடல்கள் 2381. முதல் பகுதி 1 முதல் 1443 வரை. இரண்டாம் பகுதி 1444 முதல் 2381 வரை. அமைப்பு, மேற் கூறியுள்ள தொகுப்பு போன்றதே.

திருச் செந்தூர்ப் பிரபந்தத் திரட்டு

தொகுப்பு: மு.ரா. அருணாசலக் கவிராயர். உரை உண்டு. மதுரை இராமச்சந்திர விலாச அச்சியந்திர சாலை. 1911. நூல்கள் ஆசிரியர் பெயர்களுடன் வருமாறு:

திருச்செந்தூர்த் தல புராணம் (ஆசிரியர் பெயர் தெரியவில்லை. திருச்செந்தூர்ப் பிள்ளைத் தமிழ்-பகழிக் கூத்தர். திருச்செந்தில் நிரோட்டகயமக அந்தாதி-நல்லாற்றூர்ச்

சிவப்பிரகாச அடிகளார். திருச்செந்தூர்க் கலம்பகம் - திருவாவடுதுறை ஆதீனம்-சுவாமி நாத தேசிகர். திருச் செந்தூர்க் கந்தர் கலி வெண்பா-குமரகுருபரர். அருணகிரிநாதரின் திருச்செந்தூர்த் திருப்புகழ். கந்த வருக்கச் சந்த வெண்பா-இராமநாதபுரம்-சரவணப் பெருமாள் கவிராயர்-ஆகியவை.

நூற்றெட்டுத் திருப்பதி அகவலும்
மணவாளமாமுனி நூற்றந்தாதியும்

ஆசிரியர்: இராம நாதபுரம்-சதாவதானம்—முத்து சாமி ஐயங்கார் என்னும் அனந்தாழ்வார். பதிப்புரை-ரா.நரசிம்மாச்சாரியர். சென்னை கணேச அச்சுக்கூடம். கீலக ஆண்டு. பதிப்புரை 1—10—1908. அகவல் - அந்தாதி ஆகிய இரு நூல்களின் தொகுப்பு இது.

தேரையர் சாத்திரத் திரட்டு

முன்னும் பின்னும் தாள்கள் இல்லை. சித்தர் தேரையர் மருத்துவம் பற்றிப் பாடியுள்ள சில நூல்களின் திரட்டு இது.

பகவத் தோத்திரப் பிரபந்தம்

ஆ-சென்னை பொ. மு. கேசவ சுப்புராயச் செட்டியார். கலாரத்நாகர அச்சுக்கூடம். 1905. நூல்கள்: இராமாயண சதகம், கண்ணபிரான் பதிற்றுப்பத் தந்தாதி, ருக்மணி பதிகம், கண்ணன் பிரான் நாமாவளி, கண்ணபிரான் தாலாட்டு, ருக்மணி தாலாட்டு, கண்ண பிரான் கொம்மி-ஆகியவை.

தத்துவராய சுவாமிகளின் அடங்கல் முறைப் பிரபந்தம்

சிதம்பரம் சண்முக சுந்தர விலாச பிரஸ். அட்சய-ஆவணி. திருத்தாலாட்டு முதல் அமிர்த சாகரம் வரையிலான 18 நூல்களின் திரட்டு.

பழனிக் குமாரப் பண்டாரம் பிரபந்தங்கள்

ஆ-கோட்டாறு வி.சு. பழனிக் குமாரப்பண்டாரம். பதிப்பு -மதுரை மு.ரா. அருணாசலக் கவிராயர். மதுரை விவேக பாநு அச்சியந்திரசாலை. 1912. நூல்கள்:- திருச்சுசிந்தைக் கலம்பகம், திருச் சுசிந்தை மும்மணிமாலை, கன்னியா குமரி இன்னிசைப் பாமாலை, திரு மருங்கை ஒரு திணைமாலை, திருவீரைக்கலம்

பகம், திரு வீரைப் புராந்தக மாலை, திரு வீரை மரகதவல்லி யம்மை பிள்ளைத் தமிழ், திரு வீரை மரகத வல்லி யம்மை இன்னிசைப் பாமாலை -ஆகியன.

செங்குந்தர் பிரபந்தத் திரட்டு

செங்குந்த முதலியார் வகுப்பைச் சார்ந்த சில நூல்களின் தொகுப்பு இது. பதிப்பு: வண்ணக்களஞ்சியம் காஞ்சி நாகலிங்க முனிவர். வெளியீடு: திருவாரூர் தி.க.ச.சபாபதி முதலியார், அட்சய -ஆவணி—1926. சிவகாமி விலாச அச்சுக் கூடம், சென்னை. (அப்போதைய) விலை ரூ.3.

இந்தத் திரட்டில் இடம் பெற்றுள்ள நூல்கள் ஆசிரியர் பெயருடனும் பாடல் எண்ணிக்கையுடனும் வருமாறு:

1. ஈட்டி எழுபது—ஒட்டக் கூத்தர்—70.
2. எழுப்பு எழுபது —ஒட்டக்கூத்தர்—70. வெட்டிய தலைகள் உயிர்த்தெழப் பாடியது. 13 பாடல்களே கிடைத்துள்ளன.
3. களிப்பு எழுபது — ஒட்டக் கூத்தரைப் பாராட்டி, அசரீரி, ஔவையார், கம்பர், புகழேந்தி, அம்பிகாபதி, சோழன், பாண்டியன், சேரன், அஞ்சனாட்சி, சைவாசாரியார் — ஆகியோர்பாராட்டிப்பாடிய பாடல்களின் தொகுப்பு இது. தொகுத்தவர் குலோத்துங்க சோழன் என்பர். ஒட்டக் கூத்தர் செங்குந்தர் ஆதலின், இத்தொகுப்பு இத்திரட்டில் இடம்பெற்றுள்ளது.
4. திருக்கை வழக்கம் —புகழேந்தி பாடியது என்பர் சிலர். 164 அடிக் கலி வெண்பா
5. (செங்குந்தர்) பிள்ளைத் தமிழ்— ஞானப்பிரகாச முதலியார் 101.
6. கலித்துறை மாலை யந்தாதி—நாகை முத்துக் குமார தேசிகர் (102).
7. தசாங்கம் —சத்திய சந்தர் — 10.
8. ஊசல் முதலியன — மயிலை நாதர் — 28.
9. திரு வொற்றியூர்ச் செங்குந்தர் விநாயக மாலை. படம் பக்க நாதன் — 32. இந்நூல் மட்டும் கடவுள்மீது பாடப் பெற்றுள்ளது.

10. செங்குந்த இலக்கிய மாலை — காஞ்சி வீரபத்திர தேசிகர் — 38.
11. செங்குந்த வேல் பதிகம் — குமாரசாமி முதலியார்—10.
12. செங்குந்தர் மரபு விளக்கம்—கார்த்திகேயமுதலியார்—30.
13. செங்குந்தர் மரபு விளக்கச் சூறாவளி — வீராசாமி முதலியார்—கலிவெண்பா — 118 அடிகள்.
14. செங்குந்த வேலவர் திருக்கை வழக்கத் தந்தாதி—(கலியுக வருடம்—4900) —ஆறுமுகப் பாவலர்—101.
15. செங்குந்த குலமாட்சி— தி.க.சபாபதி முதலியார்—18

இந்தப் பிரபந்தத் திரட்டுக்கு, கா. நமச்சிவாய முதலியார் முன்னுரை எழுதியுள்ளார்; மு. இராக வையங்கார் பிரபந்த ஆராய்ச்சியுரை எழுதியுள்ளார்; சுப்பிரமணிய தேசிகனார் இது பற்றிய கல்வெட்டுரை வரைந்துள்ளார். உ.வே. சாமிநாத ஐயர் முதலியோர் மதிப்புரைகள் அளித்துள்ளார்கள். ஒரு குலத்தின் பேரால் இப்படி ஒரு பிரபந்தத் திரட்டு இருப்பது வியப்பாயுள்ளாது.

திருவருட் பிரகாசனார் சந்நிதிமுறைப் பிரபந்தங்கள்

திருவருட் பிரகாசனா ராகிய வடலூர் இராமலிங்க வள்ளலார்மீது இயற்றப் பெற்ற நூல்களின் திரட்டு இது. ‘சற்குரு துதிகள்’ முதல் ‘தனி நேரிசை வெண்பா’ வரையிலான 15 நூல்களின் திரட்டு இது. ஆசிரியர்: தொழுவூர் வேலாயுத முதலியார். தொகுப்பு: தொழுவூர் வே. திருநாகேசுவர முதலியார். பதிப்பு: தொழுவூர் வே. செங்கல்வராய முதலியார். சென்னை சீவ காருண்ய விலாச அச்சுக்கூடம் - 1912.

ஆழ்வார் பிரபந்தம்

திரட்டு: பண்டிதர் பி.ஆர். கிருஷ்ண மாச்சாரியார். சென்னை கலாரத்ந அச்சுக் கூடம் - 1908.

வடிவழக நம்பி தாசர் என்பவர் மூன்று ஆழ்வார்கள் மீது இயற்றிய பிரபந்தங்களின் தொகுப்பு இது. ஆழ்வார் மூவர்: தொண்டரடிப் பொடியாழ்வார் (மீது) பிரபந்தம், குல சேகரப் பெருமாள் ஆழ்வார் (மீது) பிரபந்தம், திருப்பாணாழ்வார் (மீது) பிரபந்தம்.

மூவர் உலா

ஆசிரியர்: ஒட்டக் கூத்தர். பதிப்பு ஆசிரியர்: சென்னை அடையாறு பண்டிதர் அ.கோபாலையர். வெளியீடு: 'செந்தமிழ் மந்திரம்' புத்தக சாலை, மயிலை, சென்னை. தி.பி.என். பிரஸ் (The B.N.Press) சென்னை. குரோதன பங்குனி. 25-3-1926. சோழர் மூவரின் ஆசான் ஒட்டக் கூத்தர்.

உள்ளுறை: சோழர் மூவர்மீது ஒட்டக்கூத்தர் பாடிய உலா நூல்கள். அவை: விக்கிரம சோழன் உலா, குலோத்துங்க சோழன் உலா, இராசராச சோழன் உலா.

மற்றும் ஒரு பதிப்பு (மூவர் உலா)

மேற்கூறிய மூன்று உலாக்களையும் 'மூவர் உலா' என்னும் பெயரில், உ.வே. சாமிநாத ஐயர் மகன் கலியாண சுந்தர ஐயர் பதிப்பித்துள்ளார். வெளியீடு: கலா சேட்திரம், அடையாறு. சூலை 1946. இப்பதிப்பில் பழைய உரையும் குறிப்புரையும் உள்ளன.

பழநிப் பத்துப் பதிகம்

ஆ - கொல்லங்கோடு கு.முத்துசாமிக் கவிஞர். சி.வரதராசுலு நாயுடு பிரஸ், மதுரை. 1941. பழநி முருகன்மீது, கார்த்தி கேயப் பதிகம் முதல் வலம்புரிப் பதிகம் ஈறாகப் பத்துப் பதிகங்கள் பாடியுள்ளார்.

கவசத் திரட்டு

தொகுப்பும் பதிப்பும் - சிதம்பரம் ஜி. சுப்பிரமணியம். வித்தியானு பாலன யந்திர சாலை, சென்னை. பதினைந்தாம் பதிப்பு - சர்வதாரி-தை. உ- விநாயக கவசம், சிவகவசம், சக்தி கவசம், சரசுவதி தோத்திரம், இலக்குமி தோத்திரம்- ஆகியன.

அட்டப் பிரபந்தம்

அட்டம் (அஷ்டம்)= எட்டு. எட்டு நூல்களின் திரட்டு இது. ஆசிரியர்: சோழ நாட்டில் திருமங்கை என்னும் ஊரில் 12 ஆம் நூற்றாண்டில் தோன்றிய-தென்கலைப் பிரிவைச் சேர்ந்த பிள்ளைப் பெருமாள் ஐயங்கார். இவருக்கு அழகிய

மணவாள தாசர் என்ற வேறு பெயரும் உண்டெனப்படுகிறது.

உரை: பு.அ. கோவிந்தராச நாயகர். வெளியீடு – தமிழ் நூற்பதிப்புக் கழகம், புரசை, சென்னை. மாறன் அச்சகம், புரசை, சென்னை–1927. உள்ளுறை:-

திருவரங்கக் கலம்பகம், திருவரங்கத்து மாலை, திரு வரங்கத் தந்தாதி, சீரங்கநாயகர் ஊசல், சீரங்கநாயகியார் ஊசல், திருவேங்கடமாலை, திருவேங்கடத் தந்தாதி, அழக ரந்தாதி, நூற்றெட்டுத்திருப்பதி யந்தாதி என்பன. இறுதியில் இவ்வாசிரியர் இயற்றிய திருநறையூர் நம்பி மேக விடுதூது என்னும் நூலும் இப்பதிப்பில் உள்ளது. இஃதன்றி, இந்தப் பதிப்பில் எட்டுக்குமேல் ஒன்று உள்ளது.

மற்றொரு பதிப்பு

1957 ஆம் ஆண்டு, சென்னை மர்ரே&கம்பெனியார் சென்னை சென்ட்ரல் ஆர்ட் அச்சுக் கூடத்தில் அச்சிட்டு வெளி யிட்ட பதிப்பில், மேகவிடுதூதும் சீரங்கநாயகியார் ஊசலும் இல்லை. இப்பதிப்பில் சரியாக எட்டு நூல்கள் உள்ளன. பதிப் புரை: 15 – 8 – 1957.

மற்றும் ஒரு பதிப்பு

என்னிடம் உள்ள மக்கிப் பழுத்துப் போன தாளுடன் கூடிய பதிப்பின் முன் பக்கங்கள் இல்லை. இது, மேலே முதலில் கூறியுள்ள 1927 ஆம் ஆண்டுப் பதிப்பாக இருக்கலாம். நூலின் இறுதியில் அரும் பதவுரை இருக்கிறது.

மற்றும் ஒரு பதிப்பு

அச்சு: கணேச அச்சுக் கூடம், சென்னை. நள ஆண்டு. விலை ரூபா.4 திருவல்லிக்கேணி வை.மு.சடகோப இராமாநுசா சாரியாரும் சே. கிருஷ்ணமா சாரியாரும், வை.மு.கோபால கிருஷ்ணமாசாரியாரும் இயற்றிய விரிவான உரையுடன் இப் பதிப்பு உள்ளது.

பல்வகைப் பிரபந்தத் திரட்டு

1923 - இல் வெளியிட்ட ஔவையாரின் 'விநாயகர் அகவல்' முதலாக, 'திருமணக் கண் காட்சி ஒடம்' ஈறாக உள்ள

ஐம்பதிற்கும் மேற்பட்ட பல சிறு நூல்களின் தொகுப்பு. வடிவில் பெரிய குள்ளக்கட்டை.

வெற்றி நகரம் அன்னபூரணி அம்மாள் அட்டப்பிரபந்தம்

ஆ-கல்லல் மணிவாசக சரணாலய சுவாமிகள். திருச்சி டாட்சன் அச்சகம். 1926. உ.கும்மி, மாலை, போற்றிக் கலிவெண்பா, அடிமடக்கு அறுசீர்க் கழி நெடிலடி ஆசிரிய விருத்தம், ஒருபா ஒரு பஃது, இருபா இருபஃது, முப்பா முப்பஃது, நாற்பா நாற்பஃது ஆகிய எட்டு நூல்களின் திரட்டு.

கௌசிக சிந்தாமணி-மூன்று பாகங்கள்

ஆய்வு - அநுப்பா பாளையம் அ.இ.ரா. முருகைய சோதிடர். உத்தரவு-டி.ஜி.ஜானகிராம் நாயகர். பதிப்பு - பி.இரத்தின நாயகர் அண்டு சன்ஸ். அச்சு-கோல்டன் எலெக் டிரிக் பிரஸ், சென்னை. முதல்பாகமும் இரண்டாம் பாகமும் 1924. மூன்றாம் பாகம் 1929.

சப்தரிஷிகளுள் மகா மகத்துவம் பொருந்தியவராகிய கௌசிக மகாரிஷி அருளியது.

முதல் பாகம்-இதில் தொடக்கத்தில் 'விசுவாமித்திர சிந்தா மணி - சாதக கிரகப் பலன்கள்' என்பது உள்ளது. இது 34 பாடல்கள் கொண்டது. பின்பு, 387 பாடல்கள் கொண்ட கௌசிக சிந்தாமணி உள்ளது.மூன்றாவதாக- 'கௌசிக சிந்தா மணியுடன் சேரு'-துலாலக்கின பலன்-கடக ராசி பலன் ஆகிய -129 பாடல்கள் கொண்ட தொகுப்பு உள்ளது.

இரண்டாம் பாகம் - 'விசுவாமித்திரருக்கும் வசிட்டருக் கும் தர்க்க சோதிடம் என்னும் கௌசிக சிந்தாமணி' என்பது உள்ளது. இது ஆயிரம் பாக்கள் கொண்டது. பல உள்தலைப்பு கள்-சோதிடம் பற்றிய பல செய்திகள் உள்ளன.

மூன்றாம் பாகம்-'வசிட்ட விசுவாமித்திரர்' சம்வாதமாகிய தர்க்க சோதிடம் என்னும் கௌசிக சிந்தாமணி' என முதலில் பெயர் உள்ளது. இது 431 பாடல்கள் கொண்டது. சோதிடம் பற்றிய பல செய்திகள் உள்ளன. இந்நூல் அரிய பெரிய தொகுப்பாகும்.

தோத்திரக் கொத்து

இது சிதம்பரம் மௌன குருஞான தேசிகர் மீது திருவண்ணாமலை ஈசானிய ஞான தேசிகர் இயற்றிய சிறு நூல்களின் கொத்து. வெ-மௌன தேசிகர் மடாலயம், சிதம்பரம். கந்தன் பிரஸ், சிதம்பரம். 1940. உ - மாகேசுரபூசைத் தோத்திரம், குருமரபு வாழ்த்து, பஞ்சரத்தினம், சிகாமணிப் பதிகம் - ஆகியவற்றின் தொகுப்பு.

தத்துவ ராய சுவாமிகள் அடங்கல்

முதல் பக்கம் கிழிந்துள்ளதால், தொகுத்தவர் பெயர், அச்சகம், காலம் முதலியன தெரியவில்லை. சென்னைப் பதிப்பு என்பது மட்டும் தெரிகிறது. இந்த அடங்கலில் (திரட்டில்) உள்ள நூல்களாவன:-

திருத்தாலாட்டு, பிள்ளைத் திருநாமம், வெண்பா அந்தாதி, கலித்துறை அந்தாதி, சின்ன பூ வெண்பா, தசாங்கம், இரட்டை மணி மாலை, மும்மணிக் கோவை, நான்மணி மாலை, கலிப்பா, ஞான வினோதன் கலம்பகம், உலா, சிலேடை உலா, நெஞ்சுவிடுதூது, கலிமடல், அஞ்ஞான வதைப் பரணி, மோக வதைப் பரணி, அமிர்த சார வெண்பா-ஆகிய 18 நூல்களின் திரட்டு இது.

அருணகிரி நாதரின் படைவீட்டுத் திருப்புகழும்
ஆண்டவன் பிச்சை இயற்றியவையும்

வெளியீடு: பி.டி. பாணி கம்பெனி, சென்னை – 5. உள்ளுறை: திருப்பரங் குன்றம், திருச்செந்தூர், பழநி, திருவேரகம், திருத்தணிகை, சோலைமலை, மதுரை, விராலிமலை, வயலூர், திருவானைக்கா, திருச்சிராப் பள்ளி-ஆகிய திருப்பதிகள் மீது அருணகிரிநாதர் இயற்றிய திருப்புகழ்ப் பாடல்கள் உள்ளன. மற்றும், ஆண்டவன் பிச்சை என்பவர் இப்பதிகளின் மீது இயற்றிய பதிகங்களும் படை வீட்டுக் கீர்த்தனப் பாடல்களும் இதில் உள்ளன.

சாந்தோபதேச மஞ்சரி

தொகுப்பு: வி.சே. ஆறுமுக முதலியார், நால்வர் பவனம், பெங்களூர், பெங்களூர்த் தண்டு. இவர்தம் குருநாதன் சாத்தா

னந்த சுவாமிகள் பேரால் தொகுத்துள்ளார். பலர் சிறப்புப் பாயிரம் அளித்துள்ளனர். நாள்: 30 - 6-1918.

உள்ளுறை: மூதுரை-நல்வழி நூல்களின் காப்புச் செய்யுட்கள், பெரிய புராண 'உலகெலாம்' என்னும் பாடல், சில தேவாரப் பாடல்கள், ஔவையாரின் விநாயகர் அகவல், நக்கீரர் விநாயகர் திருஅகவல், அருணகிரி முத்தி விநாயகர் அகவல், பன்னிரு திருமுறைப் பாடல்கள் சில, பட்டினத்தார் பாடல்கள் சில, திருவருட்பா சில, திருக்குறள்கள் சில, திருவிளையாடல் புராணம் - திருப்புகழ்-திவ்வியப் பிரபந்தம் -கம்பராமாயணம் - ஆகியவற்றிலிருந்து சிற்சில பாடல்கள் திரட்டப்பட்டுள்ளன.

பெரிய வண்ணத் திரட்டு

புலவர்கள் பலரால் இயற்றப்பட்ட 21 வண்ண நூல்களின் திரட்டு இது. பார்வை: எஸ். கிருஷ்ணசாமிப் பிள்ளை. வெளியீடு: மதுரை எஸ். பொன்னையா பிள்ளை. திருமங்கலம் ஸ்ரீகிருஷ்ண விலாச அச்சியந்திர சாலை - 1915.

உள்ளுறை: திருப்பூவணம் புஷ்பவனநாதர் வண்ணம், செண்டலங்காரப் பெருமாள் வண்ணம், திரு வொற்றியூர்த் தியாகராசர் வண்ணம், திருவையாற்றுச் செம்பொற் சோதியார் வண்ணம், திரு வண்ணாமலையார் வண்ணம், சிதம்பரச் சிற்றம்பல வாணர் வண்ணம், மூவரையன் வண்ணம், இராமேச்சுர இராமநாயகர் வண்ணம், சேதுபதி அருமைத்திரிபு வண்ணம், ஆண்கலை வண்ணங்கள் 2, பெண்கலை வண்ணங்கள் 3, பட்டினத்துப் பிள்ளை உடற்கூற்று வண்ணம், திருக்கழுக்குன்றம் வேதகிரீசர் வண்ணம், திருப்போரூர் ஆண்டவர் வண்ணம், திருப்போரூர்ச் சுழியிலா வண்ணம், மெல்லிசை வண்ணம், வன் மெல்லிசை வண்ணம், தாயுமான சுவாமிகள் வண்ணம் ஆகிய இருபத்தொரு வண்ணங்களின் தொகுப்பாகும். வண்ணம் என்பது ஒரு வகைப் பாடல்.

திருவதிகைப் பதிகங்கள்

தொகுப்பு: ப. பால சுந்தரநயினார், நெல்லிக்குப்பம்.சாது அச்சுக் கூடம், சென்னை - 1940. திருவதிகையைப் பற்றிய

மூவர் தேவாரப் பதிகங்கள், திருப்புகழ், கல்வெட்டுப் பாடல்கள், பெரிய நாயகியம்மை விருத்தம், நாவுக்கரசு தோத்திரம், திலகவதி அம்மை துதி ஆகிய நூல்களின் - நூற்பகுதிகளின் தொகுப்பு இது.

ஆறுமுகக் கடவுள் பதிகங்கள்

சிதம்பரம் - பாண்டிய நாயகத்தில் எழுந்தருளியுள்ள ஆறுமுகக் கடவுள்மீது, சிதம்பரம் நடராச செட்டியார் இயற்றியுள்ள சிறு நூல்களின் தொகுப்பு இது. பிலவங்க-ஐப்பசி-27. உள்ளுறை: விண்ணப்பமாலை, ஆனந்த மாலை, நவநாமப் புகழ்ச்சி, அற்புத மாலை, கீர்த்தனைகள்-ஆகிய சிறு நூல்களின் தொகுப்பு.

திருவலங்கல் திரட்டு-முதல் காண்டம்

மகாதேஜோ மண்டல வெளியீடு. சாது பிரஸ், சென்னை. இரண்டாம் பதிப்பு-1929. பல சிறு நூல்களின் திரட்டு.

பல வகைத் திரட்டு

ஆ - காரைக்குடி சொக்கலிங்கச் செட்டியார். தேவகோட்டை திரு நாவுக்கரசு நாயனார் அச்சியந்திர சாலை. ஏவிளம்பி-புரட்டாசி. உ-திரு விரட்டை மணி மாலை, மயில் மலைச் சந்த விருத்தம், குன்றைச் சிலேடை வெண்பா, காழிச் சிலேடை வெண்பா, தில்லைச் சிலேடை வெண்பா, திருவாரூர் அந்தாதி, திருவாலவாய் அந்தாதி-ஆகிய நூல்களின் திரட்டு.

பரங்கிரிப் பிரபந்தத் திரட்டு

திருப்பரங் குன்றம் முருகன் மீது பாடப்பெற்ற நூல்களின் திரட்டு இது. ஆ - மு.ரா. அருணாசலக் கவிராயர். மீனலோசனி அச்சியந்திர சாலை - 1927. நூல்கள் - பரங்கிரிப்பாமாலை, பரங்கிரிக் கலித்துறை அந்தாதி, பரங்கிரிப் பதிற்றுப்பத்தந்தாதி, பரங்கிரி வெண்பா அந்தாதி, பரங்கிரி அலங்காரம், பரங்கிரி மும்மணிக் கோவை, பரங்கிரி அனுபூதி, பரங்கிரிக் கோவை-ஆகிய நூல்கள். மொத்தப் பாடல்கள்--1208.

பாப நாசம் என்னும் சிங்கைப் பிரபந்தத் திரட்டு

ஆ-சிவஞான யோகியின் சிறிய தந்தையாகிய நமச்சிவாயக்

கவிராயர். பதிப்பு-மு.ரா. கந்தசாமிக் கவிராயர். மதுரை எக்செல்சியர் பிரஸ், 1917. நூல்கள்-பாபநாசம் என்னும் சிங்கை இறைவன் மீது பாடப்பெற்ற கலித்துறை அந்தாதி, பதிற்றுப்பத்து அந்தாதி, கொச்சகக் கலிப்பா, சந்த விருத்தம், பிள்ளைத் தமிழ், சிலேடை வெண்பா - ஆகியன.

ஞான சம்பந்தர் பிரபந்தத் திரையம்

ஆ-காரைக்குடி இராம. சொக்கலிங்கம் செட்டியார். வெ-ஆ. வேலாயுதம் பிள்ளை. 1912. உ-ஞான சம்பந்தர் பிள்ளைத் தமிழ், ஞான சம்பந்தர் போற்றிக் கலி வெண்பா, ஞான சம்பந்தர் திருவூசல்-முதலியன. தேவ கோட்டை மீன லோசனி பிரஸ்.

சங்கர நாராயணத் திரட்டு

தொ - சுயம் பிரகாச யோகியார். தேவாரம், திருவாய் மொழி ஆகியவற்றிலிருந்து 1100 செய்யுள்கள் எடுத்து, 52 தலைப்புகளாகப் பகுத்து ஆயிரத் திரட்டாகத் தொகுத்தது. தேவாரத்திலிருந்து சங்கரனைப் பற்றிய பாடல்களும், திருவாய் மொழியிலிருந்து நாராயணனைப் பற்றிய பாடல்களும் தொகுக் கப்பட்டதால், இதற்குச் சங்கர நாராயணத் திரட்டு என்னும் பெயர் தரப்பெற்றது.

முருகர் கதம்பம்

பதிப்பாசிரியர்-வீ. சொக்கலிங்கம். தஞ்சை சரசுவதி மகால் வெளியீடு. வாணி விலாச அச்சகம், சீரங்கம். 1965. நூல்கள்: (முருகனை வருக வருக என்று அழைப்பதாக உள்ள) வரு முருகாற்றுப்படை, கதிர்காம வேலவன் தோத்திரம், செந்தில் வேலவன் தோத்திரம், பழநி வேலவன் தோத்திரம், பழநி மாலை, கந்தர் காதல், திருச் செங்கோட்டு அகவல்-ஆகியவை. மன்னர் காலத்தில் சேகரித்த நூல் நிலைய ஓலைச் சுவடிகளி லிருந்து எடுத்த நூல்கள் இவை.

சிவக் கொழுந்து தேசிகர் பிரபந்தத் திரட்டு

திருப்பனந்தாள் காசிமட உதவி வெளியீடு. உ. வே.சா. அவர்களின் ஆராய்ச்சிக் குறிப்புரையுடன். சென்னை கேசரி

அச்சுக் கூடம். ஆங்கிரச, ஆடி. உ.வே.சா. முகவுரை நாள்–25-7–1932.

ஆசிரியர்: தண்டபாணி தேசிகர் மகன் கொட்டையூர் சிவக்கொழுந்து தேசிகர். இவர் தஞ்சை-சரபோஜி மன்னரின் அவைப்புலவர். இவர் எழுதிய பல நூல்களுள் மூன்றே இந்தத் திரட்டில் உள்ளன. அவை:

1. கோடீச்சுரக் கோவை, 2. தஞ்சைப் பெருவுடையார் உலா, 3. சரபேந்திர பூபாலக் குறவஞ்சி–என்பன. இவர் எழுதியுள்ள வேறு நூல்கள்: சரபேந்திர வைத்திய முறைகள், சரபேந்திரர் சன்னிரோகச் சிகிச்சைகள், சரபேந்திரர் வைத்தியம், திருவிடை மருதூர்ப்புராணம், சரசக்கழி நெடில்–முதலியன. ஆசிரியர் 19 ஆம் நூற்றாண்டின் முற்பகுதியினர்.

பட்டினத் தடிகள் பிரபந்தத் திரட்டு

1934. பட்டினத்தார் பாடல்கள் என்னும் தலைப்பில் இது விளக்கப்பட்டுள்ளது.

குமர குருபர சுவாமிகள் பிரபந்தங்கள்

திருப்பனந்தாள். காசிமட உதவி கொண்டு, உ.வே.சா. ஆராய்ச்சி முகவுரையுடன், சென்னை கேசரி அச்சுக் கூடத்தில், பிரமாதி, ஆவணி-1939 ஆம் ஆண்டு அச்சிட்டு வெளியிடப் பெற்றது.

நூல்கள்: 1. கந்தர் கலி வெண்பா, 2. மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழ், 3. மதுரைக் கலம்பகம், 4. நீதி நெறி விளக்கம், 5. திருவாரூர் நான்மணி மாலை, 6. முத்துக்குமார சுவாமி பிள்ளைத் தமிழ், 7. சிதம்பர மும்மணிக் கோவை, 8. சிதம்பரச் செய்யுட் கோவை, 9. பண்டார மும்மணிக் கோவை, 10. காசிக் கலம்பகம், 11. சகல கலா வல்லி மாலை.

1. மதுரை மீனாட்சியம்மை இரட்டைமணிமாலை, 2. மதுரை மீனாட்சியம்மை குறம், தில்லைச் சிவகாமியம்மை இரட்டைமணிமாலை.

இத்தொகுப்பு குறித்து உ.வே.சா. முகவுரையில் கூறியிருப்பது வருமாறு:

1 – 11 போக, 12 கைலைக் கலம்பகம், 13. காசித்துண்டி விநாயகர் பதிகம்.

கைலைக் கலம்பகத்தில் சில செய்யுட்களே கிடைத்துள்ளன. காசித் துண்டி விநாயகர் பதிகம் கிடைக்கவில்லை.

சென்ற நூற்றாண்டில் தேவர் பிரான் கவிராயர் இயற்றிய சிறப்புப் பாயிரம் ஒன்றில், குமர குருபரர் 14 நூல்கள் இயற்றி யதாக உள்ளது.

மதுரை மீனாட்சியம்மை இரட்டை மணிமாலை, மதுரை மீனாட்சியம்மை குறம், தில்லைச் சிவகாமியம்மை இரட்டை மணிமாலை என்னும் மூன்றும் இவர் இயற்ற வில்லை என்கின் றனர். அச்சுப்பிரதிகளில் இவை உள்ளன. ஆனால் திருப்பனந் தாள் மடத்துப் பிரதியிலும் வேறு பழைய ஏட்டுப் பிரதிகளி லும் இவை மூன்றும் இல்லை. பரம்பரையாகப் பாடம் சொல் பவரும் இவற்றைப் பாடம் சொல்வதில்லை. மீனாட்சிசுந்தரம் பிள்ளையும் வேறு சிலரும் இவற்றைக் குமர குருபரர் நூலாகக் கொள்ளவில்லை. சில பதிப்புக்களில் இருப்பதால் நானும் சேர்த்துள்ளேன் – இது உ.வே.சா. கூறியிருப்பது.

குமர குருபரர் நெல்லை மாவட்டத்து ஸ்ரீவைகுண்டம் என்னும் ஊரில் பிறந்தவர். காசியிலும் திருப்பனந்தாளிலும் மடம் அமைத்து ஓர் ஆதீனம் உருவாக்கியவர். காலம் 17ஆம் நூற்றாண்டு.

குமர குருபரர் பிரபந்தத் திரட்டு

வெளியீடு – ஈசானிய மடம் இராமலிங்க சுவாமிகள். சென்னை கலா ரத்நாகர அச்சுக்கூடம். இரண்டாம் பதிப்பு – சுபகிருது, தை. உரைக்குறிப்புடன்.

உள்ளுறை: திருச்செந்தூர் கந்தர் கலி வெண்பா, மீனாட்சி யம்மை பிள்ளைத் தமிழ், மீனாட்சியம்மை குறம், மீனாட்சி யம்மை இரட்டை மணி மாலை, மதுரைக் கலம்பகம், நீதி நெறி விளக்கம், திருவாரூர் நான் மணிமாலை, முத்துக் குமாரசாமி பிள்ளைத்தமிழ், சிதம்பர மும்மணிக் கோவை, சிதம்பரச் செய்யுட்கோவை, சிவகாமியம்மை இரட்டைமணி

மாலை, பண்டார மும்மணிக்கோவை, காசிக் கலம்பகம், சகலகலா வல்லிமாலை – ஆக மொத்தம் 14 நூல்கள்.

குமர குருபரர் செய்யவில்லை எனச் சிலர் கூறும் மீனாட்சியம்மை குறம், மீனாட்சியம்மை இரட்டை மணிமாலை, சிவகாமியம்மை இரட்டை மணி மாலை ஆகிய மூன்று நூல்களும் இப்பதிப்பில் உள்ளமை காண்க.

குமரகுருபர சுவாமிகள் திருவருட்பா

ஆசிரியர் - குமர குருபரர். தொகுப்பு – வி. சுந்தர முதலியார். விக்டோரியா ஜூபிலி அச்சுக்கூடம், சென்னை. 1890. நூல்கள்: காசி துண்டிராச திருவருட்பா, காசி கதிர்காம வேலவர் திருவருட்பா, காசி விசுவநாதர் திருவருட்பா, காசி கேதார கௌரி திருவருட்பா ஆகியவை.

குமர குருபரர் காசியில் மடம் அமைத்துத் தங்கியிருந்தவர் ஆதலின், காசி தொடர்பான இந்நூல்களை இயற்றியுள்ளார்.

—

திருப்போரூர்ச் சிதம்பர சுவாமிகள் தோத்திரப் பிரபந்தத் திரட்டு

வெளியீடு - ஊ. புஷ்பரதச் செட்டி அண்டு கம்பெனி. கலா ரத்நாகரம் அச்சுக்கூடம், சென்னை – 1897. சிதம்பர சுவாமிகள் இயற்றிய நூல்களாவன:

மீனாட்சி கலி வெண்பா, வேதகிரீசுரர் பதிகம், குமார தேவர் நெஞ்சுவிடுதூது, குமாரதேவர் பதிகம், பஞ்சதிகார விளக்கம் – ஆகியவை.

சிதம்பர சுவாமிகள் திருப்போரூர் முருகன்மீது மட்டும் பாடிய நூல்கள் 'திருப்போரூர்ச் சந்நிதிமுறை' என்னும் தலைப்பின்கீழ்த் தொகுத்துத் தரப்பெற்றுள்ளன.

பாம்பன் குமர குருதாசரின் திரட்டு

பாம்பன் குமர குருதாச சுவாமிகள் பாம்பனில் 1850 ஆம் ஆண்டு பிறந்தார். பிரப்பன்வலசை என்னும் ஊரில் நில அறையில் 35 நாட்கள் தங்கித் தவம் செய்தார். 30-5-1929 ஆம் நாள் திருவான்மியூரில் இறுதி எய்தினார். இவரது திரட்டு

நூல் 'திருவலங்கல் திரட்டு' எனப்படும். இந்தத் திரட்டில், ஆறு காண்டங்களின் கீழ் 6666 பாடல்கள் உள்ளன. இதில் பா, பாவினம், சந்தச் செய்யுள் முதலிய பல செய்யுள் வகைகளும் இடம்பெற்றுள்ளன. இவர் இன்னும் பல நூல்கள் இயற்றியுள்ளார்.

பாம்பன் குமர குருதாச சுவாமிகள் பாடல்

வெளியீடு: பிரப்பன் வலசை தி. உடைய நாயகம் பிள்ளை. பண்டிதமித்திர அச்சுக்கூடம், சென்னை. முதல் பதிப்பு – 1901. பல ஊர்க் கடவுள்மேல் பல தலைப்புகளில் குமர குருதாசர் பாடிய நூல்களின் திரட்டு. நூல்களாவன: சிவ சுப்பிரமணியர் சதகம், கந்தர் இரட்டை மணிமாலை, கந்தர் ஒரு பா ஒரு பஃது, கந்தர் நான் மணி மாலை, சிவலோக சுந்தர மாலை, பரஞ்சுடர்க் கண்ணி, பஞ்ச விம்சதி யதிக சத பங்கி – முதலிய நூல்கள்.

தண்டபாணி சுவாமிகள் திரட்டுகள்

திருவாமாத்தூர் கௌமார மடாலயம் தண்டபாணி சுவாமிகள் பற்பல திரட்டு நூல்கள் இயற்றியுள்ளார். அவற்றுள் சில காண்பாம்:–

சூரிய மாலை

ஞாயிறைப் பற்றிய பாடல்களின் தொகுப்பு இது. பதிப்பு: சென்னை த.மு. கந்தசாமி செட்டியார். அச்சு: பி. ஆர். இராமஐயர் அண்ட் கோ பிரின்டர்சு, சென்னை. உள்ளுறை; சூரியமாலை, சூரிய தெரிசனச் சுருக்கம், சௌர பரத்துவம் முதலிய ஏழு நூல்களின் தொகுப்பு இது.

நான்கு நூல் திரட்டு

கொடிப்பள்ளம் ஏழுமலை செட்டியார் பதிப்பு. கலாரத் நாகர அச்சுக் கூடம், சென்னை. ஈசுவர ஆண்டு - மாசித் திங்கள். உள்ளுறை: பொது நூல், சிறப்பு நூல், திரு வெண்பா விற்பனம் ஆகிய நான்கு நூல்களின் திரட்டு இது. இறுதியில் அருளாட்சி என்னும் தலைப்பில் பாடல்கள் உள்ளன.

குமர குரு தாச சுவாமிகள் பாட்லும் திரு வலங்கல் திரட்டும்

1,2 காண்டங்கள்

மகா தேஜோ மண்டல வெளியீடு

இதில் இரண்டு நூல்கள் உள.

முதல் நூல் வருமாறு:

முதல் மண்டல மாகிய குமர குரு தாச சுவாமிகள் பாடல். சென்னை - சாது அச்சுக் கூடம். இரண்டாம் பதிப்பு 1930. மொத்தப் பாடல்கள் 1266. 74 நூல்களிலிருந்து பாடல் கள் திரட்டப்பட்டுள்ளன. பல ஊர்கள் - பல பொருள்கள்-பற்றிப் பல்வேறு இனப் பாக்கள் உள்ளன.

இரண்டாம் நூல்

இரண்டாம் மண்டல மாகிய திரு அலங்கல் திரட்டு. இது இரண்டு கண்டங்களாக உள்ளது.

முதல் கண்டம்

மொத்தப் பாடல் - 601. சென்னை சாது அச்சுக் கூடம், இரண்டாம் பதிப்பு - 1929.

இரண்டாம் கண்டம்

இதன் மொத்தப் பாடல் - 1133.

திரு அலங்கல் திரட்டு முற்றிற்று.

நூலில் உள்ளவாறு மேலே உள்ள செய்திகள் தரப்பட் டுள்ளன. குமர குரு தாசர் 74 நூல்கள் இயற்றியுள்ளார் எனத் தெரிகிறது. மேலும், திரு அலங்கல் திரட்டு என்ற திரட்டும் இயற்றப்பட்டுள்ளது. அலங்கல்=மாலை. மாலை போன்ற பல பகுதிகளின் தொகுப்பு இது.

இரண்டாம் கண்டம் தனி நூலாகவும் பதிப்பிக்கப்பட் டுள்ளது.

மேற் கூறிய மூன்று பதிப்புகளையும் ஒரு நூலாகவும் தொகுத்து அச்சிட்டுள்ளனர். மூன்றிலும் சேர்த்து மொத்தப் பாடல்கள் 3000 ஆகும். குமர குரு தாசரின் நூல்பற்றி மேலும் அடுத்தாற்போல் அறியலாம்.

மெய்கண்ட சாத்திரம் என்னும் பதினான்கு சித்தாந்த சாத்திரங்கள்

வெளியீடு: தருமபுர ஆதீனம். சாது அச்சுக்கூடம், சென்னை – 1942. முன்னுரை: ம. பால சுப்பிரமணிய முதலியார்; சென்னை. முன்னுரை நாள் 5-12-1942.

உள்ளுறை: சைவ சித்தாந்தம் பற்றிய 14 நூல்கள் ஆசிரியர் பெயர்களுடன் வருமாறு:-

1. திருவுந்தியார் – திருவியலூர் உய்ய வந்த தேவ நாயனார்
2. திருக்களிற்றுப் படியார் – திருக்கடவூர் உய்ய வந்த தேவநாயனார்
3. சிவ ஞான போதம் – மெய்கண்ட தேவர்
4. சிவஞான சித்தியார் – பரபக்கம் –சுபக்கம் – அருணந்தி சிவாசாரியார்
5. இருபா இருபஃது
6. உண்மை விளக்கம் – திருவதிகை மனவாசகங் கடந்தார்
7. சிவப்பிரகாசம்–கொற்றவன்குடி உமாபதிசிவாசாரியார்
8. திருவருட்பயன் ”
9. வினா வெண்பா ”
10. போற்றிப் பஃறொடை ”
11. கொடிக்கவி ”
12. நெஞ்சு விடு தூது ”
13. உண்மை விளக்கம் - சீகாழித் தத்துவ நாதர்
14. சங்கற்ப நிராகரணம் – உமாபதி சிவாசாரியார்.

இவையே யன்றி, ‘துகளறு போதம்’ என்னும் நூலும் சைவ சித்தாந்த சாத்திரமாகக் கருதப்படுகின்றது.

தேவாரம், திருவாசகம் முதலிய திருமுறைகள் சைவ சமயத் தோத்திர நூல்களாகும். மேலே கூறப்பட்டுள்ளவை, சைவசித்தாந்தத்தை விளக்கும் தத்துவச்சாத்திர நூல்களாகும்.

வைணவத் திரட்டு

பெரியாழ்வாரின் திருப்பல்லாண்டு, தொண்டரடிப் பொடியாழ்வாரின் திருப்பள்ளி யெழுச்சி, ஆண்டாள் திருப்பாவை,

மதுர கவி யாழ்வாரின் கண்ணி நுண் சிறுத் தாம்பு; நாச்சி யார் திரு மொழியில் ஆறாம் திருமொழி-வாரணம் ஆயிரம்- ஆகிய வைணவ நூல்களின் தொகுப்பு இது. நூலின் முற்பகுதி இல்லாமையால் மற்ற விவரங்கள் தர முடியவில்லை.

தேசிகப் பிரபந்தம்

வேதாந்த தேசிகரின் பிரபந்தத் திரட்டு இது. வேதாந்த தேசிகர் என்பவர், வடகலைப் பிரிவு வைணவத் தலைவர். தமிழிலும் வட மொழியிலும் தோற்றம் (சுமார்) நூறு நூல்கள் இயற்றியுள்ளார். சிலவற்றைச் சிலர் தொகுத்துப் பதிப்பித்துள்ளனர். இனி ஒன்று காண்பாம்.

ஆய்வு - கடல் மங்கலம் வீராசாரியார். நள, பங்குனி. முத்தமிழ் விளக்க அச்சுக் கூடம். மொத்தச் செய்யுள் சு ள உரு (425), உள்ளுறை:

அமிர்த ரஞ்சநி, அதிகார அங்கிரகம், அமிர்தாஸ்வாதிநி, பரம பத சோபானம், அத்த கிரி மகாத்மியம், அடைக்கலப் பத்து, அர்த்த பஞ்சகம், வைணவ திநசரி, திருச் சின்ன மாலை, பன்னிரு நயம், திரு மந்திரச் சுருக்கு, துவயச் சுருக்கு, சர்ம சுலோகச் சுருக்கு, கீதார்த்த சங்கிரகம், மும்மணிக்கோவை, பத்துப்பா, கழல்பா, அம்மானைப்பா, ஊசல் பா, ஏசல் பா, நவ ரத்ன மாலை, ஆசார நியமம், பிரபந்த சாரம் ஆகியன.

மாதவச் சிவஞான யோகிகள் பிரபந்தங்கள்

ஆய்வு - ச.த. மீனாட்சி சுந்தரம் பிள்ளை: முகவுரை: 22-4-1950. வேங்கடேசுவரி அச்சுக் கூடம், கும்பகோணம். விக்ருதி, சித்திரை, ஆயிலியம்-1950. நூல்கள்: சச்சித் ஆனந்தருத்ரேசர் பதிகம், திருத் தொண்டர் திருநாமக் கோவை, திருவேகம்பர் ஆனந்தக்களிப்பு, சுலோக பஞ்சக மொழிபெயர்ப்பு, பஞ்சாக்கர தேசிகர் மாலை.

தத்துவராயர் அடங்கல் முறை

தொ- சண்முகசுந்தரனார். சென்னை-கல்விக் களஞ்சிய அச்சுக் கூடம். 1869. உ-திருத்தாலாட்டு முதல் அமிர்தசார வெண்பா ஈறாக உள்ள 18 நூல்களின் திரட்டு இது. அந்தாதி,

மாலை, உலா, பரணி முதலிய பலவகை நூல்கள் உள்ளன.

வாண்டையார் பிரபந்தத் திரட்டு

கி.வீரைய வாண்டையார் இயற்றிய நூல்களின் தொகுப்பு. இவர் தஞ்சையைச் சார்ந்த பூண்டி மாநகரம் இந்திர குல திலகர் என வழங்கப்பெறுகிறார். இவரது இந்நூலின் முதல் பதிப்பு - 1889. பார்வை: சுப்பிரமணிய ஐயர், தஞ்சை எஸ்.வி. இராம சுவாமி ஐயங்கார் அச்சிட்டது. அச்சகம்: Tanjore "The Patriot Press". மற்றும் ஒரு பதிப்பு 1926.

நூல்கள்: புஷ்ப வன நாதர் சதகம், புஷ்ப வன நாதர் போற்றிப் பதிகம், புஷ்பவன நாதர் இரட்டை மணிமாலை புஷ்ப வன நாதர் பதிற்றுப்பத் தந்தாதி, புஷ்ப வன நாதர் நவ மணி மாலை, புஷ்ப வன நாயகி மாலை, புஷ்ப வன அகவல்-ஆகியவை.

கார் வண்ண மாலை (அல்லது) திருவரங்கச் சந்நிதி முறை

இது நமச்சிவாய நாவலர் பாடியது.நற்றமிழ் விலாச அச்சி யந்திர சாலை, சென்னை. 1914. நூல்களாவன:-

கார் வண்ண மாலை, அரங்கப் பத்து, இரங்கல் பத்து, மெய்ஞ்ஞான சோதி மயம், ரகு ராமப் பத்து, கோவிந்தப் பதிகப் பத்து, சிந்தை குடிகொண்ட பத்து, ஆதி சீரங்கப் பத்து, இராமப் பத்து, கருடப் பத்து, போற்றிப் பத்து, குரு விருத்த மாலை, ஆதி மூலப் பத்து, சிந்தையின் பத்து, அஷ்டாச்சரத் திருப்புகழ், அலர் மேலு மங்கைத் தாயார் பதம், நேரிசை வெண்பா, இராமர் பதம் - ஆகியவை.

அபிராமி பட்டர் பிரபந்தங்கள்

வெளியீடு - குமர குருபரன் சங்கம், ஸ்ரீவைகுண்டம், தியோடர் பிரஸ், திருச்சி - 1957. நூல்களாவன:-

கள்ள விநாயகர் பதிகம், அமுத கடேசுவரர் பதிகம், கால சம்மார மூர்த்தி பதிகம், திருக்கடவூர் அபிராமியம்மை இரட்டைப் பதிகம், திருக்கடவூர் அபிராமி அந்தாதி - ஆகியவை. இவை, திருக்கடவூர் அபிராமி பட்டரால் பாடப்பெற்றவை.

64 பேர் எழுதிய திருவிளையாடல்

பெரும்பற்றப் புலியூர் நம்பி இயற்றிய 'திருவாலவாயுடையார் திருவிளையாடல் புராணம்' என்னும் நூல், 1927 ஆம் ஆண்டு (பிரபவ, சித்திரை) சென்னை கேசரி அச்சுக் கூடத்தில் இரண்டாம் பதிப்பாக அச்சிடப்பட்டது. இந்த நூலின் முகவுரையில், உ.வே.சாமிநாத ஐயர் பின்வருமாறு எழுதியுள்ளார்:

பரஞ்சோதியார் தமது திருவிளையாடல் புராணத்தைப் படித்துக் காட்ட வேம்பத்தூர் வந்தார். அங்கிருந்த 64 புலவர்கள், 'நாளை வா' என்று கூறி, இரவோடு இரவாக 64 படலம் ஆளுக்கொன்று பாடி, மறுநாள் பரஞ்சோதியாரிடம் காட்டி, 'உன் வடமொழிப் பெயர்ப்பு நூல் ஏன்' என்று கூறி விரட்டியதாகவும், அதனால் பரஞ்சோதியார் அவர்களைச் சபித்துப் போனதாகவும் ஒரு கதை உள்ளதென எழுதியுள்ளார்.

ஆளுக்கொரு படலமாக 64 புலவர்கள் எழுதிச் சேர்த்த திருவிளையாடல் புராணம் இப்போது எங்கே உள்ளது? ஒரு வேளை, பெரும்பற்றப் புலியூர் நம்பி இயற்றிய புராணம்தான் இது என்று கூறப்படுமோ? ஒன்றும் புரிய வில்லை-குழப்பமாக உள்ளது.

யான் (சு.ச.) எழுதுகிற இந்நூல் தொகைநூல்கள் பற்றியது ஆதலின், '64 பேர் எழுதிய திருவிளையாடல்' என்னும் தலைப்பு இவண் தரப்பட்டது. இது ஓர் அறிமுகம்.

தோத்திரப் பாக்கள் திரட்டு

வெளியீடு-சென்னை தி.மு. ஏழுமலை செட்டியார் – 1950. நூல்கள்: ஔவையாரின் விநாயகர் அகவல், சண்முக கவசம், கந்தர் சஷ்டி கவசம், கந்தர் அநுபூதி, கந்தர் அலங்காரம், திரு முருகாற்றுப்படை, கந்தர் கலிவெண்பா, வள்ளலாரின் தெய்வ மணி மாலை, மதுரை மீனாட்சியம்மன் கலிவெண்பா, முருகன் புகழ் மாலை, மற்றும், பல நூல்களிலிருந்து திரட்டிய தனிப் பாடல்கள்-ஆகியவற்றின் திரட்டு.

தோத்திரப் பிரபந்தத் திரட்டு

ஆ-ஆந்திரக் காசியப திம்மப்ப அந்தணர், செவ்வாய்ப் பேட்டை, மாணிக்க விலாச அச்சுக்கூடம். நூல்கள்-சமய

சங்கிலி விநாயகர் மும்மணிக் கோவை, சிவபிரான் இரட்டை மணி மாலை, திரு முருகன் பதிப்பகம், சர்வ லோக நாயகி மாலை-முதலியவற்றின் திரட்டு.

ஸ்ரீ ரமண நூல் திரட்டு

வெ-இரமணாசிரமம் நிரஞ்சனானந்த சுவாமி, திருவண்ணா மலை. இரண்டாம் பதிப்பு 1934. நூல்கள்: அருணாசலத் துதிப் பஞ்சகம், உபதேச நூல் மாலை, அனுவாத நூல் மாலை, அருள் மொழித் திரட்டு-என்பன.

அருங்கலச் செப்பு

ஆசிரியர் பெயர் தெரியவில்லை. திருத்தம் – வீடூர் ஏ.தர்ம சாம்ராஜ்ய சாத்திரியார். பதிப்பு-குடந்தை எஸ். சயராமை யர். கோமளாம்பிகா பிரஸ், கும்ப கோணம். 1941. தம் தந்தை எழுதிவைத்திருந்த கைப் படியைக் கொண்டு பதிப்பித்ததாகப் பதிப்பாசிரியர் கூறியுள்ளார். இதிலுள்ள சில செய்யுட்கள் வேறு சில நூல்களில் காட்டப்பட்டுள்ளன. இது சைன மத நூல். பல பொருள் பற்றிய பல வகைப் பாடல்களுடன் திருக் குறள் போன்ற 180 குறள்கள் உரையுடன் உள்ளன. அரிய பொருள்கள் வைக்கப் பெற்றுள்ள செம்புக் கலம் போன்றது இந்நூல் என்னும் கருத்தில், நூலுக்கு அருங்கலச் செப்பு என் னும் பெயர் வைக்கப்பட் டிருப்பதுபோல் தெரிகிறது.

தேம்பா மாலை

மாதா கோயில் அச்சகம், புதுவை. மூன்றாம் பதிப்பு-1929. உள்ளுறை: வீரமாமுனிவரின் தேம்பாவணி என்னும் காவியத் திலிருந்து சில பாகங்கள், மேலும் அவர் இயற்றிய வெண் கலிப்பா, மாலை, தேவாரம், கலம்பகம், அந்தாதி, வண்ணம் ஆகியவை உள்ளன.

D.2337 சித்தர் பன்னூல் பாடல் திரட்டு

அகத்தியர், போகர், ரோம ருஷி, கொங்கணர், சட்டை முனி, போதைமுனி ஆகிய சித்தர்கள் பலர் இரசவாதம் பற்றி யும் மருத்துவம் பற்றியும் கூறியுள்ள பல நூல் பாடல்களின் தொகுப்பு இது. பெரும்பாலும் இரசவாதம் பற்றிய பாடல்

கள் மிகுதி. இந்தப் பிரதியால், பல நூல்களின் பெயர்களையும், அந்தந்த நூலின் மொத்தச் செய்யுள் எண்ணிக்கையையும் இன்னும் பல செய்திகளையும் அறிய முடிகிறது. பயன் மிக்க திரட்டு. இன்னின்ன பாடல்கள் இன்னின்ன நூலைச் சேர்ந்தன–இன்னின்ன பக்கங்களில் வந்துள்ளன என அறிவிக்கும் மூன்று பக்க அட்டவணை ஒன்று நூலின் முற்பகுதியில் உள்ளது. இது ஓலைச் சுவடிதான்.

R.2036 தோத்திரத் திரட்டு

நயினாசல வரதர் பேரில் விருத்தம் 10, கருடப் பத்து, அழகர் தேவர்-வருகைப் பத்து, கட்டி மகிபாலன் வாழ்த்து, தேசி நாராயணன் மட்டு விருத்தம், வீரக் கவுண்டன் காரிப் பதம், மாகாளியப்பக் கவுண்டன் கொச்சகம், காமாட்சியம்மன் கொச்சகம், இன்னும் பல கொச்சகங்கள் இந்தத் தொகுப்பில் உள்ளன. இறுதி ஓலைகள் இல்லாததால் நூல் முற்றுப் பெற்ற தாகத் தெரியவில்லை.

R.2038 நான்கு மந்திரிகள் கதை

இது கும்மிப் பாட்டு வடிவில் உள்ள பாடல்களின் தொகுப்பு. நான்கு மந்திரிகள்: போத ஆதித்தன், போத சந்திரன், போத விபீடணன், போத வியாகரணன், –ஆகியோர். இந்தக் கதைகள் வேறொரு பிரதியில் உரையில் உள்ளனவாம்.

R.6732 சுப்பிரமணியர் துதி

வீர வாகு தேவர் வகுப்பு, சங்க வகுப்பு, சேவகன் வகுப்பு, சுருப வகுப்பு, மயில் வகுப்பு,கவசம்-முதலியவற்றின் தொகுப்பு. யாவும் முருகன் பெருமை கூறுவன.

மருத மலைப் பிரபந்தத் திரட்டு

ஆ-சிரவண புரம் கௌமார மடாலயம் கந்தசாமி சுவாமி. சிரவணபுரம் கௌமார சபை வெளியீடு. பிரபவ-1927. நூல்கள்: மருதாசலக் கடவுள் அலங்காரம் முதல் வேணுகோபாலர் சந்தப் பதிகம் ஈறாக உள்ள 9 நூல்களின் திரட்டு. மருதமலை முருகர், கணபதி, வேணு கோபாலர் முதலிய அவ்வூர்க் கடவுளர்கள்மீது இயற்றப்பட்ட நூல்கள்.

செய்யுள் திரட்டு

தொ-கா. நமச்சிவாய முதலியார். வெ-சென்னை சி. குமாரசாமி நாயுடு சன்ஸ். காக்ஸ்டன் பிரஸ் சென்னை. உ-நான்கு நூல்கள் ஆசிரியர் பெயருடன் வருமாறு:-

1. தமயந்தி சுயம்வரம் (புகழேந்திப் புலவர்)
2. பிறப்பு நலம் தருமோ (கபிலர்)
3. கோவிந்த சதகம் (நாராயண பாரதி)
4. குணவான் தன் குற்றம் உணர்வான் - (கா.நமச்சிவாய முதலியார்)

சைவப் பிரபந்தத் திரட்டு

வெ-ஊ. புஷ்ப ரதச் செட்டியார். கலா ரத்நாகர அச்சுக் கூடம், சென்னை. உ-அருணகிரி யந்தாதி முதல் திருக்கை வழக்கம் ஈறாக 18 சைவ நூல்கள் உள்ளன.

திருவரங்கச் சந்நிதி முறை

ஆ - நமசிவாய நாவலர். வாணி விலாச அச்சுக் கூடம், திருத் தணிகை. சுபானு ஆண்டு. உ - கார்வண்ண மாலை முதலிய பல நூல்களின் தொகுப்பு. பலவகைச் சந்தங்களுடன் பல வகைப் பாக்கள் இடம் பெற்றுள்ளன.

மூன்று திரட்டுகள்

திரட்டியவர் சிதம்பர சுவாமிகள். ஆய்வு - அ. இராமசாமி. ஸ்ரீவாட்ச அச்சுக் கூடம், சென்னை. விசய - சித்திரை. நூல்கள் - வாசிட்டத் திரட்டு, பாகவதத் திரட்டு, பகவற் கீதைத் திரட்டு.

சாந்தலிங்க சுவாமிகள் சாத்திரத் திரட்டு

ஆ - சாந்தலிங்க சுவாமிகள். உரை - திருப்போரூர்சிதம்பர சுவாமிகள். பதிப்பு - எஸ். மாணிக்கசாமி. எலெக்டிரிக் வொர்க்ஸ் பிரஸ், கோவை. 1927. உ - கொலை மறுத்தல், வைராக்கிய சதகம், வைராக்கிய தீபம், அவிரோத உந்தியார் - ஆகிய நூல்கள்.

மா மௌன மணிக்கோவை என்ற மெய்ஞ்ஞான அநுபூதி ரசம்

ஆ - பெரிய குளம் மௌன குரு சுவாமிகள். மீனாம்பிகை அச்சியந்திர சாலை, பெரிய குளம். 1920. அநுபூதிப் பதிகம் முதல் வாடா மலரின் அலங்காரம் வரையான 138 தலைப்புகளில் பல தொகுப்புகள் உள்ளன.

நல்லாற்றூர்ச் சிவப்பிரகாச அடிகளார் பிரபந்தத் திரட்டு

சிவப்பிரகாச அடிகளார் தம் வாழ்நாளின் இடைக் காலத்தில் துறைமங்கலம் என்னும் ஊரில் இருந்தமையால் 'துறைமங்கலம் சிவப்பிரகாசர்' எனப் பெயர் வழங்கப் பெற்றார். இறுதிக் காலத்தில் தென்னார்க்காடு - நல்லாற்றூர் என்னும் ஊரில் தங்கியிருந்து அங்கேயே அடக்கம் ஆனதால் 'நல்லாற்றூர்ச் சிவப்பிரகாசர் எனப் பின்பு பெயர் வழங்கப் பெற்றார். இவரது காலம் 17 ஆம் நூற்றாண்டு. வீரசைவராகிய இவர் பல நூல்கள் இயற்றியுள்ளார். இத் திரட்டு தொடர்பான சில பதிப்புகளைக் காண்பாம்:—

சிவப்பிரகாச சுவாமிகள் பிரபந்தத் திரட்டு

ஆய்வு: சிதம்பரம் - ஈசானிய மடம் - இராமலிங்க சுவாமி. கலாரத்நாகர அச்சுக் கூடம் - இரண்டாம் பதிப்பு. பராபவ - தை. இப்பதிப்பில், சோண சைல மாலை முதலாக இஷ்டலிங்க அகவல் ஈறாக 22 நூல்கள் இடம் பெற்றுள்ளன.

சிவப்பிரகாச சுவாமிகள் பிரபந்தத் திரட்டு
(அரும் பொருள் விளக்கத்துடன்)

பதிப்பு: பாகனேரி காசி விசுவநாதன் செட்டியார். செட்டியாரின் பதிப்புரைநாள்: 1-11-1941. விசு—ஐப்பசி. கிடைக்குமிடம்: சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை. வெளியீடு: பாகனேரி தனவைசிய இளைஞர் தமிழ்ச் சங்க வெளியீடு - 8. அரும் பொருள் விளக்கம் உண்டு.

உள்ளுறை: சோண சைலமாலை முதல் திருவெங்கை மான்மியம் வரையிலான 24 நூல்கள் இதில் உள்ளன.

மற்றும் ஒரு பதிப்பு

பெருமாத்தூர் சபாபதி அய்யர், சிவப்பிரகாசர் இயற்றிய

நெஞ்சு விடு தூது, தாலாட்டு, பிள்ளைத் தமிழ், கலம்பகம், பள்ளி யெழுச்சி ஆகிய ஐந்து நூல்களை ஒரு திரட்டாக வெளி யிட்டுள்ளார்.

மற்றும் இரு பதிப்புகள்

சென்னை சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தாரும், சிவப்பிரகாச சுவாமிகள் பிரபந்தத் திரட்டு என்னும் பெயரில் இரு முறை வெளியிட்டுள்ளார்கள்.

சிவப்பிரகாசர் செந்தமிழ் நூல்கள்

இப் பெயரில் மயிலம் 18 ஆம் பட்டத்து அருள்திரு சிவ ஞான பாலைய சுவாமிகள் வெளியிட்டார்கள். அச்சு: சண்முகா அச்சுக் கூடம், திருப்பாதிரிப் புலியூர். சுபானு ஆண்டு 1944.

இந்தப் பதிப்பில், 34 நூல்கள் இடம்பெற்றுள்ளன. சதமணி மாலை, சிவப்பிரகாச விகாசம் என்னும் இரண்டு நூல்களை யும், முது பெரும்புலவர் திரு அடிகளாசிரியர் அரிதின் முயன்று தேடிக் கண்டு பிடித்து மயிலம் மடத்து வெளியீடாக வரச் செய்தார். இவ்விரண்டும் இந்தத் திரட்டில் உள்ளன.

சிவப்பிரகாசர் தம் செய்யுள் வளத்தால் 'கற்பனைக் களஞ்சியம்' என்னும் சிறப்புப் பெயர் பெற்றவ ராதலின், அவருடைய சிறந்த நூல்களின் பெயர்களையாவது இவண் காண்பாம்: சோண சைல மாலை, திருச் செந்தில் அந்தாதி, திருவெங்கைக் கோவை, திரு வெங்கைக் கலம்பகம். திரு வெங்கை உலா, திரு வெங்கை அலங்காரம், சிவப்பிரகாச விகாசம், தருக்க பரிபாஷை, நால்வர் நான் மணி மாலை சதமணி மாலை, சிவஞான பாலய சுவாமிகள் நெஞ்சுவிடு தூது, சிவஞான பாலய சுவாமிகள் தாலாட்டு, சிவஞான பாலய சுவாமிகள் பிள்ளைத் தமிழ், சிவஞான பாலய சுவாமி கள் கலம்பகம், சிவஞான பாலய சுவாமிகள் திருப்பள்ளி யெழுச்சி, கூவப் புராணம், பிரபுலிங்க லீலை, வேதாந்த சூடா மணி, சித்தாந்த சிகாமணி, பழமலை அந்தாதி, பிட்சாடண நவ மணி மாலை, பெரிய நாயகியம்மை கட்டளைக் கலித்துறை, பெரிய நாயகியம்மை நெடுவிருத்தம், இயேசு

மத நிராகரணம், நன்னெறி, சிவநாம மகிமை, தல வெண்பா, இட்டலிங்க அபிடேக மாலை, நெடுங் கழி நெடில், குறுங்கழி நெடில், நிரஞ்சன மாலை, கைத்தல மாலை, சிகாளத்திப் புராணம் - இடைப்பகுதி - ஆகியன. இவற்றுள் சில நூல்களை மேலும் பலர் வெளியிட்டுள்ளனர்.

R. 4827. குலால முனி பாடல்கள்

ஆ-குலால முனி. இத்திரட்டில், கனாப் பாட்டு, சிவகாமி வல்லி பாகர் ஊசல் பாட்டு, கலைமகள் துதி, மங்கள வாழ்த்துப் பாடல் - முதலியன உள்ளன. முதல் பாடல் மட்டும் முற்றும் இல்லை. முதல் கனாப் பாட்டில் மாதிரிக்குச் சில அடிகள் வருமாறு;

"ஆதி யமுதமே அன்ன நடை மானே
தோழி நான் கண்ட கனவின் நலங் கேளாய்
பைந் தோகை போல் வாழும் பால்மொழி யாளே
எம்தோழி சொல்ல நான் கண்ட கனா நல்ல கனா
என்னையும் பேசிப் பின்னே என் தங்கை
தான் பேசி ... ... ..."

என்று பாடல் போய்க் கொண்டிருக்கிறது. இறுதியிலுள்ள மங்கள வாழ்த்துப் பாடலின் முதல் மூன்று அடி மட்டும் வருமாறு:-

"ஆல்போல் தழைத்து அறுகுபோல் வேருன்றி
மூங்கில்போ லன்ன சுற்றம் முசி (முறி)யாமல்
வாழ்ந்திருப்பீர்—என்றும் இருப்பீர்"

என்பது பாடல். ஆல மரம், அரசர் பெரும் படையுடன் தங்கும் அளவுக்குப் பரந்து விரிந்து தழைத்திருக்கும் என்பது பலரும் அறிந்த செய்தி. அறுகம்புல், மேலே கருங்கல் சக்கை போட்டுத் தார் ஊற்றினாலும்—கொடிய கோடைக்குப் பின் மழை தூறியதும் மீண்டும் முளைத்து மேலே வந்து விடும் என்பதும் பலரும் அறிந்த செய்தியே. ஆனால் மூங்கில் பற்றிச் சிலருக்குத் தெரியாமல் இருக்கலாம். மூங்கில் ஓராண்டுக்கு ஒரு முறையோ அல்லது சில—பல ஆண்டுகட்கு ஒரு முறையோதான் பூக்கும்.

பூத்து மலர்ந்ததும் மூல மரம் அழிந்து விடும். அதனால்தான், ஆல்போல் தழைத்தும் அறுகுபோல் வேர் ஊன்றியும் வாழ்க -ஆனால் மூங்கில் போல் அழியாமல்-வாழ்க என்று வாழ்த்து கின்றனர். ஈண்டு,

"நண்டு சிப்பி வேய் கதலி நாசமுறுங் காலத்தில்
கொண்ட கருவளிக்கும் கொள்கைபோல்..."

என்னும் நீதி வெண்பாப் பாடல் ஒப்பு நோக்கத்தக்கது. வேய்=மூங்கில்.

முருகவேள் பன்னிரு திருமுறை

தொகுத்து உரையும் எழுதியவர் வ.சு. செங்கல்வராயப் பிள்ளை. முதல் பதிப்பு, 1951 ஆம் ஆண்டு, வ.சு. செங்கல்வ ராயப் பிள்ளை வ.ச.மயிலேறும் பெருமாள் பிள்ளை ஆகியோரால் வெளிவந்தது. இரண்டாம் பதிப்பு, 1952 ஆம் ஆண்டு, சென்னை மீனாட்சி கலியாண சுந்தரம் என்பவரால் வெளிவந்தது. மூன்றாம் பதிப்பு, 1965 ஆம் ஆண்டு, சென்னை சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தால் வெளிவந்தது. முருகனைப் பற்றிய பன்னிரண்டு படைப்புகளின் தொகுப்பு இந்நூல். பன்னிரண்டாவன:

1. முதல் 6—ஆறு படை வீட்டுத் திருப்புகழ்கள்
7. பிற ஊர்த் திருப்புகழ்கள் பல
8. கந்த ரலங்காரம்—கந்த ரந்தாதி
9. திரு வகுப்பு, வேல் விருத்தம், மயில் விருத்தம், சேவல் விருத்தம்
10. கந்தரநு பூதி
11. முருக அடியார்கள் பலர் பாடியுள்ளனவற்றிலிருந்து திரட்டப்பட்ட சில பகுதிகள், திருமுருகாற்றுப்படை
12. சேய்த் தொண்டர் புராணம் - வரகவி தேனூர்ச் சொக்கலிங்கம் பிள்ளை இயற்றியது. மொத்தப் பாக்கள் 2708.

சிங்கைப் பிரபந்தத் திரட்டு

விக்கிரம சிங்க புரம் சிங்கை எனச் சுருக்கிச் சொல்லப்பட்டுள்ளது. நமச்சிவாயக் கவிராயர் இயற்றிய சில நூல்களின் திரட்டு இது. இதனை மு.ர. கந்தசாமிக் கவிராயர் அச்சிட்டார்.

உள்ளுறை: விக்கிரம சிங்கபுரம் முக்களாலிங்கர் மீது பாடிய விருத்தம், கலித்துறை அந்தாதி, கொச்சகக் கலிப்பா, சந்த விருத்தங்கள், சிங்கைச் சிலேடை வெண்பா முதலிய நூல்கள் உள்ளன. இந்தத் திரட்டில் நெல்லை-பாபநாசம் உலகம்மை மீது பாடிய பல சிறு நூல்களும் இடம்பெற்றுள்ளன.

சிவஞானக் களஞ்சியம்

வெ-த.ச. மீனாட்சி சுந்தரம் பிள்ளை, திருவாவடு துறை, வித்யா பவர் பிரஸ். உ-ஞானாமிர்தம், திரு விளக்கு வழிபாடு, பிரதோஷ விரதப்பயன் திருத்தணிகைத் திரு விருத்தம் ஆகிய நூல்கள் கொண்ட களஞ்சியம்.

எட்டுக் குடி நூல்கள்

தொ-சொ. சிங்கார வேலனார். வெ-பி.சிங்காரம்பிள்ளை. 1957, எட்டுக்குடி அந்தாதி, விநாயகர் தோத்திரப் பாடல்கள், கந்தர் அலங்காரம், கந்தர் அநுபூதி, எட்டுக்குடித் திருப்புகழ், எட்டுக்குடித் தேவாரம்—ஆகியவற்றின் தொகுப்பு.

பலவகைத் திரட்டு

கபில ரகவல் முதலாக 38 நூல்களின் திரட்டு. மதுரை வீரசுவாமி கதை, கெருடப் பத்து ஆகியன உள்ளன. மற்றொன்றும் தெரியவில்லை.

வள்ளலார் பிரபந்தங்கள்

ஆ - சீர்காழி வள்ளலார். தஞ்சை சரசுவதி மகால் வெளியீடு. வாணி பிரஸ், சீரங்கம். 1959. இராம. கோவிந்தசாமி பிள்ளை, கௌரவ காரியதரிசி கோபாலன் ஆகியோருக்கும் இவ்வெளியீட்டில் பங்குண்டு. நூல்கள் - வள்ளலார் ஞான சாகரம், தத்துவ விளக்கம், திரு நெறி விளக்கம், சதாசிவ ரூபம் என்னும் நூல்களின் திரட்டு.

வைத்தியச் சில்லறைக் கோர்வைகள்

வெ-மாணிக்க முதலியார். விய ஆண்டு. பதினெண் சித்தர்கள் இயற்றிய 87 நூல்களின் தொகுப்பு இது.

சிவகங்கைச் சரித்திரக் கும்மியும் அம்மானையும்

M.G.O.M.S. 34. வெளியீடு—தி. சந்திரசேகர். 1954. சிவ கங்கைச் சரித்திரக் கும்மி—சிவகங்கைச் சரித்திர அம்மானை. கும்மி ஆசிரியர்: முத்துச்சாமி. அம்மானை ஆசிரியர்—முருகே சன் என்னும் முருகையன். சார்வரி, வைகாசி, 30 ஆம் நாள்.

R. 3436(அம்மானை). R. 3437. காகிதப் பிரதி. 1951—52 -இல் மதுரைத் தமிழ்ச் சங்கத்திலிருந்து வந்த ஓலைப் பிரதியி லிருந்து எழுதியது. இது சிவகங்கை வட்டார வரலாறு தொடர் பான தொகுப்பு.

தனிப் பாசுரத் திரட்டு

ஆ—எழுமலை செட்டியார். கலா ரத்நாகர அச்சுக் கூடம், சென்னை. 1878. உ—பொதுநூல், சிறப்புநூல், திருவெண்பா, விற்பனம், அருளாட்சி ஆகிய ஐந்து நூல்களின் தொகுப்பு.

திரு அருட்பாத் திரட்டு

ஆ—தருமையாதீனம் குரு மகா சந்நிதானம் சிவஞான தேசிக பரமாசாரிய சுவாமிகள். தருமை யாதீன வெளியீடு ஞான சுந்தரம் அச்சகம், தருமபுரம். முதல் பதிப்பு - 1958; இரண்டாம் பதிப்பு - 1972. இது, 26 ஆம் சந்நிதானம் சண்முக தேசிக ஞான சம்பந்த பரமாசாரியார் விருப்பப்படி வெளி யிடப்பட்டது.

உ—காசிதுண்டி ராஜ கணபதி திருவருட்பா முதல் தட்சணா மூர்த்தி திருவருட்பா ஈறாக உள்ள 17 அருட்பா நூல்களின் தொகுப்பு. இவருடைய தோத்திரப் பாக்கள் 'அருட் பா' என்னும் பெயர் வழங்கப்பட்டுள்ளன.

பெரிய ஞானக் கோவை

ஆ—பதினெண் சித்தர்கள். இப்பதிப்பில் 26 சித்தர்கள் புதி

தாகச் சேர்க்கப்பட்டுள்ளனர். தொ—வா. சரவண முத்துப் பிள்ளை. வெ—பி. இரத்தின நாயகர் அண்டு சன்ஸ். திருமகள் விலாச அச்சு நிலையம், சென்னை. 1954. இந்தத் திரட்டு மூன்று பாகங்களாக உள்ளது. முறையே அவற்றில் உள்ள நூல்கள் வருமாறு:

முதல் பாகம்

சிவ வாக்கியர் பாடல்—520. பட்டினத்தாரின் நூல்கள் சில, திருவள்ளுவர் ஞானம், பட்டினத்தார் புலம்பல்கள் சில, பட்டினத்தார் ஞானம் 100, பத்திரகிரியார் புலம்பல், பாம் பாட்டி சித்தர் பாடல்—129, இடைக்காட்டுச் சித்தர் பாடல்—130, அகப்பை சித்தர் பாடல்—90, குதம்பை சித்தர் பாடல்—32, கடுவெளி சித்தர் பாடல், சிவயோக சாரம் முதலிய நூல்கள் முதல் பாகத்தில் உள்ளன.

இரண்டாம் பாகம்

அகத்தியர் ஞானம், அழுகணி சித்தர் பாடல், கொங்கணர் வாலைக் கும்மி, உரோமரிஷி ஞானம், திரு மூலர் ஞானம், கருவூரார் பூசா விதி, ஞானசர நூல் சாத்திரம், சிவானந்த போதம் - 100, நிஜானந்த போதம், நெஞ்சறி விளக்கம், ஞான ரத்தின குறவஞ்சி, ஞானக்கும்மி—185, சுப்பிரமணியர் ஞானம்—32, வல்மீகர் சூத்திர ஞானம், சிவ நாமாவளித் திரட்டு —முதலிய நூல்கள்.

மூன்றாம் பாகம்

சிவ போக சாரம், சொக்க நாத வெண்பா—94, சட்டை முனி முன்ஞானம்—102, சட்டை முனி பின் ஞானம்—101. காகபுசுண்டர் ஞானம்—80, காகபுசுண்டர் உபநிடதம்—31, காகபுசுண்டர் காவியம்—33, சூரியானந்தர் சூத்திரம்—13—முதலிய நூல்கள் உள்ளன.

இது, அளவிலும் பொருளிலும் பெரிய நூலாகும். பெரிய அறிவுக் கருவூலம்—தத்துவம் கருவூலம்—என்னும் சிறப்பிற்கு உரியது இது.

சைவ சித்தாந்த சாத்திர மஞ்சரி

தொ - வெ - தி.கி. நாராயணசாமி நாயுடு, கடலூர். முருகன் அச்சகம், இராயப்பேட்டை, சென்னை. 1970. உ- திரு உந்தியார் முதல் சங்கற்ப நிராகரணம் வரையுள்ள பதினான்கு சித்தாந்த சாத்திரங்களிலிருந்து சிற்சில பகுதிகள் எடுத்துத் தொகுக்கப் பெற்றுள்ளன.

யாகோபு திரட்டு

ஆ - யாகோபு. தொ - குருசாமிக்கோனார். 1939. உ - யாக்கோபு தண்டகம் 110, யாகோபு வைத்திய சூத்திரம் - 55, இடைப் பாகம் - 16, செய்பாகம் - 16 - இவற்றின் தொகுப் பாகிய இது மருத்துவம் பற்றியது.

மூவர் உலா

ஆ - கவிச்சக்கரவர்த்தி ஒட்டக் கூத்தர். உ - விக்கிரம சோழன் உலா, குலோத்துங்க சோழன் உலா, இராசராச சோழன் உலா - ஆகியவை. இந்தச் சோழர் மூவர்க்கும் ஆசிரிய ராகிய ஒட்டக் கூத்தர் இம் மூவர் மேலும் பாடிய உலா நூல்களின் தொகுப்பு இது. நூல் பதிப்பாசிரியர் - பண்டித அ.கோபாலையர். வெ - 'செந்தமிழ் மந்திரம்' புத்தகசாலை, சென்னை. குரோதன - பங்குனி. 25—3—1926.

திருவயிந்திரபுரத் தலத் திரட்டு

பதிப்பு - தி லிட்டில் பிளவர் கம்பெனி, சென்னை. முத்துக் குமரன் பிரஸ், சென்னை. 1963. உ - திருவயிந்திர புலத்தல புராணம், பிள்ளை யந்தாதி, திருமங்கை யாழ்வார் பாடல், தேசிகப் பிரபந்தம், மும்மணிக் கோவை - முதலிய நூல்களின் திரட்டு.

வில்வ நல்லூர்ப் பிரபந்தத் திரட்டு

ஆ - தண்டபாணி சுவாமிகள். பதிப்பு - டாக்டர் கே. ஆர். நஞ்சன். வெளியீட்டு விழா 18—10—1971 திங்கள் மாலை. நூல்கள் - வில்வ நல்லூர் மேல் பதிற்றுப்பத்தந்தாதி, பதிகங்கள், பஞ்சகம், திருப்புகழ், வெண்பா - முதலியன. வீரகவிராயர்

இயற்றிய கடியூர்த் தலபுராணப் பாயிரமும் அடங்கியுள்ளது. பல படங்கள் உள்ளன. அச்சு – அனுமான் அச்சியந்திர சாலை, விழுப்புரம். வில்வநல்லூர் இப்போது வில்லியனூர் என்று பெயர் வழங்கப்படுகிறது.

விளக்கத் திரட்டு

ஆ – தே. அ. சாமி குப்புசாமி. பதிப்பு – காளத்தி, இ. சிதம்பரசாமி பாண்டியர். அமெரிக்கன் டைமண்ட் பிரஸ். சென்னை. 1924. நூல்கள் – அன்னதான விளக்கம் (151 செய்யுள்), கருணை விளக்கம் (200 செய்யுள்), விபூதி விளக்கம் (140 செய்யுள்) – ஆகியன.

அத்தொய்த சாத்திரத் திரட்டு

தொ – சிதம்பர சுவாமிகள். ஆய்வு – அ. இராமசுவாமி. சிவ ரட்சாமிர்த அச்சுக்கூடம், சென்னை. விசய – சித்திரை. நூல்கள் – வாசிட்டத் திரட்டு, பாகவதத் திரட்டு, பிரபுலிங்க லீலைத் திரட்டு, பிரபோத சந்திரோதயத் திரட்டு, பகவத் கீதைத் திரட்டு, சூத சங்கிதைத் திரட்டு, திருப்போரூர்ச் சந்நிதிமுறை – குறுங்கழிநெடில் விருத்தம் – ஆகியவை.

பழனித்திரு ஆயிரம்

ஆ – தண்டபாணி சுவாமிகள். பதிப்பு – தி.மு. செந்தில் நாதப் பிள்ளை. உடுமலைப் பேட்டை கிருஷ்ணன் பிரஸ். ராட்சச – சித்திரை – 1915. நூல்கள் பழனி முருகன் மீது வெண்பாமாலை முதல் வகுப்புகள் வரை பல நூல்களின் திரட்டு. பாடல்கள் ஆயிரம்.

வடவேங்கட வண்ண மஞ்சரி

ஆ – மா. வேங்கட கிருஷ்ணக் கவி. பதிப்பு – வளவனூர் தே. சடகோபப் பிள்ளை. விழுப்புரம் ருக்மணி விலாச பிரஸ்–பிரமோதூத. பலதலைப்புகளில் வண்ணப்பாக்களும், தூதும், பதிகமும் உள்ளன. நாரையும் கிளியும் நாட்டுறு தூது உள்ளது.

உ.வே.சா. தொகுப்பு

தொ—உ.வே.சாமிநாத ஐயர். வெ - எஸ்.கலியாணசுந்தரம் 1943. உ - மத்தியார்ச்சுன மான்மியம், ஏக நாயகர் ஊசல், ஏக நாயகர் தாலாட்டு - முதலியன.

தோத்திரப் பாமாலை

ஆ–எஸ். சுப்பிரமணியக்கவிராயர். பதிப்பு–திரு மங்கைநகர் அ.கி. இராமசாமி செட்டியார். 1925. உ - திருமங்கை நகர்ச் சொன்ன மாலைக் கதிரேசன் மீது பதிகம், மாலை, திருப் புகழ், காவடி சிந்து - முதலியன.

ஆறுமுக நாவலர் பிரபந்தத் திரட்டு

முதல் பாகம் - நல்லூர் த. கைலாசப்பிள்ளை திரட்டியது. சென்னை வித்தியானு பாலன யந்திர சாலை. மூன்றாம் பதிப்பு – ஜய, மார்கழி - 1954. த. கைலாசம்பிள்ளை முக வுரை எழுதியுள்ளார். பல நூல்கள் இந்தத்திரட்டில் உள்ளன.

R. 4964 - கொங்கணர் ஐந்நூல் திரட்டு

ஆ – கொங்கணச் சித்தர். இவருடைய ஐந்து நூல்களின் திரட்டு இது. மொத்தப் பாடல்கள் 519.

கடவுள் தோத்திரத் திரட்டு

ஆ – தி. சங்குப் புலவர்; கிடைக்குமிடம் பாரி நிலையம். பாரி அச்சகம், சென்னை. நூல்கள் – விநாயக மூர்த்தி ஒருபா ஒரு பஃது – வெண்பா, விநாயக மூர்த்தி ஒருபா ஒரு பஃது – கட்டளைக் கலித்துறை, சரசுவதியம்மை நாற்பா மூவின மாலை; கலைமகள் ஒருபா ஒரு பஃது, பாரதி பதிகம், கலை மகள் மாலை - ஆகியன.

R. 2000 – கதம்பச் சுவடி

கதிர் காமத் தேவாரம், சைவத் தேவாரம், திருவெண்ணெய் நல்லூர்த் தேவாரம், ஞானத் தோத்திரம், நாதாந்த சாரம், மாணிக்க மூர்த்தி உண்மை, ஞான வெண்பா, பட்டினத்தார் பாடல்கள் சில, அபிராமி அந்தாதி, தாண்டவ மூர்த்தி

பாடல், குரு நாதாந்தம், மாணிக்கவாசகர் பாடல்கள் சில, மாணிக்க மூர்த்தி வெண்பா, கங்கையறு ஞானம், சிவ புராணம், நெஞ்சறி விளக்கக் காப்பு, பத்திரகிரியார் புலம்பல், ஆனந்தக் களிப்பு, குதம்பைச் சித்தர் பாடல், சிவமாலை, ஞானக் கும்மி - முதலிய பலநூல்களின் பெரிய தொகுப்பு இது.

தொட்டிக்கலை மதுரகவி சுப்பிரமணிய முனிவர் பிரபந்தங்கள்
(முதல் பகுதி)

திருவாவடுதுறை ஆதீன வெளியீடு. விசய - ஆவணி-விநாயக சதுர்த்தி-1953. ஆய்வு: த.ச. மீனாட்சி சுந்தரம் பிள்ளை. பாரதி அச்சுக் கூடம், குடந்தை.

நூல்கள்: திருக்குற்றாலச் சித்திரை சபைத் திருவிருத்தம், திருத்தணிகைத் திருவிருத்தம், சுப்பிரமணியர் திரு விருத்தம், மாதவச் சிவஞான யோகிகள்மீது கீர்த்தனையும் பாடல்களும், திருச்சிற்றம்பலத் தேசிகர் சிந்து, அம்பலவாண தேசிகர் பஞ்சரத்னமாலை, அம்பல வாண தேசிகர் ஆனந்தக் களிப்பு, திருமாளிகைத் தேவர் திருவிருத்தங்கள், ஞான மா நடராசர் கட்டியம் - என்னும் ஒன்பது நூல்களின் திரட்டு இது.

யாழ்ப் பாணம் வேலணையூர் பேரம்பலப் புலவர் நினைவு மலர்

நூல்கள்: பேரம்பலப் புலவர் இயற்றிய வண்ணைச் சிலேடை வெண்பா, வேலனை இலந்தைக் காட்டுச்சித்தி விநாயகர் இரட்டை மணி மாலை என்னும் இரு நூல்கள், பேரம்பலப் புலவர் மீது க.பொ. இரத்தினம் இயற்றிய பேரம்பலப் புலவர் பதிகம், இப்புலவர்மீது மற்றும் பலர் இயற்றிய பாடல்கள் - ஆகியவற்றின் திரட்டு இது. வெளியீடு: பண்டிதர் க.பொ. இரத்தினம். நாவலர் அச்சுக் கூடம், யாழ்ப் பாணம் - 1935.

அவி நாசி நாதர் தோத்திரக் கொத்து

அந்தியூர் அவிநாசி நாதர் என்பவர், திருக்கோவலூரில் இருந்த முதல் ஞானியாரடிகள்மீது பாடியது. புலிசை ஞானியார் மடாலய வெளியீடு. சாது அச்சுக்கூடம், சென்னை- 1939.

உள்ளுறை: நெஞ்சு விடுதூது, சிகாமணிப் பதிகம், அபிடேக மாலை, அட்டகம், மங்கலம் - ஆகிய நூல்களின் திரட்டு.

சிவசம்புப் புலவர் பிரபந்தத் திரட்டு

ஆ-சிவசம்புப் புலவர், தொ-செவ்வந்திநாத தேசிகர். வெ - ஈழ கேசரி ஆசிரியர் நா.பொன்னையா, இலங்கை திருமுருகன் அழுத்தகம், சுன்னாகம் (இலங்கை). உ - பாஸ்கர சேதுபதி கல்லாடக் கலித்துறை, பாஸ்கர சேதுபதி நான் மணி மாலை, பாண்டித்துரைத் தேவர் நான் மணி மாலை, மயில் வாகன வம்ச வைபவம், பருத்தித்துறைக் கலித்துறை, வலவைக் கலித்துறை, பலதனிச் செய்யுள் - ஆகியவற்றின் திரட்டு. ஆண்டு 1939. இந்நூலில், அச்சகம் என்பது 'அழுத்தகம்' என்று குறிப் பிடப் பட்டிருப்பது குறிப்பிடத்தக்கதாகும்.

சந்தானா சாரியர் புராண சங்கிரகம்

ஆ - திருவாரூர் சாமிநாத தேசிகர். பதிப்பு-த.ச.மீனாட்சி சுந்தரம் பிள்ளை .வெ-திருவாவடுதுறை ஆதீனம்.இது, யாழ்ப் பாணம் வண்ணைநகர் சுவாமிநாதப் பண்டிதரது சைவ வித்தி யாநு பாலன அச்சியந்திரசாலையில் அச்சிடப்பட்டது. இரண் டாம் பதிப்பு—மாசி, விசுவாவசு. 1951.

சைவ சமயத்தில், குறிப்பிட்ட நால்வர் சந்தானா சாரியர் கள் என்று குறிப்பிடப்பட்டுள்ளனர். அவர்கள் ,மீது புராணம் பாடப்பட்டுள்ளது. அவையாவன: மெய்கண்டார் புராணம், அருள் நந்தி புராணம், மறை ஞான சம்பந்தர் புராணம், உமாபதி சிவாசாரியார் புராணம் ஆகியவை. இந்நான்கின் தொகுப்பே இது.

தூவும் மலரே

ஆ - ஈழத்துக் குழூஉ இறையனார். தொ-அம்பலத்தான். கலைவாணி அச்சகம், யாழ்ப் பாணம். இது, நான்கு கதைப் பாடல்களின் தொகுப்பு. அவை: சீதனக் காதை, விந்தை முதி யோன், பாணர் புரவலன், தீ வெட்டிக் கள்ளர் - ஆகியவை. 1962.

கவி ராட்சசக் கச்சியப்ப முனிவர் பிரபந்தத் திரட்டு

முதல் பகுதி. திருவாவடுதுறை ஆதீன வெளியீடு. விசய, புரட்டாசி, 1953. கலைமகள் விழா வெளியீடு. ஆய்வு-த.ச. மீனாட்சி சுந்தரம் பிள்ளை. முருகன் அச்சகம், கும்ப கோணம்.

நூல்கள்: பிரமீசர் பதிற்றுப்பத் தந்தாதி, கச்சி ஆனந்த ருத்திரேசர் பதிற்றுப்பத் தந்தாதி, கச்சி ஆனந்த ருத்திரேசர் கழி நெடில், கச்சி ஆனந்த ருத்ரேசர் வண்டு விடு தூது, பஞ் சாக்கர தேசிகர் அந்தாதி - ஆகியவை. குறிப்புரை உண்டு.

இரட்டையர் பிரபந்தங்கள்

ஒருவர் குருடர் - ஒருவர் முடவருமாகிய இரட்டையர்கள் கலம்பகம் பாடுவதில் சிறந்தவர்கள். 'கலம்பகத்திற்கு இரட் டையர்கள்' என்பது மரபு மொழி. அவர்களின் இரண்டு கலம் பக நூல்களும் வேறிரண்டு நூல்களும் இத்திரட்டில் உள்ளன.

திருவாவடுதுறை ஆதீன வெளியீடு-ஆனந்த மா நடராசர் அபிடேக நாள் வெளியீடு. விசய, ஆவணி, 7. வேங்கடேசு வரர் பிரஸ், கும்பகோணம். ஆய்வு-த.ச. மீனாட்சி சுந்தரம் பிள்ளை. 1953.

நூல்கள்: தில்லைக் கலம்பகம், திருவாமாத்தூர்க் கலம்ப கம், ஏகாம்பர நாதர் உலா அம்மானையுள் சில பாடல்கள்- ஆகியவை.

மூவர் பாடல் திரட்டு

திருவாவடு துறை ஆதீன வெளியீடு. 1951.

புலவர்கள் மூவர் பாடிய நூல்களின் பெயர்கள் புலவர் பெயர்களுடன் வருமாறு:

1. உலகுடை நாயனார் கழி நெடில்-உலகுடை நாயனார்.
2. பெரிய பிள்ளை திருவெண்பா-சிவபுரம் பெரிய பிள்ளை.
3. அம்பல வாண தேசிகர் ஆனந்தக் களிப்பு-தொட்டிக்கலை. சுப்பிர மணிய முனிவர்.

சுப்பய்ய சுவாமிகள் நூற்கொத்து

ஆ–சுப்பய்ய ஞான தேசிகர். வெ. தட்சணாமூர்த்தி சுவாமிகள் மடம், திருவாரூர். மதுரை சுப்புராயலு நாயடு பிரஸ், 1964. உ – வீரசேகர மாலை முதல் தண்டாயுதபாணி தோத்திரப்பா வரை பல நூல் தொகுப்பு.

வைணவ நூல் திரட்டு

பவானி அச்சகம், சித்தூர். ஆண்டு-1924 முதல் 1929 வரை. நூல்கள் – வத்சலா கல்யாணக் கும்மி (1924), நம்மாழ்வார் சரித்திர வைபவக் கும்மி, பல புலவர்கள் இயற்றிய பஜனைப் பாடல்கள் (1926), வேங்கடேசர் சாட்சி சொன்ன சரிதை (1927), திருப்பதி வழிநடை அலங்காரப் பாட்டு (1929)-இந்நூல்கள் தனித்தனியாக முதலில் அச்சிடப்பட்டிருப்பினும், பின்னர் ஒன்றாகத் திரட்டி வெளியிடப்பெற்றுள்ளன.

பன்னூல் கொத்து

அறப்பளீச்சுர சதகம் முதல் அரிச்சந்திரன் கொம்மி வரை – 14 நூல்களின் தொகுப்பு.

சித்தர் நூல் திரட்டு

சித்தர்களின் 64 நூல்களின் திரட்டு. முதல் பக்கம் இல்லாததால் மற்ற விவரங்கள் தெரியவில்லை.

வைத்திய வாதயோக ஞான சாத்திரத் திரட்டு

இரண்டாம் பாகம். ஆய்வு - த. குப்புசாமி நாயுடு. பதிப்பு– ஜி. இராமசாமிக் கோன் – அச்சுக் கூடம். 1934. பல சித்தர்கள் – முனிவர்கள் அருளியவற்றின் தொகுப்பு. நூல்கள்–போகர் அருளிய உபதேச ஞானம் 150 பாடல்கள் முதலாக, வால் மீகி சுத்த ஞானம் 16 பாடல்கள் வரையான 26 பகுதிகள் உள்ளன. ஒவ்வொரு பகுதியிலும் பல பாடல்கள் உள்ளன.

குப்புசாமி நாயுடு முகவுரையில் கூறியிருப்பது: “இவர்தம் பாடல்களைத் தொகுத்து ‘யோக ஞான சாத்திரத் திரட்டு’

என்னும் பெயரில் 12 பாகங்கள் வெளியிட்டிருக்கிறார்கள். இது, வாதயோகம் - இரண்டாம் பாகம்.

பதினெண் சித்தர் நாடி சாத்திரத் திரட்டு

தொகுப்பு - பதிப்பு - முகவுரை - களத்தூர் கந்தசாமி முதலியார் (ஆயுர்வேதபாஸ்கரர்). வெ-இரத்தின நாயகர் சன்ஸ் - திருமகள் விலாச அச்சியந்திர சாலை, சென்னை. 1952. மொத்தச் செய்யுள், 1314. உள்ளுறை-அகத்திய முனிவர் நாடி முதல் கொங்கணர் நாடி வரை 18 சித்தர்கள் அருளிய நாடிகளின் தொகுப்பு.

மலர் வழிபாடு (அர்ச்சனை)

சிவ பெருமான் மீது: ஆ-ப. இராமநாதன் பிள்ளை. பலநூல் பாடல்கள்-கழக வெளியீடு-ஆகஸ்ட், 1954.

உமையம்மை மீது:- ஆ-செ.ரெ. இராமசாமிப் பிள்ளை. கழக வெளியீடு--அப்பர் அச்சகம், சென்னை-1954.

அம்பலவாணர் மீது:-ஆ-செ.ரெ. இராமசாமிப் பிள்ளை. கழகம், 1954.

முருகன் மீது:- செ.ரெ. இராமசாமிப் பிள்ளை. 1954.

திருமாள் மீது:-பல நூல்களிலிருந்து பண்டிதை. எஸ். கிருஷ்ணவேணி அம்மா தொகுத்தது. கழகம். 1954.

திருக்கோயில் வழிபாடு:- தொகுப்பு-ப. இராமநாதன் பிள்ளை. 1954. கழகம். வழிபாட்டிற்கு உரிய பாடல்கள் குறிப்புரையுடன் உள்ளன.

சீ காழிச் சிற்றம்பல நாடிகள் திரட்டு

வெ-திருவாவடுதுறை ஆதீனம். சய-புரட்டாசி-பூரநாள். 1954. திருத்துறையூர் அருள் நந்தி தேவர் குருபூசை வெளியீடு.

உ-சிற்றம்பல நாடிகள் மீது பாடப்பட்ட நூல்களின் திரட்டு. நூல்கள்: சிற்றம்பல நாடிகள் கலித்துறை, சிற்றம்பல

நாடிகள் வெண்பா, சிற்றம்பல நாடிகள் தாலாட்டு, சிற்றம் பல நாடிகள் அநுபூதி விளக்கம், சிற்றம்பல நாடிகள் வரு காலத் திரங்கல், சிற்றம்பல நாடிகள் நிகழ் காலத் திரங்கல், சிற்றம்பல நாடிகள் கழிகாலத் திரங்கல், சிற்றம்பல நாடிகள் திருப்புன் முறுவல் – ஆகியவை.

மெய்கண்ட சாத்திரத் திரட்டு

வெ – திருவாவடுதுறை ஆதினம் – சுப -- ஆவணி - 1954. விநாயக சதுர்த்தி மலர். முருகன் அச்சுக்கூடம், குடந்தை. நூல்கள்–போற்றிப் பஃறொடை, கொடிக் கவி, நெஞ்சு விடு தூது' உண்மை நெறி விளக்கம் ஆகியன. பழைய உரையும் உண்டு.

கொடை மன்னர் பனுவல்

ஆ – வித்துவான் பெ. கோவிந்தன். சைவ சித்தாந்த நூற் பதிப்புக் கழக வெளியீடு. அப்பர் அச்சகம், சென்னை. 1954. வள்ளல்கள் எழுவரின் வரலாறு பாடல்களாக இயற்றப் பட்டுள்ள தொகுப்பு

இலக்கண நூல் திரட்டு: பஞ்ச லட்சண மூலமும் நேமி நாதமும் வீரசோழியமும்

தொ – அ. இராமசுவாமி. வெ–சரசுவதி மகால், தஞ்சை. விசய–ஆனி. சிவ ரட்சாமிர்த அச்சுக் கூடம், சென்னை. நூல்கள்: நன்னூல், அகப் பொருள் விளக்கம், 'புறப்பொருள், வெண்பா மாலை, யாப்பருங்கலக் காரிகை, தண்டி யலங்காரம், நேமி நாதம், வீர சோழியம் – இவற்றின் மூலங்கள் (நூற் பாக்கள்) தரப்பட்டுளன.

பண்டார சாத்திரம்

திருவாவடு துறை ஆதின வெளியீடு. நமச்சிவாய மூர்த்தி அச்சகம், திருவாவடுதுறை. இப்பெயரில் நான்கு வெளியீடுகள் செய்யப்பட்டுள்ளன. நான்கையும் ஆண்டு வாரியாகக் காண்பாம். உரையும் உண்டு.

1. விசாரி புரட்டாசி. 11-10-1959. நூல்கள்: அம்பலவாண தேசிகர் தசகாரியம், தட்சணா மூர்த்தி தேசிகர் தசகாரியம், சுவாமி நாத தேசிகர் தச காரியம்.

2. சர்வதாரி புரட்டாசி. 30-9-1960. நூல்கள்; சன்மார்க்க சித்தியார்; சிவாச்சிரமத் தெளிவு.

3. பிலவ - ஐப்பசி. 19-10-1961. நூல்: சித்நாந்தப் பஃறொடை

4. 1962. நூல்கள்: உபதேசப் பஃறொடை. பஞ்சாக்கரப் பஃறொடை

சந்தமிகு தமிழ் மறை

நான் பார்த்த பிரதியில் முகப்புப் பக்கம் இல்லையாதலின் தொகுத்தவர்-காலம் முதலிய விவரங்கள் தெரியவில்லை.

நாலாயிரத் திவ்வியப் பிரபந்த நூல்கள் சிலவும், தேசிகர் நூல்களிலிருந்து சில பாடல்களும் இதில் உள்ளன.

நூல்கள்:இயற்பா (817 பாடல்கள்), முதல் திருவந்தாதி, இரண்டாம் திருவந்தாதி, மூன்றாம் திருவந்தாதி, நான்முகன் திருவந்தாதி, திரு விருத்தம், திருவாசிரியம், பெரிய திருவந்தாதி, திருவெழு கூற்றிருக்கை, சிறிய திருமடல், பெரிய திருமடல், இராமானுசர் நூற்றந்தாதி-ஆகிய நூல்கள் இடம் பெற்றுள்ளன. மேலும், வேதாந்த தேசிகர் இயற்றியுள்ள 24 நூல்களிலிருந்து 405 பாடல்கள் எடுத்துச் சேர்க்கப்பட்டுள்ளன.

இந்தத் தொகுப்புக்குச் "சந்த மிகு தமிழ் மறை" என்னும் பெயர் சூட்டியிருப்பது உள்ளத்திற்கு இன்பம் பயக்கிறது. இவை சந்தத்தோடு பாடுதற்கு மிகவும் ஏற்றவை.

திருச்செந்தில் முருகன் சந்நிதி முறை

ஆ - முருகைய பங்கஜாட்சி. பதிப்பு - சி. சோமசுந்தரம் பிள்ளை, இரமணாசிரமம், திருவண்ணாமலை. Premier Art Press, Madras. 1963. இது இரண்டு பாகங்களாக உள்ளது. முதல் பாகம்-வினை நீக்கப் பதிகம் முதல் பூச்சூட்டல் வரை 52 தலைப்புகள். இரண்டாம் பாகம் - திருப்புகழ்ச் சந்தம்—கீர்த்தனங்கள், கண்ணிகள். 'பந்த மெனுமாழி' முதல் 'வாழ்த்து' வரை 74 தலைப்புகள்.

புதுத் தமிழ்க் கவி மலர்கள்

தொ - திருலோக சீதாராம். இமாலயப் பிரசுரங்கள், சென்னை. கலா மோகினி பிரஸ், சென்னை. 1957. தென் மொழிப் புத்தகத் தாபன ஆதரவு பெற்ற வெளியீடு-உள்ளுறை கவிமணியின் 'என் சுகதுக்கங்கள்'முதல் சுரதாவின்'தென்னாட்டின் சித்திரை' வரை 55 தலைப்புகளில் பாடல்கள். கவிமணி, சுரதா அன்றி மேலும் புலவர் பலரின் பாடல்கள் உள்ளன. ஒவ்வொரு புலவர் பற்றியும் கவிதைத் தொடக்கத்தில் சிறு வரலாறு உள்ளது.வரலாற்றில்,ஊர்,பிறந்தநாள்,புனை பெயர் பல்வேறு சிறப்புகள் தரப்பட்டுள்ளன. இதன் இரண்டாம் வெளியீட்டில், பாரதிதாசனின் 'தமிழ்ப் பேறு'என்னும் பகுதியும் சேர்க்கப்பெற்றுள்ளது.

சிவ போக சிந்தாமணி என்னும்
ரமணானுபூதி

ஆ - பாரத்வாஜி முகவைக் கண்ண முருகனார். வெ - ரமணயதானந்தர்.தி லிபர்ட்டி பிரஸ், சென்னை. முதல் பாகம் 1960. ரமணரைப் பற்றிய பல பாடல்களும் பல சிறு நூல்களின் தொகுப்பும் உள்ளன.

இரண்டாம் பாகம் - ஆசிரியர் அவரே. வெ-ரமண பக்தர் சபை, 'தர்மாலயம்', சென்னை. M.L.J.Press, Madras, 1961. ரமணரைப் பற்றிய பல பாடல்களும் பல சிறு நூல்களின் தொகுப்பும் உள்ளன.

தமிழ்ப் பா மஞ்சரி

ஆசிரியர்: உ.வே. சாமிநாத ஐயர். அடிக் குறிப்பு உண்டு. முதல் பாகம் (தெய்வத் துதிப் பாடல்கள்). பதிப்பாசிரியர் கி.வா. ஜகந்நாதன். வெளியீடு: உ.வே.சாமிநாதஐயர் நூலகம், அடையாறு, சென்னை. 1961. உள்ளுறை:

1. விநாயகப் பெருமான் துதிகள்; 2. முருகன் துதிகள்; 3. சிவ பெருமான் துதிகள்; 4. அம்பிகை துதிகள்; 5. சரசுவதி துதிகள். மொத்தப் பாடல்கள் 343.

இரண்டாம் பாகம்: பதிப்பு-வெளியீடு-மேற் கூறியனவே. ஆண்டு-1962. உள்ளுறை:

1. தனிப் பாடல்கள்; 2. மொழி பெயர்ப்புப் பாடல்கள்; 3. பதிப்புப் பாடல்கள்; 4. திருத் தொண்டர்கள்; 5. பழகிய பெரியோர்; 6. சிறப்புப் பாயிரங்கள். மொத்தப் பாடல்கள் 441. ஆக இரண்டு பாகங்களிலும் உள்ள மொத்தப்பாடல்கள் 784. இரண்டாம் பாகம் 344 முதல் 784 வரை.

சவரி ராயலு நாயகர் பாடல் திரட்டு

இவரது நினைவுநாள் விழாமலர். 28—12—1952. ஏஷியன் பிரின்டர்ஸ், சென்னை. வெளியீடு-நாயகரின் குடும்பத்தினர். உள்ளுறை:

மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை, நீதிபதி வேத நாயகம் பிள்ளை, வித்துவான் சுப்புராயச் செட்டியார், வித்துவான் தி.தியாக ராயச் செட்டியார் முதலியோர் நாயகரைப் பற்றிப் பாடிய பாடல்கள் உள்ளன. மற்றும், நாயகர் பாடிய நூல்களான பேரின்பச் சதகம், பேரின்ப அந்தாதி, பேரின்பப் பாடல்கள், திருமரி-சேசுநாமப் பெருமை, பாகூர் செயராக்கினி மாதா திரு நவச் சதகம், திருக்குருசின் மான்மியம், ஆனந்தக் களிப்பு, சாதகம், உபகார மாதா கண்ணிகள், தேவ தோத்திர சங்கீதக்கீர்த்தனங்கள் (இராகம் தாளத்துடன்)-முதலியவை.

நாயகர் புதுச்சேரிக் கிறித்துவர், திரிசிரபுரம் மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளையின் மாணவர். மீ.சு.பிள்ளை நாயகர் மீது 'சவரி ராயலு நாயகர் மாலை' என்ற நூலும், தியாகராயச் செட்டியார் 'சவரி ராயலு இரட்டை மணி மாலை' என்ற நூலும் இயற்றியிருப்பது நாயகரின் பெருமைக்குச் சான்றாகும்.

அருணகிரி நாதரின் ஆடும் பரி வேல் அணி சேவல் விருத்தங்கள் (திரு வெழு கூற்றிருக்கையுடன்)

பதிப்பு; அருளிசை S.V. சுப்பிரமணியன்,—அருட்கவி,

S.V. சேதுராமன். அருணகிரிநாதர் சஷ்டி வழிபாட்டுச் சங்கம், திருச் செங்கோடு. பிப்ரவரி 1965. உள்ளுறை: மயில் விருத்தம், வேல் விருத்தம், சேவல் விருத்தம் திருவெழு கூற்றிருக்கை, பழநித் திருப்புகழ்.

ஆண்டியப்பப் பிள்ளைமீது பிரபந்தங்கள்

எட்டயபுரம் க. ஆண்டியப்பப் பிள்ளை மீது பாடிய நூல்களின் தொகுப்பு. ஆசிரியர் - எட்டயபுரம் அவைக்களப் புலவர் க. மீனாட்சி சுந்தரக் கவிராயர். மதுரை விவேகபாநு அச்சியந்திர சாலை-1913. நூல்கள்: ஆண்டியப்பப்பிள்ளை பிள்ளைத் தமிழ், ஆண்டியப்பப் பிள்ளை உதார சோதனை மஞ்சரி ஆண்டியப்பப்பிள்ளை மீது தனிக் கவிகள் - ஆகியவை.

கவிதை அஞ்சலி

ஆசிரியர்-ந.ரா. முருகவேள். தொகுப்பு-மனசை ப. கீரன், முதல்பதிப்பு—ஜூன் 1967. முருகன் அச்சகம், சென்னை. உள்ளுறை: பல பெரியோர்க்கு அஞ்சலிக் கவிதைகள், செந்தமிழ்க் கவி மலர்கள், மணி விழா வாழ்த்துகள், வரவேற்புகள், கவிதைக் கடிதங்கள், நன்றியுரைக் கவிதைகள், பாராட்டுகள், கையறு நிலைக் கவிதைகள், திருமண வாழ்த்துப் பாக்கள், பல்பொருட் கவிதைகள், பிற்சேர்க்கை—ஆகியன.

நூற்றெட்டுத் திருப்பதித் திரட்டு

வெளியீடு-கா. அ. சண்முக முதலியார். அமிர்தா அச்சகம். சென்னை. 1963. உள்ளுறை: திருப்பத்தூர் கா. அ. சண்முக முதலியார் நூற்றெட்டு வைணவத் திருப்பதிகள் பற்றி இயற்றிய 'நூற்றெட்டுத் திருப்பதிப் போற்றி அகவல்' என்னும் நூல் முதலில் உள்ளது. பின்னர், ஆழ்வார்கள் நூற்றெட்டுத் திருப்பதிகள் மீது பாடிய பல பாடல்கள் உள்ளன.

அகத்தியர் தேவாரத் திரட்டும் திரு முறைத் திரட்டும்

சென்னைச் சிவனடியார் திருக்கூட்டத்தினரால், சோபகிருது—ஆடித் திங்களில் (ஜூலை-1903) சென்னை மகாலட்சுமி விலாச அச்சுக் கூடத்தில் பதிப்பிக்கப்பட்டது. உள்ளுறை: அகத்தியர் திரட்டிய தேவாரப் பாக்கள் முதலில் உள்ளன.

பின்னர், சிவனடியார் திருக்கூட்ட வழிபாட்டிற்காகப் பன்னிரு திருமுறைகளிலிருந்தும் திரட்டிய பாடல்கள் உள்ளன.

குமார தேவர் சாத்திரக் கோவையும் பெரிய நாயகி யம்மன் பதிகமும் சிதம்பர சுவாமிகள் நெஞ்சுவிடு தூதும்

இந்தத் திரட்டில் குமார தேவர் இயற்றிய 16 சாத்திர நூல்கள் உள்ளன. அவை: மகாராசா துறவு, சுத்த சாதகம், விஞ்ஞான சாரம், அத்துவித உண்மை, பிரமானுபூதி விளக்கம், ஞானவம்மானை, வேதாந்த தச காரியக் கட்டளை, சகச நிட்டை, உபதேச சித்தாந்தக் கட்டளை, பிரம சித்தியகவல், சிவ தரிசன அகவல், ஆசார நெறியகவல், வேத நெறி யகவல், பிரமானுபவ அகவல், சிவ சமரச வாத அகவல், வேதாந்த தசா வத்தைக் கட்டளை என்பன. மற்றும் சிதம்பர சுவாமிகள் நெஞ்சுவிடு தூது என்னும் நூலும் இந்தத் திரட்டில் உள்ளது: பிற் சேர்க்கையாகப் பெரிய நாயகி யம்மன் பதிகம் உள்ளது.

பண்டார சாத்திரங்கள் பதினான்கு

சித்தாந்த சாத்திரங்கள் போன்றவற்றின் பயிற்சியினால் எண்ணத்தில் தோன்றிய கோட்பாட்டு நூல்களே பண்டார சாத்திரங்களாகும். இந்தத் திரட்டிலுள்ள முதல் பத்து நூல்களை இயற்றியவர் அம்பலவாண தேசிகர் என்பார். முதல் பத்து வருமாறு:

தச காரியம், சன்மார்க்க சித்தியார், சிவாச்சிரமத் தெளிவு, சித்தாந்தப் பஃறொடை, சித்தாந்த சிகாமணி, உபாய நிட்டை வெண்பா, நிட்டை விளக்கம், உபதேச வெண்பா, அதிசய மாலை, நமசிவாய மாலை. தட்சிணா மூர்த்தி தேசிகர் என்பவரும் 'தச காரியம்' என்னும் பெயரில் ஒரு நூல் எழுதியுள்ளார். இது 11 ஆம் நூலாகும். தட்சிணா மூர்த்தி தேசிகரே இயற்றிய 'உபதேசப் பஃறொடை' என்பது பன்னிரண்டாவது நூலாகும். சுவாமி நாத தேசிகர் இயற்றிய 'தச காரியம், என்னும் நூல் பதின் மூன்றாவது. பேரூர் வேலப்ப தேசிகர் இயற்றிய 'பஞ்சாக்கரப் பஃறொடை' என்பது பதினான்காவது நூலாகும்.

பாவைத் திரட்டு

மணிவாசகரின் திருவெம்பாவையும் திருப்பள்ளி யெழுச்சியும் ஆண்டாளின் திருப்பாவையும் கொண்ட தொகுப்பு. காசி மட இலவச வெளியீடு. சாதாரண ஆண்டு மார்கழித் திருவாதிரை. பதிப்பு: வித்துவான் முத்துக் குமாரசாமித் தம்பிரான். கபீர் பிரின்டிங் ஒர்க்ஸ், சென்னை. மூன்றாம்பதிப்பு 1963. பதினோராம் பதிப்பு - 1971. பிற்காலப் பதிப்புகளில், குமர குருபரரின் சகலகலாவல்லி மாலையும் இடம்பெற்றுள்ளது

இரு பாவை நூல்களின் தொகுப்புப் பதிப்பு, பலரால் பல ஆண்டுகளில் செய்யப்பெற்றுள்ளது.

சைவ நூல் திரட்டு

அச்சு - மதராஸ் ரிப்பன் அச்சியந்திர சாலை, சென்னை. நூல்கள்: ஔவை விநாயகர் அகவல், அருணகிரி நாதர் அருளிய முக்தி விநாயகர் அகவல், நக்கீரர் அருளிய விநாயகர் அகவல், குமர குருபரரின் சகலகலா வல்லிமாலை, திருவாரூர் நான்மணி மாலை ஆகியன.அருணகிரி நாதர், நக்கிரர் ஆகியோர் பெயரால் விநாயகர் அகவல் இருப்பது குறிப்பிடத் தக்கது.

திருமலைப் பாடல்கள்

வெ—தெய்வீக வாழ்க்கைச் சங்கம், காஞ்சிபுரம். 1971. திருப்பதி பற்றியும் ஏழுமலையானைப் பற்றியுமான பாடல்களின் தொகுப்பு. கவிதா ரத்னம் ஹா.கி. வாலம் அம்மையார் உருகிப் பாடியவை நூலின் முதல் பகுதியில் உள்ளன. திருவேங்கடத்தானின் உலகச் சிறப்பு, அவயவங்களின் மாட்சி, அருள் பிரபாவம் முதலியவை பற்றி வாலம் அம்மையார் பாடியுள்ளார். நூலின் இறுதியில் இரண்டு பிற்சேர்க்கைகள் (அனுபந்தங்கள்) உள்ளன. அவற்றுள் முதலில், கவிஞர். கா.அ. சண்முக முதலியார் இயற்றிய திருவேங்கடப் பெருமான் திருப்பள்ளி எழுச்சி, பெருமான் துதிகள், அலர்மேல் மங்கைத்தாயார் துதிகள், திரு வேங்கடப் பத்து ஆகிய நூல்கள் உள்ளன.

தில்லைத் திருவாயிரம்

முருகதாசர் என்னும் தண்டபாணி சுவாமிகள் தில்லை தொடர்பாக 44 நூல்களில் பாடிய 1008 பாடல்களின் தொகுப்பு. நூல்களும் அத்தலைப்புகளில் உள்ள பாடல் எண்ணிக்கையும் முறையே வருமாறு:-

| | | |
|---|---|---|
| 1. | காப்பு மூர்த்தி பஞ்சகம் | 5 பாடல்கள் |
| 2. | திருச்சிற்றம்பல வெண்பா மாலை | 52 |
| 3. | ஆனந்தத் தாண்டவ மாலை | 51 |
| 4. | திரு நடனமாலை | 25 |
| 5. | வெண்பா மாலை | 100 |
| 6. | கட்டளைக் கலித்துறை அந்தாதி | 100 |
| 7. | பதிற்றுப்பத் தந்தாதி | 100 |
| 8. | அலங்கார பஞ்சகம் | 100 |
| 9. | கோயில் பத்து | |
| 10. | திரு நீற்றுப் பத்து | |
| 11. | கண்டிகைப் பத்து | |
| 12. | பஞ்சாட்சரப் பத்து | |
| 13. | கல்லாடைப் பத்து | |
| 14. | கோளறு பத்து | |
| 15. | ஐய மறுத்த பத்து | |
| 16. | பொருள் வாதனை தீர்த்த பத்து | |
| 17. | காம வாரி கடந்த பத்து | |
| 18. | மண்மயல் களைந்த பத்து | |
| 19. | கலி வாதனை யற்ற பத்து | |
| 20. | அருள் வாக்குப் பத்து | |
| 21. | பசுவினம் வாழ்கைப் பத்து | |
| 22. | அந்தணர் வாழ்கைப் பத்து | |

| | | |
|---|---|---|
| 23. | மாதவர் வாழ்கைப் பத்து | |
| 24. | அட்டமா சித்திப் பத்து | |
| 25. | திருவிளையாட்டுப் பத்து | |
| 26. | அருட்சித்திப் பத்து | |
| 27. | நெஞ்ச நிலைத்த பத்து | |
| 28. | பிறவி இகழ்ந்த பத்து | |
| 29. | பொன் வண்டுப் பத்து | |
| 30. | கிளிப் பத்து | |
| 31. | நாகணை வாய்ப் பத்து | |
| 32. | அன்னப் பத்து | |
| 33. | குயில் பத்து | |
| 34. | திரிபு மஞ்சரி | 25 |
| 35. | யமக மஞ்சரி | 25 |
| 36. | சிலேடைப் பத்து | |
| 37. | அம்மானைப் பத்து | |
| 38. | உந்திப் பத்து | |
| 39. | குரவைப் பத்து | |
| 40. | உண்மைப் பத்து | |
| 41. | திருப்புகழ் | 125 |
| 42. | வகுப்பு | 25 |
| 43. | வண்ண விருத்தம் | 1 |
| 44. | அநுபூதி உண்மை வெண்பா | 1 |

மேலே பத்து என்னும் தலைப்பில் முடிந்துள்ளவற்றிற்குப் பத்துப் பத்துப் பாடல்கள் சேர்த்துக் கொள்ள வேண்டும்.

திருவரங்கத் திருவாயிரம்

தண்டபாணி சுவாமிகளே திருவரங்கம் தொடர்பாக 42 நூல்களில் ஆயிரம் பாக்கள் பாடியுள்ளார். நூல்களும் பாடல் எண்ணிக்கைகளும் முறையே வருமாறு:-

| | | |
|---|---|---|
| 1. | பாயிரம் | 5 |
| 2. | திருவரங்க வெண்பா மாலை | 25 |
| 3. | சீரங்க நாயக மாலை | 51 |
| 4. | பசுக் காப்பு மாலை | 25 |
| 5. | வெண்பா அந்தாதி | 100 |
| 6. | கட்டளைக் கலித்துறை அந்தாதி | 100 |
| 7. | பதிற்றுப் பத் தந்தாதி | 100 |
| 8. | சீரங்க நாராயண சதகம் | 100 |
| 9. | ஒருபா ஒருபஃது | 10 |
| 10. | இரட்டை மணி மாலை | 20 |
| 11. | மும்முணிக் கோவை | 30 |
| 12. | நான்மணி மாலை | 40 |
| 13. | ஆயுத பஞ்சகம் | 5 |
| 14. | சமய சட்சம் | 6 |
| 15. | சுத்த சத்தகம் | 7 |
| 16. | மந்தி ராட்டகம் | 8 |
| 17. | நவ மணி மாலை | 81 |
| 18. | காட்சிப் பத்து | |
| 19. | புகழ்ப் பத்து | |
| 20. | பொன்னாசைப் பத்து | |
| 21. | பெண்ணாசைப் பத்து | |
| 22. | புவியாசைப் பத்து | |
| 23. | வயின தேயப் பத்து | |
| 24. | அன்னப் பத்து | |

25. கிளிப் பத்து
26. குயில் பத்து
27. மணி வண்டுப் பத்து
28. திரிபு மஞ்சரி 32
29. யமக மஞ்சரி 32
30. ஏக பாதம் 1
31. மும் மண்டில வெண்பா 1
32. மாலை மாற்று 1
33. எழு கூற்றிருக்கை 1
34. ஒரு வருக்கப்பா 1
35. சதுரங்க பந்தம் 1
36. மடக்குத் தாழிசை 1
37. கலவி மகிழ்தல் வண்ணம் 1
38. திருப்புகழ் 100
39. வகுப்பு 21
40. வண்ண விருத்தம் 1
41. திருமகள் அந்தாதி 102
42. வாழி விருத்தம் 1

பெரியோர்கள் நிரம்ப எழுதித் தந்துவிட்டுச் சென்றுள்ளார்கள். இந்த நூல்களை யெல்லாம் வெளியிடுபவர்கள் இல்லை. வெளியிடினும் படிப்பவர் எத்துணையர்?

அலங்காரத் திரட்டு

ஆ-தண்டபாணி சுவாமிகள். பதிப்பு - சென்னை வை.சுந்தரஜயர். கேசரி அச்சுக்கூடம், சென்னை. குரோதன ஆண்டு. நூல்கள்-வேல் அலங்காரம், மயில் அலங்காரம், ஆறு எழுத்தலங்காரம், முருகானந்த அலங்காரம்-ஆகியன.

இராமசாமி ஞான தேசிகத் திரட்டு

ஆ-இராமசாமி ஞான தேசிக சுவாமிகள். வெ-இராம சாமி சுவாமிகள் சஜ்ஜன பண்டு சங்கம்-ஆனந்தாசிரமம்-குமார பாளையம்-1971.-பதவுரை - விளக்க உரையுடன் - 3 நூல்களின் திரட்டு-அவையாவன: -

1. நாநா சீவவாதக் கட்டளை -(சீவன்களின் நிலைமை, ஐம்புலன்கள் முதலியன பற்றியது.

2. கீதாசாரத் தாலாட்டு - (கண்ணனைக் கீதாசாரிய னாகக் கொண்டு, குழந்தையாக்கித் தாலாட்டுவது).

3. சசி வன்ன போதம்-சசி வன்னன் என்பவன் பஞ்சமா பாதகம் புரிந்து தொழு நோய்க்கு ஆளாகிறான். அவன் தந்தை யக்ஞ பாகன் என்பவனது வேண்டு கோளின்படி ஒரு முனிவர் சசிவன்னனுக்குப் போதிக் கிறார் - உபதேசம் செய்து கடைத் தேற்றுகிறார். முனிவர் சசி வன்னனுக்குக் கூறிய உபதேசமே சசி வன்ன போதம்-என்பன.

# 6-1. பிற் சேர்க்கை–1

## எஞ்சிய தொகை நூல்கள்

இதுவரை, மேலே, பல்வேறு வகைத் தொகை நூல்களின் விவரங்கள் - விளக்கங்கள் தரப்பெற்றுள்ளன. விவரம் கொடுக்கப்படாத தொகைநூல்கள் மேலும் நூற்றுக்கணக்கில் எஞ்சி உள்ளன. அவற்றுள் பல இயன்ற அளவு பின்னால் கொடுக்கப் பெறுகின்றன. இந்நூல்கட்கு விவரம் – விளக்கம் தர இயலாமைக்கு உரிய காரணங்களாவன: –

பக்கம்-அளவு நீண்டு கொண்டுபோதல்-மக்களின் வாங்கும் ஆற்றலின் அடிப்படையில் நூலை அமைத்தல்.

விரிவாக-விளக்கமாக எழுதிக் கொண்டு போவதற்குஉரிய உடல்நலம் இன்மை. எழுத எழுதச் சோர்ந்து போதல். தனியொருவர் எவ்வளவுதான் செய்ய வியலும்?

பல நூலகங்கட்குச் சென்று குறிப்பு எடுத்தபோது, பல நூல்களைப் பற்றிய விவரம் சுருங்கிய அளவில் கிடைத்தல்.

சில நூல்களின் பெயர்கள் மட்டும் கிடைத்தல். ஆசிரியர் பெயரும் ஆண்டும் மட்டும் சில நூல்கட்குக் கிடைத்தல்.

வெளியூர்களில் தங்கிக் குறிப்பு எடுத்தபோது, பச்சைத் தண்ணீரில் குளிக்காமலும், காரம் சாப்பிட முடியாததலால் மோர் சோறு மட்டும் உண்டுகொண்டும் பல நாள் செலவழிக்க முடியாமையால், விரைந்து-விரைந்து நூல்களின் பெயர்களை மட்டும் குறித்துக் கொண்டு வந்தமை.

இன்ன பிற காரணங்களால் எல்லா நூல்கட்கும் விவரம்-விளக்கம் தர இயலவில்லை. அடுத்த பதிப்பில், இயன்றால், இன்னும் சில தொகை நூல்கட்கு விவரம்-விளக்கம் தர முயலலாம். சில சில்லறைத் தொகை நூல்களை எடுத்துக் கொள்ளாம்ல் விட்டுவிட்டேன். இனி நூல்கள் வருமாறு: –

திராவிட வேதத் திரட்டு—தொ - கயப்பாக்கம் சதாசிவச்
செட்டியார்—சில தேவாரப் பதிகங்கள்
பன்னிரு திருமுறைப் பெருந்திரட்டு—ப.இராமநாதபிள்ளை
தோத்திரப் பிரபந்தத் திரட்டு—1953
குமர குருதாச சுவாமிகளின் பத்துப் பிரபந்தம்
வினோத ரச ரஞ்சித கீர்த்தனை—நந்தன ஆண்டு
வேமனர் அருள் நெறி விளக்கம்—1937
கூட்டுப் பிரார்த்தனைப் பாமாலை—1961
திருக்கழுக் குன்றத் திருப்பதிகங்கள்—1956
நிலவுப்பூ—சிற்பி பால சுப்பிரமணியன்—1963
திருவண்ணாமலைத் தேவாரங்கள்—விக்கிரம ஆண்டு
வீரமா முனிவர் கவியரங்கப் பாடல்கள்—1968
ஞானகாவியம் ஆயிரம்—அகத்தியர்—1896
பதினெண் சித்தர் தர்க்கம் ஆயிரம் -
தோத்திரத் திரட்டு—மணிவாசக மன்றம்—1950
தமிழ்க் காப்பியங்கள்—கழகம்—1964
திருவிசைப்பா, திருப்பல்லாண்டு, பெரிய புராணச்
செய்யுள் திரட்டு—1904
தில்லைத் திருவாசகப் பதிகங்கள்—வெகுதானிய ஆண்டு
வெண்பா மலர் மஞ்சரி—லிட்டில் பிளவர் கம்பெனி
சிவ கணபதி—முருகன் தியானாமிர்தத் திரட்டு—1927
திருவடிப் புகழ்மாலை—கழகம்—துந்துபி
பொது தர்ம சங்கீத மஞ்சரி—1914
திருப்பாதிரிப்புலியூர்த் தோத்திரக் கொத்து—1917
மெய்கண்ட சாத்திரங்கள்—திருவாவடு துறை—1897
மெய்கண்ட சாத்திரங்கள்—தருமபுரம்—1956
பூக்காடு—ஆனந்தம்—1966
கலைமகள் விழா மலர்த் திரட்டு—1954
திருவருட்பா திருப்பாராயணத் திரட்டு
தமிழகத்தின் கலைமணிகள்—1959
மலர்ந்த பூக்கள்—சூரியன் வருவது யாராலே முதல்...
உவகை உள்ளம்—1955
இரு திருமுறைகள்—1932
இராமாநுச தேசிக தோத்திரங்கள்

பாரதியார் இன்கவித் திரட்டு
கனி கொய்தல்—1947
அக்காளும் தங்கையும்—1957
கவிதாஞ்சலி—நாமக்கல்லார்—1956
பல்வகைத் திரட்டு—பல நூல்கள்—ஏவிளம்பி - புரட்டாசி.
செய்யுள் திரட்டு—பலர் பாடியவை—1913
சிறு நூல் திரட்டு—பத்து நூல்கள்—1928
திருக்கடவூர்த் திருமுறையும் பிரபந்தங்களும்—1957
இராமாயண நீதிக் கவித்திரட்டு—பரிதாவி ஆண்டு
மூன்று திரட்டுகள்—விசய—சித்திரை
சாந்தோபதேச மஞ்சரி—பலநூல் திரட்டு—1918
பால தண்டாயுதபாணி மாலையும் பதிகமும்
முருகன் தோத்திரப் பாக்கள்—பலஊர் முருகன்—1980
பஞ்சதந்திரக் கதைப் பாடல் திரட்டு—வீரமார்த்தாண்ட தேவர்
தமிழ்த் திரட்டு—1915
தோத்திரப் பாமாலை—1925
பிரார்த்தனை—நாமக்கல்லார்—1938
இரங்கல் பாக்கள்—பழநியப்பச் செட்டியார் மீது பலர் இரங்கிப் பாடியவை—1912
ஸ்ரீ பக்நாம்ருத மஞ்சரி என்னும் தோத்திரப்பாடல் திரட்டு—1901
கந்தர் பஜனை—தாது—புரட்டாசி
சாற்றுக் கவிகள்—ஆசிரியர் உ.வே.சா.
சிவ ஜாலத் திரட்டு—D.16 - 5—13
சிவானு போகத் திரட்டு—R.364—பல நூல்களிலிருந்து எடுத்த பல பாடல்களின் திரட்டு
சின்ன குழந்தைக் கீர்த்தனம்—D.H.14 - 4,சிறுபிள்ளைகட்கு ஏற்றது
சீட்டுக் கவிகளும் சிங்காரப் பாடல்களும்—D.16.14 - 3
திரு மந்திர மாலை—இந்தப் பெயரில் 7 சுவடிகள் உள்ளன. திருமந்திரத்திலிருந்து பாடல் தொகுப்புகள்
திருமயிலைக் கபாலீசுவரர் தோத்திரக் கீர்த்தனை—D.1799

பலவிதக் கீர்த்தனங்கள்—R.466 W—பழநி முருகன் கீர்த்தனங்கள் முதலியவை.

நாடிநிதானம் முதலியன—R.149.C—மருத்துவம் பற்றியது.

நீதி சார் அனுபவத் திரட்டு—D.181.இதில், மனிதர் இயல், நீதி இயல் என்னும் இரு பிரிவுகளில் பல செய்திகள் கூறப்பட்டுள்ளன.

நீதித் திரட்டு—D.183. பலநூல்களிலிருந்து நீதிப்பாக்களின் தொகுப்பு

சாசனச் செய்யுள் மஞ்சரி—1959

பழநி தண்டாயுதபாணி தோத்திரங்கள்—1948

பதிபாசத் தொகையும் திருவருட் பயனும் உதாரணக்கவித் துறையும் 1940

தேவியும் அருணகிரியாரும்—1958

விஷ்னு தோத்திரக் கதம்பம்—1960

திருப்புகழ்த் திரட்டு—வாரியார்—1957

பலவகைத் திரட்டு—38 நூல்திரட்டு

கீதத் தமிழ்—1947

நூதனத் தமிழ்ப் பாடல்கள்—சுர சாகித்யத்துடன்

அன்னையின் திருவடிமலர்கள்—1947

வேழ முகம்—விநாயகர் பற்றியது

நவத்திரட்டு—1950

கீர்த்தன மாலை—பாபநாசம் சிவன்—1945

முருகன் பரிபாடல்—1961

பாடி வந்த நிலா—1968

கவிஞர்கள் கண்ட அண்ணா—1966

சித்தாந்த சாத்திரம் பதினான்கு—1940 சமாஜம்

தமிழ்ச் செய்யுட் கலம்பகம்—1857

திருமண மலர்—மயிலம்—1944

மாதவச் சிவஞான யோகிகள் பிரபந்தத்திரட்டு திருவாவடுதுறை—1950

திருவாசகத் திரு நூல்கள்—புதுச்சேரி—1957

சீகாழித் தல வரலாறு—1964

திருக் கோகர்ணம் தேவாரப் பதிகங்கள்—1950, 1962

திருக்கச்சி மேற்றளி திரு முறைத் தேவாரம்—1956

திருவாலங்காடு தமிழ் மறைத் தேவாரம்—1949

தக்கோலம் தமிழ் மறைத் தேவாரம்—1947
திரு வோத்தூர்த் திருமறைத் தேவாரம்—1950
திருப் பெண்ணாகடம் திருமுறைத் திரட்டு—1956
திருவண்ணாமலைத் திருமுறைத் திரட்டு—1956
கோயில் சிதம்பரம் தில்லைத் திருமுறைத் திரட்டு—1956
திருமாற் பேறு திருப் பதிகங்கள்—தருமை—1962
திருச்செங்கோட்டுத் தோத்திர மஞ்சரி—1959
வழிபாட்டுக்கு உரிய தேவாரத் திரட்டு—1954
அது—மு. பொன்னம்பலம்—1968
பருவங்கள்—பழமன்—1966
நீதிக் களஞ்சியம்—எஸ. ராஜம்—1959
நீதி நூற்கொத்து—கழகம்
பாவைத்திரட்டு—1953
வைணவத் திரட்டு—ஆழ்வார் பாடல்கள்
திரு வகுப்பு—கழகம்—1971
முத்தொள்ளாயிரச் செய்யுட்கள்—1935
முருகவேள் பனுவல் திரட்டு
தேவி தோத்திர மஞ்சரி
விநாயகர் பனுவல் திரட்டு
தேவாரப் பதிகத் திருமுறைகள்—1881
தேவாரத் திரட்டு—1897
பஞ்ச பூதத்தலத் தேவாரப் பதிகங்கள்—1875
சடாரணியம் சுப்பிரமணிய சுவாமிகள் பாமாலை—1881
திருப் போரூர் இன்னிசைப்பா—1881
சூத சங்கிதைத் திரட்டு—1888
பிரபு லிங்க லீலைத் திரட்டு—1888
பிரபோத சந்திரோதயத் திரட்டு—1888
சித்தி விநாயகர் தோத்திரத் திரட்டு—1875
சிவஞான யோகிகள் பிரபந்தத் திரட்டு—1889
பல பாடல் திரட்டு—1875, 1879
சித்திரக்கவி முதலிய பல பாடல் திரட்டு—1895
செய்யுள் திரட்டு—1923
துரோபதையம்மை சந்நிதி முறை விளக்கம்—1892
திருப்பா—1899

தனிப்பாடல் திரட்டு—பல நூல்கள்: 1877, 1884, 1887, 1873, 1884
தாயுமானார் திருப்பாடல் திரட்டு—பலர்—பல திரட்டுகள்—1869, 1872, 1882, 1886, 1888, 1871
நஞ்சுண்ட மூர்த்தி சுவாமிகள் பிரபந்தத் திரட்டு—1889
பல பாடல் திரட்டு—இரண்டு—1882—1885
பலர் செய்கவிகள்—1868
தனிப் பாடல்கள்—1894
திருமால் துதி—1895
கற்பிலக்கணம்—1890
போப்பின் கவிதைத் தொகுப்பு—1869
சிவ சங்கர திட்சதர் பாடல்கள்—1892
மாணிக்க வாசகர்—தாயுமானார் பாடல்கள்—1898
திரு வருட்பாத் திரட்டு—1898
இசைக் கோவை—1886
இசை மாலை—சு. சண்முகம்
பக்திப் பாமாலை ,,
எங்கே சென்றாய் ,,
வளரும் பயிர் ,,
திருக்கண்டியூர்த்திருப்பதிகங்கள்—தருமை—1949
சிதம்பரத் தோத்திரத் திரட்டும் சில செய்யுட்களும்—1960
ஞானோபதேசத்திரட்டு—1917
சிவ தோத்திரப் பாடல்—1940
பல வித்துவான் பாடிய தோத்திரப் பாடல் திரட்டு—தருமபுரம்—1933
திருக் குருகாவூர்த் திருப்பதிகங்கள்—தருமை—1946
காளிப்பட்டி—கந்த சுவாமிக்கடவுள் பதிகக் கோவை-1928
திரு வதிகைத் தேவாரத் திரட்டு—1929
திருத் தொண்டர் மாலை—விபவ ஆண்டு
தனிப்பாசுரத் தொகை—பரிதிமாற் கலைஞர்—1899
திருத்தணிகை வண்ண மஞ்சரி—1894
தமிழ்ப் பாட்டுகள்—மைசூர்ப்பல்கலைக் கழகம்—1952
தனிப்பாடல் திரட்டு—1908,1911

நூற்றெட்டுத் திருப்பதி யகவலும் மணவாள மாமுனி
நூற்றந்தாதியும்—1908
வள்ளலார் தொண்டை மண்டல சதகம்—1913
சிறு நூல் திரட்டு—1905
பஞ்சாமிர்த வண்ணங்கள்
செய்யுள் திரட்டு—1879
தமிழ் இலக்கியத் திரட்டு—1918, 1925
பல நீதிச் செய்யுள் திரட்டு—மாக்மில்லன் கம்பெனி
கவிதை அஞ்சலி—ஆ-ந.ரா. முருகவேள்—1967.
காற்றிலே மிதந்த கவிதைகள்—மனசை கிரன்
புதுக்கவி மலர்கள்—திருலோக சிதாராம்
பெரிய புராணச் செய்யுள் திரட்டு—1873
தேவாரப் பதிகங்கள்—1887
தேவாரப் பதிகத் திருமுறைகள்—1884
திருநெல்வேலி—திருக்குற்றாலப் பதிகங்கள்—1888
திரு ஏகம்பர் திருப்பதிகங்கள்—1875
தேவாரத் திரட்டு—1897
தேவாரம்—தல முறை—1882
பல பாடல்கள்—ஏழு குழந்தைகள் பாடிய பாடல்கள்
பெருந்திரட்டுச் சங்கிரகம்—பெருந்திரட்டிலிருந்து...
பெருந்திரட்டுச் சுருக்கம்— ,,
பெரிய திரட்டில் சில கவிகள் ,,
முது மொழி மேல் வைப்பு—வெள்ளியம்பல வாணர். 1953
திருவள்ளுவர் தனிப் பாடல்கள்—வள்ளுவர் பாடியனவாம்.
தனிக் கவிகள்—பலர் நூல்களிலிருந்து...
பல வகைப் பாடல்கள்—பல வகைப் பாக்களின் தொகுப்பு
பல பாடல்கள்—13 நூல்களிலிருந்து 169 பாடல்கள்
தனிப் பாடல் திரட்டு—பலர் பாடல்கள்—ஒழுக்க விளக்கச்
செய்யுள்கள், மகளிர் வர்ணனைகள்;
அறிவுரைகள்-முதலியன
பல வகைப் பாடல்கள்—எண். 2023
பலர் பாட்டுக்கள்—புகழேந்தி முதலியோர் பாடல்கள்
பல வகைப் பாடல்கள்—கந்த புராணம் முதலியவற்றி
லிருந்து...

சங்கச் செய்யுள் திரட்டு—என். 2028
பல நூல் திரட்டு—என். 2029—பழைய நூல்களிலிருந்து...
பல நூல் திரட்டு—என். 2030. பதினெண் கீழ்க்கணக்கு நூல்களிலிருந்து...
கிருஷ்ணையர் முதலியோர் கீர்த்தனங்கள்
திருமால் முதலிய தெய்வக் கீர்த்தனைகள்
சில கீர்த்தனைகள்—முத்துத் தாண்டவர் முதலியோர்...
பலவகைக் கீர்த்தனைகள்—விநாயகர் முதலியோர் மீது...
கட்டபொம்மன் கும்மி—கட்டபொம்மன் மேல்....
முத்துக்குமாரசாமி கும்மி—வைத்திசுவரன் கோயில் முருகன் மீது...
சிவ பதம்—சிவன் மீது பல பதங்கள்
சுப்பிரமணியர் பதம்—முருகன் மீது...
சுப்பிரமணியர் பதம் என்னும் செந்தில் ஆண்டவர் பதம்
பல தெய்வப் பதங்கள்—சிவன் முதலியோர் மீது'
வண்ணப் பிரபந்தம்—என். 2094
சில நாடகப் பாடல்கள்—என். 2115
தனிப் பாடல் சோதிடம்—வார சூலை, எண்ணெய் தேய்த்துக் குளித்தல், புது விருந்திடல்—முதலிய வற்றிற்குரிய நாட்கள்
அகத்தியர் வாகடம்—மருத்துவம் பற்றியது
இலக்கணச் சூடாமணி—பல இலக்கண நூல்கள் பற்றியது
பலர் பேரில் பாடிய கவிகள்—என். 369. பலர் மீது பாடிய கும்மி, விருத்தம் முதலியன.
பலர் பேரில் பாடிய வண்ணம்—என். 307—முருகன் முதலியோர் மீது பாடிய வண்ணங்கள்.
பலர் பேரில் பாடிய வண்ணம்—என். 372—கடவுளர் மீதும் பிரபுக்கள் மீதும் பாடியவை—பலசந்தக்கவிகள்
பலர் பேரில் பாடிய வண்ணம்— என். 371. சொக்கநாதர் முதலிய கடவுளர் மீது...
பலர் பேரில் பாடிய வண்ணம்— என். 373. இராமநாதர் முதலியோர் மீது...

பலதுறைக் காரிகை—365 - 366- பல கோவை நூல்களி
லிருந்து...
தனிப்பாடல்—359—வள்ளுவர் கம்பர் முதலியோர்....
தனிப்பாடல்—360— கபிலர் முதலியோர் பாடியவை
தனிப்பாட்டல்—361—காஞ்சிக்கடவுளர்கள் மீது
தனிப்பாடல்—358—திருப்போரூர்ச் சந்நிதி முறையிலிருந்து
கவிச்சுவடி—353—ஔவையார் முதலியோர்
சித்திரகவி—354—காஞ்சிப்புராணத்துள்ள சித்திர கவிகள்
தனிப்பாடல்—356—357
ஞான வாசிட்டத் திரட்டு—1526—647 பாடல்கள்
தியானப் பாடல்கள்—தியானம் பற்றியவை.
பலதிறப் பாடல் திரட்டு—2697— பக்தி ததும்பும் இசைப்
பாடல்கள்—பலர் பாடியவை
இசைப்பாடல் கொத்து--2444—திருக்கண்ணங்குடிப்
பெருமாள் மீது பல சிறு நூல்கள்
முருகன் தோத்திரப் பாடல் திரட்டு—முருகன் மீது
கொங்கணர் நூல்—இடைக்காண்டம் ஆயிரம்—எண். 2345
பல பாடல் திரட்டு—பல பொருள் பற்றியவை—சிலநூல்
களிலிருந்து
பாடல்கள்—தோத்திரங்கள்—கீர்த்தனங்கள்—பதங்கள்
இரச வாததிரட்டு—2413. இரச வாதம் பற்றிய பல நூல்
களிலிருந்து பாடல்கள்
வைத்திய சிந்தாமணி—2421— மருத்துவம் பற்றியது
சின்னூல் திரட்டு—சில நூல்களிலிருந்து திரட்டியவை
பலர் மேல் பாடிய வண்ணம்—531. மக்கள் மீதும்
கடவுளர் மீதும் பாடியவை
பல திரட்டு—416—இலக்கியம், கணிதம், சோதிடம், நீதி
முதலிய பல துறைப் பாடல்கள்
பலதேவர் துதி D.1802— பல கடவுளர் மீது
பழமொழித் திரட்டு—419. சுமார் 5000 பழ மொழிகள்
தனிப்பாடல்— R.428—வைணவம் பற்றியது
J. தனிப்பாடல்—சிற்றின்பம் பற்றியது
N. தனிப்பாடல்—காதல் பற்றியது

தனிப்பாடல்--R.523—C--லிங்க வாடி நகர் சொக்கலிங்கம் முதலானோர் மீது...
தனிப்பாடல் திரட்டு— R.590—R.141—
செய்யுள் திரட்டு—R.890. சில கடவுளர் மீது—சில நூல்களி லிருந்து...
பலதிறப் பாடல் திரட்டு—D. 2697—பல இசைப்பாடல்கள்
பலபாடல் திரட்டு—D. 2632—பலபொருள் பற்றிப் பல
அகத்தியர் மெய்ஞ்ஞானம் ஆயிரம்—R. 152
தோத்திரத் திரட்டு—R.153—பல கடவுளர் மீது...
தோத்திரத் திரட்டு—R. எண்.156A—B—பல கடவுளர் மீது
அகத்தியர் சாலத் திரட்டு—R. 250— மருத்துவம் பற்றியது
அகத்தியர் கலைஞான சூத்திரம்—R. 182—B—யோகம், வாதம் பற்றியவை
அகத்தியர் வைத்திய சூத்திரம்—ஆயிரத்தைந்நூறு
அருட்பா மாலை—D.335,விநாயகர் முதலிய கடவுளர் மீது
அருட்பாமாலை—R.310—B—பல ஊர்ச் சிவன்மீது
இராமாயணக் கீர்த்தனம்—R.543
இருது நூல் முதலியன-R.238—I—பெண் வயதுக்கு வந்த பலன்—பல்லி சொல் பலன்—முதலியன பற்றியது
கம்ப ராமாயணப் பாடல்—R.428—A&d இராமாயணத்தி லிருந்து சில பாடல்கள்
தனிப்பாடல்—R—428—lb—யோகாப்பியாசம் பற்றியது
தனிப்பாடல்—R.428—c—சில தனிப்பாடல்கள்
கோவைசாரம்—R.428—P. சில கோவை நூல்களிலிருந்து திரட்டிய சுவையான பாடல்களின் தொகுப்பு
சிதம்பரநாதர் கீர்த்தனை—N.504. நடராசர்மேல் முத்துத் தாண்டவரின் கீர்த்தனைகள்
இலக்கிய மணி மாலை- எஸ். வையாபுரிப் பிள்ளை
தற்காலத்தமிழ்க் கவிதைகள்- வி. ஆர். செட்டியார்
கந்த புராணத் திரட்டு—ஆர்.பி.சேதுப்பிள்ளை, பார்த்திப ஆண்டு
கிறிஸ்துவ இலக்கியத் திரட்டு—S. Samuel
அரும் பொருள் திரட்டு—எம். கோபாலகிருஷ்ணன்
திருவருள் மாலை—வேத நாயகம் பிள்ளை

தேவ தோத்திரப் பாமாலை—வேத நாயகம்பிள்ளை
தம்பு சிந்தாமணி—வேங்கடசுப்புப் பிள்ளை
தேவியின் கீர்த்தனங்கள் —எஸ்.வையாபுரிப்பிள்ளை
திருப்பணி மாலை—P.பாண்டித்துரைத் தேவர்
பாரசீகக் கவிஞர் பாடல்கள்—மொழி பெயர்ப்பு—
ச.து.சுப்பிரமணிய யோகியார்
நீதி நூல் விளக்கக்கொத்து—டி.எஸ்.பாலசுந்தரம் பிள்ளை
நீதி விளக்கக் கொத்து—பழநிவேலப் பிள்ளை
மூவர் அம்மானை—எண். 766
பலகோணத்துறை —எண்.957
தொடர் பாடல் கோவை—எண் 963
மூவர் சிந்து—எண். 987
தினகர வெண்பா—எண். 1121
சித்தாந்த சாத்திரப் பாடல் திரட்டு—எண்.1251
சித்தியார் பல திரட்டு—1254
முனி மொழியில் திரட்டு—எண்.1354
மெய்கண்ட சாத்திரத்தின் பாடல்கள் —எண்.1355
பாரதம் (—விடு பாடல்கள்)—எண்.414
இராமாயணம்—விடு பாடல்கள்—எண்.395
பன்னூற்பா—சென்னை அரசினர் நூலகம்
தனித் தோத்திரங்கள்—பல கடவுளர் மீது
தனித் தோத்திரத் திரட்டு— ,,
துதி நூல்கள்— ,,
பெரிய திரட்டில் சில கவிகள்—பெருந்திரட்டிலிருந்து சில
அளத் திரட்டு—வேதாந்தம் பற்றியது
சாத்திரப் பாடல் திரட்டு—சாத்திரங்களிலிருந்து...
ஞான சாகரத் திரட்டு—வேதாந்தம் பற்றியது
பதினெண் சித்தர் அணிக்கோர்வை—இரசவாதம் –மந்திரம்
கம்பர் நூல்கள்—ஏரெழுபது, திருக்கை வழக்கம்,
தட்டெழுத்துப் படி
திரட்டு வாகடம்—மருத்துவம் தொடர்பானது
இராம தேவர் பல திரட்டு எண்பது—மருத்துவம்—
வாகடத் திரட்டு—இப்பெயரில் இரண்டு உள்ளன
வைத்தியத் திரட்டு—மருத்துவம்

பலதிரட்டு வைத்தியம்—மருத்துவம்
பல திரட்டு—இந்தப் பெயரில், தனித்தனி வகையில்
6 சுவடிகள் உள்ளன.
மருத்துவப் பல திரட்டு—மருத்துவம்
ஞானத் தமிழ்—பல நூல் பாடல்கள்—1970
கவிஞர் கண்ட அண்ணா—1969
முருகன் பரிபாடல்—1961
பாடி வந்த நிலா–1968
ஸ்ரீசத்குரு துதி—பல இனத் துதிப்பாடல்கள்
சிவஞான சுவாமிகள் மாலைத்திரட்டு—1949
தேவாரத் திரட்டு—1913
ஈரூர்த் திருப்பதிகங்கள்—மதுரை, ஈழநாடு—சுக்கில ஆண்டு
திருநாவுக்கரசு பிள்ளை தொகுப்பு—1944
உ.வே.சா.தொகுப்பு—1943
திருநல்லம் திருப்பதிகங்கள்—தருமை—1952
திருவஞ்சைச் களம் தேவாரப் பதிகங்கள்—
திருவாவடு துறை ஆதீனம்—1952
பாரதியார் இதயம்—பாரதி கவிதைகள்—1971
முத்தமிழ் அரங்கம்—திருச்சி வாசுதேவன் கவிதைகள்
பொன்னி வளவன் கவிதைகள்
கலியுக மாலை—கலி கால அநீதி விளக்குவது
இலக்கண தீபம்—இலக்கணம் பற்றியது
வண்ணத் திரட்டு—1,2. சரசுவதி மகால்
சிருங்கார பதியம்—சிற்றின்பம் பற்றியது
சிவாஜி தனிப்பாடல் திரட்டு— ச.மகால்
தனிப்பாடல் வண்ணத்திரட்டு—ச.மகால்.
தனிப் பாடல் திரட்டு—இந்தப் பெயரில் சரசுவதி மகாலில்
5 சுவடிகள் உள்ளன.
தேவாரப் பதிகங்கள்—ச.மகால்
பக்தி யோக ஞானத் திரட்டு –தொ - இராமானந்த
சுவாமிகள்
பிரம்மானந்த சுவாமிகள் தோத்திரப்பா—1932
தோத்திர மஞ்சரி—சிறு நூல்கள்—1916
கருவூரார் பல திரட்டு—மருத்துவம் பற்றியது

பத்துப் பிரபந்தம்—கமல பந்தம் முதலியன
திரை மாலை—பாப்பா பாடல்கள்—1965
கன்னித் தமிழ்—பாப்பாப் பாடல்கள்—1965
பல பொருட்பாக்கள்—பாடல் திரட்டு
திருப்பாடல் திரட்டு—பல இனங்களில் 120 பாடல்கள்
திருக் கொள்ளம் பூதூர் திருப்பணிச் செல்வர் வாழ்த்து மஞ்சரி—1937
கவி மஞ்சரி—பல நூல்களிலிருந்து—1927
கீர்த்தி ரச மஞ்சரி—1917
தனிப்பாக் கோவை—1919
பிள்ளைக் கவியமுது—1962
மலரும் தமிழகம்—1948
சிறுவர்கட்குப் பாரதி பாடல்கள்—1962
பெயர் தெரியாக் கவிதைத் தொகுப்பு—பல தலைப்புகளில்
மாளாக் காதல்—1958
பாரதி கீதத் திரட்டு—1947
நாட்டுப் பற்று—1966
மழலைப் பித்தன் கவிதைகள்—1957
ஏழூர்த் தோத்திரங்கள்—1954
பதினெண் சித்தர் வாதக் கோவை
வைத்திய சிந்தாமணி—1902
ஜால சூத்திரத் திரட்டு—1884
வேதபுரிக் கீர்த்தனைகள்—1937
புதுவைத் திரட்டு—மாலை, பதிகம் முதலியன—1959
வேத ரிஷிகளின் கவிதைகள் - சு.ம.பாரதியார்—1948
வள்ளலார் பிரபந்தங்கள்—1959
சரபேந்திர வைத்திய முறைகள்—1965
எச்சரிக்கை உணர் கவிதைகள்—1967
குண வாகடத்திரட்டு—மருத்துவம்
குளிர் காவிரி—1969—மதிவாணன்
வாழ்க்கைப் பூங்கா—பொற்கோ—1965
கவிஞர் போற்றும் கிருபானந்த வாரியார்—1970
ஞானத் தமிழ்—1970
பரமாத்ம நாம கீர்த்தன பஜனாவளி—1952

சுபானுவத் திருவாக்கு என்னும் பாராயணச் சிந்தா
மணி - 1926
வேதாந்த கீர்த்தனங்கள்—1938
காவடிச் சிந்து—அண்ணாமலை ரெட்டியார்—1970
சற்குரு சுவாமிகள் திருப்பாடல் திரட்டு—சரசுவதி மகால்
வேண்டு கோள் திருமுறை—தருமை—1957
லலிதா தாசர் கீர்த்தனை—லலிதா தாசர்
வேதபுரிக் கீர்த்தனைகள்—1937
சுப்பய்ய சுவாமிகள் நூற்கொத்து—1964
திருவெம்பாவை—திருப்பள்ளி யெழுச்சி—1957
மார்கழித் திங்கள் பாராயண மஞ்சரி-1953
தனிப்பாடல் திரட்டு—சரசுவதி மகால்—1967
தனிப்பாடல் திரட்டு—தொ—கலைச் செல்வி—1964
பன்னூல் கொத்து—14 நூல்கள்—1884
நீதி மஞ்சரித் திறவு கோல்—12ஆம் பதிப்பு—1878
சொல்லலங்காரம்—காளயுக்தி ஆண்டு
பெண் பெருமைத் திரட்டு—வேத நாயகம் பிள்ளை—1887
திரு முறைத் திரட்டு—1953
சித்தர் நூல் திரட்டு—சித்தர்களின் 64 நூல்கள்
தேரையர் திரட்டு—சித்தர் தேரையர்—1915
யூசி முனி திரட்டு—1915
மருந்து விஷ மாற்றுத் திரட்டு—1897
மூவர் வாகடத் திரட்டு—1922
தமிழ்ப் பா மஞ்சரி—உ.வே.சா..1961—62
உலகப் பாட்டு—சு.பாரதியார்—1962
சுத்தானந்தர் கவியரங்கம்—1963
குறுந்தொகைத் திரட்டு—கா.கோவிந்தன்—1959
காதலும் கனிவும்—1949
பகவத் தோத்திரப் பிரபந்தம்—1905
தேம்பாவணிக் கீர்த்தனை—1903, 1931
பத மஞ்சரி—1905
சீட்டுக் கவித் திரட்டு—1927
பெரிய புராணக் கீர்த்தனை—1929
முருக மஞ்சரி—1952

தோத்திரத் திரட்டு—1915
பஜனைக் கீர்த்தனை—1895
தமிழ் மறைத் திரட்டு—1947
அருணாசலக் கவிராயர் பிரபந்தத் திரட்டு—1911
கந்த புராணக் கீர்த்தனை—1857
திருவிளையாடல் கீர்த்தனை—
காதல் நினைவுகள்—பாரதிதாசன்—1955
கவிதை மலர்கள்—1963
இன்ப ரசக் கீர்த்தனைகள்—1966
தத்துவச் சிந்தனைகள்—1968
தொண்டை நாட்டுத் தேவாரங்கள்—1947
தோத்திரப் பாடல் தொகுதி—1954
கவிதை மணி மாலை
நட்புறவுக் கவிதைகள் - பாரதிப் பித்தன்
திருவீழிமிழலை பிரபந்தத்திரட்டும் அழகிய மாமுலையம்மை பிள்ளைத் தமிழும் } சுபானு-ஆனி
கம்பைச் சன்னிதி முறை—1903
தனிப் பாக் கோவை—1919
விவேக விளக்கம்—1903
வேதாந்தப் பாவினம்—சின்மய சொரூபன்
திருவருட் பிரகாசனார் சன்னிதிமுறைப் பிரபந்தங்கள் —1912
தேவி தோத்திர மஞ்சரி—1931
முத்துக் குமாரக் கவிராசர் பிரபந்தத் திரட்டு—1952
சிறு நூல் தொகை—1912
தனிப் பாடல் பொது—1907
சைவப் பிரபந்தத் திரட்டு-வெ-புஷ்பரதச் செட்டியார்
சைவ நூல் திரட்டு-
புதுமைப் பாடல்கள்—1953
தி.மு.க. பாடல்கள்—மதுரை மன்னன்—1953
பிரார்த்தனைக் கோவை—1954
துதி மஞ்சரி—1954
பக்த ரத்னாவளி பிரார்த்தனை—1954
கோதண்ட ராமன் துதி மாலை—1954

சைவச் சிறு நூல்கள்—1954
நித்திய பாராயணத் திருமுறைத் தொகுப்பு—1953
விநாயகர் முருகன் மலர் வணக்கம்—1953
முருகன் பாமாலை—1954
காட்டு வாழ்த்துக் கவிதைகள்—ந. பிச்ச மூர்த்தி
எழில் விருத்தம், எழில் ஓவியம், இன்ப இலக்கியம், கொடி முல்லை—வாணி தாசன்
புதிய பாதை—கம்பதாசன்
இசைமலர்—மா. வரதராசன்—1928
அன்பு வெள்ளம்—1928
இதய மலர்கள்—வேலாயுதம்
முத்த ஏடு—இளம் பாரதி
தமிழ்ச் சிந்து—1934. உதய நிழல்—1936
ஆயிரம் பூ—பல்லடம் மாணிக்கம்
பனிப் பூக்கள்—செல்வ பாரதி
சந்தனக் கிண்ணம்—உலகநாதன்
இன்னிசை அருவி—மன்ற வாணன்
சித்திரப் பந்தல், கனவுப் பூக்கள், வைர மூக்குத்தி—கோ. மோகன ரங்கன்
அழகு மலர்—அரசு தாசன்
சந்திரகாசன் கவிதைகள்
மணிச்சரம்—சாரண பாஸ்கரன்
தேனாறு—சுந்தரம் பிள்ளை
ஜீவன் கவிதைக் கதம்பம்
நாட்டுப்பற்று—கணபதி
பைந்தமிழ்ப் பாமலர்—மதிதாசன்
குறமாது—மீறான் கனியண்ணாவி
இதய மலர்—முகிலன்
அழகின் அழைப்பு—முல்லை நிலவழகன்
தமிழ் என் உயிர்—மூவேந்தன்
தமிழ்க் கனவு—நாவுக்கரசன்
மூடு பனி—கிருஷ்ணன்
நனைந்த தாமரை—தமிழ்ப் பித்தன்
புதுமலர்—திருவரசன்

வாழ்வொளி—வேதாசலம்
மாலைக்கு மாலை—யாழ்ப்பாணன்
திருக்குறள் முது மொழி வெண்பாக் கொத்து
திருக்கடவூர்த் திருமுறைப் பிரபந்தங்கள்
குழந்தை விருந்து—கிருஷ்ண ராசா
பூப்பந்தல்—இளம் பாரதி
வேங்கடபதி கவிதைகள்—1955
வேலன் கவிதைகள்—1939
மோகன ரங்கன் கவிதைகள்—ஆலத்தூரார்
தாமரைக் குமரி—மு. அண்ணாமலை
சித்திரக் கவி மாலை—அப்துல் கபீர் சாகிப்
பொற் சுடர்—துறைவன்
அமுத கலசம்—வி. துரைசாமி
முத்து மாலை—முத்துக் கணேசன்
மேடைப் பாடல்கள்—சுப்பு ஆறுமுகம்
அன்பு வெள்ளம்—மு. அண்ணாமலை
கவிதைக் கலம்பகம்—ஜீவன்
கவிதைக் கதம்பம்— ”
இன்னிசைப் பாமாலை—செய்குதம்பிப் பாவலர்
எண் சுவை எண்பது—பெருஞ்சித்திரனார்
பாவியக் கொத்து— ”
பொதுப்பாடல்கள்—சுந்தரேச சர்மா
தேசியப் பாடல்கள்—தபக்கல் சாயபு ராவுத்தர்
குயிலின் சுருதி—ந. பிச்சமூர்த்தி
மறு மலர்ச்சிக் கவிதைகள்—அ.கி. பரந்தாமனார்
சுவைக்கவிதைகள்—தொ—மீ.இராசேந்திரன்
பண்டரி நாதன் கீர்த்தனைகள்—டி.பி.இராமசாமிப் படையாட்சி
எச்சரிக்கை உணர் கவிதை—தனபாலன்
சுடாத நெருப்பு—ரவி—திரவியம்
பாவலர் உலகம்—தொ—வெள்ளை வாரணம்
சங்கீத சில்லறைக் கோவை—சீநிவாச ஐயங்கார்
பாரதக் கவி மலர்கள்—ராஜம் சீதா ராமையர்
ஸ்ரீராம கீர்த்தனை மஞ்சரி—சுந்தரேச சர்மா

இசைத் தேன்—நல்ல தம்பிப் பாடல்கள்
முருகன் மதுர கீர்த்தனை—விசுவநாத சாத்திரி
கீர்த்தன மாலை—பாப நாசம் சிவன்
பொங்கல் கும்மி—வீரண்ணன்
பெரு நூல்—வைத்திய காவியம்—1500—அகத்தியர்
தோத்திரப் பிரபந்தத் திரட்டு—அப்பன் செட்டியார்
சாஸ்திரக் கோவை—குமார தேவர்
தமிழ்க்கவி அமுதம்—ல.சண்முக சுந்தரம்
ஆத்ம சோதனை—சுத்தானந்த பாரதியார்
மேக மண்டலம்—கி.வா.ஜ.
தாலாட்டும் கும்மியும்—ராய.சொ.
இசை அருவி—திருச்சி தியாகராசன்
பொருளும் அருளும்—திரு.வி.க.
முதுமை உளறல்— ,,
நிவேதனம்— கலை வாணன்
மனச் சிமிழ்— ,,
செங்குமுதம்—சிறு காவியங்கள்—குயிலன்
காதல் நிலைக் கவிதைகள்—அ.கி. பரந்தாமனார்
சுதந்திர கீதம்—கண்ண முருகனார்
விபுலானந்தத் தேன்—விபுலானந்தர்கவிதைகள்
பாவலர் விருந்து—பரிதி மாற் கலைஞர் (தொகுப்பு)
நாலைந்திணை—அ.நடராசப்பிள்ளை (தொகுப்பு)
சிறுவர் உலகம்—என்.எஸ்.நரசிம்மன்
பறக்கும் பாப்பா—கல்வி கோபால கிருஷ்ணன்
சின்ன கடை மாமா—வைரவன்
பறக்கும் மனிதன்—தூரன்
ஓலைக்கிளி— ,,
மாயக் கள்ளன்— ,,
குறிஞ்சிக் குமரி—கா. கோவிந்தன்
குறிஞ்சிப் பாட்டு—தமிழண்ணல்
காவியப் பாவை—முடியரசன்
காதல் விழி—அழகரசன்
கதா கீத மஞ்சரி—நா. கிருஷ்ணசாமி
நீதி விளக்கம்—எஸ்.எஸ். அருணகிரி நாதர்

ஆரம்ப நீதி மாலை அருணகிரிநாதர்
பாலமிழ்தம்—
நீதி நூல் விளக்கக் கொத்து-தி.சு. பால சுந்தரம் பிள்ளை
பாப்பாவுக்குப் பாரதி, பாப்பாவுக்குக் காந்தி—தி.ஜ.ர.
காவிய அரங்கில்—சீநிவாச ராகவன்
போர்க் காவியம்—மா. இராதா கிருஷ்ணன்
அரும் பொருள் திரட்டு—ம. கோபால கிருஷ்ணன்
சிந்தனைக் கதிர்கள்—பண்டித ரத்னம்'
கடல்மேல் குமிழிகள்—பாரதிதாசன்
திராவிட நாடு— ,,
இசைத் தமிழ்—நாமக் கல்லார்
பாரதியார் இன்கவித் திரட்டு—ரா.பி.சேதுப்பிள்ளை
திருப்புள்ளிருக்கு வேளூர்ப் புகழ் மாலை—1939
தில்லைத் திருமுறைத் திரட்டு—1956
பரிமணங்குடி பிரபந்தத் திரட்டு—கர ஆண்டு
மதுரைச் சிலா சாசனத் திருமுறை—1956
திருக் கேதாரத் திருப்பனுவல்கள்—1955
விளக்கத் திரட்டு—1924—அ—சாமி. குப்புசாமி
திருப் போரூர் மௌன சுவாமிகள் தோத்திரத் திரட்டு—1940
பிரபந்தத் திரட்டு—96 வகைப் பிரபந்தங்கட்கு இலக்கணம் கூறுவது
பிரபந்த தீபம்—அகம், புறம் முதலியன பற்றிய பிரபந்தங்கட்கு இலக்கணம் கூறுவது
திருப்புகழும் தனிப் பாடல்களும்—எண்.2317
முருகன் தோத்திரம் —எண். 2326
அஷ்ட கர்மத் திரட்டு—மந்திர ஆற்றல் கொண்டு அஷ்டமா சித்து விளையாடுவது பற்றியது
பீரங்கி ஞானத் திரட்டு—சோதிடம் பற்றியது
சித்திர கவிகள்—கோ மூத்திரிகை முதலிய சித்திர கவிகள்
புலிப்பாணி சாலத்திரட்டு—சால நூல் சார்ந்த திரட்டு
செய்யுள் திரட்டு—கைவல்ய நவநீதம் முதலியவற்றிலிருந்து
பல கவித் திரட்டு, பல பாடல் திரட்டு, பலர்மேல் வண்ணம், பலர் மீது கவிகள், தனிப்பாடல் திரட்டு, தனிப்பாடல்— இவற்றுள் ஒவ்வொன்றும் ஒரு தொகை நூல்

தனிப் பாடல்—செந்தூர், திருத்தணிகை, திருப்போரூர் முதலிய ஊர் முருகன் மீது...
சித்திர கவி, நானாப் பாடல்கள், ஞானப் பாடல், தனிப் பாடல் திரட்டு—ஒவ்வொன்றும் ஒரு தனி நூல்
சமயோசித செய்யுட்கள்—பட்டினத்தார் முதலியோர் பாடல்களிலிருந்து எடுத்த வேடிக்கையான பாடல்களின் திரட்டு
நீல கண்டத் தொகுப்பு—சிவன் மீது...
தனிப்பாடல்கள்—சிட்டுக் கவிகள் - பலர் பாடியவை
தனிப் பாடல்கள்—சிட்ட நாதன் மீது மங்கை பாகக் கவிராயர் பாடியவை - முதலியன
திருக் கோல நாதர் வண்ணம் - முதலியன
காரிகை உதாரணப் பாடல் திரட்டு
தனிப்பாடல் திரட்டு—எண். 362 - ஆயிரம் பாடல்கள்
த.பா.தி—எண். 363 - எந்நூலிலும் இல்லாத 225 பாக்கள்
பல கவித் திரட்டு—எண். 364. கடவுள் துதிகள்—வினோதமான பாடல்கள் சில.
பல பாடல் திரட்டு—எண்.367. தெய்வ - நா துதிகள் - நீதி வினோதப் பாடல்கள், சிட்டுக் கவிகள், சிங்கார ரசமான பதங்கள்—முதலியன.
பல பாடல் திரட்டு—எண்.368-பல பிரபுக்கள் மீது...
பழநிக் குமாருப் பண்டாரத்தின் பிரபந்தத் திரட்டு—1912
மைசூர் சாமுண்டீசுவரி தோத்திரப் பாக்கள்—1938
முருகவேள் பனுவல் திரட்டு—விபவ—ஆடி
திருமயிலைச் சந்நிதி முறை, பஞ்சாங்கப் பாமாலை—1906
அப்பர் புகழ் மாலை—1929
சுந்தரர் புகழ் மாலை—1930
செட்டிகுளம் தண்டபாணி மாலை—1929
திருத் தணிகைச் சந்நிதி முறை—முருகன்மேல் பல நூல்கள்
சிவ தோத்திரப் பாடல்கள்—1921
மயூர வாகனன் பனுவல் திரட்டு—1940
இதோபதேசத் திரட்டு—1924
தமிழ் இலக்கியக் கலம்பகம்—1938
திரு சூலம் திருப் பதிகங்கள்—உலோக நாதன்
இரட்டை வண்ணம்—1964

பாராயணத் திருப்புகழ்—1937
முதல் மலர்—1964. முதுமை நினைவு—1966
கீர்த்தனைப் பாடல்கள் திரட்டு—1971
கழகத் தெய்வப் பனுவல் திரட்டு—1971
கழகத் திருப்புகழ்த் திரட்டு—1971
திருவருட்பாப் பெருந்திரட்டு—கழகம்—1971
வைத்திய நூற் பாடல்கள்
சாத்திர சூடாமணி பல திரட்டு—சோதிட நூல் திரட்டு
தட்சிணாமூர்த்தி ஜாலம்—மருத்துவம், மந்திரம்
தன் வந்தரி வைத்திய சிந்தாமணி—மருத்துவம்
திருவிளையாடல் புராணச் செய்யுள் திரட்டு
திருவிசைப்பாத் திரட்டு—திருமாளிகைத் தேவர்
தேரையர் கிஷாயத் திரட்டு—மருத்துவம்
தேரையர் வைத்தியப் பாடல் திரட்டு
சில்லறை ஏடுகள்—குறவஞ்சி முதலியன
இரசவாதப் பாடல்கள்
துர்வாசபுரம் வயிரவர் பாடல்கள்
இராம தேவர் பல திரட்டுச் சூத்திரம்—மருத்துவம், வசியம், இரச வாதம்
சங்கமுனி வைத்தியப் பாடல்கள்—மருத்துவம்
யோக ரகசியத் திரட்டு
இராசி யாசிரியர் பல சுவடி—சோதிடம் தொடர்பானவை
கம்பர் கவிதைக் கோவை—1950
குரு வாசகக் கோவை—1939
தேர்ந்தெடுத்த செய்யுள் திரட்டு
சிதம்பர பாரதியாரின் பாட்டுகள்—1927
நெஞ்சில் வாழும் நேரு—கவியரங்கப் பாடல்கள்—1965
இளங்கம்பன் கவிதைகள். புதுமலர்—திருவரசன்
அமுத கலசம்—கா.மு. ஷெரிப்—1964
காந்தி ஆசிரம பஜனாவளி—1948, 1955
இசை மணி மாலை—தூரன்
நூதனத் தமிழ் சாகித்யங்கள்—குப்புசாமி
பாலர் இசைக் கொத்து—1967
முதல் ஐந்திசைப் பண்கள்—சுரத்துடன்—1956
சிறுவர் சோலை—இன்ப வண்ணன்

எல்லாம் நமக்காக—ஜனனி—1963
சின்னஞ் சிறு பாடல்கள்—அழ வள்ளியப்பா—1963
தம்பு சிந்தாமணி, நந்த மண்டல சதகம், குறள் முதுமொழி, வெண்பாக் கொத்து, பாவலர் சரித்திர தீபகம், சங்கர நாராயணத் திரட்டு—தனித்தனி நூல்கள்
சிவஞான சுவாமிகள் மாலைத்திரட்டு—சிவஞான சுவாமிகள்
மகா நவராத்திரிப் பாடல்கள்—1913
வாழ்த்து மஞ்சரி—1937. சங்க சிந்தாமணி
பன் மணிக்கொத்து. பிரம்மானந்த சுவாமிகள் தோத்திரப் பாடல்கள்—1932
தாமரை நாண்மலர்—பலராமையா
சுடாத நெருப்பு—1949
கவிதை மடல்—1949
கவிச் சிங்க நாவலர் பிரபந்தத் திரட்டு
நவநீத கிருஷ்ண பாரதியார் உலகியல் விளக்கம்—1922
சொக்கலிங்கம் செட்டியார் துவாதச மஞ்சரி
நீதி சாரம்—மாணிக்க வாசகம் பிள்ளை
முத்துக் குமாரக்கவிராசர் பிரபந்தத் திரட்டு—1952
பொது நெறி, பாப்பாப் பாட்டு—சுத்தானந்த பாரதியார்
கிறிஸ்து மொழிக் குறள்—திரு.வி.க. 1956
குரு பரம்பரைப் பாட்டு
தமிழ்ப் பெருந் தேவி திருப்பள்ளி எழுச்சி, தமிழ் மகள் ஆற்றுப் படை—பரந்தாம முதலியார்
திருப்பணி மாலை—பாண்டித்துரைத் தேவர்
மதுரைத் திருப்பணி மாலை—மதுரைத் தமிழ்ச் சங்கம்
நூறு ஆசிரியம்—பெருஞ்சித்திரனார்
தமிழே வா—அரிமதி தென்னகன்
காதல் கனிகள்—துரை. மாலிறையன்
பாட்டோவியம்—தேவிதாசன்
திருக்குறள் கீர்த்தனை—தண்டமிழ்ப் பித்தன்

---

# 6–2. பிற்சேர்க்கை–2

## நற்றிணைச் சிக்கல்

மற்றும் ஒரு சிக்கல் நற்றிணை தொடர்பாக உள்ளது. நற்றிணையில் போதனார் என்னும் புலவர் இயற்றியதாக உள்ள–பாலைத் திணைக்கு உரிய 'பிரசம் கலந்த' என்று தொடங்கும் 110 ஆம் பாடலில் 13 அடிகள் உள்ளன. நற்றிணைப் பாடல்களின் உயர் எல்லை 12 அடிகளே. 13 அடிகளும் இன்னும் மிகுதியான அடிகளும் கொண்ட பாடல்கள் நெடுந்தொகையாம் அகநானூற்றுக்கு உரியன. இந்தப் பாடலை அகநானூற்றில் சேர்க்கவும் வழியில்லை. ஏனெனில், அகநானூற்றில் உள்ள நானூறு பாடல்களும் 13 அடிகட்குக் குறையாமல் உள்ளன. ஏதேனும் ஒன்றாயினும் 13 அடிக்குக் குறைந்திருந்தால், அதை நீக்கிவிட்டு இந்த 13 அடிகள் கொண்ட நற்றிணைப் பாடலை அகநானூற்றில் சேர்க்கலாம். ஆனால் அதற்கு வழியில்லையே!

இந்தச் சிக்கலுக்குத் தீர்வு யாது? 13 அடிப் பாடல் ஒன்று நற்றிணையில் இருப்பதற்குப் பின்வருமாறு எவையேனும் நொண்டிக் காரணங்கள் கூறலாம். அவற்றையுந்தாம் பார்ப்போமே:

ஒன்று:– அந்தக் காலத்தில் பாடல்கள் ஓலைச் சுவடியில் இருந்ததால், ஓரளவு தேய்ந்தும் இருக்கலாம். எனவே, அடி எண்ணியவர்கள், கவனக் குறைவாகப் பதின்மூன்று அடிகளைப் பன்னிரண்டு அடிகளாக எண்ணிவிட்டிருக்கலாம். ஒரு பாடலா? இரு பாடல்களா? நானூறு பாடல்களின் அடிகளை எண்ணும்போது இப்படியொரு தவறு நேர்ந்திருப்பதில் அப்படியாகப் பெரிய வியப்பு ஒன்றும் இல்லை. இந்த அடிப்படையில் இந்தப் பாடல் நற்றிணையில் சேர்ந்திருக்கலாம்.

இரண்டு:– நெடுந்தொகை, குறுந்தொகை, நற்றிணை ஆகிய மூன்றிலும் சமஅளவாக நானூறு பாடல்கள் அமைப்பது என்ற திட்டத்தின் கீழ்ச் செயல்பட்டபோது, ஒன்பது அடிகட்குக் குறையாமலும் பன்னிரண்டு அடிகட்கு மேற்படாமலும் உள்ள பாடல்கள் 399 மட்டுமே கிடைத்திருக்கலாம். எனவே, நற்றிணையை நானூறாக நிரப்ப, இந்த 13 அடிப்பாடலைத்

தெரிந்தே சேர்த்திருக்கலாம். நானூறு பாடல்களுள் ஏதேனும் ஒருபாடலின் அடிகள் கூடுதலாகவோ குறைவாகவோ இருப்பின் அதனால் பெரிய குறைபாடு ஒன்றும் இல்லை-என்று நூல் தொகுத்தோர் கருதியிருக்கலாம்.

மூன்று:- ஒன்பது அடிகட்குக் குறையாமலும் பன்னிரண்டு அடிகட்கு மேற்படாமலும் ஒரு பாடல் கிடைக்காத நிலையில், 'பிரசம் கலந்த' என்னும் 13 அடிப்பாடலின் பொருள் சிறப்பைக் கருதி இப்பாடலை இழக்க உள்ளம் ஒவ்வாமல், எப்படி யாவது இதற்கு இடம் தரவேண்டும் என்று கருதி நற்றிணையில் சேர்த்திருக்கலாம். அங்ஙனமெனில், அப்பாடலில் உள்ள அவ் வளவு பொருட் சிறப்புதான் யாதோ? தமிழரின் சீரிய நேரிய குடும்பக்கலை என்னும் 'எவரெஸ்ட்' கொடுமுடியை அடைவ தற்கு உரிய நீண்ட பாதையில், இப்பாடல், ஒரு பெரிய அளவுக்கல் (மைல் கல்) ஆகும். முதலில் பாடல் முழுவதையும் பார்ப்போமே!;

110-போதனார்

"பிரசங் கலந்த வெண்சுவைத் தீம்பால்
விரிகதிர்ப் பொன்கலத்து ஒருகை ஏந்திப்
புடைப்பில் சுற்றும் பூந்தலைச் சிறுகோல்
உண்ணென்று ஒக்குபு புடைப்பத் தெண்ணீர்
முத்தரிப் பொன்சிலம்பு ஒலிப்பத் தத்துற்று
அரிநரைக் கூந்தல் செம்முது செவிலியர்
பரீஇ மெலிந் தொழியப் பந்தர் ஓடி
ஏவல் மறுக்கும் சிறுவிளை யாட்டி
அறிவும் ஒழுக்கமும் யாண்டுணர்ந் தனள்கொல்
கொண்ட கொழுநன் குடிவறன் உற்றெனக்
கொடுத்த தந்தை கொழுஞ்சோறு உள்ளாள்
ஒழுகுநீர் நுணங்கறல் போல
பொழுதுமறுத் துண்ணும் சிறுமது கையளே"—

என்பது தேனினும் இனிக்கும் அப்பாடல் ஆகும். பாடலில் பொதிந்துள்ள சுவையான பொருளைக் காண்பாம்;

வீட்டில் இருந்த செல்வச் சிறுமியை - செல்லச் சிறுமியை உண்ணச் செய்வதற்கே செவிலித் தாயர் படாத பாடு படுவர்; பால் அருந்தச் செய்வதற்கும் படாத பாடுதான். தேன் கலந்த சுவையான - இனிப்பான பாலை, ஒளி வீசும் பொன் கலத்திலே (பாத்திரத்திலே) இட்டு அந்தக் கலத்தை ஒரு கையில் ஏந்திக் கொண்டு, மற்றொரு கையில் நுனியில் பூங்கொத்து உடைய சிறு கோலைப் பிடித்துக் கொண்டு, அருந்துகிறாயா இல்லையா என்று செவிலியர் அடிப்பதுபோல் பொய்யாகக் கோலை ஓச்சுவர்; சிறுமியோ அருந்த மாட்டேன் என்று கூறி ஓடுவாள்; செவிலியர் அவள் பின்னாலேயே துரத்திக் கொண்டு ஓடுவர், சிறுமியோ, முத்துப் பரல் பொதிந்த பொன் சிலம்பு ஒலிக்கத் தத்தித் தத்தி ஓடுவாள்; நரைத்த கூந்தலுடைய முதிய செவிலியர் துரத்தித்துரத்தி ஓடி ஓடிச் சோர்ந்து போகும் படி ஆட்டம் காட்டிக் கொண்டே பக்கத்தில் உள்ள பந்தருக் குள் ஓடி அருந்த மாட்டேன்-வேண்டா என்று மறுத்துரைப் பாள். இத்தகைய விளையாட்டுச் செல்லச் சிறுமியாய் அவள் இளமையில் இருந்தாள்.

பின்னர் பெரியவள் ஆகத் திருமணம் ஆயிற்று. ஆனால் தன்னை மணந்து கொண்ட கணவன், தன் தந்தையைப் போன்ற செல்வன் அல்லன்; அவன் குடி-குடும்பம் பற்றாக் குறையான வறட்சி உடையதாகி விட்டது. அதனால், பெரிய வளாய் விட்ட இப்பெண், தன்னைக் கட்டிக் கொடுத்த தன் தந்தை வீட்டிலுள்ள செழுமையான உணவை எண்ணுவ தில்லை; தந்தைவீட்டிற்குச் சென்று உண்ணவேண்டுமென்றோ தந்தை வீட்டிலிருந்து தருவித்து உண்டு வாழவேண்டும் என்றோ எண்ணுவதே இல்லை.

ஒரு நாளைக்குக் காலை உணவு இராது; இன்னொரு நாளைக்கு மதிய உணவு இராது; மற்றொரு நாளைக்கு இரவு உணவு இராது; வேறொரு நாளைக்குத் தொடர்ந்து இரு வேளை உணவு இராது.

ஆங்காங்கே ஆற்றில் மணலைத் திட்டுத்திட்டாக விட்டுச் சிறிய அளவில் தண்ணீர் ஓடிக்கொண்டிருக்கும் போது, அறல்

என்னும் கரிய மணல் இடைவிட்டு இடை விட்டுத் தெரிவது போல, இந்தப் பெண்ணும், தொடர்ந்து எல்லா வேளைகளிலும் உணவு கொள்ளாமல், இடைவிட்டு இடைவிட்டுச் சில வேளைகளில் மட்டும் உணவு கொள்கிறாள். போதிய அகவை முதிராவிடினும் உள்ளத்தில் உறுதி உடையவளாய் இருக்கின்றாள்.

இதை அறிந்த தாய், தேன் கலந்த தீஞ்சுவைப் பாலை வேண்டா வேண்டா என்று கூறித் துரத்தத் துரத்த ஓடிய செல்லப் பெண், இப்போது கணவன் வீட்டில் வேளை தவறி வேளை (பொழுது மறுத்து) உண்கிறாளே-இந்த மூதறிவையும் நிலைமைக் கேற்ற ஒழுக்க நடைமுறையையும் எங்குக் கற்றாளோ? யாரிடம் கற்றாளோ—என்று வியப்பும் வேதனையும் கொள்கிறாள்.

—இதுதான் பாடலின் கருத்து. இப்பாடலில், உயர்ந்த குடும்பக் கலையாக மதிக்கத்தக்க சீரிய அறிவும் நேரிய ஒழுக்கமும் விளக்கப்பட்டுள்ளன அல்லவா? இந்தப் பாடலில் உள்ள ஒவ்வொரு சொல்லிலும் - ஒவ்வொரு தொடரிலும் சிறந்த நயம் உள்ளது, அதாவது, ஒரு சொல்லையும் நீக்க முடியாத அளவுக்கு, இப்பாடல் சொல் நயமும் பொருள் நயமும் உடையதாய் உள்ளது. அவை யனைத்தையும் விரிப்பின் பெருகும்.

இவ்வளவு சிறந்த பாடலை விடுவதற்கு உள்ளம் ஒவ்வாமல் நூல் தொகுத்தவர்கள் இதனையும் நற்றிணையில் சேர்த்துள்ளனர் என்று கூறுவதைத் தவிர வேறொன்றும் புரியவில்லை. அறிஞர்கள் ஆய்க.

இதனினும் சிறப்புடையதாய், ஒன்பது—பன்னிரண்டு அடிகட்கு உட்பட்டதாய் உள்ள ஒரு பாடல் எங்கேனும் எப்போதேனும் கிடைப்பின், இப்பாடலை நீக்கிவிட்டு அப்பாடலை நற்றிணையில் அமைத்துக் கொள்ளலாம். அது வரையிலும் இது நற்றிணையில் இருக்கலாம்.

# 6–3. பிற்சேர்க்கை-3

## மாற்றுக் கருத்து ஆய்வு

மாறுபாடுகள்:

நெடுந்தொகை, குறுந்தொகை, நற்றிணை, புறநானூறு, ஐங்குறு நூறு, பதிற்றுப் பத்து ஆகிய தொகை நூல்கள் முன்-பின்னாகத் தொகுக்கப்பட்டது தொடர்பாக யான் இந்நூலில் முன்னர்க் கூறியுள்ள கருத்துகட்கு மாறுபட்ட கருத்துகளும் உள்ளன.

அண்ணாமலைப் பல்கலைக்கழக மொழியியல் துறைப் பேராசிரியரும் என் அருமை நண்பரும் ஆகிய உயர்திரு டாக்டர் செ.வை. சண்முகம் அவர்கள் 1989 ஆம் ஆண்டில் எழுதி வெளியிட்டுள்ள ''மொழி வளர்ச்சியும் மொழி உணர்வும்'' என்னும் நூலில், இது பற்றிய – பலரின் மாறுபட்ட கருத்துகள் குறிப்பிடப்பட்டுள்ளன.

அறிஞர்களாகிய உ.வே. சாமிநாத ஐயர், அ. வையாபுரிப் பிள்ளை, ச. அகத்தியலிங்கம் ஆகியோர் என் கருத்தோடு மாறுபட்டிருப்பதன்றி, அவர்கட்குள்ளும் மாறுபட்டிருப்பதை செ.வை. சண்முகனார் தெரிவித்துள்ளார். மாற்றுக் கருத்து களை ஒவ்வொன்றாகக் காண்பாம்:

திரட்டூக்கம்:

மக்களுக்கு உள்ள இயல்பூக்கங்கள் (Instinets) பதினான் கனுள் திரட்டு ஊக்கம் (AC QUISI TION) என்பது ஒன்றாகும். இயல்பூக்கங்களின் மூன்று பிரிவுகளுள் ஒன்றாகிய தற்காப்பு ஊக்கங்கள் ஏழனுள் ஒன்றாக இந்தத் திரட்டூக்கம் அமைந் துள்ளது. வாழ்க்கையின் தற்காப்புக்காக மக்கள் பலவற்றைத் திரட்டுகின்றனர் என்பது இதனால் பெறப்படும்.

திரட்டுக்கு-தொகுப்பிற்கு அரசியல், சமூகம், பண்பாடு ஆகியவை பின்னணியாக உள்ளன என்பதாக ஒரு கருத்து

கூறப்படுகிறது.இந்த மூன்றின் தொடர்பாகத் தொகுப்பதற்கும் திரட்டுக்கமே அடிப்படையானது என்பதையும் மறந்துவிடுவதற்கில்லை.

தொகுத்தவர், தொகுக்கச் செய்தவர் ஆகியோரின் விருப்பு - வெறுப்பு-நோக்கம் - மன உணர்வு ஆகியவற்றிற்கு ஏற்பவும் நூல் தொகுப்பு இருக்கும் என்பதாகவும் ஒரு கருத்து சொல்லப்படுகிறது. இதில் வியப்பு ஒன்றும் இல்லை. சைவத் தேவாரப் பாடல்களைச் சைவ சமயத்தாரே தொகுத்தார்; வைணவத் திவ்வியப் பிரபந்தத்தை வைணவரே தொகுத்தார். மற்றவையும் இத்தகையனவே. ஆனால், இது பெரும்பான்மையான நடைமுறை. எந்த வேற்றுமையும் பாராது பொது நோக்கில் தொகுத்தவர்களும் உண்டு. இது சிறுபான்மையான நடைமுறை.

## முதல் தொகுப்பு குறுந் தொகையா?

உ.வே.சா.

சில காரணங்களைக் குறிப்பிட்டு, எட்டுத்தொகை நூல்களுள் குறுந்தொகையே முதலில் தொகுக்கப்பட்டது என்று உ.வே.சா. கூறியுள்ளார்.

வையா புரியாரின் குழப்பம்:

"குறுந்தொகை, நற்றிணை - இவ்விரண்டு நூல்களும் ஏறத்தாழச் சமகாலத்தில் தொகுக்கப்பட்டன என்றுகொள்ளலாம்"- என்று வையாபுரிப் பிள்ளை கூறுகிறார். அவர் எழுதிய வாக்கியம் இங்கே அப்படியே தரப்பட்டுள்ளது. 'ஏறத்தாழ' என்பது அவர் கூற்றில் திடம் இல்லை என்பதை அறிவிக்கிறது. அடுத்து 'கொள்ளலாம்'என்னும் சொல்,'ஆகட்டும் பார்க்கலாம்' என்பது போல் அப்படியும் இப்படியுமாக உள்ளது. அடுத்து, "நற்றிணை, அகநானூறு - இரண்டு நூல்களும் பெரும்பாலும் சம காலத்தன என்று கொள்ளுதல் பொருத்த முடைத்தாம்" என்று கூறியுள்ளார். அவர் எழுதிய வாக்கியம் அப்படியே இங்கே தரப்பட்டுள்ளது. குறுந்தொகையும் நற்றிணையும் சம

காலத்தில் தொகுக்கப்பட்டன - நற்றிணையும் அகநானூறும் சமகாலத்தில் தொகுக்கப்பட்டன - என்றால், இந்த மூன்று நூல்களும் ஒரே காலத்தில் தொகுக்கப்பட்டன என்பதுதானே இதன் பொருள்? இதை வையாபுரியார் முதலில் ஒத்துக் கொண்டு, பின்பு குழம்புகிறார் - குழப்புகிறார். இது தொடர்பாக அவர் எழுதியுள்ளது அப்படியே வருமாறு:

"இங்ஙனமாகக் குறுந்தொகை, நற்றிணை, அகநானூறு என்ற மூன்று தொகை நூல்களும் ஏறத்தாழச் சமகாலத்தன என்பது விளங்கும். எனினும், குறுந்தொகை முற்பட்டும் நற்றிணை இதன் பின்னும் அகநானூறு இதற்குப் பிற்பட்டும் தொகுக்கப்பட்டன என்று ஒருவாறு துணியலாம்"-

இவ்வாறு வையாபுரியார் ஒரு நிலையில் நில்லாது முழுகி முழுகி எழுந்து தத்தளித்துள்ளார்.

அகத்தியலிங்கம்:

குறுந்தொகை, நற்றிணை, அகநானூறு ஆகியவற்றிற்கு முன்னரே பதிற்றுப்பத்து தொகுக்கப்பட்டது-என்பது அகத்திய லிங்கனாரின் கருத்து. ஐங்குறு நூற்றுக்குப் பின்பே புறநானூறு தொகுக்கப்பட்டது என்னும் வையாபுரியாரின் கருத்தை இவரும் ஏற்றுக்கொள்கிறார்.

நாட்டுப் பற்று:

நூல் தொகுப்பில் நாட்டுப் பற்று புகுந்துகொண்டிருந்த தாக ஒரு கருத்து சொல்லப்படுகிறது. பதிற்றுப்பத்து-ஐங்குறு நூறு-புறநானூறு ஆகியவை சேர நாட்டிலும், குறுந்தொகை- நற்றிணை- அகநானூறு ஆகியவை சோழ நாட்டிலும் தொகுக் கப்பட்டன என்ற கருத்து ஒன்றும் தெரிவிக்கப்பட்டுள்ளது. பதிற்றுப்பத்து-ஐங்குறுநூறு-புறநானூறு ஆகியவற்றில் சேரர் தொடர்பு மிஞ்சியிருப்பதால் அவை சேரநாட்டிற்கு உரியன வாகச் சொல்லி, குறுந்தொகை-நற்றிணை-அகநானூறு ஆகிய வற்றைச் சோழநாட்டிற்குத் தள்ளிவிட்டனர். முன்னவை மூன்றும் புறப்பொருள் - பின்னவை மூன்றும் அகப்பொருள் ஆகும்.

## மறுப்புக்குப் பதில்

குறுந்தொகை முன்னதா-பின்னதா? மற்றவற்றுள் முன் - பின் எது எது?-என்ற சிக்கல் எளிதில் அவிழ்க்கக் கூடியதே!

**சின்னவன்-பெரியவன்:**

ஒரு வீட்டில் உள்ள பெற்றோருக்கு (கணவன்-மனைவிக்கு) மூன்று பிள்ளைகள் உள்ளனர். வெளியில் போய் வந்த கணவன் மனைவியைப் பார்த்துச் 'சின்னபையன்' எங்கே என்று கேட்கிறான். 'சின்னபையன்' என்பது எதை அறிவிக்கிறது? பெரிய பையன் ஒருவன் உள்ளான் என்பதை அறிவிக்க வில்லையா? 'சின்னபையன் பெரிய பையனோடு கடைக்குப்போயிருக்கிறான்' என்று மனைவி தெரிவிக்கிறாள். பெரியபையன் இருப்பதனாலேயே இவன் சின்னபையன் என்று குறிப்பிடப்படுகின்றான். சின்னபையன் இருப்பதனாலேயே அவன் பெரியபையன் என்று குறிப்பிடப்படுகிறான். பின்னர், நடுவிலவன் எங்கே என்று கணவன் கேட்க, அவன் மாடியில் எழுதிக்கொண்டிருக்கிறான் என்ற பதில் மனைவியினிடமிருந்து வருகிறது. 'நடுவிலவன்', என்பது, அவனுக்கு முன்னாலும் - பின்னாலும் பிள்ளைகள் பிறந்துள்ளார்கள்-அதாவது-அவனினும்பெரியவனும்அவனினும் சிறியவனும் உள்ளனர் என்பதை அறிவிக்கவில்லையா?

**குட்டையன்- நெட்டையன்:**

இந்த நடைமுறை உலக வழக்காற்றிலிருந்து நூல் தொகுப்புக்கு வருவோம். குறுந்தொகை முன்னது எனின், அதற்குக் குறுந்தொகை என்னும் பெயர் எவ்வாறு வந்தது. நெட்டையன் இருப்பதால்தான் குள்ளன் குட்டையன் எனப்படுகிறான். குட்டையன் இருப்பதனால்தான் உயரமானவன் நெட்டையன் எனப்படுகிறான். இது போலவே, நெடுந்தொகை என ஒன்று இருப்பதால்தான், குறுந்தொகை என ஒன்று பெயர் பெற்றது-குறுந்தொகை என ஒன்று இருப்பதால்தான், நெடுந்தொகை என ஒன்று பெயர் பெற்றது. இதைப் புரிந்து கொள்வதற்கு, நீண்ட எண்ணுதலோ (சிந்தனையோ) ஆராய்ச்சியோ தேலையில்லையே! நெடுந்தொகையும் குறுந்தொகையும் தொகுப்பதற்கு ஒரே நேரத்தில்

திட்டமிடப்பட்டது என்பது இதனால் புலனாகும். 4-8 அடி நூல் குறுந்தொகை), 13-31 அடி.நூல் நெடுந்தொகை எனில், 9 - 12 அடிநூல், இரண்டிற்கும் இடைப்பட்டதாக ஏதாவது ஒரு பெயர் வைக்க வேண்டுமே என்ற நிலையில் நற்றிணை (நல்+திணை) என்னும் பெயர் பெற்றது. இந்த நேர் வழியை விட்டு வேறுவிதமாக ஆராய்ச்சி செய்வது எதற்காக?

இந்த மூன்றையும். குறுந் தொகை - நற்றிணை - நெடுந் தொகை என்றும் வரிசைப் படுத்தலாம்; அல்லது, குறுந் தொகை - நெடுந்தொகை நற்றிணை என்றும் வரிசைப் படுத்த லாம்; அல்லது, நெடுந்தொகை - நற்றிணை - குறுந்தொகை என்றும் வரிசைப்படுத்தலாம்.

முன்னோர் முறை:

இங்ஙன மெனில், யான் நெடுந்தொகை - குறுந்தொகை நற்றிணை என்று வரிசைப் படுத்தியதற்கு உரிய காரணம்- குறிப்பாக நெடுந்தொகையை முதலில் நிறுத்தியதற்குக் காரணம் முன்னோரின் வரிசை முறையேயாகும். முன்னோர் வரிசை முறை என்றதும், "நற்றிணை நல்ல குறுந்தொகை ஐங்குறுநூறு" என்று தொடங்கும் பாடலைக் கொள்ள லாகாது. இது எதுகை மோனைக்கு ஏற்ப அமைக்கப்பட்ட பாடலாகும். இறையனார் அகப்பொருளில் யான் கூறும் வரிசை முறையே உள்ளது. "நெடுந்தொகை முதலாகிய தொகை எட்டும் என்றவாறு" என்னும் பேராசிரியரின் (தொல்-செய்யுளி யல் - 236) உரைப் பகுதியும், "அவை நெடுந்தொகை முதலிய தொகை எட்டுமாம்" என்னும் நச்சினார்க்கினியரின் (செய்யுளி யல்—236) உரைப் பகுதியும் எனது வரிசை முறைக்குத் துணை புரிந்தன. இது பற்றி முன்னர் விரிவாக எழுதப்பட்டுள்ளது. இவர்கள் நெடுந்தொகையை முன்வைத்ததற்குக் காரணம், களிற்றியானை நிரை - மணிமிடைபவளம்-நித்திலக் கோவை என மூன்று தனித் தனி நூல்கள்போல் மூன்று பிரிவாகப் பிரிக்கக் கூடிய அளவில், பெரிய பாடல்களை நெடுந்தொகை பெற்றிருப்பதேயாகும்—எனலாம்.

யார் தொகுத்தது?

இந்நூல்களைச் சங்கத்தார் (அதாவது - சங்கத்தோடு

தொடர்புற்றிருந்த அரசரும் புலவரும்) தொகுத்ததாக முன்னோர் கூறியுள்ளனர்:

நச்சினார்க் கினியர், மலைபடுகடாம் என்னும் சங்க இலக்கியத்தின் உரையில், "இவர் செய்த செய்யுளை (மலைபடுகடாத்தை) நல்லிசைப் புலவர் செய்த ஏனைச் செய்யுள் களுடன் சங்கத்தார் கோவாமல் (தொகுக்காமல்) நீக்குவர்; அங்ஙனம் நீக்காது கோத்தற்குக் காரணம், ஆனந்தக் குற்றம் என்பதொரு குற்றம் இச்செய்யுட்கு உறாமையான் என்றுணர்க' —என எழுதியுள்ளார். பத்துப் பாட்டு நூல்களைச் சங்கத்தார் தொகுத்தார்கள் எனில், எட்டுத் தொகை நூல்களையும் சங்கத்தாரே தொகுத் திருக்கவேண்டும்.

மற்றும் ஒரு சான்று: போராசிரியர் தொல் - செய்யுளியல் (149) உரையில், "...இனி நூற்றைம்பது கலியும் எழுபது பரிபாடலும் எனச் சங்கத்தார் தொகுத்தவற்றுள்..." என்று எழுதிக் கொண்டு சென்றுள்ளார். நமக்குச் சில–பல நூற்றாண்டு கட்கு முன் வாழ்ந்த இவர்கள் சங்கத்தார் தொகுத்தனர் என்று கூறியிருப்பதைப் புறக்கணிப்பதற்கில்லை.

## எங்கே தொகுத்தது?

சங்கத்தார் தொகுத்தது எனில், சேரநாட்டில் இருந்து தொகுத்தனரா அல்லது பாண்டிய நாட்டில் இருந்து தொகுத் தனரா? பாண்டிய நாட்டின் தலைநகரமாயிருந்ததும் தமிழ் நாட்டின் முதல் பெரிய நகரமும் ஆகிய மதுரையில் இருந்து கொண்டுதான் தொகுத்தனர் என முன்னோர்கள் கூறியுள் ளனர். (சென்னை நகரம் பிற்காலத்தது–மதுரையே தமிழ் நாட்டின் பழம்பெரு நகரமாகும்).

ஞான சம்பந்தர் 'திருப்பாசுரம்' என்னும் தேவாரப்பதிகத் தில், "அற்றன்றி அந்தண் மதுரைத் தொகை ஆக்கினான்' என்று கூறியுள்ளார். சேக்கிழார் பெரிய புராணத்தில் "கூடல் மாநகரத்துச் சங்கம் வைத்தவன்' 'என்று பாடியுள்ளார். சேக் கிழார் கூறியிருப்பது, சம்பந்தர் பாடலுக்கு உரிய விளக்க மாகும். இச்செய்தி இந்நூலில் முன்னரே எழுதப்பட்டுள்ளது. இவ்வளவு தானா? மாணிக்கவாசகர் திருக்கோவையாரில்,

"சிறைவான் புனல் தில்லைச் சிற்றம் பலத்தும் என் சிந்தை
யுள்ளும்
உறைவான் உயர் மதில் கூடலின் ஆய்ந்த ஒண் தீண்தமிழ்"
என்று பாடியுள்ளார். பரஞ்சோதி முனிவர் தமது
திருவிளையாடல் புராணத்தில்,
"கண்ணுதல் பெருங் கடவுளும் கழகமோ டமர்ந்து
பண்ணுறத் தெரிந்து ஆய்ந்த இப்பசுந்தமிழ்'

என்று பாடியுள்ளார். எனவே, ஞான சம்பந்தர் "மதுரைத் தொகை ஆக்கினான்" என்று கூறியுள்ளபடி, தொகைநூல்கள் மதுரைத் தமிழ்ச் சங்கத்தில் தொகுக்கப்பட்டன என்று கூற லாம். சிலருக்கு ஏன் வருத்தம்? சில தொகை நூல்கள் சேர நாட்டிலும் தொகுக்கப்பட்டிருக்கலாம் என்று கூறிவிட்டுப் போவோமே!

புறநானூற்றின் இடம்:

நெடுந்தொகை - குறுந்தொகை-நற்றிணை ஆகியவற்றிற்கு அடுத்த தான நான்காம் இடத்தை, நானும் இறையனார் அகப்பொருள் உரைகாரரும் புறநானூற்றுக்குத் தந்துள்ளோம். ஆனால், ஐங்குறு நூற்றுக்குப் பின்னரே புறநானூறு தொகுக் கப்பட்டது என்பது வையாபுரியாரின் கருத்து. முதல் மூன்று நானூறும் தொகுக்கப்பட்டபோதே - அல்லது அவற்றை அடுத்தே புறநானூறு தொகுக்கப்பட்டிருக்க வேண்டும். அகப் பொருளில் மூன்று நானூறுகள் தேறியதால், புறப்பொருளி லும் ஒரு நானூறைத் தேர்ந்தெடுத்துத் தொகுத்துள்ளனர். எனவே, நான்கு நானூறையும் தொடர்ந்து வரிசைப் படுத்து வதே அழகானதும் முறையானதும் ஆகும். இது முன்னரே விளக்கப்பட்டது.

ஐங்குறு நூற்றின் இடம்:

யானும் இறையனார் அகப் பொருள் உரைகாரரும் புறநானூற்றுக்குப்பின் ஐங்குறு நூற்றுக்கு ஐந்தாவது இடமே தந்துள்ளோம். வையாபுரியாரோ, ஐங்குறுநூற்றுக்குப் பிற் பட்ட இடமே புறநானூற்றுக்குக் கொடுத்துள்ளார்.

'ஐங்குறு நூறு' என்னும் பெயரில் உள்ள 'குறு' என்னும் ஈரெழுத்து மொழியே, ஐங்குறு நூறு பெரிய நூறுகட்குப் பிற்பட்டது என்பதை அறிவிக்கிறது. நானூறு என்பதற்குப் பின்புதான், நானூற்று ஒன்று...நானூற்றுத்தொண்ணூற்றொன் பது - ஐந்நூறு என எண்ணுவார்கள். நான்கு நானூறுகளைப் பார்த்ததாலேயே, அடுத்ததாக, ஐந்துநூறு கொண்ட தொகை நூலுக்கு 'ஐங்குறு நூறு' என்னும் பெயர் வைக்கப்பட்டது. ஐங்குறு நூறு என்றால், குறுகிய-சிறிய-சிறிய ஐந்நூறு பாடல் களைக் கொண்ட நூல் என்று பொருளாகும். புறநானூற்றுப் பாடல்கள் மிகவும் நீண்டன-பெரியன. ஐங்குறு நூற்றுப் பாடல்களோ, மூன்றடிச் சிற்றெல்லையும் ஆறடிப் பேரெல்லை யும் கொண்ட மிகவும் சிறிய பாடல்களைக் கொண்டது. முதல் நான்கு நூறுகளின் நீண்ட அடியளவைக் கண்டபின்பே, 'குறு' என்ற சொல் நூலின் பெயரில் இடம்பெறச் செய்யப்பட் டுள்ளது. எனவே, ஐங்குறு நூற்றுக்கு ஐந்தாவது இடமே பொருத்தமானதாகும். இதுவும் முன்பு விளக்கப்பெற்றுள்ளது.

பதிற்றுப்பத்தின் இடம்:

இறையனார் அகப்பொருள் உரைகாரரும் யானும் பதிற்றுப்பத்திற்கு ஆறாவது இடம் அளித்துள்ளோம். அகத்திய லிங்கனாரோ அதற்கு முதலிடம் அளித்துள்ளார். வையாபுரியாரும் இதை ஏற்றுக் கொள்ளவில்லை. இவர் எழுதியிருக்கும் ஒரு பகுதி அப்படியே வருமாறு:-

"...புறநானூறு இம் மூன்றிற்கும் (நெடுந்தொகை, குறுந் தொகை, நற்றிணை) பின் தோன்றி யிருக்க வேண்டும் என்றும் விளக்கியுள்ளார். பதிற்றுப் பத்தின் தொகுக்கப்பட்ட காலத் தைப் பொறுத்த வரையில் குறுந்தொகையின் பின் பதிற்றுப் பத்துத் தொகுக்கப்பட்டிருக்க வேண்டும் என்பதும் எளிதில் புலப்படும்...ஐங்குறுநூற்றின் பின்னும் குறுந்தொகை முதலிய வற்றின் பின்னும் தோன்றியது பதிற்றுப் பத்து" -

இவ்வாறு, வையாபுரியார், பதிற்றுப்பத்துக்கு முதன்மை தரவில்லை. உ.வே.சா., வையாபுரியார், அகத்திய லிங்கனார் ஆகியோர் தங்கட் குள்ளே மாறுபட்டிருப்பதை இது காறும் கூறியவற்றால் அறியலாம்.

அரசர்கள் பதின்மரைப்பற்றிப் புலவர்கள் பதின்மர் பத்துப் பத்துப் பாடல்கள் வீதம் பாடியுள்ள பதிற்றுப்பத்துக்கு, மற்ற தொகை நூல்களினும், தொகுப்பு முயற்சி குறைவே. நானூறு-ஐந்நூறு பாடல்கள் கொண்ட தொகை நூல்களினும் இது மிகவும் சிறியதா யிருப்பதால், வரிசையில் பின்னுக்குத் தள்ளப் பட்டிருப்பதில் வியப்பில்லை.

இது சேரநாட்டில் தொகுக்கப்பட்டது என்றே வைத்துக் கொண்டாலும், பாண்டிய நாட்டில் தொகுக்கப்பட்ட மற்ற நூல்களோடு வரிசைப் படுத்தப்பட்டிருப்பதால், எல்லா நூல் களும் ஓரிடத்தில் ஆய்வு செய்யப்பட்டிருக்கவேண்டும் என்பதை மறந்து விடுவதற்கில்லை.

முன்னும் பின்னும் எந்த அடைமொழியும் தராமல் 'பதிற்றுப் பத்து' (நூறு) என வெற்று எண்ணால் பெயர் தந்திருப் பது பொருந்துமா? புரியுமா? நூறு(பதிற்றுப்பத்து) என்று கூறி னால் என்னவென்று புரியும்? இந்தச் சிக்கலுக்குத் தீர்வு யாதுப் நெடுந்தொகை (அகநானூறு) நானூறு, குறுந்தொகை நானூறு நற்றிணை நானூறு, புறநானூறு, ஐங்குறுநூறு - என மற்ற தொகை நூல்கட்கு, அடை மொழிகளுடன் எண்ணிக்கைப் பெயர் தந்திருப்பதால், பதிற்றுப் பத்து எனக் கூறினும் இது ஒரு நூல் என்பது புரியும் என்று இப்பெயர் தரப்பட்டிருக்க லாம். அதாவது, அடை மொழிகளுடன் எண்ணிக்கைப் பெயர் தரப்பட்டிருக்கும் மற்ற நூற்பெயர்களை ஒட்டியே பதிற்றுப் பத்து என்னும் பெயர் தந்திருக்க வேண்டும். எனவே, அடை மொழிகளுடன் எண்ணிக்கைப் பெயர் கொண்டுள்ள ஐந்து நூல்கட்குப்பின், இது ஆறாவது நூலாக நிரல் செய்யப் பெற் றுள்ளது.

இவ்விதமாக இது காறும் செய்யப்பெற்றுள்ள மாற்றுக் கருத்து ஆய்வு, ஒரு தோற்றமாக-ஓர் உய்த்துணர்வாகச் செய்யப்பட்டதே என்று கொள்ளல் வேண்டும்.

---

# 7. கருத்து வழங்கிய கருவூலங்கள்

குறிப்பு: முதலில் இந்நூலின் மேற்கோள் நூலின் பெயரும் அதன் உட்பிரிவும், அடுத்து ஆசிரியர் பெயரும், இறுதியாக இந்நூலின் பக்க எண்ணும் கீழே தரப்பட்டிருக்கும்.


தொல்காப்பியம்—1,74,94—தொல்காப்பியர்—7

தொல்காப்பியச் சிறப்புப் பாயிரம்—பனம்பாரனார்—8

தொல்காப்பியம்—செய்யுளியல்—95—பேராசிரியர் உரை—9

பேரகத்தியம்—அகத்தியர்—14

தனிப்பாடல்—"நெய் பிறந்தது''—16

நன்னூல்—268—பவணந்தி முனிவர்—16

நீதி நெறி விளக்கம்—6—குமர குருபரர்—22

உளவியல் நூல்—உளவியலார்—28

இலத்தின்—பிரஞ்சு—தமிழ் அகராதி—முசே, துய்புய்—28

Dictionnaire gllustr's Latin -Francais -Felix Gaffiot—28

Cassell's Latin Dictionary - Cassell—28

Dictionnaire Etymologique - Albert Dauzat—29

Dictionnaire De La'Langue Francaise-Emile Littr'e—29

Lexique Francaise-Latin-E.Sommar—29

Encyclopaedia Britannica. Volume 2 - Page No - 29.—29

Encyclopaedia Americana - Volume2-Page No.17—30

The New Funk & Wagnalis Encyyclopaedia-Volume-2—30

மதுரைக் காஞ்சி—இறுதிப் பாடல்—மாங்குடி மருதனார்—32

பெரிய புராணம்—தடுத்தாட் கொண்ட புராணம்—70—சேக்கிழார்—322

சோண சைல மாலை—39—நல்லாற்றூர்ச்சிவப்பிரகாசர்—32

திருவருட்பா "கோடையிலே"—வடலூர் இராமலிங்கர்—32

Oxford English Dictionary. 32

An Anthology of world Literature - Philo .M.Buck—79

தண்டியலங்காரம்—பொதுவணியியல் 5—தண்டியாசிரியர் பழைய உரை—81

History of Classical Sanskrit Literature-
M.Krishnac hariar mac M.A., M.L., Ph.D.—83
M.Krishnma chariar.

Larousse Du xxe 86 Si'cle-Larousse
தொல்காப்பியம்—பொருளதிகாரம்—செய்யுளியல்—166 89
நூல் விவர அட்டவணை —ஜான் மர்டாக் 91
தமிழ்ச் சுவடிகள் தொகைப் பட்டியல்—கர்னல் மெக்கன்சி 91
நூற்றொகை விளக்கம்—சுந்தரம் பிள்ளை 91
தமிழ் நூல் விவர அட்டவணை—தமிழக அரசு—91
இறையனார் அகப்பொருள் உரை—நக்கீரர் 96
தொல்காப்பியம்—அகத்திணைஇயல் —56—தொல்காப்பியர்102
தொல்காப்பியம் செய்யுளியல்—114,116,117,118,119,155-102
தொல்காப்பியம் செய்யுளியல்—1—பேராசிரியர் உரை 103
யாப் பருங்கல விருத்தி உரை—உறுப்பியல்—அமிர்த சாகரனார் —104
ஐங்குறு நூறு—நெய்தல்—வெள்ளாங் குருகுப் பத்து—அம் மூவனார்—104
" பாடல்—180—அம் மூவனார் 106
நாரைவிடு தூது—சத்தி முத்தப் புலவர் 108
தொல்காப்பியம்—செய்யுளியல்—192 —தொல்காப்பியர்—109
''—பொருளியல் —2—தொல்காப்பியர்—109'
சிலப்பதிகார உரைப் பாயிரம்—அடியார்க்கு நல்லார் 110
தொல்காப்பியம்—உயிர் மயங்கியல்—81—111
அகநானூறு - 301—அதியன் விண்ணத்தனார்—113
கலித் தொகை - 140—நல்லந்துவனார் 113
குணநாற்பது - 173—ஆசிரியர் தெரியவில்லை 113
குறுந்தொகை—173—113
Garland of Meleager - Meleager 114
முல்லைக்காடு - பாரதிதாசன்—115
செவ்வூர்ச் சிற்றம்பலக் கவிராயர் இல்லத்துப் பழைய ஓலைச் சுவடிப் பாடல் 120
தொல்காப்பியம்—செய்யுளியல்—242-பேராசிரியர் உரை & நச்சினார்க் கினியர் உரை—122
திரு முருகாற்றுப்படை - 192—நக்கீரர் & நச்சினார்க்கினியர் உரை 123
பட்டினப்பாலை-85—கடியலூர் உருத்திரன் கண்ணனார்&நச்சினார்க் கினியர் உரை 123

தொல்—செய்யுளியல்—121, 120—பேராசிரியர் உரை
நச்சினார்க்கினியர் உரை. —333

நம்பி அகப்பொருள்—129—பழைய உரையாசிரியர் உரை—351

தொல்—மெய்ப்பாட்டியல்-11-இளம்பூரணர் உரை —351

திருக்குறள்—23 - பரிமேலழகர் உரை —352

பன்னிரு பாட்டியல்—346, 348 – ஆசிரியர் தெரியவில்லை—352

தொல்—செய்யுளியல்—235—பேராசிரியர் உரை, நச்சர் உரை, இளம் பூரணர் உரை 356, 357

திருநாவுக்கரசர் தேவாரம்—இன்னம்பர் பதிகம்—திருக்குறுந் தொகை - 8—360

கோயில் நான் மணிமாலை—4—பட்டினத்தார் —360

தொல்—செய்யுளியல் - 158—பேராசிரியர் உரை& நச்சர் உரை —361

நம்பி அகப் பொருள்—அகத்திணையியல்-6-பழைய உரை—362

நன்னூல்—பொதுவியல்-37-மயிலைநாதர் உரை —362

யாப்பருங்கலக் காரிகை—ஒழிபியல் - 40 - குணசாகரர் உரை. —362

பிரபந்த தீபிகைப் பாடல்—முத்து வேங்கட சுப்ப பாரதியார் —365

யாப்பருங்கலம்-செய்யுளியல்-4-விருத்தியுரை-அமிர்தசாகரனார் —374

தண்டியலங்காரம்—பொதுவணியியல் - 5 - சுப்பிரம்மணிய தேசிகர் உரை. —379

தொல்—புறத்திணை—கூதிர்வேனில்-இளம்பூரணர் உரை —386
,, — ,, — 12 — நச்சர் உரை —388

சிலப்பதிகாரம்—வேனில் காதை - 25,26—அரும்பத உரையாசிரியர் உரை —389

நல்வழி—40-ஔவையார் —399

திருமுறை கண்ட புராணம்—24,28,17—உமாபதி சிவாசாரியார் —399

திருவிளையாடல் புராணம்—திரு நாட்டுப்படலம்—58
பரஞ்சோதி முனிவர்—402

கோயில் புராணம்—திருவிழாச் சருக்கம்—27—உமாபதி சிவம் —404

ஈடு முப்பத்தாறாயிரப்படி—6-8-10. —404
தென்னிந்தியக் கல்வெட்டுகள்: 7-269,2-155,8—205,8-260—404
திருமுறை கண்ட புராணம்-14-உமாபதி சிவாசாரியார் —406
,, ,,—15,25 —,, ,, —410
திருவேகாதச மாலை - 7-நம்பி யாண்டார் நம்பி —411
பெரிய புராணம்—1345—சேக்கிழார் —415
திருமுறை கண்ட புராணம் - 16,25-உமாபதி சிவாசாரியார் —415
திருமந்திரம்—95,99—திருமூலர் —430
திருமுறைகண்ட புராணம்—27, உமாபதி சிவாசாரியார் —44
யாப்பருங்கலம்—விருத்தியுரை - 7,37,95-அமிர்த சாகரனார் —438
தேவாரம் திருத்தொண்டத் தொகை-(39 ஆம் பதிகம்)சுந்தரர் —439
திருமுறை கண்ட புராணம்-20-உமாபதி சிவம்
தேசிகப் பிரபந்தம்—அதிகார சங்கிரகம்-1-தேசிகர் —447
,, — 373 — தேசிகர் —448
,, — 383 — ,, —450
உபதேச ரத்தினமாலை—மணவாள மாமுனி —452
திருவேங்கடக் கலம்பகம்—'பதின்மர் செந்தமிழ்' —453
இரு சமய விளக்கம்—அரிகேசரி —456
சடகோபர் அந்தாதி—18—கம்பர் —457
தொல்காப்பியம்—செய்யுளியல்—118—பேராசிரியர் உரை—469
,, —அகத்திணையியல்—57. —471
சுந்தரர் தேவாரம்—'திருப்புகழ் விருப்பால்'—480

# 8. நூல் பெயர் அகரவரிசை

இந்தப் பகுதியில், இந்நூலில் விவரம் தரப்பெற்றுள்ள நூல்களின் பெயர்கள் அகர வரிசையில் அமைக்கப்பட்டுள்ளன.

அ,இ,க,ச,த,தி,ப முதலிய சில எழுத்துகளில் தொடங்கும் பெயர்கள் மிகுதியாய் இருப்பதால், அவற்றிற்கு முதல் எழுத்தளவு மட்டிலுமே அகர வரிசை அமைத்துத் தரப்பட்டுள்ளது. இவை தவிர்த்த வேறு பல எழுத்துகளில் தொடங்கும் பெயர்கள் ஓரளவு குறைவாயிருப்பதால், மிக்க முயற்சியின்றி அவற்றிற்கு, முதல் எழுத்து தொடங்கி இறுதி எழுத்துவரையும் அகர வரிசை கவனிக்கப்பட்டு அமைத்துத் தரப்பெற்றுள்ளது.

மிகுதியாயுள்ள பெயர்கட்கு அகரவரிசை அமைக்க முயன்றால், மூளைக் கட்டிப் பிணியோடு ஓரளவு அகவை முதிர்ந்த எனக்குத் தலையை வலிக்கிறது. எனக்கு வேறு துணையில்லை; யானே எல்லாம் செய்கிறேன். இக்குறையைப் பொறுத்தருள வேண்டுகிறேன்.

சில நூல்கள் ஒன்றுக்குமேல் பல பதிப்புகள் பெற்றுள்ளன. அமைப்பில் வேறு வேறான நூல்கள் சில, ஒரே பெயர் பெற்றுள்ளன. இந்நூல் பெயர்களின் பின்னால் (2), (3) என அடைப்புக் குறிப்புகள் இட்டுப் பதிப்பு எண்ணிக்கை தரப்பட்டுள்ளது. ஒரே பெயராயுள்ளனவற்றின் பின்னால் ஆசிரியர் பெயரோ -வேறு அடையாளமோ தந்து வேறுவேறு நூல்கள் என்பது அறிவிக்கப்பட் டுள்ளது.

'எஞ்சிய தொகை நூல்கள்' என்னும் பகுதியில் உள்ள - விவரம் தரப்படாத சில நூற்பெயர்கட்கு அகரவரிசை தரப்படவில்லை.

அண்மையில் அறியவந்த சில தொகை நூல்களின் பெயர்கள், பின்னுள்ள அட்டவணையின் இடையிடையே புகுத்தப்பட்டுள்ளன. அவற்றிற்குப் பக்க எண்கள் இரா.

நூல் பெயர் அகர வரிசை
—எண் :பக்க எண்—

அ

பா

மா



மி



மீ



மு

ல



வ



வா



வி



வீ



வெ

# தமிழ்த் தொகை நூல்கள் தரும் தமிழ் இலக்கிய வரலாறு —ஒரு மீள்பார்வை

பேரிலக்கியங்கள் படைத்துள்ள பெரும்புலவர்கள் கூட முதலில் தனித் தனிப் பாடல்களே எழுதியிருப்பர்; பின்னர்ச் சிறு சிறு நூல்கள் இயற்றியிருப்பர்; பின்னரே பேரிலக்கியங் கட்குப் படையெடுத்திருப்பர். இந்த உண்மையைச் சங்கத் தொகை நூற் பாடல்கள் நமக்கு அறிவிக்கின்றன.

தொகுப்புகட்குள் அடங்கியுள்ள தனித் தனிப் பாடல்களை இயற்றிய புலவர்கள் நாளடைவில் இயற்றிய சிறு நூல்களும் பெருநூல்களும் நமக்குக் கிடைத்தில. பழந்தமிழ் நூல்களுள் கிடைத்தன சிலவே; கிடைக்காதனவே பல. உதிரிகளைத் தொடர்ந்து சிறு நூல்கள் - பின்னர்ப் பெருநூல்கள் - என் பதற்குச் சான்று இல்லாமற் போகவில்லை.

பதினாயிரத்திற்கும் மேற்பட்ட பாடல்கள் கொண்ட இராமாயணப் பெரு நூலைத் தமிழில் எழுதிய கம்பர் ஒரெழுபது, சரசுவதி அந்தாதி முதலிய சிறுநூல்களையும் எழுதியிருப்பது ஈண்டு குறிப்பிடத்தக்கது. பாரதியார், பாரதி தாசனார் முதலியோரும் முதலில் உதிரிப் பாடல்கள் எழுதிய வர்களே; பின்னரே காப்பியங்கள் படைத்தனர். மற்றும், இருபதாம் நூற்றாண்டுப்புலவர்கள் பலரும் தனித்தனி உதிரிப் பாடல்களின் தொகுப்பே வெளியிட்டுள்ளனர். இவர்களுள் சிலர் மட்டும் காப்பியம் என்னும் பெயரில் சிற்சில நூல்கள் யாத்துள்ளனர்.

சொந்த வாழ்க்கையிலிருந்து சான்று தருவது நூற்றுக்கு நூறு உண்மையாகும். அடியேனைப் பற்றித்தான் சொல்லப் போகிறேன். அடியேன் தொடக்கத்தில் பலஉதிரிப் பாடல்களே

எழுதினேன்; ஏராளமான வாழ்த்துப்பாக்களும் வரவேற்புப் பாக்களும் இயற்றித்தந்துள்ளேன்; பின்னரே சிறு சிறு செய்யுள் நூல்கள் இயற்றினேன். எனது முதல் செய்யுள் நூல் 1948 ஆம், ஆண்டு வெளியான 'தமிழ் அம்மானை' என்பதாகும். பின்னரே சிறு நூல்கள் சில யாத்து வெளியிட்டேன். 1982ஆம் ஆண்டு "அம்பிகாபதி காதல் காப்பியம்" என்னும் காப்பிய நூலை முப்பது காதைகள் அமைத்து எழுதி வெளியிட்டேன். 1986 ஆம் ஆண்டு 'கவுதமப் புத்தர் காப்பியம்' என்னும் காப்பிய நூலை முப்பது காதைகள் அமைத்து இயற்றி வெளியிட்டேன்.

இந்த அடிப்படைச் செய்தியை உள்ளத்தில் கொண்டு தொகை நூல்களைப்பற்றி எண்ணிப்பார்க்கின், தமிழ் இலக்கிய வரலாற்றை முதல் முதல் தொடங்கி வைத்தவை தனித்தனி உதிரிகளே – உதிரிகளின் தொகுப்புகளே என்ற உண்மை பெறப் படும். உதிரிப் பாடல்கள் தொடங்கி வைத்ததோடு நில்லாமல் மேலும் தொடர்ந்து கொண்டுள்ளன.

வரலாறு, பழமை போலவே திரும்பத்திரும்ப வந்து கொண் டிருக்கும் என்னும் கருத்து அமைந்த History Repeats Itself என்னும் ஆங்கில அறிவு மொழி ஈண்டு ஒப்புநோக்கத்தக்கது. இதையே இந்தக் காலத்துப் பாவலர்களுள் பெரும்பாலார் செய்து கொண்டுள்ளனர்.

'மீள்பார்வை' என்னும் தலைப்பில் இங்கே கூறப்பட்டிருப் பன, இந்த நூலின் தொகுப்புச் சுருக்கமாகும்.



S

# மணிவாசகர் பதிப்பகத்தின்

## பரிசு பெற்ற நூல்கள்

கம்பர்—டாக்டர் வ. சுப. மாணிக்கம்

வீரர் உலகம்—கி. வா. ஜகந்நாதன்

மணிக்கொடி காலம்—பி. எஸ். ராமையா

பரிபாடல் திறன்—டாக்டர் இரா. சாரங்கபாணி

திருக்குறள் கூறும் உறுதிப் பொருள்—
டாக்டர் சோ. ந. கந்தசாமி

உரையாசிரியர்கள்—மு. வை. அரவிந்தன்

ஊருக்குள் ஒரு புரட்சி—சு. சமுத்திரம்

உலகப் பெருங்கவிஞர் கம்பர்—
இரா. வ. கமலக்கண்ணன்

தமிழ் மொழி வரலாறு—டாக்டர் சு. சக்திவேல்

திருமுறையும் திருக்கோயில்களும்—புலவர்
செந்துறைமுத்து

தாகூர்—ச. மெய்யப்பன்

திருவருட்பாச் சிந்தனை—வெள்ளைவாரணனார்

சுற்றுலா வளர்ச்சி—வெ. கிருட்டிணசாமி

கலைவாணன் கவிதைகள்—அப்புலிங்கம்

இசையியல்—வெற்றிச் செல்வன்

தமிழகக் கலை வரலாறு—க. சி. கமலையா

வண்ணங்கள் வடிவங்கள்—தேனுகா

கம்ப்யூட்டர்—வி. மோகனசுந்தரம்

தமிழ்நாட்டுச் சத்திரங்கள்—கு. தாமோதரன்

---

Wrapper Printed at Karpakam Achakam, Madras-600 002.